சுவாமி விவேகானந்தரின்

# ஞானதீபம்



சொற்பொழிவுகள் மற்றும் 4 எழுதியவற்றின் தொகுப்பு

# சுவாமி விவேகானந்தரின்

# ஞானதீபம்

சுடர் 4



சொற்பொழிவுகள் மற்றும் எழுதியவற்றின்

தொகுப்பு



ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை-600004

# பதிப்புரை

**சு**வாமி விவேகானந்தர் ஏற்றி வைத்த ஞானதீபத்தின் நான்காம் சுடர் இது. இதில் ஒளிர்வது வேதாந்தம் மற்றும் மதத்தைப் பற்றிய அவரது சிந்தனைகள்.

உலகின் தத்துவ மரபுகளுள் காலத்தால் மிகவும் முந்தியதும், தத்துவ நெறிகளின் மணிமுடியாகக் கருதப் படுவதும் வேதாந்தம் ஆகும். வாழையடி வாழையாகத் தோன்று கின்ற ஆச்சாரியர்கள், காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப, மக்கள் பின்பற்றும் வகையில் அதனை மாற்றி அமைக்கின் றனர். சங்கரர், ராமானுஜர், மத்வர் போன்றோர் அத்தகைய ஆச்சாரியர்கள். இந்த வரிசையில் நமக்கு மிகவும் சமீப காலத்தில் தோன்றியவர் சுவாமி விவேகானந்தர். அறிவுபூர்வமாக எதையும் அணுகத் துடிக்கின்ற இந்தக் காலத்திற்கு ஏற்ப அவர் வேதாந்தத்தை எவ்வாறு வடிவமைத்துள்ளார் என்பதை இந்தச் சுடரின் முதற்பகுதியில் காண்கிறோம். இதில் வருகின்ற செயல்முறை வேதாந்தம் என்ற பகுதியை மொழிபெயர்த்தவர் செல்வி R. நிவேதிதா அவர்கள்.

சுடரின் இரண்டாம் பகுதியாக வருவது 'மதம்'. உலகில் மதம் எவ்வாறு தோன்றியது, ஏன் தோன்றியது, மதத்தின் பரிணாம வளர்ச்சி, அதன் முக்கியப் பகுதி போன்றவற்றை இந்தச் சொற்பொழிவுகளில் காண்கிறோம்.

செயல்முறை வேதாந்தம் என்ற பகுதியைத் தவிர மற்றவை முந்தைய பதிப்பிலிருந்து (1987) எடுக்கப்பட்டு மொழிவளம் செய்யப்பட்டவை. மொழிபெயர்ப்பு, மொழி வளம், அச்சுப் பிரதிகளைச் சரிபார்த்தல் என்று பணியில் ஈடுபட்ட அனை வருக்கும் இறைவன் திருவருள் புரிவாராக! ஞானதீபத்தின் இந்தச் சுடரும் படிப்போருக்கு ஒளிகாட்டி, வழி காட்டி ஆன்மீகப் பாதையில் அழைத்துச் செல்லுமாக!

11.5.1997
ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-4

## இந்தச் சுடரில்....

### வேதாந்தம்

'வேதாந்தம்' என்னும் முதற்பகுதியில் நாம் மூன்று பிரிவுகளைக் காண்கிறோம்—சொற்பொழிவுகள், சொற்பொழிவுக் குறிப்புகள், 'செயல்முறை வேதாந்தம்'.

செயல்முறை வேதாந்தம் என்ற சொல்லைப் பிரபலமாக்கியவர் சுவாமி விவேகானந்தர். காட்டிலும் குகைகளிலும் வாழும் முனிவர்கள் மட்டுமல்ல, நாட்டிலும் நகரங்களிலும் அதன் பரபரப்பிலும் வாழ்கின்ற ஒவ்வொருவரும் வேதாந்தத்தைக் கடைப்பிடிக்கலாம் என்பதை ஆணித்தரமாக எடுத்துக் காட்டினார் அவர். வேதாந்தத் தத்துவத்தின் உயிரூட்டும் தத்துவங்களையும், அவற்றை எவ்வாறு செயல்முறைப் படுத்துவது என்பது பற்றியும் அவர் பேசிய நான்கு சொற்பொழிவுகளே 'செயல்முறை வேதாந்தம்'. லண்டனில் 1896 நவம்பர் 10, 12, 17, 18-ஆம் தேதிகளில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவுகள் இவை.

### மதம்

இதில் மூன்று பகுதிகள் உள்ளன. மதத்தின் ஆரம்பம், அதன் பரிணாம வளர்ச்சி போன்றவற்றைக் கூறுவது முதற்பகுதி. மதம் என்பதன் அடிப்படைக் கருத்துக்களைக் கூறுவது 'மதம் தத்துவமும் மன இயலும்' என்ற இரண்டாம் பகுதி. மூன்றாம் பகுதி சொற்பொழிவுக் குறிப்புகள்.

# பொருளடக்கம்



♦ சான்பிரான்ஸிஸ்கோவில், 1900 ♦

# I. சொற்பொழிவுகள்

## 1. வேதாந்தத் தத்துவம்

ஹார்வர்ட் பல்கலைக் கழகம், 25 மார்ச் 1896

வேதாந்தத் தத்துவம் என்று இன்று பொதுவாகக் கூறப்படுவது, உண்மையில், தற்போது இந்தியாவிலுள்ள எல்லா பிரிவுகளையும் தன்னுள் அடக்கியதாகும். எனவே அதற்குப் பல்வேறு விளக்கங்கள் இருந்திருக்கின்றன. இவை துவைதத்தில் தொடங்கி, அத்வைதம் வரை படிப்படியாக முன்னேறியிருக்க வேண்டுமென்று நான் நினைக்கிறேன். வேதாந்தம் என்ற சொல்லின் பொருள் வேதங்களின் முடிவு என்பதாகும். வேதங்கள் இந்துக்களின் சாஸ்திரங்கள். வேதங்கள் என்பவை துதிப்பாடல்களும் சடங்குகளும் மட்டுமே என்று மேலை நாடுகளில் சிலவேளைகளில் கொள்ளப்படுகிறது. ஆனால் இந்தப் பகுதிகள் தற்போது ஏறக்குறைய உபயோகத்தில் இல்லை. பொதுவாக வேதம் என்றால் வேதாந்தம் என்றுதான் தற்போது இந்தியாவில் பொருள்கொள்ளப்படுகிறது. உரையாசிரியர்களும்கூட நமது சாஸ்திரங்களை மேற்கோள் காட்ட நேரும்போதெல்லாம் வேதாந்தத்திலிருந்து காட்டுவதைத்தான் நியதியாகக் கொண்டிருக்கிறார்கள்.

வேதாந்தம், சுருதி என்ற தனிப் பெயராலும் அழைக்கப்படுகிறது. வேதாந்தம் என்று வழங்கப்படுகின்ற பகுதிகள் எல்லாமே வேதங்களின் கர்மகாண்டப் பகுதிக்குப் பின்னால் தான் தோன்றின என்பதில்லை. உதாரணமாக, யஜுர்வேதத்தின் நாற்பதாவது அத்தியாயமாக இருக்கும் ஈசாவாஸ்ய உபநிடதத்தைச் சொல்லலாம்; யஜுர் வேதம், வேதங்களின் மிகப் பழைய பகுதிகளுள் ஒன்றாகும். பிராம்மணங்கள் அல்லது சடங்கு சம்பந்தமான வேதப் பகுதிகளில் ஒரு பகுதியாக உள்ள வேறு உபநிடதங்களும் இருக்கின்றன. மற்ற உபநிடதங்கள் தனிப்பட்டவை; பிராம்மணங்களையோ வேறு வேதப் பகுதிகளையோ சாராதவை. ஆனால் இவை வேதப் பகுதிகளுடன்

தொடர்பு இல்லாதவை என்று நினைத்துவிடக் கூடாது. ஏனெனில் வேதங்களின் பல பகுதிகள் தொலைந்துவிட்டன; பிராம்மணங்களில் பலவும் இன்று வழக்கில் இல்லை. இன்று தனிப்பட்டவையாகத் தோன்றுகின்ற உபநிடதங்கள், படிப் படியாக மறைந்துவிட்ட சில பிராம்மணங்களின் பகுதிகளாக இருந்திருக்கலாம்; அந்தப் பிராம்மணங்கள் அழிந்துபோய், அவற்றின் பகுதியாக இருந்த உபநிடதங்கள் எஞ்சியிருக்கக் கூடும். இந்த உபநிடதங்கள் ஆரண்யகங்கள் அதாவது வன நூல்கள் என்றும் வழங்கப்படுகின்றன.

நடைமுறையில் இந்துக்களின் சாஸ்திரங்களாக இருப்பது வேதாந்தமே. வைதீகத் தத்துவங்களெல்லாம் வேதாந்தத்தையே அடிப்படையாகக் கொள்ள வேண்டும். தங்களுக்கு ஒத்துவருகின்ற வேதாந்தக் கொள்கைகளை மேற் கோளாகக் காட்ட பௌத்தர்களும் சமணர்களும்கூடத் தயங்கு வதில்லை. இந்தியத் தத்துவப் பிரிவுகளெல்லாம் வேதங்களே தங்களுக்கு அடிப்படை என்று உரிமை கொண்டாடினாலும் தங்கள் நெறிகளுக்கு வெவ்வேறு பெயர்கள் வைத்துக் கொண்டன. இந்த நெறிகளுள் கடைசியானது வியாசருடையது. இது மற்ற பிரிவுகளைவிட வேதங்களை அதிகமாக அடிப்படை யாகக் கொண்டது; அத்துடன், இதற்கு முந்தைய பிரிவுகளாகிய சாங்கியம், நியாயம் போன்றவற்றை வேதாந்தத்துடன் சமரசப் படுத்தவும் முயன்றது. எனவே வியாசரின் நெறிதான் சிறப்பாக வேதாந்தத் தத்துவம் என்று அழைக்கப்படுகிறது. தற்கால இந்தியாவில் வேதாந்தத் தத்துவத்திற்கு அடிப்படையாக இருப்பவை வியாச சூத்திரங்களே. இந்த வியாச சூத்திரங்களை உரையாசிரியர்கள் பலர் பலவிதமாக விளக்கியுள்ளனர்.

பொதுவாக இந்தியாவில் தற்போது மூன்றுவகை விளக்க வுரைகள்[1] இருக்கின்றன. இந்த உரைகளின் காரணமாக மூன்று தத்துவப் பிரிவுகளும் மூன்று நெறிகளும் தோன்றி யிருக்கின்றன. அவை துவைதம், விசிஷ்டாத்வைதம், அத்வைதம். இந்தியாவில் துவைதிகளும் விசிஷ்டாத்வைதிகளும்தான் அதிகம். இவர்களுடன் ஒப்பிடும்போது அத்வைதிகள் குறைவு.

---

1. பாஷ்யம், டீகா, டிப்பணி, சூர்ணி என்று விளக்கவுரைகள் பலவகைப் படும். இவற்றுள், பாஷ்யம் அல்லாத மற்றவை மூலபாடத்திலுள்ள கடினமான சொற்களின் விளக்கங்கள் மட்டுமே. பாஷ்யம் என்பது வெறும் விளக்கம் அல்ல; மூலபாடத்தை ஆதாரமாகக் கொண்டு ஒரு கோட்பாட்டு முறையை நிலைநாட்டும் முயற்சி அது.

இந்த மூன்று நெறிகளின் கருத்துக்களையும் நான் இப்போது சுருக்கமாக உங்களுக்குக் கூற முயல்கிறேன். அதற்கு முன் ஒரு விஷயம்: இந்த மூன்று வேதாந்த நெறிகளுக்கும் பொதுவான மனஇயல் ஒன்றுதான், அது சாங்கிய நெறியின் மனஇயல். இது நியாய, வைசேஷிக நெறிகளின் மனஇயலைப் பெரும்பாலும் ஒத்திருக்கிறது; சாதாரணமான சில கருத்துக்களில் மட்டுமே வேறுபாடுகள் காணப்படுகின்றன.

எல்லா வேதாந்திகளும் மூன்று விஷயங்களில் ஒத்துப் போகின்றனர். கடவுள், வேதங்கள் என்பவை அருள்வெளிப்பாடுகள், படைப்புச் சுழற்சி—இந்த மூன்றையும் அவர்கள் நம்புகின்றனர். இதில் வேதங்களைப்பற்றி முன்பே கண்டோம். படைப்புச் சுழற்சிபற்றிய நம்பிக்கை பின்வருமாறு: ஆகாசம் என்ற மூல ஜடப்பொருள் ஒன்றிலிருந்து தோன்றியதுதான் பிரபஞ்சம் முழுவதும் காணப்படும் ஜடப்பொருள். புவியீர்ப்பு சக்தி, இணைக்கும் சக்தி, விலக்கும் சக்தி போன்ற எல்லா சக்திகளும், உயிர்ச் சக்தியும் பிராணன் என்ற ஓர் ஆதி சக்தியிலிருந்து தோன்றியவை. பிராணன் ஆகாசத்தின்மீது செயல்படுவதால் பிரபஞ்சம் படைக்கப்படுகிறது, அல்லது வெளிப்படுகிறது. படைப்பின் தொடக்கத்தில் ஆகாசம் அசைவின்றி, மாறுதலின்றி இருந்தது. அதன்மீது பிராணன் அதிக அளவில் செயல்பட்டு, அதிலிருந்து செடிகள், பிராணிகள், மனிதர்கள், விண்மீன்கள் போன்ற தூலப் பொருட்களைப் படைத்தது. கணக்கிட முடியாத காலத்திற்குப் பின்னர் இந்த விரிவு அல்லது தோற்றம் ஒடுங்கத் தொடங்குகிறது. ஒவ்வொன்றும் தூல நிலையிலிருந்து படிப்படியாக சூட்சும நிலைக்கு மாறி, கடைசியில் முதற்பொருளான ஆகாசமாகவும் பிராணனாகவும் மாறி ஒடுங்கிவிடுகிறது. பிறகு மீண்டும் ஒரு புது சுழற்சி தொடங்குகிறது. இந்த ஆகாசத்திற்கும் பிராணனுக்கும் அப்பால் ஏதோ ஒன்று இருக்கிறது. இந்த இரண்டையும் மூன்றாவது பொருளாகிய மகத் என்பதற்குள் சுருக்கலாம். இந்த மகத் என்பதுதான் பிரபஞ்ச மனம் (Cosmic mind). இந்தப் பிரபஞ்ச மனம் ஆகாசத்தையும் பிராணனையும் படைப்பதில்லை; தானே அவையாக மாறுகிறது.

மனம், ஆன்மா, இறைவன் பற்றிய நம்பிக்கைகளை இனி பார்க்கலாம். அனைவரும் ஏற்றுக்கொள்கின்ற சாங்கிய மன இயலின்படி, ஒரு பொருளை அறிவது என்பதை எடுத்துக் கொள்வோம். உதாரணமாக, பார்ப்பது—இதில் முதலில்,

பார்க்கும் கருவிகளாகிய கண்கள் உள்ளன. இந்தப் பொறி களுக்குப் பின்னால் அதாவது கண்களுக்குப் பின்னால் பார்வைப் புலன் அல்லது இந்திரியம், அதாவது பார்வை நரம்புகளும் மையமும் இருக்கின்றன. இவை புறக் கருவிகள் அல்ல; ஆனாலும் இவை இல்லாமல் கண்களால் பார்க்க இயலாது. இனி, ஒரு பொருளைப் பார்த்தறிய இந்தப் பொறி களும் புலன்களும் மட்டும் போதாது, புலனுடன் மனமும் ஈடுபட வேண்டும். இதற்கும் மேலாக இந்த உணர்ச்சி, மனத்தின் நிர்ணயிக்கும் பகுதியான புத்திக்குப் போக வேண்டும். மனத்தின் தீர்மானிக்கின்ற நிலையே, எதிர்ச்செயல் புரிகின்ற நிலையே புத்தி. புத்தியில் எதிர்ச்செயல் நிகழ்ந்தவுடன் பிரபஞ்சமும் அகங்காரமும் வெளிப்படுகின்றன. பிறகு வருவது சங்கல்பம். ஆயினும் பார்க்கும் செயல் முற்றுப்பெறவில்லை. ஒரு பொருளின் பிம்பம் என்பது ஒளியின் படிப்படியான இயக்கத் தால் உருவாவது. படிப்படியான இந்த இயக்கங்கள், இயங்காத ஒன்றின்மீது ஒருங்கிணைக்கப்படும்போது மட்டுமே நாம் அந்தப் பொருளைக் காண முடியும். அதுபோலவே மனத்தில் ஏற்படும் கருத்துக்களும் தொகுக்கப்பட்டு, நிலையான ஒன்றின்மீது—அதாவது உடம்பையும் மனத்தையும் ஒப்பிடும் போது நிலையாக இருக்கின்ற ஒன்றின்மீது—சேர்த்துக் குவிக்கப்பட வேண்டும். அந்த நிலையான ஒன்றுதான் புருஷன் அல்லது ஆன்மா.

சாங்கியத் தத்துவப்படி, மனம் எதிர்ச்செயல் புரிகின்ற நிலையாகிய புத்தி அல்லது அறிவு என்பது மகத் அல்லது பிரபஞ்ச மனத்தின் ஒரு மாறுதல் அல்லது குறிப்பிட்ட வெளிப்பாடு ஆகும். மகத், இயங்கும் எண்ணமாக மாறுகிறது. இந்த எண்ணத்தின் ஒரு பகுதி உறுப்புகளாகவும், மற்றொரு பகுதி ஜடப்பொருளின் நுண்ணிய பகுதிகளாகவும் மாறு கின்றன. இவை எல்லாவற்றின் சேர்க்கையால் இந்தப் பிரபஞ்சம் தோன்றுகிறது. மகத்திற்கும் அப்பால் அவ்யக்த நிலை அல்லது தோன்றா நிலை ஒன்று இருப்பதாகவும், அங்கே மனம்கூடத் தோன்றா நிலையிலேயே உள்ளதாகவும், ஆனால் தோன்று வதற்கான காரணங்கள் இருக்கின்றன என்றும் சாங்கியத் தத்துவம் கூறுகிறது. இந்த நிலை பிரகிருதி என்றும் அழைக்கப் படுகிறது. இந்தப் பிரகிருதிக்கும் அப்பால், இதனுடன் ஒரு போதும் எந்தத் தொடர்பும் இல்லாமல், குணமற்றதான, எங்கும் நிறைந்த புருஷன் அல்லது சாங்கியர்கள் கூறுகின்ற

ஆன்மா இருக்கிறது. புருஷன் எதையும் செய்பவன் அல்ல, சாட்சி மாத்திரமே. புருஷனை விளக்குவதற்குப் படிக உதாரணம் காட்டப்படுகிறது. படிகம் தனக்கென்று எந்த நிறமும் இல்லாதது. அதன் முன் நிறப் பொருட்களை வைத்தால் அந்த நிறத்தை ஏற்று அந்த நிறப் படிகம்போல் காட்சியளிக்கும். ஆனால் உண்மையில் அது எந்த நிறத்தையும் ஏற்பதில்லை.

சாங்கியர்கள் கூறுகின்ற ஆன்மா மற்றும் பிரகிருதிக் கொள்கைகளை வேதாந்திகள் ஒப்புக்கொள்வதில்லை. பிரகிருதிக்கும் புருஷனுக்கும் இடையே இணைக்கப்பட வேண்டிய ஒரு பெரிய இடைவெளி இருப்பதாக இவர்கள் சொல்கிறார்கள். சாங்கியத் தத்துவம் ஒரு பக்கத்தில் பிரகிருதியைப்பற்றிச் சொல்கிறது; உடனேயே மறுபக்கத்தில் உள்ளதும் பிரகிருதியிலிருந்து முற்றிலும் வேறுபட்டதுமான ஆன்மாவிற்குத் தாவுகிறது. இயல்பாகவே நிறமற்ற ஆன்மா வின்மீது, சாங்கியர்கள் கூறுகின்றார்களே அந்தப் பலவகை நிறங்கள் எப்படிச் செயல்பட முடியும்? எனவே புருஷனும் பிரகிருதியும் ஒன்றே என்று ஆரம்பம் முதலே வேதாந்திகள் தீர்மானமாகக் கூறுகிறார்கள். துவைத வேதாந்திகளும் ஆன்மா அல்லது இறைவன் இந்தப் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமாக இருப்பதுடன் உபாதான காரணமாகவும் இருக்கிறார்[1] என்பதை ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் இப்படிச் சொல்கிறார்களே இதற்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. தங்கள் முடிவு களிலிருந்து தப்பிக்க, பின்வருமாறு அவர்கள் விளக்கம் கூறுகிறார்கள்:

இந்தப் பிரபஞ்சத்தில் உள்ளவை மூன்று—இறைவன், ஆன்மா, இயற்கை. இயற்கையும் ஆன்மாவும் இறைவனுக்கு உடல் போன்றவை; இந்த நோக்கிலிருந்து இறைவனும் பிரபஞ்சமும் ஒன்று என்று சொல்லலாம். ஆனால் இந்த இயற்கையும் பல்வேறு ஆன்மாக்களும் என்றென்றும் ஒன்றுக்கொன்று வேறுபட்டவையாகவே இருக்கும். ஒரு கல்பத்தின் அதாவது படைப்பின் ஆரம்பத்தில் இவை வெளிப்படுகின்றன, படைப்பின் முடிவில் நுட்பமாகி நுட்ப நிலையிலேயே இருக்கின்றன.

ஆன்மாபற்றிய இந்தக் கொள்கையை அத்வைத வேதாந்திகள் ஒப்புக்கொள்வதில்லை. ஏறக்குறைய எல்லா

1. குயவன் மண்பாண்டங்கள் செய்வதை உதாரணமாக எடுத்துக் கொண்டால், மண்பாண்டங்கள் செய்வதற்குக் குயவன் நிமித்த காரணம்; மண், சக்கரம் முதலியவை உபாதான காரணங்கள்.

உபநிடதங்களும் இவர்களுக்குச் சாதகமாக இருப்பதால், இவர்கள் தங்கள் தத்துவத்திற்கு அவற்றையே முற்றிலும் அடிப்படையாகக் கொள்கிறார்கள். எல்லா உபநிடதங்களின் நோக்கமும் ஒன்றே; பின்வரும் கருத்தை விளக்குவதுதான் அந்த நோக்கம்: 'களிமண்கட்டி ஒன்றை அறிவதால் பிரபஞ்சத்திலுள்ள களிமண் முழுவதன் இயல்பும் விளங்கிவிடும். அதுபோல், எந்த ஒன்றை அறிவதால் பிரபஞ்சத்திலுள்ள அனைத்தையும் நாம் அறியலாம்?'[1] பிரபஞ்சம் முழுவதையும் ஒன்றாக, அதாவது, எது உண்மையாகவே இந்தப் பிரபஞ்சம் முழுவதுமாக இருக்கிறதோ, அதுவாகப் பொதுமைப்படுத்துவதே அத்வைதிகளின் நோக்கம். பிரபஞ்சம் முழுவதும் ஒன்றே, ஒரே பரம்பொருள்தான் இப்படிப் பல உருவங்களாக வெளிப்படுகிறார் என்பது அவர்களின் கருத்து. சாங்கியர்கள் கூறுகின்ற இயற்கை உள்ளது என்பதை அத்வைதிகள் ஒப்புக்கொள்கின்றனர், ஆனால் அந்த இயற்கை இறைவனே என்கின்றனர். ஸத் என்ற இந்தப் பரம்பொருள்தான் எல்லாமாக—பிரபஞ்சம், மனிதன், ஆன்மா, பிற பொருட்கள் அனைத்துமாக—மாறுகிறார். மனம், மகத் இவை இரண்டுமே அந்த ஸத் என்ற ஒன்றின் வெளிப்பாடு.

ஆனால் இந்தக் கருத்து 'இந்த உலகம்தான் கடவுள்' என்ற வாதமாக (Pantheism) ஆகிவிடுமே என்ற பிரச்சினை எழுகிறது. மாறாததாகிய ஸத் (தனிப்பொருளான ஒன்று மாறாதது என்பதை அத்வைதிகள் ஒப்புக்கொள்கிறார்கள்) மாறுதலுக்கும் அழிவுக்கும் உட்பட்டவையாக எப்படி மாற முடியும்? இந்த இடத்தில் அத்வைதிகள் விவர்த்த வாதம் அதாவது தோற்றக் கொள்கையைப் புகுத்துகிறார்கள். துவைத மற்றும் சாங்கியக் கொள்கைகளின்படி, மூலப் பிரகிருதியின் பரிணாமமே இந்தப் பிரபஞ்சம். அத்வைதிகளுள் சிலரும், சில துவைதிகளும் இறைவனின் பரிணாமமே இந்தப் பிரபஞ்சம் என்கிறார்கள். ஆனால் சங்கரரைப் பின்பற்றுபவர்களான தனி அத்வைதிகளின் கொள்கைப்படி இந்தப் பிரபஞ்சம் இறைவனின் பரிணாமம், ஆனால் அது வெறும் தோற்றமே தவிர உண்மைப் பரிணாமம் அல்ல. இந்தப் பிரபஞ்சத்திற்கான உபாதான காரணம் இறைவனே என்பது உண்மையில் அல்ல, தோற்றத்தில் மட்டுமே.

1. ஒப்பிடுக: முண்டக உபநிடதம், 1.1.3

இதை விளக்க அவர்கள் கயிறும் பாம்பும் உவமையைக் காட்டுகிறார்கள். கயிறு பாம்பாகத் தோன்றுகிறதே தவிர உண்மையில் அது பாம்பு அல்ல. கயிறு உண்மையில் பாம்பாக மாறவில்லை. அதேபோல், இப்போது நாம் காண்கின்ற பிரபஞ்சமும் அந்தப் பரம்பொருள்தான். அது மாறவே இல்லை, அதில் நாம் காணும் மாற்றங்களெல்லாம் வெறும் தோற்றங்கள் மட்டுமே. இந்த மாறுதல்கள் தேசம், காலம், நிமித்தம் இவற்றால் தோன்றுபவை; இன்னும் உயர்ந்த மனத் தத்துவப் பொதுமையில் (Psychological generalisation) சொல்வ தானால் நாமரூபங்களால் ஆனவை. நாமரூபங்களே ஒரு பொருளை மற்றொன்றிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகின்றன. நாமரூபத்தினால்தான் வேறுபாடு உண்டாகிறது. உண்மையில் அவை ஒன்றே. தோற்றம், உண்மை என்ற இரண்டு நிலைகளே இல்லை என்றுதான் வேதாந்திகள் கூறுகிறார்கள். கயிறு பாம்பாக மாறுவது வெறும் தோற்றத்தில் மட்டும்தான். இந்த மனமயக்கம் நீங்கியவுடன் பாம்பு மறைந்துவிடுகிறது.

அறியாமையில் இருக்கும்போது, தோற்றத்தை மட்டுமே ஒருவன் காண்கிறான்; இறைவனைக் காண்பதில்லை. இறைவனைக் காணும் அந்தக் கணமே அவனைப் பொறுத்த வரையில் பிரபஞ்சம் மறைந்துவிடுகிறது. மாயை என்று சொல்லப்படும் அறியாமையே இந்தத் தோற்றங்களுக்கெல்லாம் காரணம். தனிப்பொருளான, மாறுதல் இல்லாத, என்றும் ஒரே தன்மையாக உள்ள ஒன்றை, பிரபஞ்சமாகத் தோன்றச் செய்வது இந்த மாயையே. மாயை என்பது சுத்த சூன்யமோ அல்லது இல்லாத ஒன்றோ அல்ல. இருப்பது என்றோ இல்லாதது என்றோ அதைச் சொல்ல முடியாது—இருப்பது அல்ல; ஏனெனில் பூரணமான, மாறுதலில்லாத இறைவனைப் பற்றி மட்டுமே இப்படிச் சொல்ல முடியும். இந்த நோக்கில் மாயை என்பது இல்லாதது. இதை இல்லாதது என்றும் கூற முடியாது. ஏனெனில் இல்லாத ஒன்றானால் தோற்றப் பிரபஞ்சத்தை உண்டாக்க அதனால் இயலாது. எனவே மாயை என்பது இது இரண்டும் அல்லாத ஒன்று. வேதாந்தத் தத்துவத்தில் இதை அநிர்வசனீயம் அல்லது விளக்க முடியாதது என்கிறார்கள்.

இந்த மாயையே பிரபஞ்சத்திற்கு உண்மையான காரணம். பிரம்மம் அல்லது இறைவன் பிரபஞ்சத்திற்கான அடிப்படைப் பொருளைத் தருகிறார், மாயை அதற்கு நாமரூபங்களைத்

தருகிறது. இதனால் இறைவன் பிரபஞ்சமாக மாறிவிட்டது போன்ற தோற்றம் உண்டாகிறது.

அத்வைத வேதாந்தத்தில் தனி ஆன்மாவுக்கு இடமில்லை. தனி ஆன்மாவைப் படைத்தது மாயை என்பது அவர்களின் வாதம். உண்மையில் தனி ஆன்மாக்கள் இருக்க முடியாது. இருப்பது உண்மையில் ஒன்றே என்றால் நான் வேறு, நீங்கள் வேறு என்றெல்லாம் எப்படி இருக்க முடியும்? நாம் அனைவரும் ஒன்றே. பன்மையைக் காண்பதுதான் தீமைக்கான காரணம். நான் வேறு, பிரபஞ்சம் வேறு என்று உணர ஆரம்பித்த உடனே முதலில் பயம் தோன்றுகிறது, தொடர்ந்து துன்பம் உண்டாகிறது. 'எங்கே ஒருவன் மற்றொருவனின் பேச்சைக் கேட்கிறானோ, மற்றொருவனைப் பார்க்கிறானோ அது சிறியது. எங்கே ஒருவன் பிறரைக் காண்பதில்லையோ, கேட்பதில்லையோ அது பெரியது, அதுவே இறைவன். பெரியதில்தான் குறைவற்ற பேரானந்தம் இருக்கிறது. சிறியதில் இந்த இன்பம் இல்லை.'

அத்வைதத் தத்துவத்தின்படி, பிரபஞ்சத்தில் காணும் இந்த வேறுபாடு, இந்தத் தோற்றம் சில காலம் மனிதனின் உண்மை இயல்பை மறைத்து நிற்கிறது. ஆனால் இந்த இயல்பு என்னவோ மாறுவதே இல்லை. மிகத் தாழ்ந்த புழுவிலும் மிக உயர்ந்த மனிதனிலும் ஒரே தெய்வீக இயல்பு இருக்கிறது. இந்தத் தெய்வீக இயல்பு புழுவில் மிக அதிகமாகவும் மனிதனில் மிகக் குறைவாகவும் மாயையால் மறைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொன்றிற்கும் பின்னணியாக அந்தத் தெய்வீகமே இருக்கிறது. இதுவே நன்னெறியின் அடிப்படை. ஒருவருக்கும் தீங்கு செய்யாதே. உன்னை நேசிப்பது போலவே எல்லோரையும் நேசி, ஏனெனில் பிரபஞ்சம் முழுவதுமே ஒன்றல்லவா? பிறருக்குத் தீங்கு செய்வதால் நமக்கே நாம் தீங்கு செய்து கொள்கிறோம்; பிறரை நேசிக்கும்போது நம்மை நாமே நேசிக்கிறோம். இதிலிருந்துதான் அத்வைத நீதிநெறியும் உண்டாகிறது. இதைத் தன்னல மறுப்பு என்ற ஒரே சொல்லில் கூறிவிடலாம்.

இந்தச் சிறிய-நான் என்பதே நமது எல்லா துன்பங்களுக்கும் காரணம் என்று அத்வைதி சொல்கிறான். பிற உயிர்களிலிருந்து நம்மை வேறுபடுத்திக் காட்டுகின்ற இந்தச் சிறிய 'நான்' என்பதன் காரணமாகத்தான் வெறுப்பும் பொறாமையும் துன்பமும் போராட்டமும் பிற தீமைகளும்

நம்மைச் சூழ்கின்றன. இந்த நான் என்று ஒழிகிறதோ அன்றே எல்லா போராட்டமும் துன்பங்களும் ஒழிந்துவிடும். எனவே இந்த நான் என்பதை விட்டுவிட வேண்டும். மிகச் சாதாரண மான பிராணிகளுக்காக உயிரை விடவும் நாம் எப்போதும் தயாராக இருக்க வேண்டும். எப்போது ஒரு மனிதன் ஒரு பூச்சிக்காகக்கூடத் தன் உயிரையே கொடுக்கும் தியாக நிலையை அடைகிறானோ, அந்தக் கணமே அவன் அத்வைதிகளின் லட்சியமான பூரண நிலையை அடைகிறான். அப்படி அவன் தயாராகின்ற அந்தக்கணமே அவனது அறியாமைத் திரை கழன்று வீழ்கிறது; அவன் தன் உண்மை இயல்பை உணர்கிறான்; தான் பிரபஞ்சத்துடன் ஒன்றுபட்டிருப்பதை இந்தப் பிறவியிலேயே உணர்கிறான். அந்த நேரத்திற்கு இந்தத் தோற்றப் பிரபஞ்சம் அவனுக்கு மறைந்தேவிடும். தான் யார் என்பதை அவன் உணர்வான். ஆனால் அவனுடைய வினைப்பயன் செயலாற்றும் வரையில் அவன் வாழ்ந்தேயாக வேண்டும். அறியாமைத் திரை விலகிய பின்னரும், உடம்பு சில காலம் வாழ்ந்து கொண்டிருக்கின்ற இந்த நிலையைத்தான் வேதாந்திகள் ஜீவன்முக்தி அல்லது வாழும்போதே முக்தி என்கிறார்கள். கானல்நீரைப்பற்றிய உண்மை தெரிந்த மனிதன் அதில் ஏமாறுவதில்லை. அது மறுநாளோ வேறொரு நாளோ மீண்டும் அவன் முன் தோன்றினாலும் அவன் அதை உண்மை என்று நினைத்து மயங்க மாட்டான். முதலில் அந்த உண்மை தெரியும்வரையில் உண்மை எது, பொய் எது என்று பிரித்தறிய அவனால் முடியவில்லை. ஒருமுறை அதன் உண்மை தெரிந்த பிறகு அவனது கண்களும் புலன்களும் வேலை செய்யும் வரையில் அவன் அந்தக் கானல்நீரைப் பார்ப்பான்; ஆனால் ஏமாற மாட்டான். உண்மைப் பிரபஞ்சத்திற்கும் அதன் தோற்றத்திற்கும் உள்ள வேறுபாடு அவனுக்கு விளங்கி விட்டது. பிரபஞ்சத் தோற்றம் அவனை இனி ஏமாற்ற முடியாது. எனவே வேதாந்தி தன் உண்மை இயல்பை என்று உணர்கிறானோ, அன்றே அவனுக்குப் பிரபஞ்சம் மறைந்து விடுகிறது. தோற்றம் மறுபடியும் அவன் முன் வரும், ஆனால் அது இப்போது துயர் மண்டிக் கிடக்கின்ற பிரபஞ்சமாக இருக்காது. துன்பச் சிறையாக இருந்த அது இப்போது சத்-சித்-ஆனந்தமாக, தனியிருப்பாக, தனியறிவாக, தனி ஆனந்தமாக மாறிவிட்டது. இந்த நிலையை அடைவதுதான் அத்வைத வேதாந்தத்தின் லட்சியம்.

சொற்பொழிவைத் தொடர்ந்து கேள்வி-பதில் நிகழ்ச்சி நடைபெற்றது

கேள்வி: தற்போது இந்தியாவில் எந்த அளவில் தத்துவ ஆராய்ச்சி நடைபெற்று வருகிறது என்பதுபற்றிச் சிறிது அறிய விரும்புகிறேன்.

பதில்: நான் முன்பே கூறியதுபோல் இந்தியருள் பெரும் பாலோர் நடைமுறையில் துவைதிகள்; அத்வைதிகள் சிறு பான்மையினரே. ஆராய்ச்சியின் முக்கியக் கருத்து மாயை மற்றும் ஜீவன் பற்றியவை. உங்கள் நாட்டிற்கு வந்த பிறகு ஒரு விஷயத்தைத் தெரிந்துகொண்டேன். இங்குள்ள தொழிலாளிகள் தற்போதைய அரசியல் நிலவரத்தை அறிந்துள்ளனர். ஆனால் அவர்களிடம், 'மதம் என்றால் என்ன? இன்னஇன்ன மதப் பிரிவுகளின் கொள்கைகள் என்ன?' என்று நான் கேட்டபோதோ, 'எங்களுக்குத் தெரி யாது, நாங்கள் சர்ச்சுக்குப் போகிறோம்' என்றனர். இந்தியா வில் ஒரு குடியானவனை நோக்கி, 'உன்னை ஆள்வது யார்?' என்று கேட்டால், 'எனக்குத் தெரியாது. நான் வரி கட்டுகிறேன், அவ்வளவுதான்' என்பான். ஆனால், 'உன் மதம் என்ன?' என்று கேட்டால், 'நான் ஒரு துவைதி' என்பான், மாயை, ஜீவன் என்பவைபற்றி விளக்கவும் தயாராக இருப்பான். அவனுக்கு எழுதப் படிக்கத் தெரியாது, ஆனால் இவற்றையெல்லாம் துறவிகளிடமிருந்து தெரிந்து கொண்டிருப்பான். இவைபற்றி விவாதிப்பதில் ஆர்வ முடையவன் அவன். தினசரி வேலை முடிந்ததும் மரத் தடியில் உட்கார்ந்து விவசாயிகள் இந்த விஷயங்களை விவாதிப்பார்கள்.

கே: இந்துக்களிடையே வைதீகம் (Orthodoxy) என்பதன் கருத்து என்ன?

ப: சாப்பிடுவது, அருந்துவது, திருமணம்போன்ற விஷயங்களில் குறிப்பிட்ட ஜாதி விதிகளை கடைப்பிடிப்பதே தற்காலத்தில் வைதீகம் என்று கருதப்படுகிறது. வேறு விஷயங்களில் இந்து தன் விருப்பப்படி எந்தக் கொள்கையையும் நம்பலாம். இயக்க அமைப்பு எதுவும் இந்தியாவில் ஒருபோதும் இருந்ததில்லை. ஆகவே வைதீகக் கோட்பாடுகளை வகுக்கவும் ஓர் அமைப்பைச் சார்ந்த யாரும் இல்லை. பொதுவாக, வேதங்களை நம்புபவர்களை வைதீகர்கள் என்று சொல்கிறோம். ஆனால் உண்மையில் துவைதிகள் பலர் வேதங்களைவிடப் புராணங்களையே பெரிதும் நம்புகின்றனர்.

கே: கிரேக்கர்களின் ஸ்டாயிக் தத்துவத்தில்[1] இந்துத் தத்துவத்தின் தாக்கம் எந்த அளவுக்கு உள்ளது?

ப: அலெக்சாண்டிரியர்களின் வாயிலாக ஓரளவு தாக்கம் இருக்கலாம். பிதகோரஸிடம் சாங்கியத் தத்துவத்தின் தாக்கம் உள்ளதாக சிறிது சந்தேகிக்கப்படுகிறது. இது எப்படி இருந்தாலும் சரி, வேதங்களின் தத்துவங்களைச் சமரசப்படுத்துவதற்காக முதல் முறையாக எழுந்த முயற்சி சாங்கியத் தத்துவம் என்றே நாங்கள் நினைக்கிறோம். வேதங்களிலேயே கபிலரைப்பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது— 'ரிஷிம் ப்ரஸூதம் கபிலம் யஸ்தமக்ரே—(ஞானத்தால்) முதலாவதாகப் பிறந்த மகரிஷியான கபிலரைத் தாங்குபவர்.'[2]

கே: மேலை நாட்டு விஞ்ஞானத்திற்கும் இதற்கும் உள்ள முரண்பாடு என்ன?

ப: முரண்பாடு எதுவுமில்லை, நாங்கள் அதனுடன் ஒத்துத்தான் போகிறோம். எங்கள் பரிணாமக் கொள்கை மற்றும் ஆகாசம், பிராணன்பற்றிய கோட்பாடுகள் உங்கள் நவீனக் கோட்பாடுகளுடன் அப்படியே ஒத்திருக்கின்றன. உங்கள் பரிணாமவாதம்கூட எங்கள் யோக நெறியிலும் சாங்கியத் தத்துவத்திலும் உள்ளது. உதாரணமாக ஓர் உயிரினம் மற்றோர் இனமாக மாறுவதை 'ஜாத்யந்தர பரிணாம: ப்ரக்ருத்யா பூராத்—இயற்கை உட்புகுந்து நிறைவதால்' என்கிறார் பதஞ்ஜலி[3]. அவரது விளக்கத்தில்தான் உங்களுக்கும் எங்களுக்கும் வேறுபாடு. இந்தப் பரிணாமத்திற்கான அவரது விளக்கம் ஆன்மிகபரமானது. அருகிலுள்ள கால்வாயிலிருந்து வயலுக்குத் தண்ணீர் பாய்ச்ச விரும்புகிறான் விவசாயி. அவன் மடையை மட்டும் திறந்தால் போதுமானது— நிமித்தமப்ரயோஜகம் ப்ரக்ருதீனாம் வரணபேதஸ்து தத: க்ஷேத்ரிகவத்.[4] எனவே ஒவ்வொரு மனிதனும் எல்லையற்றவனாகவே இருக்கிறான். கம்பிகள், தாழ்ப்பாள்கள் போன்ற தடைகளும் பலவகைச் சூழ்நிலைகளும் மட்டுமே அவனை அடைத்திருக்கின்றன. அவற்றை அகற்றிய உடனே விரைந்து

1. சுகதுக்கம், நன்மை தீமை போன்ற இருமைகளை சமமாகப் பார்க்க வேண்டும்; ஏற்றுக்கொள்ள வேண்டும்—இதுதான் வாழ்க்கை லட்சியம் என்று கூறுகிறது ஸ்டாயிக் தத்துவம் (Stoic). கி.மு. 308-இல் கிரீஸில் வாழ்ந்த செனோ (Zeno) நிறுவிய நெறி இது.

2. சுவேதாஸ்வதர உபநிடதம், 5. 2.

3. ஞானதீபம் சுடர் 2 பக்கம் 188 பார்க்க.

4. ஞானதீபம் சுடர் 2 பக்கம் 189 பார்க்க.

அவன் வெளியே வருகிறான்; தன்னை வெளிப்படுத்துகிறான். மிருகத்தில் மனிதன் தற்காலிமாகத் தடைபட்டிருக்கிறான். உரிய சூழ்நிலைகள் ஏற்பட்டவுடன் மனிதனாக வெளிப்படுகிறான். அதுபோலவே, உரிய சூழ்நிலைகள் வரும்போது மனிதனிலிருக்கும் கடவுள் வெளிப்படுகிறார். ஆகவே புதிய கோட்பாடுகளில் வாதிப்பதற்கு எதுவுமில்லை. உதாரணமாக சாங்கியத் தத்துவம் கூறுகின்ற புலனறிவு முறை நவீன உடலியலிலிருந்து அதிகம் வேறுபட்டதல்ல.

கே: ஆனால் உங்கள் வழி வேறானதா?

ப: ஆம். மனத்தின் ஆற்றல்களையெல்லாம் ஒருமுகப்படுத்துவதே அறிவு பெறுவதற்கான ஒரே வழி என்று நாங்கள் கருதுகிறோம். புற விஞ்ஞானத்தைப் பொறுத்தவரையில் மன ஒருமைப்பாடு என்பது மனத்தைப் புறப்பொருள் ஒன்றில் குவிப்பது. அக விஞ்ஞானத்திலோ, மன ஒருமைப்பாடு என்பது மனத்தைச் சொந்த ஆன்மாவை நோக்கி இழுப்பதாகும். இந்த மன ஒருமைப்பாட்டை யோகம் என்று கூறுகிறோம்.

கே: மனம் ஒருமுகப்பட்ட நிலையில் இந்தக் கோட்பாடுகளின் உண்மை தெளிவாகிறதா?

ப: 'ஆம்' என்று யோகிகள் அடித்துச் சொல்கின்றனர். மன ஒருமைப்பாட்டால் பிரபஞ்சத்தின் புற மற்றும் அக உண்மைகள் அனைத்தும் மனத்திற்குத் தெளிவாகின்றன என்கிறார்கள் அவர்கள்.

கே: அத்வைதிகள் பிரபஞ்ச இயலைப்பற்றி என்ன சொல்கிறார்கள்?

ப: பிரபஞ்சமும் பிறவும் மாயையில்தான் உள்ளது, பிரபஞ்ச நிலையில்தான் உள்ளது, உண்மையில் இல்லை என்கிறான் அத்வைதி. நாம் கட்டுண்டிருக்கும் வரை இவற்றைக் கண்டே தீர வேண்டும். இந்தத் தோற்றங்களுக்கிடையே எல்லா பொருட்களும் குறிப்பிட்ட ஒழுங்குமுறையில் வருகின்றன. இதைக் கடந்தால் விதியோ முறையோ எதுவும் கிடையாது. அங்கு சுதந்திரம்தான்.

கே: அத்வைதம் துவைதத்திற்கு எதிரானதா?

ப: உபநிடதங்கள் ஒரு வரிசைக் கிரமத்தில் அமைக்கப்படாததால் தத்துவ அறிஞர்கள் தங்கள் விருப்பப்படி பகுதிகளை எடுத்துத் தனி நெறியாக்குவது எளிதாக இருந்தது. ஆனால் உபநிடதங்களைக் கையாண்டே தீர வேண்டும், இல்லாவிட்டால் அந்த நெறிகள் ஆதாரம் இல்லாதவையாகிவிடும்.

உபநிடதங்களில் எல்லாவிதத் தத்துவ முறைகளையும் காண்கிறோம். அத்வைதம் துவைதத்திற்கு எதிரானதல்ல என்பதே எங்கள் பதில். துவைதம் என்பது மூன்று படிகளில் ஒன்றாகும். மதம் என்பது மூன்று படிகளை உடையது. முதல்படி துவைதம். பிறகு மனிதன் சற்று உயர்ந்த படியை அடைகிறான், அது விசிஷ்டாத்வைதம். கடைசியாக அவன் தன்னைப் பிரபஞ்சத்துடன் ஒன்றாக உணர்கிறான். இந்த மூன்றும் ஒன்றுக்கொன்று எதிரானவையல்ல, ஒன்றை ஒன்று நிறைவேற்றுபவை.

கே: மாயை அல்லது அறியாமை இருக்கக் காரணம் என்ன?

ப: காரண நிலைக்கு அப்பால் ஏன் என்று கேட்க முடியாது. மாயையினுள்தான் அதைக் கேட்க முடியும். இந்தக் கேள்வியைத் தர்க்க முறையில் கேட்டால்தான் விடை கூற முடியும். அதற்கு முன்பு விடை கூற நமக்கு உரிமையில்லை என்பதே எங்கள் பதில்.

கே: சகுணக் கடவுள், மாயையைச் சேர்ந்தவரா?

ப: ஆம். மாயையின் வழியாகக் காணப்படுகின்ற பரம்பொருளே சகுணக் கடவுள். அதே பரம்பொருள் இயற்கையின் ஆதிக்கத்திலிருக்கும்போது ஜீவன் எனப்படுகிறார், இயற்கையை ஆளும்போது ஈசுவரன் அல்லது சகுணக் கடவுள் எனப்படுகிறார். ஒருவன் சூரியனைக் காண்பதற்கு இங்கிருந்து புறப்படுவதாகக் கொள்வோம். அவன் முதலில் ஒரு சிறு சூரியனைக் காண்பான். போகப்போக சூரியனின் காட்சி பெரிதாகிக்கொண்டே போகும். கடைசியில் உண்மையான சூரியனை அடைகிறான். ஒவ்வொரு படியிலும் வெவ்வேறு சூரியனைக் காண்பதுபோல் தோன்றினாலும் அவன் கண்டது ஒரே சூரியனையே. அதுபோலவே இந்தத் தோற்றங்கள் எல்லாம் பரம்பொருளின் காட்சிகளே. அந்த நிலையில் அவையெல்லாம் உண்மை; ஒன்றுகூடப் போலித் தோற்றங்கள் அல்ல, அவை கீழ் நிலைகள் என்று வேண்டுமானால் சொல்லலாம்.

கே: பரம்பொருளை அறிவதற்கான வழி எது?

ப: இரண்டு வழிகள் உள்ளன என்று நாங்கள் சொல்கிறோம். ஒன்று உடன்பாட்டு வழி, மற்றொன்று எதிர்மறை வழி. உடன்பாட்டு வழி என்பது பிரபஞ்சம் இயங்கும் வழி அதாவது அன்பு வழி. இந்த அன்பு வட்டத்தை எல்லையற்றுப் பெரிதாக்கிக்கொண்டே போனால் பிரபஞ்சத்தை ஒன்றாக்கும்

அன்பை அடையலாம். இரண்டாவது முறை, 'நேதி, நேதி— இதல்ல, இதல்ல' என்பதாகும். மனத்தைப் புற நாட்டம் கொள்ளச் செய்கின்ற ஒவ்வோர் அலையையும் தடுத்து, கடைசியாக மனத்தையே அழித்துவிடுவது. உண்மை அப் போது தானாக வெளிப்படுகிறது. அதை சமாதி அல்லது உணர்வுகடந்த நிலை என்கிறோம்.

கே: அது அகப்பொருளைப் (subject) புறப்பொருளில் (object) இரண்டறக் கலப்பதா?

ப: அகப்பொருளைப் புறப்பொருளில் கலப்பதல்ல; அது புறப்பொருளை அகப்பொருளில் இரண்டறக் கலப்பது. உண்மையில் அந்த நிலையில் இந்த உலகம் அழிகிறது, நான் இருக்கிறேன். உண்மையில் அப்போது இருப்பது நான் மட்டுமே.

கே: ஜெர்மனியிலுள்ள எங்கள் தத்துவ அறிஞர்கள் சிலர் இந்திய பக்தி நெறி, மேலை நெறியின் தாக்கத்தால் ஏற்பட்டதாகக் கருதுகின்றனரே!

ப: இதில் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. அந்த ஊகம் உறுதியற்றது. இந்திய பக்தி மேலை பக்தியைப் போன்ற தல்ல. எங்கள் பக்தியின் மையக் கருத்தே, அதில் பயம் என்ற உணர்ச்சி இல்லாததுதான். அன்புக் கடவுளையே நாங்கள் ஏற்கிறோம். பயத்தால் அல்ல, அன்பாலேயே நாங்கள் வழி படுகிறோம். ஆரம்பம் முதல் முடிவு வரை அன்புதான். இரண்டாவதாக, இந்த ஊகத்திற்குத் தேவையே இல்லை. பைபிளுக்கு மிகவும் முற்பட்ட மிகப் பழைய உபநிடதங் களிலேயே பக்தியைப்பற்றிக் கூறப்பட்டுள்ளது. பக்தியின் முளைகளை சம்ஹிதைகளிலேயே (வேத கீதங்கள்) காண முடியும். பக்தி என்ற சொல் மேலைநாட்டுச் சொல் அல்ல, சிரத்தை என்ற சொல்லிலிருந்து உருவான சொல் அது.

கே: கிறிஸ்தவ மதத்தைப் பற்றி இந்தியக் கருத்து என்ன?

ப: கிறிஸ்தவ மதம் மிக நல்லது என்பதே. வேதாந்தம் எல்லோரையும் ஏற்றுக்கொள்ளக் கூடியது. இந்தியாவில் ஒரு வினோதக் கருத்து இருக்கிறது. எனக்கு ஒரு குழந்தை இருந்தால் அவனுக்கு நான் எந்த மதத்தையும் கற்றுக் கொடுக்கக் கூடாது; மனத்தைக் கட்டுப்படுத்துவதற்கான பிராணாயாம முறை, ஒரு பிரார்த்தனை—உங்களுடைய பிரார்த்தனை மாதிரியல்ல, 'இந்தப் பிரபஞ்சத்தையெல்லாம் படைத்த இறைவனைத் தியானிக்கிறேன்; அவர் என் மனத்தை ஒளி

பெறச் செய்யட்டும்'[1] போன்ற பிரார்த்தனை—இவற்றையே கற்பிக்க வேண்டும். இவ்வாறுதான் அவனுக்குக் கற்பிக்கப் படும். பின்னர் அவன் பல தத்துவ அறிஞர்களிடமும் ஆசிரியர் களிடமும் கற்றுக் கொள்வான். தனக்குத் தகுந்த ஒருவரை அவனே தேர்ந்தெடுத்துக் கொள்வான். அவர் இவனுக்குக் குருவாகி விடுவார், இவன் சீடனாவான். அவன் குருவிடம், 'நீங்கள் கூறுபவற்றுள் இந்தத் தத்துவம்தான் மிக உயர்ந்தது. அதையே எனக்குக் கற்றுக் கொடுங்கள்' என்பான்.

எனது வழி உனதாக முடியாது, உனது வழி எனதாக முடியாது என்பது எங்கள் அடிப்படைக் கருத்து. ஒவ்வொரு வருக்கும் சொந்தப் பாதை இருக்க வேண்டும். எனது மகளின் பாதை ஒன்று, மகனுடைய பாதை வேறு, எனது பாதை மற்றொன்று என்று இருக்கலாம். ஒவ்வொருவருக்கும் இஷ்டம் அல்லது சொந்தப் பாதை இருக்கும். அது எங்களுக்கே எங்களுக்காக இருக்கும். அது எனக்கும் என் குருவிற்கும் இடையில் உள்ளது. இதைப்பற்றி ஒருவருக்கொருவர் சண்டை போட விரும்புவதில்லை. இதைப் பிறருக்குச் சொல் வதில் பயனில்லை, ஒவ்வொருவனும் அவனுக்குப் பொருத்த மான வழியைத் தேடிக்கொள்ள வேண்டும். பொதுவான தத்துவமும் பொதுவான சாதனை முறையும்தான் எல்லோ ருக்கும் கற்பிக்கப்பட முடியும். ஒரு வேடிக்கையான உதாரணம் சொல்லலாம். ஒற்றைக்காலில் நிற்பது எனக்கு நன்மை செய்ய லாம். இதைத்தான் எல்லோரும் செய்ய வேண்டுமென்று சொன்னால் அது எவ்வளவு வேடிக்கையானதாக இருக்கும்! ஆனால் அது எனக்குப் பொருத்தமானதாக இருக்கலாம். நான் துவைதியாக இருக்கலாம், என் மனைவி அத்வைதியாக இருக்கலாம்; எனது பிள்ளைகளுள் ஒருவன் ஏசுவைக் கும்பிட லாம், ஒருவன் புத்தரை வணங்கலாம், ஒருவன் முகமதைத் தொழலாம். ஆனால் இவர்கள் ஜாதி விதிகளை மட்டும் கடைப்பிடித்தாக வேண்டும். மத விஷயம் ஒருவனது விருப்பமே, அதுவே அவனது இஷ்டம்.

கே: இந்துக்கள் அனைவரும் ஜாதிகளை ஏற்றுக்கொள் கிறார்களா?

ப: ஏற்றுக் கொண்டேயாக வேண்டும். அவர்கள் நம்பாமல் இருக்கலாம், ஆனால் அதற்குக் கீழ்ப்படிந்தே தீரவேண்டும்.

---

1. காயத்ரீ மந்திரத்தின் திரண்ட பொருள் இது.

கே: பிராணாயாமம், மன ஒருமைப்பாடு முதலிய பயிற்சிகளை எல்லோரும் பழகுகிறார்களா?

ப: ஆம்; சிலர் சிறிதளவு மட்டும் செய்கின்றனர், தனது மதத்திற்கு எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு அனுசரிக்கின்றனர். இந்தியக் கோயில்கள் இங்குள்ள சர்ச்சுகளைப் போன்றவையல்ல. எல்லா கோயில்களும் நாளை மறைந்து போகலாம், இந்து அதைப்பற்றிக் கவலைப்பட மாட்டான். சொர்க்கத்திற்குச் செல்ல விரும்புபவனோ, பிள்ளைப்பேறு வேண்டுபவனோ, அதுபோன்ற ஆசைகள் உள்ளவனோ கோயிலைக் கட்டுவான்; பூஜாரிகளை நியமிப்பான். நான் கோயிலுக்குப் போக வேண்டியதில்லை. ஏனெனில் என் வழிபாடெல்லாம் வீட்டில்தான். ஒவ்வொரு வீட்டிலும் பூஜையறை ஒன்று தனியாக இருக்கும். மந்திர தீட்சை பெற்றுக்கொண்ட பிறகு குழந்தையின் முதல் கடமை குளித்து வழிபாடு செய்வதே. அந்த வழிபாட்டின் முக்கிய அம்சம் பிராணாயாமமும், தியானமும், மந்திர ஜபமுமாகும். உடலை நேராக வைத்துக்கொள்வதும் முக்கியமான ஒன்று. உடலை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளும் சக்தி மனத்திற்கு உண்டு என்று நாங்கள் நம்புகிறோம். இவன் முடித்ததும் வேறொருவன் அந்த இடத்தில் வந்து அமர்ந்து தனது பயிற்சிகளைச் செய்வான். ஒவ்வொருவரும் இதை மௌனமாகவே செய்வர். சிலவேளைகளில் ஒரே அறையில் மூன்று நான்கு பேர் இருப்பார்கள். ஆனால் ஒவ்வொருவருக்கும் தனித் தனி பயிற்சிமுறைகள் இருக்கும். இந்த வழிபாடு தினமும் இரண்டு முறையாவது நடைபெறும்.

கே: நீங்கள் கூறும் இந்த ஒருமைநிலை உண்மையில் அடையக் கூடியதா, அல்லது வெறும் லட்சிய நிலை தானா?

ப: அடையக் கூடியதென்றே நாங்கள் கூறுகிறோம். அந்த நிலையை நாங்கள் அடைகிறோம். அது வெறும் பேச்சாக இருந்தால் அதற்கு மதிப்பில்லை. வேதங்கள் மூன்று விஷயங்களைப் போதிக்கின்றன. இந்த ஆன்மாவைப்பற்றி முதலில் கேட்க வேண்டும், பிறகு ஆராய வேண்டும், பின்னர் தியானம் செய்ய வேண்டும். கேட்டதைப்பற்றி ஆராய்ச்சி செய்தால்தான் கண்மூடித்தனமாக இல்லாமல் அறிவுபூர்வமாக நம்ப முடியும். ஆராய்ச்சி செய்த பிறகு தியானிக்க வேண்டும். அப்போது அதை உணர முடியும். அதுதான் மதம். வெறும் நம்பிக்கை

என்பது மதத்தின் ஒரு பகுதியே அல்ல, உணர்வுகடந்த நிலையையே நாங்கள் மதம் என்கிறோம்.

கே: இந்த நிலையை அடைந்தவனால் அதை விளக்க முடியுமா?

ப: முடியாது. ஆனால் விளைவுகளால் அதை அறிய முடியும். மூடன் தூங்குகிறான், தூங்கி எழுந்த பிறகும் அவன் மூடனாகவேயிருப்பான், ஒருவேளை முன்னைவிடப் படு முட்டாளாகவும் ஆகக்கூடும். ஆனால் தியானத்தில் ஆழ்பவன், அதிலிருந்து மீளும்போது தத்துவ ஞானியாக, ரிஷியாக, மகானாக வருகிறான். இதுவே இந்த இரண்டு நிலைகளுக்குமுள்ள வேறுபாடு.

கே: அந்தப் பேராசிரியரின் கேள்வியைத் தொடர்ந்து நான் ஒன்று கேட்க விரும்புகிறேன். சுய மனவசிய நிலையைப் (self-hypnotism)பற்றி அறிந்தவர்களை உங்களுக்குத் தெரியுமா? பண்டைய இந்தியாவில் அதுபோன்ற பலர் இருந்திருக்கின்றனர். முன்பிருந்ததுபோல் தற்கால இந்தியாவில் இல்லையென்பது உண்மைதானே?

ப: மேலைநாட்டில் நீங்கள் மன வசியம் (hypnotism) என்று சொல்வது உண்மை நிலையின் ஒரு பகுதியையே. இந்துக்கள் அதைச் சுய மனவசியத்திலிருந்து விடுபடல் (self-de-hypnotisation) என்கிறார்கள். 'நீங்கள் ஏற்கனவே மன வசியத்தில்தான் ஆழ்ந்திருக்கிறீர்கள், அதிலிருந்து விடுபட்டு, வெளிவர வேண்டும்' என்கிறார்கள் அவர்கள். 'அங்கு சூரியன் பிரகாசிக்க முடியாது, சந்திரனும் நட்சத்திரங்களும் ஒளிர முடியாது. மின்னலும் அதை ஒளிரச் செய்ய முடியாது. இந்தச் சாதாரண நெருப்பை என்னென்று சொல்வது? அதன் ஒளியாலேயே எல்லாம் பிரகாசிக்கின்றன.'[1] அது மன வசியம் அல்ல, அதிலிருந்து விடுபடுவதாகும். இவற்றை உண்மையென்று போதிக்கின்ற மதங்கள் ஒருவகை மனவசியத்தையே பழகுகின்றன என்று நாங்கள் சொல்கிறோம்.

அத்வைதிகள் மட்டுமே மன வசியத்திற்கு வசப்பட விரும்புவதில்லை. துவைத நெறி எதுவானாலும், அதனுடன் இந்த மனவசியம் கலந்தே உள்ளது என்பதை அவனுடைய நெறி மட்டுமே ஓரளவாவது அறிந்துள்ளது. இந்த மனவசியத்திலிருந்து முற்றிலுமாக விடுபட வேண்டுமானால் வேதங்களை

---

1. கட உபநிடதம், 2. 2. 5.

ஒதுக்கிவிடு, சகுணக் கடவுளை ஒதுக்கிவிடு, பிரபஞ்சத்தை விலக்கிவிடு, சொந்த உடம்பையும் மனத்தையும்கூடத் தள்ளி விடு, எதுவுமே எஞ்சியிருக்கக் கூடாது என்கிறான் அத்வைதி. 'எட்ட முடியாமல் எங்கிருந்து மனம் வாக்குடன் திரும்பு கிறதோ, அந்த சச்சிதானந்தத்தை அறிந்துவிட்டால் பயம் இல்லை.' அதுதான் மன வசியத்திலிருந்து விடுபடல். 'எனக்குப் பாவமோ புண்ணியமோ இல்லை, துயரமோ மகிழ்ச்சியோ இல்லை. வேதம், வேள்வி, சடங்கு முதலிய எதைப்பற்றியும் எனக்குக் கவலையில்லை. நான் உணவல்ல, உண்பதல்ல, உண்பவனும் அல்ல. ஏனெனில் நான் சத் சித் ஆனந்தம். நானே அவன், நானே அவன்.' மனவசியத்தைப்பற்றி எங்களுக்கு நன்றாகத் தெரியும். எங்களுடைய மன இயலை மேலைநாடுகள் இப்போதுதான் அறியத் தொடங்கியிருக்கின்றன, இன்னமும் நன்றாக அறியவில்லை. இதைக் கூற நான் மிகவும் வருந்துகிறேன்.

கே: ஆவியுடல் (Astral body) என்று நீங்கள் எதைச் சொல்கிறீர்கள்?

ப: அதை நாங்கள் லிங்க சரீரம் என்கிறோம். இந்த உடம்பு இறக்கும்போது அது எப்படி வேறொரு உடலை எடுத்துக் கொள்ளும்? ஜடமில்லாமல் சக்தி இருக்க முடியாது. மரணத் திற்குப் பின்பு நுண் ஜடபொருளின் ஒரு சிறுபகுதி எஞ்சுகிறது. இதைக் கொண்டு அந்தக்கரணங்கள் ஒரு புதிய உடம்பை உண்டாக்கிக் கொள்கின்றன. ஒவ்வொருவனும் தன் உடம்பைத் தானே ஆக்கிக் கொள்கிறான்; மனமே உடம்பை உருவாக்கு கிறது. நான் ஒரு ரிஷியானால் எனது மூளை ரிஷி-மூளையாக மாறுகிறது. இந்தப் பிறவியிலேயே தங்கள் உடம்பைத் தேவ உடம்பாக்கத் தங்களால் முடியுமென்று யோகிகள் கூறுகின் றனர். பல அற்புதங்களை அவர்கள் காட்டுகிறார்கள். பனை யளவு பேசுவதைவிட தினையளவு செயல்புரிவது மேல். நான் இத்தகைய அற்புதங்களையும், அதையும் இதையும் காண வில்லை என்பதற்காக அவை பொய்யென்று சொல்ல எனக்கு உரிமையில்லை. குறிப்பிட்ட பயிற்சிகளைச் செய்தால் அற்புத விளைவுகளைக் காணலாமென்று அவர்களின் நூல்கள் கூறு கின்றன. முறையான பயிற்சியிருந்தால் சிறு விளைவுகளைக் குறுகிய காலத்தில் காணலாம். இதன்மூலம், இவை பொய்யோ பித்தலாட்டமோ அல்ல என்பதை அறிய முடியும். சாஸ்திரங் களில் சொல்லப்பட்டிருக்கின்ற பெரிய அற்புதங்களை எல்லாம் விஞ்ஞான முறையில் இந்த யோகிகள் விளக்குகின்றனர்.

ஆனால் இந்த அற்புதங்களைப்பற்றி எழுதப்பட்டுள்ள நூல்கள் எவ்வாறு எல்லா நாடுகளிலும் புகுந்தன என்பதுதான் கேள்வி. இவை எல்லாமே பொய், இவற்றிற்கு விளக்கம் எதுவும் தேவையில்லை என்பவன் அறிவுபூர்வமானவன் அல்ல. அவற்றைப் பொய்யென்று நிரூபிப்பதற்கு முன்பு அப்படிக் கூற உனக்கு உரிமையில்லை. அவற்றில் எந்த உண்மையும் இல்லை என்பதை நீங்கள் நிரூபிக்க வேண்டும், அதன் பின்பு மட்டுமே அவற்றை மறுக்க உங்களுக்கு உரிமை உண்டு. ஆனால் நீங்கள் அதைச் செய்வதில்லை. யோகிகளோ, இவை அற்புதங்கள் அல்ல, இன்றுகூட அவற்றைச் செய்யலாம் என்கிறார்கள். இந்தியாவில் இவை இன்றும் செய்யப்படுகின்றன. இவற்றுள் ஒன்றுகூட அமானுஷ்யமானவை அல்ல. இவைபற்றிய நூல்கள் ஏராளம் உள்ளன. இந்த ஆராய்ச்சியால் நடந்ததெல்லாம் மன இயலுக்கு ஒரு விஞ்ஞான முறை வகுக்கப் பெற்றது மட்டுமே, வேறு எதுவும் அல்ல என்று கொண்டால்கூட, அந்தப் பெருமையும் யோகிகளையே சாரும்.

கே: யோகியால் என்னென்ன காட்ட முடியும் என்று கூற முடியுமா?

ப: பிற விஞ்ஞானங்களைப் படிக்க எத்தகைய நம்பிக்கை தேவையோ, அத்தகைய ஒரு நாணயமான நம்பிக்கையே இதிலும் தேவை, அதற்குமேல் வேண்டாம் என்கிறான் யோகி. அவனது லட்சியம் மகோன்னதமானது. மன ஆற்றலால் நிகழ்த்தப்பட்ட சில சாதாரணமான அற்புதங்களை நான் கண்டிருக்கிறேன். எனவே அவற்றைவிட உயர்ந்தவை நிகழ முடியாதென அவநம்பிக்கை கொள்ள எனக்கு உரிமையில்லை. அனைத்தறிவு, அனைத்தாற்றல் இவைமூலம் நிலையான அமைதியும் அன்பும் பெறுவதே யோகியின் லட்சியம். ஒரு யோகியை எனக்குத் தெரியும். ஒரு நாள் அவரை நல்ல பாம்பு கொத்தியது. அவர் மயங்கிக் கீழே விழுந்தார். ஆனால் அன்று மாலையே மயக்கம் தெளிந்தார். அதுபற்றி அவரிடம் கேட்ட போது, 'அன்புத் தலைவனான என் இறைவனிடமிருந்து தூதன் அல்லவா வந்தான்' என்றார். இந்த யோகியிடம் வெறுப்பும் கோபமும் பொறாமையும் எல்லாம் எரிக்கப்பட்டிருந்தன. அவர் எதையும் எதிர்ப்பதில்லை. எல்லையற்ற அன்பின் உருவமாக அவர் திகழ்ந்தார்; அன்பின் ஆற்றலைப் பொறுத்தவரையில் அவர் எல்லாம் வல்லவராக இருந்தார். அவர்தான் உண்மை யான யோகி. அற்புதங்கள் நிகழ்த்துபவை எல்லாம் வழியில்

தற்செயலாக வருபவை. யோகி அடைய விரும்புவது அதல்ல; யோகியைத் தவிர ஒவ்வொருவரும் அடிமை என்கிறான் யோகி. உணவிற்கு, காற்றிற்கு, மனைவிக்கு, குழந்தைகளுக்கு, பணத்திற்கு, நாட்டிற்கு, பெயருக்கு, புகழுக்கு என்று எத்தனையோ ஆயிரக்கணக்கான விஷயங்களுக்கு மனிதன் அடிமையாக இருக்கிறான். இந்தப் பந்தங்களுக்கு வசமாகாதவனே உண்மையான மனிதன், உண்மையான யோகி. 'சமத்துவத்தில் நிலைபெற்றவர்களே இந்தச் சார்பு வாழ்க்கையில் வெற்றி பெற்றவர்கள். இறைவன் தூய்மையே வடிவானவர், அனைவரையும் அவர் சமமாகப் பார்க்கிறார். எனவே இத்தகையோர் இறைவனில் வாழ்வதாகச் சொல்லப்படுகிறார்கள்.' *(கீதை, 5.19)*

கே: யோகிகள் ஜாதிக்கு ஏதாவது முக்கியத்துவம் கொடுக்கிறார்களா?

ப: இல்லை. பக்குவமடையாத மனங்களுக்கான பயிற்சிக் கூடமே ஜாதி உணர்ச்சி.

கே: சமாதிக் கருத்திற்கும் இந்தியாவின் உஷ்ண நிலைக்கும் ஏதாவது தொடர்பு உண்டா?

ப: இல்லை என்றே நான் கருதுகிறேன். ஏனெனில் இந்தத் தத்துவங்கள் எல்லாம் கடல் மட்டத்திலிருந்து பதினையாயிரம் அடிகளுக்கு மேலே, ஏறக்குறைய துருவத் தட்ப நிலையுடைய இமயமலைச் சிகரங்களில் எழுந்தவை.

கே: குளிரான நாட்டில் இந்த முயற்சி வெற்றி பெற முடியுமா?

ப: முடியும். இது ஒன்றே உலகில் முடியக் கூடியது. எங்கள் நோக்கில் நீங்கள், நீங்கள் ஒவ்வொருவருமே பிறப்பினால் வேதாந்திகள். ஒவ்வொன்றுடனும் நீங்கள் ஒன்றுபட்டிருப்பதை நீங்கள் வாழ்கின்ற ஒவ்வொரு கணமும் வெளிபடுத்துகிறீர்கள். உங்கள் உள்ளம் உலகிற்காகச் செயல்படுகின்ற ஒவ்வொரு முறையும் நீங்கள் உண்மையான வேதாந்திகளாகிறீர்கள். அது உங்களுக்குத் தெரிவதில்லை, அவ்வளவுதான். ஏன் என்று தெரியாமலே நீங்கள் நன்னெறியைக் கடைப்பிடிக்கிறீர்கள். அதற்கான காரணத்தைப் பகுத்தறிந்து, மனிதன் அறிந்தே நன்னெறியைக் கடைப்பிடிக்கச் செய்வது வேதாந்தத் தத்துவம். எல்லா மதங்களின் சாரம் அது.

கே: மேலைநாட்டினராகிய எங்களிடையே சமுதாய உணர்ச்சி இல்லாததால் நாங்கள் பன்மையுணர்வினராக

(pluralistic) இருக்கிறோம் என்றும், கீழை நாட்டினர் எங்களை விடக் கருணை வாய்ந்தவர்கள் என்றும் சொல்ல முடியுமா?

ப: கீழை நாட்டினரைவிட மேலை மக்கள் வறண்டவர்கள் என்றே நான் கருதுகிறேன். கீழை நாட்டினர் எல்லா உயிர்களிடமும் அதிக இரக்கம் உடையவர்கள். அதற்கு ஒரே காரணம் உங்கள் நாகரீகம் சமீப காலத்தைச் சேர்ந்தது என்பதே. கருணையின் கீழ் ஒன்றைக் கொண்டுவருவதற்கு நீண்ட காலமாகும். உங்களிடம் எவ்வளவோ ஆற்றல் இருக்கிறது, ஆனால் மனத்தை அடக்கியாள்வதற்கான பயிற்சியை நீங்கள் போதிய அளவு பழகவில்லை. நீங்கள் மென்மையானவர்களாக, மேன்மை மிக்கவர்களாக மாற வெகுகாலமாகும். இந்த உணர்ச்சி இந்தியனின் ஒவ்வொரு சொட்டு ரத்தத்திலும் உள்ளது.

நான் கிராமங்களுக்குச் சென்று அரசியல் பேசினால் மக்கள் புரிந்துகொள்ள மாட்டார்கள்; ஆனால் வேதாந்தத்தைப் பேசினால், 'சுவாமிகளே, இது நன்றாக இருக்கிறது' என்பார்கள். வைராக்கியமும் பற்றின்மையும் இந்தியா முழுவதிலும் இன்றும் உள்ளது. இப்போது நாங்கள் மிகவும் சீர்கெட்டிருக்கிறோம். எனினும் மன்னர்கள்கூட அரசைத் துறந்து கையில் ஒன்றுமில்லாமல் ஊர் சுற்றத் தயங்க மாட்டார்கள். ஒருசில இடங்களில் கையில் ராட்டை ஏந்திய கிராமப் பெண்கள், 'என்னிடம் துவைதம்பற்றிச் சொல்ல வேண்டாம். என்னுடைய ராட்டைகூட ''ஸோஹம், ஸோஹம்—நானே அவன், நானே அவன்'' என்றே சொல்கிறது' என்று கூறுவார்கள். 'இப்படிப் பேசினாலும் நீங்கள் ஏன் கற்சிலையை வணங்குகிறீர்கள்?' என்று அவர்களைக் கேளுங்கள். அதற்கு அவர்கள், 'உங்கள் விஷயத்தில் மதம் என்றால் கொள்கை, எங்கள் விஷயத்திலோ அது அனுபூதி' என்பார்கள். 'இதெல்லாம் மறைந்த பிறகுதான், உண்மையை நான் பார்க்கும்போதுதான் நான் வேதாந்தி. அதுவரை எனக்கும் பாமரனுக்கும் எந்த வேறுபாடும் இல்லை. அதனால்தான் நான் கோயிலுக்குச் செல்கிறேன், கற்சிலையை வணங்குகிறேன். இவையெல்லாம் அந்த அனுபூதி நிலையை அடைவதற்காகவே. நான் கேட்டுவிட்டேன், ஆனால் அதைப் பார்க்க வேண்டும், அனுபவத்தில் அறிய வேண்டும்' என்பார்கள். 'சொல் ஜாலங்களும், பலவகை விளக்கங்களும் பண்டிதர்களுக்கே தவிர, முக்தியை நாடுபவர்களுக்கு

அல்ல.' அனுபூதியே நம்மை அந்த முக்திக்கு அழைத்துச் செல்லும்.

கே: ஆன்மீக வாழ்வில் இத்தகைய சுதந்திரம் ஜாதி முறையுடன் ஒத்துப் போகுமா?

ப: நிச்சயமாக ஒத்துப் போகாது. ஜாதிகள் இருக்கக் கூடாது என்று அவர்கள் சொல்கிறார்கள். ஜாதி முறைகளை ஆதரிப்பவர்கள்கூட அது ஒரு நிறைவான, நல்ல முறையென்று சொல்வதில்லை. 'இதைவிட நல்ல வேறொரு முறையை எங்களுக்கு வகுத்துக் கொடுத்தால் இதைவிட்டு விடுகிறோம். நீங்கள் என்ன தரப் போகிறீர்கள்?' என்று அவர்கள் கேட்கிறார்கள். எங்குதான் ஜாதி இல்லை? ஒரு ஜாதியை உண்டாக்கவே உங்கள் நாட்டிலும் நீங்கள் முயன்று கொண்டிருக்கிறீர்கள். ஒருவன் சிறிது பணம் சம்பாதித்துவிட்டால் போதும், உடனே, 'நானூறு பணக்காரர்களுள் நானும் ஒருவன்' என்று மார்தட்டிக் கொள்கிறான். ஒரு நிரந்தரமான ஜாதியை வகுத்துக் கொள்வதில் நாங்கள் மட்டும்தான் வெற்றிகண்டுள்ளோம். பிற நாடுகள் முயல்கின்றன, ஆனால் வெற்றி பெறவில்லை. எங்களிடம் மூடநம்பிக்கைகளும், வேண்டிய அளவு வேறு தீமைகளும் உள்ளன. இவற்றுடன் உங்கள் நாட்டிலிருந்தும் மூடநம்பிக்கைகளையும் தீமைகளையும் வாங்கிக்கொண்டால் அது பரிகாரமாகுமா? இந்த ஜாதிகளால்தான் எங்கள் நாட்டின் முப்பது கோடி மக்களின் வயிற்றுக்கு ஏதோ உணவு கிடைக்கிறது. அது ஒரு நிறைவான அமைப்பு இல்லைதான், அதில் சந்தேகம் இல்லை. ஆனால் ஜாதி என்ற ஒன்று இல்லையானால் இன்று சம்ஸ்கிருத நூல்கள் இருந்திருக்காது. இந்த ஜாதி முறையினாலேயே சுவர்கள் கட்டப்பட்டன; அவற்றைச் சுற்றி எத்தனையோ ஆக்கிரமிப்புகளும் படையெடுப்புகளும் பொங்கிவந்து மோதின, ஆனால் அவற்றால் அந்தச் சுவர்களைத் தகர்க்க முடியவில்லை. ஜாதியின் உபயோகம் இன்னும் தீரவில்லை, எனவேதான் அது இருக்கிறது. இன்று எங்களிடையே உள்ள ஜாதி அமைப்பு எழுநூறு ஆண்டுகளுக்கு முன்பு இருந்தது அல்ல. அதன்மீது விழுந்த ஒவ்வோர் அடியும் அதை மேலும்மேலும் உறுதிப்படுத்தியுள்ளது.

இந்தியா ஒன்றுதான் வெளிநாடுகளை ஆக்கிரமிக்கவில்லை என்பது உங்களுக்குத் தெரியாதா? தமது சந்ததிகள் யாரும் எந்த நாட்டின்மீதும் படையெடுக்கக் கூடாதென

அசோகச் சக்கரவர்த்தி நிபந்தனை விதித்தார். எங்கள் நாட்டிற்குப் போதகர்களை அனுப்புபவர்கள் எங்களுக்கு உதவி செய்யட்டும், எங்களைக் கெடுக்க வேண்டாம். இவர்களெல்லாம் ஏன் இந்துக்களை ஆக்கிரமிக்க நினைக்க வேண்டும்? இந்துக்கள் எந்த நாட்டிற்காவது தீங்கு செய்ததுண்டா? தங்களால் முடிந்த சிறிய அளவில் உலகிற்கு நன்மையே செய்திருக்கின்றனர். விஞ்ஞானம், தத்துவம், மதம் இவற்றையெல்லாம் உலகிற்குக் கற்பித்திருக்கின்றனர்; காட்டுமிராண்டிக் கூட்டங்களை நாகரீகம் பெறச் செய்திருக்கின்றனர். அதற்குப் பிரதியாக அவர்களுக்குக் கிடைத்ததெல்லாம் கொலையும் கொடுங்கோன்மையும் அஞ்ஞானிகள், பாவிகள் என்ற அவச் சொற்களும்தான். இந்தியாவைப்பற்றி மேலை நாட்டினர் எழுதியுள்ள நூல்களையும் யாத்திரீகர்கள் புனைந்துள்ள கதைகளையும் பாருங்கள்! எந்தக் கேடுகளைச் செய்ததற்காக அவர்கள்மீது இவை அள்ளி வீசப்படுகின்றன?

கே: நாகரீகம்பற்றி வேதாந்தம் என்ன சொல்கிறது?

ப: நீங்கள் தத்துவவாதிகள், ஒரு பை நிறையப் பொன், ஒருவனுக்கும் மற்றொருவனுக்கும் இடையில் வேறுபாட்டை உண்டாக்குமென்று நீங்கள் நினைக்கவில்லை. எந்திரங்களுக்கும் விஞ்ஞானத்திற்கும் என்ன மதிப்பு? அவற்றின் பலன் ஒன்றே ஒன்றுதான்: அவை அறிவைப் பரப்புகின்றன. நீங்கள் வறுமைப் பிரச்சினையைத் தீர்க்கவில்லை; மாறாக, அதை மேலும் கடுமையாக்கியிருக்கிறீர்கள். எந்திரங்கள் வறுமைப் பிரச்சினையைத் தீர்க்க முடியாது; அவை மேன்மேலும் மனிதனைப் பாடுபட வைக்கின்றன. போட்டி கடுமையாகிறது. இயற்கையின் மதிப்பை அளவிட முடியுமா? ஒருவன் கம்பி வழியாக மின்சக்தியை அனுப்பிவிட்டான், அவனுக்கு உடனே சிலை அமைக்கிறீர்கள், ஏன்? அதைவிடப் பல கோடி முறை மின்சாரத்தை இயற்கை அனுப்புகிறதே! எல்லாமே இயற்கையில் இருக்கின்றன, நீங்கள் அதை வெளியே கொண்டு வருகிறீர்கள், அது என்ன பிரமாதம்! அவை ஏற்கனவே அங்கே உள்ளன! மின்சாரத்தின் ஒரே நன்மை அது நமது முன்னேற்றத்திற்கான சாதனம் ஆகிறது என்பதுதான். இந்தப் பிரபஞ்சம் ஆன்மாவின் பயிற்சிக் கூடம். இந்தப் பயிற்சிகளுக்குப் பிறகு நாம் தெய்வங்கள் ஆகிறோம். ஒரு விஷயம் எவ்வளவு தூரம் இறைவனின் வெளிப்பாடாக அமைகிறது என்பதை வைத்தே ஒவ்வொன்றின் மதிப்பும் கணக்கிடப்பட வேண்டும்.

நாகரீகம் என்பது, மனிதனுள்ளிருக்கும் அந்தத் தெய்வீகத்தை வெளிப்படச் செய்வதே.

கே: பௌத்தர்களிடையே ஜாதிச் சட்டங்கள் உண்டா?

ப: பௌத்தர்களிடையே அதிகமாக ஜாதிகள் இல்லை. இந்தியாவில் பௌத்தர்கள் மிகச் சிலரே உள்ளனர். புத்தர் ஒரு சமுதாயச் சீர்திருத்தவாதி. பௌத்த நாடுகளில் ஜாதியை உண்டாக்குவதற்கான முயற்சிகள் மும்முரமாக நடைபெற்றன, ஆனால் அவை வெற்றி பெறவில்லை. பௌத்தர்களிடையே ஜாதிகள் எதுவுமே இல்லை எனலாம், ஆனால் இருப்பதாக அவர்கள் உள்ளத்தில் பெருமை கொள்கின்றனர்.

புத்தர் வேதாந்த சன்னியாசிகளுள் ஒருவர். இன்றும் பலர் செய்வதுபோல் புதிய பிரிவு ஒன்றை அவர் உண்டாக்கினார். இன்று பௌத்தம் என்று அழைக்கப்படுகின்ற கருத்துக்கள் அவருடையவை அல்ல. அவை மிகவும் புராதனமானவை. அவர் ஒரு மகான் ஆகையால் இந்தக் கருத்துக்களுக்கு ஒரு தனி வேகத்தைக் கொடுத்தார். பௌத்த மதத்தின் சிறப்பு அதன் சமுதாய நோக்குதான்.

பிராமணர்களும் க்ஷத்திரியர்களும் எங்கள் ஆச்சாரியர் களாக இருந்திருக்கின்றனர். பெரும்பாலான உபநிடதங்கள் க்ஷத்திரியர்களால் எழுதப் பெற்றவை. வேதங்களின் கர்ம காண்டப் பகுதி பிராமணர்களால் எழுதப்பட்டது. இந்தியா முழுவதிலும் ஆச்சாரியர்களாக இருந்தது பெரும்பாலும் க்ஷத்திரியர்களே. அவர்களின் போதனைகள் எப்போதும் உலகம்தழுவியவையாக இருந்தன. பிராமண ஆச்சாரியர்களுள் இருவரைத் தவிர மற்றவர்கள் அவ்வளவு பரந்த நோக்கைப் பெற்றிருக்கவில்லை. அவதாரங்களாக வழிபடப்பட்டு வருகின்ற ராமரும் கிருஷ்ணரும் புத்தரும் க்ஷத்திரியர்களே.

கே: மதப் பிரிவுகள், சடங்குகள், சாஸ்திரங்கள் எல்லாம் அனுபூதிக்கு உதவுமா?

ப: அனுபூதி பெற்ற ஒருவன் எல்லாவற்றையும் விட்டு விடுகிறான். இந்த நிலையை அடைய உதவுகின்ற அளவுக்கு மதப் பிரிவுகள், சடங்குகள், சாஸ்திரங்கள் எல்லாம் நல்லவையே. ஆனால் அதற்கு உதவாதபோது, அவை உடனே மாற்றப்பட வேண்டும். 'அறிவாளிகள், அறிவிலிகளைப் பழிக்கக் கூடாது. அவர்களின் நம்பிக்கையைக் குலைக்கக் கூடாது. ஆனால் தகுந்த செயல்மூலம் அவர்களுக்கு உகந்த பாதையைக் காட்டி, தாங்கள் இருக்கின்ற இடத்தை அடையச் செய்யலாம்.' (கீதை 3. 26)

கே: தனித்துவத்தையும் நீதிநெறியையும் வேதாந்தம் எப்படி விளக்குகிறது?

ப: உண்மையான தனிப்பொருள் பரம்பொருளே. மாயை காரணமாகவே பல்வேறு தனித்துவங்கள் காணப்படுகின்றன. இந்தப் பன்மை வெறும் தோற்றம்; உண்மையில் அவை தனிப் பரம்பொருளே. உண்மையில் ஒன்றே உள்ளது, மாயையால் அது பலவாகத் தோன்றுகிறது. இந்தப் பன்மை மாயையிலேயே உள்ளது. எனினும் ஒருமையை நோக்கித் திரும்புகின்ற போக்கும் மாயையில் உண்டு. இந்த முயற்சியே எல்லா நாடுகளின் நீதிநெறிகளிலும் ஒழுக்க நெறிகளிலும் வெளிப்படுகிறது. அப்படித் திரும்புவது என்பது ஆன்மாவின் இயல்பிலேயே அமைந்துள்ள ஒரு தேவையாகும். ஒருமையை அடைவதற்கான போராட்டத்தையே நாம் நீதிநெறி என்றும் ஒழுக்கநெறி என்றும் கூறுகிறோம். எனவே இதை நாம் எப்போதும் பயிற்சி செய்ய வேண்டும்.

கே: நீதிநெறியின் பெரும்பகுதி இரண்டு தனிநபர்களுக்கிடையில் உள்ள உறவுமுறை பற்றியல்லவா விளக்குகிறது?

ப: ஆம். ஆனால் பரம்பொருள் மாயையின் ஆதிக்கத்தில் வருவதில்லை.

கே: தனிமனிதனே பரம்பொருள் என்கிறீர்கள். தனி மனிதனுக்கு அறிவிருக்கிறதா?

ப: பரிணமிக்கின்ற நிலைதான் தனிநிலை. இந்த நிலையில் காணும் ஒளியே அறிவு. ஆகவே அறிவு என்ற சொல்லைப் பரம்பொருளின் ஒளிக்கு உபயோகிப்பது சரியாகாது, ஏனெனில் தனிநிலை என்பது சார்பறிவைக் கடந்த நிலையாகும்.

கே: சார்பறிவு, தனி நிலைக்கு உட்பட்டதா?

ப: ஆம். தங்கத்தைப் பலவகை நாணயங்கள் ஆக்கலாம், அதுபோல்தான் இதுவும். இந்தத் தனிநிலையையும் எல்லா விதமான அறிவுகளாகவும் ஆக்கிவிடலாம். பேருணர்வு நிலையே அது; உணர்வு நிலையும் உணர்வறு நிலையும் அதில் அடக்கம். அந்த நிலையை அடைபவன், நாம் அறிவென்று கூறும் அனைத்தையும் பெறுகிறான். சாதாரண அறிவைப் பெற அவன் விரும்பும்போது ஒருபடி கீழே இறங்கியாக வேண்டும். அறிவு என்பது கீழ்நிலை; மாயை நிலையில் மட்டும் தான் அறிவுக்கு இடமுண்டு. ❑

# 2. வேதாந்தத்தின் உண்மையும் ஆதிக்கமும்

பாஸ்டன், 28 மார்ச் 1896

இன்றைய பிற்பகல் சொற்பொழிவைத் தொடங்குமுன் இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி சில நன்றி வார்த்தைகளைக் கூற என்னை அனுமதிக்க வேண்டுகிறேன். நான் உங்களிடையே தங்கியிருக்கிறேன், ஏறத்தாழ அமெரிக்கா முழுவதிலும் சுற்றி விட்டேன். இப்போது இங்கிருந்து சொந்த நாட்டிற்குத் திரும்பப் போகிறேன். எனவே அமெரிக்காவின் ஏதென்ஸான இந்த நகரத்தில் இருந்துகொண்டு நான் இந்த நாட்டிற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவிப்பது தக்கது.

நான் முதன்முதலாக இந்த நாட்டிற்கு வந்த சில நாட்களில் இந்த நாட்டைப்பற்றி ஒரு நூல் எழுத என்னால் முடியும் என்று எண்ணினேன். ஆனால் மூன்று ஆண்டுகள் இங்கே தங்கிய பிறகும் ஒரு பக்கம்கூட எழுத முடியவில்லை. பல்வேறு நாடுகளில் சுற்றியதில் ஒன்று கண்டேன்: உணவு, உடை, சில பழக்க வழக்கங்கள் என்று மேற்பரப்பில் சில வேறுபாடுகள் காணப்பட்டாலும் உலகம் முழுவதிலும் மனிதன் மனிதனாகத் தான் இருக்கிறான்; அற்புதமான அந்த மனிதப் பண்பே எங்கும் வெளிப்பட்டிருக்கிறது. என்றாலும் சில விஷயங்களில் வேறு பாடுகள் இருக்கவே செய்கின்றன; எனது அனுபவங்களை இங்குச் சிறிது கூற நான் விரும்புகிறேன்.

இங்கே அமெரிக்காவில் தனி மனிதனது விசித்திரப் பண்பு களைப் பற்றி யாரும் கவலைப்படுவதில்லை. மனிதன் மனிதனாக இருந்தால் போதும், மக்கள் அவனுக்குத் தங்கள் இதயத்தில் இடம் கொடுத்துவிடுகிறார்கள். இந்தப் பண்பை வேறு எந்த நாட்டிலும் நான் காணவில்லை.

வேதாந்தத் தத்துவம் என்று வழங்கப்படும் ஓர் இந்தியத் தத்துவ நெறியின் பிரதிநிதியாக நான் இங்கே வந்தேன். இந்தத் தத்துவம் மிகமிகப் புராதனமானது. வேதங்கள் என்ற பெயரில் வழங்கப்படும் மிகப் பெரிய தொகுதியான ஆரியர்களின்

இலக்கியத்திலிருந்து எடுக்கப்பட்டது. பல நூற்றாண்டு களாகத் திரட்டித் தொகுக்கப்பட்ட இந்த இலக்கியத்தில் காணப்படுகின்ற நம்பிக்கைகள், அனுபவங்கள், ஆராய்ச்சிகள் இவற்றிலிருந்து மலர்ந்த மலரே இந்தத் தத்துவம்.

இந்த வேதாந்தத் தத்துவத்திற்குச் சில தனிப் பண்புகள் உண்டு. முதன்முதலாக இது மனிதச் சார்பற்றது; இதனை நிறுவியது எந்த ஒரு தனி மனிதனோ மகானோ அல்ல. ஒரு தனி மனிதனை மையமாகக் கொண்டு பின்னப்பட்டதும் அல்ல. எனினும் மனிதர்களை மையமாகக் கொண்டு எழுந்த தத்துவங் களை இது குறை கூறுவதும் இல்லை. பௌத்தம் மற்றும் இன்று நாம் காண்கின்ற பல நெறிகள்போல் மனிதர்களை மையமாகக் கொண்ட தத்துவங்கள் பல பிற்கால இந்தியாவில் தோன்றின. கிறிஸ்தவ மற்றும் இஸ்லாம் மதங்களைப்போல் இவை ஒவ்வொன்றிற்கும், ஒரு தலைவர் உண்டு. இவரைத் தெய்வமாகவே அந்தப் பிரிவினர் போற்றுவார்கள். வேதாந்தத் தத்துவம் இந்தப் பல்வேறு மதங்களுக்கெல்லாம் பின்னணி யாக நிற்கிறது. உலகத்தின் வேறு எந்த நெறியுடனும் அதற்கு சண்டையோ பகையோ இல்லை.

வேதாந்தம் ஓர் அடிப்படை உண்மையைச் சொல்கிறது, இந்த உண்மை உலகின் எல்லா மதங்களிலும் காணப்படுகிறது. மனிதன் தெய்வீகமானவன், நாம் நம்மைச் சுற்றிக் காண்கின்ற அனைத்தும் இந்தத் தெய்வீக உணர்விலிருந்து தோன்றியவை தான். மனித இயல்பிலுள்ள வலிமையானவை, நல்லவை, ஆற்றல் பொருந்தியவை எல்லாம் இந்தத் தெய்வீகத்தின் விளைவே. பலரிடம் இந்தத் தெய்வீகம் மறைந்துள்ளது. உண்மையில் மனிதனுக்கும் மனிதனுக்கும் வேறுபாடே இல்லை. எல்லா உயிர்களும் ஒன்றுபோல் தெய்வீகமானவை. எல்லையற்ற பெரிய கடல் ஒன்று நமக்குப் பின்னால் இருப்பது போலுள்ளது. நீங்களும் நானும் எல்லாம் அந்தப் பெருங் கடலில் தோன்றும் அலைகளே. இந்த எல்லையற்ற தன்மையை வெளியில் வெளிப்படுத்தவே நாம் ஒவ்வொருவரும் முயன்று வருகிறோம். எனவே நமது பிறப்புரிமையாக, நமது உண்மை இயல்பாக நம் ஒவ்வொருவரிலும் எல்லையற்ற உண்மை- அறிவு-இன்பப் பெருங்கடல் மறைந்துள்ளது. அந்தத் தெய் வீகத்தை வெளிப்படுத்துவதற்கான ஆற்றல் மிகுந்தும் குறைந்தும் இருப்பதுதான் நம்மிடையே வேறுபாட்டிற்குக் காரணமாக அமைகிறது. எனவே அந்த வெளிப்பாட்டை வைத்து யாரையும்

மதிப்பிடாமல், ஒருவனின் உண்மை இயல்பை வைத்தே ஒருவனை மதிப்பிட வேண்டும் என்று வேதாந்தம் கூறுகிறது. ஒவ்வொருவரும் இறைவனின் பிரதிநிதி. எனவே கண்டிப்பதன்மூலம் அல்ல, உள்ளுறையும் தெய்வீகத்தை வெளிப்படுத்துவதற்கு உதவுவதன்மூலமே மனிதனுக்கு ஆச்சாரியர்கள் வழிகாட்ட வேண்டும்.

சமுதாயத்திலும் வேறு பல துறைகளிலும் செயல்படுகின்ற மாபெரும் சக்தி உள்ளிருந்தே வெளிப்படுகிறது என்பதும் வேதாந்தத்தின் போதனைகளுள் ஒன்று. எனவே பிற நெறியினர் தெய்வ ஆவேசம் (inspiration) என்று சொல்வதை வேதாந்திகள் பேருணர்வு வெளிப்பாடு (expiration) என்று சொல்கிறார்கள். அதேவேளையில் வேதாந்தம் பிறநெறிகளுடன் சண்டைக்கும் போவதில்லை; மனிதனின் தெய்வீகத்தைக் கொள்ளாதவர்களைப் பகைப்பதில்லை. தெரிந்தோ தெரியாமலோ ஒவ்வொருவரும் அந்தத் தெய்வீகத்தை வெளிப்படுத்தவே முயன்று கொண்டிருக்கின்றனர்.

ஒரு சிறு பெட்டியில் சுருட்டி வைக்கப்பட்ட எல்லையற்ற விசைக்கம்பிச் சுருள் (spring) போன்றவன் மனிதன். இந்த விசைக்கம்பிச் சுருள் விரிய முயல்கிறது. இந்த முயற்சியின் பலன்தான் நாம் காண்கின்ற பிரபஞ்சத் தோற்றம் எல்லாம். இந்தப் போட்டிகள், போராட்டங்கள், தீமைகள் எதுவும் இந்த முயற்சியின் காரணங்களும் அல்ல, விளைவுகளும் அல்ல. நம் தத்துவ ஞானியருள் சிறந்த ஒருவர் வயலுக்கு நீர் பாய்ச்சுகின்ற உதாரணத்தால் இதை விளக்குகிறார்: குளம் மேட்டில் இருக்கிறது. தண்ணீர் வயலுக்குள் வேகமாகப் பாய முயல்கிறது. அதை ஓர் அடைப்பு தடுக்கிறது. இந்த அடைப்பு விலக்கப்பட்டால் தண்ணீர் இயல்பாகவே வயலுக்குள் பாய்கிறது. பாய்கின்ற பாதையில் புழுதியோ அழுக்கோ இருந்தால் தண்ணீர் அவற்றையும் அடித்துக்கொண்டு செல்கிறது. அதுபோல் இந்தப் புழுதியும் அழுக்கும் மனித இயல்பான தெய்விகம் விரிவடைவதன் காரணமும் அல்ல, விளைவும் அல்ல. இவை அந்த முயற்சியுடன் சேர்ந்து காணப்படும் சூழ்நிலைகள். எனவே இவற்றை நீக்க வழி உண்டு.

இந்தியாவிலும் சரி, வெளி நாடுகளிலும் சரி எல்லா மதங்களிலும் இந்தக் கருத்து இருப்பதாக வேதாந்தம் சொல்கிறது. சில மதங்களில் இந்தக் கருத்து புராணங்களாகச் சொல்லப்படுகிறது, சில மதங்களில் குறியீடுகளால் அறிவுறுத்தப்படுகிறது.

தெய்வீகப் பேருணர்வு வெளிப்பாடு ஆகட்டும், மகான் ஆவதாகட்டும், அது மனித இயல்பிலுள்ள எல்லையற்ற ஒருமையின் வெளிப்பாடே என்கிறது வேதாந்தம். நீதிநெறி, நன்னெறி, பிறருக்கு நன்மை செய்வது என்று நாம் அழைப் பவையெல்லாம்கூட இந்த ஒருமையின் மலர்ச்சியே. மனிதன் அறிகிறானோ இல்லையோ, அவன் தன்னைப் பிரபஞ்சத் துடன் ஒன்றாக உணர்கின்ற கணங்கள் வரவே செய்கின்றன, உடனே அவன் அதை வெளிப்படுத்த விரைகிறான். இந்த முயற்சியின் வெளிப்பாட்டையே நாம் அன்பு, கருணை என்று சொல்கிறோம். இதுவே நீதிநெறி, நன்னெறி எல்லா வற்றிற்கும் அடிப்படை. இதுவே வேதாந்தத் தத்துவத்தின் 'தத் த்வம் அஸி—நீயே அது' என்ற பிரபல சூத்திரத்தில் அடங்கியிருக்கிறது.

ஒவ்வொருவருக்கும் இது உபதேசிக்கப்படுகிறது: 'பரம்பொருளுடன் நீ ஒன்றுபட்டவன். எனவே இருக்கின்ற ஆன்மாக்களெல்லாம் உன் ஆன்மாவே; இருக்கின்ற உடல் களெல்லாம் உன் உடலே; நீ யாருக்காவது தீங்கு செய்தால் உனக்கே தீங்கு செய்கிறாய்; யாரையாவது நேசித்தால் உன்னையே நேசிக்கிறாய். வெறுப்புப் பொறி ஒன்றை நீ வெளியே வீசினால், அது வேறு யாரைச் சுடுகிறதோ இல்லையோ நிச்சயமாக உன்னையும் சுடும். அதுபோலவே உன்னிடமிருந்து வெளிப்படுகின்ற அன்பு நிச்சயமாக உன்னிடம் திரும்பியே தீரும். ஏனெனில் நானே பிரபஞ்சம், இந்தப் பிரபஞ் சமே என் உடல். நான் எல்லையற்றவன், இப்போது அதை நான் அறியவில்லை; பரம்பொருளின் இந்த உணர்வைப் பெறு வதற்காகவே நான் பாடுபடுகிறேன். இந்த உணர்வு என்னுள் பூரணமாக வந்ததும் நிறைநிலையை அடைந்துவிடுவேன்.

வேதாந்தத்தின் மற்றொரு தனிக் கருத்து இது: வேறுபட்ட மதச் சிந்தனைகள் எத்தனை இருந்தாலும் அவை எல்லா வற்றையும் அனுமதிக்க வேண்டும், எல்லோரையும் ஒரே கருத்திற்குக் கொண்டுவர முயலக் கூடாது. கருத்து எப்படி யானாலும் லட்சியம் ஒன்றுதானே? தனது கவிதை மொழியில் பின் வருமாறு சொல்கிறான் வேதாந்தி: 'பல மலைகளில் உற்பத்தியாகின்ற ஆறுகள் நேராகவோ, வளைந்தோ ஓடி னாலும் கடைசியில் கடலில்தான் போய்ச் சேருகின்றன. அவ்வாறே பல கொள்கைகளும் மதங்களும் வெவ்வேறு கருத்துக்களின் அடிப்படையில் தொடங்கி, நேராகவோ

வளைந்தோ முன்னேறினாலும், முடிவில், இறைவா உன்னையே அடைகின்றன.'

பரந்த இந்தக் கருத்தின் காரணமாகவே, மிகப் புராதன தத்துவமான இந்த வேதாந்தத்தின் தாக்கம், முதல் பிரச்சார மதமான புத்த மதத்தின் உத்வேகத்திற்கு நேரடிக் காரணமாக இருந்திருக்கிறது. அலெக்சாண்டிரியர்கள், க்னாஸ்டிக்குகள் (Gnostics) மற்றும் இடைக்கால மத்திய ஐரோப்பியத் தத்துவ அறிஞர்கள் இவர்களின் மூலமாக இது கிறிஸ்தவ மதத்திலும் மறைமுகமாக ஆதிக்கம் செலுத்தியிருக்கிறது. பிற்காலத்தில் இது ஜெர்மானியச் சிந்தனைகளில் நுழைந்து அதன் தத்துவம், மனஇயல் ஆகிய துறைகளில் பெரிய புரட்சியையே ஏற்படுத்தியிருக்கிறது. ஆனால் இந்த மாபெரும் தாக்கமும் ஆதிக்கமும் வெளிப்படையாக யாருக்கும் தெரியாமலே நிகழ்ந்திருக்கின்றன. இரவில் மெல்லென வீழ்கின்ற பனித் துளி எப்படி எல்லா தாவரங்களும் வாழத் துணை செய் கின்றதோ, அப்படியே இந்தத் தெய்வீகத் தத்துவம் யாரும் அறியாவண்ணம் மெதுவாக உலகமெங்கும் பரவி மனித குலத்திற்கு நன்மை செய்து நிற்கிறது. இந்த மதத்தைப் பரப்ப எந்தப் படையின் துணையும் தேவைப்படவில்லை. பிரச்சார மதங்களுள் மிகவும் பழமை வாய்ந்ததான புத்தமதம் அலெக் சாண்டிரியா, ஆன்டியாக், பாரசீகம், சீனா மற்றும் அக்கால நாகரீக நாடுகளின் முக்கிய நகரங்களுக்குப் பிரச்சாரகர்களை அனுப்பியதுபற்றிய செய்திகளை அசோக சக்கரவர்த்தியின் பல சாசனங்களில் இன்றும் நாம் காண முடிகிறது. மற்ற மதங்களை இழிவுபடுத்திப் பேசுவது தவறு என்று கிறிஸ்துவுக்கு முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பே இவர்களுக்குப் போதிக்கப் பட்டது: 'உலகின் எந்தப் பகுதியில் இருந்தாலும் சரி, எல்லா மதங்களின் அடிப்படையும் ஒன்றுதான்; இயன்றவரையில் பிறருக்கு உதவுங்கள், தெரிந்த வரையில் அவர்களுக்குக் கற்றுக் கொடுங்கள்; ஆனால் அவர்களுக்குத் தீங்கு செய்ய மட்டும் முயல வேண்டாம்.'

இதனால் இந்தியாவில் இந்துக்களிடம் மத வெறுப்போ அதனால் வரும் துன்புறுத்தல்களோ ஒருபோதும் இருந்த தில்லை; உலக மதங்கள் எல்லாவற்றிடமும் அவர்கள் வியக்கத் தக்க மரியாதை காட்டி வந்தார்கள். சொந்த நாட்டிலிருந்து துரத்தப்பட்ட ஹீப்ருக்களுக்கு இந்துக்கள் புகலிடம் தந்தார்கள்; இதன் பலனாக இன்று மலையாள யூதர்கள் பலர்

இருக்கின்றனர். ஏறக்குறைய அழிக்கப்பட்ட பாரசீகத்தினரில் எஞ்சியவர்களையும் வரவேற்றுப் புகலிடம் தந்தார்கள் இந்துக்கள்; அவர்கள் இன்றும் எங்களிடையே, எங்களுள் ஒரு பகுதியாக, எங்கள் அன்புக்கு இலக்காகி, பம்பாய்ப் பார்சிகளாக வாழ்ந்து வருகிறார்கள். ஏசுநாதரின் சீடரான புனிதர் தாமஸ் என்பவருடன் இந்தியாவிற்கு வந்ததாகக் கூறிக்கொள்கின்ற கிறிஸ்தவர்கள் இந்தியாவில் வாழ அனுமதிக்கப் பட்டார்கள்; அவர்களும் சொந்த மதத்தைப் பின்பற்றுவதற்குத் தடை செய்யப்படவில்லை; இன்று இவர்களின் கூட்டம் ஒன்று இந்தியாவில் வாழ்ந்துவருகிறது. அந்தச் சகிப்புத் தன்மை இன்றும் அழியாமல் இருக்கிறது, அந்த நாட்டில் அது அழியாது, அழிய முடியாது.

வேதாந்தம் நமக்குக் கற்பிக்கின்ற சிறந்த பாடங்களுள் இதுவும் ஒன்று. தெரிந்தோ தெரியாமலோ ஒரே லட்சியத்தை அடைவதற்காகப் பாடுபடுகின்ற நாம் எதற்காகப் பொறுமை இழக்க வேண்டும்? ஒருவன் மற்றொருவனைவிட மெதுவாக முன்னேறினால், அதற்காக நாம் பொறுமையை இழக்க வேண்டாம், அவனைச் சபிக்கவோ திட்டவோ வேண்டாம், நமது அகக் கண்கள் திறந்து இதயம் தூய்மையடைந்தால், ஒரே தெய்வ சக்தி எங்கும் செயல்படுவதும் எல்லா மனித இதயங்களிலும் ஒரே தெய்வீகம் மலர்வதும் நன்றாகப் புரியும். இந்த அனுபவம் பெற்ற பிறகுதான் உலக சகோதரத்துவம்பற்றி நாம் உரிமை கொண்டாட முடியும்.

எப்போது மனிதன் உயர்ந்த நிலையின் எல்லையை அடைகிறானோ, எப்போது அவனுக்கு ஆண்-பெண் வேறுபாடோ, மதம், இனம், குலம் போன்ற வேறுபாடுகள் தெரியவில்லையோ, எப்போது அவன் இவற்றையெல்லாம் கடந்து சென்று, ஒவ்வொரு மனிதனுக்கும் உள்ளே இருக்கின்ற தெய்வீகத்தை அதாவது உண்மை மனிதனைக் காண்கிறானோ, அப்போது மட்டுமே அவன் உலக சகோதரத்துவத்தை அடைந்தவனாகிறான். அவனே உண்மை வேதாந்தி.

வேதாந்தத்தால் நடைமுறையில் வரலாறு கண்ட விளைவுகள் இவை.

சொற்பொழிவுக்குப் பின்னர் கேள்வி-பதில் நிகழ்ச்சி நடைபெற்றது

கேள்வி: முஸ்லீம் மதத்தின்மீது வேதாந்தத்தின் தாக்கம் உள்ளதா?

பதில்: வேதாந்தத்தின் மதத் தாராளக் கருத்தின் தாக்கம் முஸ்லீம் மதத்தின்மீது பெருமளவில் உள்ளது. இந்திய முஸ்லீம் மதம் பிற நாடுகளிலிருந்து வேறுபட்டது. பிற நாட்டு முஸ்லீம்கள் வந்து இவர்களிடம், பிற மதத்தினருடன் வாழ்வது பாவமெனச் சொல்லி, இவர்களைக் கிளறிவிடும்போதுதான் இந்திய முஸ்லீம்கள் தூண்டப்பட்டுச் சண்டைக்குக் கிளம்பு கிறார்கள்.

கேள்வி: வேதாந்தம் ஜாதியை ஏற்கிறதா?

பதில்: ஜாதிமுறை வேதாந்தத்திற்கு முரணானது. ஜாதி என்பது ஒரு சமுதாயப் பழக்கம். எங்கள் சிறந்த போதகர்கள் அனைவரும் அதை ஒழிக்க எவ்வளவோ முயன்றிருக்கின்றனர். புத்த மதத்திலிருந்து தொடங்கி, அதற்குப் பிறகு தோன்றிய ஒவ்வொரு மதப் பிரிவும் ஜாதியை எதிர்த்துப் போராடியுள்ளன; ஆனால் இந்த முயற்சிகள் ஒவ்வொரு தடவையும் விபரீதமாக அதை உறுதிப்படுத்தவே செய்தன. ஜாதி என்பது இந்திய அரசியல் அமைப்புக்களின் வெறும் பச்க வளர்ச்சி; அது ஒரு பரம்பரைத் தொழிற்சங்கம், அவ்வளவுதான். ஐரோப்பாவுடன் ஏற்பட்ட வியாபாரப் போட்டி, மத போதனைகளைவிட அதிக அளவில் ஜாதி அமைப்புகளைத் தகர்த்து முறித்துவிட்டது.

கேள்வி: வேதங்களின் சிறப்பு என்ன?

பதில்: தங்கள் போதனையையும் கடந்து செல்ல வேண்டும் என்று திரும்பத்திரும்ப வற்புறுத்துகின்ற சாஸ்திரம் அது ஒன்றே. தாங்கள் போதிப்பவை எல்லாம் வெறும் குழந்தை யுள்ளத்திற்கே, நீ வளர்ந்ததும் அவற்றைத் தாண்டிச் செல்ல வேண்டும் என்கின்றன வேதங்கள்.

கேள்வி: மனம் நிரந்தரமான உண்மை என்பது தங்கள் கருத்தா?

பதில்: மனம் என்பது தனிமனிதனின் எண்ணங்களால் ஆனது; எண்ணங்கள் ஒவ்வொரு கணமும் மாறிக்கொண்டே யிருப்பவை. எனவே அது நிரந்தரமான உண்மையாக இருக்க முடியாது, அது தோற்ற நிலையில்தான் உண்மை. மனம் நினைவாலும் எண்ணத்தாலும் ஆனது. அது எப்படி உண்மை யாக இருக்க முடியும்?

கேள்வி: பௌத்தம் ஒரு மதம் என்ற அளவில் இந்தியாவில் நலிவுற்றது ஏன்?

பதில்: உண்மையில் அது நலிவடையவில்லை. அது ஒரு பெரிய சமுதாய இயக்கம். புத்தருக்கு முன்பு யாகத்திற்காகவும்

வேறு காரணங்களுக்காகவும் பெருமளவில் பிராணிகள் கொல்லப்பட்டன; மக்கள் மது அருந்தினார்கள்; இறைச்சி உண்டார்கள். புத்தரின் போதனைகளின் பயனாக மதுபானம் பெரிதும் குறைந்தது; மிருகங்களைக் கொல்லும் பழக்கமும் ஏறக்குறைய இல்லாமல் போயிற்று. ❑

## 3. தெரிந்த ரகசியம்

லாஸ் ஏஞ்ஜலஸ், 5 ஜனவரி 1900

பொருட்களை உள்ளது உள்ளபடி அறிய முயல்வதாக வைத்துக்கொள்வோம்; எந்த வழியை நாம் கடைப்பிடித்தாலும் நமது ஆராய்ச்சி போதிய தூரம் செல்லுமானால், முரண்போல் தோன்றுகின்ற வினோதமானதொரு முடிவை அடைவோம். இந்த முடிவு நமது பகுத்தறிவுக்கு எட்டாததாக இருந்தாலும் அது உண்மை. ஆராய்ச்சிக்கு ஒன்றை எடுத்துக்கொள்கிறோம்—அது ஓர் எல்லைக்கு உட்பட்டது என்பது நமக்குத் தெரியும். ஆனால் ஆராய்ச்சி தொடங்கியவுடனோ அது நம்மைப் பகுத்தறிவுக்கு அப்பால் இட்டுச் சென்றுவிடுகிறது; அதன் தன்மைகள், அதன் சாத்தியக்கூறுகள், அதன் சக்திகள், அதன் தொடர்புகள்—இவற்றிற்கு ஓர் எல்லையை நம்மால் காண முடிவதில்லை. அந்தப் பொருள் எல்லையற்றதாகிவிடுகிறது. ஒரு சாதாரணப் பூவை எடுத்துக்கொள்ளுங்கள். இது ஓர் எல்லைக்கு உட்பட்டதுதான். ஆனால் இந்தப் பூவைப்பற்றி எல்லாம் எனக்குத் தெரியும் என்று துணிந்து யாராலாவது சொல்ல முடியுமா? அந்தப் பூவைப்பற்றிய எல்லாம் தெரியும் என்ற அறுதி அறிவு நிலையை அடைவது சாத்தியமே இல்லை. ஆராய்ச்சியின் ஆரம்பத்தில் எல்லை உள்ளதாகத் தோன்றிய பூ இப்போது எல்லையற்றதாகிவிட்டது. ஒரு மணல் துகளை எடுத்து ஆராய்ந்து பாருங்கள்; எல்லைக்கு உட்பட்டது என்று கருதித் தொடங்கப்படுகின்ற ஆராய்ச்சி, அது எல்லைக்கு உட்பட்டது அல்ல, எல்லையற்றது என்ற முடிவையே அடைகிறது. இது எப்படியானாலும் மணலையும் சரி, மலையையும் சரி, எல்லையுள்ள பொருளாக நினைத்தே நாம் செயல்படுகிறோம்.

நமது உள்ளும் புறமும் செயல்படுகின்ற எண்ணங்கள், அனுபவங்கள் எல்லாவற்றிற்கும் இது பொருந்தும். நாம் சிறிய அளவில், அவற்றைச் சிறியவையாக எண்ணித்தான் ஆராய ஆரம்பிக்கிறோம். ஆனால் அவை விரைவிலேயே நமது

அறிவைக் கடந்து சென்று, எல்லையற்ற நிலை என்ற ஆழம் காண முடியாத பாதாளத்தில் புகுந்துவிடுகின்றன. நாம் காணும் பெரிய முதற்பொருள் நாமே. வாழ்க்கையைப்பற்றியும் நமக்கு இதே பிரச்சினைதான். நாம் இருக்கிறோம். நாம் எல்லைக்கு உட்பட்டவர்கள் என்பதைக் காண்கிறோம். நாம் வாழ்கிறோம், சாகிறோம். நமது எல்லை மிகவும் குறுகியது. சுற்றிலும் பிரபஞ்சத்தால் சூழப்பட்டு, ஓர் எல்லைக்கு உட்பட்டவர்களாக நாம் இங்கே இருக்கிறோம். ஒரு கணத்தில் இயற்கை நம்மை நசுக்கி ஒழித்துவிட முடியும். நமது அற்ப உடல்கள் ஏதோ ஒட்டிக் கொண்டிருக்கின்றன, எந்தக் கணம் வேண்டுமானாலும் அவை துண்டுதுண்டுகளாகச் சிதறிவிட முடியும். இது நமக்குத் தெரியும். செயல் என்று எடுத்துக் கொண்டால்கூட அங்கே நாம் எவ்வளவு பலவீனர்களாக இருக்கிறோம்! ஒவ்வொரு திருப்பத்திலும் நமது சங்கல்பங்கள் அலைக்கழிக்கபடுகின்றன. நாம் எவ்வளவோ சாதிக்க விரும்புகிறோம், ஆனால் அவற்றுள் சாதிப்பதோ மிகக் குறைவு. நாம் எதையும் செய்ய நினைக்கலாம், எல்லாவற்றையும் பெற விரும்பலாம், நட்சத்திரங்களை எட்டிப் பிடிக்கவும் ஆசைப்படலாம். ஆனால் அவற்றுள் நிறைவேறு பவை என்னவோ மிகவும் சொற்பம்தான். அதற்கு நமது உடம்பு இடம் கொடுப்பதில்லை. நமது சங்கல்பங்கள் செயல்படு வதற்கு எதிராக நிற்கிறது இயற்கை. நாம் பலவீனர்கள்.

பூ, மணல் துகள், தூலப் பிரபஞ்சம், ஒவ்வோர் எண்ணம்— இவை ஒவ்வொன்றையும் பொறுத்தவரை உண்மையாக இருப்பது நம் விஷயத்திலும் நூறு மடங்கு உண்மையாகும். நமது வாழ்க்கையிலும் இதே நிலையில்தான் நாம் இருக்கிறோம், ஏனெனில் நாம் எல்லைக்கு உட்பட்டவர்களாகவும் அதே வேளையில் எல்லையற்றவர்களாகவும் இருக்கிறோம். கடல் அலைகளைப்போல் இருக்கிறோம் நாம்; அலை என்பது கடல், ஆனால் கடல் அல்லவும் அல்ல. 'இது கடல்' என்று சொல்லத்தகாத எந்தப் பகுதியும் அலையில் இல்லை. 'கடல்' என்ற பெயர் அலைக்கு மட்டுமல்லாமல் கடலின் ஒவ்வொரு பகுதிக்கும் பொருந்தும்; என்றாலும் அலை, கடலிலிருந்து வேறுபட்டது. அதுபோல் வாழ்க்கை என்ற இந்தக் கடலில் நாம் சிறு அலைகள்போல் உள்ளோம். என்றாலும் நம்மைப் பற்றி நாம் உண்மையில் அறிய முயலும்போது அது முடிவதில்லை; அப்போது நாம் எல்லையற்றவர்கள் ஆகி விடுகிறோம்.

நாம் கனவில் நடப்பதுபோல் உள்ளோம். கனவுலகில் கனவு உண்மைதான்; ஆனால் அவற்றுள் ஒன்றைப் பற்றிக் கொள்ள முயன்றால் அது மறைந்துவிடுகிறது. ஏன்? அது பொய் என்பதால் அல்ல. அது நம் பகுத்தறிவு எல்லைக்கு அப்பாற்பட்டது, அறிவாற்றலுக்கு எட்டாதது. இந்த வாழ்க்கையின் ஒவ்வொன்றும் மிகப் பரந்தது, அவற்றுடன் ஒப்பிடும்போது நம் அறிவு என்பது ஒன்றுமே இல்லை; அறிவின் நியதிகளுக்கு உட்பட அது உடன்படுவதில்லை. தன்னைச் சுற்றி வளைத்துக் கட்ட அறிவு நினைப்பதை எண்ணி அது சிரிக்கிறது! ஆன்மாவைப் பொறுத்தவரை இது ஆயிரம் மடங்கு உண்மை. 'நாம், நாமே'—பிரபஞ்சத்தின் மிகப் பெரிய அற்புதம் இதுவே.

எத்தனையெத்தனை விந்தைகள்! மனிதனுடைய கண்ணைப் பாருங்கள். எவ்வளவு எளிதில் இதை அழித்துவிட முடியும்! என்றாலும் மிகப் பெரிய சூரியர்களும் இருப்பது உங்கள் கண்கள் அவற்றைப் பார்ப்பதால்தான்! பிரபஞ்சம் இருக்கிறது என்று உங்கள் கண்கள் அத்தாட்சி கூறுவதால்தான் பிரபஞ்சமே உங்களுக்கு இருக்கிறது. இந்த அதிசயத்தை எண்ணிப் பாருங்கள். இந்தச் சாதாரண கண்கள்—ஒரு பளீர் வெளிச்சம், ஒரு குண்டூசி போதும், அவற்றை அழித்துவிட முடியும். ஆனால் பேராற்றல் வாய்ந்த அழிவுக் கருவிகளும், மிகப் பெரிய பிரளயமும், எத்தனையெத்தனையோ பொருட்களும், கோடிக்கணக்கான சூரியர்களும் சந்திரர்களும் விண்மீன்களும் இந்தப் பூமியும் எல்லாம் இருப்பது இந்தச் சாதாரணக் கண்களின் காரணமாகத்தான், இந்தச் சாதாரணக் கண்கள் அத்தாட்சி அளிப்பதால்தான். 'இயற்கையே, நீ இருக்கிறாய்' என்கின்றன கண்கள்! அது இருப்பதாக உடனே நாமும் நம்புகிறோம். நம் புலன்கள் எல்லாவற்றின் விஷயமும் இப்படித்தான்!

இது என்ன? எங்கே பலவீனம்? யார் பலசாலி? பெரியது என்ன, சிறியது என்ன? ஒன்றின் இருப்புக்கு மற்றொன்று ஆதாரமாக நிற்கின்ற இந்தப் பிரபஞ்சத்தில், இந்தப் பெரிய பிரபஞ்சத்தின் இருப்பிற்கு ஒரு சிறு அணுவும் அவசியமாக இருக்கின்ற நிலையில் எது உயர்ந்தது? எது தாழ்ந்தது? யார் பெரியவர்? யார் சிறியவர்? இவை நம் அறிவுக்கு அப்பாற்பட்ட பிரச்சினைகள். ஏன்? ஏனெனில் யாரும் பெரியவரும் அல்ல, யாரும் சிறியவரும் அல்ல. எல்லையற்ற அந்தக் கடல் எல்லா

பொருட்களையும் ஊடுருவி நிற்கிறது, அதுதான் பொருட்களின் உண்மை. புறத்தில் நாம் காண்பவை எல்லாமே அந்த எல்லை யற்ற ஒன்றுதான். அந்த மரம் எல்லையற்றது. அதுபோல் நீங்கள் பார்க்கின்ற, உணர்கின்ற அனைத்துமே எல்லையற்றவை. ஒவ்வொரு மணல்துகளும், ஒவ்வோர் எண்ணமும், ஒவ்வோர் ஆன்மாவும், இருக்கின்ற ஒவ்வொன்றுமே எல்லையற்றவை. எல்லையற்றவைதான் எல்லைக்கு உட்பட்டவை, எல்லைக்கு உட்பட்டவைதான் எல்லையற்றவை. இதுதான் நம் வாழ்க்கை, நம் இருப்பு.

மேலே கூறியவை எல்லாம் உண்மையாக இருக்கலாம்; ஆனால் எல்லையற்றதைப்பற்றிய உணர்ச்சியெல்லாம், இப் போது பெரும்பாலும் நாம் அறியாததாகவே (unconscious) இருக்கிறது. நாம் நமது எல்லையற்ற இயல்பை மறந்துவிட் டோம் என்பது அல்ல, யாராலும் அதை மறக்க முடியாது. தனக்கு அழிவு உண்டு என்று யார்தான் நினைக்க முடியும்! தனக்குச் சாவு உண்டு என்று யார் நினைக்க முடியும்? யாராலும் முடியாது. நமக்கும், எல்லையற்ற நிலைக்கும் உள்ள தொடர்பு நாம் அறியாமலே நம்மிடம் செயல்படுகிறது. எனவே, ஒரு வகையில், நாம் நமது உண்மை இயல்பை மறக்கிறோம், நமக்கு ஏற்படும் துன்பங்களுக்கெல்லாம் இதுதான் காரணம்.

அன்றாட நடைமுறை வாழ்க்கையில் சிறு விஷயங்கள் நம்மை அலைக்கழிக்கின்றன. அற்பப் பிராணிகள் நம்மை அடிமைப்படுத்துகின்றன. நாம் எல்லைக்கு உட்பட்டவர்கள், நாம் அற்ப ஜீவன்கள் என்று நினைக்கும்போதுதான் துன்பம் வருகிறது. ஆனாலும் நாம் எல்லையற்றவர்கள் என்று நம்புவது எவ்வளவு கடினமாக இருக்கிறது! இந்தத் துன்பதுயரங்களின் நடுவில், ஓர் அற்பப் பொருள்கூட எனது சமநிலையைக் குலைத்துவிடுகின்ற இந்த நிலையில், நாம் எல்லையற்றவர்கள் என்பதை நம்புவது மிகவும் நல்லது. உண்மை என்னவென்றால், நாம் எல்லையற்றவர்கள். அறிந்தோ அறியாமலோ, நாம் அனைவரும் எல்லையற்ற ஏதோ ஒன்றையே, சுதந்திரமான ஏதோ ஒன்றையே எப்போதும் தேடிக்கொண்டிருக்கிறோம்.

மதம் என்பதே இல்லாத, ஏதோ ஒருவகையான தெய்வத்தையோ தேவதைகளையோ வழிபடாத ஒரு மனித இனம் இதுவரை இருந்ததில்லை. இந்தத் தெய்வமோ தேவதை களோ உண்மையில் இருந்தனவா என்பதல்ல பிரச்சினை, இதற்கான மனஇயல் விளக்கம் என்ன என்பதுதான் கேள்வி.

ஒரு தெய்வத்தைக் காண, ஒரு தெய்வத்தைத் தேடி ஏன் எல்லோரும் அலைகின்றனர்? ஏன்? ஏனெனில் இந்த எல்லா பந்தங்களையும் மீறி, இயற்கையையும் நம்மைக் கீழே அழுத்தி நசுக்குகின்ற நியதிகளின் சக்தியையும் மீறி—நாம் எங்கே போனாலும், என்ன செய்ய விரும்பினாலும் நம்மைப் பின் தொடர்ந்து, நம்மை இங்குமங்கும் விலகவிடாமல் செய்து நம் முயற்சிகளை அழிக்க முயல்கின்ற இந்த எங்கும் நிறைந்த நியதிகள் இருக்கின்றனவே, அவை அனைத்தையும் மீறி மனிதனின் ஆன்மா தன் சுதந்திர இயல்பை ஒருபோதும் மறப்பதில்லை; அந்தச் சுதந்திர இயல்பையே அது எப்போதும் தேடியவண்ணம் இருக்கிறது. எல்லா மதங்களின் தேடலும் இந்தச் சுதந்திரத் தேடல்தான். அவை அறிந்தாலும் அறியா விட்டாலும், அதைச் சரியான கோட்பாடாக உருவாக்க அந்த மதங்களால் முடிந்தாலும் முடியாவிட்டாலும் இந்தக் கருத்து அங்கே இருக்கவே செய்கிறது. மிகத் தாழ்ந்த மனிதனும் பாமரனும்கூட இயற்கை நியதிகளைக் கட்டுப்படுத்துகின்ற சக்தியுடைய ஒன்றைத் தேடுகிறான். இயற்கையை வெல்கின்ற ஆனால் இயற்கையால் வெல்ல முடியாத, எந்த நியதிக்கும் கட்டுப்படாத ஒரு பூதத்தையோ பேயையோ தேவதையையோ ஏதோ ஒன்றை அவன் காண விரும்புகிறான். 'இந்த நியதி களையெல்லாம் உடைத்தெறிகின்ற ஒருவர் என் கண்ணில் பட மாட்டாரா!' என்பதுதான் மனித இதயத்தின் கூக்குரல். நியதிகளை உடைத்தெறிகின்ற ஒருவரையே நாம் எப்போதும் தேடுகிறோம். தண்டவாளத்தின்மீது ரயில் விரைந்து ஓடுகிறது; வழியில் இருக்கின்ற சிறு புழு வழியைவிட்டு ஊர்ந்து செல் கிறது. உடனே நாம், 'ரயில் உயிரற்ற ஜடப்பொருள், வெறும் எந்திரம்; புழு உயிருள்ளது' என்கிறோம். காரணம், புழு நியதியை மீற முயன்றது. எவ்வளவு பலமும் ஆற்றலும் நிறைந்ததானாலும் ரயில் ஒருபோதும் நியதியை மீற முடியாது; மனிதன் விரும்புகின்ற திசையில் இயங்குமாறு அது அமைக்கப்பட்டிருக்கிறது; அதற்கு மாறாக ரயில் எதுவும் செய்ய இயலாது. ஆனால் புழு சிறியதாக, சாதாரணமானதாக இருந்தாலும், நியதியை மீறி அபாயத்திலிருந்து தப்ப முயற்சி செய்தது; நியதியை மீறித் தன்னை, தனது சுதந்திரத்தை நிலைநிறுத்த முயன்றது. அதனுள் கடவுள் இருக்கிறார், நாளை அதுவும் கடவுள் ஆகலாம் என்பதற்கு இந்த முயற்சியே அறி குறியாக அமைகிறது.

எங்கே பார்த்தாலும் இந்தச் சுதந்திரத்திற்கான, ஆன்ம சுதந்திரத்திற்கான வற்புறுத்தலை நாம் காண்கிறோம். ஒவ்வொரு மதத்திலும் தெய்வம் அல்லது தேவதை வழிபாடு என்ற வடிவில் அது பிரதிபலிக்கவே செய்கிறது. ஆனால் இது புற முயற்சி, கடவுளைப் புறத்தில் மட்டும் காண்பவர் களுக்கானது அது. தனக்கு மதிப்பு ஒன்றுமே இல்லை என்று மனிதன் தீர்மானித்தான். தான் சுதந்திரமாக இருக்கவே இயலாதோ என்ற சந்தேகம் அவனுக்கு வந்தது. எனவே இயற்கையைக் கடந்த ஒருவரை, சுதந்திரமான ஒருவரைத் தேடினான். இத்தகைய சுதந்திரமான பலர் இருக்கிறார்கள் என்ற முடிவுக்கு வந்தான். படிப்படியாக இவர்களை எல்லாம் ஒன்றாக்கி, தேவதேவனாக, மகாதேவனாக அமைத்துக் கொண்டான். இதுவும் அவனுக்குத் திருப்தியைத் தர வில்லை. அவன் உண்மைக்கு அருகில் சென்றுவிட்டான், உண்மையை நெருங்கிக் கொண்டிருந்தான். பின்னர், தான் எதுவாக இருந்தாலும், தனக்கும் அந்தத் தேவதேவனான மகாதேவனுக்கும் ஏதோ தொடர்பு இருப்பதைப் படிப்படியாக உணர்ந்தான். தான் கட்டுண்டவனாக, தாழ்ந்தவனாக, பலவீனனாக இருப்பதாக அவன் எண்ணினாலும் எப்படியோ தனக்கும் இந்தத் தேவதேவனுக்கும் தொடர்பு இருப்பதைக் கண்டான். அவனது காட்சி விரிந்தது, சிந்தனை வளர்ந்தது, அறிவு நுண்ணியதாகியது. படிப்படியாக அவன் அந்தத் தேவ தேவனை நெருங்கினான். இறைவனுக்கு மிக நெருக்கமாகத் தான் வருவதை உணர்ந்தான். எல்லாம் வல்ல, சுதந்திரமான ஒருவரைத் தேடிய தேடலும், தனது மனத்திரையில் தேவ தேவனாகவும் மகாதேவனாகவும் எத்தனையோ தேவதை களாகவும் தோன்றிய சித்திரங்கள் எல்லாமும் தன்னைப் பற்றித் தான் கொண்டுள்ள கருத்தின் பிரதிபிம்பம் மட்டுமே என்பதை அறிந்துகொண்டான். இறைவன் மனிதனைத் தன் சாயலாகப் படைத்தார் என்பது மட்டுமல்ல, மனிதன் கடவுளைத் தன் சாயலாகப் படைத்தான் என்பதுகூட உண்மையே என்பதைக் கடைசியாக அவன் கண்டுபிடித்தான். இதிலிருந்து தெய்வீகச் சுதந்திரம் என்ற கருத்து உருவாகியது. இறைவன் என்றும் உள்ளேயே இருக்கிறார்; நெருங்கிய வற்றுள் எல்லாம் நெருங்கியவர் அவர் என்பது தெரிந்தது. யாரை நாம் வெளியில் தேடி அலைந்தோமோ அவர் நம் இதயங்களின் இதயத்தினுள் இருப்பதை நாம் கண்டோம்.

தன் இதயத் துடிப்பை, வேறு யாரோ கதவைத் தட்டும் சத்த மாக எண்ணி ஒருவன் சென்று கதவைத் திறந்தானாம். வெளியில் யாரையும் காணாததால் அவன் உள்ளே வந்தான். மறுபடியும் கதவு தட்டும் சத்தம் கேட்டு வெளியில் சென்றான், ஏமாந்தான். பிறகுதான் அவனுக்கு அந்தச் சத்தம் தன் இதயத் துடிப்பு என்பதும், அதைத்தான் கதவைத் தட்டும் சத்தம் என்று தவறாக நினைத்ததும் தெரிய வந்தது. இந்தக் கதை உங்களுக்குத் தெரியுமென்று நினைக்கிறேன். இதைப்போலவே, புற இயற்கையில் இருப்பதாக எண்ணி, இவ்வளவு நாள் தேடி அலைந்த அந்த எல்லையற்ற சுதந்திரம் தன் உள்ளே இருக்கும் ஒன்று என்பதையும், அதுவே 'ஆன்மாவிற்கு ஆன்மா, உண்மைப் பொருள், நானே அது' என்பதையும் கண்டு கொண்டான்.

இவ்வாறு இறுதியில் மனிதன் தன்னுள் நிலவுகின்ற அற்புத இருமையை அறிகிறான்—எல்லையற்றதாகவும் எல்லைக்கு உட்பட்டதாகவும் இருப்பது அவனே. எல்லையற்ற பரமாத்மாவே எல்லைக்கு உட்பட்ட ஜீவாத்மாவாகவும் இருக் கிறது. எல்லையற்ற பரம்பொருள் அறிவாகிய வலையில் சிக்கி எல்லைக்கு உட்பட்ட பல பொருட்களாகத் தோன்றுகிறது; ஆனால் உண்மைக்கு எந்த மாறுதலும் உண்டாவதில்லை.

நம் ஆன்மாவுக்கு ஆன்மாவாக, நம்முள் உள்ள உண்மைப் பொருளாக இருக்கின்ற அதுவே மாற்றம் இல்லாதது, எல்லை யற்றது, பரிபூரண ஆனந்த இயல்பு கொண்டது, என்றுமே பந்தப்படாத பொருள்—இதுதான் உண்மை அறிவு.

இதுவே எல்லா மரணத்திற்கும் முடிவு, மரணமிலாப் பெருநிலையின் தொடக்கம், எல்லா துன்பங்களுக்கும் முடிவு. யார் இந்தப் பன்மைக்குள் ஒருமையையும், மாறுகின்ற இந்தப் பிரபஞ்சத்தில் மாறாத ஒன்றையும் காண்கிறாரோ, யார் தன் ஆன்மாவின் ஆன்மாவாக பரமாத்மாவைக் காண்கிறாரோ அவருக்கே நிலைத்த அமைதி உரியதாகும்; வேறு யாருக்கும் அது கிடைக்காது.

துயரத்தின் எல்லைகளில், சீரழிவின் ஆழங்களில் மனிதன் தவிக்கும்போது ஆன்மா ஒளிக்கிரணம் ஒன்றை அனுப்புகிறது, அவன் விழிப்புணர்வு பெறுகிறான்; தனக்கு உண்மையில் உரியது எது, தான் அதை ஒருபோதும் இழக்க முடியாது என்பதை அறிகிறான். உண்மையில் நமக்கு உரியதை நாம் ஒரு போதும் இழக்க முடியாது. தன் இருப்பிற்கான ஆதாரத்தை

இழக்க யார்தான் விரும்புவார்? யாரால் தன்னையே இழக்க முடியும்? 'நான் நல்லவன்' என்பதன் பொருள் என்ன? முதலில் 'நான்' என்பது இருக்கிறது, அதற்கு நல்லது என்னும் நிறம் தீட்டப்பட்டிருக்கிறது என்பதுதான். 'நான் தீயவன்' என்னும் போதும் முதலில் 'நான்', எனக்குத் தீமை என்னும் நிறம் பூசப் பட்டிருக்கிறது. 'நான்' அதாவது இருப்பு என்பதுதான் முதலில், முடிவிலும் அதுவே, எப்போதும் அதுவே; அது ஒருபோதும் மறைவதில்லை, எப்போதும் இருக்கிறது.

எனவே எல்லோருக்கும் வாய்ப்பு உண்டு. யாரும் சாக முடியாது, என்றுமே தாழ்ந்தவர்களாக யாரும் இருக்க முடியாது. வாழ்க்கை ஒரு விளையாட்டு மைதானம். விளையாட்டு எவ்வளவு கடினமாக இருந்தாலும், இந்த விளையாட்டில் எவ்வளவோ அடிகளும் இடிகளும் பட நேர்ந்தாலும், அங்கே ஆன்மா இருக்கிறது; அது பாதிக்கப் படுவதே இல்லை. நாமே அந்த எல்லையற்ற பொருள்.

'எனக்குப் பயமோ சந்தேகமோ இல்லை. மரணம் என்னிடம் வந்ததே இல்லை. எனக்கு என்றுமே தாய் தந்தையர் இருந்ததில்லை; ஏனெனில் நான் பிறக்கவே இல்லை. எனக்குப் பகைவர் யார்?—நானே அல்லவா எல்லோரும். நானே உண்மை–அறிவு–இன்பம். நானே அது. நானே அது. கோபம், காமம், பொறாமை போன்ற தீய எண்ணங்கள் என்னிடம் அறவே கிடையாது. ஏனெனில் நானே அல்லவா உண்மை–அறிவு–ஆனந்தம்! நானே அது. நானே அது.' என்று பாடுகிறார் வேதாந்தி ஒருவர்.

எல்லா நோய்க்கும் மருந்து, சாவைப் போக்குகின்ற அமுதம் அதுவே. நாம் இந்த உலகில் வாழ்கிறோம், நம் இயல்பு அதை எதிர்க்கிறது. 'நானே அது; நானே அது. எனக்குப் பயமோ சந்தேகமோ மரணமோ இல்லை. எனக்குப் பால் வேறுபாடோ மதமோ இனமோ இல்லை. எனக்கு என்ன மதம் இருக்க முடியும்? நான் எந்த நெறியைச் சார்ந்திருக்க முடியும்? எந்த நெறி என்னைக் கட்டுப்படுத்த இயலும்? நான் ஒவ்வொரு நெறியிலும் இருக்கிறேன்' என்று திரும்பத்திரும்பக் கூறுவோம். எவ்வளவுதான் உங்கள் உடம்பு இதை எதிர்த் தாலும், எவ்வளவுதான் உங்கள் மனம் இதை எதிர்த்தாலும், மையிருட்டுக்கு இடையிலும், பொறுக்க முடியாத சித்திரவதை களுக்கு நடுவிலும், முற்றிலும் நம்பிக்கை இழந்து தவிக் கின்ற நிலையிலும் இதனை ஒருமுறை, இருமுறை, பலமுறை

சொல்லுங்கள். ஒளி மென்மையாக வருகிறது, மெதுவாக வருகிறது, ஆனால் வந்தே தீரும்.

நான் எத்தனையோ முறை முழுப் பட்டினியால் சாகும் நிலையில் கிடந்திருக்கிறேன்; கால் தளர, களைப்பு மேலிட நாள்கணக்கில் உணவே இல்லாமல் அவதிப்பட்டிருக்கிறேன். இனிமேல் நடக்கவே முடியாது என்ற நிலையில் மரத் தடியில் சாய்ந்துவிடுவேன். சிறிதுசிறிதாக உயிர் பிரிந்து கொண்டிருப்பது போல் தோன்றும். என்னால் பேசவோ சிந்திக்கவோ இயலாது. கடைசியில் மனத்தில் இந்த எண்ணம் எழும்: 'எனக்குப் பயமோ சாவோ இல்லை; எனக்குப் பசியோ தாகமோ இல்லை. நானே அது, நானே அது. இயற்கை முழுவதும் திரண்டு வந்தாலும் என்னை நசுக்க முடியாது. இயற்கை என் அடிமை. தேவதேவனான, மகாதேவனான நீ உன் பலத்தை வலியுறுத்து. இழந்த பேரரசை மீட்டுக்கொள்! எழுந்து நட! எங்கும் நிற்காதே!' உடனே புத்துணர்ச்சி பெற்ற வனாக எழுந்துவிடுவேன். இதோ, இன்றும் உயிருடன் இருக்கிறேன்.

இருள் உன்னைச் சூழ்கின்றபோதெல்லாம் உன் உண்மை இயல்பை வலியுறுத்து, பாதகமானவை எல்லாம் மறைந்தே தீர வேண்டும். ஏனெனில் இவை எல்லாம் வெறும் கனவுகள். துன்பங்கள் மலையளவாகத் தோன்றலாம், எல்லாமே பயங்கர மானவையாக, இருள் சூழ்ந்தவையாகத் தோன்றலாம், ஆனால் எல்லாம் வெறும் மாயை. பயப்படாதே, மாயை மறைந்து விடும். நசுக்கு, அது ஓடிவிடும். காலால் மிதி, இறந்துவிடும். பயத்திற்கு இடம் கொடுக்காதே. எத்தனை முறை தோல்வி அடைந்தாய் என்பதை எண்ணிக் கொண்டிருக்காதே. அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். காலத்திற்கு எல்லையில்லை. முன்னேறு. திரும்பத்திரும்ப உன் உண்மை இயல்பை வலி யுறுத்து, ஒளி வந்தே தீரும்.

இதுவரை பிறந்த அனைவரையும் வேண்டிக்கொள், உன் உதவிக்கு யார் வருவார்கள்? யாரும் தப்ப முடியாத மரணத்தை வெல்வது எப்படி? உனக்கு நீயே உதவிக்கொள். நண்பா, உனக்கு வேறு யாரும் உதவ முடியாது. ஏனெனில் உனக்கு மிகச் சிறந்த நண்பன் நீ, உனக்கு மிகக் கொடிய பகைவனும் நீயே. எனவே உன் ஆன்மாவைப் பற்றிக்கொள். எழுந்து நில். பயப்படாதே. எல்லா துன்பங்களுக்கும் எல்லா பலவீனங்களுக்கும் இடையிலும் ஆன்மா ஒளிரட்டும்,

ஆரம்பத்தில் அது மங்கலாக இருந்தாலும், உணர முடியாததாக இருந்தாலும் பரவாயில்லை. அது வெளிப்படட்டும். போகப்போக உனக்குத் தைரியம் வளரும். கடைசியில் 'நானே அது! நானே அது!' என்று ஒரு சிங்கம்போல் முழங்குவாய். 'நான் ஆணும் அல்ல, பெண்ணும் அல்ல; தேவனும் அல்ல, அசுரனும் அல்ல; மிருகங்களோ, தாவரங்களோ, மரமோ எதுவும் அல்ல. நான் ஏழையும் அல்ல, பணக்காரனும் அல்ல; பண்டிதனும் அல்ல, பாமரனும் அல்ல. என் உண்மை இயல்புடன் ஒப்பிட்டால் அவை எல்லாம் ஒன்றுமே இல்லை. ஏனெனில் நானே அது! நானே அது! சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் இவற்றைப் பாருங்கள்! இவற்றுள் பிரகாசிக்கும் ஒளி நானே. நெருப்பின் அழகு நானே! பிரபஞ்சத்தின் சக்தி நானே! நானே அது! நானே அது!'

'நான் அற்பன் என்று யார் நினைத்தாலும் அவன் தவறு செய்கிறான், ஏனெனில் இருப்பது ஆன்மா மட்டுமே. சூரியன் இருக்கிறது என்று நான் சொல்வதாலேயே சூரியன் இருக்கிறது, உலகம் இருக்கிறது என்று நான் சொல்வதாலேயே உலகம் இருக்கிறது. நான் இல்லாமல் அவை இருக்க முடியாது. ஏனெனில் இருப்பாகவும் அறிவாகவும் ஆனந்தமாகவும் நானே இருக்கிறேன். என்றும் இன்பமானவனாக, என்றும் தூயவனாக, என்றும் அழகனாக இருக்கிறேன் நான். நம் பார்வைக்குக் காரணம் சூரியன், ஆனால் நம் யாருடைய கண்களில் ஏற்படும் எந்தக் கோளாறும் அதனைப் பாதிப்பதில்லை. நானும் அப்படியே. எல்லா உறுப்புகளின் மூலமாகவும், எல்லாவற்றின் மூலமாகவும் நானே செயல்படுகிறேன். ஆனால் செயல்களின் நன்மை தீமைகள் என்னைப் பாதிப்பதில்லை. எனக்கு நியதி எதுவும் இல்லை, வினைப்பயன் ஏதும் இல்லை. வினையின் விதிகளுக்கு நானே தலைவன். நான் என்றும் இருந்தேன்; இருக்கிறேன்.

'கணவன், மனைவி, குழந்தைகள் போன்ற உலக விஷயங்கள் எதிலும் என் உண்மை இன்பம் ஒருபோதும் இருந்ததில்லை. நான் எல்லையற்ற நீல வானம் போன்றவன். பல நிற மேகக் கூட்டங்கள் அதன்மேல் கடந்து செல்கின்றன; கண நேரம் அங்கே விளையாடுகின்றன; பிறகு நகர்கின்றன; அங்கே வானத்தின் மாறாத நீல நிறம் அப்படியே இருக்கிறது. இன்பம்-துன்பம், நன்மை-தீமை—இவை ஒரு கண நேரம் என்னைப் பற்றலாம்; ஆன்மாவை மறைக்கலாம். ஆனாலும்

நான் அங்கேயே இருக்கிறேன். இவை மாறும் இயல்புடையவை யானதால் நகர்ந்து செல்கின்றன; நான் மாறுதல் இல்லாதவன், எனவே நான் இருக்கிறேன். துன்பம் வருகிறது; அது எல்லைக்கு உட்பட்டது, எனவே அது மறைந்தேயாக வேண்டும் என்பது எனக்குத் தெரியும். தீமை வரலாம்; அது எல்லையுடையது, அதுவும் விலகியே தீர வேண்டும் என்பது எனக்குத் தெரியும். நான் மட்டுமே எல்லையற்றவன், எதனாலும் பாதிக்கப்பட முடியாதவன். நானே எல்லையற்ற, நிரந்தரமான, மாறுதல் இல்லாத ஆன்மா.' இப்படி நம் கவிஞர் ஒருவர் பாடுகிறார்.

மரணமிலா பெருநிலைக்கும், மாறாத நிலைக்கும் நம்மை அழைத்துச் செல்கின்ற இந்த அமுதத்தை நாம் பருகுவோம்! பயம் வேண்டாம். நாம் தீயவர்கள், எல்லைக்கு உட்பட்டவர்கள், நமக்குச் சாவு உண்டு என்பதையெல்லாம் நம்பாதீர்கள். இவை உண்மையல்ல.

'முதலில் இதனைக் கேட்க வேண்டும், பிறகு சிந்திக்க வேண்டும், பிறகு தியானிக்க வேண்டும்.' கைகள் வேலை செய்யும்போதும் மனம், 'நானே அது, நானே அது' என்று சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். இந்த எண்ணம் உங்கள் எலும்பிற்கு எலும்பாக மாறும்வரையிலும், உங்கள் தசைகளில் ஊடுருவும் வரையிலும், உங்கள் சிறுமை, தீமை, பலவீனம், துயரம் இவைபற்றிய பயங்கரக் கனவுகள் மறையும்வரையிலும் இதையே நினையுங்கள்; இதைப்பற்றியே கனவு காணுங்கள். அதன்பிறகு ஒரு நொடிகூட உண்மை உங்களிடமிருந்து மறைந்திருக்க இயலாது. ❑

## 4. நான் அந்த நானே[1]

இன்றிரவின் தலைப்பு 'மனிதன்', இயற்கைக்கு வேறான மனிதன். 'இயற்கை' என்ற சொல் நெடுங்காலமாகப் புற இயற்கையையும் நிகழ்ச்சிகளையும் மட்டும் குறிப்பதற்கே பெரும்பாலும் பயன்படுத்தப்பட்டு வந்தது. இந்த நிகழ்ச்சிகள் ஒரு சீராக, முறையாக நடைபெறுவது கண்டுபிடிக்கப்பட்டது; இவை அடிக்கடி அந்த ஒழுங்கு முறையில் நிகழ்ந்தன. அதாவது கடந்த காலத்தில் நிகழ்ந்த ஒன்று மீண்டும் நிகழ்ந்தது. எந்த நிகழ்ச்சியும் ஒரு முறை அல்ல, பலமுறை நிகழ்ந்தது. எனவே இயற்கை என்பது ஓர் ஒழுங்குமுறையுடன் இயங்குகிறது என்று முடிவு கட்டினர். ஒழுங்குமுறை, இயற்கையுடன் மிக நெருங்கிய தொடர்பு உடையது. இந்த முறையின் உதவி யின்றி இயற்கை நிகழ்ச்சிகளை அறிய முடியாது. நாம் நியதி என்று சொல்கிறோமே, அதற்கு இந்த ஒழுங்குமுறையே அடிப்படை.

'இயற்கை' என்ற சொல்லும் ஒழுங்குமுறை என்ற கருத்தும், அக இயற்கையையும் அதாவது நமது வாழ்வு மற்றும் மனத்தைப் புரிந்துகொள்வதற்கும் படிப்படியாகப் பயன் படுத்தப்பட்டன. எதையெல்லாம் வேறுபடுத்திக் காட்ட முடியுமோ அவை எல்லாம் இயற்கை. செடியின் தன்மையும் மிருகத்தின் தன்மையும் மனிதனின் தன்மையும் இயற்கை. குறிப்பிட்ட முறைகளுக்கு ஏற்ப மனித வாழ்க்கை இயங்கிக் கொண்டிருக்கிறது; அவனது மனமும் அவ்வாறே. எண்ணங்கள் ஏதோ தானாகத் தோன்றிவிடுவதில்லை. அவை எழுவதிலும் நிலைத்து நிற்பதிலும் மறைவதிலும் ஓர் ஒழுங்குமுறை உள்ளது. வேறுவிதமாகச் சொன்னால், புற இயற்கை, நியதிகளால் கட்டுப்பட்டிருப்பது போலவே அக இயற்கையும் அதாவது மனித வாழ்வும் மனமும் நியதிகளால் கட்டுப்பட்டிருக்கின்றன.

---

1. 1900 மார்ச் 20-ஆம் நாள் சான்பிரான்சிஸ்கோவில் நடைபெற்ற சொற் பொழிவின்போது ஈடா ஆன்செல் எடுத்த குறிப்புகள். இதே சொற்பொழிவுக்கு ஃப்ராங்க் ரொடீமல் எடுத்த குறிப்புகளே அடுத்த அத்தியாயமான 'இயற்கையும் மனிதனும்'.

மனிதனின் மனத்தையும் வாழ்வையும்பற்றிய நியதியை நாம் சிந்திக்கும்போது, சுதந்திர சங்கல்பம், சுதந்திர வாழ்வு என்பவை இருக்க முடியாது என்பதை உடனடியாகப் புரிந்து கொள்ளலாம். மிருகத்தின் இயற்கையும் முற்றிலும் எப்படி நியதிகளுக்குக் கட்டுப்பட்டு இயங்குகிறது என்பதை நாம் அறிவோம். மிருகம் சுதந்திர சங்கல்பத்துடன் செயல்படுவதாகத் தெரியவில்லை. மனிதனின் விஷயத்திலும் இது உண்மை; மனித இயற்கையும் நியதிகளுக்குக் கட்டுப்பட்டே இருக்கிறது. மனித மனத்தின் செயல்களைக் கட்டுப்படுத்துகின்ற நியதியே கர்ம நியதி.

சூன்யத்திலிருந்து எதுவும் உருவாக்கப்பட்டதை யாரும் பார்த்ததில்லை. மனத்தில் ஏதாவது எழுமானால் அதுவும் ஏதாவது ஒன்றிலிருந்தே பிறந்திருக்க வேண்டும். சுதந்திர சங்கல்பம் என்று நாம் சொல்லும்போது, அந்தச் சங்கல்பம் எதனாலும் தோற்றுவிக்கப்படாது என்பதையே குறிப்பிடு கிறோம். ஆனால் அது உண்மையாக இருக்க முடியாது, சங்கல்பம் தோற்றுவிக்கப்பட்டதுதான். தோற்றுவிக்கப்பட்டது ஆதலால் அது சுதந்திரமாக இருக்க முடியாது, அது நியதிக்குக் கட்டுப்பட்டிருக்கிறது. நான் உங்களிடம் பேச நினைக்கிறேன், நீங்கள் கேட்க விரும்புகிறீர்கள், இது ஒரு நியதி. நான் செய்கின்ற அல்லது நினைக்கின்ற அல்லது உணர்கின்ற ஒவ்வொன்றும், என் நடத்தையின் ஒவ்வோர் அம்சமும், எனது ஒவ்வோர் இயக்கமும் எல்லாம் ஏதோ ஒன்றால் ஏற்படுகின்றன; ஆகவே அவை சுதந்திரம் அற்றவை. நமது வாழ்க்கையையும் மனத்தையும் இவ்வாறு கட்டுப்படுத்தி இயக்குகின்ற முறையே கர்ம நியதி.

இத்தகைய கோட்பாடு ஒன்று மேலைச் சமுதாயத்தில் பழங்காலத்தில் பரப்பப்பட்டிருக்குமானால், அது பெரும் பரபரப்பை ஏற்படுத்தி இருக்கும். தன் மனம் நியதிகளால் ஆளப்படுகிறது என்று எண்ணிப் பார்க்க மேலை நாட்டானுக்கு விருப்பம் இல்லை. இந்தியாவின் மிகப் பழம்பெரும் தத்துவ நெறி இந்தக் கர்ம நியதியைக் கண்டுபிடித்தபோது, அந்தப் பழங்காலத்திலேயே அது இந்தியாவில் ஏற்றுக்கொள்ளப் பட்டது. மனத்தின் சுதந்திரம் என்பது இல்லவே இல்லை, இருக்கவும் முடியாது. இந்தப் போதனை இந்திய மனத்தில் எந்தக் குழப்பத்தையும் ஏன் உண்டாக்கவில்லை? இந்தியா இதனை அமைதியாக ஏற்றுக்கொண்டது. அதுதான் இந்தியச்

சிந்தனையின் சிறப்பு; இதில்தான் அது உலகின் சிந்தனைகள் ஒவ்வொன்றிலிருந்தும் மாறுபட்டிருக்கிறது.

புற இயற்கையும் அக இயற்கையும் வெவ்வேறானவை அல்ல; உண்மையில் அவை ஒன்றே. அனைத்தின் மொத்தத் தொகுப்பே இயற்கை. இருப்பவை எல்லாம், இயங்குபவை அனைத்தும்தான் 'இயற்கை' என்று பெயர் பெறுகிறது. ஜடப் பொருளையும் மனத்தையும் நாம் மிகவும் வேறுபடுத்திக் காண்கிறோம்; ஜடப்பொருளிலிருந்து மனம் முற்றிலும் வேறுபட்டது என்று கருதுகிறோம். உண்மையில் அவை ஒரே இயற்கைதான், அதில் ஒரு பாதி தொடர்ந்து மறு பாதியின்மீது செயல்பட்டுக் கொண்டே இருக்கிறது. ஜடப்பொருள் பல்வேறு விதமான அதிர்வுகளாக மனத்தில் பதிவை ஏற்படுத்திக்கொண்டே இருக்கிறது. இந்த அதிர்வுகள் சக்தியே தவிர வேறல்ல. புறத்திலிருந்து வருகின்ற சக்தி, அகத்திலுள்ள சக்தியைத் தூண்டுகிறது. புறச் சக்திக்குக் கட்டுப்படுவதற்கும் அல்லது அதன் ஆதிக்கத்தில் கட்டுப்படாமல் விலகுவதற்கும் கொள்கின்ற சிந்தையிலிருந்து பிறக்கும் அக சக்தியே எண்ணம் ஆகிறது.

ஜடப்பொருள், மனம் இரண்டும் உண்மையில் சக்திகளே தவிர வேறல்ல. அவற்றைப் போதிய அளவு பகுத்தறிந்தால், அவை இரண்டும் அடிப்படையில் ஒன்றே என்பதை அறிவீர்கள். புறச் சக்தி எப்படியோ அகச் சக்தியைத் தூண்டுகிறது என்ற உண்மையே அவை எங்கோ ஒன்றுசேர்கின்றன என்பதைக் காட்டுகிறது—அவை தொடர்ச்சியானவை, எனவே அடிப்படையில் ஒரே சக்தியாக இருக்க வேண்டும். பொருட்களின் அடிவேருக்குச் சென்றீர்களானால் அவை எளிமையானவையாக, பொதுவானவையாக இருக்கும். ஒரே சக்தி ஓர் உருவத்தில் ஜடப்பொருளாகவும், மற்றொரு வடிவில் மனமாகவும் தோன்றுவதால் ஜடப்பொருளும் மனமும் வெவ்வேறு என்று கருதுவதற்குக் காரணமே இல்லை. மனம் ஜடப் பொருளாக மாறுகிறது, ஜடப்பொருள் மனமாக மாறுகிறது. எண்ணச் சக்தி நரம்புச் சக்தியாகிறது, தசைச் சக்தியாகிறது; தசைச் சக்தியும் நரம்புச் சக்தியும் எண்ணச் சக்தி ஆகின்றன. இந்தச் சக்திகள் ஜடப்பொருளாகவோ மனமாகவோ வெளிப் பட்டாலும் அனைத்துமே இயற்கை என்பதையே குறிக்கும்.

மிகமிக நுண்மையான மனத்திற்கும் மிகமிகத் தூலமான ஜடப்பொருளுக்கும் உள்ள வேறுபாடு அளவில்தான். எனவே பிரபஞ்சம் முழுவதையும் மனம் என்றும் குறிப்பிடலாம்,

ஜடப்பொருள் என்றும் குறிப்பிடலாம். எப்படிக் குறிப்பிட்டாலும் அது பெரிய வேறுபாட்டை ஏற்படுத்தாது. மனத்தை, பண்படுத்தப்பட்ட ஜடப்பொருள் என்று அழைக்கலாம்; உடலை, தூலமாக்கப்பட்ட மனம் என்று கொள்ளலாம். எதை எந்தப் பெயரால் குறிப்பிட்டாலும் எந்த வித்தியாசமும் இல்லை. உலகாயதத்திற்கும் ஆன்மீகத்திற்கும் இடையிலுள்ள கருத்து வேறுபாட்டினால் எழுகின்ற அனைத்துப் பிரச்சினைகளும் தவறாகப் புரிந்துகொண்டதால் ஏற்பட்டதே. உண்மையில் இரண்டிற்கும் எந்தவிதமான வேறுபாடும் இல்லை. நானும் மிக இழிந்த பன்றியும் வெளிப்பாட்டு அளவில்தான் வேறுபடுகிறோம். பன்றியில் வெளிப்பட்டுள்ள அளவு சிறிது, என்னில் வெளிப்பட்டுள்ள அளவு பெரிது. சிலவேளைகளில் நான் தாழ்ந்தும் பன்றி உயர்ந்தும்கூட இருக்கலாம்.

இனி, முதலில் மனமா ஜடப்பொருளா என்று விவாதித்துக் கொண்டிருப்பதிலும் எந்தப் பயனும் இல்லை. மனம் முதலில் வந்து அதிலிருந்து ஜடப்பொருள் தோன்றுகிறதா? அல்லது ஜடப்பொருள் முதலில் வந்து அதிலிருந்து மனம் தோன்றுகிறதா? பயனற்ற இதே கேள்விகளிலிருந்து தத்துவ வாதங்கள் பல தோன்றியுள்ளன. முதலில் வந்தது முட்டையா கோழியா என்று கேட்பது போன்றதுதான் இது. மனமே ஜடப்பொருள்; ஜடப்பொருளே மனம்—இரண்டுமே முதலில், இரண்டுமே கடைசியில். முதலில் இருந்தது ஜடப்பொருள், அது படிப்படியாக நுண்ணியதாகி மனமாகிறது என்று நான் சொன்னால், ஜடப்பொருளுக்கு முன்பே மனம் இருந்திருக்க வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொண்டே தீர வேண்டும். அவ்வாறு இல்லையானால் ஜடப்பொருள் எதிலிருந்து வந்தது? மனத்திற்கு முன்பே ஜடப்பொருள் இருக்கிறது, ஜடப்பொருளுக்கு முன்பே மனம் இருக்கிறது. இது சரியாக கோழியும் முட்டையும் போன்ற பிரச்சினையே.

இயற்கை முற்றிலுமாகக் காரணகாரிய நியதியால் கட்டுண்டிருக்கிறது; அது காலத்தையும் இடத்தையும் (space) சார்ந்திருக்கிறது. இடத்திற்குப் புறம்பாக நாம் எதையும் காண முடியாது, அதே வேளையில் இடம் என்பதும் என்னவென்று நமக்குத் தெரியாது. காலத்தில் அல்லாமல் நாம் எதையும் அறிய முடியாது, என்றாலும் நாம் காலத்தை அறியாதிருக்கிறோம். காரணகாரிய நியதியை அனுசரித்து அல்லாமல் நாம் எதையும் அறிய முடியாது, என்றாலும் காரண காரிய நியதி

என்றால் என்னவென்று நமக்குத் தெரியாது. காலம், இடம், காரண காரிய நியதி என்ற இந்த மூன்றும் ஒவ்வோர் இயற்கை நிகழ்ச்சியிலும் இருக்கின்றன; என்றாலும் இந்த மூன்றும் இயற்கை நிகழ்ச்சிகள் அல்ல. எந்தப் பொருளையும் அறிய வேண்டுமானால், அதனை வார்த்தெடுக்க வேண்டிய அச்சாகப் பயன்படுபவை இந்த மூன்றும். ஜடப்பொருள்=பொருள்+ காலம், இடம், காரணகாரிய நியதி. மனம்= பொருள்+ காலம், இடம், காரணகாரிய நியதி.

இந்த உண்மையை வேறு விதமாகவும் கூறலாம். ஒவ்வொரு பொருளுமே பொருள்+நாமரூபம் அதாவது பெயரும் உருவமும். பெயரும் உருவமும் வந்து போகின்றன, ஆனால் பொருள் என்றென்றும் நிலைத்திருக்கிறது. பொருள், உருவம், பெயர் என்ற மூன்றும்தான் இந்தக் குடம் என்பதை உருவாக்குகின்றன. உடைந்துவிட்டால் அதைக் குடம் என்று சொல்வதில்லை, அதன் குட உருவத்தையும் காண்பதில்லை. அதன் பெயரும் உருவமும் மறைந்துபோயின, ஆனால் பொருள் நிலைத்திருக்கிறது. பொருளில் ஏற்படும் வேறுபாடு அனைத்தும் பெயராலும் உருவத்தாலும் ஏற்படுபவை. பெயரும் உருவமும் உண்மையல்ல; ஏனெனில் அவை மறைந்துபோகின்றன. நாம் இயற்கை என்று குறிப்பிடுவது மாறாமலும் அழியாமலும் இருப்பதான பொருளையல்ல. காலம், இடம், காரணகாரிய நியதி—இவைதான் இயற்கை. பெயர், உருவம்—இவைதான் இயற்கை. மாயை—இதுதான் இயற்கை. ஒவ்வொரு பொருளும் எந்தப் பெயரோடும் வடிவத்தோடும் உண்டாக்கப்படுகிறதோ, அந்தப் பெயரும் வடிவமும் மாயை. மாயை உண்மையல்ல. அது உண்மையாக இருந்தால் அதை நாம் அழிக்கவோ மாற்றவோ முடியாது. பொருள் நிலையானது, மாயை வெறும் தோற்றம். எதனாலும் அழிக்க முடியாத 'நான்' என்ற பொருளும் இருக்கிறது, எப்போதும் தொடர்ந்து மாறிக்கொண்டும் மறைந்துகொண்டும் இருக்கின்ற 'நான்' என்ற தோற்றமும் இருக்கிறது.

உண்மை என்னவென்றால், ஒவ்வொரு பொருளுக்கும் இரண்டு நிலைகள் உள்ளன. ஒன்று உண்மை நிலை; இது மாறாதது, அழியாதது. மற்றொன்று தோற்ற நிலை; இது மாறுவது, அழிவது. மனிதன் உண்மை நிலையில் பொருளாக, ஆன்மாவாக, உயிராக இருக்கிறான். இந்த ஆன்மா, இந்த உயிர் என்றும் மாறாதது, என்றும் அழியாதது. ஆனால் அது உருவம்

என்ற ஒன்றால் போர்த்தப்பட்டு, அதனுடன் பெயர் ஒன்றும் இணைக்கப்பட்டது போலுள்ளது. இந்த உருவமும் பெயரும் மாறாதவை அல்ல, அழியாதவை அல்ல; அவை தொடர்ந்து மாறிக்கொண்டும் அழிந்துகொண்டும் இருக்கின்றன. ஆனால் மனிதன் முட்டாள்தனமாக, அழியாத நிலையை அழிகின்ற உடலிலும் மனத்திலும் தேடுகிறான்—நிலையான உடம்பைப் பெற விரும்புகிறான். அத்தகைய அழிவற்ற நிலையை நான் விரும்பவில்லை.

எனக்கும் இயற்கைக்கும் உள்ள தொடர்பு என்ன? இயற்கை என்பது பெயரையும் உருவத்தையும் அல்லது காலத்தையும் இடத்தையும் காரணகாரிய நியதியையும் குறிப்பிடும்போது, நான் இயற்கையைச் சேர்ந்தவன் அல்ல; ஏனெனில் நான் சுதந்திரன், நான் அழிவற்றவன், நான் மாறாதவன், எல்லையற்றவன். எனக்குச் சுதந்திர சங்கல்பம் உண்டா இல்லையா என்ற கேள்வி பிறக்கவில்லை. எல்லா சங்கல்பங்களுக்கும் அறவே அப்பாற்பட்டவன் நான். சங்கல்பம் என்பதற்கு ஒரு போதும் சுதந்திரம் இல்லை. சுதந்திர சங்கல்பம் என்ற ஒன்று இல்லவே இல்லை. எந்தப் பொருள் சங்கல்பம் ஆகிறதோ, அந்தப் பொருளுக்குச் சுதந்திரம் உண்டு, ஆனால் அது சங்கல்பமாக மாறியதும் அதற்குப் பெயரும் உருவமும் வந்து சேர்கின்றன, அந்தப் பெயருக்கும் உருவத்திற்கும் அது அடிமையாகிறது. அந்தப் பொருளே ஆன்மா. அது பெயர், உருவம் என்னும் அச்சினுள் தன்னை வார்த்துக்கொண்டதும் சுதந்திரத்தை இழந்து கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகிறது. இவ்வாறு ஆவதற்கு முன்பு இதுவே சுதந்திரத்துடன் விளங்கிற்று. ஆன்மா, உருவத்தையும் பெயரையும் பெற்றுச் சுதந்திரத்தை இழந்தாலும் தன் பழைய சுதந்திர நிலையை மறப்பதில்லை. அதனால்தான், 'நான் சுதந்திரன், இந்தக் கட்டுக்களுக்கிடையிலும் நான் சுதந்திரனே' என்று அந்த ஆன்மா கூறுகிறது. ஆன்மா தன் சுதந்திர நிலையை ஒருபோதும் மறப்பதில்லை.

ஆன்மா என்பது சங்கல்பமானதும் அது தன் பழைய சுதந்திரத்தை உண்மையில் இழந்துவிடுகிறது. இயற்கையின் தாளத்திற்கு அது ஆடியே தீர வேண்டும். நெடுங்காலமாக அவ்வாறே நீங்களும் நானும் ஆடிவருகிறோம். நாம் பார்ப்பது, செய்வது, அறிவது எல்லாம், நமது எண்ணங்கள், செயல்கள் எல்லாம், இயற்கையின் கட்டளைப்படி நாம் ஆடுகின்ற

ஆட்டங்களே. இவற்றில் எதிலும் சுதந்திரம் என்பது முன்பும் இருந்ததில்லை, இப்போதும் இல்லை. மிகமிகத் தாழ்ந்தவையிலிருந்து மிகமிகச் சிறந்தவை வரையிலுள்ள எண்ணங்களும் செயல்களும் எல்லாம் நியதிகளுக்குக் கட்டுப்பட்டவை. இவற்றுள் எதற்கும் நமது ஆன்மாவுக்கும் தொடர்பே இல்லை.

எனது உண்மையான ஆன்மா எல்லா நியதிகளுக்கும் அப்பாற்பட்டது. அடிமைத்தனத்தை ஏற்று, இயற்கையின் கட்டளையை ஏற்று, நியதிகளுக்கு அடங்கி, நீங்கள் வாழ்கிறீர்கள்; அந்த விதிகளின் கீழ் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்கிறீர்கள். இயற்கைக்குக் கீழ்ப்படிந்து அதன் கட்டளையின்படி நடக்கும் அளவிற்குக் கட்டுண்டு போகிறீர்கள். அறியாமையுடன் இயைந்திருக்கும் அளவிற்கு நீங்கள் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றின் கண்ணசைவு, கையசைவு, உதட்டசைவின்படி நடக்கும் அடிமைகளாகிறீர்கள். இவ்வாறு இயற்கையுடன் இயைந்து வாழ்வது, நியதிகளுக்குக் கீழ்ப்படிந்து நடப்பது மனிதனின் உண்மை இயல்புக்கும் லட்சியத்திற்கும் ஏற்புடையது ஆகுமா? எந்த உலோகக் கனிப்பொருளாவது எந்த நியதியுடனாவது சண்டையிட்டது உண்டா, நியதியை மறுத்தது உண்டா? எந்த மரமோ செடியோ எந்த நியதியையாவது எதிர்த்தது உண்டா? இந்த மேஜை இயற்கையுடனும் நியதியுடனும் இயைந்திருக்கிறது; ஆனால் அது என்றென்றும் மேஜையாகவே இருக்கிறது, சிறந்து மேலோங்குவதில்லை. மனிதன் போராடத் தொடங்குகிறான், இயற்கையை எதிர்த்துப் போரிடுகிறான், பல தவறுகளைச் செய்கிறான், துன்பமும் அனுபவிக்கிறான். ஆனால் இறுதியில் இயற்கையை வென்று, தன் சுதந்திரத்தை உணர்கிறான். அவன் சுதந்திரன் ஆனதும் இயற்கை அவனுக்கு அடிமையாகிறது.

ஆன்மா தன் அடிமைத்தனத்தை அறிந்து விழிப்புணர்வு பெறவும், தன்னை வலியுறுத்தவும் கொள்கின்ற முயற்சியே வாழ்க்கை. இந்தப் போராட்டத்தில் கிடைக்கின்ற வெற்றியே பரிணாம வளர்ச்சி. எல்லா அடிமைத்தனமும் அகன்றபின் கிடைக்கின்ற இறுதியான வெற்றியே முக்தி, நிர்வாணம், சுதந்திரம். பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றும் சுதந்திரத்திற்காகப் போராடிக் கொண்டிருக்கின்றன. நான் இயற்கையாலும், பெயராலும், உருவத்தாலும், காலம் இடம் காரணகாரிய நியதி என்பவற்றாலும் கட்டுண்டிருக்கும்போது, உண்மையில் நான் யார் என்பதை அறிவதில்லை. இந்த அடிமை நிலையிலும்

நான் என் உண்மை இயல்பை முற்றிலுமாக இழந்துவிடுவ தில்லை. என்னைக் கட்டியிருக்கின்ற சங்கிலிகளை உடைக்க நான் முயல்கிறேன்; அவை ஒவ்வொன்றாக உடைகின்றன; நானும் என் இயல்பை, மகிமையை உணர்கிறேன், அப்போது முழு சுதந்திரம் வருகிறது. என்னைப்பற்றிய மிகத் தெளிந்த, முழுமையான உணர்வை நான் பெறுகிறேன். நான் எல்லை யற்ற ஆன்மா, நான் இயற்கையின் தலைவனே தவிர அடிமை அல்ல என்பதை அறிகிறேன். வேறுபாடுகள், தொகுப்புகள் எல்லாவற்றிற்கும் அப்பால், காலம் இடம் காரணகாரிய நியதி அனைத்திற்கும் அப்பால், நான் அந்த நானாக இருக்கிறேன். ❑

# 5. இயற்கையும் மனிதனும்

தூல நிலையில் வெளிப்பட்டுள்ள பிரபஞ்சப் பகுதி மட்டுமே இயற்கை என்பதுதான் தற்காலக் கருத்து. பொதுவாக மனம் என்று கருதப்படும் பகுதி இயற்கை என்று கருதப் படுவதில்லை.

சங்கல்பம் சுதந்திரமானது என்பதை நிரூபிக்க முனைந்த தத்துவ அறிஞர்கள் மனத்தை இயற்கையிலிருந்து விலக்கி விட்டார்கள். இயற்கை என்பது சிறிதும் வளைந்து கொடுக்காத நியதிக்குக் கட்டுப்பட்டிருக்கிறது; நியதிகளாலேயே ஆளப்படு கிறது. மனம் இயற்கையைச் சேர்ந்தது என்று கூறினால் அதுவும் நியதிக்குக் கட்டுப்பட்டே ஆக வேண்டும். இப்படிக் கூறுவது சுதந்திர சங்கல்பம் என்னும் கோட்பாட்டைத் தகர்த்துவிடும். நியதிக்குக் கட்டுப்பட்டிருக்கும் ஒன்று எப்படிச் சுதந்திரமான தாக முடியும்?

இந்தியத் தத்துவ ஞானியர் இதற்கு மாறான நிலையை எடுத்துக் கொண்டார்கள். வெளிப்பட்ட மற்றும் வெளிப்படாத பௌதிக வாழ்வு அனைத்துமே நியதிக்குக் கட்டுப்பட்டது என்று அவர்கள் கூறுகிறார்கள். மனமும் புற இயற்கையும் நியதிக்கு கட்டுப்பட்டிருக்கிறது, அதிலும் ஒரே நியதிக்குக்கட்டுப் பட்டிருக்கிறது என்பதே அவர்கள் கூற்று. மனம் என்பது நியதிக்குக் கட்டுப்படாமல் இருக்குமானால், முந்தைய எண் ணங்களின் தொடர்ச்சியே நாம் இப்போது எண்ணும் எண்ணங் கள் என்பது இல்லையானால், ஒரு மனநிலை இன்னொன் றைத் தோற்றுவிக்காமல் இருக்குமானால் அது பகுத்தறிவுக்குப் பொருந்தவில்லை. சுதந்திர சங்கல்பம் என்றும்கூறி, அதே வேளையில் அது பகுத்தறிவுக்குப் பொருந்தாது என்றும் கூறி னால் எப்படிச் சரியாகும்? இன்னொரு விதமாகப் பார்த்தால் காரண காரிய விதியால் மனம் இயங்குகிறது என்றும், அதேவேளையில் சங்கல்பம் சுதந்திரமாக உள்ளது என்றும் கூற முடியுமா?

நியதியே காரணகாரியத்தின் செயல்பாடுதான். முன்பு நடந்த சில நிகழ்ச்சிகளைப் போலவே இப்போது சில நிகழ் கின்றன. நிகழும் ஒவ்வொன்றைப்போல் ஒன்று தொடரவும்

செய்கிறது. இயற்கையில் அனைத்தும் இவ்வாறே. மனத்தைப் பொறுத்த வரையிலும் இது உண்மையாக இருக்குமானால் மனமும் கட்டுப்பட்டதே. எனவே அது சுதந்திரமானதல்ல. சங்கல்பமும் சுதந்திரமானதல்ல. அது எப்படிச் சுதந்திரமான தாகும்? ஆனால் நாம் அனைவரும் சுதந்திரமாக இருப்பதாகவே உணர்கிறோம், அறிகிறோம். நாம் சுதந்திரமானவர்களாக இல்லையென்றால் வாழ்வு என்பதற்கே பொருளில்லாமல் போய் விடும். அத்தகைய வாழ்க்கை வாழத் தகுந்ததல்ல.

கீழை நாட்டுத் தத்துவவாதிகள் இந்தக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்கின்றனர். ஏற்றுக்கொள்கின்றனர் என்பதல்ல, கண்டுபிடித்தவர்களே அவர்கள்தாம். மனமும் சங்கல்பமும் காலம், இடம் மற்றும் காரணகாரிய விதிகளுக்கு உட்பட்டவை. எனவே அவையும் ஜடப்பொருளே. ஆதலால் அவை நியதிக்குக் கட்டுப்பட்டவை என்றார்கள் அவர்கள். காலத்திற்கு உட்பட்டே நாம் சிந்திக்கிறோம். நமது எண்ணங்கள் காலத்திற்குக் கட்டுப் பட்டவை. இருப்பவை அனைத்தும் காலம், இடம் என்ப வற்றிலேயே உள்ளன; அனைத்தும் காரண காரியவிதியால் கட்டுண்டிருக்கின்றன.

ஜடப்பொருள் என்றும் மனம் என்றும் நாம் கூறுபவற்றின் அடிப்படை ஒரே பொருள்தான்; இருக்கின்ற ஒரே வேறுபாடு அதிர்வின் அளவில்தான். மனத்தின் தாழ்நிலை அதிர்வுதான் ஜடப்பொருள்; ஜடப்பொருளின் உயர்நிலை அதிர்வே மனம். இரண்டின் அடிப்படையும் ஒரே பொருள்தான். காலம், இடம், காரண காரியம்—இவற்றால் ஜடப்பொருள் கட்டுண்டிருக் கிறது; ஜடப் பொருளின் உயர்நிலை அதிர்வான மனமும் அதே நியதிகளுக்குக் கட்டுப்பட்டே இருக்க வேண்டும்.

இயற்கை ஒரே ஒழுங்கமைப்பைக் கொண்டது; அதன் வெளிப்பாட்டிலேயே வேறுபாடுகள் காணப்படுகின்றன. இயற்கை என்பதன் சம்ஸ்கிருத வார்த்தை ப்ரக்ருதி. அதன் பொருள் வேற்றுமை என்பதாகும். அனைத்தும் ஒன்றே, அது பலவாக வெளிப்பட்டிருக்கிறது.

மனம் ஜடப் பொருளாகிறது, ஜடப்பொருள் மனமாகிறது. வேறுபாடுகள் எல்லாம் அதிர்விலேயே.

இரும்புக் கம்பி ஒன்றை எடுத்து, அது அதிரும் அளவுக்கு அதில் சக்தியைச் செலுத்துங்கள். என்ன நடக்கிறது? அது ஓர் இருட்டறையில் நடைபெறுவதாக இருந்தால் முதலில் நீங்கள் உணர்வது ஓர் ஒலி. சக்தியை அதிகப்படுத்துங்கள், கம்பி

ஒளிரத் தொடங்கும். இன்னும் அதிகப்படுத்துங்கள், கம்பியே மறைந்துவிடும்; அது மனமாகிவிட்டது.

இன்னோர் உதாரணத்தைப் பார்ப்போம். பத்துநாள் நான் எதுவும் சாப்பிடாமலிருந்தால் என்னால் சிந்திக்க முடியாது. ஏதோ துண்டுதுண்டான சில எண்ணங்கள் மட்டும் மனத்தில் இருக்கும். நான் மிகவும் பலவீனனாகி விடுவேன். என் பெயர்கூட ஒருவேளை மறந்துபோகலாம். சிறிது உணவை உட்கொண்ட பின்னர் சிந்திக்கத் தொடங்குகிறேன். மனத்தின் ஆற்றல் மீண்டும் வந்துவிட்டது. உணவு, மனமாகி விட்டது. அதுபோலவே மனத்தின் அதிர்வு குறைந்து, அது உடலாக வெளிப்படும்போது ஜடப்பொருளாகிறது.

முதலில் வந்தது ஜடப்பொருளா, மனமா என்பதை விளக்க நான் ஓர் உதாரணம் கூறுகிறேன். கோழி முட்டை இடுகிறது. முட்டை இன்னொரு கோழியை உருவாக்குகிறது. அந்தக் கோழியும் முட்டையிடுகிறது. அந்த முட்டை இன்னொரு கோழியை உருவாக்குகிறது. இந்தச் சங்கிலி முடிவில்லாமல் போகிறது. இப்போது எது முதலில் வந்தது? கோழியா, முட்டையா? ஒரு கோழியால் இடப்படாத முட்டையையோ, முட்டையில் இருந்து வராத கோழியையோ உங்களால் எண்ணிப் பார்க்கவே முடியாது. முதலில் எது வந்திருந்தாலும் அது பெரிய பிரச்சினை அல்ல. நமது கருத்துக்களும் இந்த முட்டை பிரச்சினை போலவே இருக்கிறது.

மிக உயர்ந்த உண்மைகள் மிக எளிமையானவையாக இருப்பதால் மறக்கப்பட்டு விட்டன. உயர்ந்த உண்மைகள் எப்போதும் எளிமையாகவே உள்ளன. அதனால் அவை உலகம் முழுவதும் செயல்படுத்தப் படுகின்றன. உண்மை என்பது எளிமையானது. சிக்கல் முழுவதும் மனிதனின் அறியாமை யால் விளைந்தது.

மனிதனின் சுதந்திரமானவன் என்று சொல்லும்போது, நாம் குறிப்பது மனத்தை அல்ல. ஏனெனில் அது கட்டுப் பட்டது. அதில் சுதந்திரம் இல்லை. மனிதன் என்பவன் மன மல்ல, அவன் ஆன்மா. ஆன்மா எப்போதும் சுதந்திரமானது, எல்லையற்றது, என்றும் உள்ளது. இங்கே, இந்த ஆன்மா விலேயே மனிதனின் சுதந்திரம் உள்ளது. ஆன்மா எப்போதும் சுதந்திரமாக இருக்கிறது. ஆனால் மனம் தன்னிலிருந்து தோன்றி மறையும் அலைகளுடன் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்கிறது. அதனால் ஆன்மா என்பதன் காட்சியையே பெறாமல் காலம்,

இடம், காரண காரியம் என்னும் மாயவலையில் சிக்கி, வழி தவறுகிறது. நமது பந்தத்திற்குக் காரணம் இதுவே. நாம் எப்போதும் நம்மை மனத்துடனும் அதன் மாற்றங்களுடனும் ஒன்றுபடுத்திக் கொள்கிறோம்.

மனிதனின் சுதந்திரம் ஆன்மாவிலேயே உள்ளது. மனம் தளையில் கட்டுண்டு இருப்பதையும் மீறி ஆன்மா தனது சுதந்திரத்தை உணர்ந்து, 'நான் சுதந்திரன், நான் எதுவோ அதுவே. நான் எதுவோ அதுவே' என்று வலியுறுத்திக் கொண்டே இருக்கிறது. இதுதான் நமது சுதந்திரம். எப்போதும் சுதந்திரமான, பந்தமற்ற, என்றென்றும் உள்ள ஆன்மா தனது கருவியான மனத்தின்மூலம், யுகயுகங்களாகத் தன்னை வெளிப்படுத்தி வருகிறது.

அப்படியானால் மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள தொடர்பு என்ன? மிகத் தாழ்ந்த உயிரினத்திலிருந்து மனிதன் வரை ஆன்மா தன்னைத்தானே இயற்கையின்மூலம் வெளிப் படுத்திக் கொண்டிருக்கிறது. ஆன்மாவின் மிகவுயர்ந்த வெளிப் பாடும் மிகத் தாழ்ந்த வெளிப்பாட்டு உயிரில் அடங்கியுள்ளது. அந்த மிகத் தாழ்ந்த உயிரினம் தன்னை மிக உயர்ந்த வெளிப் பாடாகச் செய்யும்முறையே பரிணாமம் எனப்படுகிறது.

ஆன்மா தன்னை வெளிப்படுத்துவதற்கான போராட் டமே பரிணாமம். அது இயற்கையை எதிர்த்து நடைபெறும் ஒரு தொடர்ந்த போராட்டம். அது இயற்கையை எதிர்க்கும் போராட்டம், இயற்கைக்கு இணங்கி நடப்பதல்ல. அதுவே உண்மை மனிதனை உருவாக்குகிறது. இயற்கையுடன் இயைந்து வாழ்வது, இயற்கையுடன் ஒன்றி வாழ்வது என்றெல்லாம் பலரும் பேசக் கேட்கிறோம். அது தவறு. இந்த மேஜை, இந்தப் பானை, இந்தப் பொருட்கள், இந்த மரம் அனைத்தும் இயற்கை யுடன் இயைந்தே உள்ளன. அவற்றில் பரிபூரண இயைபு நிலவுகிறது; சிறிதுகூட விலகல் இல்லை. இயற்கையுடன் இயைந்திருப்பது என்பது தேக்கம், மரணம். மனிதன் எப்படி இந்த வீட்டைக் கட்டுகிறான்? இயற்கையுடன் இயைந்தா? இல்லை. இயற்கையுடன் போராடியே கட்டுகிறான். இயற் கையை எதிர்த்துச் செய்கின்ற தொடர்ந்த போராட்டத் தினால்தான் மனித முன்னேற்றம் உண்டாகிறது; அதனுடன் இயைவதால் அல்ல. ❑

## 6. லட்சியம்

சான்பிரான்சிஸ்கோ, 27 மார்ச் 1900

தன்னைவிட உயர்ந்த ஏதோ ஒன்றால், தான் எப்போதும் சூழப்பட்டிருப்பதுபோல் மனிதன் உணர்வதைக் காண்கிறோம். இதன் பொருளை அறிய அவன் பலவகைகளில் முயல்கிறான். அவன் எப்போதும் மிக உயர்ந்த லட்சியத்தையே நாடுவான். அப்படி ஒரு லட்சியம் உள்ளது என்றும், அந்த மிகவுயர்ந்த லட்சியத்தை அடைவதற்கான முயற்சியே, ஒருதேடலே மதம் என்பது அவனுக்குத் தெரியும். ஆரம்பத்தில் இந்தத் தேடல் எல்லாம் புறவுலகில் நிகழ்ந்தது, சொர்க்கம், வேறு பல உயர்ந்த உலகங்கள்— இங்கெல்லாம் அவன் தேடினான். மனிதனின் மொத்த இயல்பைப்பற்றி அவன் உணர்ந்ததைப் பொறுத்து இந்தத் தேடல் இருந்தது.

நாளடைவில் மனிதன் தன்னைப்பற்றி ஆழ்ந்து ஆராயத் தொடங்கினான்; இந்த ஆராய்ச்சியின் பயனாக, 'உண்மைநான்' என்பது சாதாரணமாக நாம் நினைக்கின்ற 'நான்' அல்ல; புலன்களுக்குத் தென்படுகின்ற நான், உண்மைநான் அல்ல என்பதை அறிந்துகொண்டான். உடனே தனக்குள்ளேயே தேடத் தொடங்கினான்; இதன் பயனாக, தான் வெளியே தேடிய லட்சியம் தனக்கு உள்ளேயே எப்போதும் இருந்து வருகிறது என்பதைக் கண்டான். தனக்கு வெளியே அவன் இத்தனை நாளாக எதை வழிபட்டு வந்தானோ, அதுவே அவனது உண்மையான உள்இயல்பு என்பதை அறிந்தான். துவைதம், அத்வைதம் இரண்டிற்கும் உள்ள வேற்றுமை இதுதான்: லட்சியத்தைத் தனக்கு வெளியே காண்பது துவைதம்; இறைவனைத் தனக்குள்ளேயே தேடுவது அத்வைதம்.

'ஏன்? எதனால்?' என்னும் அதே பழைய கேள்வி இப்போது எழுகிறது: மனிதன் எல்லைக்கு உட்பட்டது எப்படி? எல்லையற்ற ஒன்று எல்லைக்கு உட்பட்டது எப்படி? கலப்பற்ற தூய்மையான ஒன்று, தூய்மையை இழந்தது எதனால்? இந்தக் கேள்விக்கு, எந்த துவைதக் கொள்கையின் அடிப்படையிலும்

பதில் சொல்லவே முடியாது என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும்.

இறைவன் தூய்மையற்ற உலகை ஏன் படைத்தார்? குறை வற்ற, எல்லையற்ற, கருணைமிக்கத் தந்தையான இறைவனால் படைக்கப்பட்ட மனிதன், ஏன் இவ்வளவு துன்பமும் துயரமும் மிக்கவனாக இருக்க வேண்டும்? எதன் காரணமாக நம்மிடம் நியதி என்ற கருத்து ஏற்படுகிறதோ, அந்தச் சொர்க்கமும் பூமியும் எதற்கு? காணாத ஒன்றைக் கற்பனை செய்ய யாராலும் முடியாது. இந்த வாழ்வில் நாம் அனுபவிக்கின்ற சித்திரவதை களை எல்லாம் திரட்டி ஓர் இடத்தில் வைத்து, அதை நரகம் என்கிறோம்.

எல்லையற்ற இறைவன் இந்த உலகை ஏன் படைத்தார்? 'குயவன் பானை செய்வதுபோல்' என்கிறான் துவைதி. இறைவனே குயவன், நாம் பானைகள். இதையே தத்துவ மொழியில் சொன்னால் கேள்வி இதுதான்: மனிதனது இயல்பு தூய்மையானது, பூரணமானது, எல்லையற்றது என்பதை நாம் எப்படி முடிவு செய்ய முடியும்? எந்த அத்வைத நெறியிலும் காணப்படுகின்ற பிரச்சினை இது ஒன்றுதான். மற்றவை எல்லாம் குறையின்றி, தெளிவாகவே உள்ளன. இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு இல்லை. இந்தக் கேள்வியே முன்னுக்குப்பின் முரணானது என்று அத்வைதிகள் கூறுகின்றனர்.

துவைத நெறியைப் பார்ப்போம். இறைவன் ஏன் உலகைப் படைத்தார், என்று கேட்கப் படுகிறது. இது முரணானது. ஏன்? ஏனெனில் இறைவன் என்ற கருத்தின் பொருள் என்ன? புறப் பொருள் எதனாலும் பாதிக்கப்படாதவர் என்பதுதான்.

நீங்களும் நானும் சுதந்திரர்கள் அல்ல. எனக்குத் தாகம் எடுக்கிறது. தாகம் என்ற ஒன்று இருக்கிறது. அதை என்னால் அடக்கியாள முடியாது. ஆனால் தாகம் என்னைத் தண்ணீர் குடிக்கும்படிக் கட்டாயப்படுத்துகிறது. இவ்வாறே என் உடம்பின் ஒவ்வொரு செயலும் என் மனத்தின் ஒவ்வோர் எண்ணமும் என்னிடம் கட்டாயத்தின் பேரில் நடைபெறு கின்றன. நான் செய்தேயாக வேண்டும்; அதனால்தான் நான் கட்டுப்பட்டவனாக உள்ளேன். இதை நான் செய்ய வேண்டும், அதை நான் ஏற்றுக்கொள்ள வேண்டும். இப்படி எல்லாமே கட்டாயம்தான். ஏன், எப்படி என்பவற்றின் பொருள் என்ன? புறச் சக்திகளுக்கு உட்பட்டிருப்பதுதான். நாம் ஏன் தண்ணீர் குடிக்கிறோம்? தாகம் கட்டாயப்படுத்துவதால்தான். நாம்

அடிமைகள்; நாம் எதையும் நமது விருப்பப்படிச் செய்வதில்லை; ஒவ்வொன்றையும் செய்யுமாறு நாம் வற்புறுத்தப்படுகிறோம். நாம் செயல் புரிவதற்குக் காரணம் ஏதோ ஒரு வலுக்கட்டாயச் சக்தியே ஆகும்.

ஏதோ இயக்காவிட்டால் பூமி தானாகவே சுற்றாது. விளக்கு ஏன் எரிகிறது? யாராவது ஒரு தீக்குச்சியை உரசிப் பொருத்தாவிட்டால், விளக்கு எரியாது. இயற்கையில் உள்ள ஒவ்வொன்றும் கட்டுப்பட்டதே. எங்கும் அடிமைத்தனம், அடிமைத்தனம்! இயற்கையுடன் இயைந்து செல்வதே அடிமைத்தனம்தான். இயற்கைக்கு அடிமையாகப் பொற் கூண்டில் வாழ்வதில் என்ன பெருமை இருக்கிறது? மனிதன் இயல்பிலேயே சுதந்திரமானவன், தெய்வீகமானவன் என்ற அறிவில்தான் மிகப் பெரிய சட்டமும் ஒழுங்கும் அடங்கியிருக் கின்றன. 'ஏன்? எப்படி?' என்ற கேள்விகளை அறியாமை நிலையில்தான் கேட்க முடியும் என்பது இப்போது விளங்குகிறது. ஒன்றைச் செய்யுமாறு என்னை வற்புறுத்த, இன்னொன்றால்தான் முடியும். கடவுள் சுதந்திரமானவர் என்று சொல்கிறீர்கள். அடுத்ததாகவே, 'கடவுள் உலகை ஏன் படைத்தார்?' என்றும் கேட்கிறீர்கள். நீங்கள் சொன்னதை நீங்களே மறுக்கிறீர்கள். இறைவன் என்பது முற்றிலும் சுதந்திர மான சித்தம். உங்கள் கேள்வியை தர்க்கரீதியாக அமைத்தால் இறைவனைப் படைக்கும்படிக் கட்டாயப் படுத்தியது எது?' என்று அமையும். அவரைக் கட்டாயப்படுத்தும் சக்தி வேறு எதுவும் இல்லையே! இப்படிச் சொல்கிற நீங்களே, 'அவரைக் கட்டாயப்படுத்தியது எது?' என்றும் கேட்கிறீர்கள். இந்தக் கேள்வி பொருளற்றது. இயல்பாகவே இறைவன் எல்லை யில்லாதவர். அவர் சுதந்திரர். தர்க்கரீதியாக உங்கள் கேள்விகள் அமைந்தால்தான் நாங்கள் பதில் சொல்வோம். இருக்கின்ற உண்மை ஒன்றே ஒன்றுதான், வேறு இல்லை என்று பகுத்தறிவு சொல்கிறது. துவைதம் எங்கெல்லாம் தலைதூக்கியதோ அங்கெல்லாம் அத்வைதம் தோன்றி அதைத் துரத்திவிட்டது.

இதைப் புரிந்துகொள்வதில் ஒரு சிரமம் இருக்கிறது. மதம் என்பது சாதாரண அறிவிற்கு உட்பட்ட ஓர் அன்றாட விஷயம். மனிதன் அதைப் புரிந்துகொள்ள வேண்டுமானால், அவனுக்குப் புரிகின்ற மொழியில் அதைச் சொல்ல வேண்டும்; தத்துவ மொழியில் சொல்லக் கூடாது. தன்னை மற்றொன்றி னுள் ஏற்றிக் காண்பதே மனித இயற்கை. குழந்தையுடன்

நீங்கள் பழகுவதைக் கவனியுங்கள். அப்போது நீங்கள் உங்களைக் குழந்தைகளாகவே காண்கிறீர்கள். உங்களுக்கு அப்போது இரண்டு உடல்கள் ஏற்பட்டு விடுகின்றன. இப்படியே உங்கள் கணவரின் மனத்தின்மூலம் நீங்கள் உணரலாம். இதற்கு முடிவு எங்கே? எல்லையற்ற உடம்புகளின் மூலம் நீங்கள் உணர முடியும்.

ஒவ்வொரு நாளும் மனிதன் இயற்கையை வென்று கொண்டே இருக்கிறான். ஓர் இனமாக, அவன் தன் சக்தியை வெளிப்படுத்துகிறான். மனிதனின் இந்தச் சக்திக்கு ஓர் எல்லை வகுப்பதாகக் கற்பனை செய்து பாருங்கள். ஓர் இனம் என்ற நிலையில் மனிதனுக்கு எல்லையற்ற சக்தி இருக்கிறது; எல்லையற்ற உடல் இருக்கிறது. நீ யார் என்பதுதான் கேள்வி. 'நீ' என்பது ஓர் இனமா? அல்லது ஒரு தனி மனிதனா? உங்களைத் தனிமைப்படுத்திக் கொள்கின்ற அந்தக் கணமே ஒவ்வொரு பொருளும் உங்களுக்குத் தீங்கு செய்ய முற்படுகிறது. நீங்கள் விரிந்து மற்றவர்களுக்காக உணர்ச்சிகொள்கின்ற அந்தக் கணமே நீங்கள் உதவி பெறுகிறீர்கள். சுயநலம் படைத்தவனே உலகில் மிகவும் துன்பப்படுபவன்; சுயநலம் இல்லாதவனே மிக மேலான மகிழ்ச்சியில் திளைப்பவன். அவன் எல்லா படைப்பாகவும் எல்லா மனித இனமாகவும் ஆகிவிடுகிறான். இறைவன் அவனுள் இருக்கிறார். கிறிஸ்தவ மதம், இந்து மதம் என்று எல்லா துவைத மதங்களிலும் நீதி நெறியின் அடிப்படையாக விளங்குவது இதுதான்: 'சுய நலவாதியாக இருக்காதே, சுயநலமற்றவனாக இரு. மற்றவர் களுக்கு உதவி செய். விரிவடை.

சாதாரண மனிதர்கள் இதை எளிதில் புரிந்துகொள்ளும் படிச் செய்யலாம்; அறிவாளிகள் இன்னும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு செய்யலாம். ஆனால் அறிவு சிறிதுள்ளவனை இறைவனால்கூடப் புரியவைக்க முடியாது. உயிர் உடலின் பகுதிகளிலிருந்து வேறாகாததுபோல், நாம் இந்தப் பிரபஞ்சத்திலிருந்து வேறுபட்டவர்கள் அல்ல என்பதே உண்மை. அப்படி இல்லையானால் நாம் எதையும் பார்க்க முடியாது. நம்மால் எதையும் உணர இயலாது. ஜடப்பொருள் கடலிலுள்ள வெறும் சிறிய நீர்ச் சுழல்களே நம் உடல்கள். வாழ்க்கை, திருப்பங்களுக்கு வந்து வேறு உருவத்தை எடுத்த படி முன்னேறிக்கொண்டே இருக்கிறது. சூரியன், சந்திரன், விண்மீன்கள், நீங்கள், நான் எல்லாமே வெறும் நீர்ச்சுழல்களே.

ஒரு குறிப்பிட்ட மனத்தை என்னுடையதாக நான் ஏன் தேர்ந் தெடுக்க வேண்டும்? மனம் என்ற பெருங்கடலில் அது ஒரு சிறிய சுழல் மட்டுமே அல்லவா!

இப்படி இல்லாவிட்டால் எனது எண்ணங்கள் உங்கள் மனத்தை இப்போது அடைய இயலுமா? குளத்தில் ஒரு கல்லைப் போட்டால், அது ஓர் அதிர்வை உண்டாக்குகிறது. அந்த அதிர்வு, நீரை அசையச் செய்கிறது. நான் என் மனத்தை இன்பம் நிறைந்ததாக்கிக் கொள்கிறேன்; உங்கள் மனத்திலும் இன்பம் உண்டாக இது தூண்டுகோல் ஆகிறது. புறப் பரி மாற்றம் எதுவும் இல்லாமலே, நமது எண்ணங்களைப் பிறர் புரிந்து கொள்வதை எவ்வளவோ கண்டிருக்கிறோமே, அது எப்படி? எங்கும் நாம் எல்லோரும் ஒன்றுதான். இதைத்தான் நாம் புரிந்துகொள்வதும் இல்லை. பிரபஞ்சம் முழுவதுமே காலம், இடம், காரணகாரியம் இவற்றால் ஆனதுதான். கடவுளே உலகமாகத் தோன்றுகிறார். இயற்கை தொடங்கியது எப்போது? நாம் எப்போது நம் உண்மை இயல்பை மறந்து காலம், இடம், காரண காரியங்களுக்குக் கட்டுப்பட்டோமோ, அப்போதுதான்.

நமது உடல்கள் சுழல்கின்ற சுழற்சி இது. ஆனால் இதுவே நம் எல்லையற்ற இயல்பும்கூட. காலம், இடம், காரணகாரியம் இவையே இயற்கை. இது உறுதி. இயற்கை என்பதன் பொருள் இதுவே. நாம் சிந்திக்கத் தொடங்கிய போது காலம் தொடங்கியது. நமக்கு உடல் கிடைத்தபோது இடம் தொடங்கியது. உடல் இல்லை என்றால் இடமும் இல்லை. நாம் எல்லைக்கு உட்பட்ட போது காரணகாரியங்கள் தோன்றின. ஏதாவது ஒரு விடை கிடைத்தேயாக வேண்டும். இதுதான் விடை: நாம் எல்லைக்கு உட்பட்டிருப்பது ஒரு விளையாட்டு, வெறும் விளையாட்டு, அவ்வளவுதான். நம்மை எதுவும் கட்டுப்படுத்தவில்லை; எதுவும் கட்டாயப்படுத்த வில்லை. நாம் என்றும் கட்டுப்படவே இல்லை. நாமே தோற்று வித்த இந்த விளையாட்டில், எல்லோரும் நம் பாகத்தை நடிக்கிறோம்.

தனித்துவம் பற்றிய இன்னொரு கேள்வியை இப்போது பார்ப்போம். தங்கள் தனித்துவத்தை இழக்கச் சிலர் மிகவும் பயப்படுகின்றனர். ஒரு பன்றி இறைவனாக முடியுமானால், பன்றி என்ற தனித்துவத்தை இழப்பது அதற்கு நல்லதுதானே? நல்லதுதான். ஆனால் பாவம்! அந்தப் பன்றிக்கு அப்போது இது தோன்றுவதில்லை. எனது தனித்துவம் என்பது எந்த

நிலை? நான் சிறு குழந்தையாக, விரலைச் சப்பியபடி தரையில் உருண்டு கொண்டிருந்தேனே அதுவா? இந்த நிலையை இழக்க நான் கவலைப்பட வேண்டுமா? நமது குழந்தை நிலையை எண்ணி இப்போது நாம் சிரிப்பதுபோல், இன்னும் ஐம்பது ஆண்டுகளுக்குப்பின் இப்போதைய நிலையையும் எண்ணிச் சிரிப்போம். எனவே இவற்றுள் எந்தத் தனித்துவத்தை வைத்துக்கொள்வது?

இந்தத் தனித்துவம் என்பது என்ன என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இரண்டு முரணான போக்குகள் இருக்கின்றன: ஒன்று, தனித்துவத்தைக் காக்க வேண்டும் என்பது; மற்றது, தனித்துவத்தை இழந்துவிட வேண்டும் என்ற பேரார்வம். குழந்தையின் தேவைகளை நிறைவேற்று வதற்காகத் தாய் தன் சுகம் அனைத்தையும் தியாகம் செய்கிறாள். அவள் கைகளில் குழந்தை இருக்கும்வரை அவளது தனித்துவம், தன்னைக் காத்துக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம், எல்லாம் எங்கோ மறைந்துவிடுகின்றன. அவள் மோசமான உணவை உண்டு, குழந்தைக்குச் சிறந்த உணவைத் தருகிறாள். இப்படியே நாம் யாரிடம் அன்பு வைக்கிறோமோ, அவர் களுக்காக உயிரை இழக்கவும் நாம் ஆயத்தமாக இருக்கிறோம்.

ஒரு பக்கம் நாம் இந்தத் தனித்துவத்தைக் காக்கத் தீவிரமாகப் போராடிக் கொண்டிருக்கிறோம்; மற்றொரு பக்கம் இதைக் கொல்லப் போராடுகிறோம். பலன் என்ன? தீவிரமாக முயற்சி செய்யலாம்; தனித்துவத்திற்காகப் போராடலாம்; ஆனால் மரணம் வருகிறது. அதன்பின் நமது சுவடுகூட எஞ்சு வதில்லை. ஆயிரத்துத் தொள்ளாயிரம் ஆண்டுகளுக்கு முன் ஒரு யூதர் பிறந்தார்; அவர் தமது தனித்துவத்தைக் காக்க ஒரு சிறு முயற்சிகூடச் செய்யவில்லை. அதை எண்ணிப் பாருங்கள்! அந்த யூதர் தமது தனித்துவத்தைக் காக்கச் சிறிதும் போராடவே இல்லை. உலகிலேயே மிகப் பெரியவராக அவர் இன்றும் போற்றப்படுவதற்கு இதுவே காரணம். இதுதான் உலகத்திற்குத் தெரிவதும் இல்லை.

காலத்தில் நாம் தனித்துவம் பெற்றவர்களாகத்தான் இருக்க வேண்டும். ஆனால் என்ன பொருளில்? மனிதனது தனித்துவம் என்பது என்ன? நாமரூபம் அல்ல; அவனுள் உள்ள இறைவனே அவனது தனித்தன்மை. இதுவே உண்மையான தனித்துவம். அந்தத் தனித்துவத்தை நெருங்கும் அளவிற்கு, மனிதன் தனது பொய்யான தனித்துவத்தை விட்டு விலகுகிறான். அதிகமாகத்

தனக்குச் சேர்த்துக் கொள்ளும் அளவிற்கு, எல்லாவற்றையும் அடைய முயலும் அளவிற்கு, ஒருவன் தனித்துவம் பெற்றவனாக இருக்கும் வாய்ப்பு குறைகிறது. தன்னைப்பற்றிக் குறைவாக நினைக்கும் அளவிற்கு ஒருவன் தன் வாழ்நாளிலேயே தனித்துவத்தைத் தியாகம் செய்தவன் ஆகிறான். அந்த அளவிற்கு அவனது தனித்துவமும் மேலானதாகிறது. இந்த ரகசியமும் மனிதர்களுக்குப் புரிவதில்லை.

தனித்துவம் என்பது என்ன என்பதை முதலில் அறிந்து கொள்ள வேண்டும்; லட்சியத்தை அடைவதுதான் அது. இப்போது நீங்கள் ஓர் ஆண் அல்லது பெண். நீங்கள் தொடர்ந்து மாறிக்கொண்டே இருப்பீர்கள். இதைத் தடுக்க உங்களால் முடியுமா? இப்போது உள்ளபடியேதான் உங்கள் மனத்தை வைத்துக்கொள்ள விரும்புகிறீர்களா? கோபங்கள், வெறுப்புகள், பொறாமைகள், சண்டைகள் என்று ஆயிரமாயிரம் தீமைகளும் மனத்தில் இருக்கத்தான் வேண்டுமா? அதை வைத்துக்கொள்ளத் தான் போகிறீர்களா? உங்களுக்கு முழு வெற்றி கிடைக்கும் வரையில், தூயவராக, பரிபூரணமாக மாறும் வரையில் நீங்கள் நிற்கவே இயலாது.

அன்பு, ஆனந்தம், எல்லையற்ற தன்மை இவற்றின் உருவாக நீங்கள் இருக்கும்போது கோபத்திற்கு இடம் ஏது? உங்கள் உடல்களுள் எந்த உடலை வைத்துக்கொள்ள விரும்புகிறீர்கள்? முடிவற்ற வாழ்க்கையை அடையும்வரையில் உங்களால் எங்கும் நிற்கவே இயலாது. அந்த இடம் வந்தவுடன் நின்று விடுவீர்கள். இப்போது நம்மிடம் குறைவான அறிவே இருக்கிறது; பேரறிவு பெற நாம் முயன்றுகொண்டே இருக் கிறோம். இந்த முயற்சி எங்கே நிற்கும்? நாம் வாழ்வுடன் ஒன்றாகும்வரையில் எங்குமே நிற்கமாட்டோம்.

பலருக்கு இன்பமே லட்சியமாக இருக்கிறது. அந்த இன்பத் திற்காக அவர்கள் புலன்களை மட்டுமே நாடுகிறார்கள். உயர்ந்த நிலைகளில் இன்னும் நிறைய இன்பம் கிடைக்கும்; இதற்கும் மேற்பட்டது ஆன்மீக நிலை. பிறகு, தனக்குள்ளேயே அதாவது தனக்குள் இருக்கும் இறைவனைக் காண்பதில் இன்னும் மேலான இன்பம் கிடைக்கிறது. தனக்கு வெளியே இன்பம் தேடுபவன் அந்தப் புறப்பொருள் மறைந்ததும் துன்பத்திற்கு ஆளாகிறான். இந்த உலகத்தில் உள்ள எந்தப் பொருளிடமும் நாம் இன்பத்தை எதிர்பார்க்க முடியாது. எனது இன்பங்கள் எல்லாம் எனக் குள்ளேயே இருக்குமானால், அவை என்றுமே நிலைக்கும்;

ஏனெனில் என்னையே நான் இழக்க இயலாது அல்லவா? தாய், தந்தை, மக்கள், மனைவி, உடம்பு, செல்வம் எல்லாம் என்னை விட்டுப் போய்விடும்; ஆனால் நான் என்னைவிட்டுப் போக முடியாது. ஆன்ம இன்பமே ஆனந்தம்! எல்லா ஆசைகளும் ஆன்மாவில் நிறைகின்றன! இதுதான் என்றும் மாறாத தனித்துவம். இதுவே பூரணமானது.

இந்த நிலையை அடைவது எப்படி? ஆண் பெண் என்று உலக மகாத்மாக்கள் அனைவரும், தொடர்ந்த விவேகப் பயிற்சியால் கண்டுபிடித்ததை எல்லோரும் கண்டுபிடிக்க முடியும். இருபதோ முப்பதோ தெய்வங்களைப்பற்றிக் கூறும் துவைதக் கொள்கைகளின் நிலை என்ன? அதைப் பொருட்படுத்த வேண்டாம். இந்தத் தவறான தனித்துவம் போக வேண்டும் என்ற உண்மையை அவர்கள் எல்லோரும் ஒப்புக் கொண்டார்கள்; நான் என்ற எண்ணம் எவ்வளவு குறைவாக இருக்குமோ அந்த அளவு நாம் நம் உண்மைநிலையின் அருகில், பிரபஞ்ச உடலின் அருகில் இருப்போம். நம் தனி மனத்தைப் பற்றி எண்ணுவது குறையும் அளவிற்கு, பிரபஞ்ச மனத்தின் அருகில் இருப்போம். நமது தனி ஆன்மாவைப்பற்றி நினைப்பது குறையும் அளவிற்கு பிரபஞ்ச ஆன்மாவின் அருகில் இருப்போம்.

நாம் ஓர் உடலுள் வாழ்கிறோம். சிறிது இன்பத்தையும் சிறிது துன்பத்தையும் அனுபவிக்கிறோம். இந்த உடம்பு காரணமாக நமக்குக் கிடைக்கும் சிறிய இன்பத்திற்காக, நம்மைக் காத்துக் கொள்வதற்காக, உலகிலுள்ள எல்லாவற்றையுமே அழிக்கத் தயாராக இருக்கிறோம். நமக்கு இரண்டு உடல்கள் இருந்தால், அது சிறப்பாக இருக்காதா? இப்படியே ஆனந்தத்தை நோக்கி நாம் முன்னேறுகிறோம். எல்லா உடல்களிலும் நான் இருக்கிறேன். எல்லா கைகளாலும் வேலை செய்கிறேன்; எல்லா கால்களாலும் நடக்கிறேன்; ஒவ்வொரு வாயின்மூலமும் பேசுகிறேன்; ஒவ்வோர் உடலிலும் வசிக்கிறேன். என் உடலுக்கும் கணக்கில்லை; மனத்திற்கும் கணக்கில்லை. நாசரேத்தில் பிறந்த ஏசுவின் உடலிலும், முகமதுவின் உடலிலும், மற்ற பழங்கால மகான்களின் உடலிலும், இக்கால மகான்கள் உடலிலும் நான் வாழ்ந்தேன். இனி தோன்றப்போகும் எல்லா மகான்களின் உடலிலும் நான் வாழப் போகிறேன். இவை வெறும் கொள்கைகளா? இல்லை, இது உண்மை. இது அனுபவத்திற்கு வருமானால் நமக்கு எவ்வளவு இன்பம்

கிடைக்கும்! ஓ அந்த ஆனந்தப் பரவசம்! எந்த உடல் நாம் அதை விரும்பும் அளவிற்கு மிகச் சிறந்தது? மற்றவர்களின் உடல்களில் எல்லாம் வசித்த பிறகு, மற்றவர்களின் உடலில் வாழ்ந்து நுகர வேண்டுவதை எல்லாம் நுகர்ந்த பிறகு, நமக்கு என்ன நேர்கிறது? நாம் எல்லையற்றதுடன் இரண்டறக் கலந்துவிடுகிறோம்; அதுதான் லட்சியம், இது ஒன்றேதான் வழி. 'உண்மையை உணர்ந்தால் நான் வெண்ணெய்போல் உருகிவிடுவேன்' என்கிறான் ஒருவன். 'எல்லோரும் அப்படி உருக மாட்டார்களா?' என்றுதான் நான் விரும்புகிறேன். ஆனால் அவ்வளவு விரைவில் உருக இயலாதபடி மிகக் கடினமாக இருக்கிறார்களே!

சுதந்திரம் அடைய நாம் என்ன செய்ய வேண்டும்? நாம் ஏற்கனவே சுதந்திரர்களாகத்தான் இருக்கிறோம். சுதந்திரமானவர்கள் எப்படிக் கட்டுப்பட முடியும்? கட்டுப்பட்டதாகச் சொல்வது பொய். நாம் ஒருபோதும் கட்டுப்படவே இல்லை. எல்லையற்ற ஒன்றை எது எல்லைக்கு உட்படுத்த முடியும்? எல்லையற்ற ஒன்றை எல்லையற்ற ஒன்றால் வகுத்தாலும் பெருக்கினாலும் கூட்டினாலும் அது எல்லையற்றதாகவே இருக்கும். நாம் எல்லையற்றவர்கள்; இறைவனும் எல்லையற்றவர்; நாம் எல்லோருமே எல்லையற்றவர்கள். இப்படி இரண்டு இருக்க இயலாது. இருப்பது ஒன்றே. எல்லையற்ற ஒன்றை எல்லைக்கு உட்படுத்த முடியாது. நாம் என்றுமே கட்டுப்படவில்லை. இதுதான் உண்மை. நாம் ஏற்கனவே சுதந்திரர்களாகத்தான் இருக்கிறோம். அடைய வேண்டிய லட்சியம் எதுவோ, அதை நாம் அடைந்துவிட்டோம். லட்சியத்தை அடையவில்லை என்று நினைக்க மனத்தை ஒருபோதும் அனுமதிக்காதீர்கள்.

நாம் என்ன நினைக்கிறோமோ அதுவாக ஆகிறோம். நாம் பாவிகள், இரங்கத் தக்கவர்கள், என்று நினைத்தால் அப்படியே ஆகுமாறு நம்மை நாமே மனவசியம் செய்துகொள்கிறோம். 'நான் துன்பத்தில் உழலும் சிறு புழு' என்று எண்ணிக்கொண்டேயிருந்தால் அப்படியே ஆகிவிடுவோம். நரகத்தை நம்புபவர்கள் இறந்தபின் நரகத்திற்குப் போகிறார்கள். சொர்க்கத்திற்குப் போவதாகச் சொல்பவர்கள் சொர்க்கத்திற்குச் செல்வார்கள்.

எல்லாம் ஒரு விளையாட்டே. 'நாம் எதையாவது செய்தேயாக வேண்டும்; எனவே நன்மை செய்வோம்' என்று

நாம் சொல்லலாம். ஆனால் நல்லதைப் பற்றியோ கெட்டதைப் பற்றியோ யாருக்குக் கவலை? விளையாட்டு! கடவுள் திருவிளை யாடல் புரிகிறார், அவ்வளவுதான். திருவிளையாடல் புரியும் எல்லாம்வல்ல இறைவன் நாமே. இந்த நாடகத்தில் நடிக்க எண்ணி, பிச்சைக்காரர் வேடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால், அதற்காக வேறு யார்மீதும் பழிபோடக் கூடாது. பிச்சைக்காரனாக இருப்பதில் நாம் இன்பம் காண்கிறோம். நமது உண்மை இயல்பு தெய்வீகம் என்பது நமக்குத் தெரியும். நாம் அரசர்கள்; ஆண்டியாக நடிக்கிறோம். எல்லாம் விளையாட்டு, இதை அறிந்துகொண்டு நடிப்போம், எல்லாம் இவ்வளவுதான். பின்னர் பயிற்சி செய்ய வேண்டும். பிரபஞ்சமே பெரிய நாடகம். எல்லாம் விளையாட்டு, ஆகை யால் எல்லாம் நல்லனவே. ஒரு நட்சத்திரம் வந்து நம் பூமியுடன் மோதி நம்மையெல்லாம் கொன்றுவிடுகிறது. அதுவும் விளையாட்டுதான். ஆனால் புலன்களுக்கு இன்பம் தருகின்ற சிறிய செயல்களையே நாம் விளையாட்டு என்று கருதுகிறோம்.

இங்கே ஒரு நல்ல தெய்வமும் அங்கே ஒரு கெட்ட தெய்வமும் இருந்துகொண்டு, நம்மைக் கவனித்து, தவறு செய்தவுடன் நம்மைக் கைப்பிடியாகப் பிடித்துக் கொள்வார் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். இறைவன் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருக்கிறார் என்று, நான் குழந்தையாக இருக்கும்போது யாரோ சொன்னார்கள். நான் படுக்கையில் சென்று படுத்துக்கொண்டு மேற்கூரையைப் பார்த்தேன்; இதோ திறக்கப் போகிறது என்று எதிர்பார்த்தேன். ஆனால் ஒன்றும் நடைபெறவில்லை. நம்மைத் தவிர யாருமே நம்மைக் கவனிக்கவில்லை. நம் ஆன்மாவைத் தவிர எந்த இறைவனும் இல்லை. நாம் உணர்வதைத் தவிர இயற்கையும் வேறொன்றும் இல்லை. பழக்கம் என்பது இரண்டாவது இயல்பு மட்டும் அல்ல; முதல் இயல்பும் அதுவே. இதுதான் இயற்கையைப் பற்றிய முடிவு. ஏதாவது ஒன்றை இரண்டு மூன்று முறை செய்தால் அது நம் இயல்பாகிவிடும். துக்கப்பட வேண்டாம்; பச்சாத்தாபப் படவும் வேண்டாம். செய்தது செய்ததுதான். நீங்கள் நெருப்பில் சுட்டுக்கொண்டால் அதன் பலனை அனுபவியுங்கள்.

விவேகிகளாக இருங்கள். நாம் தவறு செய்கிறோம். அதனால் என்ன முழுகிப் போய்விட்டது? எல்லாம் வேடிக்கை, எல்லாம் விளையாட்டு. செய்த பாவங்களை எண்ணிச்

சிலருக்குப் பைத்தியமே பிடித்துவிடுகிறது. அவர்கள் அழுது புலம்புகிறார்கள்; கதறுகிறார்கள். பச்சாதாபம் வேண்டாம். ஒன்றைச் செய்தால் பிறகு அதைப்பற்றி நினைக்காதீர்கள். முன்னேறிய வண்ணமே இருங்கள். நிற்காதீர்கள். திரும்பிப் பார்க்காதீர்கள். திரும்பிப் பார்ப்பதால் என்ன லாபம்? லாபமும் இல்லை; நஷ்டமும் இல்லை. நாம் வெண்ணெய்போல் உருகிவிடப் போவதில்லை. சொர்க்கமாவது நரகமாவது பிறவியாவது! எல்லாம் பொருளற்ற பிதற்றல்!

பிறப்பவர் யார்? இறப்பவர் யார்? நீங்களே உங்களுடனும் பிறவற்றுடனும் விளையாடிக்கொண்டு வேடிக்கை காட்டுகிறீர்கள், அவ்வளவுதான். எத்தனை நாள்வரை விரும்புகிறீர்களோ, அத்தனை நாள் இந்த உடம்பை வைத்துக்கொள்கிறீர்கள். இதை வைத்துக்கொள்ள வேண்டாம். எல்லையற்றதுதான் உண்மை; எல்லையுள்ளது வெறும் விளையாட்டு, நாடகம். எல்லையற்ற உடலும் நீங்களே; எல்லையுள்ள உடலும் நீங்களே. இதை அறிந்துகொள்ளுங்கள். ஞானம் ஏற்பட்டாலும் மாறுதல் எதுவும் ஏற்பட்டுவிடாது; விளையாட்டு நடைபெற்றுக் கொண்டுதான் இருக்கும். உடல், ஆன்மா என்ற இரண்டு சொற்கள் இணைக்கப்பட்டுள்ளன. அறிவுக் குறைவுதான் இதற்குக் காரணம். நீங்கள் எப்போதும் சுதந்திரர்களே என்பதை அறிந்துகொள்ளுங்கள். ஞானத்தீ மாசுகளையும் கட்டுப்பாடுகளையும் எரித்துவிடுகிறது. நாமே அந்த எல்லையற்ற பொருள்.

ஆரம்பத்தில் இருந்ததுபோல் நீங்கள் இன்றும் சுதந்திரர்களாக இருக்கிறீர்கள், என்றும் இருப்பீர்கள். தன்னைச் சுதந்திரன் என்று உணர்பவன் சுதந்திரனே; கட்டுப்பட்டவனாக உணர்பவன் கட்டுப்பட்டவனாகவே இருக்கிறான்.

இறைவனும் வழிபாடும் என்ன ஆவது? அவற்றிற்கும் இடம் இருக்கிறது. இறைவன், நான் என்று என்னை நானே இரண்டாகப் பகுத்துக்கொண்டிருக்கிறேன். நானே வழிபடப்படுபவர் ஆனேன்; என்னையே நான் வழிபட்டேன். ஏன் இப்படி இருக்கக் கூடாது? நானே இறைவன். என் ஆன்மாவை நான் ஏன் வழிபடக் கூடாது? உலகம் தழுவிய கடவுளும் நான்தான், என் ஆன்மாதான். எல்லாம் விளையாட்டு. அதற்கு வேறு எந்த நோக்கமும் இல்லை.

வாழ்க்கையின் முடிவு என்ன? லட்சியம் என்ன? ஒன்றுமே இல்லை. நான் எல்லையற்றவன் என்பதுதான் எனக்குத் தெரியுமே! நாம் பிச்சைக்காரர்களாக இருந்தால், நமக்கு

லட்சியம் ஒன்று இருக்கும். எனக்கு லட்சியம் இல்லை, தேவை இல்லை; நோக்கமும் எதுவும் இல்லை. நான் உங்கள் நாட்டிற்கு வந்து சொற்பொழிவாற்றுகிறேன், இதுவும் விளையாட்டுதான். இதற்கு வேறு பொருள் எதுவும் இல்லை. என்ன பொருள் இருக்க முடியும்? அடிமைகள்தான் பிறருக்காக வேலை செய் வார்கள். நாம் வேறு யாருக்காகவோ வேலை செய்வதில்லை. உங்களுக்கு விருப்பம் ஏற்படும்போது நீங்கள் வழிபாடு செய்கிறீர்கள். இந்த வழிபாட்டை நாம் கிறிஸ்தவர்களுடனோ, முஸ்லீம்களுடனோ, சீனர்களுடனோ, ஜப்பானியர்களுடனோ சேர்ந்து செய்யலாம். இதுவரையில் உள்ள தெய்வங் களையும் இனி தோன்றப்போகும் தெய்வங்களையும் வழி படலாம்.

சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் எல்லாவற்றிலும் இருப்பவன் நானே. நான் இறைவனுடன் இருக்கிறேன்; எல்லா தேவர்களிலும் இருக்கிறேன். நான் என் ஆன்மாவையே வழிபடுகிறேன்.

இதற்கு இன்னொரு பக்கம் உள்ளது. இதுவரையிலும் அதைச் சொல்லாமல் வைத்திருந்தேன். தூக்கில் தொங்கப் போகிறவன் நானே. எல்லா தீமைகளும் நானே. நானே நரகங் களில் தண்டிக்கப்படுகிறேன். அதுவும் விளையாட்டே. நான் எல்லையற்றவன் என்று அறிவதுதான் வேதாந்தத்தின் லட்சியம். குறிக்கோள்கள், தூண்டுதல்கள், நோக்கங்கள், கடமைகள் எல்லாம் பின்தங்குகின்றன.

உண்மையைப் பற்றி முதலில் கேட்க வேண்டும்; பிறகு சிந்திக்க வேண்டும். எல்லா வகையிலும் அதை ஆராயுங்கள், வாதப் பிரதிவாதங்கள் செய்யுங்கள். ஞானிகளுக்கும் இதற்கு மேல் ஒன்றும் தெரியாது. நாமே எல்லாவற்றிலும் இருக்கிறோம் என்பதைத் திடமாக அறியுங்கள். நீங்கள் யாருக்கும் தீங்கு செய்யக் கூடாது என்பதற்கு இதுதான் காரணம்; மற்றவர் களுக்குத் தீங்கு செய்வது என்றால் உங்களுக்கே தீங்கிழைத்துக் கொள்வதே அல்லவா! கடைசியாக இதை தியானிக்க வேண்டும். இதைச் சிந்தியுங்கள். எல்லாம் அழிந்து சாம்பலாகி நாம் மட்டும் தனியே நிற்கின்ற காலம் ஒன்று வரும் என்பதை நினைத்துப் பார்க்க முடியுமா? அந்தக் கணத்தின் ஆனந்தப் பரவசம் ஒருபோதும் நம்மை விட்டு அகலாது. நீங்கள் உடம்பு அற்றவர்கள் என்பதை நிச்சயம் உணர்வீர்கள். நமக்கு ஒரு போதும் உடம்பு இருந்ததில்லை.

நான் ஒருவனே தனியாக என்றென்றும் இருக்கிறேன், நான் யாருக்குப் பயப்பட வேண்டும்? இருப்பதெல்லாம் ஆன்மா தான். இதைத்தான் தொடர்ந்து தியானிக்க வேண்டும். அதன் மூலம் அனுபூதி பிறக்கும். அனுபூதியின் வாயிலாகத்தான் நாம் மற்றவர்களுக்கு ஆசிகளை அள்ளித் தருபவர்களாகிறோம்.

'இறைவனை அறிந்தவனின் முகம்போல் உன் முகம் ஒளி வீசுகிறது' இதுதான் லட்சியம். நான் செய்வதுபோல் இது பேச்சுக்கு உரியது அல்ல. 'ஒரு மரத்தின் அடியில் குரு ஒருவரை நான் கண்டேன். அவர் பதினாறு வயது இளைஞர். சீடரோ எண்பது வயதுக் கிழவர். குரு மௌனத்தில் உபதேசம் செய்கிறார். சீடரின் சந்தேகங்கள் பறந்துவிட்டன'. பேசுபவர் யார்? கதிரவனைப் பார்க்க விளக்கேற்றுபவர்கள் உண்டா? உண்மை உதிக்கும்போது, அதை அறிய சாட்சி ஒன்றும் தேவை இல்லை. நாம் அதை அறிவோம். நாம் செய்யப் போவது அதுதான். அதை உணருங்கள். முதலில் அதைச் சிந்தியுங்கள்; பிறகு அதைப்பற்றி விவாதம் செய்யுங்கள். அறிய வேண்டுமென்ற உங்கள் ஆவலைத் தீர்த்துக் கொள்ளுங்கள். பிறகு வேறு ஒன்றையும் நினைக்கவே வேண்டாம். நாம் வேறு ஒன்றையும் படிக்காமல் இருக்கக் கூடாதா, என்று நான் எண்ணுகிறேன். இறைவன்தான் நம்மைக் காக்க வேண்டும்! படித்தவன் என்ன ஆகிறான் என்று பாருங்கள்!—

'இங்கே இப்படிச் சொல்லியிருக்கிறது; அங்கே அப்படிச் சொல்லியிருக்கிறது.'

'அதுசரி, அப்பா, நீ என்ன சொல்கிறாய்?'

'எனக்கு எதுவும் தெரியாது.'

மற்றவர்கள் சொல்வதை எல்லாம் அவன் மேற்கோள் காட்டுகிறான். அவனாக எதையும் சிந்திப்பதில்லை. இதைக் கல்வி என்றால், பைத்தியம் என்பது எது? நூல்கள் எழுதி இருப்பவர்களைப் பாருங்கள்! இன்றைய ஆசிரியர்களின் இரண்டு வாக்கியங்கள்கூட அவர்களின் சொந்த வாக்கியங்கள் அல்ல, எல்லாம் மேற்கோள்கள்!

புத்தகப் படிப்பினால் பெரிதாக ஒன்றும் நிகழ்வது இல்லை. மதத்தைப் பற்றிப் பிறரிடமிருந்து கேட்பதால் பலன் ஒன்றுமில்லை. இது பிறர் சமைத்து இடுவதை உண்பது போன்றதே. உங்கள் மதம் எனக்கு மனநிறைவைத் தராது. ஏசு கடவுளைக் கண்டார், புத்தர் கடவுளைக் கண்டார். நீங்கள் கடவுளைக் காணவில்லை என்றால் நீங்கள் நாத்திகனைவிட எந்த

விதத்திலும் சிறந்தவர் அல்ல. அவன் மௌனமாக இருக்கிறான். நாமோ, நிறையப் பேசி, வெட்டிப் பேச்சால் உலகைத் தொல்லைக்கு உள்ளாக்குகிறோம். நூல்களாலோ, பைபிள் களாலோ, சாஸ்திரங்களாலோ எந்தப் பலனும் இல்லை. நான் சிறுவனாக இருந்தபோது ஒரு வயோதிகரைச் சந்தித்தேன். அவர் எந்த சாஸ்திரமும் படிக்கவில்லை. ஆனால் தொடுவதன் மூலமே இறையுணர்வைப் பிறரிடம் எழுப்பினார்.

உலகிற்கு அறிவுரை வழங்க முன்வரும் ஆசிரியர்களே, பேசாமல் இருங்கள். மத நூல்களே சும்மா இருங்கள்! இறைவா, நீ மட்டும் பேசு; உனது ஏவலன் கேட்கட்டும். உண்மை இங்கே இல்லை என்றால், இந்த வாழ்க்கையால் என்ன பலன்? உண்மையைப் பற்றிக்கொள்வோம் என்றுதான் நாம் எல்லோரும் எண்ணுகிறோம். ஆனால் அது கிடைப்பதில்லை. நம்மில் பலரது கையில் வெறும் குப்பைதான் கிடைக்கிறது. இறைவன் அதில் இல்லை. இறைவனை உணர முடியாதென்றால் வாழ்க்கையால் என்ன பயன்? ஓய்வாக இருக்கத்தக்க இடம் ஒன்று இந்த உலகத்தில் உண்டா? நாமே அதைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். நாம் ஆர்வத்துடன் அதைத் தேடுவ தில்லை. ஓடும் நீரில் மிதந்து செல்லும் வைக்கோலைப் போல் நாம் இருக்கிறோம்.

உண்மை இருந்தால், இறைவன் இருந்தால், அவர் நமக்குள் தான் இருக்க வேண்டும். 'நான் என் கண்களால் இறைவனைக் கண்டிருக்கிறேன்' என்று என்னால் சொல்ல இயல வேண்டும். இல்லையானால் என்னிடம் மதம் இல்லை. நம்பிக்கைகளோ கோட்பாடுகளோ அறிவுரைகளோ மதம் ஆகாது. அனுபூதி, இறையனுபவம்—இதுதான் மதம். உலகம் போற்றும் இந்த மகான்களின் பெருமை எங்கே இருக்கிறது? இவர்கள் விஷயத்தில் இறைவன் என்பது வெறும் கொள்கை அல்ல. தங்கள் பாட்டனார் நம்பினார் என்பதற்காக அவர்கள் அதை நம்பினார்களா? இல்லை. தங்கள் உடல், மனம் எல்லாவற்றிற்கும் மேலாக, எல்லையற்ற ஒன்றை அவர்கள் அனுபூதியில் உணர்ந்தார்கள்.

இறைவனின் பிரதிபிம்பத்தில் ஒரு சிறு பகுதி கலந்திருப்ப தால்தான் உலகம் உண்மையாகத் தோன்றுகிறது. நல்ல வனிடம் நாம் அன்பு செலுத்தக் காரணம், அவன் முகத்தில் இந்த இறை ஒளி சற்று மிகுதியாக வீசுவதுதான். இந்த ஒளியை நாமே பெற வேண்டும். வேறு வழியே இல்லை.

இதுதான் லட்சியம். இதை அடையப் போராடுங்கள். நீங்களே சொந்தமாக ஒரு பைபிளை உருவாக்குங்கள். உங்கள் ஏசுவை நீங்களே உருவாக்கிக் கொள்ளுங்கள். இல்லையானால், நீங்கள் மத உணர்வு உடையவர் அல்ல. மதத்தைப்பற்றிப் பேசாதீர்கள். மனிதர்கள் ஓயாமல் பேசுகிறார்கள். 'இவர்களுள் சிலர் அறியாமையில் மூழ்கியிருந்தாலும், ஞான ஒளியைக் கண்டுவிட்டதாக ஆணவத்தால் எண்ணுகின்றனர். அது மட்டும் அல்ல; மற்றவர்களையும் தோளில் தூக்கிச் செல்ல முன்வருகின்றனர். முடிவில் இருவரும் குழியில் விழுகின்றனர்.'

எந்தச் சர்ச்சும் இதுவரை யாரையும் கரையேற்றவில்லை. கோயிலில் பிறப்பது நல்லது; ஆனால் கோயிலிலேயே, சர்ச்சிலேயே இறப்பவனின் நிலை இழிவானது! அதைவிட்டு வெளியேறிவிடுங்கள். ஆரம்பத்திற்கு அது நல்லதுதான்; ஆனால் உடனே அதைவிட்டு விலகிவிடுங்கள்! அது பாலர் பள்ளி. அது அப்படியே இருக்கட்டும். நீங்கள் நேராக இறைவனிடம் செல்லுங்கள். கொள்கைகளோ கோட்பாடுகளோ வேண்டாம், அப்போதுதான் எல்லா சந்தேகங்களும் மறையும். அப்போதுதான் வளைவுகள் எல்லாம் நேராகும்.

பன்மையுள்ள ஒருமையைக் காண்பவன் யாரோ, முடிவற்ற மரணத்தில் அந்த ஒரு வாழ்வைக் காண்பவன் யாரோ, இந்தப் பன்மையில் மாறாத ஒன்றைத் தன் ஆன்மாவில் காண்பவன் யாரோ அழிவற்ற சாந்தி அவனையே சாரும். ❑

## 7. எதிர்கால மதம் வேதாந்தமா?

சான்பிரான்சிஸ்கோ, 8 ஏப்ரல் 1900

சென்ற ஒரு மாதகாலமாக எனது சொற்பொழிவுகளைக் கேட்டு வந்தவர்கள் வேதாந்தத் தத்துவத்தின் கருத்துக்கள் பற்றித் தெரிந்திருப்பீர்கள். உலகின் மிகப் புராதனமான மதம் வேதாந்தம். என்றாலும் அது பிரபலமாக உள்ளது என்று சொல்ல முடியாது. எனவே 'இது எதிர்கால மதம் ஆகுமா?' என்ற கேள்விக்கு விடை கூறுவது கடினம்.

பெரும்பான்மையினருக்கான மதமாக இது என்றாவது ஆகுமா என்று கேட்டால், அது எனக்குத் தெரியாது என்பதை முதலிலேயே சொல்லிவிடுகிறேன். அமெரிக்காவைப் போன்ற ஒரு நாட்டை இது என்றாவது முற்றிலுமாக ஆதிக்கம் செலுத்த முடியுமா? ஒரு வேளை செலுத்தலாம். இப்போது நாம் இந்தக் கேள்வியைத்தான் ஆராயப் போகிறோம்.

எது வேதாந்தம் அல்ல என்பதை முதலில் சொல்லிவிட்டு, பிறகு அது என்ன என்பதைக் கூறுகிறேன். யாரையும் எதையும் சாராத (Impersonal) கோட்பாடுகளை வேதாந்தம் வற்புறுத்தினாலும் எதையும் அது எதிர்ப்பதில்லை. அதேவேளையில், தான் அடிப்படை என்று கருதுகின்ற எந்த உண்மைகளையும் கைவிடுவதோ, எதற்காகவும் அவற்றை விட்டுக்கொடுப்பதோ இல்லை.

ஒரு மதம் என்றால் அதற்கு அடிப்படையாகச் சில விஷயங்கள் இருப்பது உங்களுக்குத் தெரியும். முதன் முதலாக சாஸ்திரம். அதன் சக்தி இருக்கிறதே, அது அபாரம். அந்தச் சாஸ்திரம் எதுவாக இருந்தாலும் சரி, மனிதர்களின் நம்பிக்கை குவிவதற்கான மையமாக இருக்கிறது. இன்று வாழ்கின்ற எந்த மதத்திற்கும் ஒரு சாஸ்திரம் இருக்கிறது. பகுத்தறிவு (Rationalism) அதுஇது என்று பெரியபெரிய வாய் ஜம்பங்கள் ஒருபக்கம் இருந்தாலும் மனித குலம் இந்தச் சாஸ்திரங்களைப் பற்றிப்பிடித்துக் கொண்டிருக்கவே செய்கிறது. இப்படியொரு அடிப்படை நூல் இல்லாத மதத்தை

உருவாக்க உங்கள் நாட்டில் எழுந்த ஒவ்வொரு முயற்சியும் தோல்வியையே தழுவியது. இந்தியாவில் எத்தனையோ மதங்கள் பெருவெற்றியுடன் எழுகின்றன, ஆனால் சில ஆண்டுகளில் மறைந்துவிடுகின்றன. அடிப்படை நூல் ஒன்று இல்லாததே இதற்குக் காரணம். எல்லா நாட்டிலும் இது போல்தான்.

உங்கள் ஒருமைக் கோட்பாட்டு இயக்கத்தின் (Unitarian Movement) எழுச்சியையும் வீழ்ச்சியையும் ஆராய்ந்து பாருங்கள், உங்கள் நாட்டின் மிகச் சிறந்த சிந்தனைப் போக்கிற்கு அது எடுத்துக் காட்டு. பிற கிறிஸ்தவ நெறிகள் (Methodist, Baptist, etc) பரவியதுபோல் அது ஏன் பரவவில்லை? ஏனெனில் அதற்கென்று அடிப்படை நூல் ஒன்று இல்லை. ஆனால் யூதர்களைப் பாருங்கள். விரல்விட்டு எண்ணக்கூடிய சிலர், நாடுவிட்டு நாடு துரத்தப்படுகிறார்கள், என்றாலும் அவர்கள் ஒன்றுபட்டவர்களாக இருக்கிறார்கள். ஏனெனில் அவர்களுக்கு அடிப்படை நூல் ஒன்று இருக்கிறது. பார்சிகளை நினைத்துப் பாருங்கள், ஒரு லட்சம் பேர்தான். இந்தியாவில் எஞ்சியுள்ள மொத்த சமணர்களின் தொகை வெறும் பத்து லட்சம்தான். இவ்வளவு குறைவான பார்சிகள், சமணர்கள் போன்றவர்களை இணைத்து வைத்திருப்பது அவர்களின் நூல்களே என்பது உங்களுக்குத் தெரியுமா? இன்று வாழ்ந்து வருகின்ற மதங்கள் ஒவ்வொன்றிற்கும் அடிப்படை நூல்கள் உள்ளன.

மதத்திற்கான இரண்டாம் தேவை—ஒரு மனிதரிடம் ஆழ்ந்த ஈடுபாடு. அவர் உலகின் இறைவனாகவோ ஆச்சாரியராகவோ வழிபடப்படுகிறார். மனிதர்கள் வழிபட மனித வடிவில் ஒருவர் தேவை. அவதாரமோ, தீர்க்கதரிசியோ, தலைவரோ, யாராவது ஒருவர் அவர்களுக்கு வேண்டும். இன்று ஒவ்வொரு மதத்திலும் இதை நாம் காண்கிறோம். இந்துக்களுக்கும் கிறிஸ்தவர்களுக்கும் அவதார புருஷர்கள் இருக்கிறார்கள்; பௌத்தர்கள், முஸ்லீம்கள், யூதர்கள் இவர்களுக்கு தீர்க்கதரிசிகள் இருக்கிறார்கள். ஆனால் விஷயம் எல்லாம் ஒன்றுதான்; அவர்களின் ஈடுபாடு யாராவது ஒரு மனிதரையோ பலரையோ சுற்றிதான் இருக்க முடியும்.

தான் மட்டுமே உண்மை என்ற நம்பிக்கை மதத்திற்கு வேண்டும்—இதுதான் மூன்றாவது தேவைபோல் தோன்றுகிறது. இந்த நம்பிக்கை வர வேண்டுமானால் அந்த மதம் வலிமை பெற்றதாக இருக்க வேண்டும், தன்னிடமே அதற்கு

மிகுந்த ஈடுபாடும் உறுதியும் வேண்டும். இது இல்லாத மதம் மக்களைக் கவர முடியாது.

சமரசம் (Liberalism) மடிந்துவிடுகிறது. ஏனெனில் அது வறண்டதாக இருக்கிறது, மக்களின் மனத்தில் வெறியை உண்டாக்க அதனால் முடிவதில்லை, தன்னைத்தவிர பிற மதங்களை வெறுப்புணர்ச்சியுடன் பார்க்கின்ற போக்கை அதனால் உருவாக்க முடியாது. அதனால்தான் சமரசம் என்பது மடிந்துகொண்டே போகிறது. இது ஏதோ ஒருசிலரைத்தான் கவர இயலும். அது ஏனென்று புரிந்துகொள்வது கடினம் அல்ல. சமரசம் நம்மைச் சுயநலம் அற்றவர்களாக்க முயல்கிறது, நாமோ அதை விரும்பவில்லை—சுயநலமின்மையால் கைமேல் கிடைக்கும் பலன் எதுவும் இல்லை; சுயநலத்தால்தான் அதிக பலன் கிடைக்கிறது. நாம் ஏழைகளாக இருக்கும்வரை, நம்மிடம் ஒன்றும் இல்லாததுவரை நாம் சமரசத்தை ஏற்றுக் கொள்கிறோம். ஆனால் பணமும் பதவியும் கிடைக்கும் அந்தக் கணமே ஒதுங்கிவிடுகிறோம். ஏழைதான் ஜனநாயகவாதி. அவன் பணக்காரன் ஆனவுடனே முதலாளி ஆகிவிடுகிறான். மதத்திலும் மனித மனம் இவ்வாறே செயல்படுகிறது.

தீர்க்கதரிசி ஒருவர் தோன்றுகிறார்; தம்மைப் பின்பற்று பவர்களுக்கு எல்லா நலன்களும் உண்டாகும், பின்பற்றாதவர் களுக்கு நிலைத்த துன்பமே கதியாகும் என்றெல்லாம் கூறித் தமது கருத்துக்களைப் பரப்புகிறார். இப்போது பரவிக் கொண்டிருக்கின்ற மதங்கள் எல்லாமே பயங்கர வெறி பிடித்தவை. ஒரு மதம் எவ்வளவு தூரம் பிற மதங்களை வெறுக்கிறதோ அந்த அளவுக்கு அதிக வெற்றி பெறுகிறது; அந்த அளவுக்கு நிறையபேர் அதைப் பின்பற்றுகின்றனர். நான் உலகின் பெரும்பாலான பகுதிகளில் பயணம் செய் திருக்கிறேன், பல இன மக்களுடன் வாழ்ந்திருக்கிறேன். இந்த அனுபவங்களையும் இப்போதைய சூழ்நிலையையும் இணைத்துப் பார்க்கும்போது 'இப்போதைய நிலைமைதான் நீடிக்கும், இப்போது எங்கும் முழங்குகின்ற உலக சகோதரத் துவம் என்பதெல்லாம் வெறும் பேச்சளவில்தான் நிற்கும்' என்ற முடிவுதான் எனக்குத் தெரிகிறது.

இத்தகைய பிரச்சாரங்கள் எதையும் வேதாந்தம் நம்புவதில்லை. முதலாவதாக அடிப்படை நூல் ஒன்றின் அவசியத்தையே அது நம்புவதில்லை—பிரச்சினையும் அது தான். ஒரு நூல் இன்னொன்றைவிட அத்தாட்சி மிக்கது

என்பதை அது ஒப்புக் கொள்வதில்லை. இறைவன், ஆன்மா, அறுதி உண்மை இவைபற்றிய எல்லா உண்மைகளும் எந்த ஒரு தனி நூலிலும் அடங்கக்கூடும் என்பதை வேதாந்தம் தீவிரமாக மறுக்கிறது. உபநிடதங்களைப் படித்தவர்களுக்கு அவை திரும்பத்திரும்ப, 'நூல்களைப் பயில்வதால் நாம் ஆன்மாவை உணர இயலாது' என்று கூறுவது நினைவிருக்கும்.

இரண்டாவதாக, தனிநபர் வழிபாட்டை ஏற்றுக் கொள்ள வேதாந்தம் மிகவும் தயங்குகிறது. உங்களுள் வேதாந்தத்தைப்—வேதாந்தம் என்றால் அது எப்போதும் உபநிடதங்கள் மட்டுமே—படிப்பவர்கள், அது ஒன்றுதான் எந்தத் தனி நபரையும் சாராத மதம் என்பதை அறிவீர்கள். ஆணோ, பெண்ணோ எந்தத் தனி நபரும் வேதாந்திகளின் வழிபடு பொருளாக இருப்பதில்லை, இருக்கவும் முடியாது. அப்படி வழிபடுவதற்கு ஒரு பறவையைவிட, ஒரு புழுவைவிட மனிதன் உயர்ந்தவன் அல்ல. நாம் எல்லோரும் சகோதரர்கள், வேறுபாடு என்பது அளவில்தான் உள்ளது. மிகத் தாழ்ந்த புழுவைப் போன்றவனே நான். ஒரு மனிதன் தலைவனாவது, நாம் சென்று அவனை வழிபடுவது, அவன் நம்மை வழி நடத்துவது, நம்மைக் காப்பாற்றுவது போன்றவற்றிற்கு வேதாந்தத்தில் இடம் இல்லை. இவை எதையும் வேதாந்தம் உங்களுக்குத் தராது. அடிப்படையாக ஒரு நூல், வழிபட ஒருவர் எதுவும் அங்கே இல்லை.

கடவுள்பற்றிய விஷயத்திற்கு வரும்போது பிரச்சினை இன்னும் சிக்கலாகிறது. இந்த நாட்டில் நீங்கள் ஜனநாயகத்தை விரும்புகிறீர்கள், ஜனநாயகக் கடவுளையே வேதாந்தம் போதிக்கிறது. உங்களை ஆள அரசாங்கம் ஒன்று இருக்கிறது; ஆனால் அது எந்தத் தனி மனிதன் கையிலும் இல்லை. உங்கள் அரசு ஏகாதிபத்திய அரசு அல்ல, எனினும் உலகின் எந்த முடியரசையும்விட வலிமை பெற்றதாக விளங்குகிறது. உண்மை அதிகாரம், உண்மை வாழ்வு, உண்மையான ஆற்றல் இவை அனைத்தும் கண்ணுக்குத் தெரியாத, உருவம் அற்ற, ஒருவரையும் சாராத ஒன்றில்தான் இருக்கிறது என்பதை யாரும் புரிந்துகொண்டதாகத் தெரியவில்லை. மற்றவர்களிடமிருந்து பிரிந்து நீ மட்டும் தனிநபராக நிற்கும்போது உனக்கு ஒரு மதிப்பும் இல்லை; ஆனால் தனி நபராக இல்லாமல், உங்களை ஆள்கின்ற நாட்டு மக்கள்சமுதாயத்தின் ஒரு பகுதியாக நிற்கும் போது உங்கள் மதிப்பும் அதிகாரமும் எல்லையற்றதாகி

விடுகிறது. அரசாங்க நிலையில் நீங்கள் எல்லோரும் ஒன்று, அபரிமிதமான ஆற்றல் உடையவர்கள். ஆனால் இந்த ஆற்றல் உண்மையில் எங்கே இருக்கிறது? ஒவ்வொரு மனிதனும் இந்த ஆற்றலே. அரசன் என்று தனியாக யாரும் இல்லை. உங்களுள் ஒவ்வொருவரும் சமமே. யாரும் யாருக்கும் தொப்பியைக் கழற்றி, உடலை வளைத்து வணங்க வேண்டுவதில்லை. என்றாலும் ஒவ்வொருவரிடமும் அளவுகடந்த பேராற்றல் இருக்கிறது.

இதுதான் வேதாந்தம். எங்கோ தனியாக அரியாசனத்தில் அமர்ந்திருக்கும் ஒருவர் அல்ல வேதாந்தத்தின் கடவுள். இத்தகைய கடவுளை விரும்புபவர்களும் இருக்கிறார்கள்—பயந்து நடுங்கி அவரை வழிபட வேண்டும், அவர்முன் மெழுகுவர்த்தி ஏற்றிவைக்க வேண்டும், புழுதியில் வீழ்ந்து புரள வேண்டும். தங்களை ஆள ஓர் அரசன் அவர்களுக்கு வேண்டும். தங்களை அடக்கியாளச் சொர்க்கத்தில் ஓர் அரசன் இருப்பதாக அவர்கள் நம்புகிறார்கள். நாட்டில் இப்போது மன்னர்கள் இல்லை. சொர்க்கத்து அரசன் இப்போது எங்கே? மண்ணுலக வேந்தன் இருக்கும் இடத்தில்தான். இந்த நாட்டில் அவன் உங்கள் ஒவ்வொருவருள்ளும் புகுந்துவிட்டான், இந்த நாட்டில் நீங்கள் எல்லோருமே மன்னர்கள். வேதாந்த மதம் கூறுவதும் இதுவே. நீங்கள் எல்லோரும் தெய்வங்கள். ஒரு கடவுள் போதாது, நீங்கள் எல்லோரும் கடவுள் என்று சொல்கிறது வேதாந்தம்.

பின்பற்றுவதற்கு மிகவும் கடினமானதாக வேதாந்தம் இருப்பதற்குக் காரணம் இது. கடவுளைப்பற்றிய பழைய கருத்தை இது போதிக்கவில்லை. மேகங்களுக்கு மேல் அமர்ந்து கொண்டு, நமது அனுமதி இல்லாமலே உலக விவகாரங்களை நடத்திவந்த, சுய விருப்பம் ஒன்றிற்காக நம்மையெல்லாம் வெறும் சூன்யத்திலிருந்து படைத்து, சுய விருப்பம் ஒன்றிற்காக நம்மையெல்லாம் இந்தத் துன்பக் கடலில் உழலச்செய்த பழங்காலக் கொடுங்கோல் கடவுளுக்குப் பதிலாக, ஒவ்வொருவருள்ளும் இருக்கின்ற, ஒவ்வொருவருமாக ஒவ்வொன்றுமாக ஆகியுள்ள கடவுளை வேதாந்தம் போதிக்கிறது. மண்ணாளும் அரசன் இந்த நாட்டை விட்டுப் போய்விட்டான்; விண்ணாளும் அரசன் வேதாந்த மதத்திலிருந்து பல நூற்றாண்டுகளுக்கு முன்பே போய்விட்டான்.

மண்ணின் மன்னனைக் கைவிட இந்தியாவால் இயலாது. எனவே வேதாந்தம் இந்தியாவிற்கான மதம் ஆக முடியாது.

ஆனால் உங்களிடம் ஜனநாயகக் கோட்பாடு நிலவுவதால், வேதாந்தம் உங்கள் நாட்டிற்கான மதம் ஆக வாய்ப்பு இருக்கிறது. இது உங்கள் மதம் ஆக வேண்டுமானால், முதலில் வேதாந்தத்தைப் புரிந்துகொள்ள உங்களால் இயல வேண்டும்; தெளிவாக உணர்ந்துகொள்ள வேண்டும், தெளிவற்ற கருத்துக் களையும் மூடநம்பிக்கைகளையும் உங்கள் மூளையிலிருந்து எறிந்துவிட்டு நீங்கள் உண்மையான ஆண்களும் பெண்களும் ஆக வேண்டும்; வேதாந்தம் என்பது ஆன்மீகம் ஒன்றை மட்டுமே கருத்தில் கொள்வதால் உண்மையாகவே ஆன்மீக வாழ்வு வாழ்வதற்கான ஆர்வம் உங்களிடம் இருக்க வேண்டும்.

வானில் வாழும் இறைவன் என்ற கருத்திற்குப் பொருள் என்ன? வெறும் உலகாயதம். வேதாந்தத்தின் கடவுளோ எல்லையற்ற தத்துவம், அவர் நம் ஒவ்வொருவரிலும் இருக் கிறார். கடவுள் மேகத்தின் மேல் உட்கார்ந்திருக்கிறாராம்! இந்தத் தெய்வ நிந்தையைப் பாருங்கள்! இது உலகாயதம்—வெறும் உலகாயதம். குழந்தைகள் இப்படி நினைத்தால் அது சரியாக இருக்கலாம். ஆனால் வளர்ந்தவர்கள் இப்படிப் போதிக்க முயலும்போது அருவருப்பாக உள்ளது. இதுதான் உண்மை—இது முற்றிலும் ஜடப்பொருளைப் பற்றியது, முற்றிலும் உடலைப் பற்றியது, புலன்களைப் பற்றியது, வெறும் தூலமான கருத்து. இந்தக் கருத்தின் ஒவ்வொரு பகுதியும் வெறும் களிமண்ணைத் தவிர வேறெதுவும் அல்ல. இதுவா மதம்? ஆப்ரிக்கக் காட்டுமிராண்டிகளின் பொருளற்ற மதமான 'மம்போ ஜம்போ'வைவிட இது எந்த விதத்திலும் உயர்ந்ததல்ல. இறைவன் ஆன்மா, அவரை ஆன்மாவாக, உண்மையாக வழிபட வேண்டும். ஆன்மா விண்ணில் மட்டும்தானா வாழ்கிறது? ஆன்மா என்பது என்ன? நாம் எல்லோருமே ஆன்மா. நாம் அதை ஏன் உணரவில்லை? உங்களையும் என்னையும் வேறு படுத்துவது எது? உடம்பு, வேறு எதுவும் அல்ல. உடம்பை மறந்துவிடுங்கள், எல்லாம் ஆன்மா.

அடிப்படை நூல் இல்லை. யாரோ ஒருவர் தனிபீடத்தில் நின்றுகொண்டு மனித சமுதாயத்தைப் பார்த்து, 'நீங்கள் புழுக்கள், நாங்களே இறைவன், கடவுள்' என்று கூறுவதை அது ஏற்றுக்கொள்வதில்லை. இத்தகைய எதற்கும் வேதாந்தத்தில் இடமில்லை. நீ கடவுள் என்றால் நானும் கடவுளே. எனவே பாவம் என்பதற்கே வேதாந்தத்தில் இடம் இல்லை. அங்கே தவறுகள் உண்டு, ஆனால் பாவம் இல்லை;

முடிவில் எல்லாமே நல்லவையாகிவிடும். சாத்தான், அதுஇது போன்ற பொருளற்ற பிதற்றல்கள் இல்லை. வேதாந்தம் உலகத்தில் ஒரே ஒரு பாவத்தைத்தான் ஒப்புக்கொள்கிறது. அது இதுதான்: நீ உன்னையோ பிறரையோ பாவி என்று நினைப்பதுதான் பாவம். இந்த எண்ணமே எல்லா தவறு களுக்கும் அதாவது, பொதுவாக பாவம் என்று கூறப்படுகின்ற அனைத்திற்கும் காரணம். நமது வாழ்க்கையில் பல தவறுகள் நேர்ந்திருக்கின்றன. என்றாலும் நாம் வாழ்ந்துகொண்டிருக் கிறோம். தவறுகள் செய்தோம் என்ற பெருமை நம்மைச் சேரட்டும். உங்கள் கடந்தகால வாழ்க்கையைச் சற்று தீர்க்கமாகப் பாருங்கள். உங்கள் தற்போதைய நிலைமை நல்லதாக இருக்கு மானால், அந்த நிலைமையை, கடந்தகாலத்தின் வெற்றிகளும் அதுபோல் தவறுகளும் சேர்ந்தே தந்திருக்கின்றன. வெற்றிக்குப் பெருமை சேர்க! தவறுகளுக்கும் பெருமை சேர்க! செய்தவற்றைத் திரும்பிப் பார்க்காதீர்கள், முன்னேறுங்கள்.

எனவே வேதாந்தத்தில் பாவத்திற்கோ பாவிக்கோ இடம் இல்லை என்பதைக் காண்கிறீர்கள். பயந்து நடுங்குவதற்கு உரிய கடவுளும் இதில் இல்லை. நாம் ஒருபோதுமே கண்டு பயப்பட வேண்டாதவர் கடவுள், ஏனெனில் அவர் நமது சொந்த ஆன்மா. நீ பயப்படத் தேவையில்லாத ஒரே ஒருவர் உண்டென்றால் அது கடவுளே. எனவே கடவுளுக்குப் பயப்படுவதாகச் சொல்பவன் உண்மையில் மூட நம்பிக்கை மிக்கவர்களுள் முதல்வன்தானே? தன் நிழலையே கண்டு பயப்படுபவன் இருக்கலாம், ஆனால் அவனும் தன்னைக் கண்டு பயப்பட மாட்டான். மனிதனின் ஆன்மாவே கடவுள். அவரிடம் நீ ஒரு நாளும் பயப்பட வேண்டியதில்லை. கடவுளைப்பற்றிய பயம் ஒருவன் நெஞ்சில் புகுவதும், அவனை நடுங்கச் செய்வதும் இதெல்லாம் என்ன முட்டாள்தனம்? நாம் பைத்தியக்கார விடுதியில் இல்லாததற்காக இறைவனுக்கு நன்றி சொல்ல வேண்டும். ஆனால் நம்முள் பலரும் பைத்தியங்களாக இல்லா விட்டால், இறைவனிடம் பயம் போன்ற பொருளற்றவற்றை ஏன் கற்பனை செய்கிறோம்? ஏறத்தாழ மனித இனமே பைத்தியக் கும்பல்தான் என்றார் புத்தபிரான். அது முற்றிலும் உண்மை என்றே தோன்றுகிறது.

அடிப்படை நூல் இல்லை, ஆச்சாரியர் இல்லை, சகுணக் கடவுள் இல்லை. இவையெல்லாம் ஒழிய வேண்டும். புலன்களின் ஆட்சியிலிருந்து நாம் விடுபட வேண்டும். புலன்களுக்குக்

கட்டுப்பட்டவர்களாக நாம் இருக்கக் கூடாது. பனிமலைகளில் சிக்கிக் கடுங்குளிரால் சாகின்ற மனிதர்கள்போல் இப்போது நாம் கட்டுண்டிருக்கிறோம்—அவர்களுக்குத் தூங்க வேண்டும் என்ற ஆசை மிகத் தீவிரமாக இருக்கும், 'இங்கே தூங்கினால் அது சாவில்தான் முடியும்' என்று எச்சரித்து நண்பர்கள் தடுக்க முயன்றாலும் அவர்கள், 'நான் சாகத் தயார், என்னைத் தூங்கவிடுங்கள்' என்பார்கள். நாம் புலன்களால் அழிய நேர்ந் தாலும் அவற்றால் கிடைக்கும் அற்ப இன்பங்களின் பின்னால் ஓடுகிறோம்; மேலானவை பிற இருப்பதை மறந்துவிடுகிறோம்.

இந்துப் புராணக் கதை ஒன்று உண்டு. கடவுள் ஒருமுறை பன்றியாக இவ்வுலகில் அவதரித்தார். அவருக்குப் பெண் பன்றி ஒன்று துணையாக வாய்த்தது. நாளடைவில் பல குட்டிகளும் பிறந்தன. குடும்பத்துடன் அவர் மிக்க மகிழ்ச்சியாக இருந்தார்; சேற்று வாழ்க்கையாகிய சொர்க்கத்தில் திளைத்து இன்பக் குரல் எழுப்பிக் கொண்டிருந்தார். தமது தெய்வீகப் பெருமையும் இறைமையும் அவருக்கு மறந்துவிட்டன. இதனால் மிகவும் கவலை கொண்ட தேவர்கள் பூமிக்கு வந்து, பன்றியுடலை விட்டு வானுலகிற்குத் திரும்பும்படி அவரை வேண்டினர். அவரோ அதை லட்சியம் செய்யாமல் தேவர்களைத் துரத்தி விட்டார்; தாம் மிக்க மகிழ்ச்சியோடு இருப்பதாகவும் தம்மைத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்றும் சொல்லிவிட்டார். வேறு வழி அறியாத தேவர்கள் அந்தப் பன்றியுடலை அழித்தார்கள். உடனே அவருக்குத் தமது தெய்வீகப் பெருமை விளங்கியது; பன்றி வாழ்வில் எப்படி மகிழ்ச்சி காண முடிந்தது என்று வியந்து நின்றார் அவர்.

மக்களும் இப்படித்தான் நடந்துகொள்கிறார்கள். நிர்க்குணக் கடவுளைப்பற்றிக் கேட்டவுடனே அவர்கள், 'ஆ, என்னுடைய தனித்துவம் என்ன ஆவது? அது போய்விடுமே!' என்கிறார்கள். அடுத்த முறை இந்த எண்ணம் வரும்போது அந்தப் பன்றியை நினைத்துக்கொள்ளுங்கள்; பிறகு உங்களுக் குரிய இன்பச் சுரங்கத்தை எண்ணிப் பாருங்கள். அந்த இன்பச் சுரங்கம் உங்கள் ஒவ்வொருவரிடமும் உள்ளது. உங்கள் இன்றைய நிலைமையிலேயே நீங்கள் எவ்வளவு நிறைவைக் காண்கிறீர்கள்! நீங்கள் யார் என்ற உண்மை மட்டும் உங்களுக்குத் தெரிந்துவிட்டால், இந்தப் புலன் வாழ்க்கையைக் கைவிட மறுத்ததை எண்ணி நீங்கள் வியப்படைவீர்கள். உங்கள் தனித்துவத்தில் என்ன இருக்கிறது? இது அந்தப் பன்றி

வாழ்க்கையைவிட உயர்ந்ததா என்ன? இதைக் கைவிட நீங்கள் மறுக்கிறீர்கள், கடவுள்தான் நம்மைக் காக்க வேண்டும்!

வேதாந்தம் நமக்குப் போதிப்பது என்ன? முதலாவதாக உண்மையை அறிவதற்காக நீ உனக்கு வெளியேகூடப் போக வேண்டியதில்லை என்கிறது வேதாந்தம். கடந்தகாலம், எதிர் காலம் எல்லாம் இங்கேயே நிகழ்காலத்திலேயே உள்ளன. இறந்தகாலத்தை யாரும் பார்த்ததில்லை, உங்களுள் யாராவது பார்த்திருக்கிறீர்களா? இறந்தகாலத்தை நீங்கள் அறிவதாக எண்ணும்போதும் என்ன நடக்கிறது? இறந்தகாலத்தை நிகழ் காலத்தில் கற்பனை செய்கிறீர்கள், அவ்வளவுதான். எதிர் காலத்தைப் பார்க்க வேண்டுமானால், அதையும் நிகழ்காலத்தில் கொண்டுவந்துதான் ஆக வேண்டும். நிகழ்காலம் ஒன்றுதான் உண்மை, மற்றவை வெறும் கற்பனை. இருப்பதெல்லாம் நிகழ் காலம் ஒன்றுதான். அது ஒன்றுதான் உள்ளது. இருப்பவை எல்லாம் இங்கேயே இப்போதே இருக்கின்றன. முடிவற்ற இந்தக் காலத்தின் ஒரு வினாடி, மற்ற வினாடிகளைப் போலவே பூரணமானதாக, எல்லாம் தன்னுள் அடங்கப் பெற்றதாக இருக்கிறது. இருப்பது எல்லாம், இருந்தது எல்லாம், இனி இருக்கப்போவது எல்லாம் இங்கேயே நிகழ்காலத்திலேயே இருக்கின்றன. இதற்குப் புறம்பாக ஒன்றைக் கற்பனை செய்ய முயலுங்கள், யாருக்கும் அதில் வெற்றி கிடைக்காது.

இந்த உலகை ஒத்திருக்காத சொர்க்கத்தை எந்த மதத் தால்தான் படைக்க முடியும்? இந்தப் படைப்பு ஒருவகைக் கற்பனை ஓவியம். இந்த ஓவியம் நமக்குப் படிப்படியாகத் தெரியப்படுத்தப் படுகிறது. நாம் ஐம்புலன்களின் வழியாக உலகைப் பார்க்கிறோம், அதை நிறம், உருவம், ஒலி போன்றவை கொண்ட தூலப் பொருளாகக் காண்கிறோம். எனக்கு மின் புலன் ஒன்று ஏற்படுவதாக வைத்துக் கொள்ளுங்கள், அப்போது எல்லாமே வேறாகத் தோன்றும். என் புலன்கள் நுட்பத் தன்மை பெறுவதாக வைத்துக் கொள்ளுங்கள், அப்போது நீங்களெல்லாம் மாறுபட்டுத் தோன்றுவீர்கள். நான் மாறினால் நீங்களும் மாறுகிறீர்கள். நான் புலன்களின் ஆதிக்கத்தைக் கடந்து சென்றால், நீங்கள் ஆன்மாவாக, இறைவனாகவே தோன்றுவீர்கள். பொருட்கள் எப்படித் தோன்றுகின்றனவோ அது உண்மையல்ல.

இந்த உண்மையைப் படிப்படியாக நாம் புரிந்துகொள் வோம்; பிறகு அதனைக் காண்போம்: சொர்க்கங்களும்

எல்லாமும் இங்கேயே இப்போதே இருக்கின்றன. இவை இறைவனின் தோற்றங்களே தவிர வேறல்ல. அவர் உலகங்கள், சொர்க்கங்கள் அனைத்தையும்விட மிக உயர்ந்தவர். இந்த உலகம் தீமைகள் நிறைந்தது, சொர்க்கம் வேறு எங்கோ இருக்கிறது என்று மக்கள் நினைக்கிறார்கள். இந்த உலகம் தீயது அல்ல. உங்களால் உண்மையை உணர முடியுமானால் இதுவும் இறைவனே. இந்த உண்மை, அறிவுக்கு எட்டுவது கடினம்; நம்புவதோ அதைவிடக் கடினம். நாளைக்கே தூக்கில் தொங்கப்போகும் கொலையாளியும் இறைவனே, பூரண இறைவனே. இதை உணர்ந்துகொள்வது மிகவும் கடினம்தான்; ஆனால் உணர முடியும்.

எனவே வேதாந்தம் உலக சகோதரத்துவத்தை அல்ல, உலக ஒருமையைப் பற்றியே பேசுகிறது. பிற மனிதன், மிருகம், நல்லது, கெட்டது எல்லாவற்றையும் போன்றவனே நான். எல்லாம் ஒரே உடம்பு, ஒரே மனம், ஒரே ஆன்மாதான். ஆன்மாவிற்கு அழிவில்லை. எங்கும் எதற்கும் சாவு இல்லை. உடம்பிற்கும் சாவு இல்லை, மனத்திற்கும் சாவு இல்லை. உடம்பு எப்படிச் சாக முடியும்? ஓர் இலை விழலாம், உடனே மரம் அழிந்துவிடுகிறதா? இந்தப் பிரபஞ்சமே என் உடம்பு. இது எப்படித் தொடர்ந்து வாழ்கிறது என்பதைப் பாருங்கள். எல்லா மனமும் என்னுடையவை. எல்லா கால்களாலும் நான் நடக்கிறேன். எல்லா வாய்களாலும் நான் பேசுகிறேன். எல்லோருள்ளும் நான் இருக்கிறேன்.

இதை நான் ஏன் உணர முடிவதில்லை? அந்தத் தனித்துவம்—பன்றித்துவத்தால்தான். நீங்கள் இந்த மனத்துடன் கட்டப்பட்டுவிட்டதால் இங்கேதான் நீங்கள் இருக்க இயலும், அங்கே செல்ல முடியாது. மரணமிலாப் பெருநிலை என்பது என்ன? 'நமது இந்த வாழ்க்கையே அது' என்று ஒருசிலரே இதற்குப் பதில் கூறியுள்ளனர், விந்தை! 'இந்த வாழ்க்கை சாவுக்கு உரியது, உயிரற்றது, இறைவன் இங்கே இல்லை, சொர்க்கத்திற்குச் சென்ற பிறகே மரணமிலாப் பெருநிலை வாய்க்கும் என்றே பெரும்பாலானோர் கருதுகின்றனர். மரணத்திற்குப் பிறகே கடவுளைப் பார்க்க முடியும் என்பது அவர்களின் கற்பனை. ஆனால் இப்போதே, இங்கேயே அவரைப் பார்க்காதவர்கள், இறந்த பின்பும் அவரைப் பார்க்க மாட்டார்கள். மரணமிலாப் பெருநிலையை எல்லோரும் நம்புகிறார்கள்; ஆனால் அது இறந்து சொர்க்கத்திற்குப் போவதால்

வருவதல்ல, பன்றித்தனமான இந்தத் தனித்துவத்தை விடுவதாலும், நம்மை இந்த அற்ப உடம்புடன் பந்தப்படுத்திக் கொள்கின்ற சிறுமையை விடுவதாலுமே கிடைக்கும் என்பதை அவர்கள் அறியவில்லை. எல்லா உடம்புகளிலும் வாழ்ந்து எல்லா மனங்களின்மூலம் செயல்படுவதும், எல்லோருடனும் நம்மை ஒன்றாக உணர்வதுமே மரணமிலாப் பெருநிலை. நமது உடம்பின்மூலம் மட்டுமின்றி எல்லா உடம்புகளின்மூலமும் நாம் உணர்கிறோம். எல்லா உடம்புகளின்மூலமும் நாம் உணர வேண்டும். இரக்கம் என்பது என்ன? நம் உடம்பில் எழுகின்ற இந்த உணர்ச்சிக்கு ஏதாவது எல்லை உண்டா? இந்த உணர்ச்சியை முழுப் பிரபஞ்சத்தின் மூலமும் நாம் உணர்கின்ற காலம் வரலாம்.

இதனால் கிடைக்கும் லாபம் என்ன? இந்தப் பன்றி-உடம்பை விடுவது மிகக் கடினம். நமது இந்த ஒரு பன்றி-உடம்பின்மூலம் கிடைக்கும் அற்ப இன்பத்தை விடுவதற்கு நாம் வருந்துகிறோம்! 'இதை விடு,' என்று வேதாந்தம் சொல்லவில்லை; 'இதைக் கடந்து செல்' என்றுதான் அது கூறுகிறது. உடலை வருத்தும் பயிற்சிகள் தேவையில்லை. இரண்டு உடம்புகளால் கிடைக்கும் அனுபவம், ஒன்றால் கிடைப்பதை விடச் சிறந்ததாகவே இருக்கும், மூன்று உடல்களால் கிடைப்பது இன்னும் சிறந்ததாக இருக்கும். முழுப் பிரபஞ்சத்தின்மூலமும் என்னால் இன்பம் அனுபவிக்க முடியுமானால் பிரபஞ்சமே என் உடம்பு ஆகிவிடுகிறது.

இந்தப் போதனைகளைக் கேட்டு பயந்து நடுங்குபவர்கள் உண்டு. தாங்கள், கொடுங்கோலரான ஒரு கடவுளால் படைக்கப்பட்ட பன்றி-உடம்புகள் அல்ல என்பதைக் கேட்க அவர்கள் விரும்புவதில்லை. 'மேலே வாருங்கள்' என்று நான் அவர்களைக் கூப்பிடுகிறேன். 'நாங்கள் பாவத்தில் பிறந்தவர்கள், யாராவது அருள்புரிந்து எங்களைக் கைதூக்கி விடாமல் நாங்கள் மேலே வர முடியாது' என்று அவர்கள் அழுகிறார்கள். 'நீங்கள் தெய்வீகமானவர்கள்' என்கிறேன் நான். ஆனால் அவர்களோ, 'துரோகி, தெய்வ நிந்தை செய்கிறாய் நீ. இந்தத் துணிச்சல் உனக்கு எப்படி வந்தது? ஓர் அற்ப ஜீவன் எப்படி இறைவனாக முடியும்? நாம் பாவிகளே' என்கிறார்கள். இதைக் கேட்டு அவ்வப்போது நான் மனம் தளர்ந்துவிடுகிறேன். 'நரகம் என்ற ஒன்று இல்லாவிட்டால் மதம் இருக்க முடியுமா?' என்று நூற்றுக்கணக்கானோர் என்னைக் கேட்கிறார்கள்.

தாங்களாகவே விரும்பி நரகத்திற்குப் போகின்ற அவர்களை யார்தான் தடுக்க முடியும்?

நீங்கள் கனவு காண்பவற்றையெல்லாம், நினைப்பவற்றை யெல்லாம் நீங்கள் படைக்கிறீர்கள். நீங்கள் நினைப்பதும் கனவு காண்பதும் நரகமானால் இறந்த பின்பு நரகத்தைக் காண்பீர்கள்; தீமையை நினைத்தால், சாத்தானை எண்ணினால் அவற்றைக் காண்பீர்கள்; பேய் பிசாசுகளை எண்ணினால் அவற்றைக் காண்பீர்கள். நீங்கள் என்ன நினைக்கிறீர்களோ அப்படியே ஆகிறீர்கள். சிந்திக்க வேண்டுமானால் நல்ல எண்ணங்களையே, மேலான எண்ணங்களையே சிந்தியுங்கள். நீங்கள் பலவீன மான அற்பப் புழுக்கள் என்று ஏன் நினைக்கிறீர்கள்? நாம் பலவீனர்கள் என்று நிச்சயப்படுத்திக்கொண்டால் அப்படியே ஆகிறோம், நம்மால் முன்னேற முடியாது. விளக்கையும் அணைத்துவிட்டு, ஜன்னல்களையும் மூடிவிட்டு, 'இருட்டு, இருட்டு' என்று கூச்சலிடுகிறோம், என்ன முட்டாள்தனம்! 'நான் பாவி, நான் பாவி' என்று அடித்துக்கொள்வதால் என்ன பயன்? இருட்டில் இருந்தால் விளக்கை ஏற்ற வேண்டும், இருளெல்லாம் போயே போய்விடும். என்றாலும் மனித இயல்பு தான் எவ்வளவு வினோதமானது! தங்கள் வாழ்க்கையில் ஊடுருவி நிற்பது பிரபஞ்ச மனம்தான் என்பது தெரிந்தும், மக்கள் சாத்தானையும் இருளையும் பொய்களையும் பற்றியே அதிகம் நினைக்கிறார்கள். உண்மையைச் சொல்லுங்கள், புரிந்து கொள்ள மாட்டார்கள், இருளையே அவர்கள் அதிகம் விரும்புகிறார்கள்.

இதுதான் வேதாந்தம் கேட்கின்ற ஒரு பெரிய கேள்விக்கு அடிப்படையாக அமைகிறது: மனிதர்கள் ஏன் இவ்வளவு பயப்படுகிறார்கள்? அவர்களே தங்களைப் பலவீனர்களாகவும் பிறர் துணையை நாடுபவர்களாகவும் ஆக்கிக் கொண்டது தான் இந்தப் பயத்திற்குக் காரணம். நாம் சோம்பேறிகள், நாமாக எதையும் செய்ய விரும்புவதில்லை. ஒரு கடவுளோ, ஓர் அவதார புருஷரோ, மகானோ வந்து நமக்காக எல்லாம் செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். பெரிய பணக் காரன் நடப்பதே இல்லை, எப்போதும் வண்டியிலேயே போகிறான். பல ஆண்டுகள் கடக்கின்றன, திடீரென்று ஒரு நாள் அவனை வாத நோய் தாக்குகிறது, அவன் விழிக்கிறான், தான் வாழ்ந்த முறை சரியல்ல என்பது அப்போதுதான் அவனுக்கு உறைக்கிறது. எனக்காக வேறு யாரும் நடக்க

முடியாது. எனக்காக இன்னொருவர் நடந்த ஒவ்வொரு முறையும் கொஞ்சம் கொஞ்சமாக எனக்குக் கேட்டையே நான் தேடிக் கொண்டிருந்தேன். ஒருவனுடைய வேலைகளை எல்லாம் அவனுக்காக இன்னொருவன் செய்துவந்தால் முன்னவனுடைய அங்கங்களெல்லாம் இயற்கைத் திறனை இழந்துவிடும். நமக்கு நாமே செய்கின்ற செயல்கள் மட்டுமே நம் செயல்கள். நமக்காக வேறொருவர் செய்கின்ற எதுவும் நம் செயல் ஆகாது. எனது சொற்பொழிவுகளால் நீங்கள் ஆன்மீக உண்மைகளை அறிந்துவிட முடியாது. அப்படி உங்களால் ஏதாவது அறிய முடிந்தால், நான் அதை வெளிப்படுத்த உதவிய ஒரு சிறு கருவி, அவ்வளவுதான். மகான்களும் ஆச்சாரியர் களும் இதைத்தான் செய்ய முடியும். உதவிக்காகப் பிறரைத் தேடி ஓடுவது முட்டாள்தனம்.

இந்தியாவில் மாட்டு வண்டிகள் இருப்பது உங்களுக்குத் தெரியும். பொதுவாக இரண்டு மாடுகளை வண்டியில் கட்டி யிருப்பார்கள். ஒரு கற்றை வைக்கோலை மாடுகளின் கண் களுக்குமுன் அவற்றின் வாய்க்கு எட்டாத அளவில் தொங்க விட்டிருப்பார்கள். மாடுகள் அந்த வைக்கோலைத் தின்ன முயன்றுகொண்டே நடக்கும், ஆனால் அவை எட்டாது. நமக்குப் பிறரால் கிடைக்கும் உதவியும் இதுபோன்றதுதான். பாதுகாப்பு, வலிமை, அறிவு, இன்பம் இவையெல்லாம் வெளியிலிருந்து கிடைக்கும் என்று நாம் நினைக்கிறோம்; என்றுமே எதிர்பார்க்கிறோம். ஆனால் அது கிடைப்பதில்லை. ஒரு உதவியும் ஒருபோதும் வெளியிலிருந்து வருவதில்லை.

மனிதனுக்கு உதவ யாரும் இல்லை; யாரும் இதுவரை இருந்ததில்லை, இருக்கவில்லை, இருக்கப் போவதும் இல்லை. ஏன் இருக்க வேண்டும்? நீங்கள் மனிதர்கள் அல்லவா? மகளிர் அல்லவா? உலக நாயகர்களான உங்களுக்குப் பிறரது உதவியா? வெட்கமாக இல்லை? நீங்கள் மண்ணாக மட்கிப் போகின்ற நிலைமை வரும்போதே உதவி வரும். ஆனால் நீங்கள் ஆன்மா. நீங்களே முயன்று துன்பங்களிலிருந்து விடுபடுங்கள். உங்களை நீங்களே காப்பாற்றிக் கொள்ளுங்கள். உங்களுக்கு உதவ யாரும் இல்லை, முன்பு இருந்ததும் இல்லை. இருப்பதாக நினைப்பது ஓர் இனிய மயக்கம். அதனால் எந்த லாபமும் இல்லை.

கிறிஸ்தவ மதப் பிரச்சாரகர் ஒருவர் ஒருநாள் என்னிடம் வந்து, 'நீ ஒரு மகா பாவி' என்று கூறினார். 'ஆம், உண்மைதான். அதனால் என்ன?' என்றேன் நான். அவர் ஒரு மதப் பிரச்சாரகர்,

என்னை விடவில்லை. அவரைக் கண்டாலே நான் ஓடி விடுவேன். அவர் என்னிடம், 'உன்னைக் காப்பாற்ற நான் சிலவற்றை வைத்திருக்கிறேன். நீ பாவி. நீ நரகத்திற்குப் போகப் போகிறாய்' என்றார். 'மிக நல்லது, வேறு ஏதாவது உண்டா?' என்று கேட்டேன். பிறகு அவரிடம், 'ஆமாம், நான் நரகத்திற்குப் போவது சரி, நீங்கள் எங்கே போவீர்கள்?' என்று கேட்டேன். 'நான் சொர்க்கத்திற்குப் போவேன்' என்றார் அவர். 'நான் நரகத்திற்கே போகத் தீர்மானித்துவிட்டேன்' என்றேன் நான். அன்றுமுதல் அவர் என்னைத் தொல்லைப்படுத்துவது நின்றது.

'நீங்கள் தொலைந்தீர்கள். எங்கள் மதத்தை நம்புங்கள், ஏசு உங்களைக் கரையேற்றுவார்' என்கிறார் கிறிஸ்தவர். இது வெறும் மூட நம்பிக்கை அல்லாமல் வேறல்ல என்பது ஒருபுற மிருக்க, இதை உண்மை என்றே வைத்துக்கொண்டால், கிறிஸ்தவ நாடுகளில் கொடுமையும் பாவமும் இருக்கவே கூடாதே! இதனை நாம் நம்பித்தான் பார்ப்போம்—நம்புவதால் நமக்கு இழப்பு ஒன்றும் இல்லை. ஆனால் இந்த நம்பிக்கையால் எந்தப் பலனும் இல்லையே! 'ஏன் இவ்வளவு தியவர்கள் இருக்கிறார்கள்?' என்று அவர்களைக் கேட்டால், 'நாங்கள் இன்னும் வேலை செய்ய வேண்டும்' என்கிறார்கள். இறைவனை நம்புங்கள், உங்கள் முயற்சியையும் கைவிடாதீர்கள். இறைவனை வேண்டுங்கள், அவர் வந்து உங்களுக்கு உதவட்டும்! ஆனால் போராடுவதும் பிரார்த்திப்பதும் வழிபடுவதும் நான், என் பிரச்சினைகளுக்கு வழி தேடுபவன் நான், பெருமையை இறைவன் தட்டிக்கொண்டு போகிறார். இது சரியல்ல. நான் இப்படிச் செய்ய மாட்டேன்.

ஒருமுறை என்னை ஒரு விருந்திற்கு அழைத்திருந் தார்கள். எனக்கு விருந்தளித்த பெண்மணி, உணவிற்காக இறைவனுக்கு நன்றி கூறும்படி என்னிடம் சொன்னார். அதற்கு நான், 'அம்மா, நான் உங்களுக்கு நன்றி கூறுகிறேன். நன்றி உங்களுக்கே உரியது' என்றேன். நான் வேலை செய்தால் எனக்கே நன்றி சொல்வேன். பாடுபட்டு உழைத்துச் சேர்த்த தற்காக எனக்கு நானே நன்றி கூறிக்கொள்வேன்.

நீங்கள் உழைத்து உழைத்து, அதன் பலனுக்காக வேறு ஒருவருக்கு மூடத்தனமாக நன்றி கூறும்போதெல்லாம் நீங்கள் பயப்படுகிறீர்கள் என்பது தெரிகிறது. பல்லாயிரம் ஆண்டுகளாக வளர்ந்து வருகின்ற இந்த மூட நம்பிக்கைகளுக்கு இன்றுடன் விடை கொடுங்கள். ஆன்மீகவாதிகள் ஆகச் சிறிது

கடினமாகப் பாடுபட வேண்டும். மூட நம்பிக்கைகள் வெறும் உலகாயதமானவை, ஏனெனில் உடலுணர்வு, உடலுணர்வு, உடலுணர்வு மட்டுமே இவற்றுக்கு அடிப்படை. இதில் ஆன்மாவுக்கு இடமே இல்லை. ஆன்மாவுக்கு மூட நம்பிக்கைகளே இல்லை; உடம்பின் வீண் ஆசைகளுக்கு அப்பாற்பட்டது அது.

ஆனால் இந்த வீண் ஆசைகள் இங்கும் அங்குமாகச் சில இடங்களில் ஆன்மீக வாழ்விலும் புகுந்துவிடுகின்றன. ஆவியுலகத் தொடர்பினரின் கூட்டங்கள் பலவற்றில் நான் கலந்து கொண்டிருக்கிறேன். அவற்றுள் ஒன்றில் ஒரு பெண் தலைமை வகித்தாள். அவள் அங்கே ஒரு நாள் என்னிடம், 'உங்கள் தாயும் தாத்தாவும் என்னிடம் வருவதுண்டு' என்றாள். அவர்கள் அவளை வணங்கி அவளுடன் பேசுவார்களாம். ஆனால் இதில் வினோதம் என்னவென்றால் என் தாய் இன்னும் உயிரோடிருக்கிறார்! மரணத்திற்குப் பின்னரும் உறவினர் அதே உடம்புடன் வாழ்கிறார்கள் என்று நினைக்கத்தான் மக்கள் விரும்புகிறார்கள். இந்த மூடநம்பிக்கையைத் தங்களுக்கு அனுகூலமாக்கிக் கொள்கிறார்கள் ஆவியுலகத் தொடர்பினர். இறந்த என் தந்தை இன்னும் அதே அற்ப உடலுடன் இருக்கிறார் என்பது எனக்கு வருத்தத்தையே தரும். தங்கள் உறவினர்கள் இன்னும் ஜடப்பொருளில் கட்டுண்டு கிடக்கிறார்கள் என்று கேட்பதில் மக்கள் ஆறுதல் பெறுகிறார்கள். மற்றோர் இடத்தில் ஏசுவையே என்னிடம் அழைத்துவந்து விட்டார்கள். 'பிரபுவே, சுகம்தானா?' என்று நான் கேட்டேன். இவை என்னை நம்பிக்கை இழக்கச் செய்கின்றன. பெரிய மகானான ஏசுவே இன்னும் உடம்புடன் இருக்கிறார் என்றால் அற்ப ஜீவன்களாகிய நம் நிலைமை என்னவாகும்? ஆனால் அவர்கள் யாரையும் தொட என்னை அந்த ஆவியுலகத் தொடர்பினர் அனுமதிக்கவில்லை. இவையெல்லாம் உண்மையானாலும் எனக்குத் தேவையில்லை. 'அம்மா, அம்மா! இவர்கள் நாத்திகர்கள். உண்மையில் மக்களின் நிலைமை இதுதான். வெறும் புலனின்ப ஆசைகள், இங்கே அனுபவிப்பவை போதாதென்று இறந்த பிறகும் இவற்றை நுகர விரும்புகிறார்களே!' என்று எண்ணிக் கொள்கிறேன் நான்.

வேதாந்தம் கூறுகின்ற கடவுள் யார்? அவர் ஒரு தத்துவம், மனிதர் அல்ல. நீங்களும் நானும் எல்லாம் சகுணக் கடவுள்கள். பிரபஞ்சத் தலைவரும், பிரபஞ்சத்தைப் படைத்து, காத்து,

அழிப்பவருமான முழுமுதற் கடவுள் ஒரு நிர்க்குணத் தத்துவம். நீங்கள், நான், பூனை, எலி, பேய், பிசாசு எல்லாமே அந்தத் தத்துவத்தின் உருவத் தோற்றங்கள், எல்லோரும் சகுணக் கடவுள்கள். சகுணக் கடவுள்களை வழிபட நீங்கள் விரும்பு கிறீர்கள். அது உங்களை நீங்களே வழிபடுவதுதான். என் அறிவுரையை நீங்கள் கேட்பதானால், எந்தச் சர்ச்சுகளுக்கும் போகாதீர்கள். வெளியே வந்து உங்களைத் தூய்மைப்படுத்திக் கொள்ளுங்கள். பல்லாயிரம் ஆண்டுகளாக உங்களைப் பற்றி நிற்கின்ற மூடநம்பிக்கைகளை மீண்டும்மீண்டும் கழுவி ஒழியுங்கள். இந்த நாட்டில் நீங்கள் அடிக்கடிக் குளிப்பதில்லை அல்லவா? அதனால் ஒருவேளை அப்படிக் கழுவிக்கொள்ள நீங்கள் விரும்பாமல் இருக்கலாம். அடிக்கடிக் குளிப்பது இந்தியர்களின் வழக்கம், உங்கள் சமுதாயப் பழக்கம் அல்ல அது.

'நீங்கள் ஏன் அடிக்கடிச் சிரிக்கிறீர்கள்? ஏன் நகைச்சுவை யாகப் பேசுகிறீர்கள்?' என்று என்னைப் பலமுறை கேட்டிருக் கின்றனர். நானும் இறுக்கமாக இருப்பதுண்டு—ஆனால் அது வயிற்று வலி வரும்போது மட்டுமே. இறைவன் ஆனந்தமே வடிவானவர். இருப்பவை அனைத்திலும் உள்ள உண்மை அவரே, ஒவ்வொரு பொருளிலும் உள்ள நன்மையும் உண்மையும் அவரே. நீங்கள் எல்லோரும் அவரது அவதாரங்கள். இதுதான் பெருமை. நீங்கள் அவருக்கு அருகில் இருக்கும் அளவிற்கு உங்கள் அழுகையும் கூச்சலும் குறைவாகும். நாம் அவரை விட்டு விலகுமளவு நமது துன்பமும் துயரமும் மிகும். அவரை அறிகின்ற அளவிற்குத் துன்பமும் துயரமும் அகலும். கடவுளில் வாழும் ஒருவனைக்கூடத் துன்பம் பாதிக்கும் என்றால் அவரில் வாழ்வதால் என்ன பயன்? அத்தகைய கடவுளால்தான் என்ன பயன்? அவரைப் பசிபிக் மகா சமுத்திரத்தில் வீசி எறிந்துவிடுங்கள். அவர் நமக்குத் தேவை யில்லை.

ஆனால் கடவுள் எல்லையற்றவர், குணங்கள் இல்லாதவர், என்றும் உள்ளவர், என்றும் மாறாதவர், அழிவற்றவர், பயம் இல்லாதவர். நீங்கள் எல்லோரும் அவரது அவதாரங்கள், அவரது உருவங்கள். இவரே வேதாந்தம் காட்டும் கடவுள். அவரது சொர்க்கமோ எங்கும் இருக்கிறது. இருக்கின்ற எல்லா சகுணக் கடவுள்களும் அதாவது நீங்கள் எல்லோரும் இந்தச் சொர்க்கத்தில்தான் இருக்கிறீர்கள்.

கோயில்களில் பிரார்த்திப்பதையும் மலர் தூவுவதையும் விட்டொழியுங்கள்!

நீங்கள் எதற்காகப் பிரார்த்திக்கிறீர்கள்? சொர்க்கத்திற்குப் போக, ஏதோ ஒன்றைப் பெற, வேறு யாரோ ஒருவருக்கு அது கிடைக்காமல் இருக்க, அதற்குத்தானே! 'இறைவா, எனக்கு இன்னும் அதிக உணவு வேண்டும், வேறு யாராவது பட்டினி கிடக்கட்டும்.' உண்மையான, முடிவற்றவரான, நித்திய ஆனந்தமே உருவான, பகுதியோ குறையோ எதுவும் இல்லாதவரான, என்றும் சுதந்திரரான, என்றும் தூயவரான, என்றும் பரிபூரணரான கடவுளைப்பற்றி இப்படியுமா ஒரு கருத்து! நம் மனிதப் பண்புகள், செயல்கள், கட்டுப்பாடுகள் அனைத்தையும் நாம் அவரில் ஏற்றுகிறோம். அவர் நமக்கு உணவு, துணி எல்லாம் கொண்டுவந்து தர வேண்டும். உண்மையில் இவற்றை எல்லாம் நமக்கு நாமேதான் செய்துகொள்ள வேண்டும்; வேறு யாரும் நமக்காகச் செய்வதில்லை. இதுதான் கலப்பற்ற உண்மை.

ஆனால் இதைப்பற்றி நீங்கள் அபூர்வமாகவே சிந்திக்கிறீர்கள். இறைவனுக்கு நீங்கள் மிக வேண்டியவர்கள், நீங்கள் கேட்பதை அவர் தருவார் என்று கற்பனை செய்துகொள்கிறீர்கள். அவரிடம் எல்லா மனிதர்களுக்கும் எல்லா உயிர்களுக்குமாக எந்த நன்மையையும் நீங்கள் கேட்பதில்லை. உங்களுக்கும், உங்கள் குடும்பத்திற்கும், உங்களுக்கு வேண்டியவர்களுக்குமே நன்மை வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறீர்கள். இந்து பட்டினி கிடக்கும்போது நீங்கள் கவலைப்படுவதில்லை. கிறிஸ்தவர்களின் கடவுளே இந்துக்களுக்கும் கடவுள் என்பது அப்போது உங்களுக்குத் தோன்றுவதில்லை. கடவுளைப்பற்றிய நமது கருத்து, நமது பிரார்த்தனை, நமது வழிபாடு எல்லாமே நம் அறியாமையால், நம்மை உடம்பாகக் கருதுகின்ற முட்டாள்தனத்தால் கெட்டுவிடுகின்றன. நான் சொல்வது உங்களுக்குப் பிடிக்காமல் போகலாம். இன்று என்னை நீங்கள் சபிக்கலாம்; ஆனால் நாளைக்கு வாழ்த்துவீர்கள்.

நாம் சிந்தனையாளர்கள் ஆக வேண்டும். ஒவ்வொரு பிறப்பும் துன்பமயமானது. நாம் உலகாயதத்திலிருந்து விடுபட வேண்டும். தன் பிடியிலிருந்து நாம் விடுபட உலக அன்னை அனுமதிக்க மாட்டாள். ஆனாலும் நாம் முயல வேண்டும். இந்தப் போராட்டம்தான் எல்லா வழிபாடும். மற்ற அனைத்தும் வெறும் நிழலே. நீங்கள் சகுணக் கடவுள். இதோ இப்போது

நான் உங்களை வழிபட்டுக் கொண்டிருக்கிறேன். இதுதான் மிக மேலான பிரார்த்தனை. உலகம் முழுவதையும் இவ்வாறு வழிபடுங்கள், அதாவது, உலகிற்குச் சேவை செய்வதன்மூலம் வழிபடுங்கள். இப்படி உயர்ந்த மேடைமீது நிற்பது வழிபாடு போல் தோன்றவில்லைதான். ஆனால் நான் செய்வது சேவை யாகுமானால் அது வழிபாடே.

எல்லையற்ற உண்மை என்பது அடைய வேண்டிய ஒன்றல்ல, பிறப்பற்றதாக இறப்பற்றதாக அது எப்போதும் இங்கேதான் இருக்கிறது. பிரபஞ்சத் தலைவனான இறைவன் எல்லோரிலும் உள்ளார். ஒரே ஒரு கோயில்தான் உண்டு, அது உடம்பு. இந்தக் கோயில் ஒன்றுதான் உள்ளது. ஆன்மாக்களின் தலைவரான, மன்னருக்கு மன்னரான இறைவன் இந்த உடம்பிற்குள்தான் உறைகிறார். இதை நாம் காண்பதில்லை. எனவே நாம் கற்சிலைகளை வடிக்கிறோம், அவற்றைச் சுற்றிக் கோயில்கள் கட்டுகிறோம். வேதாந்தம் இந்தியாவில் என்றென்றும் இருந்திருக்கிறது. ஆனால் இந்தியா இத்தகைய கோயில்களால் நிரம்பியுள்ளது. கோயில்கள் மட்டுமல்ல, சிற்பங்கள் நிறைந்த குகைகளும் உள்ளன. 'கங்கைக்கரையில் வாழ்ந்தும் தண்ணீருக்காகக் கிணறு வெட்டுகிறான் முட்டாள்.'—நமது நிலைமை அதுவே. இறைவனிலேயே வாழ்ந்தும் கோயில் கட்டுகிறோம். சதாசர்வ காலமும் இறைவன் நமது உடம்பென்னும் கோயிலில் குடிகொண்டிருக்கிறார். ஆனால் அவரை வெளியில் உருவத்திலேயே காண முயல் கிறோம். நாமெல்லாம் பைத்தியங்கள்—இதுவே பெரிய மன மயக்கமும்கூட.

எல்லாவற்றையும் இறைவனாக வழிபடுங்கள்—ஒவ்வோர் உருவமும் அவரது கோயில். மற்றவை அனைத்தும் மாயை. எப்போதும் அகநோக்குடன் இருங்கள், புறநோக்கு ஒருபோதும் வேண்டாம். வேதாந்தம் போதிக்கின்ற கடவுள் இதுவே, அவரது வழிபாடும் இதுவே. இயற்கையாகவே வேதாந்தத்தில் ஜாதி, மத, இன பாகுபாடுகளுக்கு இடம் இல்லை. இந்த மதம் எப்படி இந்தியாவின் தேசிய மதமாக இருக்க முடியும்?

நூற்றுக்கணக்கான ஜாதிகள்! ஒருவன் மற்றவனின் உணவைத் தொட்டுவிட்டால், 'ஐயோ, கடவுளே, காப்பாற்றும், நான் தீட்டாகிவிட்டேன்' என்று ஓலமிடுகிறான். மேலை நாடு களுக்கு வந்துவிட்டு, நான் இந்தியாவிற்குத் திரும்பியபோது, நான் மேலை நாட்டினருடன் கலந்து பழகியதையும், ஆசார

நியதிகளை மீறியதையும் கண்டித்து வைதீக இந்துக்கள் பலர் கூச்சலிட்டார்கள். வேதங்களின் உண்மைகளை மேலை நாட்டினருக்கு நான் போதிப்பதை அவர்கள் விரும்பவில்லை.

ஆனால் வேறுபாடுகளும் பிரிவுகளும் எப்படி இருக்க முடியும்? நாம் எல்லோரும் ஆன்மா, எல்லோரும் ஒன்றே என்றால் பணக்காரன் ஏழையை அலட்சியம் செய்வதற்கோ, பண்டிதன் பாமரனைப் புறக்கணிப்பதற்கோ இடம் ஏது? சமுதாயம் மாறாமல் வேதாந்தம் போன்ற மதம் எப்படி வேரூன்ற முடியும்? உண்மையான பகுத்தறிவு உடையவர்கள் அதிகமாக இருப்பதற்கு இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகும். மக்களுக்குப் புதுமையில் மதிப்பை உண்டாக்குவதும், சிறந்த கருத்துக்களை அவர்கள் ஏற்றுக்கொள்ளச் செய்வதும் மிகவும் கடினம். பழைய மூடநம்பிக்கைகளை ஒழிப்பதோ அதைவிடக் கடினம், மிகமிகக் கடினம். அவை எளிதில் அழியாது. படித்த மனிதனும் இருட்டைக் கண்டு நடுங்குகிறான்—குழந்தைப் பருவத்தில் படித்த கதைகள் எல்லாம் அவனது கண்முன் வருகின்றன, அவன் பேய்களைக் காண்கிறான்.

வேதாந்தம் என்ற சொல்லின் மூலச் சொல்லான வேதம் என்ற சொல் அறிவு என்று பொருள்படுகிறது. எல்லா அறிவும் வேதமே. இறைவனைப்போல் இவையும் எல்லையற்றவை. யாரும் எப்போதும் அறிவை உருவாக்கியதில்லை. அறிவு உருவாக்கப்படுவதை நீங்கள் எப்போதாவது பார்த்திருக்கிறீர்களா? அது கண்டுபிடிக்கப்படுகிறது—மறைக்கப் பட்டிருப்பதன் மறைப்பு விலக்கப்படுகிறது, அவ்வளவுதான். அது எப்போதும் இங்கேயே இருக்கிறது, ஏனெனில் அது கடவுள். கடந்தகால, நிகழ்கால, எதிர்கால அறிவெல்லாம் நம் ஒவ்வொருவருள்ளும் இருக்கின்றன. நாம் அதைக் கண்டு பிடிக்கிறோம், அவ்வளவுதான். இந்த அறிவெல்லாம் கடவுளே. வேதம் என்பது பெரிய சம்ஸ்கிருத நூல். எங்கள் நாட்டில் வேதம் படிப்பவர்களின் முன்னர் பிறர் வீழ்ந்து வணங்குவது வழக்கம். விஞ்ஞானம் படித்தவர்களை நாங்கள் பெரிதாக எடுத்துக்கொள்வதில்லை. இது மூடநம்பிக்கை, வேதாந்தம் அல்ல. இது முழுக்கமுழுக்க உலகாயதம். இறைவனுடன் இணைந்த எல்லா அறிவும் புனிதமானவை. அறிவே இறைவன். நம் ஒவ்வொருவரிலும் எல்லையற்ற அறிவு பரிபூரணமாக உள்ளது. நீங்கள் பாமரர்கள்போல் தோன்றினாலும் உண்மை யில் அப்படியல்ல. நீங்கள் ஒவ்வொருவரும் இறைவனின்

அவதாரங்கள். எல்லாம் வல்ல, எங்கும் நிறைந்த இறைத் தத்துவத்தின் அவதாரங்களே நீங்கள். இன்று நீங்கள் என்னைப் பார்த்துச் சிரிக்கலாம், ஆனால் இதை நீங்கள் புரிந்துகொள்ளும் காலம் வரவே செய்யும், புரிந்துகொண்டுதான் ஆக வேண்டும்; புரிந்துகொள்ளாமல் யாரும் இருக்க முடியாது.

லட்சியம் என்ன? இப்போது நான் பேசிய இந்த வேதாந்தம் புதிய மதம் அல்ல. இது மிகத் தொன்மையானது, இறைவனைப்போல் தொன்மையானது. இது காலத்தாலும் இடத்தாலும் கட்டுப்பட்டதல்ல, இது எங்கும் உள்ளது. இந்த உண்மை எல்லோருக்கும் தெரியும். இதையே நாம் எல்லோரும் ஆராய்ந்து வருகிறோம். பிரபஞ்சம் முழுவதன் லட்சியமே இதுதான். பிற இயற்கைக்கும் இது பொருந்தும்—ஒவ்வோர் அணுவும் இந்த லட்சியத்தை நோக்கியே விரைந்து கொண்டிருக்கிறது. எல்லையற்ற, தூய்மையான எந்த ஆன்மாவாவது இந்தப் பேருண்மையை அறியாமல் விடுபடும் என்று நினைக்கிறீர்களா? எல்லோரிலும் இந்த உண்மை உள்ளது. அந்த ஒரு லட்சியத்தை, அதாவது உள்ளிருக்கும் தெய்விகத்தை உணர்வதாகிய அந்த லட்சியத்தை நோக்கித்தான் அனைவரும் செல்கிறார்கள். பைத்தியக்காரன், கொலைகாரன், மூடன், இந்த நாட்டில் உங்கள் அடக்குமுறைக்கு உள்ளாகி வதைக்கப் படுபவன் எல்லோரும் ஒரே லட்சியத்தை நோக்கித்தான் செல்கிறார்கள். அறியாமலே இப்போது செய்கின்ற அதை அறிந்து செய்ய வேண்டும், நன்றாகச் செய்ய வேண்டும், அவ்வளவுதான்.

இருப்பவை அனைத்தும் ஒன்றே என்னும் உண்மை ஏற்கனவே உங்களுள் இருக்கிறது. இது இல்லாமல் யாரும் இதுவரை பிறக்கவில்லை. எவ்வளவுதான் அதை நீங்கள் மறுத்தாலும் அது தொடர்ந்து தன் இருப்பை வற்புறுத்திக் கொண்டே இருக்கிறது. மானிட அன்பு என்பது என்ன? ஏறக்குறைய அந்த ஒருமையின் வற்புறுத்தல்தான்: நானும் நீங்களும், என் மனைவி மக்களும், நண்பரும் எல்லோரும் ஒன்றே. நீங்கள் உங்களை அறியாமலே இந்த ஒருமையை வற்புறுத்துகிறீர்கள், அவ்வளவுதான். 'எந்தப் பெண்ணும் கணவனுக்காகக் கணவனை நேசிப்பதில்லை. அவனுள் இருக்கும் ஆன்மாவிற்காகவே அவனை நேசிக்கிறாள்.' இந்த அன்பில் மனைவி ஒருமையைக் காண்கிறாள். இப்படியே கணவனும் தன் மனைவியிடம் தன்னையே காண்கிறான். இது

இயற்கையாகவே, அவன் அறியாமலே நடைபெறுகிறது. ஆனால் அறிந்தே இதைச் செய்ய அவனால் இயலாது.

பிரபஞ்சம் முழுவதும் ஒன்றே உள்ளது. அதைத் தவிர எதுவும் இருக்க இயலாது. வேறுபாடுகளிலிருந்து நாம் எல்லோரும் இந்தப் பிரபஞ்ச ஒருமையை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறோம். குடும்பங்கள் குழுக்களாக, குழுக்கள் இனங்களாக, இனங்கள் நாடுகளாக, நாடுகள் மனித குலமாக என்று படிப்படியாக ஒருமையை நோக்கி முன்னேறுகின்றன. இந்த ஒருமை அனுபூதியே ஞானம், விஞ்ஞானம்.

ஒருமையே அறிவு, பன்மை என்பது அறியாமை. இந்த ஞானம் உங்கள் பிறப்புரிமை. அதை நான் உங்களுக்குப் போதிக்க வேண்டியதில்லை. உலகில் பல்வேறு மதங்கள் ஒரு போதும் இருந்ததில்லை. நாம் விரும்புகிறோமோ இல்லையோ நமக்கு முக்தி கிடைத்தேதான் தீரும். முடிவில் நீங்கள் முக்தி பெற்றுச் சுதந்திரர்கள் ஆகியே தீர வேண்டும். ஏனெனில் அது உங்கள் இயல்பு. நாம் ஏற்கனவே முக்தர்களாகத்தான் இருக்கிறோம், அது நமக்குத் தெரியவில்லை, அவ்வளவுதான். நாம் என்ன செய்து கொண்டிருந்தோம் என்பதும் நமக்குத் தெரியவில்லை. எல்லா மதங்களிலும் எல்லா லட்சியங்களிலும் ஒரே நீதிதான் அடிப்படையாக இருக்கிறது, ஒரே விஷயம்தான் போதிக்கப்படுகிறது: 'சுயநலத்தை விடு; பிறரை நேசி' என்பது தான் அது. 'ஜெஹோவாவின் கட்டளை அது' என்கிறார் ஒருவர். 'அல்லா' என்று முழங்கினார் முகமது. 'ஏசு' என்றார் மூன்றாமவர். இது ஜெஹோவாவின் கட்டளையானால், ஜெஹோவாவை அறியாதவர்களுக்கு எப்படித் தெரிந்தது? ஏசு மட்டுமே இப்படிக் கட்டளையிட்டார் என்றால், அவரைப் பற்றித் தெரியாதவர்களுக்கு இது எப்படித் தெரிந்தது? திருமாலின் கட்டளை என்றால், திருமாலைப்பற்றி எதுவும் அறியாத யூதர்கள் எப்படி அறிந்தார்கள்? இந்த எல்லா வற்றையும்விடப் பெரிய மூலம் ஒன்று இருக்கிறது. எங்கே? இறைவனின் நிலையான கோயிலில்—மிகத் தாழ்ந்தது முதல் மிக உயர்ந்தது வரையுள்ள எல்லா உயிர்களின் ஆன்மாக்களிலும் தான். அந்த எல்லையற்ற சுயநலமின்மை, எல்லையற்ற தியாகம், ஒருமையை நோக்கிச் செல்லத் தூண்டுகின்ற எல்லையற்ற வற்புறுத்தல்—இவை எல்லாம் அங்கே இருக்கின்றன.

அறியாமையின் காரணமாகவே நாம் தனித்தனி யானவர்கள்போல், எல்லைக்கு உட்பட்டவர்கள்போல்

தோன்றுகிறோம்; திரு இன்னார் திருமதி இன்னார் என்று கூறுகிவிட்டோம். ஆனால் இந்த மனமயக்கத்தையே, இந்தப் பொய்யையே இயற்கை ஒவ்வொரு கணமும் காட்டிக் கொண்டிருக்கிறது. பிறவற்றிலிருந்து வேறுபட்ட ஒரு தனி ஆணோ, தனிப் பெண்ணோ அல்ல நான். பிரபஞ்சத்தில் ஒரே உயிர் நானே. ஆன்மா தன் சொந்த மகிமையினாலேயே மேலெழுகிறது; தனது தெய்வீகத்தை ஒவ்வொரு கணமும் பறைசாற்றிக்கொண்டிருக்கிறது.

இந்த வேதாந்தம் எங்கும் இருக்கிறது, நீங்கள் அதை உணர வேண்டும், அவ்வளவுதான். மூட நம்பிக்கைகளும், முட்டாள்தனமான கருத்துக் குவியல்களும்தான் நம்மை முன்னேற விடாமல் தடுக்கின்றன. முடிந்தால் இந்தக் குப்பைகளை உதறித் தள்ளுவோம். இறைவன் என்பவர் ஆன்மா, அவரை ஆன்மாவின்மூலமும் உண்மையின்மூலமுமே வழிபட வேண்டும் என்பதைப் புரிந்து கொள்வோம். இனிமேலாவது உலகாயதர்களாக இல்லாமல் வாழ முயலுங்கள். ஜடத்தை எல்லாம் உதறிவிடுங்கள். இறைவனைப்பற்றிய கருத்து உண்மையாகவே ஆன்மீகபரமானதாக இருக்க வேண்டும். இறைவனைப் பற்றிய ஏறக்குறைய உலகாயதபரமான கருத்துக்கள் ஒழிய வேண்டும். மனிதன் ஆன்மீகத்தில் முன்னேற முன்னேற, இந்தக் கருத்துக்களை எல்லாம் தள்ளிவிட்டு முன்னேற வேண்டும். ஜடத்தை வீசியெறிந்துவிட்டு, பிரகாசிக்கும் பேரொளியில் நின்று, ஆன்மாவை ஆன்மாவின்மூலம் வழிபடுகின்ற துணிவுடைய சிலர் எல்லா நாடுகளிலும் எப்போதுமே இருந்திருக்கின்றனர்.

வேதாந்தம், அதாவது எல்லாம் ஒரே ஆன்மாதான் என்ற உணர்வு பரவுமானால் மனித குலமே ஆன்மீகமயமாகிவிடும். ஆனால் இது நடக்குமா? எனக்குத் தெரியாது. ஆயிரம் ஆண்டுகளுக்குள் நடக்காது. பழைய மூட நம்பிக்கைகள் ஒழிய வேண்டும். மூட நம்பிக்கைகளை எப்படி அழியாமல் காப்பது என்பதிலேயே நீங்கள் மூழ்கியிருக்கிறீர்கள். இத்துடன் உடன் பிறந்த சகோதரன், ஜாதிச் சகோதரன், சமுதாயச் சகோதரன் என்ற எண்ணங்கள் வேறு இருக்கின்றன. வேதாந்த லட்சியத்தை அடைவதில் இவை எல்லாம் தடைகள். மதம் என்பது இதுவரை ஒருசிலருக்கே மதமாக இருந்திருக்கிறது.

உலகம் முழுவதும் மதத்துறையில் வேலை செய்தவர்களுள் பலரும் உண்மையில் அரசியல்வாதிகள். இதுதான்

மனிதகுலத்தின் வரலாறு. உண்மை ஒன்றிற்காகவே தவிர வேறு எதற்காகவும் நான் வாழவில்லை என்ற உறுதியுடன் அவர்கள் வாழ்ந்ததாகத் தெரியவில்லை. சமுதாயமே அவர்கள் வழிபட்டு வந்த தேவதை; பெரும்பான்மையினர் பின்பற்றுகின்ற மூட நம்பிக்கைகளையும் பலவீனங்களையும் ஆதரித்து வளர்ப் பதிலேயே அவர்கள் ஊக்கம் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் இயற்கையை வெல்ல முயற்சிக்கவில்லை, இயற்கைச் சூழ் நிலைக்குள் தங்களைப் பொருத்திக்கொள்ளவே முயல் கிறார்கள், அதற்குமேல் எதுவும் இல்லை. இந்தியாவிற்குச் சென்று ஒரு புது மதத்தைப் பிரச்சாரம் செய்யுங்கள், அதற்கு யாரும் செவிசாய்க்க மாட்டார்கள். ஆனால், 'இந்த மதம் வேதங்களிலிருந்து உருவாக்கப்பட்டது' என்று சொல்லுங்கள், 'ஆகா, அது நல்லது' என்பார்கள். இங்கே நான் இந்தக் கோட்பாடுகளைச் சொல்கிறேன். எத்தனை பேர் இதை ஒரு பெரிய விஷயமாக எடுத்துக் கொள்வீர்கள்? ஆனால் எல்லா உண்மையும் இங்கே உள்ளது, உண்மையை உங்களுக்குச் சொல்ல வேண்டுவது என் கடமை.

இந்தப் பிரச்சினைக்கு இன்னொரு பக்கமும் உள்ளது: மிக உயர்ந்த, தூய உண்மையை எல்லோரும் உடனே உணர்வது என்பது முடியாத காரியம்; பூஜை, பிரார்த்தனை முதலிய நடைமுறை மதச் சடங்குகளின்மூலம் படிப்படியாகவே ஒரு வரை இதற்குக் கொண்டுவர வேண்டும்' என்று கூறுகின்றனர். அது சரியான வழியா இல்லையா என்பது எனக்கு உறுதியாகத் தெரியவில்லை. இந்தியாவில் நான் இரண்டு வழிகளிலும் முயல்கிறேன்.

கல்கத்தாவில் கடவுளின் பெயரிலும், வேதங்களின் பெயரிலும் பைபிள், ஏசு, புத்தர் போன்ற பெயர்களிலும் உருவங்கள், கோயில்கள் எல்லாமே உள்ளன. அதை முயன்று பார்ப்போம். ஆனால் இமயமலையில் உயர்ந்த ஒரு பகுதியில், கலப்பற்ற உண்மையைத் தவிர வேறு எதுவும் புகாத இடம் ஒன்று அமைக்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன். இன்று உங்களிடம் கூறிய இந்தக் கருத்தை அங்கே செயல் முறைப்படுத்திப் பார்க்கலாம் என்று இருக்கிறேன். அங்கே ஓர் ஆங்கிலேயரும் ஆங்கிலப் பெண்மணியும் அதைக் கவனித்துக் கொண்டிருக்கின்றனர். உண்மையை அறிய விழைபவர்களுக்குப் பயிற்சியளிப்பதும், பயமின்றியும் மூட நம்பிக்கைகள் இல்லாமல் குழந்தைகளை வளர்ப்பதுமே அதன் நோக்கம். அவர்கள் காதில்

ஏசு, விஷ்ணு, சிவன், புத்தர் என்ற வார்த்தைகளே விழாது. இவற்றிற்கெல்லாம் அங்கே இடமில்லை. சொந்தக் காலில் நிற்பதற்கு அவர்கள் ஆரம்பத்திலிருந்து பயிற்சி பெறுவார்கள். 'இறைவன் ஓர் ஆன்மா, அவரை ஆன்மாவின்மூலமும் உண்மை மூலமுமே வழிபட வேண்டும் என்பது அவர்களுக்குக் குழந்தைப் பருவம் முதலே கற்பிக்கப்படும். ஒவ்வொருவரையும் ஆன்மா வாகவே காண வேண்டும். அதுதான் லட்சியம். இதில் எவ்வளவு வெற்றி கிடைக்கும் என்பது எனக்குத் தெரியாது. நான் விரும்புவதை இன்று போதிக்கிறேன். இப்படி ஒரு லட்சியத் திலேயே நான் வளர்ந்திருக்கக் கூடாதா, துவைதக் கொள்கை களையே அறியாமல் இருந்திருக்கக் கூடாதா என்று நான் எண்ணுகிறேன்!

துவைத முறையிலும் ஏதோ நன்மை இருக்கிறது என்பதைச் சிலவேளைகளில் நான் ஒப்புக்கொள்கிறேன். பலவீனமான பலருக்கு இது உதவியாக உள்ளது. துருவ நட்சத்திரத்தை ஒருவருக்குக் காட்ட வேண்டுமானால் முதலில் அதன் அருகி லுள்ள ஒளிமிக்க நட்சத்திரம் ஒன்றைக் காட்டி, பிறகு அதை விட ஒளி குறைந்த ஒன்றைக் காட்ட வேண்டும், பிறகு இன்னும் மங்கிய ஒன்றைக் காட்டி அதன்பின்பு அருகிலிருக்கும் துருவ நட்சத்திரத்தைக் காட்டலாம். இதன்மூலம் அந்த நட்சத்திரத்தைப் பார்ப்பது எளிதாகிறது. எல்லா சடங்குகளும் கிரியைகளும் பைபிள்களும் தெய்வங்களும் மதத்தின் ஆரம்பப் படிகளே, மதத்தின் பாலர்வகுப்பே.

சரி. இப்போது நான் மறுபக்கத்தைப்பற்றிச் சிந்தித்துப் பார்க்கிறேன். மெதுவான, படிப்படியான இந்த முறையைப் பின்பற்றினால் உண்மையை உணர எவ்வளவு காலம் ஆகும்? எவ்வளவு காலம் காத்திருக்க வேண்டும்? பயன்படத் தக்க அளவுக்கு இந்த முறை வெற்றி தரும் என்பது என்ன நிச்சயம்? இதுவரை இதனால் வெற்றி ஏற்பட்டதாகத் தெரியவில்லை. படிப்படியாகப் பலன் தருகிறதோ, திடீர் என்று பலன் தரு கிறதோ, பலவீனர்களுக்கு எளிதோ இல்லையோ, எப்படி யானாலும் இந்தத் துவைத முறை தவறை அடிப்படையாகக் கொண்டது என்பதை மறுக்க முடியுமா? இப்போது நடை முறையிலிருக்கும் மதச் சடங்குகள் நம்மைப் பலவீனர்கள் ஆக்குகின்றனவே, எனவே இவை தவறு அல்லவா? அவை தவறான கருத்தை, மனிதனைப்பற்றிய தவறான பார்வையை அடிப்படையாகக் கொண்டது. இரண்டு தவறுகள் சேர்ந்து

ஒரு உண்மையாக முடியுமா? பொய் உண்மையாகிவிடுமா? இருள் ஒளியாகிச் சுடர் விடுமா?

மறைந்த ஒருவரின் சேவகன் நான். நான் தூதுவன் மட்டுமே. நான் பரிசோதனை செய்து பார்க்க விரும்புகிறேன். நான் உங்களுக்குக் கூறிய வேதாந்த போதனைகள் இதற்குமுன் பரிசோதனை செய்யப்படவில்லை. தத்துவங்களில் மிகப் பழமையானது வேதாந்தம் என்பது உண்மையானாலும், அது எப்போதும் மூட நம்பிக்கைகளுடனும் அவை போன்ற பிற வற்றுடனும் கலந்து குழம்பியே இருந்திருக்கிறது.

'நானும் என் தந்தையும் ஒருவரே' என்றார் ஏசு, நீங்களும் அதைத் திருப்பிச் சொல்கிறீர்கள். ஆனால் அது மனித குலத் திற்கு எந்த உதவியும் செய்யவில்லை. பத்தொன்பது நூற்றாண்டு களாகியும் இன்னும் அவர்கள் அந்தப் போதனையைப் புரிந்து கொள்ளவில்லை. ஏசுவை அவர்கள் மனிதர்களின் ரட்சகர் ஆக்குகிறார்கள். அவர் கடவுள், நாம் புழுக்கள்! இந்தியாவிலும் இப்படித்தான். ஒவ்வொரு நாட்டிலும் இதுபோன்ற நம்பிக்கைதான் மதத்திற்கு ஆதாரமாக இருக்கிறது. பல்லாயிரம் ஆண்டுகளாகப் பலகோடி மக்கள் உலக நாயகராகிய ஒருவரை, அவதார புருஷர்களை, ஆச்சாரிய புருஷர்களை வழிபடவே கற்பிக்கப் பட்டிருக்கிறார்கள். தாங்கள் எந்தவித ஆற்றலும் அற்றவர்கள், துன்பத்தில் உழல்வதற்கே பிறந்தவர்கள், முக்தி பெறுவதற்கு வேறு ஒருவர் அல்லது பலரின் கருணை அவசியம் என்றே போதிக்கப்பட்டிருக்கிறார்கள். இந்த நம்பிக்கைகளில் பல சிறந்த விஷயங்கள் உள்ளன என்பது உண்மைதான். இவை தங்கள் மிகச் சிறப்பான நிலையில் இருந்தாலும் மதத்தின் பாலர் வகுப்பு நிலையில் உள்ளவையே, அவை செய்துள்ள உதவியும் மிகக் குறைவே. மனிதர்களின் மனம் இந்த நம்பிக்கை களால் எந்த இழிவையும் ஏற்றுக்கொள்ளும் அளவுக்கு மயங்கியுள்ளது. என்றாலும் சில மாமனிதர்கள் இந்த மயக்கத் திலிருந்து விடுபட்டுவிடுகின்றனர். மகான்கள் தோன்றுவார்கள், இந்தக் குழந்தைவிளையாட்டுக்களை ஒதுக்கித்தள்ளி, ஆன்மாவின்மூலமே ஆன்மாவை வழிபடுவதான இந்த உண்மை மதத்தைத் தெளிவாகவும் ஆற்றல் மிக்கதாகவும் செய்வார்கள்— அதற்கான காலம் விரைவில் வந்துகொண்டிருக்கிறது. ❑

# 8. சாதனை
## அல்லது
## உயர்வாழ்வுக்கான ஆயத்தங்கள்

அனிச்சைச் செயல் மேலோங்கினால் இழிநிலையை அடைவாய், பரிணாமம் மேலோங்கினால் முன்னேறுவாய். எனவே அனிச்சையாக எதுவும் நிகழ இடம் கொடுக்கக் கூடாது. இதுபற்றிய ஆராய்ச்சி முதலில் நம் உடம்பிலேயே நடைபெற வேண்டும். பிறரைச் சீர்திருத்துவதில்தான் நாம் வரிந்துகட்டிக் கொண்டு நிற்கிறோம், இங்குதான் சிக்கல். நமது உடம்பிலிருந்தே தொடங்க வேண்டும். இதயம், கல்லீரல் எல்லாமே அனிச்சை யாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. அவற்றை உணர்வுடன் இயங்கச் செய்யுங்கள், உங்கள் கட்டுப்பாட்டில் கொண்டு வாருங்கள், உங்கள் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடக்கச் செய்யுங்கள், உங்கள் ஆணைகளை நிறைவேற்றச் செய்யுங்கள். கல்லீரலை அடக்கியாளும் ஆற்றல் ஒரு காலத்தில் நமக்கு இருந்தது. ஒரு பசு தன் தோலை அசைப்பதுபோல் நாமும் அசைக்க முடிந்திருந்தது. தீவிரமான பயிற்சி ஒன்றினாலேயே மீண்டும் இந்த ஆற்றலைப் பெற்ற பலரை நான் கண்டிருக் கிறேன். ஒருமுறை ஒரு பதிவு ஏற்பட்டுவிட்டால் பிறகு மறையாது. ஆழ்மனத்தில் ஆழ்ந்துவிட்ட இத்தகைய செயல் பாட்டுக் கடலைத் திரும்பவும் கொண்டுவாருங்கள். நமது முயற்சியின், நமது ஆராய்ச்சியின் முதல் பகுதி இது. நமது சமூதாயம் சிறப்புற இது முற்றிலும் தேவை. அதின்றி உணர்வுப் பகுதி சம்பந்தப்பட்டவற்றை மட்டுமே ஆராய்ந்துகொண் டிருக்கத் தேவையில்லை.

இந்த ஆராய்ச்சியின் மறு பகுதி முக்தி பற்றியது. இது சமூக நலத்திற்கு அவ்வளவு அவசியமானது அல்ல. இந்த முயற்சியின் நேர்விளைவு ஆன்மாவின் முக்தி, இருளில் ஒளியை ஏந்திச் செல்வது, அழுக்கைப் போக்குவது, ஆன்மாவைப் புத்துணர்வு பெறச் செய்து இருளைக் கிழித்து ஒளியை நோக்கி முன்னேறச் செய்வது. இதுவே, உணர்வுகடந்த இந்த நிலையே

நமது லட்சியம். இந்த நிலையை அடைந்ததும் மனிதன் தெய்வமாகிறான், முக்தி பெறுகிறான். இப்படி அனைத்தையும் கடந்துசெல்லப் பழகிய மனத்திற்குப் பிரபஞ்சம் தன் ரகசியங்கள் எல்லாவற்றையும் அறிவிக்கிறது; இயற்கையாகிய புத்தகம் ஒவ்வோர் அத்தியாயமாகப் படிக்கப் பெறுகிறது; இறுதியில் லட்சியமும் கைகூடுகிறது; நாம் வாழ்வும் சாவுமாகிய பள்ளத்திலிருந்து வாழ்வும் சாவுமற்ற ஒன்றை அடைவோம்; உண்மைப் பொருளை அறிவோம்; அதுவாகவே ஆகிவிடுவோம்.

முதலில் வேண்டுவது அமைதி நிறைந்த, சாந்தம் தவழ்கின்ற வாழ்க்கை. வயிற்றுப் பிழைப்பு ஒன்றிற்காகவே நாள் முழுவதும் ஓடிக்கொண்டிருந்தால் உயர்ந்த எதையும் அடைவது கடினம். ஒருவேளை அடுத்தப் பிறவியில் இதைவிடச் சிறப்பான சூழ்நிலையில் பிறக்கலாம். ஆனால் போதிய ஆர்வமும் ஈடுபாடும் இருக்குமானால், இந்தப் பிறவியிலேயே வாழ்க்கைச் சூழ்நிலை மாறக்கூடும். நீங்கள் உண்மையாக விரும்பிய எதைத்தான் அடையவில்லை? அடையாமல் இருக்க முடியாது. அடைய முடியாதது எதுவும் இல்லை. நம் விருப்பம்தான், நமது தேவைதான் இந்த உடம்பையே உருவாக்கியுள்ளது. ஒளிதான் உங்கள் தலையில் கண்கள் என்ற பெயர்கொண்ட இரண்டு துளைகளைச் செய்திருக்கிறது. ஒளி இல்லை என்றால் கண்களும் இருந்திருக்காது. ஒலிதான் காதுகளை உருவாக்கியுள்ளது. அறிவதற்கான புலனை நீங்கள் உருவாக்குமுன்பே அறியப்படுகின்ற பொருள் இருந்தது. மின்சாரம் முதலியவற்றை உணர்வதற்கான புலன்களை இன்னும் சில ஆயிரம் ஆண்டுகளிலோ, அதைவிட விரைவாகவோ நாம் பெறக்கூடும். அமைதி நிறைந்த மனத்திற்கு ஆசை இல்லை. பொருள் ஒன்று வெளியே இருந்தால்தான் ஆசை எழும். புறத்தே உள்ள அந்தப் பொருள் உடம்பில் ஒரு துளையிட்டு அதன் வழியாக மனத்தினுள் புக முயல்வது போலுள்ளது. எனவே அமைதி நிறைந்த, சாந்தம் தவழ்கின்ற வாழ்க்கை வேண்டும் என்ற ஆசை எழுமானால், அதற்குரிய சூழ்நிலை அமைந்தே தீரும். இது என் அனுபவம். ஆயிரக்கணக்கான பிறவிகளுக்குப் பிறகு அது அமையலாம்; ஆனால் அமைந்தே தீர வேண்டும். எனவே அந்த ஆவலை மட்டும் விட்டுவிட வேண்டாம். ஆசைக்குரிய பொருள் வெளியில் இல்லை என்றால் ஆசையே ஏற்பட்டிருக்காது.

ஆனால் ஆசைகளுக்குள் வேற்றுமை உண்டு என்பதை நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும். குரு ஒருவர் தம் சீடனைப்

பார்த்து, 'அப்பா, நீ இறைவனைக் காண விரும்பினால் அவர் உன்னை நாடி வருவார்' என்று சொன்னார். சீடன் குருவின் உபதேசத்தைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. ஒரு நாள் குருவும் சீடனும் ஆற்றில் நீராடப் போனார்கள். குரு சீடனைப் பார்த்து, 'தண்ணீரில் குதி' என்றார். அவன் குதித்ததுதான் தாமதம், குரு அவன்மேல் பாய்ந்து அவனைத் தண்ணீருக்குள் அழுத்தினார்; நெடுநேரம் விடவே இல்லை. சீடன் போராடிக் களைத்த பிறகு அவனை விடுவித்தார். அதன்பிறகு அவனிடம், 'எப்படி இருந்தது அப்பா?' என்று கேட்டார். 'அம்மம்மா! மூச்சுவிடுவதற்கு நான் பட்ட பாட்டையும் தவிப்பையும் என்ன என்பேன்!' என்றான் சீடன். 'இறைவனை அடைய அத்தகைய தவிப்பு உன்னிடம் இருக்கிறதா?' என்று வினவினார் குரு. 'இல்லை, சுவாமி' என்றான் சீடன். 'அத்தகைய ஆசை கொண்டால் அவர் உன் முன் வருவார்' என்றார் குரு. எது இல்லாமல் நாம் வாழ முடியாதோ அது நமக்குக் கிடைத்தேயாக வேண்டும். அது கிடைக்கவில்லை என்றால் வாழ்க்கை நடக்காது.

நீங்கள் யோகியாக வேண்டுமானால் சுதந்திரமாக இருக்க வேண்டும்; கவலையற்ற சூழ்நிலையில் தனிமையாக இருக்கும் படி உங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள வேண்டும். வசதியாக, சொகுசாக வாழ்ந்துகொண்டே ஆன்ம உணர்வுபெற விரும்புபவன், கட்டை என்றெண்ணி முதலையைப் பிடித்துக் கொண்டு ஆற்றைக் கடக்க முயன்ற முட்டாள் போன்றவனே. 'முதலில் இறைவனையும் அவனது வழியையும் தேடு; மற்ற எல்லாம் உன்னைத் தேடிவரும்.' யார் எதற்கும் கவலைப்படு வதில்லையோ அவனைத் தேடி எல்லாமே வரும். அதிர்ஷ்டம் ஒரு சாகசக்காரியைப் போன்றது. தன்னை விரும்புபவனை அவள் திரும்பிப் பார்ப்பதில்லை; அவளைப் பொருட்படுத் தாதவனின் காலடியில் வீழ்ந்து கிடப்பாள். செல்வமும் தன்னை மதிக்காதவனின்மீதே மழையாகப் பொழியும். புகழும் அத்தகையதே—அதனைப் பொருட்படுத்தாமல், அதை ஒரு தொல்லையாக, பெரும் சுமையாக எண்ணுபவனிடமே வந்து சேரும். எஜமானனிடமே அவை சேர்கின்றன, அடிமைக்கு எதுவும் கிடைப்பதில்லை. யாரால் அவையில்லாமலும் வாழ முடியுமோ, யார் இந்த அற்ப உலகின் பொருட்களைச் சாராமல் வாழ்கிறானோ அவனே எஜமான். ஒரு லட்சியத்திற்காக, ஒரு லட்சியத்திற்காக மட்டுமே வாழுங்கள். வேறு எதற்கும் இட மில்லாத அளவிற்கு அந்த லட்சியம் அனைத்திலும் உயர்ந்ததாக

இருக்கட்டும், அனைத்திலும் உறுதிமிக்கதாக இருக்கட்டும். வேறு எதற்கும் மனத்தில் இடம் வேண்டாம், வேறு எதற்கும் நேரம் இருக்க வேண்டாம்.

பணம் தேடுவதற்காக ஆற்றல்கள், நேரம், அறிவு, உடம்பு அனைத்தையும் பணயம் வைத்து என்ன ஓட்டம் ஓடுகிறார்கள்! காலையுணவிற்குக்கூட நேரம் இல்லை, அவ்வளவு அதிகாலையிலேயே வேலை தொடங்குகிறது. நூற்றுக்குத் தொண்ணூறு பேர் இந்த முயற்சியிலேயே இறந்துவிடுகின்றனர். மீதிபேர் பொருளைத் தேடுவதில் வெற்றி பெறுகின்றனர், ஆனால் அப்போது அதை அனுபவிக்க முடியாதவர்களாகி விடுகின்றனர். என்ன வினோதம்! பணக்காரனாக முயல்வது தவறு என்று நான் சொல்லவில்லை; அது சிறந்தது, உயர்ந்தது. ஏன், இது எதைக் காட்டுகிறது? பணத்திற்காகச் செலவிடும் அதே அளவு ஆற்றலை, அதே அளவு போராட்டத்தை முக்திக்காகவும் பயன்படுத்தலாம் என்பதையே காட்டுகிறது. மரணம் வரும்போது பொருளையும் மற்ற அனைத்தையும் விட்டுவிட்டே போக வேண்டும் என்பது நமக்குத் தெரியும். என்றாலும் அவற்றிற்காக நாம் என்னென்ன வழிகளில் எல்லாம் பாடுபடுகிறோம்! அதே மனிதர்களாகிய நாம் என்றும் அழியாத, நம்முடன் என்றுமே இருக்கப் போகின்ற செல்வத்தைப் பெற ஆயிரம் மடங்கு அதிக ஆர்வம்கொள்ள வேண்டாமா, முயற்சி செய்ய வேண்டாமா? ஏனெனில் அதுவே நம் உற்ற நண்பன். நாம் செய்யும் புண்ணியங்களே, நமது ஆன்மீக உயர்வே மரணத்திற்குப் பிறகும் நம்மைத் தொடர்ந்து வரும். மற்றவை எல்லாம் இந்த உடலோடு இந்த உலகத்திலேயே நின்றுவிடும்.

இதுதான் முதற்படி, மாபெரும் படி; அதாவது லட்சியத்தில் தீவிர நாட்டம். இது ஏற்பட்டுவிட்டால் மற்றவை எளிதில் வந்துவிடும். இந்த உண்மையை இந்திய மனமே கண்டுபிடித்தது. உண்மையை அறிவதற்காக எவ்வளவு தூரம் செல்லவும் இந்தியர்கள் தயங்குவதில்லை. ஆனால் இங்கு மேலை நாடுகளில், எல்லாம் மிகவும் எளிதாக்கப்பட்டுள்ளது. உங்கள் பெரிய லட்சியம் உண்மையை அறிவதல்ல, முன்னேற்றம் காண்பதே. போராட்டம்தான் ஒருவன் பெறும் பெரிய படிப்பினை. இந்த வாழ்க்கையில் நாம் பெறும் பெரிய நன்மை இந்தப் போராட்டப் பயிற்சியே. போராட்டத்தின் வழியாகவே நாம் செல்ல வேண்டும். சொர்க்கத்திற்கு ஒரு பாதை இருக்குமானால் அது நரகத்தின் வழியாகவே இருக்கும். நரகத்தின்

வழியாகச் சொர்க்கத்திற்குச் செல்வதுதான் என்றும் உள்ள வழி. ஒருமுறையல்ல, இருமுறை அல்ல, பல்லாயிரம் முறை சூழ்நிலையுடன் போராடி, இறந்து, அப்போதும் தைரியத்தை இழக்காமல் ஆன்மா போராடுமானால் அது பேராற்றல் உள்ள தாக மாறிவிடுகிறது. அப்போது அது தனது லட்சியத்தை விடத் தான் எவ்வளவோ மடங்கு உயர்ந்துவிட்டதைக் காண் கிறது. எனவே அந்த லட்சியத்தைக் கண்டு சிரிக்கிறது. ஆன்மாவாகிய நானே லட்சியம், வேறு எதுவும் இல்லை. என் ஆன்மாவுடன் ஒப்பிட வேறு என்ன இருக்கிறது? ஒரு பை பொன்னும் மணியும் எனது ஆன்மாவின் லட்சியமாக முடியுமா? முடியவே முடியாது. நான் கொள்ளக்கூடிய லட்சியங்களுள் மிக உயர்ந்தது எனது ஆன்மாதான். எனது உண்மை இயல்பை உணர்வதுதான் என் வாழ்க்கையின் ஒரே லட்சியம்.

முற்றிலும் தீமையான எதுவும் இல்லை. கடவுளோடு சாத்தானுக்கும் இங்கே இடம் இருக்கிறது, சாத்தான் இல்லை என்றால் கடவுளும் இங்கே இருக்க மாட்டார். நான் முன்பு கூறியதுபோல் நரகத்தின் வழியாகவே சொர்க்கத்திற்குச் செல்ல வேண்டும். நமது தவறுகளுக்கும் இங்கே இடம் உண்டு. முன்னேறிக்கொண்டே இருங்கள். செய்யக் கூடாத ஒன்றை நீங்கள் செய்துவிட்டதாக நினைத்தாலும் திரும்பிப் பார்க்க வேண்டாம். இன்றைய உங்களை உருவாக்குவதில் அந்தத் தவறுகளுக்கு இடமில்லை என்றா நினைக்கிறீர்கள்? எனவே உங்கள் தவறுகளை வாழ்த்துங்கள். அவை நம்மை அறியாமலே நமக்கு வழிகாட்டும் தெய்வங்கள். துன்பம் பெரும் பேறு! இன்பமும் பெரும் பேறு! உங்கள் நிலைமை என்னவானாலும் பொருட்படுத்தாதீர்கள். லட்சியத்தை இறுகப் பற்றிக்கொள் ளுங்கள். முன்னேறிச் செல்லுங்கள். சிறுசிறு தவறுகளையும் குறைகளையும் திரும்பிப் பார்த்துக் குமைந்து கொண்டிருக் காதீர்கள். நமது போர்க்களமாகிய பிரபஞ்சத்தில் தவறுகள் என்ற புழுதி கிளம்பியே தீரும். இந்தப் புழுதியைச் சகித்துக் கொள்வதற்கான உறுதியற்றவர்கள் போரிலிருந்து விலகிக் கொள்ளட்டும். எனவே போராடுவதற்கான இந்த உறுதி, உலகப் பொருட்களை அடைவதற்கான உங்கள் உறுதியைவிட நூறு மடங்கு அதிக உறுதிதான் இந்தப் போராட்டத்தின் முதல் தேவை.

அதனுடன் தியானமும் கட்டாயமாக வேண்டும். தியானம் இல்லாமல் எதுவும் இல்லை. தியானம் செய்யுங்கள். தியானம்

மிகவும் உயர்ந்தது. மனம் தியானத்தில் ஈடுபடுகின்ற நிலையே, தியானமே ஆன்மீக வாழ்விற்குக் குறுகிய வழியாகும். ஜடப் பொருள் அனைத்திலிருந்தும் விடுபட்டு ஆன்மா தன்னைத் தானே நினைக்கின்ற அந்தக் கணமே, ஆன்மாவினுடைய அற்புத ஸ்பரிசத்தின் அந்தக் கணமே நாம் நமது அன்றாட வாழ்வில் சற்றும் உலகியல் கலவாமல் இருக்கின்ற ஒரே கணம் ஆகும்.

இந்த உடம்பு நமது பகைவன், அதேவேளையில் நண்பனும் இதுவே. துன்பத்தைக் கண்டால் துடிக்காதிருக்க உங்களுள் யாராலாவது முடியுமா? ஆனால் அதே துன்பத்தை ஓவியமாகத் தீட்டினால் பார்த்து ரசிக்காதவர்கள் யார்? ஓவியம் உண்மை அல்ல, எனவே நாம் அதனுடன் ஒன்றுவதில்லை. அது வெறும் ஓவியம் என்பது நமக்குத் தெரியும். அந்த ஓவியத்தால் நமக்கு நன்மையும் செய்ய இயலாது; தீமையும் செய்ய முடியாது. ஒரு துணியில் ஓவியமாகத் தீட்டப்பட்டிருக்குமானால், மிகப் பயங்கரத் துன்பச் சித்திரத்தையும் கண்டு நாம் இன்புற முடியும். அந்த ஓவியம் கொடிய துன்பத்தைச் சித்தரித்தாலும் ஓவியனின் திறமையைப் பாராட்டுகிறோம், அவனது கைவண்ணத்தைக் கண்டு வியந்து நிற்கிறோம். அந்தப் பற்றற்ற நிலைதான் ரகசியம். சாட்சியாக இருங்கள்.

'நான் சாட்சி' என்ற எண்ணம் வரும் வரை எந்தப் பிராணாயாமமும், எந்த யோகப் பயிற்சியும் வேறு எதுவும் எந்தப் பயனும் அளிக்காது. கொலைகாரன் உங்கள் கழுத்தை நெரிக்கும்போது, 'நான் சாட்சி, நான் சாட்சி' என்று சொல்லுங்கள்; 'நான் ஆன்மா. புறப்பொருள் எதுவும் என்னைத் தீண்ட முடியாது' என்று கூறுங்கள். தீய எண்ணங்கள் எழும் போதெல்லாம் இதை மீண்டும்மீண்டும் சொல்லி, அவற்றின் தலையில் சம்மட்டியடி கொடுங்கள்: 'நான் ஆன்மா; நான் சாட்சி. நான் என்றென்றும் இன்ப வடிவினன். நான் எதையும் செய்ய வேண்டியதும் இல்லை, எந்தத் துன்பத்தையும் அனுபவிக்க வேண்டியதும் இல்லை. நான் எல்லாவற்றையும் முடித்துவிட்டேன். நான் சாட்சி. நான் என் ஓவியக் கூடத்தில் இருக்கிறேன்—இந்தப் பிரபஞ்சம் என் கண்காட்சி சாலை. ஒன்றன்பின் ஒன்றாக விரிகின்ற இந்த ஓவியங்களை நான் பார்த்துக் கொண்டிருக்கிறேன். நல்லவையோ தீயவையோ எல்லா ஓவியங்களும் அழகாக இருக்கின்றன. அவை ஒவ்வொன்றிலும் அபாரத் திறமை எனக்குத் தெரிகிறது, ஆனால் அவை எல்லாம் ஒன்றே. மாபெரும் ஓவியனாகிய இறைவனின்

எண்ணற்ற சுடர்களே அவை.' உண்மையாகச் சொல்வதானால் அங்கு ஒன்றுமே இல்லை; சங்கல்பமும் இல்லை, ஆசையும் இல்லை. அவனே எல்லாம். அவன்-அவள்-அந்த உலக அன்னையே விளையாடுகிறாள். நாமெல்லாம் அவளது கைப் பொம்மைகள், அவளது ஆடலில் உதவுபவர்கள். அவள் இப்போது ஒருவனுக்குப் பிச்சைக்கார வேடம் புனைகிறாள், அடுத்த கணம் அவனை அரச உடையில் காட்டுகிறாள், மறுகணம் அவனுக்கு மகானின் வேடம், பின்னர் பேயின் வேடம் என்று அளித்து ஆடல் புரிகிறாள். அவளது ஆடலில் நாம் பல பாத்திரங்களை ஏற்று உதவுகிறோம்.

விளையாடிக் கொண்டிருக்கின்ற குழந்தை தாய் அழைத்தாலும் வருவதில்லை. விளையாட்டு முடிந்துவிட்டால் தாயை நோக்கி விரைகிறது, அப்போது விளையாட்டு இல்லை. நமது வாழ்க்கையிலும் இத்தகைய நேரங்கள் வருகின்றன—நமது விளையாட்டு முடிந்துவிட்டதை நாம் உணர்கிறோம், அன்னையிடம் விரையத் துடிக்கிறோம். அந்த நேரத்தில் நமது முனைப்புகள் எல்லாம் மதிப்பிழந்து விடும்; ஆண், பெண், குழந்தை, செல்வம், பேர், புகழ், வாழ்வின் இன்பங்கள், பேறுகள், தண்டனைகள், தோல்விகள் எல்லாமே மறைந்துவிடும். வாழ்க்கையே ஒரு நாடகம்போல் தோன்றும். அந்த முடிவற்ற இசை தொடர்வதை மட்டுமே நாம் காண்போம்; அது எப்போது முடியும், அதன் நோக்கம் என்ன, அது எங்கே முடியும் என்பது எதுவும் நமக்குத் தெரியாது. இவ்வளவுதான் நாம் சொல்ல முடியும்—நமது நாடகம் முடிந்துவிட்டது. ❑

# 9. வேதாந்தம் நாகரீகத்தின் ஒரு பகுதி

இங்கிலாந்தில் 1896, அக்டோபர் 6-ஆம் நாள் ஆற்றிய சொற்பொழிவின் சுருக்கம்

பொருட்களின் தூலமான புறத்தன்மையை மட்டுமே காண முடிந்தவர்களால், இந்தியாவில், பிறரால் வெல்லப்பட்டு துக்கத்தில் உழல்கின்ற, கனவில் மிதக்கின்ற வறட்டு வேதாந்திகளான ஓர் இனத்தை மட்டுமே காண முடியும். ஆன்மீகத் துறையைப் பொறுத்தவரையில் இந்தியா உலகையே வென்று நிற்பதை அவர்களால் காண முடியவில்லை போலும். எப்போதும் மிகவும் புறநோக்குக் கொண்ட மேலை மனம், கீழை மனத்தின் அகநோக்கும் தியானப் பழக்கமும் கலப்பதால் நன்மை பெறும். அதுபோல் கீழை மனமும் சற்றுப் புறநோக்குடனும் ஆற்றலுடனும் செயல்படும்போது நன்மை அடையும்.

ஆனாலும் ஒரு கேள்வியை நாம் கேட்டேயாக வேண்டும்: எத்தனையோ இனங்கள் அழிந்துவிட்டன, ஆனால் பிறரால் துன்புறுத்தப்பட்டுத் துயரில் மூழ்கி நிற்கின்ற இந்துக்களும், அவர்களைப்போலவே யூதர்களும் (உலகின் எல்லா பெரிய மதங்களும் தோன்றக் காரணமான இரண்டு இனங்கள் இவர்கள்) அழியவில்லை. இவர்கள் அழியாமல் இருப்பதற்குக் காரணமான சக்தி எது? அது அவர்களின் ஆன்மீக சக்தியாகத்தான் இருக்க முடியும். இந்துக்கள் இன்றும் வாழ்கிறார்கள், ஒருவேளை அவர்கள் தங்களை விளம்பரப்படுத்திக் கொள்ளாமல் இருக்கலாம். யூதர்களும் பாலஸ்தீனத்தில் வாழ்ந்த நாட்களைவிட இன்று எண்ணிக்கையில் அதிகமாகவே உள்ளனர். நாகரீகத்தில் வளர்ந்த நாடுகளில் எல்லாம் இந்தியத் தத்துவம் ஊடுருவியுள்ளது, அப்படியே அந்த நாட்டு மக்களின் மனத்தின் அடித்தளத்தில் புகுந்து எண்ணங்களைச் சீர்திருத்துகிறது. பழங்காலத்திலும் ஐரோப்பா அறியப்படுமுன்பே இந்திய வர்த்தகம் ஆப்ரிக்காவரை பரவியிருந்தது. பிற நாடுகளுடன் இந்தியர்கள் தொடர்பு வைத்திருந்தார்கள். இந்தியர்கள் தங்கள் நாட்டை விட்டு வெளியே செல்வதில்லை என்ற நம்பிக்கையை இந்தச் செயல்கள் பொய்யாக்கிவிட்டன.

வியப்பிற்குரிய ஒரு செய்தி என்னவென்றால், இந்தியாவை ஓர் அன்னிய சக்தி அடக்கி ஆள நேர்ந்த ஒவ்வொரு முறையும் அது அந்தச் சக்தியின் வரலாற்றில் ஒரு திருப்புமுனையாக அமைந்ததைக் காண்கிறோம். இந்தப் படையெடுப்பின் காரண மாக அவை செல்வம், வளம், நாடு இவற்றுடன் ஆன்மீகக் கருத்துக்களையும் பெற்றன. 'என்னால் எவ்வளவு பொருள் சேர்க்க முடியும்? எவ்வளவு தூரம் இன்பம் அனுபவிக்க முடியும்?' என்பதை ஆராய முயல்கிறான் மேலைநாட்டினன். ஆனால் கீழை நாட்டினன் இதற்கு நேர் எதிரான பாதையை நாடுகிறான். 'எவ்வளவு குறைவாக நான் பொருள் சேர்க்க முடியும்' என்று பார்க்கிறான் அவன்.

பழங்காலத்தில் எங்கள் முன்னோர் இறைவனை அறிவதற் காகச் செய்த முயற்சிகளைப்பற்றி வேதங்களில் காண்கிறோம். இந்த முயற்சிகளின் பலனாக அவர்கள் அதில் பல படிகளை அறிய நேர்ந்தது. இறந்துபோன முன்னோரை வழிபடுவதில் இந்த முயற்சி தொடங்கியது. பின்னர் நெருப்புக்குத் தெய்வ மாகிய அக்கினி தேவனையும், இடிக்கும் மழைக்கும் தெய்வ மாகிய இந்திர தேவனையும், தெய்வங்களுக்கெல்லாம் தலை வனாகிய வருண தேவனையும் அவர்கள் வழிபட்டனர். எல்லா மதங்களிலும் கடவுள் பற்றிய கருத்து இவ்வாறு பலதெய்வக் கருத்திலிருந்து ஒரேகடவுள் கருத்தை அடைவதை நாம் காண்கிறோம். இதன் உண்மைப் பொருள் இதுதான்: இந்த ஒரு கடவுளே பல்வேறு இனங்களின் தெய்வங்களுக்கும் தலைவர். இவரே உலகைப் படைக்கிறார், அதனை ஆள்கிறார், எல்லோர் இதயங்களுக்கும் உள்ளே பார்க்கிறார். இவ்வாறு இந்த வளர்ச்சி பலதெய்வக் கருத்தில் தொடங்கி ஒரேதெய்வக் கொள்கைவரை சென்றது.

கடவுளை மனிதப் பண்புகளுடன் கருதுவது (Anthropomorphism) இந்துக்களுக்குத் திருப்தியை அளிக்கவில்லை. கடவுளைத் தேடிய அவர்களுக்கு இந்தக் கருத்து இறைவனை மனித நிலைக்குத் தாழ்த்துவதாகத் தோன்றியது. எனவே புலன்களாலும் ஜடப்பொருளாலுமான புறவுலகில் கடவுளைத் தேடுவதைவிட்டு, அக உலகில் தங்கள் கவனத்தைத் திருப்பி னார்கள். அக உலகம் ஒன்று இருக்கிறதா? இருக்குமானால் அது என்ன? அதுதான் ஆன்மா; இருப்பது என்று அந்த ஒன்றை மட்டுமே ஒருவன் உறுதியாகக் கூற முடியும். தன்னை அறிந்தால் பிரபஞ்சத்தை அறிய முடியும்; வேறு வகையில்

முடியாது. காலத்தின் தொடக்கத்தில் ரிக் வேதத்திலும் இதே கேள்விதான் வேறு விதமாகக் கேட்கப்பட்டது: 'ஆரம்பத்தில் யார் அல்லது எது இருந்தது?' இந்தக் கேள்விக்கு விடையைப் படிப்படியாக வேதாந்திகள் கண்டுபிடித்தார்கள். முதலில் ஆன்மாவே இருந்தது. அதாவது பரம்பொருள், பரமாத்மா, ஆன்மா என்றெல்லாம் நாம் அழைக்கின்ற அந்தச் சக்தியிலிருந்தே ஆதியில் எல்லாம் தோன்றியது, இப்போது தோன்றுகிறது, இனியும் தோன்றும்.

இந்தக் கேள்விக்கு விடை கண்டுபிடித்தபோதே நீதிநெறிக்கான அடிப்படையையும் வேதாந்திகள் கண்டுபிடித்துவிட்டார்கள். 'கொல்லாதே, தீங்கு செய்யாதே; உன்னைப் போலவே அயலாரையும் நேசி' என்றெல்லாம் எல்லா மதங்களும் நீதிநெறிகளைப் போதிக்கின்றன. ஆனால் அவற்றிற்கான காரணத்தை எந்த மதமும் கூறவில்லை. நான் ஏன் மற்றவர்களுக்குத் தீங்கு செய்யக் கூடாது? வெறும் கொள்கைகளால் திருப்தியுற்று நின்றுவிட இந்துக்களால் முடியாது. எனவே அந்தக் கேள்வியை ஆழ்ந்து ஆராய்ந்ததன் பலனாக அவர்கள் சில உண்மைகளைக் கண்டார்கள். அதற்குமுன்பு இந்தக் கேள்விக்கு ஒரு முடிவான, திருப்தியான விடை கிடைக்கவில்லை. இந்த ஆன்மா பரிபூரணமானது, எங்கும் நிறைந்தது, எனவே அது எல்லையற்றது என்கின்றனர் இந்துக்கள். எல்லையற்றவை இரண்டு இருக்க முடியாது, அப்படி இருக்குமானால் ஒன்று மற்றொன்றை எல்லைப்படுத்தி, இரண்டுமே எல்லைக்கு உட்பட்டவை ஆகிவிடும். மேலும் ஒவ்வொரு தனி ஆன்மாவும் எல்லையற்ற பரமான்மாவின் ஓர் அம்சம். எனவே பிறருக்குத் தீங்கு செய்வதன்மூலம் ஒருவன் உண்மையில் தனக்குத்தானே தீங்கு செய்துகொள்கிறான். எல்லா நீதிநெறிகளுக்கும் அடிப்படையான தத்துவ உண்மை இதுதான்.

நிறைநிலையை நோக்கிச் செல்கின்ற ஒருவன் தவறிலிருந்து உண்மைக்கு முன்னேறுகிறான், எனவே ஒரு சிந்தனையைக் கடந்து மற்றொரு சிந்தனையைப் பெறும்போது அவன் முதல் சிந்தனையை உதறியே ஆக வேண்டும் என்று பலரும் நம்புகிறார்கள். ஆனால் எந்தத் தவறும் உண்மைக்கு இட்டுச் செல்ல முடியாது. எனவே பல படிகளைக் கடந்து முன்னேறுகின்ற அந்த ஆன்மா ஓர் உண்மையிலிருந்து மற்றோர் உண்மைக்குச் செல்கிறது. ஒவ்வொரு படியும் உண்மை, அது கீழ்நிலை

உண்மையிலிருந்து உயர்நிலை உண்மைக்குச் செல்கிறது. இதைப் பின்வரும் எடுத்துக்காட்டால் விளக்கலாம்.

சூரியனை நோக்கிச் செல்கின்றான் ஒருவன். அவன் தன் பாதையில் ஒவ்வொரு அடியிலும் புகைப்படம் எடுக்கிறான். முதல் படத்திற்கும் இரண்டாவதற்கும் எவ்வளவு வேறுபாடு இருக்கும்! அதை மூன்றாவது அல்லது நான்காவதுடன் ஒப்பிடும்போது வேறுபாடு அதிகமாகும். அவன் சூரியனை உண்மையில் அடைந்த பிறகு எடுக்கின்ற படமோ முதல் படத்திலிருந்து எவ்வளவோ வேறுபட்டதாக இருக்கும்! ஆனால் இவை எவ்வளவுதான் ஒன்றுக்கொன்று வேறுபட்டவையாக இருந்தாலும் எல்லாமே உண்மையானவை. காலம் மற்றும் இடம் என்னும் மாறுகின்ற சூழ்நிலைகளின் காரணமாக வெவ்வேறுபோல் தோன்றின, அவ்வளவுதான், மிகத் தாழ்ந்தது முதல் மிக உயர்ந்தது வரை எல்லா மதங்களிலும் உள்ள உலகம்தழுவிய உண்மையை இந்துக்கள் ஏற்றுக்கொள்வதற்குக் காரணம் இந்த அறிவுதான். மற்ற மதத்தினரைத் துன்புறுத்தாதவர்களாக இந்து மதத்தினர் மட்டும் தனிப் பெருமை பெற்றிருப்பதற்கும் இந்த அறிவே காரணம். முஸ்லீம்களாலேயே மறந்து கைவிடப்பட்ட முஸ்லீம் மகான் ஒருவரின் சமாதியை இந்துக்கள் இன்று வழிபடுகிறார்கள். இந்துக்களின் சகிப்புத் தன்மையையும் பரந்த மனத்தையும் விளக்க எத்தனையோ சான்றுகள் காட்ட முடியும்.

மனித குலமே தேடுகின்ற முடிவான ஒருமை என்ற லட்சியத்தை அடையும்வரையில் கீழை மனத்திற்கு நிறைவு ஏற்படாது. மேலை விஞ்ஞானி அணுவிலோ மூலக்கூறிலோ ஒருமையைத் தேடுகிறான். அதைக் கண்டுவிட்டால் அவனது வேலை முடிந்துவிடும்; அதன் பிறகு அவன் கண்டுபிடிக்க ஒன்றும் இல்லை. அதுபோல் ஆன்ம ஒருமையைக் கண்ட பிறகு நாம் மேலே செல்ல முடியாது. இந்தப் புலனுலகில் காணப்படுகின்ற எல்லாம் அந்த ஒரே பொருளின் தோற்றமே என்பது அப்போது தெளிவாகிறது. நீளம், அகலம் என்ற பண்புகள் இல்லாத அணுக்கள் ஒன்றுடன் ஒன்று சேரும் போது நீளம், அகலம் முதலிய பண்புகளுக்குக் காரணம் ஆவதை ஏற்றுக்கொள்ளும்போது, ஆன்மீகத் தத்துவங்களின் உண்மையையும் ஒப்புக்கொள்கின்ற அவசியமும் விஞ்ஞானிகளுக்கு நேரிடுகிறது. ஓர் அணு மற்றோர் அணுவுடன் செயல்படுவதற்கு ஓர் இணைப்பு (medium) தேவை. அந்த இணைப்பு

எது? அது மூன்றாவது ஓர் அணு. அப்படியானால் முதல் இரண்டு அணுக்களையும் மூன்றாவது அணுவுடன் சேர்த்து செயல்படச் செய்யும் இணைப்பு எது? இந்தக் கேள்வி பதில் இல்லாமல் நீண்டுகொண்டே போகும், அதற்கு முடிவே இருக்காது. இதுபோன்ற முரண்பாடுகள் பௌதீக விஞ்ஞானங்களின் அடிப்படைக் கொள்கைகள் அனைத்திலும் இருக்கிறது. புள்ளிக்கு எந்தப் பரிமாணமும் இல்லை, ஒரு கோட்டிற்கு நீளம் உண்டு அகலம் இல்லை என்பன போன்ற அனுமானக் கொள்கைகள் (Hypotheses) எல்லா பௌதீக விஞ்ஞானங்களுக்கும் தேவையாக இருக்கிறது. புள்ளி, கோடு போன்றவற்றைப் பார்க்கவோ கருதவோ முடியாது. ஏன்? ஏனெனில் இவை புலனறிவின் எல்லைக்குள் வரவில்லை. இவை தத்துவக் கருத்துக்கள் (Metaphysical conceptions). எனவே எல்லா புலனறிவுக்கும் உருவம் கொடுப்பது மனம்தான் என்பது தெரிகிறது. ஒரு நாற்காலியைப் பார்க்கும்போது உண்மையில் வெளியில் உள்ள உண்மை நாற்காலியை நான் பார்ப்பதில்லை; வெளியே உள்ள பொருளும், அதனால் மனத்தில் உருவாகும் ஒரு தோற்றமும் சேர்ந்த கலவையையே காண்கிறேன். எனவே முடிவில் உலகாயதவாதியும்கூட ஆன்மீகத் தத்துவத்தை ஒப்புக்கொள்ள வேண்டியவன் ஆகிறான். ❑

## 10. மரணமிலாப் பெருநிலை

மனித ஆன்மாவின் அழிவற்ற தன்மையைத் தவிர வேறு எந்தக் கேள்வி இவ்வளவு அதிகமாகக் கேட்கப்பட்டது? வேறு எந்தக் கருத்து மனிதனைப் பிரபஞ்சம் முழுவதிலும் தேடச் செய்திருக்கிறது? வேறு எந்தக் கேள்வி மனித இதயத்திற்கு இவ்வளவு நெருக்கமானதாகவும் பிரியமானதாகவும் இருக்கிறது? வேறு எந்தக் கேள்வி நம் வாழ்க்கையோடு இவ்வளவு பின்னிப் பிணைந்திருக்கிறது? கவிஞர்கள், ரிஷிகள், புரோகிதர்கள், தீர்க்கதரிசிகள் எல்லோரும் இந்தக் கருத்தை ஆராய்ந்தார்கள். முடி சூடிய மன்னர்கள் இதை விவாதித்தார்கள். பிடி சோற்றுக்குக் கையேந்தும் பிச்சைக்காரர்கள் இதைப்பற்றிக் கனவு கண்டார்கள். மனிதர்களுள் சிறந்தவர்கள் இதை நெருங்கியிருக்கிறார்கள்; சாதாரணமானவர்கள் இதை அடைய விரும்பினார்கள். இந்தக் கருத்தின் மீதுள்ள ஆர்வம் இன்னும் மறையவில்லை; மனிதகுலம் தன் இயல்பை இழக்காதவரையில் இது மறையவும் செய்யாது.

பலர் இந்தக் கேள்விக்குப் பலவிதமான பதில்களை அளித்திருக்கிறார்கள். வரலாற்றின் ஒவ்வொரு முக்கியமான கால கட்டத்திலும் ஆயிரக்கணக்கானோர் இந்த விவாதத்தை விட்டுவிட்டதும் உண்டு. ஆனாலும் இந்தக் கேள்வி என்றும் புதியதாக எப்போதும் இருக்கிறது. நம் வாழ்க்கையின் போராட்டத்திலும் குழப்பத்திலும் நாம் அடிக்கடி இதை மறந்துவிடத் தலைப்படுகிறோம். திடீரென்று ஒருவர் இறந்துவிடுகிறார். அவர் ஒரு வேளை நாம் இதயபூர்வமாக நேசித்து வந்தவர், இதயத்தோடு இதயமாக இருந்த ஒருவரை மரணம் நம்மிடமிருந்து பிரித்துவிடுகிறது. அப்போது நம்மைச் சுற்றியுள்ள உலகமும் அதன் குழப்பமும் போராட்டமும் ஒரு கணம் நின்றுவிடுகிறது. 'இதற்குப் பிறகு என்ன?' 'ஆன்மா என்ன ஆகிறது?' என்ற கேள்வியை மனம் எழுப்புகிறது.

மனித அறிவு எல்லாமே அனுபவத்திலிருந்தே தோன்றுகிறது. அனுபவத்திலிருந்து அல்லாமல் நாம் எதையும் அறிந்துகொள்ள முடியாது. நமது பகுத்தறிவு, பொதுமைப்

படுத்தப்பட்ட அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டது. அனுபவங்களை இணைத்துப் பார்ப்பதால் உண்டாவதே நமது அறிவு எல்லாம். நம்மைச் சுற்றி நாம் பார்ப்பது என்ன? தொடர்ந்து மாற்றத்தைத்தான். விதையிலிருந்து செடி வருகிறது, மரமாக வளர்கிறது, பின்னர் விதைக்குள்ளேயே ஒடுங்குகிறது. இவ்வாறு வட்டத்தை நிறைவு செய்கிறது. மிருகங்களும் இதே போல்தான்; பிறக்கின்றன, சில காலம் வாழ்கின்றன, பின்னர் இறக்கின்றன; வாழ்க்கை வட்டத்தை முடித்துக் கொள்கின்றன. மனிதனின் விஷயமும் இதேபோல்தான். மெதுவாக ஆனால் நிச்சயமாக மலைகள் பொடியாகின்றன. ஆறுகள், மெதுவாக ஆனால் நிச்சயமாக வறண்டு போகின்றன. மழை, கடலிலிருந்து தோன்றி கடலுக்குள்ளேயே சங்கமமாகிறது. எங்கு பார்த்தாலும் பிறப்பு, வளர்ச்சி, முன்னேற்றம், அழிவு என்று துளிகூடப் பிசகாமல், ஒன்றையொன்று பின்பற்றி வட்டங்களாகச் சுழன்று கொண்டிருக்கின்றன.

இது நமது அன்றாட அனுபவம். வாழ்க்கை என்று நாம் சொல்லும் இந்தப் பெரிய விஷயம், பல கோடி உருவங்களையும் வடிவங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கிறது. அதில் தான் எத்தனையெத்தனை வேறுபாடுகள்! அணு முதல் ஆன்மீகச் செம்மல்வரை, அனைத்தும், அனைவரும் இந்த வாழ்க்கைச் சுழலில் அடக்கம். இவை எல்லாவற்றின் ஊடேயும் ஓர் ஒருமைப் பாடு இழையோடுவதை நாம் காண்கிறோம். ஒன்றை மற்றொன் றிலிருந்து பிரிப்பதாக நாம் நினைத்திருக்கும் சுவர் நாளுக்கு நாள் உடைந்து சிதறிக்கொண்டே போகிறது. எல்லா பொருட் களும் மூலமான ஒரே பொருளின் பல்வேறு வெளிப்பாடுகளே, பல்வேறு தோற்றங்களே, இந்தப் பல்வேறு வெளிப்பாடுகளும் எல்லையற்று நீண்டுள்ள ஒரே தொடர்ச்சியின் பல்வேறு வளையங்களே, இவையனைத்தின் ஊடேயும் இழைவது ஒரே வாழ்வுதான் என்பதை இன்றைய விஞ்ஞானமும் ஒப்புக் கொள்ளத் தொடங்கிவிட்டது. இதைத்தான் பரிணாமம் என்கிறார்கள். இந்தக் கருத்து, மனித சமுதாயத்தைப் போல் அவ்வளவு பழமையானது. ஆனால் மனித அறிவின் முன் னேற்றத்திற்கு ஏற்ப இந்தக் கருத்தும் மெருகேறி வருகிறது.

பழங்காலத்தினர் இன்னும் ஒன்றைக் கண்டுபிடித்தார்கள். தற்காலத்தவர்களின் சிந்தனையில் அது இன்னும் சரியாக எட்டவில்லை. அதுதான் ஒடுக்கம். விதைதான் செடியாகிறது, மணற்துகள் செடியாவதில்லை. தந்தைதான் குழந்தையாகிறான்,

ஓர் உருண்டைக் களிமண் குழந்தையாவதில்லை. இந்தப் பரிணாம வளர்ச்சி எதிலிருந்து வருகிறது என்பதுதான் கேள்வி. விதை என்பது என்ன? விதை என்பது மரம்தான். எதிர்கால மரத்தின் எல்லா சாத்தியக்கூறுகளும் அந்த விதைக்குள் இருக்கின்றன. எதிர்காலத்தில் மனிதனாவதற்குரிய சாத்தியக் கூறுகள் அனைத்தும் குழந்தையில் இருக்கின்றன. எதிர்கால உயிரினத்தின் குணங்களெல்லாம் உயிரணுவில் இருக்கின்றன. இது என்ன? இந்தியாவின் பண்டைய தத்துவ ஞானிகள் இதை ஒடுக்கம் என்றார்கள். ஆகவே ஒவ்வொரு விரிவிற்கும் முன்னால் ஓர் ஒடுக்கம் இருக்க வேண்டும் என்பது தெரிகிறது. ஏற்கனவே ஒடுங்கியிருக்காத ஒன்று விரிவடைய முடியாது. இங்கேயும் தற்கால விஞ்ஞானம் நம் உதவிக்கு வருகிறது. பிரபஞ்சம் முழுவதும் பரவியுள்ள சக்தியின் அளவு, எப்போதும் ஒரேபோல் இருக்கிறது என்பதைக் கணிதபூர்வமாக நாம் அறிந்திருக்கிறோம். ஓர் அணுவளவு ஜடப்பொருளையோ, ஒரு துளி சக்தியையோ நம்மால் பிரபஞ்சத்திலிருந்து எடுத்துவிட முடியாது. அதேபோல் ஓர் அணுவையோ துளி சக்தியையோ பிரபஞ்சத்தில் சேர்க்கவும் முடியாது.

எனவே பரிணாமம் அல்லது விரிவு சூன்யத்திலிருந்து வருவதில்லை. அப்படியானால் அது எங்கிருந்து வருகிறது? அதற்கு முந்திய ஒடுக்கத்திலிருந்துதான். மனிதனின் ஒடுக்கமே குழந்தை; குழந்தையின் பரிணாமமே மனிதன். மரத்தின் ஒடுக்கமே விதை; விதையின் விரிவே மரம். உயிரின் சாத்தியக் கூறுகளெல்லாம் உயிரணுவில் இருக்கின்றன. பிரச்சினை இப்போது சிறிது தெளிவாகிறது. உயிரின் தொடர்ச்சியான இருப்பைப் பற்றிய முதல்கருத்தை இதனுடன் சேர்த்துக் கொள்வோம். முதல் உயிரணுவிலிருந்து பரிபூரணத்துவம் அடைந்த மனிதன் வரையில் உண்மையில் ஒரே உயிர்தான் இருக்கிறது. ஒரு வாழ்க்கையில் பல்வேறு நிலைகளைப் பார்க்கிறோம். அதுபோல் இந்த ஒரே உயிரணுதான் குழந்தையாகி, வாலிபனாகி, கிழவனாவதுபோல், முதல் உயிரணுவிலிருந்து பரிபூரணத்துவம் பெற்ற மனிதன்வரை ஒரே உயிர்தான் பரிணமிக்கிறது. எல்லாம் ஒரே தொடர் சங்கிலிதான். இதுதான் பரிணாமம். ஆனால் ஒவ்வொரு விரிவுக்கும் முன்னால் ஓர் ஒடுக்கம் இருக்க வேண்டும் என்று நாம் பார்த்தோம். ஒரே உயிர்தான் தன்னைத் தானே நிதானமாக வெளிப்படுத்திக் கொள்கிறது; முதல் உயிரணுவிலிருந்து பரிபூரணத்துவம் பெற்ற

மனிதன்வரை விரிவடைந்து, பூமியில் கடவுளின் அவதாரம் வரை வருகின்ற இந்தச் சங்கிலித் தொடர் முழுவதுமே ஒரே உயிர்தான். இந்த வெளிப்பாடு முழுவதுமே அந்த முதல் உயிரணுவுக்குள் ஒடுங்கியிருந்திருக்க வேண்டும். இந்த வாழ்க்கை முழுவதுமே, ஏன், இந்த மனிதக் கடவுள்கூட அதிலேயே ஒடுங்கியிருக்க வேண்டும். அந்த ஒடுக்கத்தில் இருந்து மெது வாக வெளிவந்து, மிகவும் மெதுவாகத் தன்னை வெளிப் படுத்திக்கொள்ள ஆரம்பித்தது. மிக உயர்ந்த வெளிப்பாடும் அங்கே நுட்பமான வடிவில் இருந்திருக்க வேண்டும். எங்கும் நிறைந்துள்ள பிரபஞ்ச வாழ்வு என்பதன் ஒடுக்கமே இந்தத் தொடர் சங்கிலி முழுவதுமான அந்த ஒரே சக்தி. இந்தப் பேரறிவுதான் முதல் உயிரணுவிலிருந்து நிறைமனிதன்வரை நிதானமாக விரிவடைகிறது. அது வளர்கிறது என்பதில்லை. வளர்ச்சி என்ற கருத்தையே மனத்திலிருந்து நீக்கிவிடுங்கள். வளர்ச்சி என்றாலே எப்போதும் வெளியிலிருந்து வருகின்ற ஒன்றுடன் தொடர்புடையது. எல்லா உயிர்களுள்ளும் அடங்கி யிருக்கும் எல்லையற்ற பொருள் வெளியிலிருக்கும் எதையும் சார்ந்ததல்ல என்ற உண்மையை, வளர்ச்சி என்ற கருத்து பொய்யாக்கிவிடும். அது வளரவே முடியாது. அது எப்போதும் இருக்கிறது; தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது, அவ்வளவுதான்.

காரணத்தின் வெளிப்பாடே காரியம். காரணத்திற்கும் காரியத்திற்கும் இடையில் அடிப்படை வித்தியாசம் எதுவு மில்லை. இந்த டம்ளரை எடுத்துக் கொள்வோம். டம்ளரின் மூலப்பொருளும், டம்ளரை உருவாக்கிய நிமித்த காரணமாகிய மனிதனின் சித்தமும் சேர்ந்து, அதனை உருவாக்கியிருக்கின்றன. இந்த இரண்டுமே டம்ளருக்குக் காரணம். அவை இந்த டம்ளரில் இருக்கின்றன. அவை எந்த உருவத்தில் டம்ளரில் இருக்கின்றன? இணைக்கும் சக்தியாக. இந்தச் சக்தி இல்லாவிட்டால் டம்ளர் தூள் தூளாகப் பிரிந்துவிடும். அப்படியானால் காரியம் என்பது என்ன? காரணத்தைப் போன்றதுதான் காரியமும்; ஆனால் வேறு உருவத்தில் இருக்கிறது, வேறு அமைப்பில் இருக்கிறது. காரணம் உருமாறி கால வரையறைக்குள் வரும்போது காரிய மாகிறது. நாம் இதை நினைவில் கொள்ள வேண்டும்.

இந்தக் கருத்தை உயிர் பற்றிய நம் கருத்தோடு பொருத்திப் பார்த்தால், முதல் உயிரணுவிலிருந்து நிறைமனிதன்வரை உள்ள ஒரே உயிர்தான் பிரபஞ்சத்திலுள்ள பல்வேறு உயிர்களாகத்

தோற்றம் அளிக்கிறது என்பதை உணரலாம். முதலில் அது ஒடுங்கி நுட்ப உருவாகியது. பின்னர், காரணமாகிய அந்த நுட்ப உருவிலிருந்து விரிவடைந்து, பரிணமித்தபடி, தூலமாக வெளிவருகிறது.

ஆனால் மரணமற்ற நிலை பற்றிய கேள்விக்கு நாம் இன்னும் ஒரு முடிவு காணவில்லை. இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எதற்குமே அழிவில்லை என்பதைப் பார்த்தோம். புதிதாக எதுவும் இல்லை, புதிதாக எதுவும் வராது. ஒரே சங்கிலித் தொடரான வெளிப்பாடுகள்தான் சக்கரம்போல் மேலும் கீழுமாகச் சுழன்று வருகின்றன. இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லாமே அலைகள்போல் எழுவதும் விழுவதுமாக இயங்கிக் கொண்டிருக்கின்றன. நுட்ப உருவங்களிலிருந்து புதிய புதிய அமைப்புகள் தங்களை விரிவுபடுத்திக் கொண்டு, தூல வடிவம் எடுத்து, மறுபடியும் கரைந்து, பழைய நுட்ப நிலையை அடைகின்றன. மறுபடியும் இதே சுழற்சி நடைபெறுகிறது. எல்லா உயிர்களின் விஷயமும் இப்படித்தான். உயிரின் வெளிப்பாடு ஒவ்வொன்றும் விரிவதும் ஒடுங்குவதுமாகவே இருக்கிறது. ஒடுங்குவது எது? உருவம்தான். உருவம் சிதறிவிடுகிறது. ஆனால் மறுபடியும் உருவெடுக்கிறது. ஒருவிதத்தில் பார்த்தால், உடல்களும் உருவங்களும்கூட நிலையானவைதான். எப்படி? நாம் பல பகடைக்காய்களை எடுத்து உருட்டுவதாக வைத்துக் கொள்வோம்; 6–5–3–4 என்று ஏதோ எண்கள் வருகின்றன. மறுபடியும் அந்தக் காய்களை உருட்டிக்கொண்டே இருந்தால் அதே எண்கள் மறுபடியும் ஒருமுறை வரும்; அதே சேர்க்கை வந்தேயாக வேண்டும். அதே விதியைப் பிரபஞ்சத்திற்குப் பொருத்திப் பார்த்தால், பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வோர் அணுவும் ஒரு பகடைக்காய் போன்றது. இவற்றின் ஒவ்வொரு சேர்க்கையின்போதும் புதிய உருவங்கள் தோன்றுகின்றன. இப்போது நம் முன் இருக்கும் உருவங்கள் இத்தகைய சேர்க்கைகளில் ஒன்று. இங்கே ஒரு டம்ளர், ஒரு மேஜை, ஒரு தண்ணீர்க் கூஜா ஆகிய உருவங்கள் இருக்கின்றன. இது ஒருவகைச் சேர்க்கை. இந்தச் சேர்க்கை காலப்போக்கில் சிதறிவிடும். ஆனால் மறு படியும் இதே உருவச் சேர்க்கை எப்போதாவது வந்தே தீரும். அப்போது நாம் இங்கே இருப்போம்; இந்த உருவங்களெல்லாம் இங்கே இருக்கும்; இப்போது நாம் பேசும் விஷயத்தையே அப்போதும் பேசிக்கொண்டிருப்போம். இதே தண்ணீர்க் கூஜா அப்போதும் இருக்கும். இந்த மாதிரிச் சேர்க்கை கணக்கில்லாத

முறை நிகழ்ந்திருக்கிறது; கணக்கில்லாத முறை நிகழும். தூல உருவங்களைப் பொறுத்தவரை இவ்வளவுதான். இதிலிருந்து நமக்கு என்ன தெரிகிறது? தூல உருவங்களின் ஒரேமாதிரிச் சேர்க்கைகளும்கூட முடிவில்லாமல் திரும்பத்திரும்ப நடந்து கொண்டிருக்கின்றன என்பதுதான்.

இந்தக் கொள்கையிலிருந்து ஒரு சுவாரசியமான முடிவு வெளிவருகிறது. கீழ்க் காண்பவை போன்ற சில உண்மைகளுக் கான விளக்கங்களே அது. உங்களில் சிலர், இறந்தகாலத்தையும் எதிர்காலத்தையும் அறிந்து சொல்லக் கூடியவர்களைப் பார்த் திருக்கலாம். எதிர்காலம் நிர்ணயிக்கப்படவில்லை என்றால், எதிர்காலத்தைப்பற்றி ஒருவர் எப்படிச் சொல்ல முடியும்? இறந்தகாலத்தின் விளைவுகளே எதிர்காலத்தில் வருகின்றன. நாமும் அவ்வாறே காணவும் செய்கிறோம். நீங்கள் சிகாகோ விலுள்ள பிரம்மாண்டமான ரங்கராட்டினத்தைப் பார்த் திருப்பீர்கள். அதன் சக்கரம் சுழலும்போது அதில் இணைக்கப் பட்டிருக்கும் தொட்டில்கள், ஒன்றன்பின் ஒன்றாக, வரிசை யாகத் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கின்றன. அந்தத் தொட்டில்களில் மக்கள் உட்காருகிறார்கள். அவர்களுக்கான சுழற்சி முடிந்ததும் அவர்கள் இறங்கிவிடுகிறார்கள். புதிய ஆட்கள் அமர்கிறார்கள். ஒவ்வொரு முறை ஏறும் குழுவும், முதல் உயிரணுவிலிருந்து, பரிபூரணத்துவம் பெற்ற மனிதன் வரை உள்ள வெளிப்பாடுகள் போன்றது. ரங்கராட்டினத் திலுள்ள சுழற்றும் சங்கிலி போன்றதுதான் முடிவற்ற எல்லை யற்ற இயற்கை. உடல்களும் உருவங்களும் இந்தத் தொட்டில் களைப் போன்றவை. இந்த உடல்களில் புகுந்து இயங்கும் ஆன்மாக்கள், இந்தத் தொட்டில்களில் அமர்ந்திருக்கும் மனிதர் களைப் போன்றவை. இந்தத் தொட்டில்கள் உயரே போவது போல், ஆன்மாக்களும் படிப்படியாக முன்னேறி முழுமை பெற்று, தங்கள் முறை முடிந்தவுடன், தொட்டிலிலிருந்து வெளி யேறும் மனிதர்களைப் போல் வெளியேறுகின்றனர். ஆனால் சக்கரம் சுழன்றுகொண்டே இருக்கிறது.

இந்தச் சுழற்சியில் உடல்கள் இருக்கும்வரை அவை போகும் இடத்தைத் துல்லியமாகக் கணித முறையில் முன்னறிந்து சொல்ல முடியும். ஆனால் ஆன்மாக்களைப்பற்றி அப்படிச் சொல்ல முடியாது. இதுபோல், இயற்கை நிகழ்ச்சிகளின் இறந்த மற்றும் எதிர்காலங்களைப்பற்றித் துல்லியமாகச் சொல்லிவிடலாம். ஆகவே சில நிகழ்ச்சிகள், குறிப்பிட்ட சில

காலங்களில், மறுபடியும் மறுபடியும் முன்போலவே மாறாமல் நடைபெறுகின்றன என்பதையும் இத்தகைய சேர்க்கைகள் முடிவில்லாமல் நிகழ்ந்துகொண்டே இருக்கின்றன என்பதையும் காண்கிறோம். ஆனால் அது ஆன்மாவின் அமரத்துவம் அல்ல. எந்தச் சக்தியும் அழிய முடியாது. எந்த ஜடப்பொருளும் அழிய முடியாது. அவை என்ன ஆகின்றன? அவை முன்னும் பின்னு மாக இயங்கியபடி தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கின்றன. கடைசியில், தோன்றிய இடத்திற்கே திரும்பிப் போகின்றன.

எந்த இயக்கமுமே நேர்கோட்டில் இல்லை. எல்லாமே வட்ட வடிவில்தான் சுழல்கின்றன. ஒரு நேர்கோட்டை எல்லையற்ற தூரம் நீட்டினால் அது வட்டமாகிறது. இது உண்மையானால் யாருக்குமே நிரந்தரமான தாழ்வு இல்லை; இருக்கவும் முடியாது. எல்லாருமே வட்டத்தைப் பூர்த்தி செய்துகொண்டு, தோன்றிய இடத்திற்குத் திரும்பி வந்துதான் தீரவேண்டும். நீங்கள், நான், இவர்கள் எல்லாம் யார்? விரிவு, ஒடுக்கம் பற்றிய நம் விவாதத்தில், நாம் எப்படிப் பிரபஞ்ச உணர்வு அல்லது பிரபஞ்ச உயிர் அல்லது பிரபஞ்ச மனத்தின் பகுதிகளாக இருந்தாக வேண்டும் என்பதைப் பார்த்தோம். இந்த உணர்வு முதலில் தன்னை ஒடுக்கிக் கொள்கிறது. இதன் விரிவாகிய நாம், வட்டத்தை முடித்துக்கொண்டு, கடவுளாகிய பேரறிவிடம் திரும்பிப் போக வேண்டும். இந்தப் பிரபஞ்சப் பேரறிவையே இறைவன், கடவுள், கிறிஸ்து, புத்தர், பிரம்மம் என்றும், உலகியல்வாதிகள் ஆற்றல் என்றும், ஆஜ்ஞேய வாதிகள் எல்லையற்ற, எல்லாவற்றிற்கும் அப்பாலிருக்கின்ற விளக்க முடியாத ஒன்று என்றும் சொல்கிறார்கள். நாம் எல்லோரும் அதனுடைய பகுதிகளே.

இதுதான் இரண்டாவது கருத்து. ஆனால் இதுவும் போதாது. இன்னும் நிறைய சந்தேகங்கள் இருக்கின்றன. எந்த ஆற்றலுக்கும் அழிவு இல்லை என்று சொல்வதெல்லாம் சரி தான். ஆனால் நாம் காணும் சக்திகள் மற்றும் உருவங் களெல்லாமே பலவற்றின் சேர்க்கையே ஆகும். நமக்கு முன்னே இருக்கும் உருவங்கள் பல தனித்தனிப் பகுதிகள் சேர்ந்து ஆனவை. அதைப் போலவே ஒவ்வோர் ஆற்றலும் பல பகுதி களால் ஆனவை. ஆற்றலைப் பற்றிய விஞ்ஞானக் கருத்தை நாம் எடுத்துக்கொண்டு, ஒவ்வோர் ஆற்றலும் பல்வேறு ஆற்றல் களின் மொத்த விளைவே என்று சொன்னால் உங்கள் தனித் துவம் எங்கே இருக்கும்? பலவற்றின் சேர்க்கையால் ஆன

எதுவுமே, கடைசியில் அதன் பகுதிகளாகப் பிரியத்தான் வேண்டும். ஜடப்பொருளின் சேர்க்கையாக இருந்தாலும், ஆற்றலின் சேர்க்கையாக இருந்தாலும் அது அதன் பகுதிகளாகப் பிரிந்துதான் ஆகவேண்டும். காரணங்களின் விளைவுகளான எதுவும் அழியத்தான் வேண்டும். அது சிதறிப் பரவி அதனுடைய பகுதிகளாக ஆகிறது.

ஆன்மா ஓர் ஆற்றல் அல்ல; அது எண்ணமும் அல்ல; எண்ணத்தைத் தோற்றுவிப்பது அது. ஆனால் அதுவே எண்ணம் அல்ல. உடலைத் தோற்றுவிப்பது அது. ஆனால் அதுவே உடல் அல்ல. ஏன் அப்படி? உடல் ஆன்மாவாக இருக்க முடியாது என்பதை நாம் காண்கிறோம். ஏன் அப்படி? ஏனென்றால் உடலுக்கு அறிவு இல்லை. ஒரு பிணத்திற்கு அறிவில்லை; கசாப்புக் கடையிலிருக்கும் ஒரு மாமிசத் துண்டிற்கும் அறிவில்லை. நாம் அறிவு என்று சொல்வதன் பொருள் என்ன? எதிர்ச் செயலாற்றும் சக்தி. நாம் இதைப்பற்றி இன்னும் சற்று ஆழ்ந்து ஆராய வேண்டும். இதோ ஒரு கூஜா இருக்கிறது. நான் அதைப் பார்க்கிறேன். எப்படி? கூஜாவின் மீது பட்டுப் பிரதிபலிக்கும் ஒளிக் கதிர்கள் என் கண்ணுக்குள் போய், என் விழித்திரையில் ஒரு காட்சியை உருவாக்குகின்றன. அது மூளைக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. அப்போதும் நான் கூஜாவைப் பார்க்க முடிவதில்லை. உணர்ச்சியை எடுத்துச் செல்லும் நரம்புகள் (sensory nerves) என்று உடலியல் வல்லுனர்கள் அழைக்கிறார்களே, அவை மூலமாகத்தான் இந்தப் பதிவு மூளைக்குப் போகிறது. ஆனால் இதுவரை எதிர்ச் செயல் எதுவும் இல்லை. மூளையிலுள்ள நரம்பு மையம், இந்தப் பதிவை மனத்திற்கு எடுத்துச் செல்கிறது. மனத்திலிருந்து எதிர்ச்செயல் எழுகிறது. இந்த எதிர்ச்செயல் எழுந்தவுடன் கூஜா கண்ணிற்குத் தெரிகிறது.

இன்னும் சாதாரணமான உதாரணம் ஒன்றை எடுத்துக் கொள்வோம். நான் பேசுவதை நீங்கள் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருக்கிறீர்கள். அப்போது ஒரு கொசு உங்கள் மூக்கு நுனியில் அமர்ந்துகொண்டு, அதற்கே இயல்பான அந்த இன்ப உணர்ச்சியை உங்களுக்கு உண்டாக்குவதாக வைத்துக் கொள்வோம்! உங்கள் கவனம் முழுவதும் என் பேச்சின் மீதே இருப்பதால், நீங்கள் அந்தக் கொசு இருப்பதை உணர்வதில்லை. என்ன நடந்தது? கொசு உங்கள் தோலில் ஒரு பகுதியைக் கடிக்கிறது. அங்கே சில நரம்புகள் இருக்கின்றன. அவை உணர்ச்சியை

உங்கள் மூளைக்கு எடுத்துச் செல்கின்றன. மூளையில் அந்த உணர்ச்சியின் பதிவு இருக்கிறது. ஆனால் மனம் வேறொரு காரியத்தில் ஈடுபட்டிருப்பதால் இந்தச் செயலுக்கு எதிர்ச் செயல் புரிவதில்லை. ஆகவே கொசு இருப்பது உங்களுக்குத் தெரிவதில்லை.

ஒரு புதிய பதிவு ஏற்படும்போது, மனம் எதிர்ச்செயல் புரியாவிட்டால், அந்த உணர்ச்சியை நாம் அறிவதில்லை. மனம் எதிர்ச்செயல் புரிந்துவிட்டால் நாம் உணர்கிறோம், நாம் பார்க்கிறோம், நாம் கேட்கிறோம். இந்த எதிர்ச்செயலின் மூலம்தான் அறிவொளி உண்டாகிறது என்று சாங்கியத் தத்துவ வாதிகள் கூறுகிறார்கள். உடல் அறிவொளியைக் கொடுக்க முடியாது. ஏனென்றால் கவனம் இல்லையென்றால் உணர்ச்சி களை அறிய முடியாது. ஒரு குறிப்பிட்ட மொழியைப்பற்றி எதுவுமே அறியாத ஒரு மனிதன் சில குறிப்பிட்ட சூழ்நிலை களில் அந்த மொழியைப் பேசிய நிகழ்ச்சிகள் பற்றிய தகவல்கள் வந்துள்ளன. தொடர்ந்து அதனை ஆராய்ந்தபோது, அந்த மனிதன் குழந்தையாக இருந்தபோது, அந்த மொழி பேசும் மனிதர்களிடையே வாழ்ந்தான் என்பது தெரிய வந்தது. அந்த மொழியின் பதிவுகள் அவனது மூளையில் இடம் பெற்று விட்டன. அவை அவனது மூளையில் பத்திரமாக இருந்தன. ஏதோ காரணத்தால், அவனது மனம் இந்தப் பதிவுகளோடு தொடர்பு கொண்டபோது அறிவொளி வந்தது; அந்த மொழியைப் பேசும் திறமை அவனுக்கு வந்துவிட்டது. எனவே மனம் மட்டுமே காரணமல்ல, மனம்கூட யாரோ ஒருவரின் கைக்கருவி என்பதையே இது காட்டுகிறது. மேலே சொன்ன உதாரணத்தில், அந்த மனிதனின் மனத்தில் அந்த மொழி இருந்தது. ஆனால் அதை அவன் அறியவில்லை. பின்னால் அவன் அதை அறியும் நேரம் வந்தது. ஆகவே மனத்தைத் தவிர யாரோ ஒருவர் இருப்பது தெரிய வருகிறது. அந்த மனிதன் குழந்தையாக இருந்தபோது, அந்த யாரோ ஒருவர் தன் சக்தியைப் பயன்படுத்தவில்லை. அவன் வளர்ந்த பின், அவர் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி, அவன் அந்த மொழியைப் பேசு வதற்குத் தன் சக்தியை உபயோகித்தார்

முதலில், இதோ உடல் இருக்கிறது; இரண்டாவதாக, எண்ணத்தின் கருவியான மனம் இருக்கிறது; மூன்றாவதாக, மனத்திற்குப் பின்னால், மனிதனின் ஆன்மா இருக்கிறது. இதை சம்ஸ்கிருதத்தில் 'ஆத்மன்', ஆன்மா என்கிறார்கள். தற்காலத்

தத்துவவாதிகள், எண்ணம் என்பது மூளையிலுள்ள மூலக் கூறுகளில் ஏற்படும் மாற்றமே என்று சொல்கிறார்கள். ஆகவே மேலே சொன்னதைப் போன்ற நிகழ்ச்சிக்கு அவர்களால் விளக்கம் காண முடிவதில்லை. இந்த மாதிரி நிகழ்ச்சிகளை அவர்கள் மறுக்கிறார்கள். மனம், மூளையோடு மிகவும் நெருங்கிய தொடர்பு உடையது, உடல் இறந்துவிட்டால் அதனால் இயங்கவும் முடியாது. ஆன்மாதான் அறிவொளி உண்டாக்கும் சக்தி; மனம் ஆன்மாவின் கருவி மட்டுமே. மன மாகிய கருவியின்மூலம் அது பொறிகளாகிய புறக்கருவிகளைத் தூண்டி அனுபவங்களைப் பெறுகிறது. பொறிகள், உணர்ச்சி களைப் புலன்களுக்கு எடுத்துச் செல்கின்றன. கண், காது முதலியவை வெறும் பொறிகளே; உண்மையான அனுபவத் திற்குக் காரணமானவை மூளை மையங்களான அகப்புலன்களே என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

இந்தப் புலன்களை சம்ஸ்கிருதத்தில் இந்திரியங்கள் என்று சொல்கிறார்கள். இவை உணர்ச்சிகளை மனத்திற்கும், மனம் அவற்றைப் படிப்படியாகச் சித்தத்திற்கும், சித்தம் அவற்றை ஆன்மாவிற்கும் எடுத்துச் செல்கின்றன. இந்த ஆன்மாதான், அரியணையில் அமர்ந்து ஆளும் சக்கரவர்த்தி. தகுந்தபடி கட்டளைகளைப் பிறப்பிப்பது இந்த ஆன்மாதான். பிறகு மனம் புலன்களுக்கும் புலன்கள் பொறிகளுக்கும் கட்டளைகளைப் பிறப்பிக்கின்றன. உண்மையில் அனைத்தையும் அனுபவிப்பவர், ஆள்பவர், அரசாட்சி புரிபவர், படைத்தவர், அனைத்தையும் இயக்குபவர் மனிதனின் ஆன்மாவே. ஆகவே உடல், ஆன்மா வல்ல, எண்ணமும் ஆன்மாவல்ல என்பதைப் பார்க்கிறோம். அது ஒரு சேர்க்கைப் பொருளாக இருக்க முடியாது. ஏன்? ஏனென்றால் சேர்க்கையாக இருக்கும் எதையுமே பார்க்கவோ கற்பனை செய்யவோ முடியும். நம்மால் பார்க்கவோ கற்பனை செய்யவோ சேர்த்துக் கட்டவோ முடியாத ஒன்று, ஆற்ற லாகவோ ஜடப்பொருளாகவோ காரணமாகவோ காரிய மாகவோ பலவற்றின் சேர்க்கையாகவோ இருக்க முடியாது. சேர்க்கையால் உண்டானவை நமது மனப் பிரபஞ்சம், எண்ணப் பிரபஞ்சம் இவற்றிற்குள்தான் இருக்க முடியும். இவற்றிற்கு அப்பால் இவை இருக்க முடியாது. நியதி என்ற ஒன்று இருக்கும் வரைதான் கூட்டுப் பொருட்கள் இருக்க முடியும். நியதிகளைக் கடந்த நிலையில் கூட்டுப்பொருள் இல்லை. காரணகாரிய விதிகளுக்கு அப்பாற்பட்டிருப்பதால், மனிதனின் ஆன்மா

கூட்டுப்பொருள் அல்ல. அது எப்போதும் சுதந்திரமானது, நியதிகளுக்குக் கட்டுப்பட்ட எல்லாவற்றையும் ஆட்சி புரிவது. அதற்கு மரணமே இல்லை. ஏனென்றால் மரணம் என்றால் மூலக்கூறுகளாகப் பிரிவது என்று அர்த்தம். எப்போதுமே மூலக்கூறுகளால் சேர்ந்து கூட்டுப் பொருளாகாத ஒன்றிற்கு மரணம் இல்லை. ஆன்மா மரணமடைகிறது என்று சொல்வது முட்டாள்தனம்.

நாம் இப்போது மிகமிக நுட்பமாகச் சென்று கொண்டிருக்கிறோம். உங்களுள் சிலர் பயப்படலாம். ஜடப்பொருள், சக்தி, எண்ணம் இவற்றாலான இந்தச் சிறிய பிரபஞ்சத்திற்கு அப்பால் இருக்கின்ற தனிப்பொருள் ஆன்மா என்பதைக் கண்டோம். தனிப்பொருளான ஆன்மா மரணமடைய முடியாது. மரண மடைய முடியாத ஒன்று வாழவும் முடியாது. ஏனென்றால் வாழ்வும் சாவும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள். மரணத்தின் மறு பெயரே வாழ்வு; வாழ்வின் மறு பெயரே மரணம். ஒரு குறிப்பிட்ட வெளிப்பாட்டை வாழ்வு என்கிறோம்; அதே பொருளின் வேறுவிதமான வெளிப்பாட்டை மரணம் என் கிறோம். அலை உயரே எழும்போது வாழ்வு என்கிறோம்; கீழே விழும்போது மரணம் என்கிறோம். எனவே மரணத்தைக் கடந்து நிற்கும் எதுவும் வாழ்க்கையையும் கடந்தே நிற்க வேண்டும் என்பது தெரிகிறது.

கடவுளாகிய பிரபஞ்ச சக்தியின் ஒரு பகுதியே மனிதனின் ஆன்மா என்ற முதல் முடிவை இங்கு நாம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். அந்த ஆன்மா வாழ்வையும் சாவையும் கடந்தது என்பதை இப்போது காண்கிறோம். நாம் பிறக்கவும் இல்லை; நமக்கு மரணமும் இல்லை. நம்மைச் சுற்றி நாம் காணும் வாழ்வு சாவு இவையெல்லாம் என்ன? இவையெல்லாம் உடலுக்கு மட்டுமே. ஆன்மா எங்கும் நிறைந்தது. 'அது எப்படி?' என்ற கேள்வி எழலாம். 'இங்கே இத்தனை பேர் உட்கார்ந்து கொண்டிருக்கிறோம். நீங்கள் என்னடாவென்றால், ஆன்மா எங்கும் நிறைந்தது என்று சொல்கிறீர்களே?' என்று நீங்கள் கேட்கலாம். விதிகளுக்கும் காரணகாரியங்களுக்கும் அப்பாலிருக்கும் ஒன்றை எது எல்லைக்கு உட்படுத்த முடியும்? இந்த டம்ளர் எல்லைக்கு உட்பட்டது. அது எங்கும் நிறைந்தது அல்ல. ஏனெனில் சுற்றியிருக்கும் ஜடப்பொருள் அதனை, இப்போது அது பெற்றிருக்கும் உருவத்தை எடுத்துக் கொள்ளுமாறு செய்திருக்கின்றன; அந்த டம்ளர் தன்னை விரிவு

படுத்திக்கொள்ளவும் அவை அனுமதிக்கவில்லை. சுற்றியிருக்கின்ற ஒவ்வொன்றும் அதைக் கட்டுப்படுத்துகின்றன. எனவே அது எல்லைக்கு உட்பட்டதாக இருக்கிறது. ஆனால் விதிகளுக்கெல்லாம் அப்பாற்பட்ட ஒன்று, தன்னைப் பாதிக்க வேறு எதுவும் இல்லாத ஒன்று, எப்படி எல்லைக்கு உட்பட்டிருக்க முடியும்? அது எங்கும் நிறைந்ததாகத்தான் இருக்க முடியும். நாம் பிரபஞ்சம் முழுவதிலுமே நிறைந்திருக்கிறோம். அப்படியானால், நான் பிறந்திருக்கிறேன், நான் சாகப் போகிறேன் என்பனவெல்லாம் எப்படி உண்மையாகும்? அவை அறியாமையால் பேசும் பேச்சுக்கள்; மன மயக்கங்கள்! நாம் பிறப்பு, இறப்பு அற்றவர்கள். நாம் பிறப்பதும் இல்லை, நமக்கு மறுபிறவியும் இல்லை, வாழ்வும் இல்லை, அவதாரமும் இல்லை, எதுவுமே இல்லை. பிறப்பது இறப்பது என்று சொல்வதற்கு என்ன அர்த்தம்? எல்லாமே வடிகட்டின முட்டாள்தனம். நாம் எங்கும் நிறைந்திருக்கிறோம். அப்படியானால் பிறப்பதற்கும் இறப்பதற்கும் பொருள் என்ன? மனம் என்று நாம் சொல்கிறோமே, அந்த சூட்சும சரீரத்தில் ஏற்படும் மாறுதலால் தோன்றும் மயக்கங்களே இவை.

இது நடந்துகொண்டே இருக்கிறது. வானத்தில் மிதந்து செல்லும் சிறிய மேகத் துணுக்கைப் போன்றதே இது. அது மிதந்து போகும்போது ஆகாயமே நகர்ந்து செல்வது போன்ற ஒரு பிரமையை ஏற்படுத்தலாம். சிலவேளைகளில், சந்திரனுக்கு முன்னால் ஒரு மேகம் நகர்ந்து செல்கிறது. சந்திரனே நகர்ந்து செல்வது போன்ற தோற்றத்தை அது ஏற்படுத்துகிறது. ரயிலில் பயணம் செய்யும்போது, நிலம் ஓடுவதைப் போன்ற பிரமை உண்டாகிறது. படகில் பயணம் செய்யும்போது, தண்ணீர் ஓடுவதைப்போன்ற பிரமை உண்டாகிறது. உண்மையில், நாம் போவதுமில்லை, வருவதுமில்லை. நாம் பிறப்பதுமில்லை, மறுபிறவி எடுப்பதுமில்லை. நாம் எல்லையற்றவர்கள்; எப்போதும் இருப்பவர்கள்; காரணகாரியத்திற்கெல்லாம் அப்பாற்பட்டவர்கள்; எப்போதும் சுதந்திரமானவர்கள். ஆகவே நாம் பிறக்கிறோமே, இறக்கிறோமே என்று கேட்பதெல்லாம் அப்பட்டமான முட்டாள்தனம். பிறப்பே இல்லாதபோது, இறப்பு எப்படி இருக்க முடியும்?

இன்னும் ஒருபடி மேலே போனால் தர்க்கபூர்வமான முடிவுக்கு வந்துவிடுவோம். தங்குமிடம் எதுவும் வழியில் இல்லை. நாமெல்லாம் தத்துவ நாட்டம் கொண்டவர்கள். நாம்

எதற்கும் தயங்கக் கூடாது. ஆகவே நாம் எல்லா விதிகளையும் கடந்தவர்களானால், எல்லாம் அறிந்தவர்களாக எப்போதும் ஆனந்த மயமானவர்களாக இருக்க வேண்டும். எல்லா அறிவும் எல்லா ஆற்றலும் எல்லா ஆனந்தமும் நம்முள்ளே இருக்க வேண்டும். இது நிச்சயமான உண்மை. இந்தப் பிரபஞ்சத்தில் எல்லாம் அறிந்த, எங்கும் நிறைந்தவர் நாமே. ஆனால் அத்தகையோர் ஒருவருக்கு மேல் இருக்க முடியுமா? எங்கும் நிறைந்த கோடிக்கணக்கானோர் இருக்க முடியுமா? நிச்சயமாக முடியாது. அப்படியானால் நம் எல்லோருடைய கதியெல்லாம் என்ன? நாம் எல்லோரும் ஒருவரே. ஆன்மா ஒன்றே. அந்த ஒரே ஆன்மா நம்முள்ளேயே உள்ளது. இந்தச் சிறிய இயற்கைக்குப் பின்னால் நிற்பது நாம் ஆன்மா என்று அழைக்கின்ற பொருள்.

உள்ளது ஒருவர்தான்; பிறப்பு இறப்பற்ற சச்சிதானந்தப் பொருளான ஆன்மா அவர். 'அவரது ஆட்சியால்தான் வானம் விரிகிறது, காற்று வீசுகிறது, சூரியன் பிரகாசிக்கிறது. எல்லா உயிர்களும் வாழ்கின்றன. இயற்கையில் பொதிந்துள்ள உண்மை அவரே அவரே, உங்கள் அந்தராத்மா. இல்லையில்லை இன்னும் மேலாக நீங்களே அவர். நீங்கள் அவருடன் இரண்டறக் கலந்திருக்கிறீர்கள். இரண்டு இருந்தாலே அங்கு பயம்தான்; ஆபத்துதான்; சண்டை, பூசல், எல்லாம்தான். ஒன்றே என்னும் போது யாரை வெறுப்பது? யாரோடு போராடுவது? எல்லாம் அவராகவே இருக்கும்போது யாரோடு சண்டை போடுவீர்கள்? வாழ்க்கையின் உண்மை இயல்பை இது விளக்குகிறது, ஆன்மாவின் உண்மை இயல்பை விளக்குகிறது.

இதுவே நிறைநிலை. இதுவே கடவுள். பன்மையைப் பார்க்கும் வரை மனமயக்கத்திலேயே உள்ளோம். பன்மை நிறைந்த இந்த உலகில் ஒன்றையே பார்ப்பவன் யாரோ, இடை யீடற்று மாறிக் கொண்டிருக்கும் இந்த உலகில், மாறுதலே அற்ற பரம்பொருளைப் பார்ப்பவன் யாரோ; அந்தப் பரம் பொருளையே தனது ஆன்மாவின் ஆன்மாவாக, தனது ஆன்மா வாகக் காண்பவர் யாரோ அவரே சுதந்திரமானவர்; ஆனந்த மயமானவர்; குறிக்கோளை அடைந்தவர். நீங்கள் அந்தப் பரம் பொருளே என்பதை அறிந்து கொள்ளுங்கள். இந்தப் பிர பஞ்சத்தின் கடவுள் நீங்கள். 'தத் த்வம் அஸி'.

நான் ஆண், பெண், நோயாளி, ஆரோக்கியமானவன், வலியவன், எளியவன், நான் வெறுக்கிறேன், அன்பு செலுத்து கிறேன், எனக்கும் சிறிது சக்தி உள்ளது என்பனவெல்லாம்

வெறும் மனமயக்கங்கள். இவற்றை எல்லாம் ஒதுக்கிவிடுங்கள். உங்களைப் பலவீனர்கள் ஆக்குவது எது? பயப்படச் செய்வது எது? பிரபஞ்சத்தில் இருப்பது நீங்கள் மட்டுமே. எது உங்களை அச்சுறுத்த முடியும்? எனவே எழுந்து நில்லுங்கள். சுதந்திரமாக இருங்கள். உங்களைப் பலவீனர்களாக ஆக்கும் எண்ணங்களும் சொற்களும் மட்டுமே உலகிலுள்ள ஒரே தீமை. உங்களைப் பலவீனர்களாக, பயந்தவர்களாக ஆக்குபவைதாம் ஒதுக்கி வைக்கப்பட வேண்டிய தீமைகள். உங்களை எது பயப்படுத்த முடியும்? சூரியர்கள் கீழே விழுந்தாலும், சந்திரர்கள் பொடிப் பொடியானாலும், நட்சத்திர மண்டலங்கள் வீசி எறியப்பட்டுச் சிதறினாலும், அதனால் உங்களுக்கு என்ன வந்தது? பாறையைப் போல் உறுதியாக நில்லுங்கள். உங்களுக்கு அழிவே இல்லை. நீங்களே பிரபஞ்சத்தின் கடவுள். நீங்களே ஆன்மா. 'நானே சச்சிதானந்த சொரூபம், நானே அவன்' என்று சொல்லுங்கள். கூண்டை உடைத்துக்கொண்டு வெளியேறுகின்ற சிங்கம்போல் சங்கிலிகளை அறுத்தெறிந்து, நிரந்தரச் சுதந்திரராகுங்கள்! உங்களைப் பயப்படுத்துவது எது? மேலே வரவிடாமல் உங்களைத் தடுப்பது எது? அறியாமையும் மனமயக்கமுமே. வேறு எதுவும் உங்களைக் கட்டுப்படுத்த முடியாது. தூய்மையும் ஆனந்தமயமுமான பரம்பொருள் நீங்களே!

அறிவிழந்த முட்டாள்கள் உங்களைப் பாவிகள் என்று சொல்கிறார்கள். நீங்களும் அதை நம்பி ஒரு மூலையில் உட்கார்ந்து அழுது கொண்டிருக்கிறீர்கள். நாமெல்லோரும் பாவிகள் என்று சொல்வது முட்டாள்தனம், அயோக்கியத் தனம், கொடுமை. நீங்கள் எல்லோரும் கடவுளே! உங்களைக் கடவுளாகக் காணாமல் மனிதன் என்று அழைப்பதா? துணிவிருந்தால் அந்தக் கருத்தின்மீது நின்று உங்கள் வாழ்க்கையை அதற்கேற்ப அமைத்துக் கொள்ளுங்கள். ஒரு மனிதன் உங்கள் கழுத்தை வெட்டினால் தடுக்காதீர்கள். ஏனெனில் நீங்களேதான் உங்கள் கழுத்தை அறுத்துக் கொள்கிறீர்கள். ஓர் ஏழைக்கு உதவி செய்ததற்காகப் பெருமைப்பட்டுக் கொள்ளாதீர்கள். அது வழிபாடேயன்றி, பெருமைக்குக் காரணமல்ல. இந்தப் பிரபஞ்சமே நீங்கள் அல்லவா! நீங்கள் அல்லாத ஏதாவது இங்கே இருக்கிறதா என்ன? இந்தப் பிரபஞ்சத்தின் ஆன்மா நீங்கள். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் எல்லாமே நீங்கள் தாம். நீங்களே எங்கும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறீர்கள். பிரபஞ்சம் முழுவதுமே நீங்கள்தாம். யாரை வெறுக்கப்

போகிறீர்கள்? யாருடன் சண்டையிடப் போகிறீர்கள்? நீங்களே அவன் என்பதை உணர்ந்து, உங்கள் வாழ்க்கையை அதற்கேற்ப அமைத்துக் கொள்ளுங்கள். இதனை உணர்ந்து, அவ்வாறே வாழ்பவர்கள் இருளில் உழல மாட்டார்கள். ❑

# 11. பிரபஞ்சம்

## பேரண்டம்

நாம் நம்மைச் சுற்றிக் காணும் மலர்களின் காட்சி எழில் நிறைந்தது. காலைக் கதிரவனின் உதயம் அழகு நிறைந்தது, இயற்கையின் வண்ணங்கள் எல்லாம் எழிலோவியங்களாக விளங்குகின்றன. பிரபஞ்சமே அழகு ததும்பித் திளைக்கிறது. மனிதன் உலகில் தோன்றிய காலந்தொட்டே இந்த அழகை அனுபவித்து வருகிறான். மலைகள், கடலை நோக்கி அடித்துப் புரண்டோடும் பெரிய ஆறுகள், திக்குத் தெரியாமல் பரந்து கிடக்கின்ற பாலைவனங்கள், விரிந்த பெருங்கடல், விண்மீன்கள் இறைந்து கிடக்கின்ற வானம் எல்லாமே எழில் மிக்கவை, நுட்பமானவை. ஆம், அவை எல்லாமே நுட்பமானவையாக பயபக்தியை ஊட்டுபவையாக உள்ளன. இயற்கை என்று நாம் சொல்கின்ற இந்தப் பெரும் சக்தி, நினைவுக்கெட்டாத காலத்திலிருந்தே மனித மனத்தின்மீது ஆதிக்கம் செலுத்தி வருகிறது. அது, மனித சிந்தனையையும் வெகுவாகப் பாதித்திருக்கிறது. அந்தப் பாதிப்பினால் எழுந்ததுதான் 'இவையெல்லாம் என்ன? எங்கிருந்து வந்தன?' என்ற கேள்வி.

மனிதன் படைத்தவற்றுள் மிகமிகப் பழமையான வேதங்களில்கூட இதே கேள்வி எழுவதைக் காண்கிறோம்: 'இது எங்கிருந்து வந்தது? இருப்பு, இல்லாமை எதுவுமேயின்றி இருள் இருளில் மறைந்திருந்தபோது, இந்தப் பிரபஞ்சத்தை யார் படைத்தது? எப்படிப் படைத்தார்கள்? இந்த ரகசியம் யாருக்குத் தெரியும்?'[1]

இந்தக் கேள்விகள் இன்றும் நம்மிடையே கேட்கப்பட்டு வருகின்றன. இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்குப் பல

---

1. ஒப்பிடுக:
நாஸதாஸீன்னோ ஸதாஸீத் ததானீம் நாஸீத்ரஜோ நோ
வ்யோமா பரோ யத்... ||
தம ஆஸீத் தமஸா கூடமக்ரேऽப்ரகேதம் ஸலிலம் ஸர்வமாஇதம்
துச்ச்யேனாப்வபிஹிதம் யதாஸீத் தபஸஸ்தன் மஹினா
ऽஜாயதைகம் ||
—ரிக்வேதம், 10. 29, 1–3

கோடி முயற்சிகள் நடந்திருக்கின்றன. இன்னும் பல கோடி முயற்சிகள் நடந்துகொண்டேயிருக்கும். ஒவ்வொரு பதிலும் பயனற்றது என்பது பொருளல்ல. இந்தக் கேள்விக்கு அளிக்கப் பட்ட ஒவ்வொரு பதிலிலும் உண்மையின் ஒரு பகுதி இருந்தது. காலம் செல்லச்செல்ல இந்த உண்மை உறுதிப்பட்டுக் கொண்டே வருகிறது. இந்தியாவின் புராதனமான தத்துவ ஞானிகள் இந்தக் கேள்விக்கு அளித்த பதிலைத் தற்கால அறிவுடன் இணைத்து உங்கள் முன் வைக்க நான் முயல்கிறேன்.

கேள்விகளுக்கெல்லாம் முந்தியதான இந்தக் கேள்வியின் சில அம்சங்களுக்கு ஏற்கனவே தீர்வு காணப்பட்டுள்ளது. 'இருப்பு, இல்லாமை இரண்டுமற்ற' காலம் ஒன்று இருந்தது என்பது முதல் அம்சம். அப்போது இந்த உலகம் இருக்கவில்லை. கடல்கள், சமுத்திரங்கள், ஆறுகள், மலைகள், நகரங்கள், கிரா மங்கள், மனிதர்கள், மிருகங்கள், செடிகொடிகள், பறவைகள் இவற்றையெல்லாம் தன்னுள் அடக்கிய நமது அன்னை பூமி, கிரகங்கள், நட்சத்திர மண்டலங்கள், மற்றும் படைப்பின் எல்லையற்ற பல விசித்திரங்கள் எவையுமே அப்போது இருக்க வில்லை. இது நமக்கு நிச்சயமாகத் தெரியுமா? இந்த முடிவு எப்படி வந்தது என்பதை ஆராய முயல்வோம்.

ஒரு மனிதன் தன்னைச் சுற்றிக் காண்பது என்ன? ஒரு சிறிய செடியை எடுத்துக் கொள்வோம். மனிதன் ஒரு விதையைப் பூமியில் நட்டுத் தண்ணீர் விடுகிறான். சிறிதுகாலம் கழித்து, ஒரு சிறிய செடி பூமியிலிருந்து தலை நீட்டி, வளர்ந்து, பெரிய மரமாகிறது. பிறகு விதையை விட்டுவிட்டு அது அழிகிறது. விதையிலிருந்து முளைத்து, மரமாகி, மறுபடியும் விதையாகி, இப்படி ஒரு சுழற்சியை அது நிறைவு செய்கிறது.

ஒரு பறவையைப் பார்த்தால், அது முட்டையிலிருந்து பிறந்து, வளர்ந்து, எதிர்காலப் பறவைகளை உண்டாக்கும் விதைகளான முட்டைகளை இட்டுவிட்டு இறக்கிறது. மிருகங் கள், மனிதர்கள், ஆகிய அனைவரின் விஷயமும் இப்படித்தான்.

இயற்கையிலுள்ள எல்லாமே சில விதைகள், சில மூலப் பொருட்கள், சில நுட்பமான உருவங்கள் இவற்றிலிருந்து தான் ஆரம்பிக்கின்றன. சிறிதுசிறிதாகப் பருத்தன்மை அடைந்து, வளர்ந்து, சிலகாலம் அப்படியே தொடர்ந்து, பின்னர் மறுபடியும் பழைய நுட்பமான ஆரம்ப நிலையை அடைந்து, அடங்கிவிடுகின்றன. சூரிய கிரணங்கள் புகுந்து விளையாடும் மழைத்துளி, கடலிலிருந்து நீராவியாகி, காற்றில்

வெகுதூரம் மேலே போய், மறுபடியும் நீராக மாறி, பூமிக்கு மழைத்துளியாக வருகிறது. மறுபடியும் இதே சுழற்சி தொடர்கிறது. நம்மைச் சுற்றியிருக்கும் இயற்கையில் உள்ள எல்லாமே இந்தச் சுழற்சிக்குக் கட்டுப்பட்டவையே. பெரிய மலைகளைப் பனிப்பாறைகளும் ஆறுகளும் அரித்து, மெதுவாக ஆனால் நிச்சயமாக அவற்றை மணல்துகள்களாக மாற்று கின்றன. இந்தத் துகள்கள் கடலுக்கு அடித்துச் செல்லப்பட்டு, கடல் படுகையில் அடுக்கடுக்காக ஒன்றன்மேல் ஒன்றாகப் படி கின்றன. காலப்போக்கில் இறுகிப் பாறைகளாகி, எதிர்காலத்தில் மலைகளாக எழுகின்றன. இந்தச் சுழற்சி தொடர்ந்து நடை பெற்றுக்கொண்டே இருக்கிறது. மணலிலிருந்து மலை தோன்றுகிறது; மலை மறுபடியும் மணலாகிறது.

இயற்கையின் இயக்கம் எங்கும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறது. இதுவரை மனித அனுபவத்தில் இதற்கு மாறான கருத்து எழுந்ததில்லை என்பதும், ஒரு மணல் துகள் உண்டாகும் அதே முறையில்தான் பிரம்மாண்டமான சூரியர்களும், நட்சத் திரங்களும் இந்தப் பிரபஞ்சத்தில் உண்டாகின்றன என்பதும், ஓர் அணு எப்படி அமைக்கப்பட்டிருக்கிறதோ, அதே முறையில் தான் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் அமைக்கப்பட்டிருக்கிறது என்பதும், பிரபஞ்சம் முழுவதிலும் ஒரே விதிதான் நிலவு கிறது என்பதும் உண்மையானால், 'ஒரு பிடி மண்ணை அறிந்து கொள்வதன் மூலம், இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லா மண்ணின் இயல்பையும் நாம் அறிந்துகொள்ள முடியும்'[1] என்று வேதங்கள் கூறுவது சரியானதே ஆகும். ஒரு சிறிய செடி யின் வாழ்க்கையை நாம் அறிந்துகொண்டால், இந்தப் பிர பஞ்சத்தை, அது உள்ளபடியே நாம் அறிய முடியும். ஒரு சிறு மணல்துகளின் இயல்பை நாம் அறிந்துகொண்டால், இந்தப் பிரபஞ்சத்தின் ரகசியம் முழுவதையும் நாம் புரிந்து கொள்வோம்.

இதே தர்க்கத்தை இயற்கை நிகழ்ச்சிகள் அனைத் திற்கும் பொருத்திப் பார்த்தால், எல்லாவற்றிற்கும் ஆரம்பமும் முடிவும் ஒரேமாதிரி இருப்பதை நாம் காணலாம். மலை, மணலிலிருந்து தோன்றி மறுபடியும் மணலாக மாறுகிறது. ஆறு, நீராவியிலிருந்து தோன்றி மீண்டும் நீராவியாக மாறுகிறது. தாவரம் விதையிலிருந்து தோன்றி விதையிலேயே முடிகிறது.

---

1. யதா ஸோமயைகேன ம்ருத்பிண்டேன ஸர்வம் ம்ருண்மயம் விஜ்ஞாதம் ஸ்யாத் வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம் |
—சாந்தோக்கிய உபநிடதம், 6. 1. 4

மனித உயிர், மனித உயிரணுக்களிலிருந்து தோன்றி மனித உயிரணுக்களாக முடிகிறது. ஆறுகளும் நட்சத்திரங்களும் கிரகங்களும் நிறைந்த இந்தப் பிரபஞ்சம், முகிற்படல (Nebula) நிலையிலிருந்து தோன்றியிருக்கிறது. மறுபடியும் அதே நிலையைத்தான் அது அடைய வேண்டும்.

இதிலிருந்தெல்லாம் நாம் அறிவது என்ன? நுண்நிலை காரணம், தூலநிலை காரியம் என்பதுதான். அழிவு என்றால் காரண நிலையை அடைவதே என்பதை பல்லாயிரக்கணக் கான ஆண்டுகளுக்கு முன்னரே, தத்துவ சாஸ்திரங்கள் அனைத் திற்கும் தந்தையான கபிலர் நிரூபித்துக் காட்டியிருக்கிறார். இதோ, இங்கே இருக்கும் மேஜையை உடைத்து, அழித்து விட்டால், அது, நாம் மேஜை என்று சொல்லும் இந்த உருவத்தை அமைப்பதற்குக் காரணமாக இருந்த அதன் நுட்ப மான துகள்களாகிய காரண நிலையை அடைந்துவிடுகிறது. மனிதன் இறக்கும்போது, அவனது உடலை உருவாக்கக் காரணமாக இருந்த மூலங்களின் நிலையை அடைகிறான். இந்தப் பூமி அழிந்தால், அதற்கு உருவம் அளித்த மூல காரணத்தை அடைந்துவிடுகிறது. மூலகாரண நிலையை அடைவதையே நாம் அழிவு என்கிறோம்.

ஆகவே காரணமும் காரியமும் ஒன்றே, வேறுபட்டவை அல்ல என்பது தெரிகிறது. இரண்டும் உருவத்தில்தான் வேறுபடுகின்றன. இந்த டம்ளர் ஒரு காரியம்; இதற்கு ஒரு மூலகாரணம் இருக்கிறது. டம்ளர் என்ற உருவத்தில் அந்தக் காரணம் பொதிந்திருக்கிறது. டம்ளரின் மூலப்பொருள் ஒரு சிறிதளவும், அதற்கு உருவமளித்தவரின் கைகளிலிருந்த சக்தியுமே மூல காரணங்கள், அதாவது உபாதான மற்றும் நிமித்த காரணங்கள். இந்தக் காரணங்கள் இரண்டும் சேர்ந்து, டம்ளர் என்று நாம் சொல்கின்ற இந்த உருவத்தைப் படைத் திருக்கின்றன. டம்ளரைச் செய்தவரின் கையிலிருந்த சக்தியே, மூலப்பொருளின் துகள்கள், தூள்தூளாகப் பிரிந்து விழாமல் இணைக்கும் சக்தியாக டம்ளரில் இருக்கிறது. அதைத் தவிர, மூலப்பொருளும் இந்த டம்ளரில் இருக்கிறது. இந்த மூலக் காரணங்களின் புது உருவமே டம்ளர் என்னும் வெளிப்பாடு. இந்த டம்ளர் தூள்தூளாக உடைந்துவிட்டால், இணைப்புச் சக்தி அதனுடைய பிறப்பிடமான மூலப்பொருளுக்குப் போய்ச் சேர்ந்துவிடும். கண்ணாடித் துகள்களோ, புதிய உருவம் எடுக்கும் வரை அப்படியே இருக்கும்.

ஆகவே காரணம் காரியத்திலிருந்து வேறுபடுவதில்லை என்பதைக் காண்கிறோம். காரணம் இன்னும் அதிகமான தூலத் தன்மை அடைவதே காரியமாகும். மேலும், தாவரங்கள், மிருகங்கள், மனிதர்கள் என்று நாம் அழைக்கின்ற உருவங்கள் எல்லாமே முடிவில்லாமல் எழுவதும் விழுவதுமாகச் சுழன்று கொண்டிருப்பதை அறிகிறோம். விதை மரத்தை உண்டாக்கு கிறது. மரம் விதையை உண்டாக்குகிறது. இப்படியே மாறிமாறி நடந்துகொண்டிருக்கிறது. இதற்கு முடிவே இல்லை. நீர்த் துளிகள், அருவிகளாக மலைகளிலிருந்து இறங்கி ஓடி, கடலில் கலக்கின்றன. அங்கிருந்து நீராவியாக மேலே போய், மறுபடியும் மழையாக மலை உச்சியில் பொழிகின்றன. இதுவும் மாறிமாறி நடந்து வருகிறது. இப்படி எழுவதும் விழுவதுமாக இந்தச் சுழற்சி நடந்துகொண்டே இருக்கிறது. பிரபஞ்சத்தில் இருக்கும் எல்லாமே இப்படித்தான் நடைபெறுகின்றன. நம்மால் காண முடிந்த, உணரமுடிந்த, கேட்கமுடிந்த, கற்பனை செய்யமுடிந்த என்று நம் அறிவுக்கு உட்பட்ட எல்லாமே இப்படித்தான் நடைபெறுகின்றன. இது, மனிதர்கள் மூச்சை உள்ளே இழுத்து வெளியே விடுவது போலிருக்கிறது. படைக்கப்பட்ட எல்லாமே இப்படித்தான் சுழன்று கொண்டிருக்கின்றன. அலை எழுகிறது, விழுகிறது. இவ்வாறே எல்லா செயல்களும் நடைபெறுகின்றன. ஒவ்வோர் உயர்வுக்கும் ஒவ்வொரு தாழ்வும், ஒவ்வொரு தாழ்வுக்கும் ஒவ்வோர் உயர்வும் உண்டு. பிரபஞ்சம் ஒரே திட்டத்தில் நடைபெறுவதால், இதே விதி பிரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றிற்கும் பொருந்த வேண்டும்.

இந்தப் பிரபஞ்சத்தை அதனுடைய காரணங்களாகப் பிரிக்க வேண்டும். சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், பூமி, உடல், மனம் மற்றும் பிரபஞ்சத்திலுள்ள எல்லாமே மறைந்து, அழிந்ததுபோலாக வேண்டுமானால் தங்கள் நுட்பமான மூல காரணநிலையை அடைய வேண்டும். ஆனால் அவை மூல காரணங்களில் நுட்ப உருவத்துடன் இருக்கவே செய்யும். இந்த நுட்ப உருவங்களிலிருந்து மறுபடியும் அவை, புதிய பூமிகள், சூரிய சந்திரர்கள், மற்றும் நட்சத்திரங்களாகத் தோன்றுகின்றன.

இப்படி எழுவதையும் விழுவதையும் பற்றிய மற்றொரு முக்கியமான விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். மரத்திலிருந்து விதை வருகிறது. அது உடனே மரமாக மாறு வதில்லை. அது சிலநாள் இயக்கமில்லாமல் இருக்கிறது. இதையே வேறுவிதமாகச் சொன்னால், வெளிப்படையாகத்

தெரியாத ஒரு நுட்பமான இயக்கத்தில் அது ஈடுபட்டிருக்கிறது. விதை மண்ணுக்கு அடியில்தான் சிலகாலம் இயங்க வேண்டும். அங்கே அது பலதுண்டுகளாக உடைந்து, சிதறி, அனேகமாக உருத்தெரியாமல் அழிகிறது. அந்த அழிவிலிருந்துதான், புத்துயிர் பெற்ற தாவரம் உற்பத்தியாகிறது.

பிரபஞ்சமும் ஆரம்பத்தில் சிலகாலம் இதேபோல்தான் நுட்பமான உருவத்துடன் வெளியில் தெரியாமலும் வெளிப் படாமலும் இயங்க வேண்டும். அந்த நிலையையே குழப்பாழ் (chaos) என்று சொல்கிறோம். அந்த நிலையிலிருந்துதான் புதிய படைப்பு தோன்றுகிறது. பிரபஞ்சம் நுட்பமான உருவத்துடன் சில காலம் இருந்து, பின்னர் வெளித் தோன்றும் இந்தக் கால அளவு சம்ஸ்கிருதத்தில் ஒரு கல்பம் அதாவது சுழற்சி என்று சொல்லப்படுகிறது.

அடுத்து, குறிப்பாகத் தற்காலத்திற்கு மிகவும் அவசிய மான ஒரு கேள்வி எழுகிறது. நுட்பமான உருவங்கள் சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்து தூலத்தன்மை பெறுகின்றன என் பதைக் காண்கிறோம். காரணமும் காரியமும் ஒன்றுதான், காரியம் காரணத்தின் வேறு உருவம் என்பதைக் கண்டோம். ஆகவே இந்தப் பிரபஞ்சம் முழுவதும் சூன்யத்திலிருந்து வெளி வந்திருக்க முடியாது. காரணமில்லாமல் எதுவும் தோன்ற முடியாது; காரணம் காரியத்தின் வேறு உருவம்.

அப்படியானால் எதிலிருந்து இந்தப் பிரபஞ்சம் தோன்றி யது? அதற்கு முன்னால் இருந்த நுட்பமான பிரபஞ்சத் திலிருந்துதான். மனிதன் எதிலிருந்து தோன்றினான்? முன்னால் இருந்த நுட்பமான உருவத்திலிருந்துதான். மரம் எதிலிருந்து தோன்றியது? விதையிலிருந்துதான். மரம் முழுவதுமே விதைக் குள் இருந்தது. இப்போது அது வெளிவந்து, தன்னை வெளிப் படுத்திக் கொள்கிறது. ஆகவே நுட்பமான உருவில் இருந்த பிரபஞ்சத்திலிருந்துதான் இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே தோன்றியிருக்கிறது. அது இப்போது வெளிப்பட்டிருக்கிறது; பின்னர் தன்னுடைய நுட்பமான உருவத்திற்குத் திரும்பிச் சென்றுவிடும், மறுபடியும் வெளிப்படும். நுட்பமான உருவங்கள் வெளிப்பட்டுச் சிறிதுசிறிதாகத் தூலத் தன்மையை அடைகிறது. தூல நிலையிலேயே வளர்ந்து அந்தத் தன்மை யின் எல்லையை அடைந்தவுடன், பின்னோக்கிப் போக ஆரம் பித்து, மறுபடியும் சிறிதுசிறிதாக நுட்ப நிலையை அடை கின்றன. நுட்ப நிலையிலிருந்து வெளிப்பட்டுத் தூலத் தன்மை

அடைவதைத்தான், அதாவது பகுதிகளின் அமைப்பில் மாறுபாடு ஏற்படுத்திக் கொள்வதைத்தான் பரிணாமம் என்று தற்காலத்தில் சொல்கிறார்கள்.

இது உண்மை, நிச்சயமான உண்மை. நம் வாழ்க்கையிலேயே நாம் இதைக் காண்கிறோம். பகுத்தறிவுள்ள யாரும் பரிணாமத் தத்துவவாதிகளுடன் வாதிட முடியாது. ஆனால் நாம் இன்னும் ஒரு விஷயத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும். இன்னும் ஒரு படி மேலே போக வேண்டும். அது என்ன? ஒவ்வொரு விரிவுக்கும் முன்னால் ஓர் ஒடுக்கம் உண்டு என்பதுதான் அது. விதைதான் மரத்திற்குத் தந்தை. அந்த விதைக்கு இன்னொரு மரம் தந்தையாக இருந்திருக்கிறது. விதை என்ற நுட்பமான உருவத்திலிருந்துதான் பெரிய மரம் வெளிவருகிறது, ஆனால் ஏற்கனவே வேறொரு பெரிய மரம் ஒடுங்கியதால் தோன்றியதுதான் இந்த விதை. இந்த விரிவான பிரபஞ்சம் முழுவதுமே நுட்பமான பிரபஞ்சத்திற்குள் ஒடுங்கியிருக்கிறது. பின்னால் மனிதனாகப் போகின்ற ஒரு சிறிய உயிரணு, உண்மையில், ஒடுங்கிய நிலையிலுள்ள மனிதனே. அது விரிவடைந்து முழு மனிதனாகிறது. இதை மட்டும் தெளிவாகப் புரிந்து கொண்டுவிட்டால், பரிணாமத் தத்துவவாதிகளுக்கும் நமக்கும் இடையே கருத்து வேற்றுமை இருக்காது. இந்த வாதத்தை அவர்கள் ஒப்புக்கொண்டால், மதத்தை அழிப்பவர்களாக இல்லாமல், மதத்தை ஆதரிப்பவர்களாக மாறிவிடுவார்கள்.

ஆகவே சூன்யத்திலிருந்து எதுவும் தோன்ற முடியாது என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். எல்லாம் எப்போதும் இருந்து கொண்டேதான் இருக்கிறது; இருந்து கொண்டேதான் இருக்கும். ஆனால் இயக்கம்தான் நுட்பத்திற்குச் செல்வதும், அதிலிருந்து தூலமாக வெளிப்படுவதும், மறுபடியும் நுட்பத்திற்குச் செல்வதுமாக, அலைபோல் எழுவதும் விழுவதுமாகத் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டே இருக்கிறது. இந்த ஒடுக்கமும் விரிவும் இயற்கை முழுவதிலும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. மிகவும் சிறிய உயிர் முதல் முழுமையடைந்த மனித வெளிப்பாடுவரை எல்லா பரிணாம வளர்ச்சியுமே, வேறு ஏதோ ஒன்றின் ஒடுக்கமாகவே இருக்க வேண்டும். எதனுடைய ஒடுக்கம்? எது ஒடுங்கியிருக்கிறது என்பதுதான் கேள்வி. அது கடவுள்தான் என்ற நம் கருத்து தவறு என்று பரிணாமத் தத்துவவாதிகள் கூறுவார்கள். ஏன்? ஏனெனில்

கடவுள் அறிவு வடிவானவர் என்று நாம் சொல்கிறோம். ஆனால் பரிணாம வளர்ச்சியில் அறிவு மிகவும் தாமதமாக அல்லவா தோன்றுகிறது என்று பரிணாமவாதிகள் சொல்கிறார்கள். 'மனிதனிடமும் உயர்நிலையிலுள்ள மிருகங்களிடமும்தான் அறிவு காணப்படுகிறது, எனவே உயிர் தோன்றிப் பல கோடி வருடங்கள் கழிந்த பின்னரே, இந்த அறிவு தோன்றியிருக்கிறது' என்றும் பரிணாமவாதிகள் சொல்கிறார்கள்.

நமது கொள்கையின் முன் பரிணாமவாதிகளின் ஆட்சேபம் அடிபட்டுப் போகிறது. மரம் விதையிலிருந்து தோன்றி, மறுபடியும் விதைக்குள்ளேயே ஒடுங்குகிறது. ஆரம்பமும் முடிவும் ஒன்றாகத்தான் இருக்கின்றன. பூமி அதன் காரணத்திலிருந்து வெளிவந்து அதற்குள்ளேயே ஒடுங்குகிறது. ஆரம்பம் தெரிந்தால் முடிவும் தெரிந்துவிடும் என்பது நமக்குத் தெரியும். அதேபோல், முடிவு தெரிந்தால் ஆரம்பமும் தெரிந்துவிடும். அப்படியானால், ஒரு முனையில் முதல் உயிரணுவும், மற்றொரு முனையில் நிறைநிலை அடைந்த மனிதனும் உள்ள பரிணாம வளர்ச்சித் தொடரை எடுத்துக் கொள்ளுங்கள். இந்தத் தொடர் முழுவதும் ஒரே உயிர்தான். பரிணாம வளர்ச்சியின் முடிவில் நிறைமனிதன் இருப்பதால், தொடக்கத்திலும் நிறைமனிதன் தான் இருந்திருக்க வேண்டும். ஆகவே மிக உயர்ந்த அறிவின் ஒடுக்கமே முதல் உயிரணுவாக இருக்க வேண்டும். நமக்கு அது தெரியாமல் இருக்கலாம். ஆனால் அந்த ஒடுங்கிய அறிவு சிறிது சிறிதாகத் தன்னை விரிவுபடுத்தி, கடைசியில் நிறைமனிதனாக வெளிப்படுத்துகிறது.

இதைக் கணித முறையில் நிரூபிக்க முடியும். சக்தியின் அளவு எப்போதும் மாறுவதில்லை என்ற நியதி உண்மையானால், முதலில் ஓர் எந்திரத்தில் எதையும் செலுத்தாமல் அதிலிருந்து எதையும் வெளிக்கொணர முடியாது. நீராவி எந்திரத்திற்குள் நீராகவும் நிலக்கரியாகவும் எவ்வளவு சக்தியைச் செலுத்துகிறோமோ, அதற்கு ஈடான வேலையைத்தான் அதிலிருந்து நாம் பெற முடியுமே தவிர, சிறிதுகூட அதிகமாகவோ குறைவாகவோ பெற முடியாது. காற்று, உணவு, மற்றும் பல பொருட்கள் மூலமாக என் உடலிற்குள் எவ்வளவு சக்தி சென்றிருக்கிறதோ, அதே அளவு வேலையைத்தான் நான் செய்ய முடியும். ஒரு வகைச் சக்தி, இன்னொரு வகைச் சக்தியாக மாறுதலடைந்து வெளிப்படுகிறது, அவ்வளவுதான். இந்தப் பிரபஞ்சத்திற்குள் ஏற்கனவே இருக்கும் சக்திக்கு மேல் சிறிதளவு

சக்தியைக்கூடச் சேர்ப்பதோ, இருக்கும் பொருளுக்கு மேல் அணுவளவு பொருளைக்கூடச் சேர்ப்பதோ முடியாது. அல்லது, இருக்கும் சக்தியிலிருந்து சிறிதளவு சக்தியை எடுப்பதோ, இருக்கும் பொருளிலிருந்து அணுவளவு பொருளை எடுப்பதோ முடியாத காரியம்.

அப்படியானால் இந்த அறிவு என்பது என்ன? ஏற்கனவே அது முதல் உயிரணுவுக்குள் ஒடுங்கி இருந்திருக்காவிட்டால், திடீரென்று சூன்யத்திலிருந்து தோன்றியிருக்க வேண்டும். இது அபத்தம். ஆகவே இயற்கையின் விதிகளைக் கடந்த, எல்லாவற்றையும் கடந்த, பிறப்புஇறப்பு அற்றவனான, பரிணாம வளர்ச்சிக்குக் கட்டுப்பட வேண்டிய அவசியம் இல்லாதவனான, நிறைமனிதனான, சுதந்திரனான, தெய்வமனிதனான, ‘கிறிஸ்து மனிதன்’, என்று கிறிஸ்தவர்களாலும், ‘புத்த மனிதன்’ என்று பௌத்தர்களாலும், ‘முக்தன்’ என்று யோகிகளாலும் அழைக்கப்படுபவனான மனிதன், பரிணாம வளர்ச்சியாகிய சங்கிலியின் ஒரு முனையில் இருப்பவனான மனிதன், அந்தப் பரிணாமச் சங்கிலியின் மறுமுனையிலுள்ள முதல் உயிரணுவுக்குள் ஒடுங்கி இருந்திருக்கவே வேண்டும்.

இதே வாதத்தைப் பிரபஞ்சம் முழுவதற்கும் பொருத்திப் பார்த்தால், படைப்பிற்கு மூலகாரணமே அந்த அறிவுதான் என்பதைக் காண்கிறோம். இந்தப் பிரபஞ்சத்தைப்பற்றி மனிதன் கொண்டிருக்கும் மிக உயர்ந்த கருத்து என்ன? எல்லாமே அறிவுதான் என்பதும், பிரபஞ்சத்தின் பகுதிகள் எல்லாமே ஒன்றுக்கொன்று இணைந்து செயல்படுகின்றன என்பதும்தான். பழங்காலத்தில் இந்த அறிவின் வெளிப்பாட்டை ஒழுங்குமுறைக் கொள்கையின் (Design Theory) மூலம் விளக்குவதற்கு முயன்றிருக்கிறார்கள். ஆகவே அறிவுதான் எல்லாவற்றிற்கும் ஆரம்பமாக இருந்திருக்கிறது. ஆரம்பத்தில் அந்த அறிவு ஒடுங்கியிருக்கிறது. முடிவில் அது முற்றிலும் விரிந்து நிற்கிறது. ஆகவே பிரபஞ்சத்தில் வெளிப்பட்டு இயங்கிக் கொண்டிருக்கின்ற அறிவு முழுவதுமே, பிரபஞ்சத் தோற்றத்திற்குக் காரணமான முதல்கருவில் அடங்கியிருந்த அறிவின் விரிவே ஆகும்.

பிரபஞ்சம் முழுவதும் பரவி நிற்கும் இந்த அறிவைத்தான் கடவுள் என்கிறோம். வேறு எந்தப் பெயரால் வேண்டுமானாலும் அழையுங்கள். ஆரம்பத்தில் இருந்தது இந்த எல்லையற்ற அறிவுதான் என்பது நிச்சயம். பிரபஞ்சம் முழுவதும் நிறைந்த இந்த அறிவு, முதல்கருவில் ஒடுங்கிநின்று, பின்னர்

தன்னை வெளிப்படுத்திக்கொண்டு விரிவடைந்து கடைசியில், 'கிறிஸ்து மனிதன்', 'புத்த மனிதன்' என்று நிறைமனிதனாகப் பரிணமிக்கிறது. பிறகு இந்த அறிவு, மூலகாரணத்திற்கு உள் ளேயே மறுபடியும் ஒடுங்கிவிடுகிறது. அதனால்தான் எல்லா சாஸ்திரங்களும், 'நாம் வாழ்வது, இயங்குவது, இருப்பது எல்லாம் அவருள்தான்'[1] என்று சொல்கின்றன. நாம் கடவு ளிடமிருந்து வந்தோம், கடவுளிடமே திரும்பிச் செல்கிறோம் என்று எல்லா சாஸ்திரங்களும் சொல்கின்றன.

தத்துவச் சொல்லலங்காரங்களைக் கண்டு பயப் படாதீர்கள். வார்த்தைகளைக் கண்டு பயப்பட்டால், தத்துவ வாதிகள் ஆவதற்கு நாம் தகுதியற்றவர்கள். பிரபஞ்சம் முழு வதிலும் நிறைந்திருக்கும் இந்த அறிவையே தத்துவவாதிகள் கடவுள் என்று சொல்கிறார்கள். 'கடவுள் (God) என்று அந்தப் பழைய வார்த்தையை ஏன் பயன்படுத்துகிறீர்கள்?' என்று பலர் என்னிடம் பலமுறை கேட்டிருக்கிறார்கள். ஏனெனில் அந்த வார்த்தைதான் நம் நோக்கத்திற்கு மிகவும் வசதியாக இருக் கிறது. அதைவிடச் சிறந்த வார்த்தை நமக்குக் கிடைக்காது. மனித குலத்தின் நம்பிக்கை, எதிர்பார்ப்பு, ஆனந்தம் எல்லாமே அந்த வார்த்தையில் அடங்கியிருக்கின்றன. இப் போது அந்த வார்த்தையை மாற்றுவது முடியாத காரியம். இதுபோன்ற வார்த்தைகளை உண்டாக்கியவர்கள் பெரிய மகான்கள். அவர்கள் இத்தகைய வார்த்தைகளின் சக்தியையும் பொருளையும் நன்கு உணர்ந்திருக்கிறார்கள்.

ஆனால் சமுதாயத்தில் இந்த வார்த்தைகள் பழக்கத் திற்கு வந்தபோது மூடர்களும் இதைப் பயன்படுத்தத் தொடங் கினார்கள். இதன் விளைவாக அவை தங்கள் உண்மைப் பொருளையும் மகிமையையும் இழந்துவிட்டன. கடவுள் என்ற வார்த்தை, நினைவுக்கெட்டாத காலத்திலிருந்தே பழக்கத்தில் இருந்து வருகிறது. பிரபஞ்சப் பேரறிவு, புனிதம், உன்னதம் போன்ற வார்த்தைகளால் குறிக்கப்படுகின்ற அனைத்துமே இந்த வார்த்தையில் அடங்கியிருக்கின்றன. யாரோ ஒரு முட்டாள் இந்த வார்த்தை சரியில்லை என்று சொன்னதற்காக அதைத் தூக்கி எறிந்துவிட வேண்டுமா என்ன? ஒருவன் வந்து, 'நான் சொல்லும் வார்த்தையைத்தான் உபயோகிக்க வேண்டும்'

1. யதோ வா இமானி பூதானி ஜாயந்தே, யேன ஜாதானி ஜீவந்தி, யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி, தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்ப்ரஹ்ம।
—தைத்திரீய உபநிடதம், 3. 1.

என்று சொல்லலாம். மற்றொருவன் வந்து, 'நான் சொல்வதைத்தான் உபயோகிக்க வேண்டும்' என்று சொல்லலாம். முட்டாள்தனமான வார்த்தைகளுக்கு முடிவே இருக்காது. பழைய வார்த்தையையே நாம் பயன்படுத்துவோம். ஆனால் அதை அதனுடைய உண்மையான பொருளில் பயன்படுத்த வேண்டும். அதைச் சார்ந்துள்ள மூடநம்பிக்கைகளை அகற்ற வேண்டும். அத்துடன் இந்தப் பழம்பெரும் வார்த்தையின் உண்மைப் பொருளை உணர வேண்டும். தொடர்பு விதியைப் பற்றி (Law of Association) அறிந்திருந்தால், மிகவும் வலிமை வாய்ந்த, உன்னதமான பல கருத்துக்களோடு இந்த வார்த்தை இணைந்திருப்பதை நாம் உணரலாம்.

பலகோடி மக்கள் இத்தகைய வார்த்தைகளைப் பயபக்தியோடு பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். மிகவும் உன்னதமான, சிறந்த, அறிவுபூர்வமான, அன்புக்கு இலக்கான, ஏன், மனித இயற்கையிலேயே மிகவும் மேலான கருத்துக்களுடன் இவை இணைந்திருக்கின்றன. இந்த வார்த்தைகள் அந்தக் கருத்துக்களை நினைவூட்டுவனவாக இருப்பதால், அவற்றைக் கைவிட முடியாது. கடவுள் பிரபஞ்சத்தைப் படைத்தார் என்று மட்டுமே கூறி இந்தக் கருத்துக்களையெல்லாம் விளக்குவதற்கு நான் முயன்றிருந்தால், உங்களுக்கு என் பேச்சின் பொருள் விளங்கியே இருக்காது. ஆனாலும் இந்த எல்லா போராட்டங்களுக்கும் பிறகு அந்தப் புராதனப் பரம்பொருளை மறுபடியும் நாம் வந்து அடைந்துவிட்டோம்.

ஜடப்பொருள், எண்ணம், சக்தி, அறிவு மற்றும் பிரபஞ்சம் முழுவதும் நிறைந்துள்ள பல்வேறு சக்திகளும் பிரபஞ்சப் பேரறிவின் வெளிப்பாடுகளே. இனிமேல் நாம் அந்தப் பேரறிவுப் பொருளை ஆண்டவன் (Supreme Lord) என்று குறிப்பிடுவோம். நாம் பார்க்கின்ற கேட்கின்ற உணர்கின்ற எல்லாம், ஏன், பிரபஞ்சம் முழுவதும் அவருடைய படைப்பே; இன்னும் சரியாகச் சொல்ல வேண்டுமானால், அவரது வெளிப்பாடே, மேலும் சரியாகச் சொல்ல வேண்டுமானால், அவரே. சூரியனாக நட்சத்திரங்களாகப் பிரகாசிப்பதும், அன்னை பூமியாக இருப்பதும் அவரே; சமுத்திரம் அவரே; மென்மையான மழைத்தூறல் அவரே; நாம் சுவாசிக்கும் மென்காற்று அவரே; நம் உடலில் சக்தியாக இயங்குவது அவரே; பேச்சு, பேசும் மனிதன் எல்லாம் அவரே; இங்கே சொற்பொழிவைக் கேட்கக் கூடியிருக்கும் கூட்டம் அவரே. நான் நிற்கும் மேடை

அவரே; உங்கள் முகங்களைப் பார்ப்பதற்கு எனக்கு உதவுகின்ற ஒளி அவரே; எல்லாம் அவரே. இந்தப் பிரபஞ்சத்தின் நிமித்த காரணமும் உபாதான காரணமும் அவரே; மிகச் சிறிய முதல் உயிரணுவுக்குள் ஒடுங்கிநின்று, பிறகு விரிந்து, கடைசியில் கடவுளாக வெளிப்படுவதும் அவரே; மிகமிகச் சிறிய, தாழ்ந்த நிலையிலிருக்கும் அணுவாக ஒடுங்கி, பிறகு விரிந்து, தன்னையே போய் அடைவதும் அவரே; பிரபஞ்சத்தின் ரகசியம் இதுவே.

'ஓ, பிரபுவே, ஆணும் நீயே; பெண்ணும் நீயே; இளமை மதர்ப்புடன் நடக்கும் வலிமை வாய்ந்த வாலிபனும் நீயே; ஊன்றுகோலுடன் தள்ளாடும் முதிர்ந்த கிழவனும் நீயே; எல்லாவற்றிலும் இருப்பதும் நீயே; எல்லாமாக இருப்பதும் நீயே.'[1] மனித அறிவைத் திருப்தி செய்கின்ற பிரபஞ்சத்தைப் பற்றிய கருத்து இது ஒன்றுதான். ஒரே வார்த்தையில் சொல்லப் போனால் நாம் அவரிலிருந்தே தோன்றினோம். அவரிலேயே வாழ்கிறோம், அவரிடமே திரும்புவோம். ❑

---

1. த்வம் ஸ்த்ரீ த்வம் புமானஸி த்வம் குமார உத வா குமாரீ |
த்வம் ஜீர்ணோ தண்டேன வஞ்சஸி த்வம் ஜாதோ பவஸி
விச்வதோமுக: ||
—சுவேதாஸ்வதர உபநிடதம், 4. 3.

# 12. பிரபஞ்சம்

## சிற்றண்டம்

மனித மனம் இயல்பாகவே புறத்தில் செல்ல விரும்புகிறது. உடலுக்கு வெளியே அது பொறிகளாகிய பாதைகள் வழியாகத் தொடர்பு கொள்ள விரும்புவது போலுள்ளது. கண் பார்க்க வேண்டும், காதுகள் கேட்க வேண்டும், மற்ற புலன்கள் புற உலகை உணர வேண்டும். இயல்பாகவே, இயற்கையின் அழகும் நுட்பமும்தான் முதலில் மனிதனின் கருத்தைக் கவர்கின்றன. மனித மனத்தில் புற உலகத்தைப் பற்றிய கேள்விகளே முதலில் எழுந்தன. வானம், நட்சத்திரங்கள், கிரகங்கள், பூமி, நதிகள், மலைகள், கடல் இவற்றின் மர்மத்திற்கெல்லாம் மனிதன் தீர்வு காண விரும்பினான். இருட்டில் தட்டுத்தடுமாறிக் கொண்டிருந்த மனித மனம் முதலில் புற உலகத்தையே அறிய விரும்பியது என்பதற்கான ஆதாரங்களை உலகின் எல்லா பழைய மதங்களிலும் நாம் காணலாம். நதிதெய்வம், வானதெய்வம், மேகதெய்வம், மழைதெய்வம் என்று எல்லாவற்றிற்கும் ஒவ்வொரு தெய்வத்தையும் கற்பனை செய்துகொண்டான். இன்று நாம் இயற்கையின் சக்திகள் என்று சொல்பவை எல்லாவற்றையுமே பழங்கால மனிதன், தெய்வங்களாகவும் தேவர்களாகவும் உருவகப்படுத்திக் கொண்டிருந்தான்.

ஆராய்ச்சியின் ஆழம் அதிகமாக ஆக, இந்தப் புற வெளிப்பாடுகள் மனித மனத்திற்குத் திருப்தி அளிக்கவில்லை. கடைசியில், மனிதன் அகமுகமாகத் திரும்பினான். அவனது ஆன்மா பற்றியே கேள்விகள் கேட்கப்படலாயின. பேரண்டத்திலிருந்து ஆராய்ச்சி சிற்றண்டத்தை நோக்கித் திரும்பியது. புற உலகத்திலிருந்து ஆராய்ச்சி அக உலகத்தை நோக்கித் திரும்பியது. புற இயற்கையை ஆராய்வதிலிருந்து அக இயற்கையை ஆராய்வதில் அவன் இறங்கினான். இத்தகைய ஆராய்ச்சியின் பயனாக நாகரீகத்தில் உயர்ந்த நிலையை அடைந்தான். இயற்கையைப் பற்றிய ஆழ்ந்த அறிவைப் பெற்றான். வளர்ச்சியில் உயர்ந்த நிலையை அடைந்தான்.

இன்றைய சொற்பொழிவு இந்த அக மனிதனைப் பற்றியதுதான். அக மனிதனைப் பற்றிய இந்தப் பிரச்சினை போல், மனிதனுக்கு இவ்வளவு நெருக்கமானதும் விருப்ப மானதுமான பிரச்சினை வேறில்லை. எத்தனையோ நாடுகளில், எத்தனையோ கோடி தடவை இந்தக் கேள்வி எழுந்திருக்கிறது. ரிஷிகள், அரசர்கள், பணக்காரர்கள், ஏழைகள், புண்ணியவான் கள், பாவிகள் என்று ஒவ்வோர் ஆணும் ஒவ்வொரு பெண்ணும் அவ்வப்போது இந்தக் கேள்வியைக் கேட்டு வந்திருக்கிறார்கள்: நிலையற்ற இந்த மனித வாழ்க்கையில் நிலையான ஏதாவது உண்டா? இந்த உடல் அழிந்த பின்னும் அழியாமல் இருப்பது எதுவுமே இல்லையா? இந்த உடற்கூடு மாய்ந்து சாம்பலான பின்னும் ஏதோ ஒன்று வாழ்ந்து கொண்டிருப்பதில்லையா? உடலை எரித்துச் சாம்பலாக்கும் நெருப்பினால் பாதிக்கப்படாத ஏதோ ஒன்று இல்லையா? அப்படி ஒன்று இருக்குமானால் அது என்ன ஆகிறது? எங்கே போகிறது? அது எங்கிருந்து வந்தது? இந்தக் கேள்விகள் திரும்பத்திரும்பக் கேட்கப் பட்டன. இந்தப் படைப்பு இருக்கும்வரையில், சிந்திக்கும் மனித மனங்கள் இருக்கும்வரையில் இந்தக் கேள்விகளும் இருக்கத்தான் செய்யும்.

இவற்றிற்கெல்லாம் பதில் கிடைக்காமலும் இல்லை. ஒவ்வொரு முறையும் பதில் கிடைத்தது. காலம் செல்லச் செல்ல, பதில் மேலும்மேலும் உறுதி பெற்றது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இதற்கு முடிவான பதில் கிடைத்து விட்டது. அந்தப் பதிலே திரும்பத்திரும்பச் சொல்லப்படு கிறது, விளக்கப்படுகிறது, நமது அறிவிற்குத் தெளிவாகப் புரியும் படி எடுத்துக் கூறப்படுகிறது. நாம் இப்போது செய்ய வேண்டிய காரியமும் அதே பதிலைத் திரும்ப எடுத்துச் சொல்வதுதான். இந்த மிகப் பெரிய பிரச்சினைக்குப் புதிய தீர்வு காண்பதாக நாம் பாசாங்கு செய்வதில்லை. பழைய உண்மையைப் புதிய மொழியில் எடுத்துச் சொல்கிறோம். பழங்காலத்தினரின் சிந்தனையைத் தற்காலத்தினரின் மொழியில் சொல்கிறோம். தத்துவ ஞானிகளின் மொழியை மக்களின் மொழியில் சொல் கிறோம். தேவதைகளின் மொழியை மனிதனின் மொழியில் சொல்கிறோம். கடவுளின் மொழியைப் பாமர மக்களின் மொழி யில் சொல்கிறோம். அப்போதுதான் மனிதனால் அவற்றைப் புரிந்துகொள்ள முடியும். ஏனென்றால் இந்தக் கருத்துக்கள் எந்தத் தெய்வீக சக்தியிலிருந்து தோன்றினவோ அது

எப்போதும் மனிதனில் இருக்கிறது. ஆகவே அவனால் இந்தக் கருத்துக்களை எப்போதும் புரிந்துகொள்ள முடியும்.

நான் உங்களைப் பார்க்கிறேன். பார்வைக்கு என்னென்ன தேவைப்படுகின்றன? முதலில் கண்கள். மற்ற எந்த விதத்திலும் குறையில்லாதிருந்தாலும் கண்கள் இல்லையென்றால், என்னால் உங்களைப் பார்க்க முடியாது. இரண்டாவது தேவை, உண்மையான பார்வைப் புலன். கண்கள், பார்க்கும் உறுப்புகள் அல்ல. அவை பார்ப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட பொறிகளே. உண்மையான புலன் இந்தப் பொறிகளுக்குப் பின்னால் மூளையிலுள்ள நரம்பு மையமே. அந்தப் புலன் சேதப்படுமானால், மிகவும் தெளிவான கண்களை உடையவனால்கூட எதையும் பார்க்க முடியாது. எனவே இந்த மையம், இந்த உண்மையான பார்வைப் புலன் இருப்பது அவசியம். எல்லா புலன்களின் விஷயமும் இப்படித்தான்.

புறக் காதுகள் ஒலி அலைகளைக் கேள்விப்புலனுக்குத் தெரிவிக்கத்தான் பயன்படுகிறது. இதுவும் போதாது. நீங்கள் நூல்நிலையத்தில், ஒரு புத்தகத்தைப் படிப்பதில் உங்களை மறந்து ஈடுபட்டிருக்கிறீர்கள். அப்போது மணி அடிக்கிறது. அது உங்கள் காதில் விழுவதில்லை. சத்தம் எழுகிறது; அது காற்றில் பயணம் செய்து, காதுகளின்மூலம், கேள்விப்புலனையும் அடைகிறது. ஆனாலும் அதை நீங்கள் கேட்கவில்லை. எதில் குறைபாடு? மனம் அதில் ஈடுபடவில்லை. ஆகவே மூன்றாவதாக, மனத்தின் ஈடுபாடு அவசியம்.

முதலில் புறக் கருவிகள் அதாவது பொறிகள்; பின்னர் பொறிகள் உணர்ச்சிகளைக் கொண்டு சேர்க்கின்ற மையமாகிய புலன்; கடைசியாக, புலன்களோடு இணைந்த மனம் இவை மூன்றும் தேவை. மனம் புலனோடு இணைந்திருக்காதபோது, பொறிகளும் புலன்களும் உணர்ச்சிகளை ஏற்கலாம். ஆனாலும் நாம் அதை உணர மாட்டோம். மனமும் தாங்கிச் செல்லும் சாதனம் மட்டுமே. உணர்ச்சியை அது தாங்கிச் சென்று புத்தியின் முன்வைக்க வேண்டும். புத்திதான், தன் முன் வைக்கப்பட்டது என்ன என்பதைத் தீர்மானம் செய்கிறது. இதுகூடப் போதாது. புத்தி எல்லாவற்றையும் தாங்கிச் சென்று, உடலுக்குள், அதிபதியாக சிம்மாசனத்தில் வீற்றிருக்கும் ஆன்மாவாகிய அரசனின் முன் சமர்ப்பிக்க வேண்டும். இதைச் செய்யலாம், இதைச் செய்யக் கூடாது என்ற கட்டளைகள் அவரிடமிருந்தே பிறக்கின்றன. அந்தக் கட்டளை புத்தி, மனம், புலன்கள்

என்று அதே வழியாகப் பொறியை அடை கிறது. அதன்பிறகு தான் செயல் முழுமையாகிறது.

பொறிகள் மனிதனின் புறவுடலில், தூல உட லில் இருக்கின்றன. மனமும் புத்தியும் அப்படியல்ல. அவை இந்துத் தத்துவத்தில் சூட்சும உடல் என்றும் கிறிஸ்தவ மதத் தத்துவத்தில் ஆன்ம உடல் என்றும் அழைக்கப்படுகின்ற உடலில் இருக்கின்றன. இந்தச் சூட்சும உடல், தூல உடலைவிட மிகவும் நுட்பமானது. ஆனால் இது ஆன்மாவல்ல. ஆன்மா, இவை எல்லாவற்றையும் கடந்தது. தூல உடல் சில வருடங்களில் அழிந்துவிடுகிறது. ஒருசிறு காரணம்கூட அதை அழித்து விடலாம். சூட்சும உடல் அவ்வளவு சுலபமாக அழியாது. ஆனாலும் சிலவேளைகளில் அது சக்தியை இழக்கிறது, மற்ற வேளைகளில் வலிமையாக இருக்கிறது. வயதானவனின் மனம் பலவீனமடைகிறது; உடல் சுறுசுறுப்பாக இயங்கும் போது மனமும் சுறுசுறுப்பாக இயங்குகிறது; பல்வேறு மருந்துகளும் போதைப் பொருட்களும் மனத்தைப் பாதிக்கின்றன; வெளியில் இருக்கும் எல்லாமே அதைப் பாதிக்கின்றன; மனமும் வெளியுலகை எதிர்கொள்கிறது—இவையெல்லாம் நமக்குத் தெரியும்.

உடலுக்குப் போலவே மனத்திற்கும் எழுச்சியும் வீழ்ச்சியும் உண்டு. ஆகவே மனம் ஆன்மாவல்ல. ஏனெனில் ஆன்மாவுக்கு அழிவோ வீழ்ச்சியோ கிடையாது. அது எப்படி நமக்குத் தெரியும்? இந்த மனத்திற்கும் பின்னால் ஏதோ இருக்கிறது என்பது நமக்கு எப்படித் தெரியும்? சுய ஒளி படைத்த ஞானமும் அறிவின் அடிப்படையும், மந்தமான உணர்வற்றதான ஜடப்பொருளில் இருக்க முடியாது என்பதால்தான். அறிவே உருவான ஜடப்பொருள் என்ற ஒன்று இதுவரை இருந்ததில்லை. எந்த ஜடப்பொருளும் சுயமாக ஒளிர முடியாது. ஜடப் பொருளையெல்லாம் ஒளிரச் செய்வது அறிவுதான். இந்தப் பெரிய கூடம் இங்கே இருப்பதற்கு அறிவுதான் காரணம். ஏதோ அறிவுப்பொருள் இதைக் கட்டியிருக்காவிட்டால் இது இங்கே இருக்க முடியாது. உடலும் சுய ஒளி பெற்றதல்ல. அப்படி இருந்தால் இறந்துபோன உடலிலும் சுய ஒளி இருக்க வேண்டும். மனத்திற்கும் சூட்சும உடலிற்கும் கூடச் சுய ஒளி இல்லை. அவை அறிவின் அடிப்படையில் அமைந்தவை அல்ல. சொந்த ஒளி உடைய எதுவும் அழிய முடியாது. வேறு ஒன்றின் ஒளியைப் பெற்றுப் பிரகாசிக்கும் எதன் ஒளியும்

நிலையானதல்ல. ஆனால் ஒளியாகவே இருப்பது என்றும் நிலையானது. அதனை வளரவும் தேயவும் செய்ய எதனால் முடியும்? நிலவு வளரவும் தேயவும் செய்கிறது. ஏனெனில் அது சூரியனிடமிருந்து பெற்ற ஒளியினால் பிரகாசிக்கிறது. ஓர் இரும்புத் துண்டை நெருப்பில் போட்டால் அது சிவந்து ஜொலிக்கிறது. அந்த ஒளி சுய ஒளி இல்லை என்பதால் விரைவில் மறைந்துவிடும். ஆகவே வேறொன்றிலிருந்து பெற்றுப் பிரகாசிக்கும் ஒளிக்கு அழிவு உண்டு. சுய ஒளிக்கு அழிவில்லை.

எனவே உடலுக்கு, இந்தப் புறக்கூட்டிற்கு சுய ஒளி இல்லை என்பதையும், அதனால் அது தன்னையே அறிந்துகொள்ள முடியாது என்பதையும் நாம் உணர்கிறோம். மனத்தின் விஷயமும் இதுதான். ஏன்? ஏனெனில் மனம் வளரவும் தேயவும் செய்கிறது; சிலவேளைகளில் உற்சாகமாகவும் சிலவேளைகளில் பலவீனமாகவும் இருக்கிறது. எது வேண்டுமானாலும் மனத்தைப் பாதிக்க முடியும். ஆகவே மனத்தின்மூலம் வீசும் ஒளி அதன் சொந்த ஒளியல்ல. அப்படியானால் அந்த ஒளி யாருடையது? அது ஒளியுருவமான ஒன்றிலிருந்துதான் வர வேண்டும். அந்தப் பொருள், தேய்வோ அழிவோ இல்லாததாக, பிரகாசத்தில் கூடுதலோ குறைவோ இல்லாததாக, சொந்த ஒளி உள்ளதாக, ஒளியே உருவானதாகத்தான் இருக்க வேண்டும். ஆன்மாவிற்கு அறிவு இருக்கிறது என்று சொல்வது சரியல்ல; ஆன்மாவே அறிவு வடிவம். ஆன்மாவிற்கு இருப்பு உண்டு என்று சொல்ல முடியாது; ஆன்மாதான் இருப்பு. ஆன்மா ஆனந்தம் அடைகிறது என்று சொல்ல முடியாது; ஆன்மாதான் ஆனந்தம். ஆனந்தம் அடைவது எதுவுமே, அந்த ஆனந்தத்தை வேறு எங்கிருந்தோதான் பெற்றிருக்க வேண்டும். அறிவை உடைய எதுவும், அதை வேறு எங்கிருந்தோதான் பெற்றிருக்க வேண்டும். மற்றவற்றைச் சார்ந்திருக்கும் எதற்குமே சுய இருப்பு இல்லை. எங்கே குணங்கள் இருக்கின்றனவோ, அவை உண்மைப் பொருளின்மீது பிரதிபலிக்கப்பட்டவை. ஆன்மாவின் சாரமே அவை. அறிவு, இருப்பு, ஆனந்தம் என்பவற்றை ஆன்மா குணங்களாகப் பெற்றிருக்கவில்லை.

இது இப்படித்தான் இருக்க வேண்டுமென்று ஏன் நாம் முடிவு செய்ய வேண்டும்? அறிவு, இருப்பு, ஆனந்தம் எல்லாம் ஆன்மாவின் சாரம். இவற்றை அது வேறு எங்கிருந்தும் பெறவில்லை என்பதை நாம் ஏன் ஒப்புக்கொள்ள வேண்டும்?

உடலின் ஒளி, மனத்திலிருந்து பெறப்பட்டதுபோல், ஆன்மாவின் ஒளி, ஆன்மாவின் ஆனந்தம், ஆன்மாவின் அறிவு எல்லாம் வேறு எங்கிருந்தோ பெறப்பட்டது என்று ஏன் சொல்லக் கூடாது? இது போன்ற வாதங்களுக்கு முடிவே இல்லை. ஆன்மா தனது குணங்களை வேறோரிடத்திலிருந்து பெறுகிறது என்றால், அது எங்கிருந்து இவற்றைப் பெறுகிறது என்று இப்படியே முடிவில்லாமல் போய்க் கொண்டுதான் இருக்கும். கடைசியில், சுய ஒளி உள்ள ஒரு பொருளில் போய்தான் இந்த வாதம் முடிந்தாக வேண்டும். எனவே தர்க்கரீதியாக விஷயத்தை முடிப்பதற்கு, சுய ஒளி உள்ள பொருள் இருக்கிறது என்ற நிலை வந்தவுடன் வாதத்தை நிறுத்திக்கொள்வதுதான் ஒரே வழி.

ஆகவே மனிதன் என்பவன், முதலில் வெளிப்போர்வையாகிய தூல உடல்; இரண்டாவது மனம், புத்தி, நான்-உணர்வு இவற்றைக் கொண்ட சூட்சும உடல் இவற்றால் ஆக்கப்பட்டவன் என்பதைக் காண்கிறோம். இவற்றிற்குப் பின்னால்தான் மனிதனின் உண்மையான ஆன்மா இருக்கிறது. தூல உடலின் குணங்களும் சக்திகளும் மனத்திலிருந்து பெறப்பட்டவை. மனம், அதாவது சூட்சும உடல் சக்திகளையும் ஒளியையும் அதன் பின்னால் இருக்கும் ஆன்மாவிடமிருந்து பெறுகிறது.

இந்த ஆன்மாவின் இயல்பைப் பற்றிய பல கேள்விகள் இப்போது எழுகின்றன. ஆன்மா சுய ஒளி பெற்றது; அறிவு, இருப்பு, ஆனந்தம் இவற்றைச் சாரமாகக் கொண்டது; அதாவது சச்சிதானந்த இயல்புடையது என்ற வாதத்திலிருந்து ஆன்மாவின் இருப்பு நிரூபிக்கப்பட்டால், ஆன்மா படைக்கப்பட்டதாக இருக்க முடியாது என்பது உறுதியாகிறது. சொந்த ஒளி உள்ள, பிற எதையும் சாராத எந்தப் பொருளும், வேறு எதிலிருந்தும் தோன்றியதாக இருக்க முடியாது. அது எப்போதும் இருந்தது. அது இல்லாத காலமே இல்லை. ஆன்மா இல்லையென்றால் காலம் எப்படி இருக்க முடியும்? காலம் ஆன்மாவில்தான் இருக்கிறது. ஆன்மா தனது சக்திகளை மனத்தின்மீது பிரதிபலிக்கச் செய்து, மனம் சிந்திக்கத் தொடங்கும் போதுதான் காலம் பிறக்கிறது. ஆன்மா இல்லையென்றால் நிச்சயமாக எண்ணம் எதுவும் இல்லை. எண்ணம் இல்லாமல் காலம் இல்லை. காலமே ஆன்மாவில் அடங்கியதாக இருக்கும் போது ஆன்மா காலத்தில் இருப்பதாக எப்படிச் சொல்ல முடியும்? ஆன்மா, பிறப்பு இறப்பற்றது. ஆனால் அது

இந்தப் பல்வேறு நிலைகளின் வழியாகவும் செல்கிறது; தாழ்ந்த நிலையிலிருந்து சிறிதுசிறிதாகத் தன்னை வெளிப்படுத்திய வாறு உயர்ந்த நிலைக்குச் செல்கிறது; மனத்தின் மூலமாக உடலை இயக்கி, தன் மகிமையை வெளிப்படுத்துகிறது; உடலின் மூலமாக வெளி உலகத்தைப் புரிந்து கொள்கிறது; ஓர் உடலை எடுத்துக்கொண்டு அதைப் பயன்படுத்துகிறது; அந்த உடல் நலிந்து போகும்போது வேறோர் உடலை எடுத்துக் கொள்கிறது. இவ்வாறு இது நடந்து கொண்டிருக்கிறது.

இந்த இடத்தில் ஒரு சுவாரசியமான கேள்வி எழுகிறது. பொதுவாக மறுபிறப்பு என்று சொல்லப்படுவதைப் பற்றியது அது. இந்தக் கருத்து, சிலவேளைகளில் மக்களை வெகுவாகப் பயமுறுத்துகிறது. இதைப் பற்றிய மூடநம்பிக்கைகளோ மிகவும் அதிகமாக இருக்கிறது. சிந்தனையாளர்கள்கூடத் தாங்கள் சூன்யத்திலிருந்து தோன்றியதாகவும், அதேவேளையில் இனி மேல் எப்போதும் நிலையாக இருப்போம் என்றும் தர்க்கம் செய்து நிரூபிக்க முயல்கிறார்கள். சூன்யத்திலிருந்து தோன்றிய வர்கள் சூன்யத்திற்குத்தான் திரும்பிப் போக வேண்டும். நீங்களும் சரி, நானும் சரி, ஒருவருமே சூன்யத்திலிருந்து தோன்றவில்லை, சூன்யத்திற்குத் திரும்பிப் போகப் போவதும் இல்லை. நாம் எப்போதுமே இருக்கிறோம்; இருப்போம். பிரபஞ்சத்திலுள்ள எந்தச் சக்தியாலும் நம்மை அழித்து, சூன்யத்திற்கு அனுப்ப முடியாது. இந்த மறுபிறப்புக் கொள்கையைப் பார்த்து, நாம் பயப்பட வேண்டிய அவசிய மில்லை. அது மட்டுமல்ல, மனிதகுலத்தின் நீதிநெறியும் நல்லொழுக்கமும் நிலைப்பதற்கு இந்தக் கொள்கை மிகவும் அவசியம். சிந்திக்கும் திறன் படைத்தவர்கள் வர முடிந்த தர்க்கரீதியான முடிவு இது மட்டுமே.

இனிமேல் என்றென்றைக்கும் நாம் இருக்கப் போவது உண்மையானால், இதற்கு முன்னாலும் எப்போதும் நாம் இருந்திருக்க வேண்டும். வேறுவிதமாக இருக்க முடியாது. இந்தக் கொள்கையை எதிர்த்து எழும் சில ஆட்சேபங்களுக்கு நான் பதில் சொல்ல முயல்கிறேன். நம்மில் பலருக்கு இந்தக் கேள்விகளே முட்டாள்தனமாக இருக்கும். இருந்தாலும் அவற்றிற்குப் பதில் சொல்லியே ஆக வேண்டும். ஏனென்றால், சிலவேளைகளில், ஆழ்ந்த சிந்தனையாளர்களுக்குக்கூட முட்டாள்தனமான கருத்துக்கள் எழுவதுண்டு. எவ்வளவு முட்டாள்தனமான, தவறான கருத்துக்களையும் ஆதரிக்கத்

தத்துவ ஞானிகள் இருந்திருக்கிறார்கள் என்று யாரோ நன்றாகத்தான் சொல்லியிருக்கிறார்கள்.

நமக்கு ஏன் முற்பிறவி நினைவு வருவதில்லை என்பதே முதல் ஆட்சேபம். இந்த வாழ்க்கையிலேயே பல வருடங்களுக்கு முன்பு நடந்த விஷயங்கள் நினைவில் இருக்கின்றனவா? குழந்தைகளாக இருந்தபோது என்ன செய்தோம் என்பது நம் மில் எத்தனைபேருக்கு நினைவிருக்கிறது? நம்மில் யாருக் குமே நமது குழந்தைப் பருவம் நினைவில் இல்லை. நம்முடைய இருப்புக்கு நினைவே ஆதாரம் என்றால் இந்த வாதத்தின்படி நமக்குக் குழந்தைப் பருவமே இருக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். நம் குழந்தைப் பருவம்தான் நம் நினைவில் இல்லையே! நம் இருப்புக்கு நம் நினைவே ஆதாரம் என்று சொல்வது கலப்படமற்ற முட்டாள்தனம். இறந்தகாலத்தை நாம் ஏன்தான் நினைக்க வேண்டும்? அந்தப் பழைய மூளை சிதறுண்டு போய்விட்டது. இப்போது நமக்கு இருப்பது புதிய மூளை. நமது கடந்தகால சம்ஸ்காரங்களின் மொத்தமே இந்தப் பிறவியில் புது மூளையாக உருவெடுத்திருக்கிறது. நமது மனம், இந்தப் புதிய மூளையுடன்தான் புதிய உடலை எடுத்திருக்கிறது.

என்னுடைய எல்லையற்ற முற்பிறவிகளின் பலனே இப் போது இங்கே நின்று கொண்டிருக்கும் நான். என் முற்பிறவி களை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டிய அவசியம் என்ன? உண்மையை நேருக்குநேர் கண்ட ஒரு பழங்கால ரிஷியோ, முனிவரோ ஏதாவது சொன்னால், உடனே தற்கால மக்கள், 'ஓ, அவர் ஒரு முட்டாள்!' என்று கூறிவிடுவார்கள். பெயரை மட்டும் மாற்றுங்கள், 'ஹக்ஸ்லி (Alduous Huxley) சொன்னார், டிண் டால் (Tyndall) சொன்னார்' என்றால் அது உண்மையாகத்தான் இருக்க வேண்டும்; அது வேத வாக்கு. பழைய மூட நம்பிக்கை களுக்குப் பதிலாகப் புதிய மூடநம்பிக்கைகள்; பழங்கால மத ஆச்சாரியர்களுக்குப் பதிலாக புதிய விஞ்ஞான ஆச்சாரியர்கள், அவ்வளவுதான். ஆகவே முற்பிறவி நினைவைப் பற்றிய ஆட்சேபம் பயனற்றது என்பது தெரிகிறது. மறுபிறவிக் கொள்கையை எதிர்த்து எழும் முக்கியமான ஆட்சேபம் இது ஒன்றுதான்.

முற்பிறவி நினைவுகள் இருக்க வேண்டும் என்பது மறு பிறவிக் கொள்கைக்கு அவசியமில்லை என்று கண்டோம். ஆனாலும் இந்த முற்பிறவி நினைவுகள் சிலவேளைகளில் வருகின்றன என்பதற்கு ஆதாரம் இருக்கிறது. எந்தப் பிறவியில்

நாம் முக்தர்களாக ஆகிறோமோ, அந்தப் பிறவியில், நம்முடைய எல்லா முற்பிறவி நினைவுகளும் நம் ஒவ்வொருவருக்கும் வரும். அப்போதுதான் இந்த உலகமே ஒரு கனவு என்பதை நாம் உணர்வோம். அப்போதுதான் உலகமே ஒரு நாடகமேடை, நாமெல்லாம் அதில் நடிக்கும் நடிகர்கள் என்பதை நம் அந்தராத்மாவில் உணர்வோம். அப்போதுதான் பற்றின்மை என்ற கருத்து நம்மிடம் இடிபோல் உறுதியாக நிலைபெறும். அப்போதுதான் வாழ்க்கையின் இன்பங்களுக்கான தாகம், உலகின் மீதும் வாழ்வின்மீதும் நமக்குள்ள மோகம் எல்லாம் என்றென்றைக்குமாக மறையும். இவற்றையெல்லாம் எத்தனை முறை அனுபவித்திருக்கிறோம், எத்தனை கோடி தந்தையர், அன்னையர், மகன்கள், மகள்கள், கணவர்கள், மனைவிகள், உற்றார், உறவினர், பணம், பலம் எல்லாவற்றையும் பெற்று வாழ்ந்திருக்கிறோம் என்பது அப்போதுதான் வெட்ட வெளிச்சமாகத் தெரியும். அவையெல்லாம் வந்துவந்து போய்க்கொண்டிருந்தன. எவ்வளவு தடவை நாம் வாழ்க்கை அலையின் உச்சியில் இருந்திருக்கிறோம்! எத்தனை தடவை நம்பிக்கையை இழந்து வாழ்க்கையின் முடிவுக்கே சென்றதுபோல் தவித்திருக்கிறோம். இதெல்லாம் நினைவு வரும்போதுதான் உலகம் நம்மை வெறுப்போடு பார்த்தாலும் நெஞ்சை நிமிர்த்தி நாம் புன்னகை செய்வோம். அப்போதுதான் தைரியமாக எழுந்து நின்று, ‘மரணமே, உன்னைப்பற்றிக்கூட எனக்குக் கவலை கிடையாது. உன்னால் என்னைப் பயமுறுத்த முடியாது’ என்று கூறுவோம். இந்த நிலை எல்லோருக்கும் வரும்.

மறுபிறவிக் கொள்கையை அறிவுபூர்வமாக நிரூபிக்க முடியுமா? இதுவரை நாம் எதிர்மறையாக வாதம் செய்து வந்தோம். இந்தக் கொள்கையின் எதிர்வாதங்கள் பயனற்றவை என்று நிரூபித்துவிட்டோம். ஆனால் நேர்முகமான நிரூபணம் உண்டா? உண்டு. மிகவும் உறுதியான வாதங்கள் உண்டு. அறிவை வளர்த்துக் கொள்வதில், மனிதர்களுக்கிடையில் உள்ள வேறுபாட்டை இந்த மறுபிறவிக் கொள்கை மட்டுமே விளக்க முடியும். முதலில், நாம் அறிவைப் பெறும் வழிபற்றிப் பார்ப்போம். நான் தெருவில் போய்க் கொண்டிருக்கும்போது ஒரு நாயைப் பார்க்கிறேன், அது நாய் என்பது எனக்கு எப்படித் தெரியும்? நான் என் மனத்தில் அதைத் தேடுகிறேன். எனது கடந்தகால அனுபவங்களெல்லாம், தனித்தனி அறைகளில் வரிசைப்படுத்தப்பட்டது போல், மனத்தில் ஒழுங்காக

வரிசைப்படுத்தப்பட்டு வைக்கப்பட்டுள்ளன. ஒரு புதிய அனுபவம் கிடைக்கும்போது, உடனே அதை என் மனத்திலுள்ள பழைய அனுபவங்களோடு ஒப்பிட்டுப் பார்க்கிறேன். இதே மாதிரி அனுபவம் ஏற்கனவே என் மனத்தில் இருந்தால், உடனே இரண்டையும் பொருத்திப் பார்த்துத் திருப்தியான முடிவுக்கு வருகிறேன். ஏற்கனவே உள்ள அனுபவங்களோடு புதிய அனுபவம் பொருந்துவதால், நான் பார்ப்பது நாய் என்பதை அறிகிறேன். புதிய அனுபவம் ஏற்கனவே உள்ள பழைய அனுபவம் எதனோடும் பொருந்தாவிட்டால், எனக்குத் திருப்தி ஏற்படுவதில்லை. பழைய, புதிய அனுபவங்கள் பொருந்தாததால் ஏற்படும் அதிருப்தி நிலையை 'அறியாமை' என்கிறோம். இரண்டு அனுபவங்களும் பொருந்தும்போது ஏற்படும் திருப்தி நிலையை 'அறிவு' என்கிறோம்.

ஓர் ஆப்பிள் கீழே விழுந்தபோது, மனிதன் திருப்தி அடையவில்லை. பிறகு, எல்லா பழங்களும் கீழே விழுகின்றன என்று படிப்படியாகக் கண்டறிந்து, அவ்வாறு செய்யும் சக்தியை 'புவியீர்ப்புச் சக்தி' என்று அழைத்தான். ஆகவே பழைய அனுபவங்கள் இல்லாமல் புதிய அனுபவம் எதுவும் இருக்க முடியாது, ஏனெனில் புதிய அனுபவத்தைப் பொருத்திப் பார்ப்பதற்கு பழைய அனுபவங்கள் எதுவும் இல்லை. சில ஐரோப்பியத் தத்துவ மேதைகள் கூறுவதுபோல், ஒரு குழந்தை பழைய அனுபவம் எதுவுமே இல்லாமல் உலகில் பிறக்குமானால், அந்தக் குழந்தைக்கு அறிவு வளர்ச்சியே இருக்காது. ஏனென்றால் புதிய அனுபவம் எதையும் பொருத்திப் பார்ப்பதற்கு அதனிடம் பழைய அனுபவம் எதுவும் இல்லையே! அறிவு வளர்ச்சிக்கான ஆற்றல் மனிதனுக்கு மனிதன் வேறுபடுவதைக் காண்கிறோம். நாம் ஒவ்வொருவரும் ஏற்கனவே பெற்றுள்ள அனுபவ அறிவுடன்தான் பிறக்கிறோம் என்பதையே இது காட்டுகிறது.

அறிவை, அனுபவத்தின்மூலமாக மட்டுமே பெற முடியும். வேறு வழியே இல்லை. இந்தப் பிறவியில் அந்த அனுபவத்தைப் பெற்றிருக்காவிட்டால், வேறு பிறவியில் பெற்றிருக்க வேண்டும். எங்கும் மரண பயம் காணப்படுகிறதே, அது எப்படி? முட்டையிலிருந்து கணநேரத்திற்கு முன்னர்தான் வெளிவந்த கோழிக் குஞ்சு, பருந்தைக் கண்டவுடன் பயந்து நடுங்கித் தாயிடம் ஓடுகிறது. இதற்குப் பழைய விளக்கம் ஒன்று இருக்கிறது. (விளக்கம் என்ற உயர்ந்த சொல்லை இதற்கு நான் பயன்படுத்துவதே

தவறு). அதை இயல்புணர்ச்சி என்கிறார்கள். முட்டையிலிருந்து அப்போதுதான் வெளிவந்த கோழிக்குஞ்சுக்கு மரணபயம் ஏற்படச் செய்தது எது? கோழியால் அடைக்காக்கப்பட்டு, பொரித்து, அப்போதுதான் வெளிவந்த வாத்துக்குஞ்சு தண்ணீரைக் கண்டவுடன், அதில் குதித்து, நீந்தத் தொடங்கு கிறதே, அது எப்படி? அது இதற்குமுன் நீந்தியதில்லை, வேறு ஏதாவது நீந்துவதையும் பார்த்ததில்லை. மனிதர்கள் அதை இயல்புணர்ச்சி என்கிறார்கள். இது பெரிய வார்த்தைதான். ஆனால் இந்த வார்த்தை புதிதாக எதையும் நமக்கு விளக்க வில்லை.

இந்த இயல்புணர்ச்சி என்பதை நாம் சிறிது ஆராய்வோம். ஒரு சிறுமி பியானோ வாசிக்க ஆரம்பிக்கிறாள். முதலில் சில காலம் அவள் மிகவும் கவனமாக ஒவ்வொரு கட்டையிலும் கைவைத்துப் பழக வேண்டும். வருடக்கணக்காக வாசித்துப் பழகிய பிறகோ பியானோ வாசிப்பது ஏறக்குறைய அனிச்சைச் செயலாகி விடுகிறது; இயல்பாக வந்துவிடுகிறது. முதலில் உணர்வுபூர்வமாகச் செய்ததை, பின்னர் எந்திரகதியில் செய்ய முடிகிறது. நிரூபணம் இன்னும் முழுமையாகவில்லை. ஒரு பாதிக்கு விளக்கம் தேவைப்படுகிறது. அதாவது, அனிச்சை யான இயல்புணர்ச்சிச் செயல்கள் எல்லாவற்றைமே மனத்தின் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவர முடியும் என்பதே அது. உடம்பிலுள்ள ஒவ்வொரு தசையையும் சித்தத்தின் கட்டுப் பாட்டிற்குள் கொண்டுவர முடியும். இது எல்லோருக்கும் நன் றாகத் தெரிந்த விஷயம்தான். நாம் இயல்புணர்ச்சி என்று சொல்வது, மனத்திற்குக் கட்டுப்பட்ட செயல்களின் வீழ்ச்சியே என்பதை நாம் இரண்டு விதமாக நிரூபித்துவிட்டோம். இதே கருத்தைப் படைப்பு முழுவதற்கும் பொருத்திப் பார்க்கும்போது, இயற்கை எங்கும் ஒரே சீராக இருக்குமானால், மனிதனிடமும் வேறு மிருகங்களிடமும் காணப்படும் இயல்புணர்ச்சி என்பது சுயேச்சையின் வீழ்ச்சியே என்பது தெளிவாகிறது.

ஒவ்வோர் ஒடுக்கத்திற்கும் முன்பு ஒரு விரிவு இருக்க வேண்டும், ஒவ்வொரு விரிவுக்கும் முன்பு ஓர் ஒடுக்கம் இருக்க வேண்டும் என்ற விதியை, 'பேரண்டம்' என்ற தலைப்பின் கீழ் நாம் பார்த்தோம். அந்த விதியை இங்கே பொருத்திப் பார்த் தால், பகுத்தறிவின் ஒடுக்கமே இயல்புணர்ச்சி என்பதைக் காண்கிறோம். எனவே மனிதர்களிலோ மிருகங்களிலோ நாம் காணும் இயல்புணர்ச்சி என்பது மனத்திற்குக் கட்டுப்பட்ட

செயல்களின் வீழ்ச்சியும் ஒடுக்கமுமே என்பது தெளிவு. இனி, அனுபவம் இல்லாமல் மனத்திற்குக் கட்டுப்பட்ட செயல்கள் (Voluntary Action) இல்லை. அறிவுக்கு அனுபவமே காரணம். பிறக்கும்போதே எல்லா உயிர்களுக்கும் அந்த அறிவு இருக்கிறது. மரணபயம், வாத்துக் குஞ்சுக்குப் பிறந்தவுடனேயே நீந்தத் தெரிவது, மனிதர்களின் அனிச்சைச் செயல்கள் போன்ற எல்லா இயல்புணர்ச்சிகளும் முன் அனுபவத்தின் விளைவுகளே.

இதுவரை நாம் தெளிவாக ஆராய்ந்து வருகிறோம்; இது வரை தற்கால விஞ்ஞானமும் நமக்கு ஒத்துப்போகிறது. ஆனால் இங்கே இன்னொரு பிரச்சினை எழுகிறது. தற்கால விஞ்ஞானிகள் ஆராய்ச்சியின்மூலம் புராதன ரிஷிகளின் கருத்துக்களுக்கே திரும்பி வந்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் அவ்வாறு வந்தது வரை இரண்டு கருத்துக்களும் முற்றிலுமாக ஒத்துப்போகின்றன. ஒவ்வொரு மனிதனும், ஒவ்வொரு மிருகமும் முன் அனுபவத்துடனேயே பிறப்பதையும், மனத்தின் எல்லா இயக்கங்களுக்கும் முன் அனுபவமே காரணம் என்பதை விஞ்ஞானிகள் ஒப்புக்கொள்கிறார்கள். 'ஆனால், அந்த அனுபவம் ஆன்மாவிற்குச் சொந்தம் என்று சொல்வதில் என்ன பயன்? அது உடலுக்கு, உடலுக்கு மட்டுமே சொந்தம் என்று ஏன் சொல்லக் கூடாது? அது ஏன் பரம்பரைக் குணமாக இருக்கக் கூடாது?' என்று அவர்கள் கேட்கிறார்கள். கடைசிக் கேள்வி இதுதான்! நாம் பிறக்கும்போது நம்முடன் பிறக்கும் அனுபவங்கள், நம் முன்னோர்களுடைய அனுபவங்களின் மொத்தப் பலனே என்று ஏன் சொல்லக் கூடாது? முதல் உயிரணுவிலிருந்து முழுமையடைந்த மனிதன்வரை பெற்ற அனுபவங்களின் மொத்தத் தொகுதி நம்முள் இருக்கிறது. அது பரம்பரையாக ஒவ்வோர் உடல் வழியாகவும் தொடர்ச்சியாக வந்துள்ளது. இதை ஏற்றுக்கொள்வதில் என்ன சிக்கல்?

கேள்வி நன்றாகத்தான் இருக்கிறது. பரம்பரைகுணக் கருத்தை நாம் ஓரளவு ஒப்புக்கொள்ளவே செய்கிறோம். ஆனால் எதுவரை ஒப்புக்கொள்கிறோம்? மூலப் பொருள் அதாவது உடல் என்பது பரம்பரைகுணத்திற்கு உட்பட்டது என்பதுவரைதான். உடல் மட்டும்தான் பரம்பரையாக வருகிறது. அதாவது நம்முடைய முன்வினைப் பயனால், குறித்த ஓர் உடலில் நாம் பிறக்கிறோம். நம்முடைய ஆன்மாவைத் தங்கள் குழந்தையாகப் பெறுவதற்குத் தகுதியுள்ள பெற்றோர்கள் அந்த உடலுக்கான உருவத்தை மட்டுமே கொடுக்கிறார்கள்.

மன அனுபவம் ஜடப்பொருளில் பதிந்திருக்க முடியும், ஒடுங்கியிருக்க முடியும் என்று, நிரூபணமற்ற வினோதமான ஒரு கருத்தைப் பரம்பரைகுணக் கொள்கை நம் முன் வைக்கிறது. நான் உங்களைப் பார்க்கும்போது, என் மனமாகிய ஏரியில் ஓர் அலை எழுகிறது. பின்னர் அது அடங்கிவிடுகிறது; ஆனால் நுட்பமான உருவத்துடன் சம்ஸ்காரமாக என் மனத்தில் பதிகிறது. உடலாகிய பொருளில் ஒரு பௌதீகப் பதிவு இருக்க முடியும், அதை நாம் புரிந்துகொள்ளலாம். ஆனால் அழியும் இயல்புடைய உடலில் மனப்பதிவு இருக்க முடியும் என்று எப்படி ஊகிக்க முடியும்? மனப்பதிவை எது எடுத்துச் செல்கிறது? சரி, மனப்பதிவு ஒவ்வொன்றும் உடலில் பதிந் திருக்க முடியும் என்றே வைத்துக் கொள்வோம். முதல் மனிதனிலிருந்து என் தந்தைவரை ஒவ்வொருவருக்கும் ஏற்பட்ட ஒவ்வொரு பதிவும் என் தந்தையின் உடலில் இருந்ததாகவும் வைத்துக் கொள்வோம். அது என் தந்தையிடமிருந்து எனக்கு எப்படி வந்தது? உயிரணுவின் மூலமாகவா? அது எப்படி இருக்க முடியும்? ஏனென்றால் தந்தையின் உடல் அப்படியே குழந்தைக்கு வருவதில்லை. ஒரே தாய்தந்தையருக்குப் பல குழந்தைகள் இருக்கலாம். அப்படியானால் பரம்பரைகுணக் கொள்கையின்படி பதிவும் பதிக்கப்பட்ட பொருளும் ஒன்று என்றால், ஒவ்வொரு குழந்தை பிறக்கும்போதும் தங்கள் பதிவில் ஒரு பகுதியைப் பெற்றோர்கள் இழக்க வேண்டும். அல்லது, பெற்றோர்கள் தங்கள் பதிவுகள் முழுவதையும் முதல் குழந்தைக்குக் கொடுத்துவிட்டால் முதல் குழந்தை பிறந்த பிறகு பெற்றோர்களின் மனம் சூன்யப் பிரதேசமாகத்தான் இருக்க வேண்டும்.

சரி. இதுவரை கடந்து சென்ற எல்லா காலங்களின் பதிவு களும் உயிரணுவில் இருந்தால், அது எங்கே இருக்கிறது? எப்படி இருக்கிறது? அது சாத்தியமில்லாத ஒன்று. அந்த உயிரணுவில், எங்கே, எப்படி அந்தப் பதிவுகள் இருக்கின்றன என்பதை உடலியல் வல்லுனர்கள் நிரூபிக்கும் வரையிலும், உடலிலுள்ள உயிரணுவில் மனப்பதிவு தூங்கிக் கொண்டிருக் கிறது என்று சொல்வதன் பொருள் என்ன என்பதை அவர்கள் விளக்கும்வரையிலும், அவர்கள் சொல்வதை ஒப்புக்கொள்ள முடியாது. ஆகவே அனுபவப் பதிவு மனத்தில் இருக்கிறது, மனமே மறுபடியும் மறுபடியும் பிறக்கிறது, தனக்கு மிகவும் பொருத்தமான உடலை அது பயன்படுத்துகிறது, அத்தகைய

ஓர் உடல் கிடைக்கும்வரை அது காத்திருக்கிறது என்பது தெளிவாகிறது. இதை நாம் புரிந்துகொள்கிறோம்.

ஆன்மாவிற்குப் பொருத்தமான உடலைக் கொடுக்கும் வரை, பரம்பரைகுணக் கொள்கை சரியாக இருக்கிறது. ஆனால் மனம் உடலுக்கு உடல் தாவிக்கொண்டே இருக்கிறது; அதன் பயணம் தொடர்கிறது. நான் நினைக்கும் ஒவ்வோர் எண்ணமும் செய்யும் ஒவ்வொரு செயலும் மனத்தில் நுட்பமான உருவங் களாகப் பதிந்திருக்கின்றன. வேளை வாய்க்கும்போது அவை வெளிவந்து புதிய உருவம் தாங்குகின்றன. நான் உங்களைப் பார்க்கும்போது என் மனத்தில் ஓர் அலை எழுகிறது. அது ஆழமாகப் பாய்ந்து சென்று மிகமிக நுட்பமாக மாறுகிறது; ஆனால் அழிவதில்லை. நினைவு வடிவாக மறுபடியும் எழு வதற்கு அது தயாராக இருக்கிறது. இந்தப் பதிவுகளெல்லாம் என் மனத்தில் இருக்கின்றன. நான் இறக்கும்போது இந்தப் பதிவுகளின் ஒட்டுமொத்தப் பலன் என்னில் எஞ்சி நிற்கும். இங்கே ஒரு பந்து இருக்கிறது. நாம் ஒவ்வொருவரும் கையில் ஒரு மட்டையை எடுத்துக்கொண்டு இந்தப் பந்தை அடிப்பதாக வைத்துக் கொள்வோம். பந்து இந்த அறைக்குள் அங்குமிங்கும் பறக்கிறது, கதவை அடைந்துவிட்டால் வெளியே பறக்கிறது. அது தன்னுடன் எதை எடுத்துக்கொண்டு போகிறது? அது வாங்கிய அடிகளின் மொத்தப் பலனையே. பந்து எங்கே போக வேண்டும் என்பதைத் தீர்மானிப்பது இதுவே.

உடல் அழியும்போது ஆன்மாவிற்கு வழிகாட்டுவது எது? அது முதலிலிருந்தே செய்த செயல்கள், நினைத்த எண்ணங்கள் ஆகியவற்றின் மொத்தப் பலனே. இந்தப் பலன், மனம் இன்னும் அனுபவம் பெறுவதற்காகப் புதிய உடலை எடுக்கும் அளவுக்கு இருந்தால், அந்த உடலுக்குத் தேவையான மூலப்பொருளைத் தருவதற்குத் தயாராக இருக்கும் பெற்றோர்களை நாடிச் செல் கிறது. இவ்வாறு அது ஓர் உடலை விட்டு மற்றோர் உடலுக்குத் தாவுகிறது. சிலவேளைகளில் ஏதாவது ஒரு சொர்க்கத்திற்குப் போகிறது. திரும்பவும் உலகிற்கு வந்து, மனிதனாகவோ மிருக மாகவோ உருவெடுக்கிறது. இவ்வாறு, முழு அனுபவம் பெறும் வரையிலும் வட்டத்தை நிறைவு செய்யும் வரையிலும் ஆன்மா இயங்கிக்கொண்டே இருக்கிறது. அதன் பிறகுதான், அது தன் உண்மை இயல்பை அறிகிறது; தான் யார் என்பதை உணர்கிறது. அப்போது அதன் அறியாமை மறைகிறது; அதன் ஆற்றல்கள் வெளிப்படுகின்றன; அது நிறைநிலையை அடைகிறது.

அதன்பிறகு ஆன்மா தூல உடலின்மூலம் இயங்க வேண்டியதில்லை; சூட்சுமமான அல்லது மனம் போன்ற நுட்பமான உடல்கள் மூலமாக இயங்கும் அவசியமும் இல்லை. அது தன் ஒளியிலேயே ஒளிர்கிறது; பரிபூரண சுதந்திரம் பெற்றுவிடுகிறது. இனி அது பிறக்க வேண்டியதில்லை, இறக்கவும் வேண்டியதில்லை. இதைப் பற்றிய விளக்கங்களுக்கு நாம் இப்போது போக வேண்டாம்.

மறுபிறவி பற்றிய மற்றோர் அம்சத்தை உங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். மனித ஆன்மாவின் சுதந்திர நிலையைப்பற்றிய கொள்கையே அது. சொந்த பலவீனங்கள் எல்லாவற்றையும் வேறொருவரின் மீது சுமத்துவது பொதுவான மனித இயல்பு. மறுபிறவிக் கொள்கை ஒன்றுதான் இந்தத் தவறைச் செய்வதில்லை. நாம் நம்முடைய தவறுகளைப் பார்ப்பதில்லை. கண்கள் தங்களைத் தாங்களே பார்த்துக் கொள்ள முடியாது, பிறர் ஒவ்வொருடைய கண்களையும் அதனால் பார்க்க முடியும். நமது குற்றங்களைச் சுமத்துவதற்கு வேறொருவர் இருக்கும்வரை நாம் நம்முடைய பலவீனங்களையும் தவறுகளையும் மெதுவாகத்தான் புரிந்து கொள்கிறோம். மனிதர்கள் பொதுவாகத் தங்களைச் சுற்றியிருப்பவர்கள் மீதே தங்கள் குற்றங்களைச் சுமத்துகிறார்கள். அது முடியாவிட்டால் கடவுள்மீது சுமத்துகிறார்கள். அல்லது ஒரு பிசாசைக் கற்பனை செய்து, அதன்மீது சுமத்துகிறார்கள். இல்லாவிட்டால் விதி என்பார்கள். விதி எங்கே இருக்கிறது? விதியாக இருப்பது யார்? நாம் விதைத்ததைத்தான் நாம் அறுக்கிறோம். நம் விதிக்கு நாமே காரணம். பழியாகட்டும், புகழாகட்டும், அதற்கு வேறு யாரும் பொறுப்பல்ல.

காற்று வீசுகிறது; பாய்மரம் விரித்த கப்பல்கள் காற்றின் துணையுடன் முன்னேறுகின்றன. பாயைச் சுருட்டி வைத்திருக்கும் கப்பல்களுக்குக் காற்றின் துணை கிடைப்பதில்லை. அது காற்றின் குற்றமா? கடவுளின் கருணை என்னும் காற்று, இரவுபகலாக இடையீடின்றி வீசிக் கொண்டிருக்கிறது. அந்தக் கருணை அழிவற்றது. நம்மில் சிலர் சந்தோஷமும் சிலர் துன்பமும் அடைவது கடவுளின் குற்றமா? நாமே நம் விதியை உருவாக்குகிறோம். வலியவர், எளியவர் இருவருக்கும் இறைவனின் சூரியன் ஒரே மாதிரிதான் ஒளி வீசுகிறான். புண்ணியவான்களுக்கும் பாவிகளுக்கும் அவரது காற்று ஒரே மாதிரிதான் வீசுகிறது.

கடவுள் எல்லோருக்கும் தலைவர், எல்லோருக்கும் தந்தை. அவர் கருணை வடிவினர். பாரபட்சமற்றவர். எல்லாவற்றையும் படைத்து எல்லாவற்றிற்கும் அதிபதியாக இருக்கின்ற அவர் நமது வாழ்க்கையின் அற்ப விஷயங்களை நாம் பார்ப்பது போலவா பார்ப்பார்! கடவுளைப்பற்றிய என்ன அற்பத்தனமான கருத்து! நாம் சிறிய நாய்க்குட்டிகளைப்போல் வாழ்வு, சாவு என்ற போராட்டத்தில் இங்கே ஈடுபட்டிருக்கிறோம். கடவுளும் இந்தப் பிரச்சினைக்கு நம்மைப்போல் அவ்வளவு முக்கியத் துவம் கொடுப்பார் என்று முட்டாள்தனமாக நினைக்கிறோம். நாய்க்குட்டிகளின் விளையாட்டைப்பற்றி அவருக்கு நன்றாகவே தெரியும்.

கடவுளின்மீது பழியைப் போட்டு, தண்டிப்பவராகவோ பரிசளிப்பவராகவோ அவரை உருவகப்படுத்துவதற்கான நமது முயற்சிகளெல்லாம் வெறும் முட்டாள்தனம். கடவுள் யாரையும் தண்டிப்பதும்இல்லை, யாருக்கும் பரிசளிப்பதுமில்லை.[1] எல்லா இடங்களிலும், எல்லா காலங்களிலும், எந்தச் சந்தர்ப்பத்திலும், உறுதியாக, நிச்சயமாக எல்லோருக்கும் உதவக் காத்திருப்பது கடவுளின் கருணை. அதை எப்படித் துணைகொள்கிறோம், பயன்படுத்திக் கொள்கிறோம் என்பது நம் கையில்தான் இருக் கிறது. மனிதர்களையோ கடவுளையோ வேறு யாரையுமோ பழி சொல்லாதீர்கள். துன்புற நேருமானால் பழியை நம் மீதே சுமத்திக்கொள்ள வேண்டும். நம்மை உயர்த்திக்கொள்ள முயல வேண்டும்.

பிரச்சினைக்கு இது ஒன்றுதான் தீர்வு. அந்தோ, பிறர்மீது பழி போடுபவர்கள் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே இருக்கிறார்கள். பொதுவாக அவர்கள் துன்பப்படுபவர்களாக, நம்பிக்கை இழந்தவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் தங்களுடைய தவறுகளின் மூலமாகவே இந்தக் கஷ்டத் திற்கு உள்ளாகியிருக்கிறார்கள். ஆனால் பிறர்மீது பழி போடு கிறார்கள். இது அவர்களின் நிலைமையை மாற்றுவதில்லை, அவர்களுக்கு எந்தவிதத்திலும் உதவுவதில்லை. பிறர்மீது பழி போட முயல்வது அவர்களை மேலும் பலவீனப்படுத்துகிறது.

1. ஒப்பிடுக:
நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவ ஸுக்ருதம் விபு: ।
—இறைவன் யாருடைய பாவத்தையோ புண்ணியத்தையோ ஏற்றுக் கொள்வதில்லை.

—கீதை, 5.15.

ஆகவே உங்கள் தவறுகளுக்குப் பிறரைப் பழி சொல்லாதீர்கள். சொந்தக் காலிலேயே நில்லுங்கள், பொறுப்பை ஏற்றுக் கொள்ளுங்கள்.

'நான் அனுபவிக்கும் இந்தத் துன்பத்திற்கு நானே காரணம். ஆகவே நானேதான் இதற்குப் பரிகாரமும் தேடிக் கொள்ள வேண்டும்' என்று உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். நான் படைத்ததை நானே அழிக்க முடியும். மற்றவர்கள் படைத்ததை என்னால் அழிக்க முடியாது. ஆகவே எழுந்திருங்கள், உறுதியுடனும் தைரியத்துடனும் இருங்கள். பொறுப்பு முழுவதையும் உங்கள் தோளிலேயே சுமந்துகொள்ளுங்கள். உங்கள் விதிக்கு நீங்களே காரணம் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். நீங்கள் விரும்புகின்ற வலிமையும் உதவியும் உங்களுள்ளேயே இருக்கின்றன. உங்கள் எதிர்காலத்தை நீங்களே உருவாக்கிக் கொள்ளுங்கள். போனது போகட்டும். எல்லையற்ற எதிர்காலம் உங்கள் முன்னே இருக்கிறது. உங்களுடைய ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வோர் எண்ணமும் ஒவ்வொரு செயலும் அதற்கு ஏற்ற பலனை உண்டாக்கும் என்பதை எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். தீய செயல்களும் தீய எண்ணங்களும் புலிகளைப்போல் நம்மீது பாயத் தயாராக இருக்கின்றன. ஆனால் அதோடுகூடவே நல் எண்ணங்களும் நற்செயல்களும் பல்லாயிரக்கணக்கான தேவ தூதர்களைப் போல் நம்மைக் காப்பாற்ற எப்போதும் தயாராக இருக்கின்றன என்பதையும் நம்புங்கள். உத்வேகத்துடன் செயல்படுங்கள். ❑

## 13. ஆன்மா

பேராசிரியர் மாக்ஸ்முல்லரின் 'வேதாந்தத் தத்துவம் பற்றிய மூன்று சொற்பொழிவுகள்' என்ற பிரபல நூலை உங்களுள் பலர் படித்திருப்பீர்கள். அதே விஷயத்தைப்பற்றி பேராசிரியர் டய்சன் ஜெர்மானிய மொழியில் எழுதிய நூலை சிலர் படித்திருக்கலாம். இந்திய மதச் சிந்தனையைப்பற்றி மேலை நாடுகளில் எழுதியும் கற்பித்தும் வருபவற்றுள் ஒரு நெறி முக்கியமாகக் கையாளப்படுகிறது. அது அத்வைதம். வேதங்களின் போதனைகள் முழுவதும் அந்த ஒரு நெறியிலேயே அடங்கிவிட்டது என்றும் கருதப்படுகிறது. ஆனால் இந்தியச் சிந்தனையில் பல நிலைகள் இருக்கின்றன. மற்ற நிலைகளோடு ஒப்பிட்டால், அத்வைதம் சிறுபான்மை நெறி என்றே சொல்ல வேண்டும்.

மிகப் பழங்காலத்திலிருந்தே இந்தியச் சிந்தனையில் பல பிரிவுகள் இருந்திருக்கின்றன. இன்ன பிரிவினர் இன்ன கோட்பாட்டை நம்ப வேண்டும் என்றெல்லாம் வகுத்துத் தருவதற்கான அத்தாட்சி பெற்ற எந்தச் சங்கமோ அமைப்போ இல்லாததால், மக்கள் தங்களுக்குப் பிடித்த மதப் பிரிவைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கும், தங்களுக்கென்று சொந்தமாக ஒரு தத்துவத்தையும் மதப் பிரிவையும் ஏற்படுத்திக் கொள்வதற்கும் சுதந்திரம் இருந்தது. எனவே மிகப் பழங்காலத்திலிருந்தே இந்தியா மதப் பிரிவுகளால் நிறைந்திருப்பதைக் காண்கிறோம். இப்போதுகூட எத்தனை நூறு மதப் பிரிவுகள் இந்தியாவில் இருக்கின்றன என்பதோ, ஆண்டுதோறும் எத்தனை புதிய பிரிவுகள் தோன்றிக் கொண்டிருக்கின்றன என்பதோ எனக்குத் தெரியாது. இந்தியாவின் மதப் பேரூற்று வற்றாமல் இருப்பதாகவே தோன்றுகிறது.

இந்தப் பல பிரிவுகளையும் இரண்டு தலைப்புகளின் கீழே கொண்டு வந்துவிடலாம். ஒன்று வைதீகம், மற்றொன்று அவைதீகம், அதாவது வைதீகம் அல்லாதது. இந்துமத சாஸ்திரங்களான வேதங்கள் நிலையான அருள்வெளிப்பாடுகள் என்று நம்பும் பிரிவுகள் வைதீகமானவை. வேதங்களை மறுத்து, வேறு பிரமாணங்களைக் கொள்கின்ற பிரிவுகள் அவைதீகமானவை.

தற்கால அவைதீகப் பிரிவுகளில் முக்கியமானவை சமண மதமும் புத்த மதமுமே. வைதீகப் பிரிவினருள் சிலர், பகுத்தறிவைவிட வேதங்களே உயர்ந்த பிரமாணங்கள் என்கிறார்கள். வேறு சிலர், சாஸ்திரங்களில் அறிவுபூர்வமானவற்றை மட்டும் ஏற்றுக் கொண்டு மற்றவற்றை விட்டுவிட வேண்டும் என்கிறார்கள்.

வைதீகப் பிரிவுகளுள் சாங்கியம், நையாயிகம், மீமாம்சகம் என்பவை முக்கியமான மூன்று ஆகும். இவற்றுள் முதல் இரண்டும் தத்துவங்களுடன் நின்றுவிட்டனவே தவிர எந்த நெறிகளையும் அவை படைக்கவில்லை. மீமாம்சகர் அல்லது வேதாந்திகளே இப்போது உண்மையில் இந்தியா முழுவதும் பரவியிருக்கின்ற ஒரே பிரிவினர். அவர்களுடைய தத்துவமே வேதாந்தம். இந்து மதத்திலுள்ள எல்லா தத்துவப் பிரிவுகளும் வேதாந்தம் அல்லது உபநிடதங்களிலிருந்தே தொடங்குகின்றன. ஆனால் அத்வைதிகள் தங்களுக்கு, அந்தப் பெயரை ஒரு சிறப்புப் பெயராக வைத்துக் கொண்டார்கள். அவர்கள் தங்கள் கோட்பாடுகளையும் தத்துவங்களையும் வேதாந்தத்தைத் தவிர வேறு எந்த அடிப்படையிலும் அமைக்க விரும்பவில்லை. காலப்போக்கில் வேதாந்தம் மட்டும் வேரூன்றி விட்டது. இப்போது உள்ள இந்து மதப் பிரிவுகள் எல்லாமே வேதாந்தத்தின் ஏதாவது ஒரு நெறியுடன் தொடர்பு உடையனவாகவே இருக்கின்றன. இருந்தாலும் இந்தப் பிரிவுகளின் கருத்துக்களெல்லாம் ஒருமித்ததாக இல்லை.

வேதாந்தத்தில் நாம் மூன்று முக்கியமான வேறுபட்ட கோட்பாடுகளைக் காண்கிறோம். ஒரு விஷயத்தை அவர்கள் எல்லோருமே ஒப்புக் கொள்கிறார்கள், அதாவது எல்லோருமே கடவுளை நம்புகிறார்கள். மேலும், வேதங்கள் இறைவனால் வெளியிடப்பட்டவை என்றும் நம்புகிறார்கள். ஆனால் இது கிறிஸ்தவர்களோ முஸ்லீம்களோ தங்கள் நூல்களைப்பற்றி நம்புவதுபோல் அல்லாமல், சற்று மாறுபட்ட, தனிப்பட்ட கருத்தாக இருக்கிறது. வேதங்கள் கடவுளைப் பற்றிய அறிவை வெளிப்படுத்துபவை. கடவுள் நிரந்தரமானவர், ஆதலால் அவரைப் பற்றிய அறிவும் அவரிடம் நிரந்தரமாக உள்ளது. எனவே வேதங்களும் நிரந்தரமானவை என்பது வேதாந்திகளின் கருத்து.

வேதாந்திகளிடம் மற்றொரு பொதுவான நம்பிக்கை இருக்கிறது. படைப்பு சுழற்சியாக நடைபெறுகிறது என்பதே அது. படைப்பு முழுவதுமே தோன்றி மறைகிறது. அது தன்னை வெளிப்படுத்திக் கொண்டு, சிறிதுசிறிதாகத் தூலத் தன்மை

பெற்று, கணக்கிட முடியாத காலத்திற்குப் பிறகு, சிறிதுசிறிதாக நுட்பத்தன்மை அடைந்து, கடைசியில் மறைந்து ஒடுங்கி விடுகிறது. அந்த ஒடுங்கிய நிலையிலேயே சில காலம் இருக்கிறது. பின்னர் மறுபடியும் இதே சுழற்சி நடைபெறுகிறது. ஆகாசம், பிராணன் என்ற இரண்டு தத்துவங்களை அவர்கள் கற்பித்துக் கொள்கிறார்கள். இதில் ஆகாசம் என்பது ஏறக்குறைய விஞ் ஞானிகள் கூறும் 'ஈதர்' (ether) போன்றது. பிராணன் என்பது ஒரு சக்தி. இந்தப் பிராணனின் அதிர்வினால்தான் பிரபஞ்சம் தோன்றுகிறது என்று அவர்கள் சொல்கிறார்கள். ஒரு சுழற்சி முடிந்தவுடனேயே, இயற்கையின் எல்லா வெளிப்பாடுகளும் சிறிதுசிறிதாக நுட்பத் தன்மை அடைந்து ஆகாசத்தில் கரைந்து விடுகின்றன. ஆகாசத்தைப் பார்க்கவோ உணரவோ முடியாது. ஆனால் இந்த ஆகாசத்திலிருந்துதான் எல்லாமே தோன்று கின்றன. இயற்கையின் பலவித சக்திகளான ஈர்ப்பு சக்தி, கவர்ச்சி சக்தி, விலக்கு சக்தி, சிந்தனை, உணர்ச்சிகள், நரம்புகளின் இயக்கம் எல்லாமே பிராணனில் ஒடுங்குகின்றன. அப்போது பிராணனின் அதிர்வும் நின்றுவிடுகிறது. அடுத்த சுழற்சி ஆரம்பிக்கும் வரையில் பிராணன் அதே நிலையில் இருக்கிறது. மறுபடியும் பிராணன் அதிரத் தொடங்குகிறது. அந்த அதிர்வு ஆகாசத்தின்மீது செயல்படுகிறது. பிரபஞ்சத்திலுள்ள உருவங்கள் அனைத்தும் ஒழுங்குமுறையுடன் அதிலிருந்து வெளிவருகின்றன.

துவைதம் எனப்படுகின்ற வேதாந்தப் பிரிவைப் பற்றித் தான் நான் முதலில் உங்களிடம் பேசப் போகிறேன். பிரபஞ் சத்தைப் படைத்து அதை ஆள்பவரான கடவுள், இயற்கை யிலிருந்தும் மனித ஆன்மாவிலிருந்தும் என்றென்றைக்குமாக வேறுபட்டவர் என்று துவைதிகள் நம்புகிறார்கள். கடவுள் என்றென்றும் இருப்பவர், இயற்கையும் என்றென்றும் இருப்பது, ஆன்மாக்களும் அப்படியே. இயற்கையும் ஆன்மாக் களும் தங்களை வெளிப்படுத்துகின்றன, மாற்றமடைகின்றன. ஆனால் கடவுள் மாறுவதில்லை; எப்போதும் ஒருபோலவே இருக்கிறார். கடவுள் சகுணமானவர்; குணங்கள் உள்ளவர், ஆனால் உடல் உள்ளவர் என்பதல்ல. அவருக்கு மனிதக் குணங் களெல்லாம் உள்ளன. அவர் கருணைமயமானவர், நியாய மானவர், சக்தி வாய்ந்தவர், சர்வ வல்லமை படைத்தவர், அவரை நாம் அணுக முடியும், பிரார்த்தனை செய்ய முடியும், அவரிடம் அன்பு செலுத்த முடியும், பிரதியாக அவரும் நம்மீது

அன்பு செலுத்துகிறார் என்பனவெல்லாம் துவைதிகளின் கடவுள் பற்றிய கருத்துக்களாகும்.

ஒரே வார்த்தையில் சொல்லப்போனால், அவர் மனிதக் கடவுள். ஆனால் மனிதனைவிடப் பன்மடங்கு உயர்ந்தவர். மனிதர்களிடமுள்ள தீய குணங்கள் எதுவும் அவரிடமில்லை. 'எல்லையற்ற நற்குணக் களஞ்சியமே கடவுள்' என்பதுதான் கடவுளைப்பற்றி துவைதிகளின் விளக்கம். மூலப் பொருட்கள் இல்லாமல் அவரால் படைக்க முடியாது. அந்த மூலப்பொருள் இயற்கை. அதைக்கொண்டே அவர் பிரபஞ்சம் முழுவதையும் படைக்கிறார்.

வேதாந்திகள் அல்லாத, அணுவாதிகள் (Atomists) என்ற சில துவைதிகள் இருக்கிறார்கள். இயற்கை முழுவதும் எல்லையற்ற அணுக்கூட்டமே தவிர வேறொன்றுமில்லை; இறைவனின் சங்கல்பம் இந்த அணுக் கூட்டத்தின்மீது செயல்படுவதால்தான் இந்தப் படைப்பு நிகழ்கிறது என்பது அவர்கள் கூற்று. வேதாந்திகள் இந்த அணுக் கொள்கையை மறுக்கிறார்கள். இந்த வாதம் அறிவுபூர்வமானதாக இல்லை என்று அவர்கள் சொல்கிறார்கள். பகுக்க முடியாத இந்த அணுக்கள், ஜியோமிதிப் புள்ளிகள் (Geometrical Points) போன்றவை. அதாவது, அவற்றிற்குப் பகுதிகளோ பரிமாணங்களோ இல்லை. பரிமாணம் இல்லாதவற்றை எல்லையற்றமுறை பெருக்கினாலும் அவை முன்பிருந்தபடியேதான் இருக்கும். பகுதிகள் இல்லாத எதனாலும், பகுதிகள் உள்ள ஒன்றை ஆக்க முடியாது. எவ்வளவு பூஜ்யங்களைக் கூட்டினாலும் ஒரு முழு எண்ணைப் பெற முடியாது. அணுக்களுக்கும் பகுதிகளோ பரிமாணங்களோ இல்லையென்றால், இவற்றிலிருந்து பிரபஞ்சம் தோன்றுவது என்பது முடியாத காரியம். ஆகவே வேதாந்தத் துவைதிகளின் கருத்துப்படி, வேறுபாடில்லாமல், எங்கும் ஒரேபோல் இருக்கும் இயற்கையிலிருந்துதான் கடவுள் பிரபஞ்சத்தைப் படைத்தார்.

இந்தியர்களில் பெரும்பான்மையோர் துவைதிகளே. சாதாரணமாக மனித இயல்பு உயர்ந்த எதையும் புரிந்துகொள்ளாது. மத நம்பிக்கை உள்ள உலக மக்களுள் நூற்றுக்குத் தொண்ணூறுபேர் துவைதிகளாக இருப்பதையே காண்கிறோம். ஐரோப்பா மற்றும் ஆசிய நாடுகளிலுள்ள எல்லா மதங்களுமே துவைத மதங்கள்தாம். அப்படித்தான் இருக்கவும் முடியும். நுட்பமானவற்றைச் சாதாரண மனிதனால் சிந்திக்க முடியாது. தன் அறிவுக்கு எட்டியவற்றைப் பிடித்துக் கொள்ளத்தான்

அவன் விரும்புகிறான். அதாவது உயர்ந்த ஆன்மீக லட்சியங்களையும் தன்னுடைய நிலைக்குக் கொண்டு வருவதன் மூலம் தான் அவனால் புரிந்துகொள்ள முடியும். நுட்பமான கருத்துக்களைப் பௌதீக நிலைக்கு மாற்றினால்தான் அவன் புரிந்து கொள்வான். உலகம் முழுவதுமுள்ள சாதாரண மக்களின் மதம் இதுதான். தங்களிலிருந்து முற்றிலும் வேறுபட்ட, தங்களை அடக்கியாளும் வல்லமை படைத்த சக்கரவர்த்தி போன்ற ஒரு கடவுளே அவர்களுக்கு வேண்டும். அவரைப் பூமியிலுள்ள சக்கரவர்த்திகளை எல்லாம்விடத் தூயவர் ஆக்குகிறார்கள். எல்லா நற்பண்புகளையும் உடையவராக அவரைக் காண்கிறார்கள், தீய பண்புகளை அவரிடமிருந்து விலக்குகிறார்கள். ஆனால் நன்மையும் தீமையும் தனித்தனியாக இருப்பது சாத்தியமல்ல என்பதை அவர்கள் மறந்துவிடுகிறார்கள். இருட்டைப் பற்றிய கருத்தில்லாமல், வெளிச்சத்தைப் பற்றிய கருத்து இருக்க முடியும் என்று சொல்வதைப்போல் இருக்கிறது, அவர்கள் சொல்வது!

துவைதக் கருத்துக்கள் எல்லாவற்றிலுமே ஒரு பெரிய குறை இருக்கிறது. நற்குணக் களஞ்சியமாகவும், நீதியும் கருணையும் நிறைந்திருப்பவராகவும் இருக்கும் கடவுளின் ஆட்சிக்கு உட்பட்ட இந்த உலகில், இவ்வளவு தீமைகள் இருப்பது ஏன்? எல்லா துவைத நெறிகளிலும் இந்தக் கேள்வி எழுந்தது. ஆனால் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்வதற்காக இந்துக்கள் எந்தச் சாத்தானையும் உருவாக்கவில்லை. ஒரேமனதாகக் குற்றத்தை மனிதனின்மீதே சுமத்தினார்கள் அது அவர்களுக்குச் சுலபமாகவும் இருந்தது. ஏன்? ஏனென்றால் நான் சற்றுமுன் சொன்னதுபோல், சூன்யத்திலிருந்து ஆன்மாக்கள் படைக்கப்பட்டதாக இந்துக்கள் நம்பவில்லை. நம்முடைய எதிர்காலத்தை நாமே உருவாக்கிக்கொள்ள முடியும் என்பதை இந்த வாழ்க்கையில் பார்க்கிறோம். நாம் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாளும், மறுநாளுக்கான ஏற்பாடுகளைச் செய்யவே முயன்று கொண்டிருக்கிறோம். இன்று, நாளைய விதியை நிர்ணயிக்கிறோம். நாளை, நாளைக்கு அடுத்த நாளின் விதியை நிர்ணயிப்போம். இவ்வாறே தொடர்ந்து நடந்து கொண்டிருக்கிறது.

இந்த வாதத்தை இறந்தகாலத்திற்குப் பொருத்திப் பார்ப்பது, நியாயமானதே. நாம் நமது செயல்களாலேயே நம் எதிர்காலத்தை நிர்ணயித்துக் கொள்கிறோம் என்றால், அதே விதியை இறந்தகாலத்திற்கும் ஏன் பொருத்திப் பார்க்கக் கூடாது?

ஓர் எல்லையற்ற சங்கிலித் தொடரில், ஒரேமாதிரியான சில சங்கிலிப் பிணைப்புகள் மாறிமாறி வந்து கொண்டிருந்தால், இந்த இணைப்புகளின் சேர்க்கையில் ஒரு பகுதியை மட்டும் ஆராய்வதன் மூலம், முழுச் சங்கிலியின் இயல்பையும் நம்மால் விளக்கிவிட முடியும். ஆகவே காலம் என்னும் எல்லையற்ற சங்கிலியில் ஒரு பகுதியை மட்டும் பிரித்து, அதைப் புரிந்து கொள்ள முடிந்தால், அத்துடன் இயற்கை எங்கும் ஒரே மாதிரி தான் இருக்கிறது என்பதும் உண்மையாக இருக்குமானால், காலம் என்னும் முழுச்சங்கிலியையும் நாம் விளக்கிவிட முடியும். இந்தக் குறைந்த கால அளவில், இங்கே, நாமே நமது விதியை உருவாக்கிக் கொள்கிறோம் என்பது உண்மையானால், நாம் இப்போது காண்பதுபோல் எல்லாவற்றிற்கும் ஒரு காரணம் இருக்க வேண்டும் என்பது உண்மையானால், இப்போது இருக்கும் நாம், நம்முடைய இறந்தகாலச் செயல்கள் முழுவதன் பலனே என்பதும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும்.

ஆகவே மனிதகுலத்தின் விதியை நிர்ணயிப்பதற்கு, மனிதனைத் தவிர வேறு யாருமே தேவையில்லை. உலகிலுள்ள தீமைகள் எல்லாவற்றிற்கும் நாம்தான் காரணம். தீய செயல்களின் பலனாகத் துன்பங்கள் வருவது நமக்குத் தெரிகிறது. எனவே இப்போது உலகில் காணப்படும் துன்பங்களுக்கு, மனிதன் முன்பு செய்த தீய செயல்கள்தாம் காரணமாக இருக்க வேண்டும். இந்தக் கருத்தின்படி, மனிதனே எல்லா துன்பங்களுக்கும் காரணம், கடவுள்மீது பழி சுமத்தக் கூடாது. அவர் எப்போதும் மாறாத கருணையுள்ள தந்தை. அவர்மீது குற்றம் சாட்டக் கூடாது. 'எதை நாம் விதைக்கிறோமோ அதையே அறுப்போம்.'

ஒவ்வோர் ஆன்மாவும் முக்தியடைந்தே தீரும் என்பது துவைதிகளின் மற்றொரு வினோதமான கோட்பாடு. யாரும் இதற்கு விலக்கல்ல. சாதகமற்ற சூழ்நிலைகள் வழியாக, பல்வேறு இன்பதுன்பங்கள் வழியாகச் சென்று, கடைசியில் ஒவ்வொருவரும் வெளிவரத்தான் வேண்டும். எதிலிருந்து வெளிவர வேண்டும்? பிரபஞ்சத்தை விட்டு எல்லா ஆன்மாக்களும் வெளியேற வேண்டும் என்பது இந்து மதத்திலுள்ள எல்லா பிரிவுகளுக்கும் பொதுவான ஒரு கருத்து. நாம் பார்க்கின்ற உணர்கின்ற இந்தப் பிரபஞ்சமோ, அல்லது கற்பனை செய்துகொள்ளும் ஒரு பிரபஞ்சமோ, உண்மையான சரியான பிரபஞ்சமாக இருக்க முடியாது. ஏனென்றால் இரண்டிலுமே நன்மையும்

தீமையும் கலந்துதான் இருக்கின்றன. துவைதிகளின் கருத்துப் படி, இந்தப் பிரபஞ்சத்திற்கு அப்பால், நன்மையும் இன்பமும் மட்டுமே நிறைந்த ஓர் உலகம் இருக்கிறது. அந்த உலகை அடைந்துவிட்டால் பிறவி, மறு பிறவி, வாழ்வு, சாவு எதற்குமே அவசியமில்லை. இந்தக் கருத்து அவர்கள் மிகவும் விரும்புகின்ற ஒன்றாகும். அங்கே வியாதிகளோ மரணமோ இல்லை. அங்கே நிரந்தரமான இன்பம் இருக்கும். அந்த உலகை அடைபவர்கள் எப்போதும் கடவுளின் திருமுன்னர் இருந்துகொண்டு, அவரைக் கண்ணும் மனமும் குளிர தரிசித்துக் கொண்டிருப்பார்கள்.

சாதாரணமான புழுவிலிருந்து உயர்ந்த நிலையிலிருக்கும் தேவர்கள்வரை எல்லோருமே ஒருநாள் துன்பமற்ற அந்த உலகை அடைந்தே தீர வேண்டும். ஆனால் இந்த உலகம் முடிந்து விடாது! எல்லையற்ற காலம்வரை இருந்துகொண்டேதான் இருக்கும். அதன் இயக்கம் அலை போன்றதாக, எழுவதும் வீழ்வதுமாக இருக்கும். அத்தகைய சுழற்சியான இயக்கமாக இருந்தாலும் அது முடிவதில்லை. காக்கப்பட வேண்டிய, முக்தி பெற வேண்டிய ஆன்மாக்களின் எண்ணிக்கைக்குக் கணக்கே இல்லை. சில ஆன்மாக்கள் செடிகொடிகளிலும், சில, தாழ்ந்த மிருகங்களிலும், சில, மனிதர்களிலும், சில, தேவர்களிலும் இருக்கின்றன. ஆனால் உயர்ந்த தேவர்கள் உட்பட அனை வருமே நிறைநிலையை அடையாதவர்கள், பந்தத்தில் கட்டுண்டவர்கள். அந்தப் பந்தம் எது? பிறப்பதும், இறந்தேயாக வேண்டும் என்ற அவசியமும்தான் அது. மிக உயர்ந்த தேவர் களுக்குக்கூட மரணம் உண்டு.

இந்தத் தேவர்கள் என்பது என்ன? அவை சில நிலைகள், சில பதவிகள். உதாரணமாக, தேவர்களின் அரசனாகிய இந்திரன் என்பது ஒரு பதவி; மிக உயர்ந்த நிலைக்குச் சென்றுவிட்ட ஓர் ஆன்மா. அது இந்தக் கல்பத்தில் அந்தப் பதவியை நிரப்புகிறது. இந்திரனாக இருந்தவன் இந்தக் கல்பம் முடிந்ததும் பூமியில் மனிதனாகப் பிறக்கிறான். இந்தக் கல்பத்தில் மிகவும் நல்லவனாக இருந்தவன் அடுத்த கல்பத்தில் அந்த இந்திரப் பதவியை நிரப்புகிறான். மற்ற தேவர்களின் நிலையும் கதியும் இதுதான். கோடிக்கணக்கான ஆன்மாக்கள் மாறிமாறி நிரப்பிய பதவிகளே இவை. அந்தப் பதவிகளை வகித்தபின் அவர்கள் பூமியில் மனிதர்களாகப் பிறக்கிறார்கள். சொர்க்கத்தை அடையும் எண்ணத்துடனேயோ, புகழ் பெறுவதற்காகவோ இந்த உலகில் நற்காரியங்கள் செய்பவர்கள் இறந்தபின் அந்த

நற்செயல்களுக்கான பலனை அடைவார்கள். அவர்கள் இந்தத் தேவர்கள் ஆவார்கள். ஆனால் இது முக்தியல்ல. பலனை எதிர்பார்த்து வேலை செய்தால் முக்தி கிடைக்காது.

மனிதன் எதை விரும்பினாலும் அதைக் கடவுள் கொடுக்கிறார். அவன் அதிகாரத்தை விரும்புகிறான், கௌரவத்தை விரும்புகிறான், தேவர்கள் அனுபவிப்பது போன்ற இன்பங்களை விரும்புகிறான். அவை நிறைவேறவும் செய்கின்றன. ஆனால் எந்தச் செயலானாலும் அதன் பலன் நிரந்தரமானதல்ல. ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் அந்தப் பலன் தீர்ந்துவிடும். தீர்வதற்குப் பல யுகங்கள் ஆகலாம்; ஆனால் அது தீரவே செய்யும். அப்போது தேவர்கள் மறுபடியும் பூமியில் மனிதர்களாகப் பிறந்து, முக்திக்கு வழி தேட மறுபடியும் ஒரு வாய்ப்பினைப் பெறுகிறார்கள்.

தாழ்ந்த மிருகங்கள் உயர்ந்து, மனிதர்களாகின்றன; பிறகு தேவர்கள் ஆகின்றன. ஒருவேளை மறுபடியும் மனிதர்களாகலாம் அல்லது மிருகங்களாகலாம். இன்பம் அனுபவிக்கும் ஆசையையும், வாழ்க்கை மீதுள்ள மோகத்தையும், 'நான், எனது' என்ற பற்றுக்களைப் பிடித்துக் கொண்டிருக்கும் உடும்புப் பிடியையும் விடும்வரை இப்படியேதான் நடந்து கொண்டிருக்கும். 'நான்', எனது' என்பவைதான் எல்லா தீமைகளுக்கும் மூலகாரணமாகும். ஒரு துவைதியைப் பார்த்து, 'இந்தக் குழந்தை உன்னுடையதா?' என்று கேட்டால், 'இல்லை, கடவுளுடையது; என் சொத்துக்களெல்லாம் எனக்குச் சொந்தம் அல்ல, கடவுளுக்கே சொந்தம்' என்று அவன் சொல்வான். எல்லாவற்றையுமே கடவுளுக்குச் சொந்தமானதாகத்தான் கருத வேண்டும்.

இந்தியாவிலுள்ள இந்தத் துவைதப் பிரிவினர் எல்லோருமே சைவ உணவு உண்பவர்கள்; தீவிர அஹிம்சாவாதிகள். ஆனால் அவர்களுடைய கருத்து பௌத்தர்களின் கருத்திலிருந்து வேறுபட்டது. 'எந்த மிருகத்தையும் கொல்லக் கூடாது என்று ஏன் பிரச்சாரம் செய்கிறீர்கள்?' என்று ஒரு பௌத்தனைக் கேட்டால், அவன், 'எந்தப் பிராணியையும் கொல்ல நமக்கு உரிமை இல்லை' என்று சொல்வான். ஒரு துவைதியிடம் 'நீ எந்தப் பிராணியையும் ஏன் கொல்வதில்லை?' என்று கேட்டால், 'அது கடவுளுக்குச் சொந்தமானதாக இருப்பதால்தான்' என்று பதில் கூறுவான். ஆகவே, 'நான், எனது' என்பதைக் கடவுளுடன், கடவுளுடன் மட்டுமே இணைத்துச்

சொல்ல வேண்டும். 'நான்', என்பது கடவுள் மட்டுமே. எல்லாமே அவருக்குத்தான் சொந்தம். 'நான், எனது' என்ற எண்ணங்கள் அடியோடு இல்லாமல் போய் எல்லாவற்றையும் கடவுளுக்குச் சொந்தமாக்கி, எல்லோரிடமும் அன்பு செலுத்தி, பலனை எதிர்பார்க்காமல், ஒரு பிராணிக்காகத் தன் உயிரை இழக்கவும் தயாராக இருப்பவனுடைய இதயமே பரிசுத்த மானது. அத்தகைய இதயத்தில்தான் இறையன்பு தோன்றும்.

ஒவ்வோர் ஆன்மாவையும் தன்னை நோக்கிக் கவர்ந்து கொள்வது கடவுள்தான். 'களிமண்ணால் மூடியுள்ள ஊசியைக் காந்தத்தால் கவர முடியாது. களிமண்ணை நீக்கிவிட்டால் காந்தம் ஊசியைச் சுலபமாகக் கவர்ந்துவிடும்' என்று துவைதி சொல்வான். கடவுளே காந்தம், மனித ஆன்மாவே ஊசி. அதன் தீய செயல்களே அதை மூடிக்கொண்டிருக்கும் மண்ணும் தூசியும். ஆன்மா தூய்மையடைந்த உடனே, இயல்பாகவே அது கடவுளால் கவரப்பட்டு, அவரை அடைந்து, அவரோடு எப்போதுமே இருக்கும். ஆனால் அவரிடமிருந்து நிரந்தரமாக வேறுபட்டே நிற்கும்.

நிறைநிலையை அடைந்த ஆன்மா, தான் விரும்பினால், எந்த உருவத்தையும் எடுத்துக்கொள்ள முடியும்; நூறு உடல் களைக்கூட எடுத்துக்கொள்ள முடியும், எந்த உடலையுமே எடுத்துக்கொள்ளாமல் வேண்டுமானாலும் இருக்க முடியும். அது ஏறக்குறைய எல்லாம் வல்லதாக ஆகிவிடுகிறது. ஒரே வித்தியாசம் என்னவென்றால் அதனால் படைக்க முடியாது. அந்தச் சக்தி கடவுளுக்கு மட்டுமே சொந்தமானது. எவ்வளவு தான் நிறைநிலையடைந்த ஆன்மாவாக இருந்தாலும் பிரபஞ்சத்தை நடத்த முடியாது. அந்த வேலை கடவுளுக்கு மட்டுமே சொந்தமானது. ஆனால் எல்லா ஆன்மாக்களும் நிறைநிலை அடைந்ததும் நிலையான பேரின்பத்தில் திளைக் கின்றன, நிரந்தரமாகக் கடவுளுடனேயே வாழ்கின்றன. இது தான் துவைதிகளின் கருத்து.

துவைதிகள் இன்னுமொரு கருத்தையும் பிரச்சாரம் செய் கிறார்கள். 'இறைவா, எனக்கு இதைக் கொடு,அதைக் கொடு' என்று பிரார்த்திப்பதை அவர்கள் கண்டிக்கிறார்கள். அப்படிச் செய்வது தவறு என்று அவர்கள் நினைக்கிறார்கள். லௌகீக ஆசைகளைப் பூர்த்தி செய்துகொள்ள விரும்பினால், தாழ்ந்த நிலையிலுள்ள தேவர்களையே பிரார்த்திக்க வேண்டும். தேவர்களில் ஒருவரிடமோ, ஒரு தேவதையிடமோ, நிறைநிலை

பெற்ற ஒருவரிடமோதான் இதைப் போன்ற பிரார்த்தனை களைச் செய்ய வேண்டும். கடவுளிடம் பக்தி மட்டுமே செலுத்த வேண்டும். 'இறைவா, எனக்கு இதைக் கொடு, அதைக் கொடு' என்று கேட்பது ஏறக்குறைய தெய்வ நிந்தனைதான். இந்தத் தேவர்களில் ஒருவரைப் பிரார்த்தனை செய்வதன்மூலம் தனக்கு வேண்டிய எதையும் ஒரு மனிதன் இன்றோ நாளையோ பெறு வான். ஆனால் முக்தி வேண்டுமென்றால் கடவுளைத்தான் வழிபட வேண்டும். இந்தியாவிலுள்ள சாதாரண மக்களின் மதம் இதுதான்.

வேதாந்தத் தத்துவம் உண்மையில் விசிஷ்டாத்வைதத் திலிருந்துதான் தொடங்குகிறது. காரியம், காரணத்திலிருந்து ஒருபோதும் வேறுபடுவதில்லை. காரணத்தின் வேறுபட்ட உருவமே காரியம். பிரபஞ்சம் காரியமாகவும் கடவுள் காரண மாகவும் இருந்தால், பிரபஞ்சம் என்பது கடவுளேதான்; வேறு எப்படியும் இருக்க முடியாது. கடவுளே பிரபஞ்சத்தின் உபா தான காரணமாகவும் நிமித்த காரணமாகவும் இருக்கிறார் என்ற உறுதிப்பாட்டுடன்தான் அவர்கள் தங்கள் வாதத்தை ஆரம்பிக்கிறார்கள். கடவுள்தான் படைப்பவர். பிரபஞ்சத்திற்குக் காரணமான மூலப்பொருளும் அவரே. Creation (படைப்பு) என்ற வார்த்தைக்கு இணையான வார்த்தை சம்ஸ்கிருதத்தில் இல்லை. ஏனெனில் மேலை நாடுகளில் நம்புவதைப்போல் சூன்யத்திலிருந்து எதையோ உருவாக்குவது என்ற கருத்தை இந்தியாவின் எந்த் மதப் பிரிவினரும் நம்புவதில்லை. ஒரு காலத்தில் இதுபோன்ற எண்ணமுள்ள சிலர் இருந்ததாகத் தெரிகிறது. ஆனால் அவர்களுக்கு வெகுசீக்கிரமே வாய்ப்பூட்டு போடப் பட்டுவிட்டது. தற்காலத்தில் இப்படி நம்பும் இந்திய மதப் பிரிவு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஏற்கனவே இருக்கும் ஒன்றின் வெளிப்பாடுதான் படைப்பு என்பதே எங்கள் கருத்து. விசிஷ்டாத்வைதத்தின் கருத்துப்படி பிரபஞ்சம் என்பது கடவுளேதான். பிரபஞ்சத்திற்குக் காரண மான மூலப்பொருளும் அவர்தான். 'சிலந்தி தன் உடலிலிருந்தே நூலெடுத்து வலை பின்னுகிறது..., அதுபோல் கடவுளிடம் இருந்தே பிரபஞ்சம் முழுவதும் வெளிவந்திருக்கிறது'[1] என்று நாம் வேதங்களில் படிக்கிறோம்.

---

1. யதோர்ணநாபி: ஸ்ருஜதே க்ருஹ்ணதே ச...
ததாऽக்ஷராத் ஸம்பவந்தீஹ விச்வம் ||

—முண்டக உபநிடதம், 1.1.7.

காரணமே காரியமாகத் தோன்றியிருக்கிறது என்றால் 'ஜடப்பொருள் அல்லாத, நிரந்தரமான பேரறிவு படைத்த கடவுளிடமிருந்து, ஜடப்பொருளான மந்தமான அறிவற்ற பிரபஞ்சம் தோன்றியது எப்படி? காரணம், தூய்மையாகவும் முழுமையாகவும் இருக்கும்போது, காரியம் வேறுபட்டிருப்பது எப்படி?' என்பதே கேள்வி. இதற்கு விசிஷ்டாத்வைதிகள் என்ன பதில் சொல்கிறார்கள்? அவர்களுடைய கொள்கை மிகவும் விசித்திரமானது.

கடவுள், இயற்கை, ஆன்மா ஆகிய மூன்றும் உண்மையில் ஒரே பொருள்தான் என்கிறார்கள் விசிஷ்டாத்வைதிகள். இயற்கையும் ஆன்மாக்களும் கடவுளின் உடம்பு போலவும் கடவுள்தான் ஆன்மா என்றும் கூறுகிறார்கள் அவர்கள். எனக்கு ஓர் உடலும் ஓர் ஆன்மாவும் இருப்பது போலவே, பிரபஞ்சமும் எல்லா ஆன்மாக்களும் சேர்ந்து கடவுளின் உடலாகவும் கடவுளே ஆன்மாக்களுக்கெல்லாம் ஆன்மாவாகவும் இருக்கிறார். இவ்வாறு கடவுள் பிரபஞ்சத்தின் உபாதான காரணமாக இருக்கிறார். உடல் மாறலாம்; இளமையாகவோ, முதுமையாகவோ, பலம் படைத்ததாகவோ, பலவீனமாகவோ ஆகலாம். அது ஆன்மாவை எந்தவிதத்திலும் பாதிப்பதில்லை. உடலின் மூலம் தன்னை வெளிப்படுத்தியவாறு ஆன்மா எப்போதும் நிரந்தரமாக இருக்கிறது. உடல்கள் வரும், போகும். ஆனால் ஆன்மா மாறுவதில்லை. அதேபோல், பிரபஞ்சம் முழுவதுமே கடவுளின் உடல்தான். அந்த விதத்தில் பிரபஞ்சம் கடவுளே. ஆனால் பிரபஞ்சத்தில் ஏற்படும் மாறுதல்கள் கடவுளை எந்தவிதத்திலும் பாதிப்பதில்லை. இந்த மூலப்பொருளிலிருந்தே அவர் பிரபஞ்சத்தைப் படைக்கிறார். ஒரு கல்பத்தின் முடிவில், அவரது உடல் நுட்பமானதாகி சுருங்கிவிடுகிறது. அடுத்த கல்பத்தின் ஆரம்பத்தில் அது மறுபடியும் விரிவடைந்து, அதிலிருந்து பல்வேறு உலகங்களும் வெளிப்படுகின்றன.

ஆன்மா இயல்பாகவே தூய்மையானது; ஆனால் அதனுடைய செயல்களாலேயே அது தன் தூய்மையை இழந்து விடுகிறது என்று துவைதிகள், விசிஷ்டாத்வைதிகள் இருவருமே ஒப்புக்கொள்கிறார்கள். அதனைத் துவைதிகளைவிட விசிஷ்டாத்வைதிகள் அழகாக வெளியிடுகிறார்கள். ஆன்மாவின் தூய்மையும் பரிபூரணத் தன்மையும் சுருங்கி, பின்னர் விரிகின்றன. அதன் பேரறிவு, தூய்மை, அதற்கே இயல்பான சக்தி எல்லாவற்றையும் மறுபடியும் வெளிப்படுத்தவே நாம் முயன்று

கொண்டிருக்கிறோம் என்று அவர்கள் சொல்கிறார்கள். ஆன்மாக்களுக்குப் பல குணங்கள் இருக்கின்றன. ஆனாலும் அவற்றிற்குச் சர்வ வல்லமையோ, எல்லாம் அறியும் தன்மையோ இல்லை. ஒவ்வொரு தீய செயலும் ஆன்மாவின் இயல்பைச் சுருக்குகிறது. ஒவ்வொரு நற்செயலும் அதை விரிவடையச் செய்கிறது. இந்த ஆன்மாக்கள் எல்லாம் கடவுளின் அம்சங்களே. 'கொழுந்துவிட்டெரியும் நெருப்பிலிருந்து, அதே இயல்புள்ள பல கோடிக்கணக்கான தீப்பொறிகள் சிதறுவதுபோல், எல்லையற்ற பரம்பொருளிடமிருந்து இந்த ஆன்மாக்கள் தோன்றியிருக்கின்றன.'[1] எல்லா ஆன்மாக்களுக்கும் குறிக்கோள் ஒன்றுதான்.

விசிஷ்டாத்வைதிகளின் கடவுளும் சகுணமானவரே. அவர் நற்குணக் களஞ்சியமாக விளங்குகிறார்; பிரபஞ்சத்திலுள்ள எல்லாவற்றிலும் ஊடுருவியிருக்கிறார்; எங்கும் எதிலும் அந்தர்யாமியாக இருக்கிறார். கடவுளே எல்லாமாக இருக்கிறார் என்று சாஸ்திரங்கள் சொல்லும்போது, அவர் எல்லாவற்றிலும் ஊடுருவி நிற்கிறார் என்பதே பொருள். கடவுளே சுவராக இருக்கிறார் என்பது அல்ல, கடவுள் சுவருள் இருக்கிறார் என்பதே பொருள். அவர் இல்லாத துகளோ அணுவோ பிரபஞ்சத்தில் இல்லை. ஆன்மாக்களுக்கு எல்லை உண்டு. அவை எங்கும் நிறைந்தவை அல்ல. அவற்றின் சக்தி விரிவடைந்து அவை நிறைநிலை பெற்றவுடன், பிறப்பு இறப்பு அற்றவை ஆகிவிடுகின்றன; என்றென்றைக்குமாகக் கடவுளுடன் வாழ்கின்றன.

இனி நாம் இறுதித் தத்துவமான அத்வைதத்திற்கு வருவோம். தத்துவம் மற்றும் மதம் என்னும் மலர்களுள், இதுவரை எந்த நாடும் எந்தக் காலத்திலும் உருவாக்கியவற்றுள் மிகச் சிறந்தது என்று இதனை நாம் கருதுகிறோம். இங்கே மனித சிந்தனை அதன் மிக உயர்ந்த சிகரத்தை எட்டுகிறது; ஊடுருவிச் செல்ல முடியாததைப்போல் தோன்றிய மர்மங்களையும் துளைத்து அப்பால் செல்கிறது. இதுதான் அத்வைத வேதாந்தம். புரிந்துகொள்வதற்கு மிகவும் கடினமாக, மிகவும் உயர்ந்த தத்துவமாக இருப்பதால் இது சாதாரண மக்களின் மதமாக இருக்க முடியவில்லை. அதன் பிறப்பிடமான இந்தியாவில்

---

1. யதா ஸுதீப்தாத் பாவகாத் விஸ்ஃபுலிங்கா:
ஸஹஸ்ரஸ: ப்ரபவந்தே ஸ்வரூபா: |
ததா௨க்ஷராத்விவிதா: ஸோம்ய பாவா:
ப்ரஜாயந்தே தத்ர சைவாபியந்தி ||

—முண்டக உபநிடதம், 2.1.1

மூவாயிரம் ஆண்டுகளாகத் தனியரசு செலுத்தி வந்தபோதிலும், சாதாரண மக்களிடம் நுழைய முடியவில்லை. எந்த நாட்டிலும் உள்ள ஆண்களிலும் பெண்களிலும் உள்ள மிகச் சிறந்த சிந்தனையாளர்களால்கூட அத்வைதத் தத்துவத்தைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம் என்பதைப் போகப்போக அறிந்து கொள்வோம்.

நாம் நம்மை மிகவும் பலவீனர்களாக்கிக் கொண்டுவிட்டோம்; நம்மை மிகவும் தாழ்த்திக் கொண்டுவிட்டோம். நாம் பெரிய சாதனைகளைப் புரிந்துவிட்டதாகச் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் இயல்பாகவே நமக்கு யார் துணையாவது வேண்டியிருக்கிறது. எப்போதும் கொழுகொம்பை நாடுகின்ற பலவீனமான கொடிகளைப் போலவே நாம் இருக்கிறோம். 'வசதியான மதம்' ஏதாவது இருக்கிறதா, என்று எத்தனை முறை என்னை எத்தனையோ பேர் கேட்டிருப்பார்கள்! உண்மை வேண்டும் என்று எண்ணுபவர்கள் வெகுசிலரே; அதை அறியும் தைரியமுள்ளவர்கள் இன்னும் குறைவு; உண்மையை உணர்ந்து எல்லா விதத்திலும் அதன்படி நடக்கும் தைரியம் உள்ளவர்களோ மிகமிகக் குறைவு. அது அவர்களது தவறு அல்ல; மூளையின் பலவீனமே. எந்தப் புதிய சிந்தனையும், குறிப்பாக, உயர்ந்த சிந்தனைகள் மூளையில் ஒரு புதிய பாதையை உருவாக்க முயல்வது போலுள்ளது. இந்த முயற்சி, நரம்பு மண்டலத்தையே உலுக்கி, மனிதர்களை நிலைகுலையச் செய்துவிடுகிறது. மனிதர்கள் பிறவியிலிருந்தே ஒருவகையான சூழ்நிலைக்குப் பழக்கப்பட்டு விடுகிறார்கள். அது மட்டுமல்லாமல், பழங்கால மூட நம்பிக்கைகள், பரம்பரை மூட நம்பிக்கைகள், இன மூட நம்பிக்கைகள், நகர மூட நம்பிக்கைகள், நாட்டு மூட நம்பிக்கைகள், இவற்றைத் தவிர மனிதனுக்குள்ளே இயற்கையாகவே ஊறிக்கிடக்கும் அளவில்லாத மூட நம்பிக்கைகள் ஆகிய எல்லாவற்றிலிருந்தும் அவன் விடுபட வேண்டியுள்ளது. ஆனாலும் உண்மையைப் புரிந்துகொண்டு அதை ஏற்று, வாழ்க்கையிலும் அதைக் கடைசிவரை பின்பற்றும் துணிவு மிக்க வீரர்களும் சிலர் இருக்கிறார்கள்.

அத்வைதம் தீர்மானமாகக் கூறுவது என்ன? கடவுள் என்று ஒருவர் இருப்பாரானால், பிரபஞ்சத்தின் நிமித்த காரணமும் உபாதான காரணமும் அவரே. படைப்பவர் மட்டுமல்ல, படைப்பும் அவரே. அவரே இந்தப் பிரபஞ்சம். அது எப்படி முடியும்? தூய, உணர்வுமயமான கடவுள் பிரபஞ்சமாக

ஆனாரா? ஆம். அப்படித்தான் தோன்றுகிறது. அறியாமை மிக்கவர்கள் எதைப் பிரபஞ்சமாகப் பார்க்கிறார்களோ, அது உண்மையில் இல்லை. நீங்கள், நான், நாம் பார்க்கும் பொருட்கள் இவையெல்லாம் என்ன? எல்லாம் சுய மனோவசியம் தான். இருப்பது ஒன்றே. அது எல்லையற்றது; எப்போதும் ஆனந்தமயமானது. இருக்கின்ற அந்த ஒரு பொருளிலேயே நாம் இந்தப் பல்வேறு கனவுகளையெல்லாம் கண்டு கொண்டிருக்கிறோம்.

உள்ளது ஆன்மா ஒன்றுதான். அது எல்லாவற்றையும் கடந்தது, எல்லையற்றது. நாம் அறிந்த, அறியக்கூடிய எல்லாவற்றிற்கும் அப்பாற்பட்டது. அதிலேயே, அதன்மூலமாகவே நாம் பிரபஞ்சத்தைக் காண்கிறோம். இருக்கும் உண்மை அது ஒன்றுதான். இந்த மேஜை அதுதான். என் முன்னால் இருக்கும் கூட்டம் அதுதான். சுவரும் அதுதான். நாமரூபத்தை எடுத்து விட்டால் எல்லாமே அதுதான். மேஜை என்ற பெயரையும் மேஜை உருவத்தையும் எடுத்துவிட்டால் எஞ்சுவது அதுதான். வேதாந்தி அதை அவன் என்றோ அவள் என்றோ அழைப்பதில்லை. இவையெல்லாம் கட்டுக்கதைகள்; மனித மூளையின் மயக்கங்கள்.

ஆன்மாவில் பால்வேறுபாடு இல்லை. மன மயக்கத்திற்கு அடிமையாகி, மிருகங்கள்போல் ஆகிவிட்டவர்கள்தான் ஆணையோ பெண்ணையோ பார்க்கிறார்கள். மனித தெய்வங்கள் ஆணையோ பெண்ணையோ பார்ப்பதில்லை. எல்லாவற்றையும் கடந்தவர்களுக்குப் பால்வேறுபாடு பற்றிய எண்ணம் எப்படி வரும்? எல்லோருமே எல்லாமே ஆன்மாதான்; ஆண்பெண் பேதமற்ற, தூய்மையான, எப்போதும் ஆனந்தமயமான ஆன்மாதான். ஜடப்பொருட்களான பெயர், உருவம், உடல் இவைதான் இந்த வேறுபாடுகளை ஏற்படுத்துகின்றன. பெயர், வடிவம் ஆகிய இரண்டு வேறுபாடுகளையும் நீக்கிவிட்டால், பிரபஞ்சம் முழுவதும் ஒன்றுதான்; இரண்டு என்பதே இல்லை; எங்குமே ஒன்றுதான். நீங்களும் நானும் ஒன்றே. இயற்கையோ கடவுளோ பிரபஞ்சமோ இல்லை. உள்ளது ஒன்றே. அது எல்லையற்றது. எல்லாமே நாம ரூபங்களால் அதிலிருந்து உருவாக்கப்பட்டுள்ளன. அறிபவனை அறிவது எப்படி? அது அறிய முடியாதது; அறிவுக்கு எட்டாதது. நமது ஆன்மாவை நாமே எப்படிப் பார்க்க முடியும்? அதைப் பிரதிபலிக்கத்தான் முடியும். ஆகவே நிரந்தரமான பரம்பொருளின்

பிரதிபலிப்பே பிரபஞ்சம். இதைப் பிரதிபலிக்கும் கண்ணாடி களின் நல்ல மற்றும் தீய இயல்புக்கேற்ப பிரதிபலிப்பும் மாறு பட்டுத் தெரிகிறது. ஒரு கொலைகாரனில் பிரதிபலிக்கும்போது, ஆன்மா தூய்மையற்றது என்று பொருளல்ல; பிரதிபலிக்கும் கண்ணாடிக்கு அந்தத் தீய தன்மை இருக்கிறது என்பதே பொருள். ஒரு மகானில் பிரதிபலிக்கும்போது, கண்ணாடி தூய்மையாக இருப்பதால், பிரதிபலிப்பும் தூய்மையாக இருக்கிறது. ஆன்மா இயல்பாகவே தூய்மையாகத்தான் இருக் கிறது. சாதாரணமான புழுவிலிருந்து, மிக உயர்ந்த நிறைமனிதன் வரையிலும் தன்னைப் பிரதிபலித்துக் கொள்வது இந்த ஒன்றே யான ஆன்மாதான்.

பௌதீகரீதியாக, மனரீதியாக, தார்மீகரீதியாக, ஆன்மீக ரீதியாக இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே தனி ஒருமைதான். இந்த ஒன்றையே நாம் பலவாகக் கண்டு, அதன்மீது பல உருவங் களைக் கற்பனை செய்து கொள்கிறோம். மனிதனாகத் தன்னை எல்லைப்படுத்திக் கொண்ட உயிருக்கு, இந்த உலகம் மனிதர்களின் உலகமாகத் தெரிகிறது. இன்னும் உயர்ந்த நிலையில் இருப்பவர்களுக்கு உலகம் சொர்க்கமாகத் தெரியலாம். பிரபஞ்சத்தில் இருப்பது ஒரே ஆன்மாதான்; இரண்டல்ல. அது வருவதுமில்லை, போவதுமில்லை. அது பிறக்கவுமில்லை, இறப்பதுமில்லை. அதற்கு மறுபிறவியும் இல்லை. அது எப்படிச் சாக முடியும்? அது எங்கே போக முடியும்? சொர்க்கங்கள், பூமிகள் என்று எல்லா இடங்களுமே மனத்தின் வீண் கற்பனைகள். அவை இல்லாதவை; அவை முன்பும் இல்லை, இப்போதும் இல்லை, இனி இருக்கவும் செய்யாது.

நான் எங்கும் நிறைந்தவன்; அழிவற்றவன். நான் எங்கே போக முடியும்? நான் ஏற்கனவே இல்லாத இடம் எது? நான் இயற்கை என்னும் இந்தப் புத்தகத்தைப் படித்துக் கொண்டி ருக்கிறேன். ஒரு பக்கத்தை முடிக்கிறேன். அந்தப் பக்கத்தைத் திருப்புகிறேன். அதனுடன் ஒரு வாழ்க்கைக் கனவும் முடிகிறது. வாழ்க்கையின் அடுத்த பக்கத்தைப் படிக்கிறேன், அடுத்த வாழ்க்கைக் கனவு வருகிறது, அதுவும் முடிகிறது. இப்படியே தொடர்ந்து செல்கிறது. புத்தகத்தைப் படித்து முடித்தவுடன், அதை ஒருபுறமாக வைத்துவிட்டு, நான் தனியாக விலகி நிற் கிறேன். பின்னர் புத்தகத்தை எறிந்துவிடுகிறேன். எல்லாம் முடிந்து விடுகின்றன.

அத்வைதி போதிப்பது என்ன? இதுவரை இருந்த, இனி மேல் இருக்கப் போகின்ற எல்லா தேவர்களையும் அவன் சிம் மாசனத்திலிருந்து இறக்கிவிடுகிறான். சூரியனைவிட, சந்திரனை விட, சொர்க்கங்களைவிட உயர்ந்த மனித ஆன்மாவை அந்தச் சிம்மாசனத்திற்கு அதிபதியாக்குகிறான். மனிதனாகத் தோன்று கின்ற அந்த ஆன்மாவின் சிறப்பை எந்தப் புத்தகத்தாலும், எந்த சாஸ்திரத்தாலும், எந்த விஞ்ஞானத்தாலும் கற்பனைகூடச் செய்ய முடியாது. அந்த ஆன்மா ஒன்றுதான் என்றும் சிறப்பு வாய்ந்ததாக இருந்த ஒரே தெய்வம். முன்பு இருந்த, இப்போது இருக்கின்ற, இனிமேல் இருக்கப் போகின்ற ஒரே கடவுள் அது தான். ஆகவே நான் வழிபட வேண்டியது என் ஆன்மாவைத் தவிர வேறு யாரையும் அல்ல. 'நான் என் ஆன்மாவையே வழி படுகிறேன்' என்று அத்வைதி கூறுகிறான். நான் யாருக்கு அடி பணிய வேண்டும்? எனது ஆன்மாவிற்கு மட்டுமே. உதவி தேடி யாரிடம் செல்வேன்? எல்லையற்ற ஆன்மாவாகிய எனக்கு யாரால் உதவி செய்ய முடியும்? இவையெல்லாம் முட்டாள் தனமான கனவுகள்! பொய்த் தோற்றங்கள். இதுவரை யாராவது யாருக்காவது உதவி செய்திருக்கிறார்களா? இல்லை.

ஒரு துவைதி, பலவீனமான மனிதன், விண்வெளிக்கு அப்பாலுள்ள ஏதோ ஒன்றிடமிருந்து உதவியை எதிர்பார்த்து, அழுது கதறுகிறான். தனக்குள்ளேயே அந்த விண்வெளி இருப் பதை உணராததாலேயே அவன் அவ்வாறு செய்கிறான். அவன் வானத்திலிருந்து உதவியை எதிர்பார்க்கிறான். உதவி வருகிறது. அது வருவது நமக்குத் தெரிகிறது, ஆனால் அது அவனுள்ளி ருந்தேதான் வருகிறது. வெளியிலிருந்து வருவதாக அவன் தவறாக நினைத்துக் கொள்கிறான். படுக்கையில் கிடக்கின்ற நோயாளிக்கு யாரோ கதவைத் தட்டும் சத்தம் கேட்கிறது. அவன் எழுந்து, கதவைத் திறக்கிறான், வெளியே யாரும் இல்லை. படுக்கையில் சென்று படுக்கிறான், மீண்டும் தட்டப்படும் சத்தம் கேட்கிறது. எழுந்து சென்று கதவைத் திறக்கிறான். அங்கே யாரும் இல்லை. கடைசியில் தன்னுடைய இதயத் துடிப்பையே, கதவு தட்டும் சத்தமாக நினைத்ததை அவன் உணர் கிறான். இவ்வாறு தனக்கு வெளியே பல தெய்வங்கள் இருப்ப தாக நினைத்து, வீணாகத் தேடும் முயற்சியில் ஈடுபட்டிருந்த மனிதன், எங்கே ஆரம்பித்தானோ அங்கேயே திரும்பி வரு கிறான். அதுதான் மனித ஆன்மா. மலைகளிலும் காடுகளிலும் அருவிகளிலும் அவன் தேடிய, கோயில்கள் தோறும் தேடிய,

சர்ச்சுகளில் தேடிய, சொர்க்கங்களில் அவன் தேடிய கடவுள், சொர்க்கத்தில் அமர்ந்துகொண்டு உலகை ஆள்வதாக அவன் கற்பனை செய்துகொண்டிருந்த கடவுள், உண்மையில், அவனுடைய ஆன்மாவேதான் என்பதை உணர்கிறான். நானே அவன்; அவனே நான். நானேதான் கடவுளாக இருந்தேன்; அற்ப மனிதனான நான் எப்போதுமே இருக்கவில்லை.

அது சரி. அந்தப் பூரணப் பரம்பொருள் எப்படி மனமயக்கத்திற்கு உட்பட்டார்? அவர் மனமயக்கத்திற்கு உட்படவே இல்லை. பூரணப் பரம்பொருள் எப்படிக் கனவு காண முடியும்? அவர் கனவே காணவில்லை. உண்மை, கனவு காண்பதில்லை. இந்தப் பொய்த் தோற்றம் எங்கிருந்து எழுந்தது என்ற கேள்வியே அபத்தமானது. பொய்த் தோற்றம் பொய்த் தோற்றத்தில் இருந்தே எழுகிறது. உண்மையைக் காண்கின்ற அந்தக் கணமே பொய்த் தோற்றம் மறைந்துவிடுகிறது. பொய்த் தோற்றம் எப்போதும் ஆதாரமாகக் கொண்டிருப்பது பொய்த் தோற்றத்தைத்தான். கடவுள், அதாவது உண்மை, அதாவது ஆன்மா ஒருபோதும் பொய்த் தோற்றத்திற்கு இடமாவதில்லை. நாம் ஒருபோதும் மனமயக்கத்திற்கு உள்ளாகவில்லை. அந்த மயக்கம் நமக்கு உள்ளே, நமக்கு முன்னால் இருக்கிறது. ஒரு மேகத்தைப் பார்க்கிறோம்; வேறு ஒரு மேகம் வந்து அதைத் தள்ளிவிட்டு, அந்த இடத்தை ஆக்கிரமிக்கிறது. இன்னுமொரு மேகம் வந்து இதைத் தள்ளிவிடுகிறது. எப்போதும் நீலமான வானம் இருக்கிறது. பல நிறங்கள் கொண்ட மேகங்கள் அதன் முன் வருகின்றன. சிறிது நேரம் இருக்கின்றன, பின்னர் விலகிச் செல்கின்றன. இவற்றால் எல்லாம் வானம் பாதிக்கப்படுவதே இல்லை. அதைப் போலவே, நாமும் எப்போதும் தூயவர்கள், எப்போதும் முழுமையானவர்கள். நாமே பிரபஞ்சத்தின் கடவுளர்கள், இல்லையில்லை, இரண்டு இல்லை, இருப்பதே ஒன்றுதானே! நீங்களும் நானும் என்று சொல்வதே தவறு; 'நான்' என்றுதான் சொல்ல வேண்டும்.

கோடிக்கணக்கான வாய்களின் மூலமாக உண்பது நானே; எனக்குப் பசி ஏது? எண்ணற்ற கைகளின் மூலமாக வேலை செய்வது நானே; நான் எப்படிச் செயலற்று இருக்க முடியும்? இந்தப் பிரபஞ்சம் முழுவதன் வாழ்க்கை முழுவதிலும் வாழ்வது நானே; எனக்கு மரணம் ஏது? நான் எல்லா வாழ்வையும் கடந்தவன், எல்லா சாவையும் கடந்தவன். சுதந்திரத்தைத் தேடி நான் எங்கே போவது? நான் இயல்பாகவே சுதந்திரமானவன்.

பிரபஞ்சத்தின் கடவுளான என்னை யார் கட்டுப்படுத்த முடியும்? பிரபஞ்சம் முழுவதும் நிறைந்திருக்கும் ஒரே பொருளான எனது மகிமையை விளக்க முயல்கின்ற சிறுசிறு வரைபடங்களே இந்த உலகின் சாஸ்திரங்கள் எல்லாம். இந்தப் புத்தகங்களால் எனக்கு என்ன பயன்? இவ்வாறு சொல்கிறான் அத்வைதி.

'உண்மையை அறிந்து, இந்தக் கணமே சுதந்திரமாக இரு.' அப்போது இருளெல்லாம் விலகிவிடும். எப்போது மனிதன் தன்னைப் பிரபஞ்சத்தின் எல்லையற்ற பொருளுடன் ஒன்றாகக் காண்கிறானோ, எப்போது அவனிடம் வேறுபாட்டு உணர்ச்சி இல்லாமல் போகுமோ, எப்போது ஆண்கள், பெண்கள், தெய்வங்கள், தேவதைகள், பிராணிகள், தாவரங்கள், ஏன், இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே அந்த ஒருமையில் கரையுமோ அப்போது எல்லா பயமும் அவனிடமிருந்து அகல்கிறது. நான் என்னையே வருத்திக்கொள்ள முடியுமா? நான் என்னையே கொல்ல முடியுமா? நான் என்னையே காயப்படுத்த முடியுமா? யாரைப் பார்த்து நான் பயப்பட வேண்டும்? நம்மைப் பார்த்தே நாம் பயப்பட முடியுமா? அப்போதுதான் எல்லா துன்பமும் மறையும். எனக்கு எது துன்பம் தர முடியும்? பிரபஞ்சத்தில் இருப்பது நான் மட்டுமே. அப்போது பொறாமைகள் எல்லாம் மறையும்; யாரைப் பார்த்துப் பொறாமைப்படுவது? என்னைப் பார்த்தேயா? அப்போது எல்லா தீய எண்ணங்களும் மறையும். யாருக்கு எதிராக என்னிடம் தீய எண்ணம் இருக்க முடியும்? எனக்கு எதிராகவா? பிரபஞ்சத்தில் இருப்பது நான் மட்டுமே.

ஞானம் பெற இதுதான் ஒரே வழி என்று வேதாந்தி கூறுகிறான். வேறுபாட்டை அழித்து ஒழியுங்கள். பன்மை உள்ளது என்ற மூட நம்பிக்கையை ஒழியுங்கள். 'பன்மை நிறைந்த உலகில் அந்த ஒன்றைக் காண்பவர் யாரோ, உணர்வற்ற இந்தப் பிரபஞ்சத்தில் அந்த ஒரே உணர்வுப் பொருளைக் காண்பவர் யாரோ, நிழல்கள் நிறைந்த இந்த உலகத்தில் சத்தியத்தைக் காண்பவர் யாரோ, அவனுக்கு மட்டுமே நிரந்தரமான அமைதி கிட்டுகிறது; வேறு யாருக்கும் இல்லை; வேறு யாருக்கும் இல்லை.'[1]

---

1. நித்யோऽநித்யானாம் சேதனச்சேதனானாம்
ஏகோ பஹூனாம் யோ விததாதி காமான் ।
தமாத்மஸ்தம் யேऽனுபச்யந்தி தீரா:
தேஷாம் சாந்தி: சாச்வதீ: நேதரேஷாம் ॥

—கடோபநிடதம், 2. 2. 13

கடவுளைப்பற்றிய இந்திய மதச் சிந்தனையின் மூன்று முக்கியமான படிகளின் முக்கியமான அம்சங்கள் இவை. பிரபஞ்சத்திற்கு வெளியே உள்ள சகுணமான கடவுள் என்ற கருத்துடன் அது ஆரம்பித்தது. கடவுள், பிரபஞ்சத்திற்கு வெளியே இருக்கிறார் என்பதிலிருந்து, பிரபஞ்சத்தின் உள்ளே இருக்கிறார், எல்லா பொருட்களிலும் அந்தர்யாமியாக இருக்கிறார் என்ற கருத்திற்கு உயர்ந்தது. கடைசியில், கடவுளும் இந்த ஆன்மாவும் வெவ்வேறல்ல, ஒன்றேதான்; அதன் வெளிப்பாடுதான் பிரபஞ்சத்திலுள்ள பல்வேறு தோற்றங்கள் என்ற உயர்ந்த கருத்தில் நிறைவுறுகிறது. வேதங்களின் அறுதி வாக்கு இதுதான். துவைதமாக ஆரம்பித்து, விசிஷ்டாத்வைதமாகத் தொடர்ந்து, அத்வைதமாக முடிந்திருக்கிறது. உலகத்தில் மிகச் சிலரே இந்தக் கடைசி முடிவுக்கு வருவார்கள். அதிலும் சிலரே இதை நம்புவார்கள். மிகமிகச் சிலரே இதைப் பின்பற்றும் துணிவு உடையவர்களாக இருப்பார்கள் என்பது நமக்குத் தெரியும்.

ஆனாலும் பிரபஞ்சத்திலுள்ள தார்மீகம், ஒழுக்கம், ஆன்மீகம் எல்லாவற்றிற்கும் விளக்கம் அத்வைதத்தில் உள்ளது. பிறருக்கு நன்மை செய்யுங்கள் என்று எல்லோரும் சொல்வது எதனால்? இதற்கு விளக்கம் என்ன? சான்றோர்கள் மனித குலத்தின் சகோதரத்துவத்தைப்பற்றி ஏன் பிரச்சாரம் செய்தார்கள்? இன்னும் மேலானோர் உயிர்கள் அனைத்தின் சகோதரத்துவத்தைப்பற்றி ஏன் பிரச்சாரம் செய்தார்கள்? ஏனெனில் அறிவுக்கு ஒவ்வாத, தனிப்பட்ட மூடநம்பிக்கைகளின் ஊடே, வேறுபாடுகளை மறுத்து, பிரபஞ்சமே ஒன்றுதான் என்பதை வலியுறுத்திய வண்ணம், ஆன்மப் பேரொளி தெரிந்தோ தெரியாமலோ அவர்களிடம் இடையீடற்றுப் பிரகாசித்துக் கொண்டிருந்ததுதான் காரணம்.

இனி, அத்வைதம் நமக்கு ஒரேபிரபஞ்சக் கருத்தைத் தருகிறது. புலன்களின் மூலமாகப் பார்க்கும்போது ஜடப்பொருளாகவும், அறிவின் மூலமாகப் பார்க்கும்போது ஆன்மாக்களாகவும், உணர்வின் வழியாகப் பார்க்கும்போது கடவுளாகவும் அதுவே தெரிகிறது. தீமை என்று உலகம் சொல்கின்ற முகமூடியைப் போட்டுக் கொண்டவனுக்குப் பிரபஞ்சம் பயங்கரமான இடமாகத் தெரிகிறது. இன்பத்தை நாடுகின்ற மனிதனுக்கு அது உருமாறி, சொர்க்கமாகத் தெரிகிறது. நிறைநிலையை அடைந்தவனுக்கோ எல்லாம் மறைந்து அது அவனது ஆன்மாவாக விளங்குகிறது.

இப்போது சமுதாயம் இருக்கும் நிலையில், இந்த மூன்று நிலைகளுமே அவசியம். இவற்றில், ஒன்று மற்றொன்றிற்கு முரண்பாடானது அல்ல; ஒன்று மற்றொன்றை நிறைவு செய்கிறது. அத்வைதியோ விசிஷ்டாத்வைதியோ துவைதம் தவறு என்று சொல்வதில்லை. அது சரியான கருத்துதான்; ஆனால் சற்று தாழ்ந்த கருத்து. அதுவும் உண்மையை நோக்கித்தான் போகிறது. ஒவ்வொருவரும் தங்கள் கருத்துப்படி இந்தப் பிரபஞ்சத்தைக் கற்பனை செய்துகொள்ளட்டும். யாரும் மற்றவர்களுடைய கருத்துக்களை மறுத்து, அவர்களைப் புண்படுத்த வேண்டாம். மனிதனை அவனிருக்கும் நிலையிலேயே ஏற்றுக் கொள்ளுங்கள். முடிந்தால் அவர்கள் மேல்நிலைக்கு உயர உதவுங்கள். ஆனால் அவர்களைப் புண்படுத்தாதீர்கள், அழிக்க முயற்சிக்காதீர்கள். எல்லோருமே காலப்போக்கில் உண்மையை அடைவார்கள். 'இதயத்தில் உள்ள எல்லா ஆசைகளையும் துறந்துவிட்டால், அழியும் தன்மை உள்ள நாம் அழியாத் தன்மை பெறுவோம்.'[1] அப்போது மனிதனே கடவுளாகி விடுவான். ❑

---

1. யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேऽஸ்ய ஹ்ருதி ச்ரிதா: ।
அத மர்த்யோऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமச்னுதே ॥
—கடோபநிடதம், 2. 3. 14

# 14. உண்மையான மனிதனும் தோன்றும் மனிதனும்

நாம் இங்கே இருக்கிறோம், சிலவேளைகளில் நமது பார்வை வெகுதூரம் ஊடுருவிச் செல்கிறது. சிந்திக்க ஆரம்பித்த நாளிலிருந்து மனிதன் இதைச் செய்து கொண்டிருக்கிறான். எப்போதும் அவன் முன்னோக்கியே பார்க்கிறான். உடல் அழிந்த பின், தான் எங்கே போவோம் என்பதை அறிய விரும்புகிறான். இந்தப் பிரச்சினைக்கு விளக்கம் கூறும் வகையில் பல கொள்கைகள் தோன்றியிருக்கின்றன. பல கோட்பாடுகள் வகுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில ஒதுக்கப்பட்டன, சில ஏற்றுக்கொள்ளப்பட்டன. மனிதன் உலகில் இருக்கும்வரையில், அவனுக்குச் சிந்தனைச் சக்தி இருக்கும்வரையில் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கும். இந்தக் கொள்கைகள் ஒவ்வொன்றிலும் சிறிது உண்மை இருக்கிறது. கணிசமான அளவு உண்மை அல்லாத கொள்கைகளும் இருக்கின்றன. அவ்வப்போது இந்தியத் தத்துவ ஞானியரிடமிருந்து எழுந்த இந்தக் கருத்துக்கள் பலவற்றையும் இயைபுபடுத்தி உங்கள் முன் வைக்க முயல்கிறேன். மனஇயல்வாதிகள், தத்துவ மேதைகள், இவர்களின் சிந்தனையோடு, முடிந்தால், நவீன விஞ்ஞானிகளின் சிந்தனையையும் இணைத்து விளக்க முயல்கிறேன்.

வேதாந்தத் தத்துவத்தின் ஒரே குறிக்கோள் ஒருமையைத் தேடுவதுதான். குறிப்பான ஒன்றை (particular) இந்து மனம் நாடுவதில்லை; பொதுவான ஒன்றை, இல்லையில்லை, பிரபஞ்சம் தழுவிய ஒன்றை மட்டுமே அவர்கள் சிந்திக்கிறார்கள். 'எந்த ஒன்றை அறிந்துகொள்வதால், மற்ற எல்லாவற்றையும் அறிய முடியும்?'[1] இதுதான் வேதாந்தத்தின் ஒரே குறிக்கோள். 'ஒரு களிமண் கட்டியின் இயல்பை அறிவதால், களிமண்ணால் ஆன பொருட்கள் அனைத்தின் இயல்பையும் அறிய முடிவதைப்போல்'[2], எதை அறிவதன்மூலம், முழுப்

---

1. கஸ்மின் நு பகவோ விஜ்ஞாதே ஸர்வமிதம் விஜ்ஞாதம் பவதி?
—முண்டக உபநிடதம், 1. 1. 3.

2. சாந்தோக்கிய உபநிடதம், 6. 1. 4.

பிரபஞ்சத்தையுமே அறிய முடியும்? வேதாந்திகள் தேடுவது அது ஒன்றையே.

பிரபஞ்சம் முழுவதுமே ஒரே பொருளால் ஆக்கப்பட்டது என்பது இந்துத் தத்துவ அறிஞர்களின் கருத்து. அதனை அவர்கள் ஆகாசம் என்கிறார்கள். நாம் நம்மைச் சுற்றிக் காண்கின்ற, உணர்கின்ற, தொடுகின்ற, சுவைக்கின்ற எல்லாமே இந்த ஆகாசத்தின் வெவ்வேறு வெளிப்பாடுகள்தாம். அது எங்கும் நிறைந்தது; நுட்பமானது. திடம், திரவம், வாயு, உருவம், உடல், பூமி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் என்று நாம் சொல்பவை எல்லாமே இந்த ஆகாசத்தால் ஆனவை.

இந்த ஆகாசத்தின்மீது செயல்பட்டு அதிலிருந்து பிர பஞ்சத்தைப் படைக்கும் சக்தி எது? ஆகாசத்தோடு கூடவே பிரபஞ்ச சக்தி ஒன்று இருக்கிறது. ஆற்றலாக, கவர்ச்சி சக்தியாக, ஏன், எண்ணமாகக்கூட வெளிப்படுகின்ற சக்திகள் எல்லாமே, இந்துக்கள் பிராணன் என்று சொல்கின்ற அந்த ஒரே சக்தியின் வெளிப்பாடுகளே. இந்தப் பிராணன் ஆகாசத்தின்மீது செயல் பட்டு பிரபஞ்சத்தைப் படைக்கிறது. ஒரு கல்பத்தின் ஆரம்பத் தில், இந்தப் பிராணன், எல்லையற்ற பெருங்கடலான ஆகாசத் தில் தூங்குவது போலுள்ளது. அது ஆரம்பத்தில் அசைவற்று இருந்தது. பிறகு பிராணனின் செயலால் ஆகாசத்தில் இயக்கம் ஏற்படுகிறது. பிராணன் இயங்க ஆரம்பித்ததும், ஆகாசப் பெருங்கடலிலிருந்து பல்வேறு வான மண்டலங்கள், சூரியர்கள், சந்திரர்கள், நட்சத்திரங்கள், பூமி, மனிதர்கள், மிருகங்கள், தாவரங்கள் என்று பல்வேறு சக்திகளின் வெளிப்பாடுகளும் இயற்கை நிகழ்ச்சிகளும் தோன்றுகின்றன.

வேதாந்திகளின் கொள்கைப்படி, சக்தி எந்தவிதமாக வெளிப்பட்டாலும் அது பிராணன்; பொருள் எந்த உருவில் வெளிப்பட்டாலும் அது ஆகாசம். இந்தக் கல்பம் முடியும் போது, திடமெல்லாம் திரவமாகும்; திரவமெல்லாம் வாயு வாகும்; வாயுவெல்லாம் இன்னும் நுட்பமான, ஒரேமாதிரி யான வெப்ப அலைகளாக மாறும். இறுதியில் எல்லாமே ஆகாசத்தில் ஒடுங்கிவிடுகின்றன. கவர்ச்சி சக்தி, விலக்கு சக்தி, இயக்கம் போன்ற எல்லா சக்திகளும் ஆதி பிராணனில் ஒடுங் குகின்றன. பிறகு இந்தப் பிராணன் ஒரு குறிப்பிட்ட காலம் தூங்குவதாகச் சொல்லப்படுகிறது. மீண்டும் விழித்துக்கொண்டு எல்லாவற்றையும் வெளிப்படுத்த ஆரம்பிக்கிறது. அந்தக் கல்பம் முடிந்தவுடன் மீண்டும் ஒடுக்கம். இவ்வாறு, படைப்பு என்பது

அலையைப்போல், மேலும் கீழுமாக, முன்னும் பின்னுமாக நடைபெற்றுக் கொண்டேயிருக்கிறது. தற்கால விஞ்ஞான மொழியில் சொல்வதானால், அது ஒரு காலத்தில் இயக்கம் அற்றும், மற்றொரு காலத்தில் இயக்கம் பெற்றும் இருக்கிறது. இவ்வாறு மாறிமாறி எல்லையற்ற காலமாக நடந்துவருகிறது.

இந்த ஆராய்ச்சியும் முழுமையானதல்ல. தற்கால பௌதீக விஞ்ஞானத்திற்குக்கூட இந்த அளவு தெரிந்திருக்கிறது. இதற்கு அப்பால் பௌதீக விஞ்ஞானம் செல்ல முடியாது. அதற்காக, இந்த ஆராய்ச்சி அங்கே நின்றுவிடுவதில்லை. எதை அறிவதன்மூலம் எல்லாவற்றையும் அறிய முடியுமோ, அதை நாம் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. பிரபஞ்சம் முழுவதையுமே ஜடப்பொருள், சக்தி என்ற இரு பகுதிகளாக நாம் பிரித்து விட்டோம். பண்டைய இந்தியத் தத்துவ ஞானியரின் மொழியில் இவையே ஆகாசம் மற்றும் பிராணன். இந்த ஆகாசமும் பிராணனும் எதனுடைய வெளிப்பாடுகள் என்று கண்டு பிடிப்பதே அடுத்த படி. இந்த இரண்டையுமே இவற்றைவிட மேலான பிரபஞ்ச மனமாகிய மகத் என்பதில் அடக்கிவிடலாம். பிரபஞ்சம் முழுவதும் நிறைந்திருக்கும் எண்ண ஆற்றலான மகத்திலிருந்தே இந்த இரண்டும் தோன்றுகின்றன. எண்ணம் என்பது ஆகாசம், பிராணன் ஆகிய இரண்டையும்விட நுட்பமான வெளிப்பாடு. எண்ணமே தன்னை ஆகாசமாகவும் பிராணனாகவும் பிரித்துக் கொள்கிறது. ஆரம்பத்தில் பிரபஞ்சம் தழுவிய எண்ணம் இருந்தது. இது வெளிப்பட்டு, மாற்றம் அடைந்து, பரிணமித்து, ஆகாசமாகவும் பிராணனாகவும் ஆகியது. இவை இரண்டின் சேர்க்கையாலேயே பிரபஞ்சம் முழுவதும் தோன்றியிருக்கிறது.

அடுத்து நாம் மனஇயலுக்கு வருவோம். நான் உங்களைப் பார்க்கிறேன். அந்தப் புறஉணர்ச்சியைக் கண்கள் என்னிடம் கொண்டு வருகின்றன. அது உணர்ச்சி நரம்புகளின்மூலம் மூளையை அடைகிறது. கண்கள், பார்வைப் புலன்கள் அல்ல. அவை வெறும் வெளிப் பொறிகள் மட்டுமே. ஏனென்றால் மூளைக்கு உணர்ச்சிகளைக் கொண்டுபோகும் உண்மையான புலன்கள் அழிந்துவிட்டால், எனக்கு இருபது கண்கள் இருந் தாலும், என்னால் உங்களைப் பார்க்க முடியாது. என்னுடைய விழித்திரையில் உருவம் நன்றாக விழலாம், ஆனாலும் உங்களை நான் பார்க்க முடியாது. ஆகவே புலனும் அதன் பொறியும் வெவ்வேறாகும். பொறிகளாகிய கண்களுக்குப் பின்னால்

பார்வைப் புலன் இருக்க வேண்டும். எல்லா உணர்ச்சிகளும் இதுபோல்தான். மூக்கு, வாசனையை அறியும் புலனல்ல, அது வெறும் பொறி; அதற்குப் பின்னால் வாசனைப் புலன் இருக்கிறது. ஒவ்வொரு புலன் உணர்ச்சியையும் நாம் அறிய, முதலில், பௌதீக உடலில் வெளிப் பொறிகள் இருக்கின்றன; அடுத்து, அதே உடலில் பொறிகளுக்குப் பின்னால் புலன்கள் இருக்கின்றன. இவையெல்லாம் போதாது.

நீங்கள் என் பேச்சை உன்னிப்பாகக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். எங்கிருந்தோ ஒரு மணியோசை கேட்கிறது. உங்களுக்கு அது ஒருவேளை கேட்காமல் போகலாம். அந்தச் சத்தத்தின் ஒலி அலைகள் உங்கள் காதுகளை எட்டின, செவிப் பறைகளைத் தாக்கின, அந்தப் பதிவுகள் மூளைக்கும் எடுத்துச் செல்லப்பட்டன. மூளையை அடைவதுதான் கடைசிநிலை என்றால், சத்தம் ஏன் உங்களுக்குக் கேட்கவில்லை? எனவே வேறு ஏதோ ஒன்று தேவைப்படுகிறது. அது மனம். மனம் அந்தப் புலனோடு ஒட்டவில்லை. மனம் புலனிலிருந்து தன்னை விலக்கிக் கொண்டிருக்கும்போது புலன் என்ன உணர்ச்சியைக் கொண்டுவந்தாலும் அது அவற்றை ஏற்காது. அது புலனோடு தொடர்பு கொள்ளும்போதுதான் அதனால் புலனுணர்ச்சிகளை ஏற்றுக்கொள்ள முடியும். இப்போதும் விஷயம் முடியவில்லை.

பொறிகள் உணர்ச்சிகளை வெளியிலிருந்து கொண்டு வரும். புலன்கள் அவற்றை உள்ளே எடுத்துச் செல்லும். மனமும் புலனுடன் தொடர்பு கொண்டிருக்கும். ஆனாலும் நாம் எதையும் உணராமல் போகலாம். நாம் உணர்வதற்கு மற்றோர் அம்சம் அவசியம். அது அகத்தின் எதிர்ச் செயல். எதிர்ச் செயலைத் தொடர்ந்துதான் அறிவு தோன்றுகிறது. வெளியே இருப்பவை என் மூளைக்குச் செய்தி அனுப்புகின்றன. என் மனம் அதை வாங்கி புத்திக்கு முன் வைக்கிறது. புத்தி முந்தைய அனுபவங்களோடு அதை ஒப்பிட்டு, எதிர்ச் செயல் புரிகிறது. அந்த எதிர்ச் செயலுக்குப் பிறகுதான் உணர்ச்சி முழுமையடைகிறது. இங்கே சங்கல்பமும் உள்ளது. எதிர்ச்செயல் புரியும் மன நிலையே புத்தி. இப்போதும் விஷயம் முடியவில்லை.

இன்னொரு படி தேவைப்படுகிறது. என்னிடம் ஒரு காமிரா இருப்பதாக வைத்துக் கொள்வோம். திரையில் படத்தைக் காட்ட நான் விரும்புகிறேன். அதற்கு என்ன செய்ய வேண்டும்? ஒளிக்கதிர்களை அந்தக் கருவியின் மூலம் செலுத்திப்

படம் திரையில் விழுமாறு செய்ய வேண்டும். அசையாத திரை இதற்குத் தேவைப்படுகிறது. அசைகின்ற ஒன்றின்மீது படம் தெரியுமாறு செய்ய முடியாது. ஏனென்றால், காமிராவின் மூலம் செல்லும் ஒளிக்கதிர்கள் அசைந்து கொண்டிருப்பவை. இவற்றை ஒன்றுசேர்த்து, குவித்து, ஓர் உருவத்தைக் காட்ட வேண்டுமானால் அசையாத திரை வேண்டும்.

நம் புலனுணர்ச்சிகளின் விஷயமும் இப்படித்தான். பொறிகள் புலன்களுக்கும், புலன்கள் மூளைக்கும், மூளை மனத்திற்கும், மனம் புத்திக்கும் இந்த உணர்ச்சிகளை அனுப்பு கின்றன. ஆனால் இவை எல்லாவற்றிற்கும் பின்னால் அசையாத திரை போன்ற ஒன்று இருந்துகொண்டு, இந்த உணர்ச்சி அலை களையெல்லாம் ஒருங்கிணைத்து, நாம் அந்த உணர்ச்சியைப் பெறுமாறு செய்ய வேண்டும். எப்போதும் மாறிக்கொண்டே இருக்கும் நம் தன்மையை ஒருமைப்படுத்துவது எது? கணத் திற்குக் கணம் மாறிக்கொண்டே இருக்கும் நம் தன்மையை நிலைப்படச் செய்வது எது? நமது பல்வேறு உணர்ச்சிகளையும் ஒன்றாகச் சேர்த்து வைப்பது எது? நம் உணர்ச்சிகளெல்லாம் ஒன்றுசேர்ந்து, ஒரே உருவமாகக் காட்சியளிப்பதற்குக் காரணம் எது? இந்தச் செயல்களுக்கெல்லாம் அடிப்படையாக ஏதோ ஒன்று இருந்தே தீர வேண்டும். உடலோடும் மனத்தோடும் ஒப்பிட்டால் அந்த ஏதோ ஒன்று அசைவற்றதாக இருக்க வேண்டும் என்பதும் தெரிகிறது. காமிரா மூலமாக வரும் ஒளிக் கதிர்களோடு ஒப்பிட்டால், உருவம் விழுகின்ற திரை அசை வற்றதாக இருக்கிறது. இல்லாவிட்டால் உருவம் திரையில் தெரியாது. அதாவது, உணர்ச்சிகளை உணர்பவர் தனிப் பொருளாக இருக்க வேண்டும். மனம் இந்த உருவங்களை யெல்லாம் வரைகின்ற திரைதான், மனமும் புத்தியும் கொண்டு செல்கின்ற உணர்ச்சிகளெல்லாம் ஒன்றுசேர்க்கப்பட்டு, பகுக்கப் பட்டு, ஒருமைப்படுத்தப்பட்டு ஒரே உருவமாகத் தெரியும் இடம்தான் மனித ஆன்மா.

அகண்ட பிரபஞ்ச மனமே தன்னை ஆகாசமாகவும் பிராணனாகவும் பிரித்துக் கொள்கிறது என்பதைப் பார்த்தோம். மனத்தைக் கடந்தே நம்மில் ஆன்மா இருக்கிறது என்பதை அறிந்து கொண்டோம். பிரபஞ்சத்தில், பிரபஞ்ச மனத்திற்குப் பின்னால் ஓர் ஆன்மா இருக்கிறது என்பது தெரிகிறது. அதுவே கடவுள். அதுவே மனிதனில் ஜீவாத்மாவாக இருக்கிறது. பிரபஞ்சத்தில் பிரபஞ்ச மனம் ஆகாசமாகவும் பிராணனாகவும்

பரிணமித்திருப்பதைப் போல், பரமாத்மா பிரபஞ்சமாகப் பரிணமிக்கிறது. தனி மனிதன் விஷயத்திலும் உண்மையில் இப்படித்தானா? மனம் உடலையும் ஜீவாத்மா மனத்தையும் படைக்கின்றனவா? அதாவது மனிதனின் உடல், மனம், ஆன்மா மூன்றும் தனித்தனி இருப்புகளா? அல்லது மூன்றும் ஒரே பொருளாகச் சேர்ந்திருக்கின்றனவா? அல்லது அவை மூன்றும் ஒரே பொருளின் வேறுபட்ட நிலைகளா?

இந்தக் கேள்விகளுக்குப் பதில் சொல்வதற்குப் படிப்படியாக முயல்வோம். நாம் ஏறியுள்ள முதல் படி இதுதான்: தூல உடல் இதோ இருக்கிறது. தூல உடலுக்குப் பின்னால் புலன்கள், மனம், புத்தி, கடைசியில் ஆன்மா எல்லாம் இருக்கின்றன. உடல், மனம் இவற்றிலிருந்து வேறுபட்டது ஆன்மா என்பதை முதல் படியில் நாம் கண்டோம். மத உலகில், இந்த இடத்தில்தான் கருத்து வேற்றுமைகள் ஏற்படுகின்றன. அந்த வேறுபாடு இதுதான்: பொதுவாக, துவைதக் கருத்துக்கள் எல்லாமே, ஆன்மா குணங்களுடன் கூடியது, அதற்குப் பல்வேறு குணங்கள் உள்ளன, இன்ப துன்ப அனுபவங்களுக்கு எல்லாம் அது உட்படுகிறது என்று கூறுகின்றன. ஆன்மாவிற்குக் குணங்கள் உண்டு என்பதை அத்வைதிகள் மறுக்கிறார்கள். அது நிர்க்குணமானது என்பது அவர்களின் கூற்று.

முதலில் துவைதிகளை எடுத்துக் கொள்வோம். ஆன்மா, அதன் கதி இவற்றைப் பற்றிய அவர்களுடைய கருத்தை உங்களுக்கு எடுத்துச் சொல்ல முயல்கிறேன். அடுத்ததாக அவர்களை எதிர்க்கின்ற நெறியைப் பார்ப்போம். கடைசியாக, அத்வைதம் நமக்கு அளிக்கும் சமரசத்தையும் காண்போம்.

இந்த ஜீவாத்மா உடலிலிருந்தும் மனத்திலிருந்தும் வேறுபட்டிருப்பதாலும், ஆகாசம், பிராணன் இவற்றால் ஆனதல்ல என்பதாலும் அது அழிவற்றதாகத்தான் இருக்க முடியும். ஏன்? அழிவு என்றால் என்ன? ஒரு பொருள் தன் மூலப்பொருட்களாகப் பிரிந்துபோவது. பல மூலக்கூறுகள் சேர்ந்து உருவான பொருட்களுக்கு மட்டுமே இது பொருந்தும். இரண்டோ மூன்றோ பகுதிகளால் ஆன எதுவும், அதன் பகுதிகளாகப் பிரிந்தேயாக வேண்டும். சேர்க்கையால் ஆகாத ஒன்று மூலப் பொருட்களாகப் பிரிய முடியாது. ஆகவே அது அழிய முடியாது, அது அழிவற்றது. அது எப்போதும் இருந்து கொண்டே இருக்கிறது. அது படைக்கப் படாதது. படைக்கப் பட்ட எதுவுமே கூட்டுப் பொருள்தான். சூன்யத்திலிருந்து

எதுவும் படைக்கப்படுவதை யாரும் கண்டதில்லை. ஏற்கனவே இருக்கின்ற பொருட்கள் சேர்ந்து புதிய உருவங்களாவதுதான் படைப்பு—இதுதான் படைப்பைப்பற்றி நாமறிந்த உண்மை. உண்மை அப்படி இருப்பதாலும், மனிதனின் ஆன்மா தனிப் பொருளானதாலும் அது எப்போதும் இருந்திருக்க வேண்டும்; இனிமேலும் எப்போதுமே அது இருக்கும். உடல் அழிந்த பின்னும் ஆன்மா இருக்கிறது.

வேதாந்திகளின் கருத்துப்படி, இந்த உடல் கரைந்த பின்னர், மனிதனின் உயிர்ச்சக்திகள் மனத்திற்குத் திரும்பிப் போகின்றன. மனம் பிராணனில் ஒடுங்குகிறது. பிராணன் ஆன்மாவில் ஒடுங்கு கிறது. நுண்ணுடல், மனவுடல், ஆன்மீகவுடல் என்றெல்லாம் அழைக்கப்படுகின்ற சூட்சும சரீரமாகிய சட்டையை அணிந்தது போல் ஆன்மா வெளியே வருகிறது.

இந்தச் சூட்சும சரீரத்தில்தான் மனிதனின் சம்ஸ்காரங் கள் இருக்கின்றன. சம்ஸ்காரம் என்பது என்ன? மனம்ஓர் ஏரியைப் போன்றது. ஒவ்வோர் எண்ணமும் அந்த ஏரியில் எழும் ஓர் அலை போன்றது. ஏரியில் அலைகள் எழுந்து அடங்கி மறைகின்றன. அதுபோல் மனமாகிய ஏரியில் எண்ண அலைகளும் இடைவிடாமல் எழுவதும் வீழ்வதுமாக உள்ளன. அவை வீழ்ந்தாலும் ஒரேயடியாக மறைவதில்லை; நுண் ணியவையாக, மிக நுண்ணியவையாக மாறுகின்றன. ஆனாலும் வேண்டியபோது எழுவதற்குத் தயாராக அடங்கி இருக்கின்றன. நுட்ப உருவை அடைந்துவிட்ட சில எண்ணங்களை, மறு படியும் அலைபோல் எழுப்புவதைத்தான் நினைவு என்கிறோம். இவ்வாறு நாம் நினைத்த ஒவ்வோர் எண்ணமும், செய்த ஒவ்வொரு செயலும் மனத்தில் நுட்ப உருவில் இருக்கின்றன. மனிதன் இறக்கும்போது, இந்தப் பதிவுகளின் ஒட்டுமொத்தமும் மனத்தில் இருக்கும். அந்த மனம் சற்று நுட்பமான ஜடப் பொருளை ஆதாரமாகக் கொண்டு மீண்டும் செயல்படுகிறது. இந்த சம்ஸ்காரங்களையும் சூட்சும சரீரத்தையும் சட்டை களாக அணிந்ததுபோல் ஆன்மா வெளியேறுகிறது. பல்வேறு சம்ஸ்காரங்களான பல்வேறு சக்திகளின் மொத்தப் பலனே, ஆன்மாவின் பாதையை நிர்ணயிக்கிறது. எங்கள் கருத்துப்படி, ஆன்மா செல்வதற்கு மூன்று பாதைகள் உள்ளன.

ஆன்மீக நெறியில் ஆழ்ந்து ஈடுபட்டவர்கள், மரணத் திற்குப் பின், சூரிய கிரணங்கள் வழியாகச் சந்திரலோகத்திற்குச் சென்று, அதன்மூலமாக மின்னல் உலகத்திற்குச் செல்கின்றனர்.

ஏற்கனவே இறையருளைப் பெற்ற ஒருவரை அங்கே சந்திக்கின்றனர். அவர் இந்தப் புதியவர்களை, எல்லாவற்றிலும் உயர்ந்த லோகமாகிய பிரம்மலோகத்திற்கு அழைத்துச் செல்கிறார். அங்கே இவர்களுக்கு எல்லாம் அறிகின்ற தன்மையும் எல்லா வல்லமையும் கிடைக்கின்றன. கிட்டத்தட்ட அவர்கள் கடவுளுக்குச் சமானமாக, எல்லாம் வல்லவர்களாக, எல்லாம் அறிகின்றவர்களாக ஆகின்றனர். துவைதிகளைப் பொறுத்த வரை அவர்கள் எப்போதும் அங்கேயே நிலைத்திருக்கின்றனர். அத்வைதிகளைப் பொறுத்தவரை, அந்தக் கல்பத்தின் முடிவில் அவர்கள் பரமாத்மாவோடு இரண்டறக் கலக்கின்றனர்.

அடுத்தபடியாக, சுயநல நோக்கத்துடன் நற்செயல்கள் செய்தவர்கள் மரணத்திற்குப்பின் தங்கள் புண்ணியத்தின் பலனாக, முதலில் சந்திரலோகத்தை அடைகிறார்கள். அங்கே பல சொர்க்கங்கள் இருக்கின்றன. அங்கே அவர்கள் நுட்பமான உடல்களை, தேவ உடல்களைப் பெறுகிறார்கள். தேவர்களாகி நீண்ட நெடுங்காலம் சொர்க்க போகங்களை அனுபவித்துக்கொண்டு, அங்கேயே வாழ்கிறார்கள். அந்தக் காலம் முடிந்ததும் பழைய வினைகளின் பாதிப்பால் பூமிக்குத் திரும்புகிறார்கள். வாயு மண்டலம், மேக மண்டலம் போன்ற பல மண்டலங்களைக் கடந்து, கடைசியாக மழைத் துளிகளின் வாயிலாக பூமியை அடைகிறார்கள். பூமியில், தங்களை ஏதாவது ஒரு தானியத்தோடு இணைத்துக் கொள்கிறார்கள். அவர்களுக்கான ஒரு புதிய உடலுக்கு வேண்டிய மூலப்பொருளைக் கொடுக்கும் தகுதியுள்ள ஒரு மனிதன், அந்தத் தானியத்தைச் சாப்பிடுகிறான்.

கடைசியாக கொடியவர்கள். இவர்கள் இறந்த பின்னர் பேய்பிசாசுகளாக மாறிவிடுகிறார்கள். சந்திர லோகத்திற்கும் பூமிக்கும் இடையே உள்ள ஏதோ ஓர் உலகில் அவர்கள் வாழ்கிறார்கள். அவர்களுள் சிலர் மனித குலத்திற்குத் தொந்தரவு கொடுக்க முயல்கிறார்கள்; சிலர் நட்புறவோடு இருக்கிறார்கள். அங்கே சிலகாலம் வாழ்ந்த பிறகு, மறுபடியும் பூலோகத்திற்கு வந்து, மிருகங்களாகப் பிறக்கிறார்கள். சிலகாலம் மிருக உடம்பில் வாழ்ந்த பிறகு, அதிலிருந்து விடுபட்டு, பின்னர் மனிதர்களாகப் பிறந்து, முக்தி அடைவதற்கு இன்னும் ஒரு வாய்ப்பைப் பெறுகிறார்கள்.

கிட்டத்தட்ட நிறைநிலையை அடைந்து, பாவம் சிறிது மட்டுமே ஒட்டிக்கொண்டிருப்பவர்கள், சூரிய கிரணங்களின்

மூலமாகப் பிரம்மலோகத்தை அடைகிறார்கள் என்பதைப் பார்க்கிறோம். நடுத்தரமான மனிதர்கள், அதாவது சொர்க்கத்தை அடையும் ஆசையோடு நற்செயல் செய்தவர்கள் சந்திர லோகத்திலுள்ள சொர்க்கங்களை அடைந்து தேவஉடலைப் பெறுகிறார்கள். ஆனால் இவர்கள் மறுபடியும் மனிதர்களாகப் பிறந்து, முக்தி அடைவதற்கு மற்றொரு வாய்ப்பைப் பெறுகிறார்கள். கொடியவர்கள் பேய்பிசாசுகளாகிறார்கள். அதன்பின் அவர்கள் மிருகங்களாகவும் பிறக்க வேண்டியிருக்கிறது. பிறகு, மனிதர்களாகப் பிறந்து, முக்தியடைவதற்கு மற்றொரு வாய்ப்பைப் பெறுகிறார்கள்.

இந்தப் பூமியைக் கர்ம பூமி என்று சொல்கிறார்கள். இங்கே மட்டும்தான் மனிதன் புண்ணிய பாவங்களைச் செய்ய முடியும். சொர்க்கத்திற்குப் போக விரும்பி நற்செயல் செய்யும் மனிதன் தேவனாகிறான். அங்கே அவனுக்குப் பாவ கர்மங்கள் எதுவும் சேர்வதில்லை. பூமியில் அவன் செய்த நற்செயல்களின் பலனான சொர்க்க போகங்களை மட்டுமே அங்கே அனுபவிக்கிறான். புண்ணிய பலன் தீர்ந்ததும், அவன் முந்தைய பிறவிகளில் செய்த பாவங்களின் மொத்தப் பலன் அவனை மறுபடியும் பூமியில் பிறக்க வைக்கிறது. அதேபோல், பேய் பிசாசுகளாக மாறியவர்கள், புதிய பாவங்களைச் செய்வதில்லை. ஆனால் தாங்கள் முன்பு செய்த பாவங்களுக்கான பலனை அனுபவிக்கிறார்கள். பிறகு, பாவ புண்ணியங்கள் எதுவுமே செய்யாமல், ஒரு மிருக உடலில் சில காலம் இருக்கிறார்கள். அந்தக் காலம் முடிந்தவுடன் மறுபடியும் மனிதர்களாகப் பிறக்கிறார்கள். சொர்க்கத்திலும் நரகத்திலும் புதிய பாவ புண்ணியங்களைச் செய்ய முடியாது; அங்கே புண்ணிய பாவப் பலன்களை மட்டுமே அனுபவிக்கலாம்.

மிகச் சிறந்த புண்ணியமோ, மிகக் கொடுமையான பாவமோ கைமேல் பலன் அளிக்கிறது. உதாரணமாக, ஒருவன் தன் வாழ்க்கை முழுவதும் பாவங்களையே செய்து, ஒரே ஒரு புண்ணியம் செய்தாலும், அந்தப் புண்ணியத்திற்குக் கைமேல் பலன் கிடைத்துவிடும். அந்தப் புண்ணிய பலன் தீர்ந்தபின் பாவங்களின் பலனை அவன் அனுபவித்தேயாக வேண்டும். சில பெரிய நற்காரியங்களைச் செய்த, ஆனால் அவ்வளவு முறையான வாழ்க்கையை வாழாத மனிதர்கள் தேவர்கள் ஆகிறார்கள். சில காலம் தேவ உடலில் வாழ்ந்து, போகங்களை அனுபவித்த பிறகு, அவர்கள் மறுபடியும் மனிதர்களாகப்

பிறந்தேயாக வேண்டும். புண்ணிய பலன் தீர்ந்தவுடன் பாவத்தின் பலன் தலைகாட்டத் தொடங்குகிறது. அதையும் அனுபவித்துத் தீர்க்க வேண்டும். கொடிய பாவம் செய்தவர்கள் பேய்பிசாசுகளாக இருந்தேயாக வேண்டும். அந்தப் பாவ பலன் தீர்ந்தவுடன், அவர்கள் செய்த சிறிதளவு புண்ணியம் அவர்களை மறுபடியும் மனிதர்களாகப் பிறக்க வைக்கிறது. பிரம்மலோகத்தை அடைந்துவிட்டால், அங்கிருந்து கீழே விழுவதோ பூமிக்குத் திரும்புவதோ இல்லை. அந்த உலகத்திற்குச் செல்லும் வழிக்குத் தேவயானம் என்று பெயர்; அதாவது, கடவுளை நோக்கிப் போகும் வழி. சொர்க்கத்திற்குப் போகும் வழிக்கு பித்ருயானம் அல்லது முன்னோர்களை நோக்கிப் போகும் வழி என்று பெயர்.

ஆகவே வேதாந்தத் தத்துவத்தின்படி, பிரபஞ்சத்தில் மிகவும் சிறந்த பிறவி மனிதப் பிறவிதான். கர்ம பூமியாகிய இந்த உலகம்தான் பிரபஞ்சத்திலேயே சிறந்த இடம். ஏனென்றால் இங்கேதான் மனிதன் நிறைநிலையை அடைவதற்கு மிகச் சிறந்த, மிக உயர்ந்த வாய்ப்பு அளிக்கப்படுகிறது. தேவதைகள் ஆகட்டும், தேவர்கள் ஆகட்டும், நிறைநிலையை அடைய வேண்டுமானால் மனிதர்களாகப் பிறந்தே தீர வேண்டும். இந்த மனிதப்பிறவிதான், சிறந்த மையம், சிறந்த வாய்ப்பு.

இப்போது நாம் தத்துவத்தின் வேறு கோணத்தைப் பார்க்கலாம். நான் இப்போது உங்களுக்குக் கூறிய ஆன்ம தத்துவத்தை முற்றிலுமாக மறுக்கின்ற பௌத்தர்கள் இருக்கிறார்கள். 'உடல், மனம் இவற்றிற்கு அடிப்படையாக, ஆதாரமாக ஏதோ ஒன்று இருப்பதாகக் கற்பித்துக் கொள்வதால் என்ன பயன்? நம் சிந்தனை ஓட்டத்தை நாம் ஏன் தடை செய்ய வேண்டும்? உடலாலும் மனத்தாலும் ஆன இந்த மனித உருவிற்கு அப்பால், ஆன்மா என்ற மூன்றாவதாகிய ஒன்றை எதற்காக ஒப்புக்கொள்ள வேண்டும்? அதனால் என்ன பயன்? இந்த மனிதப் பிறவியை விளக்க மனிதனே போதாதா? ஏன் மூன்றாவதான ஒன்றைப் புதிதாகப் புகுத்த வேண்டும்?' என்று அவர்கள் கேட்கிறார்கள். இந்த வாதங்கள் மிகவும் சக்தி வாய்ந்தவை. இந்தப் பகுத்தறிவு வாதம் உறுதியானது. புற ஆராய்ச்சியைப் பொறுத்தவரை தன்னைத்தான் விளக்கிக்கொள்ள மனிதனே போதும். நம்முள் பலர் இந்த விஷயத்தை இப்படித்தான் பார்க்கிறோம்.

அப்படியானால், மனமாகவோ உடலாகவோ இல்லாமல், அவை இரண்டிற்கும் அடிப்படை ஆதாரமான ஆன்மா

என்ற ஒன்றை ஏன் கற்பித்துக்கொள்ள வேண்டும்? சரி, மனமும் உடலும் மட்டுமே இருப்பதாக வைத்துக்கொள்வோம். தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கும் ஜடப்பொருள் பிரவாகத்தின் பெயரே உடல். தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கும் சிந்தனை அல்லது எண்ணப் பிரவாகமே மனம். இவை இரண்டும் சேர்ந்திருப்பது போன்ற தோற்றத்தை அளிப்பது எது? உண்மையில் இந்த இணைப்பு இல்லை என்றே வைத்துக் கொள்வோம். ஒரு தீப்பந்தத்தை எடுத்து வேகமாகச் சுழற்றுவோம். ஒரு நெருப்பு வட்டம் தெரியும். உண்மையில் அத்தகைய ஒரு வட்டம் இல்லை. ஆனால் தொடர்ந்த சுழற்சி, வட்டம் ஒன்று இருப்பது போன்ற தோற்றத்தை ஏற்படுத்து கிறது. வாழ்க்கையிலும் எந்த ஒருமையும் இல்லை. தொடர்ந்து பாய்ந்துகொண்டே இருக்கும் ஜடப்பொருள்பிரவாகமே இது. இந்த ஜடப்பொருள் தொகுதியை, நாம் வேண்டுமானால் ஓர் ஒருமை என்று சொல்லிக் கொள்ளலாம், அவ்வளவுதான். மனத்தின் விஷயமும் இப்படியேதான். ஒவ்வோர் எண்ணமும் மற்ற எண்ணங்களிலிருந்து தனித்தே நிற்கிறது. பிரவாகத்தின் தொடர்ச்சியும் வேகமுமே ஒருமை இருப்பதைப்போல் ஒரு பிரமையை உண்டாக்குகிறது. மூன்றாவது தேவையில்லை. பிரபஞ்சம் முழுவதிலுமே இருக்கின்ற உண்மையெல்லாம் உடலும் மனமும் மட்டுமே. இதற்குப் பின்னால் எதையும் கற்பனை செய்துகொள்ளத் தேவையில்லை.

தற்கால மதப் பிரிவினர் சிலர், இந்தப் பௌத்தச் சிந்தனையை எடுத்துக்கொண்டு தங்கள் சொந்தமான, தாங்களே கண்டுபிடித்த புதிய சிந்தனை என்று உரிமை கொண்டாடு கிறார்கள். இந்த உலகம் ஒன்றைக்கொண்டே நாம் எல்லா வற்றையும் விளக்கிவிடலாம் என்ற இந்தக் கருத்தே, பௌத்தத் தத்துவத்தின் பல பிரிவுகளுடைய மையக் கருத்தாக இருக்கிறது. ஆதாரப் பொருள் எதுவும் தேவையில்லை. இருப்பதெல்லாம் புலனுக்குத் தென்படும் இந்த உலகம் மட்டுமே. இந்தப் பிர பஞ்சத்திற்கு ஆதாரமாக ஏதோ இருக்கிறது என்று நினைப்ப தால் என்ன பயன்? எல்லாமே குணங்களின் சேர்க்கைதான். இந்தக் குணங்களுக்கு ஆதாரமான ஒரு கற்பனைப் பொருள் ஏன் இருக்க வேண்டும்? ஒரு பொருள் இருக்கிறது என்ற எண்ணம் வருவதற்குக் காரணம், குணங்களின் வேகமான மாற்றமே தவிர குணங்களுக்குப் பின்னால் இருக்கும் மாற்றமற்ற ஏதோ ஒன்று அல்ல.

இந்த வாதங்களில் சில, மிகவும் அற்புதமாக இருப்பதைக் காண்கிறோம். இவை மனிதர்களின் பொதுவான அனுபவத்திற்கு ஒத்து வருகின்றன. உண்மையில் சொல்லப்போனால் புலனறிவுக்கு உட்பட்ட நிகழ்ச்சிகளைத் தவிர, உயர்ந்த எதையும் கோடியில் ஒருவரால்கூட நினைக்க முடியாது. இயற்கை என்பது எப்போதும் மாறிக்கொண்டும், சுழன்றுகொண்டும், ஒன்றோடு ஒன்று சேர்ந்துகொண்டும் இருக்கும் நிலையற்ற பொருளாகத் தான் பலருக்குத் தோன்றுகிறது. இதற்குப் பின்னால் இருக்கின்ற அமைதியான கடலின் கணநேரக் காட்சிகூட மிகச் சிலருக்கே கிடைக்கிறது. அது எப்போதும் அலைகளாகச் சுழன்று புரண்டடித்துக் கொண்டிருப்பதுதான் நமக்குத் தெரிகிறது. இந்தப் பிரபஞ்சம், சுழன்றும் புரண்டும் எழுகின்ற அலைகள் நிறைந்த கடலாகவே நமக்குத் தோன்றுகிறது.

இவ்வாறு நாம் இரண்டு கருத்துக்களைப் பார்க்கிறோம். உடல், மனம் இரண்டிற்கும் அப்பால், அசைவோ மாற்றமோ அற்ற ஏதோ ஒன்று இருக்கிறது என்பது ஒன்று; அசைவோ மாற்றமோ அற்ற எதுவுமே பிரபஞ்சத்தில் இருக்க முடியாது என்பது மற்றொன்று. எல்லாமே மாற்றம்தான்; மாற்றத்தைத் தவிர வேறு ஒன்றுமே இல்லை. இந்த வேறுபாட்டிற்குத் தீர்வு, சிந்தனையின் அடுத்த படியான அத்வைத வேதாந்தத்தில்தான் கிடைக்கிறது.

எல்லாவற்றிற்கும் பின்னால், அடிப்படையாக, மாற்றமே அற்ற ஏதோ ஒன்று இருப்பதாக துவைதிகள் சொல்வது சரிதான். மாற்றமற்ற ஒன்றை அடிப்படையாகக் கொள்ளாமல், மாற்றத்தைப் பற்றி நம்மால் நினைக்க முடியாது. குறைவான மாற்றமுடைய ஒன்றை வைத்துத்தான், அதைவிட அதிகமான மாற்றமுடைய ஒன்றை நாம் நினைக்க முடியும். இதைவிடக் குறைவான மாற்றமுடைய ஒன்றோடு ஒப்பிட்டால், இது அதிகமான மாற்றம் உள்ளதாகத்தான் இருக்கும். இப்படியே நினைத்துப் பார்த்தால், கடைசியில், மாற்றமே அற்ற ஒரு பொருள் இருந்தேயாக வேண்டும் என்பதை நாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். இப்போது நாம் காணும் வெளிப்பாடு எல்லாமே, முதலில் ஒடுக்க நிலையில் இருந்திருக்க வேண்டும். எதிர்ச் சக்திகளின் சமநிலையினால் ஏற்பட்ட அமைதியே அங்கு நிலவியிருந்திருக்க வேண்டும். அங்கே எந்தச் சக்தியும் இயங்கியிருக்க முடியாது. ஏனென்றால் சமநிலை தவறும்போது தான் சக்திகளின் இயக்கம் ஆரம்பிக்கிறது. அந்தச் சமநிலையை

மீண்டும் பெறுவதற்காகவே பிரபஞ்சம் விரைந்து கொண்டிருக் கிறது. சர்வ நிச்சயமான உண்மை என்று ஏதாவது உண்டென் றால் அவற்றுள் இதுவும் ஒன்று.

மாற்றமற்ற ஒன்று இருப்பதாக துவைதிகள் சொல்வது மிகவும் சரியே. ஆனால் இந்த ஏதோ ஒன்று, உடலிலிருந்தும் மனத்திலிருந்தும் மாறுபட்ட, அவற்றிலிருந்து தனிப்பட்டு நிற்கும் ஏதோ ஒன்று என்று அவர்கள் சொல்வதுதான் தவறு. பிரபஞ்சம் தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கிறது என்று பௌத்தர்கள் சொல்வது சரியே. நாம் பிரபஞ்சத்திலிருந்து தனிப்பட்டு நின்றுகொண்டு பார்க்கும்வரை, பார்ப்பவன், பார்க்கப்படும் பொருள் என்ற இரண்டு இருக்கும்வரை, பிர பஞ்சம் தொடர்ந்து மாறிக் கொண்டிருப்பதாகவே தோன்றும். ஆனால் மாற்றம், மாற்றமின்மை இரண்டுமே பிரபஞ்சத்தில் இருக்கின்றன என்பதுதான் உண்மை. ஆன்மா, மனம், உடல் இவை மூன்றும் தனித்தனியானவை அல்ல. ஏனெனில் இந்த மூன்றாலும் செய்யப்பட்ட அமைப்பு ஒன்றுதான். ஒன்றேதான் உடலாகவும் மனமாகவும் இவை இரண்டிற்கும் அப்பாற் பட்டதாகவும் தோன்றுகிறது. ஆனால் அது ஒரேசமயத்தில் இவை எல்லாமாகவும் தோன்றுவதில்லை. உடலை மட்டுமே காண்பவனுக்கு மனம் தெரிவதில்லை. மனத்தை மட்டுமே காண்பவனுக்கு ஆன்மா தெரிவதில்லை. ஆன்மாவைக் காண்பவனுக்கோ உடலும் மனமும் ஒழிந்தேவிட்டன. இயக்கத்தைக் காண்பவனுக்குப் பேரமைதி தெரிவதில்லை. பேரமைதியைக் காண்பவனுக்கு இயக்கம் என்பதே இருப்ப தாகத் தெரிவதில்லை. கயிற்றைப் பாம்பாகக் காண்பவனுக்குக் கயிறு தெரிவதில்லை. இந்த மனமயக்கம் மறைந்தவுடன் அவன் கயிற்றைக் காண்கிறான், பாம்பு மறைந்துவிடுகிறது.

ஆகவே இருப்பது, எல்லாம்தழுவிய ஒன்றுதான். அதுவே பலவாகத் தோன்றுகிறது. பிரபஞ்சத்தில் இருப்பது இந்த ஆன்மா ஒன்றுதான். ஆன்மாதான் அத்வைத மொழியில் பிரம்மம் எனப்படுகிறது. பிரம்மமே நாமரூபங்களின் காரண மாகப் பலவாகத் தோன்றுகிறது. கடலின் அலைகளைப் பாருங்கள். ஓர் அலைகூடக் கடலிலிருந்து வேறுபட்டதல்ல. அந்த அலைகளை வேறுபடுத்திக் காட்டுவது எது? நாம ரூபங்களே. அலையின் உருவமும், நாம் அதற்கு வைத்திருக்கும் 'அலை' என்ற பெயருமே, வேறுபாடு இருப்பதைப் போன்ற தோற்றத்தை ஏற்படுத்துகின்றன. இதுவே அலையைக்

கடலிலிருந்து வேறுபடுத்திக் காட்டுகிறது. நாமரூபத்தை எடுத்துவிட்டால் அது அதே கடல்தான். கடலையும் அலையையும் உண்மையில் வேறுபடுத்திக் காண யாரால் முடியும்?

பிரபஞ்சமே அந்த ஒன்றேயான ஒருமைப் பொருள். பலவகை வேறுபாடுகளை உருவாக்கியது நாமரூபமே. லட்சக் கணக்கான நீர்த்துளிகள்தோறும் பிரதிபலிக்கின்ற சூரியனின் பிம்பம் ஒவ்வொன்றும் முழுச் சூரியனைப் போலவே தோன்று கிறது. அதுபோலவே பல்வேறு நாமரூபங்களில் பிரதிபலிக்கும் போது பல்வேறாகத் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் அது ஒன்றேதான். அங்கு 'நான்' இல்லை', 'நீ' இல்லை. எல்லாம் ஒன்றே. எல்லாம் 'நான்' அல்லது எல்லாம் 'நீ' என்பதாகத்தான் இருக்க முடியும். இரண்டு என்ற இந்தக் கருத்தே முற்றிலும் தவறானது. நாம் பொதுவாக எப்படி பிரபஞ்சத்தைக் காண்கிறோமோ, அது இந்தத் தவறான கருத்தின் பலனே. மனிதன் விவேகம் பெற்று, இருப்பது இரண்டல்ல, ஒன்றே என்பதை உணரும்போது, தானே இந்தப் பிரபஞ்சம் என்பதை உணர்கிறான். 'தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கும் பிரபஞ்சமாக இருப்பது நானே. எல்லா மாற்றங்களையும் எல்லா குணங்களையும் கடந்தவனாக, என்றென்றும் பரிபூரணனாக, என்றென்றும் ஆனந்தமாக இருப்பது நானே.'[1]

ஆகவே இருப்பது ஒரே ஆன்மாதான். அது என்றும் தூய்மையானது; என்றும் பூரணமானது; மாறாதது; மாற முடியாதது. அது ஒருபோதும் மாற்றம் அடைந்ததில்லை. பிரபஞ்சத்தில் காணப்படும் பல்வேறு மாற்றங்களும் அந்த ஒரே பிரம்மத்திலேயே தோன்றுகின்றன. அந்தப் பிரம்மத் தின் மீதுதான் நாமரூபங்கள் இந்தக் கனவுகளையெல் லாம் வரைந்திருக்கின்றன. அலைகளைக் கடலிலிருந்து வேறு படுத்திக் காட்டுவது உருவமே. அலை அடங்கினால் அலை உருவம் நிலைத்திருக்குமா? இருக்காது, நிச்சயமாக மறைந்து விடும். அலை முற்றிலும் கடலைச் சார்ந்ததாக இருக்கிறது. கடல் ஒருபோதும் அலையைச் சார்ந்திருக்கவில்லை. அலை இருக்கும்வரை அலை உருவமும் இருக்கும். அலை அடங் கியவுடன் அலை உருவமும் மறைந்துவிடும்.

---

1. மய்யனந்த மஹாம்போதௌ ஜகத்வீசி: ஸ்வபாவத: |
உதேது வாஸ்தமாயாது ந மே புத்திர் ந ச க்ஷதி: ||
—அஷ்டாவக்ர ஸம்ஹிதை, 7.2

இந்த நாமரூபம் மாயையால் ஏற்படும் தோற்றமே. ஒன்றி லிருந்து மற்றொன்றை வேறுபடுத்தித் தனியாகக் காட்டுவது இந்த மாயையே, ஆனாலும் மாயை என்பது இருப்பதாகச் சொல்ல முடியாது. உருவம் என்பது இருப்பதாகச் சொல்ல முடியாது. ஏனென்றால் அது மற்றொரு பொருளின் இருப்பைச் சார்ந்ததாக உள்ளது. அது இல்லையென்றும் சொல்ல முடியாது. ஏனென்றால் நாம் காணும் வேறுபாடுகளுக்கெல் லாம் அதுவே காரணம். ஆகவே மாயை அல்லது அஞ்ஞானம் அல்லது நாமரூபம் அல்லது ஐரோப்பியர்கள் சொல்வதுபோல், 'காலம், இடம், காரணகாரியம்' என்பது இந்தப் பிரம்மத்தி லிருந்து தோன்றி, பிரபஞ்சத்தைப் பல்வேறு நாமரூபங்களாகக் காட்டுகிறது.

உண்மையில் பிரபஞ்சம் ஒரே பொருளே. இரண்டு அறுதி உண்மைகள் இருப்பதாக நினைப்பவன் தவறு செய்கிறான். இருப்பது ஒன்றே என்று உணரும்போதுதான் அவன் சரியாக எண்ணுகிறான். இந்த உண்மை உடல் நிலையில், மனநிலையில் ஆன்மநிலையில் ஒவ்வொரு நாளும் நிரூபணமாகிறது. நான், நீங்கள், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் எல்லாமே ஜடப் பொருள் என்ற எல்லையற்ற கடலில் உள்ள பல்வேறு துணுக்கு களின் பல்வேறு பெயர்களே என்பதையும், இந்த ஜடப்பொருள் இடைவிடாமல் தன் அமைப்பை மாற்றிக்கொண்டே இருக் கிறது என்பதையும் இன்றைய விஞ்ஞானிகள் நிரூபித்திருக் கின்றனர். சூரியனில் பல மாதங்களுக்கு முன்பிருந்த சக்தித் துணுக்கு இன்று மனிதனில் இருக்கலாம். நாளைக்கு அதுவே ஒரு மிருகத்திலும், அடுத்த நாள் ஒரு தாவரத்திலும் இருக்கலாம். அது தொடர்ந்து வந்துபோய்க் கொண்டே இருக்கிறது. எல்லாமே, பிளவுபடாத எல்லையற்ற ஒரே ஜடப்பொருள்தான். பெயரும் உருவமுமே வேறுபாடுகளுக்குக் காரணமாக இருக் கின்றன. இந்தப் பொருளின் ஒரு துணுக்கைச் சூரியன் என்றும், மற்றொன்றைச் சந்திரன் என்றும், இன்னொன்றை நட்சத்திரம் என்றும், இன்னுமொன்றை மனிதன் என்றும், வேறொன்றை மிருகம் என்றும், இன்னும் வேறொன்றைத் தாவரம் என்றும் கூறுகிறோம். இந்தப் பெயர்கள் எல்லாம் கற்பனையானவை, அவற்றில் உண்மை இல்லை. ஏனெனில் எல்லாமே தொடர்ந்து மாறிக்கொண்டிருக்கின்ற ஒரே ஜடப்பொருளே.

இதே பிரபஞ்சம், வேறொரு கோணத்திலிருந்து பார்த் தால் எண்ணக் கடலாக இருக்கிறது. ஒவ்வொரு மனமும்

இந்தக் கடலிலுள்ள ஒவ்வொரு துளியே ஆகும். நீங்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மனம், நான் ஒரு மனம் என்று உலகிலுள்ள ஒவ்வொருவருமே ஒவ்வொரு மனம்தான். இதே பிரபஞ்சத்தை ஞானம் என்னும் கோணத்திலிருந்து பார்க்கும் போது, கண்கள் பொய்த் தோற்றத்தைப் பார்ப்பதை விடும் போதும், மனம் தூய்மையடையும்போது, அது, வேறுபாடே இல்லாத, எப்போதும் தூய்மையான, மாற்றமே அற்ற, அழிவே அற்ற தனிப் பரம்பொருளாகத் தோன்றுகிறது.

அப்படியானால் மரணத்திற்குப் பின் மனிதர்களின் மூவகைப் பயணங்களைப்பற்றி துவைதிகள் கூறிய கருத்து, அதாவது மனிதன் இறந்தபின் சொர்க்கத்திற்கோ வேறு உலகங் களுக்கோ போவதாகவும், தீயவர்கள் பேய்பிசாசுகளாகவும் மிருகங்களாகவும் ஆவதாகவும் கூறியவையெல்லாம் என் னாவது? யாரும் வருவதும் இல்லை, போவதும் இல்லை என்கிறான் அத்வைதி. நாம் எப்படி வரவோ போகவோ முடியும்? நாம் எல்லையற்றவர்கள்; நாம் எங்கே போக முடியும்?

ஒரு பள்ளியில் குழந்தைகளுக்குத் தேர்வு நடந்தது. ஆசிரியர் முட்டாள்தனமாகப் பல கஷ்டமான கேள்விகளைக் கேட்டார்; 'ஏன் பூமி கீழே விழுவதில்லை?' என்பது அவற்றுள் ஒரு கேள்வி. ஈர்ப்புச் சக்தி அல்லது வேறு ஏதாவது சிக்கலான விஞ்ஞான உண்மையைப் பதிலாகப் பெற வேண்டுமென்பது அவரது நோக்கம். குழந்தைகளில் பலருக்கு அவரது கேள்வியே புரியவில்லை. ஆகவே பலர் தவறான பதில்களைச் சொன் னார்கள். ஆனால் ஒரு புத்திசாலிச் சிறுமி, 'பூமி எங்கே விழும்?' என்ற எதிர்க் கேள்வியால் இந்தக் கேள்விக்குப் பதில ளித்தாள். ஆசிரியர் கேட்ட கேள்வியே பொருளற்றது. மேல் கீழ் என்பதெல்லாம் பிரபஞ்சத்தில் இல்லை. இந்தக் கருத்து வேறு ஒன்றைச் சார்ந்ததே.

ஆன்மாவின் விஷயமும் இப்படித்தான். ஆன்மாவைப் பொறுத்தவரை, பிறப்பு இறப்பு என்பவை எல்லாம் முட்டாள் தனம். யார் வருகிறார்கள்? யார் போகிறார்கள்? நாம் இல்லாத இடம் எது? நாம் ஏற்கனவே இல்லாத சொர்க்கம் எங்கே இருக்கிறது? மனிதனின் ஆன்மா எங்கும் நிறைந்தது. அது எங்கே போக முடியும்? எங்கே போகாதிருக்க முடியும்? அது எங்கும் இருக்கிறது. ஆகவே நிறைநிலை அடைந்தவனுக்கு, பிறப்பு, இறப்பு, சொர்க்கம், நரகம் ஆகிய பொய்த் தோற்றங் களும் சிறுபிள்ளைத்தனமான கனவுகளும் உடனே மறைந்து

விடுகின்றன. கிட்டத்தட்ட நிறைநிலை அடைந்தவனுக்கு, பிரம்மலோகம்வரை உள்ள எல்லா காட்சிகளும் தோன்றி, பிறகு மறைகின்றன. அறியாமையில் உழல்பவர்களுக்கு எல்லாம் தொடர்கின்றன.

சொர்க்கத்திற்குப் போவது, பிறப்பது, இறப்பது என்பவற்றை இந்த உலகமே நம்புகிறதே, அது எப்படி? நான் ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு பக்கமாகப் படித்துவிட்டுத் திருப்புகிறேன். மாறுவது யார்? வருவதும் போவதும் யார்? நானல்ல, புத்தகம்தான். ஆன்மாவின் முன்னிலையில் இயற்கை ஒரு புத்தகமாக உள்ளது. அதன் அத்தியாயங்கள் ஒன்றன்பின் ஒன்றாகப் படிக்கப்படுகின்றன, திருப்பப்படுகின்றன. அவ்வப்போது அந்தப் புத்தகத்தில் ஒரு காட்சி விரிகிறது. அது படிக்கப்பட்டு, திருப்பப்படுகிறது. உடனே புதியதொரு காட்சி வருகிறது. ஆனால் ஆன்மா மாறாமல் எப்போதும் நிலையாக இருக்கிறது. மாறுவது இயற்கையே; மனிதனின் ஆன்மாவல்ல. அது ஒருபோதும் மாறுவதில்லை. பிறப்பும் இறப்பும் இயற்கையில்தான் இருக்கின்றன. ஆன்மாவில் இல்லை. ஆனாலும் அறிவிலிகள் மன மயக்கத்தையே உண்மையென்று நம்புகிறார்கள். மனமயக்கத்தின் காரணமாக சூரியன் நகர்வது போலவும், பூமி நகராது இருப்பது போலவும் நாம் காண்கிறோம். அதுபோலவே இறப்பது நாம்தான், இயற்கை அல்ல என்று நினைக்கிறோம்.

இவையெல்லாம் பொய்த் தோற்றங்கள். ரயிலில் போகும் போது, நிலம் ஓடுவது போலவும், வண்டி ஓடாதது போலவும் தோன்றுவதுபோல், பிறப்பு, இறப்பு ஆகியவையும் பொய்யாகத் தோன்றுகின்றன. மனிதர்கள் ஒரே பிரபஞ்சத்தையே, ஒரு குறிப்பிட்ட மனநிலையில் பூமி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் என்று பல நாமரூபங்களாகப் பார்க்கிறார்கள். அதே மனநிலையில் உள்ள எல்லோரும் அவற்றையே பார்க்கிறார்கள். உங்களுக்கும் எனக்கும் இடையில் பல்வேறு நிலைகளில் வாழும் பல உயிர்கள் இருக்கலாம். அவற்றால் நம்மைப் பார்க்கவே முடியாது. நம்மாலும் அவற்றைப் பார்க்க முடியாது. நம்முடைய மனநிலையிலும் இருப்புநிலையிலும் உள்ளவர்களை மட்டுமே நம்மால் பார்க்க முடியும். ஒரே சுருதியுள்ள இசைக் கருவிகளில் எழும் நாதம்தான் ஒத்துப் போகிறது. 'மனித அதிர்வு' என்று சொல்லப்படும் அதிர்வுநிலை மாறிவிட்டால் இங்கே மனிதர்களைப் பார்க்க முடியாது. 'மனிதப் பிரபஞ்சம்' முழுவதுமே

மறைந்து, அதற்குப் பதிலாக வேறு காட்சிகள் தோன்றும். ஒரு வேளை, தெய்வங்கள், தெய்வப் பிரபஞ்சம் இவையெல்லாம் தோன்றலாம். தீயவர்களின் கண்ணுக்குப் பேய்பிசாசுகளும் பேயுலகமும் தோன்றலாம். ஆனால் எல்லாமே ஒரே பிரபஞ்சத்தின் வேறுபட்ட தோற்றங்களே.

மனித நிலையிலிருந்து பார்க்கும்போது இதே பிரபஞ்சம் பூமி, சூரியன், சந்திரன் மற்றும் நட்சத்திரங்களாகத் தெரிகிறது. இதே பிரபஞ்சம் தீயவர்களின் கண்ணிற்கு நரகமாகத் தெரிகிறது. இதே பிரபஞ்சத்தைச் சொர்க்கமாகப் பார்க்க விரும்புபவர்களுக்கு, இது சொர்க்கமாகத் தெரிகிறது. ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சிபுரியும் கடவுள் ஒருவரின் பக்கத்தில் நின்றுகொண்டு, எப்போதும் அவரைத் துதித்தபடியே இருப்பதை விரும்புபவர்கள் இறக்கும்போது, தங்கள் மனத்தில் இருப்பதைத் தோற்றங்களாகக் காண்கிறார்கள். அவர்கள் இறக்கும் தறுவாயில், சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும் கடவுள், அங்கும் இங்கும் பறந்துகொண்டிருக்கும் தேவதைகள் இவர்கள் நிறைந்த சொர்க்கமாக இதே பிரபஞ்சம் அவர்களுக்குத் தோன்றுகிறது.

இந்தச் சொர்க்கங்களெல்லாம் மனிதர்களின் கற்பனையே. துவைதி சொல்வது சரிதான், ஆனால் அவை அவனுடைய கற்பனை என்று அத்வைதி கூறுகிறான். சொர்க்கம், நரகம், பேய்பிசாசுகள், தேவர்கள், மறுபிறவிகள் எல்லாமே புராணக் கதைகள். மனித வாழ்வும் அப்படியே. இந்த வாழ்க்கை மட்டுமே உண்மை என்று மனிதர்கள் நினைப்பதுதான் அவர்கள் செய்யும் பெரிய தவறு. வேறு எதையாவது புராணம் என்று சொன்னால் உடனே ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் தங்கள் நிலையும் அப்படியேதான் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்வதே இல்லை. நாம் கேட்டதெல்லாம் வெறும் கட்டுக்கதை, நாம் வெறும் உடல்கள் என்று சொல்வது அப்பட்டமான பொய். நாம் என்றுமே வெறும் உடல்களாக இருந்ததில்லை, இருக்கவும் முடியாது. நாம் வெறும் மனிதர்கள் என்று சொல்வது, பொய்களிலெல்லாம் மிகப் பெரிய பொய்.

இந்தப் பிரபஞ்சத்தின் கடவுளே நாம்தான். நாம் கடவுளை வழிபடும்போது, நம்முள் மறைந்திருக்கும் நமது ஆன்மாவையே வழிபடுகிறோம். 'நாம் பிறவியிலேயே பாவிகள், தீயவர்கள்' என்று சொல்வதுதான் நீங்கள் சொல்ல முடிந்தவற்றுள் மிகப் பெரும் பொய். மற்றவர்களைப் பாவிகளாகப் பார்ப்பவர்களே உண்மையில் பாவிகள். ஒரு குழந்தை இங்கே இருப்பதாகவும்,

இங்கே உள்ள மேஜையின்மீது தங்கக் காசுகள் நிறைந்த ஒரு பையை வைப்பதாகவும் வைத்துக் கொள்வோம். ஒரு திருடன் வந்து, தங்கக் காசுகளைத் திருடிச் செல்கிறான். குழந்தையைப் பொறுத்தவரை, அதற்கு எந்த வேறுபாடும் தெரிவதில்லை. அதன் உள்ளத்தில் திருடன் என்ற கருத்து இல்லாததால், வெளியிலும் அது திருடனைக் காணவில்லை. பாவிகளுக்கும் தீயவர்களுக்கும் உலகில் தீமையே கண்ணுக்குத் தெரிகிறது. நல்லவர்களுக்கு அப்படி இல்லை. ஆகவே தீயவர்களுக்கு இந்தப் பிரபஞ்சம் நரகமாக இருக்கிறது. ஓரளவு நல்லவர்களுக்கு இது சொர்க்கமாகத் தெரிகிறது.

ஆனால் நிறைநிலை பெற்றவர்களுக்கோ இந்தப் பிரபஞ்சம் கடவுளாகவே தெரிகிறது. கண்ணை மறைத்த திரை அப்போது, அப்போது மட்டுமே விலகுகிறது. தூய்மையடைந்த மனிதனுக்குக் காட்சி முழுவதுமே மாறிவிடுகிறது. கோடிக்கணக்கான வருடங்களாக அவனைச் சித்திரவதை செய்துகொண்டிருந்த கெட்ட கனவுகள் எல்லாம் மறைகின்றன. தன்னை மனிதனாகவோ தேவனாகவோ பேயாகவோ நினைத்துக்கொண்டு, தான் பூமியிலோ நரகத்திலோ சொர்க்கத்திலோ வாழ்வதாக எண்ணிக் கொண்டிருந்தவன், தான் உண்மையில் எங்கும் நிறைந்தவன் என்பதை உணர்கிறான். தான் காலத்திற்குக் கட்டுப் பட்டவன் அல்ல, காலம் தனக்குக் கட்டுப்பட்டது என்பதை உணர்கிறான். எல்லா சொர்க்கங்களும் தனக்குள்ளேயே இருக்கின்றன, தான் எந்தச் சொர்க்கத்திலும் இல்லை என்பதை உணர்கிறான். மனிதன் வழிபட்ட தெய்வங்கள் எல்லாமே தனக்குள்ளேயே இருக்கின்றன, தான் எந்தத் தெய்வத்திற்கு உள்ளேயும் இல்லை என்பதை உணர்கிறான். தேவர்கள், பிசாசுகள், மனிதர்கள், தாவரங்கள், மிருகங்கள், கற்கள் எல்லாவற்றையும் படைத்தவன் தானேதான், தனது உண்மையான இயல்பு சொர்க்கத்தைவிட உயர்ந்தது, இந்தப் பிரபஞ்சத்தைவிட முழுமையானது, எல்லையற்ற காலத்தைவிட எல்லையற்றது, எங்கும் நிறைந்த ஆகாசத்தைவிட எங்கும் நிறைந்தது என்பதை உணர்கிறான்.

இவ்வாறு மட்டுமே மனிதன் அச்சம் அற்றவனாகவும் சுதந்திரனாகவும் ஆகிறான். அப்போது எல்லா பொய்த் தோற்றங்களும் துன்பங்களும் மறைகின்றன; என்றும் பயமற்ற நிலையை அவன் அடைகிறான். அவனுக்குப் பிறப்பு இல்லை, இறப்பு இல்லை; துன்பமும் இல்லை, அதனுடன் இன்பங்களும்

இல்லை; பூமி இல்லை, சொர்க்கங்களும் இல்லை; உடலும் மனமும் இல்லை. அவனுக்குப் பிரபஞ்சம் முழுவதுமே மறைந்தது போலாகிவிடுகிறது. இந்தத் தேடல், ஓடல், ஆற்றல்களின் இந்த இடையறாத போராட்டம் எல்லாம் நின்றுவிடுகின்றன. எந்தப் போராட்டமும் அவனுக்கு இல்லை. சக்தியாக, ஜடப்பொருளாக, இயற்கையின் போராட்டங்களாக, இயற்கையாக, சொர்க்கங்களாக, பூமிகளாக, தாவரங்களாக, மிருகங்களாக, மனிதர்களாக, தேவதைகளாக இதற்குமுன் தோன்றியவை இப்போது, வேறுபடாத, மாற்றமற்ற எல்லையற்ற ஒன்றாக அவனுக்குத் தெரிகிறது. இவ்வாறு அனுபவம் பெற்றவன், அந்த ஒன்று, தானே என்பதை உணர்கிறான்.

'பல வண்ண மேகங்கள், ஆகாயத்தில் தோன்றி, சிறிது நேரம் இருந்துவிட்டு மறைகின்றன.' அதுபோல் பூமிகள், சொர்க்கங்கள், சந்திரன், தேவர்கள், இன்பதுன்பங்கள் எல்லாம் காட்சிகள்போல் ஆன்மாவின் முன் தோன்றுகின்றன. மேகங்கள் மறைந்ததும் என்றும் மாற்றமடையாத, எல்லையற்ற ஒரே நீல வானம் வெளிப்படுகிறது. வானம் மாறுவதே இல்லை; மேகங்களே மாறுகின்றன. வானம் மாறுகிறது என்று நினைப்பதே தவறு. நாம் தூய்மை அற்றவர்கள், எல்லைக்கு உட்பட்டவர்கள், தனித்தனியானவர்கள் என்றெல்லாம் நினைப்பது தவறு. உண்மை மனிதன் ஒன்றேயான பரம்பொருளே.

இப்போது இரண்டு கேள்விகள் எழுகின்றன. 'இதை உணர்வது சாத்தியமா? இதுவரை இது கோட்பாடாக, தத்துவமாக இருந்தது. ஆனால் இதை உண்மையில் உணர முடியுமா?' என்பதே முதல் கேள்வி. நிச்சயம் முடியும். மாயையின் பிடியிலிருந்து நிரந்தரமாக விடுபட்ட மனிதர்கள் இன்றும் உலகில் இருக்கிறார்கள். இந்த அனுபூதி வந்தவுடனேயே அவர்கள் இறந்து விடுகிறார்களா என்ன? நாம் நினைப்பதுபோல் அவ்வளவு சீக்கிரம் அவர்கள் இறப்பதில்லை. ஒரே அச்சில் இணைந்த இரு சக்கரங்கள் ஒன்றாக ஓடிக் கொண்டிருக்கின்றன. அவற்றில் ஒன்றைப் பிடித்துக்கொண்டு, ஒரு கோடரியால், அச்சை நான் வெட்டிவிடுகிறேன் என்று வைத்துக் கொள்வோம். நான் பிடித்துக் கொண்டிருக்கும் சக்கரம் நின்றுவிடுகிறது. ஆனால் மற்றொரு சக்கரம், ஏற்கனவே உள்ள உந்துசக்தியால் சிறிது தூரம் ஓடி, பிறகு கீழே விழுகிறது.

தூய்மையானதும் முழுமையானதுமான இந்த ஆன்மா ஒரு சக்கரம். பொய்த் தோற்றங்களான உடலும் மனமும்

இன்னொரு சக்கரம். இவை இரண்டையும் கர்மவினை என்ற அச்சு பிணைக்கிறது. ஞானமே இந்தப் பிணைப்பைத் துண்டிக்கும் கோடரி. ஆன்மாவாகிய சக்கரம் உடனே நின்று விடும். தான் வருவதாகவும் போவதாகவும், வாழ்வதாகவும் சாவதாகவும், தான் இயற்கையே என்று நினைப்பதையும் தனக்குத் தேவைகளோ ஆசைகளோ இருப்பதாக நினைப் பதையும் அது நிறுத்திவிடும். தான் முழுமையானதும், ஆசை யற்றதுமான ஒன்றே என்பதை அது உணர்ந்துகொள்ளும். ஆனால் உடலும் மனமுமாகிய மற்றொரு சக்கரத்திலோ, கர்ம வினையின் உந்துசக்தி இன்னும் ஓயவில்லை. எனவே அது தீரும்வரை வாழ்ந்து, கர்ம வினையைத் தீர்த்துவிட்டுப் பிறகு நின்றுவிடுகிறது; உடலும் மனமும் வீழ்கிறது, ஆன்மா விடுதலை அடைகிறது.

இதற்குப் பின் ஏதோ ஒரு சொர்க்கத்திற்குப் போவதும் திரும்பி வருவதும் இல்லை. பிரம்மலோகத்திற்கும் வேறெந்த மிக உயர்ந்த உலகங்களுக்கும் போவதோ வருவதோ இல்லை. அவன் எங்கே போவது? எங்கிருந்து வருவது? இந்த உலகில் வாழும்போதே, ஒரு நிமிட நேரமாவது இந்த நிலையை அடைந்தவனுக்கு உலகின் சாதாரணத் தோற்றம் மறைந்து, உண்மை உள்ளபடி தெரிகிறது. அவன் ஜீவன் முக்தன் என்று அழைக்கப்படுகிறான். வாழும்போதே முக்தி பெறுகின்ற இந்த நிலைதான் வேதாந்திகளின் குறிக்கோள்.

ஒருமுறை மேற்கு இந்தியாவில் இந்துமகா சமுத்திரத் தின் கரையோரத்திலுள்ள ஒரு பாலைவனப் பிரதேசத்தில் நான் பயணம் செய்துகொண்டிருந்தேன். நாட்கணக்கில் அந்தப் பாலைவனத்தின் வழியாக நான் நடந்து சென்றேன். ஆச்சரியம் என்னவென்றால் அழகிய ஏரிகள் அங்கே தினமும் என் கண் களில் தென்படும். சுற்றிலும் மரங்கள் உயர்ந்து நிற்கும். அந்த மரங்களின் நிழல்கள், ஏரிகளில் தலைகீழாக அசைந்து கொண்டிருப்பதையும் நான் பார்த்தேன். 'ஆகா எத்தனை அற்புதமாக இருக்கிறது! இதைப் போய் பாலைவனம் என் கிறார்களே!' என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். இவ்வாறு அழகிய ஏரிகளையும் மரங்களையும் பார்த்தவாறே ஒரு மாதம் பயணம் செய்தேன். ஒருநாள் எனக்கு மிகவும் தாகமெடுத்தது. தண்ணீர் குடிப்பதற்காக இந்தத் தெளிந்த நீர் நிறைந்த அழகிய ஏரிகளுள் ஒன்றை நோக்கிச் சென்றேன். நான் அதை நெருங்கியபோதோ அது மறைந்துவிட்டது. 'ஆ,

வாழ்நாள் முழுவதும் நான் கேள்விப்பட்ட கானல்நீர் இதுதான்' என்று எண்ணிக் கொண்டேன். ஒரு மாதமாகத் தினந்தோறும் கானல்நீரையே பார்த்தும், அது கானல்நீர் என்று தெரிய வில்லையே என்ற எண்ணம் தோன்றியது. அடுத்த நாள் காலை யில் மறுபடியும் பயணத்தைத் தொடங்கினேன். மறுபடியும் ஏரிகள் தெரிந்தன. ஆனால் அது வெறும் கானல்நீரே, ஏரியல்ல என்ற அறிவும் கூடவே தோன்றியது.

இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றிய விஷயமும் இப்படித்தான். கானல் நீராகிய இந்த உலகில் நாட்கணக்காக, மாதக்கணக் காக, வருடக்கணக்காக, அது கானல்நீர் என்று தெரியாமலே பயணம் செய்து கொண்டிருக்கிறோம். ஒருநாள் இந்தத் தோற்றம் மறையும். ஆனால் மறுபடியும் வரும். வினைப் பயனின் சக்திக்குக் கட்டுப்பட்டே உடல் இயங்குகிறது. எனவே அது தீரும்வரை இந்தக் கானல்நீர் தோன்றவே செய்யும். முன்பிருந்தது போலவே ஆண், பெண், மிருகங்கள், தாவரங்கள், ஆசாபாசங்கள், கடமைகள் என்று எல்லாம் வந்துசேரவே செய்யும். ஆனால் இவையெல்லாம் முன்னைப்போல் அவ்வளவு சக்தி உடையவையாக இருக்காது. இந்தப் புதிய ஞானத்தால் கர்மவினையின் வலிமை முறிந்துவிடும்; விஷத்தன்மை மறைந்து விடும். அது முற்றிலும் மாறிவிடும். ஏனென்றால், கானல்நீரைப் பார்க்கும்போதே, அதற்கும் உண்மைக்கும் உள்ள வேறுபாடு நமக்குத் தெரியும்.

இனி, இந்த உலகம் முன்னைப்போல் நம் கண்ணுக்குத் தென்படாது. இங்கே ஓர் ஆபத்து உள்ளது. எல்லா நாடுகளிலும் சிலர் இந்தத் தத்துவத்தை ஏற்றுக்கொண்டு, 'நான் தர்மம், அதர்மம் எல்லாவற்றையும் கடந்தவன். எந்த ஒழுக்க விதியும் என்னைக் கட்டுப்படுத்தாது. நான் என் விருப்பம்போல் செய் வேன்' என்று சொல்லித் திரிவதைக் காணலாம். 'நான் கட்டுப் பட்டவன் அல்ல. நானே கடவுள்; நான் எதை வேண்டு மானாலும் செய்வேன்' என்று சொல்கின்ற பல முட்டாள்களை இந்த நாட்டிலும் காணலாம். பௌதீக, மன, ஒழுக்க விதி களுக்கெல்லாம் அப்பாற்பட்டது ஆன்மா என்பது உண்மை யாக இருந்தாலும், இவர்கள் சொல்வது சரியல்ல. விதிகளுக்குக் கட்டுப்பட்டது பந்தம், விதிகளுக்கு அப்பாற்பட்டது சுதந்திரம். சுதந்திரம் ஆன்மாவின் இயல்பு; அது ஆன்மாவின் பிறப்புரிமை என்பது உண்மைதான். அந்தச் சுதந்திரமே ஜடப்பொருள் என்னும் திரை வழியாக போலிச் சுதந்திரமாக ஒளிவிடுகிறது.

வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் நாம் சுதந்திரமானவர்கள் என்று உணர்கிறோம். அந்த உணர்வு இல்லாமல் நம்மால் ஒரு கணம்கூட வாழவோ, பேசவோ, மூச்சுவிடவோ முடியாது. அதேவேளையில், சிறிது சிந்தித்தாலே நாம் வெறும் எந்திரங் களைப் போல்தான் இருக்கிறோம், சுதந்திரமாக இல்லை என்பது விளங்கிவிடும்.

அப்படியானால் எது உண்மை? சுதந்திரம் என்ற கருத்து வெறும் பிரமைதானா? ஆம், பிரமைதான் என்று ஒரு பிரிவு கூறுகிறது. இல்லை, பந்தம் என்ற கருத்துதான் பிரமை என்று மற்றொரு பிரிவு கூறுகிறது. இது எப்படி நடக்கிறது? மனிதன் உண்மையில் சுதந்திரனே; உண்மையான மனிதன் சுதந் திரனாகத்தான் இருக்க முடியும். மாயையின் இந்த உலகத் திற்குள் நுழைந்தவுடன்தான், நாமரூபத்திற்கு உட்படும் போதுதான் அவன் கட்டுப்படுகிறான். சுதந்திர சங்கல்பம் என்பதே தவறு. சங்கல்பம் ஒருபோதும் சுதந்திரமாக இருக்க முடியாது. அது எப்படி இருக்க முடியும்? உண்மையான மனிதன் பந்தத்திற்கு உள்ளாகும்போதுதான் சுயேச்சை தோன்றுகிறது; அதற்கு முன் இல்லை. மனிதனின் சங்கல்பம் கட்டுப்பட்டது; ஆனால் அந்தச் சங்கல்பத்திற்கு அடிப்படையாக இருப்பது என்றென்றும் சுதந்திரமானது.

பூமியிலோ, சொர்க்கத்திலோ, மனித வாழ்க்கை அல்லது தேவ வாழ்க்கை என்று நாம் சொல்லும் கட்டுப்பட்ட நிலை களிலோகூட, நமது தெய்வீக உரிமையான சுதந்திரத்தின் நினைவு நமக்கு இருந்துகொண்டேதான் இருக்கும். தெரிந்தோ தெரியாமலோ அதை அடைவதற்காகவே நாம் போராடு கிறோம். ஒரு மனிதன் தனக்கே உரித்தான சுதந்திர நிலையைப் பெற்றுவிட்டால், எந்த விதிதான் அவனைக் கட்டுப்படுத்த முடியும்? இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எந்த நியதியும் அவனைக் கட்டுப்படுத்த முடியாது. ஏனென்றால் இந்தப் பிரபஞ்சமே அவனுடையதுதான்.

அவனே பிரபஞ்சம். அவனே பிரபஞ்சம் என்றோ, அவனைப் பொறுத்தவரை பிரபஞ்சம் என்பது இல்லை என்றோ, எப்படி வேண்டுமானாலும் சொல்லலாம். பால்வேறு பாடு, நாடு போன்ற குறுகிய கருத்துக்கள் அவனுக்கு எப்படித் தோன்ற முடியும்? நான் ஆண், நான் பெண், நான் குழந்தை என்று அவன் எப்படிச் சொல்லிக்கொள்ள முடியும்? அவை பொய்கள் அல்லவா? அவை பொய்களே என்பது அவனுக்குத்

தெரியும். இவை ஆணின் உரிமைகள், இவை பெண்ணின் உரிமைகள் என்று எப்படிப் பிரித்துச் சொல்ல அவனால் முடியும்? யாருக்கும் உரிமைகள் இல்லை; தனித்தனியாக யாரும் இல்லை. ஆணோ பெண்ணோ இல்லை; ஆன்மாவிற்குப் பால் வேறுபாடே இல்லை. அது நிரந்தரமாகத் தூய்மையானது. நான் ஆண், நான் பெண், நான் இந்த நாட்டைச் சேர்ந்தவன், அந்த நாட்டைச் சேர்ந்தவன் என்று சொல்வதெல்லாம் அப்பட்டமான பொய். இந்த உலகம் முழுவதுமே எனது நாடு. இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே என்னுடையது. ஏனென்றால் இந்தப் பிரபஞ்சத்தையே நான் என் உடலாகக் கொண்டிருக்கிறேன். ஆனாலும் சிலர் இந்தக் கோட்பாடுகளை ஒப்புக் கொள்கின்ற அதேவேளையில், கேவலமானவை என்று சொல்லத்தக்க செயல்களிலும் ஈடுபடுகிறார்கள். ஏன் இப்படிச் செய்கிறீர்கள் என்று கேட்டால், அது 'உங்கள் மனமயக்கமே தவிர, நான் தவறே செய்ய முடியாது' என்று கூறுகிறார்கள். அவர்களைச் சோதித்தறிவது எப்படி? இதோ இப்படித்தான்:

தீமையும் நன்மையும் ஆன்மாவுடைய எல்லைக்குட்பட்ட வெளிப்பாடுகள். ஆனால் தீமை என்பது ஆன்மாவைச் சுற்றியிருக்கும் உறைகளுள் எல்லாவற்றிற்கும் வெளியில் இருக்கும் உறை; ஆன்மாவிற்கு மிகவும் அருகிலுள்ள உறை நன்மையே ஆகும். தீமையாகிய வெளியுறையைக் கிழித்துச் சென்றால்தான் உள்ளுறையாகிய நன்மையை அடைய முடியும். தீமை, நன்மை ஆகிய இரு உறைகளையும் கிழித்துச் சென்றால்தான் ஆன்மாவை அடைய முடியும். ஆன்மாவை அடைந்தவனுக்கு என்ன பந்தம் இருக்கிறது? ஏதோ சிறிது கர்மவினை, கடந்த பிறவியிலுள்ள உந்துசக்தியின் ஏதோ சிறு இயக்கம் அவ்வளவுதான். ஆனால் இது நல்ல கர்மவினை மட்டுமே. தீய வினைகளாகிய மாசுகள் முழுவதையும் எரித்து அழிக்காமல் யாராலும் உண்மையைக் காணவோ உணரவோ முடியாது. ஆகவே ஆன்மாவை அடைந்து, உண்மையை உணர்ந்தவனிடம் ஒட்டிக்கொண்டிருப்பதெல்லாம் நல்வினைகளின் மிச்சம் மட்டுமே.

இந்த உடலிலேயே அவன் வாழ்ந்து, இடையறாது வேலை செய்தாலும், அது நற்பணியாகவே இருக்கும். அவனது வாயிலிருந்து எல்லோருக்கும் ஆசீர்வாதமே வெளிவருகிறது. அவனுடைய கைகள் நற்பணியை மட்டுமே செய்கின்றன. அவனுடைய மனத்தால் நல்ல எண்ணங்களை மட்டுமே நினைக்க

முடிகிறது. அவன் போகும் இடங்களெல்லாம் ஆனந்தம் நிறைவு பெற்றதாகிறது. அவன் ஆசிகளின் மொத்த உருவமாகத் திகழ்கிறான். அத்தகையவனின் திருமுன்னிலையில் மிகவும் கொடியவர்கள்கூட மகான்களாகி விடுகிறார்கள். அவன் வாய் திறந்து பேசாதிருந்தால்கூட, அவனுடைய சான்னித்தியமே மக்களுக்குப் பெரும்பேறாக விளங்குகிறது. அத்தகையவன் தீமை செய்ய முடியுமா? கொடிய செயல்கள் செய்ய முடியுமா? வெறும் பேச்சும் ஆன்ம அனுபூதியும் இரண்டு துருவங்கள். எந்த முட்டாளாலும் பேச முடியும். கிளிகள்கூடப் பேசுகின்றன. பேசுவது வேறு, உண்மையை உணர்வது வேறு. தத்துவங்கள், கோட்பாடுகள், வாதங்கள், புத்தகங்கள், கொள்கைகள், கோயில்கள், மதப் பிரிவுகள் இவையெல்லாம் தத்தம் வழியில் சிறந்தவையே. ஆனால் அனுபூதி வரும்போது இவை விலகி விடுகின்றன.

உதாரணமாக, தேசப் படங்கள் பயனுள்ளவைதான். ஆனால் நாட்டை நேரடியாகப் பார்த்துவிட்டு, அதன்பிறகு படத்தைப் பார்த்தால் எவ்வளவு வேறுபாடு தெரிகிறது! ஆகவே உண்மையை உணர்ந்தவர்களுக்கு, தர்க்கவாதத்தின் சிக்கலான முறைகளோ கடுமையான அறிவுப் பயிற்சிகளோ தேவையில்லை. உண்மை அவர்களுடைய ரத்தத்தோடு ரத்தமாக ஊறிவிட்டது. அவர்கள் உண்மையின் உருவமாகவே இருக்கிறார்கள். வேதாந்த ரிஷிகள் சொல்வதுபோல், உண்மை அவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் இருக்கிறது. நீங்கள் எழுந்து நின்று 'இதோ இருக்கிறது' என்று சொல்கிறீர்கள். அதேபோல், உண்மையை உணர்ந்தவர்கள், 'இதோ, ஆன்மா இருக்கிறது' என்று தைரியமாகச் சொல்ல முடியும்.

நாம் அவர்களோடு வருடம் முழுவதும் வாதாடலாம். ஆனால் அவர்கள் நம்மைப் பார்த்துப் புன்னகை செய்வார்கள். நம்முடைய வாதங்களையெல்லாம் குழந்தையின் உளறலாகவே அவர்கள் மதிப்பார்கள். குழந்தைதானே, உளறட்டும் என்று விட்டுவிடுவார்கள். அவர்கள் உண்மையை உணர்ந்து விட்டார்கள், நிறைநிலையை அடைந்துவிட்டார்கள். நீங்கள் ஒரு நாட்டைப் பார்த்திருக்கிறீர்கள் என்று வைத்துக் கொள்வோம். வேறொருவன் வந்து அப்படி ஒரு நாடே இல்லை என்று வாதாடுகிறான். அவன் தொடர்ந்து வாதாடிக்கொண்டே போகலாம், அவ்வளவுதான். உங்களைப் பொறுத்தவரை, அவன் ஒரு பைத்தியக்காரன் என்ற எண்ணம்தான் உறுதியாக இருக்கும்.

உலகில் மனிதர்கள் இந்தச் சிறிய மதங்களைப் பற்றியெல்லாம் பேசுவது வெறும் உளறலே; மதம் என்பதன் முழு சாரம் ஆன்ம அனுபூதிதான் என்று ஆன்மஞானி கூறுகிறான். ஆன்ம அனுபூதியை நாம் பெற முடியும். அதற்குத் தயாராக இருக்கிறீர்களா? அதை விரும்புகிறீர்களா? விரும்புவீர்களானால், நிச்சயம் அதனைப் பெறுவீர்கள்; உண்மையான ஆன்மீகவாதிகள் ஆவீர்கள். அனுபூதி பெறும்வரை உங்களுக்கும் நாத்திகர்களுக்கும் வித்தியாசமில்லை. நாத்திகர்கள் வேஷம் போடுவதில்லை. ஆனால் ஆன்மீகத்தில் நம்பிக்கை வைத்திருக்கிறேன் என்று சொல்லிக்கொண்டே, அதை அனுபூதியில் அடைய முயலாதவன் வேஷதாரியே.

அனுபூதிக்குப் பிறகு என்ன என்பதே அடுத்த கேள்வி. இந்தப் பிரபஞ்சத்தின் ஒருமையை, ஒன்றேயான எல்லையற்ற பரம்பொருள் நாமே, இருப்பது ஆன்மா ஒன்றுதான், பல்வேறு உருவங்களாக வெளிப்பட்டுத் தோன்றுவது அதுவே என்பதையெல்லாம் அனுபூதியில் நாம் உணர்ந்துவிட்டதாக வைத்துக் கொள்வோம். அதற்குப் பிறகு நமக்கு என்ன நேர்கிறது? நாம் செயலற்றுப் போய், ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு, அப்படியே இறந்து விடுவோமா? 'அதனால் உலகிற்கு என்ன நன்மை?' அதே பழைய கேள்வி! முதலில் உலகிற்கு இது ஏன் நன்மை செய்ய வேண்டும்? இது உலகிற்கு நன்மை செய்ய வேண்டும் என்பதற்குக் காரணம் ஏதாவது இருக்கிறதா? 'இதனால் உலகிற்கு என்ன நன்மை?' என்று கேட்பதற்கு யாருக்கு உரிமை இருக்கிறது? அதற்கு என்ன பொருள்?

ஒரு குழந்தைக்கு மிட்டாய் பிடிக்கிறது. நீங்கள் மின்சார சம்பந்தமான ஆராய்ச்சிகளைச் செய்துகொண்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். அந்தக் குழந்தை, 'இதனால் மிட்டாய் கிடைக்குமா?' என்று கேட்கிறது. 'கிடைக்காது' என்று பதில் சொல்கிறீர்கள்.' 'அப்படியானால் உன் ஆராய்ச்சியால் என்ன நன்மை?' என்று கேட்கிறது குழந்தை. 'அனுபூதியினால் உலகிற்கு என்ன நன்மை? எங்களுக்கு இதனால் பணம் கிடைக்குமா?' என்று கேட்பதும் அது போன்றதே. அதற்கு 'கிடைக்காது' என்ற பதில் கிடைத்ததும், 'அப்படியானால், இதனால் என்ன நன்மை?' என்று கேட்கிறார்கள். உலகிற்கு நன்மை செய்வது என்பதை இந்தப் பொருளில்தான் நினைக்கிறார்கள். ஆனாலும், ஆன்ம அனுபூதி உலகிற்குப் பெரும் நன்மை தருகிறது.

அந்த நிலையை அடைந்தால், இருப்பது ஒன்றே என்பதை அனுபூதியில் உணர்ந்தால் அன்பின் ஊற்றுக்கள் எல்லாம் வற்றிவிடும், வாழ்க்கையில் எல்லாவற்றையும் இழந்து விடுவோம், இந்த வாழ்க்கையில் மட்டுமல்லாமல், வரப்போகும் வாழ்க்கையிலும் தங்களுக்குப் பிடித்த எல்லாவற்றையும் இழந்து விடுவோம் என்று மனிதர்கள் பயப்படுகிறார்கள். தங்களைப் பற்றி மிகச் சிறிதே நினைத்தவர்கள்தாம், உலகின் மிகப்பெரிய செயல்வீரர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதை இவர்கள் ஒரு கணம்கூட நினைத்துப் பார்ப்பதில்லை.

தான் அன்பு செலுத்தும் பொருள், சாதாரணமான, சிறிய, அழியக் கூடிய பொருளல்ல என்று உணரும்போது தான் மனிதன் அன்பு செலுத்துகிறான். தான் அன்பு செலுத்தும் பொருள் ஒரு மண்கட்டியல்ல, கடவுளே என்று உணரும் போதுதான், ஒரு மனிதன் அன்பு செலுத்துகிறான். கணவன் கடவுளே என்று நினைத்தால் மனைவி கணவனை அதிகமாக நேசிப்பாள். மனைவியே கடவுள் என்று உணரும்போது கணவன் மனைவியை அதிகமாக நேசிப்பான். குழந்தைகள் கடவுளே என்று நினைக்கும் தாய் குழந்தைகளை அதிகமாக நேசிப்பாள். தன்னுடைய மிகப் பெரிய எதிரி கடவுளே என்று உணர்பவன் எதிரியையும் நேசிப்பான். ஒரு சாது கடவுளே என்று அறிபவன், அவரை மிகவும் நேசிக்கிறான். அதே மனிதன், மிகக் கொடிய பாவியையும் நேசிக்கிறான்; ஏனெனில் பாவியில் உறைவதும் கடவுளே என்பதை அவன் உணர்கிறான்.

அத்தகைய மனிதனால் உலகத்தையே அசைக்க முடியும். அவனிலுள்ள சாதாரண மனிதன் அழிந்து, அந்த இடத்தில் கடவுள் மட்டுமே நிற்கிறார். இந்தப் பிரபஞ்சமே அவனுக்கு முற்றிலும் மாறிவிடுகிறது. துன்பமான துயரமான எல்லாமே அழிந்துவிடுகின்றன; எல்லா போராட்டங்களும் மறைந்து விடுகின்றன. ஒரு கவளம் சோற்றிற்காகத் தினமும் ஈடுபடும் போராட்டங்களும் சண்டைகளும் நிறைந்த சிறைச்சாலையாக இல்லாமல், இந்தப் பிரபஞ்சம் ஒரு விளையாட்டு மைதானமாக மாறிவிடும். அப்போது இந்தப் பிரபஞ்சமே மிக அழகாக இருக்கும். அத்தகைய மனிதனுக்கு மட்டுமே, 'இந்த உலகம் எவ்வளவு அழகாக இருக்கிறது!' என்று சொல்ல உரிமை உண்டு. எல்லாம் நல்லனவாகவே இருக்கின்றன என்று சொல்லும் உரிமை அவனுக்கு மட்டுமே உண்டு.

இந்த அனுபூதியால் உலகிற்கு ஏற்படும் நன்மை இதுதான். அதாவது, சண்டையும் பூசலும் நிறைந்த இந்த உலகில், அந்த உயர்ந்த உண்மையின் ஒரு சிறு பகுதியையாவது மனிதகுலம் உணருமானால், உலகின் பார்வை முழுவதும் மாறி, சண்டையும் பூசலும் இருந்த இடத்தில், அமைதி ஆட்சி புரியும் என்பதே இந்த நன்மை. மற்றவர்களை முந்த வேண்டும் என்ற இந்த நாகரீகமற்ற, மிருகத்தனமான வேகம் அப்போது உலகிலிருந்து நீங்கிவிடும். அதனுடன் எல்லா போராட்டங்களும் நீங்கும். எல்லா வெறுப்புகளும் விலகும், எல்லா பொறாமைகளும் நீங்கும், எல்லா தீமைகளும் திரும்பி வராமல் மறைந்துவிடும். இந்தப் பூமியில் தெய்வங்களே வசிப்பார்கள். பூமியே சொர்க்கமாகிவிடும். தெய்வங்களே தெய்வங்களோடு விளையாடும் போது, தெய்வங்களே தெய்வங்களோடு சேர்ந்து பணி புரியும் போது, தெய்வங்களே தெய்வங்களிடம் அன்பு செலுத்தும் போது என்ன தீமை இருக்க முடியும்? தெய்வீக அனுபூதியின் மிகப்பெரிய பயன் இதுதான்.

அப்போது சமுதாயத்தில் நீங்கள் பார்க்கும் எல்லாமே முற்றிலுமாக மாறிவிடும். தீயவன் என்று யாரையுமே நினைக்க முடியாது. இதுவே முதல் பெரிய லாபம். தவறு செய்தவர்கள் ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் அவர்களை அவமதிக்க மாட்டார்கள். இரவில் தெருவில் நடக்கும் ஏழைத் தாசியைக்கூடப் பெண்கள் கேவலமாகப் பார்க்க மாட்டார்கள். ஏனென்றால் அவளிடமும் கடவுளையே காண்பார்கள். பொறாமை, தண்டனை என்ற எண்ணங்களே எழாது. அவை எல்லாமே மறைந்துவிடும். அப்போது அன்பு, மிக உன்னதமான லட்சியமாகிய அன்பு மிகச் சக்தி வாய்ந்ததாகிவிடும். எனவே மனிதகுலத்தைச் சரியான பாதையில் செலுத்துவதற்குச் சாட்டையும் சவுக்கும் தேவையாக இருக்காது.

இந்த உலக மக்களுள் கோடியில் ஒரு பங்கு மனிதர்கள் ஓரிடத்தில் அமர்ந்து, 'ஓ மனிதர்களே, ஓ மிருகங்களே, ஓ உயிருள்ள பிராணிகளே, நீங்கள் எல்லோரும் வாழும் இறைவனின் வெளிப்பாடுகளே' என்று சில நிமிடங்கள் சொன்னால் போதும். அரைமணி நேரத்தில் இந்த உலகமே மாறிவிடும். வெறுப்பாகிய வெடிகுண்டுகளை மூலைக்குமூலை எறிவதற்குப் பதிலாக, பொறாமையை, தீமையை உலகில் பரப்புவதற்குப் பதிலாக, எல்லாம் அவனே என்று உலகம் முழுவதும் உள்ள மக்கள் நினைப்பார்கள்.

நீங்கள் பார்க்கின்ற, உணர்கின்ற எல்லாம் அவரே. உங்களுள் தீமை இல்லாமல் வெளியில் எப்படித் தீமையைப் பார்ப்பீர்கள்? உங்கள் இதயத்தில் எங்கோ மூலையில் திருடன் இல்லாவிட்டால் வெளியில் எப்படித் திருடனைப் பார்ப்பீர்கள்? நீங்களே கொலைகாரர்களாக இல்லாவிட்டால் வெளியில் எப்படி கொலைகாரர்களைப் பார்ப்பீர்கள்? நல்லவர்களாக இருங்கள், உங்களுக்குத் தீமை மறைந்துவிடும். இவ்வாறு பிரபஞ்சம் முழுவதுமே மாறிவிடும். சமுதாயத்திற்குக் கிடைக்கும் மிகப் பெரிய லாபம் இது. மனிதனுக்குக் கிடைக்கும் மிகப் பெரிய லாபமும் இதுதான்.

இந்தியாவில், மிகப் பழங்காலத்தில், இந்த எண்ணங்களை ஆராய்ந்து, முறைப்படுத்தி வைத்திருந்தார்கள். போதிய ஆசிரியர்கள் இல்லாமை, அன்னியர் படையெடுப்பு போன்ற பல்வேறு காரணங்களால் இந்த எண்ணங்கள் பரவுவது தடைப்பட்டது. ஆனால் இவை மகோன்னதமான உண்மைகள். எங்கெல்லாம் இந்த உண்மைகள் கடைப்பிடிக்கப்பட்டனவோ அங்கெல்லாம் மனிதன் தெய்வம் ஆனான். இத்தகைய தெய்வ மனிதர் ஒருவரின் சேர்க்கையால் என் வாழ்க்கை முழுவதுமே மாறிவிட்டது. அவரைப்பற்றி அடுத்த ஞாயிற்றுக்கிழமை உங்களிடம் பேசுகிறேன். இந்தச் சிந்தனைகள் உலகம் முழுவதும் பரவும் காலம் வந்து கொண்டிருக்கிறது. மடங்களிலும் ஏதோ சில பண்டிதர்கள் மட்டுமே படிக்கக்கூடிய தத்துவ நூல்களிலும், குறிப்பிட்ட பிரிவினருடையவும் பண்டிதர்களுடையவும் ஏகபோக உரிமையாகவும் மட்டுமே இல்லாமல், உலகம் முழுவதும் அவை பரவும். பாவி, புண்ணியவான், ஆண், பெண், குழந்தை, படித்தவன், பாமரன் எல்லோருடையவும் பொதுச் சொத்தாகிவிடும். அதன்பின்னர் அவை உலகத்தின் சூழ்நிலையோடு கலந்து ஒன்றாகிவிடும். நாம் விடும் ஒவ்வொரு மூச்சும், 'நீயே அது' என்று ஒலிக்கும். கோடிக் கணக்கான சூரிய சந்திரர்களைக் கொண்ட இந்தப் பிரபஞ்சம், எல்லாவற்றின் மூலமாகவும், ஒரே குரலில் 'நீயே அது' என்றே சொல்லும். ❑

# II. சொற்பொழிவுக் குறிப்புகள்

## 1. முக்தி பெறுவது எப்படி?

7 மார்ச் 1900

இயற்கையில் உள்ளவை எல்லாம் நியதிப்படி இயங்குகின்றன. எதுவும் இதற்கு விதிவிலக்கல்ல. மனமும் புற உலகிலுள்ள அனைத்தும் நியதியால் ஆளப்பட்டும், அடக்கப்பட்டும் வருகின்றன.

அக இயற்கை, புற இயற்கை, மனம், ஜடப்பொருள் ஆகிய எல்லாம் காலம், இடம் என்னும் இரண்டிற்கும் உள்ளடங்கியவை; காரண, காரிய நியதிக்குக் கட்டுப்பட்டவை.

மனத்தின் சுதந்திரம் என்பது ஒரு மனமயக்கம். ஒரு நியதிக்குக் கட்டுப்பட்டு இயங்குவதான மனம் எப்படிச் சுதந்திரமாக இருக்க முடியும்?

கர்மநியதி என்பது காரணகாரிய நியதியேயாகும்.

நாம் சுதந்திரமானவர்களாக வேண்டும், முக்தர்களாக வேண்டும். முக்தர்களாகவே இருக்கிறோம், அதை அறிவதே நாம் செய்ய வேண்டிய வேலை. அடிமைத்தனம் எல்லாவற்றையும், பந்தபாசங்கள் எல்லாவற்றையும் விட வேண்டும். இந்த உலகுடனும், உலக மக்களுடனும், உலகப் பொருட்களுடனும் மட்டுமல்ல, சொர்க்க போகம் போன்றவற்றுடனும் நமது பற்றை அறவே ஒழிக்க வேண்டும்.

ஆசையினால் இந்த உலகத்தில் நாம் கட்டுண்டிருக்கிறோம்; கடவுள், சொர்க்கம், தேவர் என்று பலதாலும் பலராலும் கட்டுப்பட்டிருக்கிறோம். மனிதர்களுக்கு ஆனாலும் சரி, தேவர்களுக்கு ஆனாலும் சரி, கடவுளுக்கு ஆனாலும் சரி, யாருக்கு அடிமையாக இருந்தாலும் அடிமை அடிமையே.

சொர்க்கத்தைப்பற்றிய எண்ணம் நீங்க வேண்டும். சொர்க்கம் என்ற ஒன்று இருக்கிறது, மரணத்திற்குப் பிறகு நல்லவர்கள் அங்கே நிரந்தரமாக மகிழ்ச்சியுடன் வாழ்கிறார்கள் என்பதெல்லாம் பகற்கனவு; துளியும் கருத்தற்றவை, பொருள் அற்றவை. எங்கே மகிழ்ச்சி இருக்கிறதோ, அங்கே எப்போதாவது துன்பம் தொடர்வது உறுதி. எங்கே இன்பம்

இருக்கிறதோ அங்கே துன்பமும் இருந்தே தீர வேண்டும். இது உறுதி, முக்காலும் உறுதி. ஒவ்வொரு செயலுக்கும் பிரதிச் செயல் இருக்கவே செய்கிறது.

சுதந்திரக் கருத்துதான் முக்தியைப்பற்றிய உண்மையான ஒரே கருத்து—எல்லாவற்றிலிருந்தும் விடுதலை, புலன்களிலிருந்து விடுதலை, இன்ப துன்பங்களிலிருந்து விடுதலை, நல்லவை கெட்டவை அனைத்திலிருந்தும் விடுதலை.

இதற்கும் மேலாக, மரணத்திலிருந்தும் நாம் விடுதலை பெற வேண்டும். மரணத்திலிருந்து விடுதலை பெற வேண்டுமானால், வாழ்விலிருந்தும் விடுதலை பெற வேண்டும். சாவு பற்றிய ஒரு கனவே வாழ்வு. வாழ்விருந்தால் சாவும் உண்டு. சாவு வேண்டாமென்றால் வாழ்வையும் ஒதுக்கித் தள்ளிவிடு.

நம்பிக்கை மட்டும் போதும், நாம் என்றும் முக்தர்களாகவே இருக்கிறோம். போதிய நம்பிக்கை ஒன்றே வேண்டுவது. நீ ஆன்மா, முக்தன், என்றும் உள்ளவன், என்றுமே சுதந்திரன், நிலைத்த ஆனந்தமானவன். இதைப் போதிய அளவு உறுதியாக நம்பு, மறுகணமே முக்தி பெறுவாய்.

காலம், இடம், காரணகாரியம் ஆகியவற்றிற்கு உட்பட்ட எதுவும் கட்டுப்பட்டதே. ஆன்மா என்பது காலம், இடம், காரணகாரியம் அனைத்திற்கும் அப்பாற்பட்டது. கட்டுப்பட்டிருப்பது இயற்கையே தவிர ஆன்மா அல்ல.

எனவே உனது முக்தியை முழங்கு; நீ யாரோ அப்படியே இரு. என்றும் சுதந்திரனாக, நிலைத்த ஆனந்த வடிவினனாக இரு.

காலம், இடம், காரணகாரியத்தையே நாம் மாயை என்கிறோம். ❑

## 2. ஆன்மாவும் கடவுளும்

23 மார்ச் 1900

வெளியில் (space) இருக்கின்ற எதற்கும் உருவம் உண்டு. வெளியும் உருவம் உடையதே. நீ வெளியில் இருக்கிறாய், அல்லது உன்னில் வெளி இருக்கிறது. ஆன்மா வெளி அனைத்திற்கும் அப்பாற்பட்டது. ஆன்மாவில் வெளி அடங்கும், ஆன்மா வெளியில் அடங்குவதில்லை.

உருவம் என்பது காலம், இடம் ஆகியவற்றிற்கு உள்ளடங்கியது; காரணகாரிய நியதிக்குக் கட்டுப்பட்டது. காலம் நம்முள் உள்ளது, நாம் காலத்துள் இல்லை. காலம், இடம் ஆகியவற்றில் அடங்கியதில்லை ஆன்மா; காலம், இடம் எல்லாம் ஆன்மாவில் அடங்கியவை. எனவே ஆன்மா எங்கும் நிறைந்தது.

நமது கடவுள்-கருத்து, நாம் நம்மைப்பற்றிக் கொண்டுள்ள கருத்தின் பிரதிபலிப்பே.

பண்டைய பாரசிக மொழிக்கும் சம்ஸ்கிருதத்திற்கும் பொதுச் சாயல்கள் உள்ளன.

இயற்கையின் பல்வேறு அம்சங்களுடன் இறைவனை ஒன்றுபடுத்துவதே அதாவது இயற்கை வழிபாடே ஆரம்ப காலத்தில் நமது கடவுள்-கருத்தாக இருந்தது. இதற்கு அடுத்த கட்டம் சிறு தெய்வ வழிபாடு; அதற்கும் அடுத்த கட்டம் மன்னர் வழிபாடு.

விண்ணுலகில் வாழும் ஆண்டவன்பற்றிய கருத்து இந்தியாவைத் தவிர மற்ற நாடுகள் எல்லாவற்றிலும் பிரபலமாக இருக்கிறது. இது சிறிதும் பண்படாத கருத்து.

வாழ்க்கை தொடர்கிறது என்ற கருத்து முட்டாள்தனமானது. நாம் வாழ்விலிருந்து விடுபடாமல் சாவிலிருந்து விடுபட முடியாது. ❑

## 3. லட்சியம்

27 மார்ச் 1900

கடவுளும் இயற்கையும் என்றென்றும் வேறுபட்டவை, பிரபஞ்சமும் இயற்கையும் என்றென்றும் கடவுளைச் சார்ந்திருக்கின்றன என்பது துவைதக் கருத்து.

தீவிர அத்வைதிகள் இத்தகைய வேறுபாட்டை ஏற்பதில்லை. ஆராய்ச்சியின் முடிவில் நாம் காணும் முடிவு எல்லாம் கடவுளே என்பதுதான் என்று அவர்கள் கூறுகிறார்கள்: அங்கே பிரபஞ்சம் கடவுளில் கரைந்துவிடுகிறது. கடவுளே பிரபஞ்சத்தின் அழியாத உயிர்.

அவர்களைப் பொறுத்தவரை எல்லையற்றது, எல்லைக்கு உட்பட்டது என்பவையெல்லாம் வெறும் சொற்கள் மட்டுமே. பிரபஞ்சம், இயற்கை முதலியவையெல்லாம் பெயரளவில்தான் வெவ்வேறாக உள்ளன. இயற்கையே பலவித வேறுபாடுகளைக் கொண்டதுதான்.

'கடவுள் ஏன் இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்தார்?', 'முழுமையானவர், முழுமை அல்லாத ஒன்றை ஏன் படைக்க வேண்டும்?' என்பது போன்ற கேள்விகளுக்கெல்லாம் ஒரு போதும் பதில் அளிக்க முடியாது. ஏனெனில் இத்தகைய கேள்விகள் நியாயமற்றவை, பொருத்தம் இல்லாதவை. தர்க்கமும் ஆராய்ச்சியும் இயற்கையில்தான் இருக்கின்றன, இயற்கைக்கு அப்பால் அவற்றிற்கு இடமில்லை. கடவுள் எல்லாம் வல்லவர், ஆகையால் அவர் ஏன் இதைச் செய்தார், ஏன் அதைச் செய்தார் என்று கேட்பது அவரை ஒரு வரையறைக்குள் கட்டுப்படுத்துவதாகும்; இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்ததில் அவருக்கு ஏதோ லாபம் உள்ளது என்றாகும். லாபம் இருந்தது என்றால் ஏதோ குறிக்கோளுக்கு ஒரு சாதனமாக அவர் படைப்பை மேற்கொண்டிருக்கிறார் என்றாகிறது. அதாவது இந்தச் சாதனம் இல்லாமல் அவரால் அந்தக் குறிக்கோளைக் கொள்ள முடியாது என்றாகிறது. மற்றொன்றைச் சார்ந்திருக்கும் ஒரு பொருளைப் பற்றித்தான் ஏன், எங்கிருந்து என்ற கேள்விகளெல்லாம் கேட்க முடியும். ❑

# 4. ஆன்மாவின் சுதந்திரம்

நமக்குக் கண்ணிருக்கிறது என்பதைக் காண்பதன்மூலமே அறிய முடியும். அதுபோல் ஆன்மாவையும் அதன் விளைவு களால்தான் அறிய முடியும். ஆன்மாவைப் புலனறிவு நிலைக்குக் கொண்டுவர முடியாது. இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத் திற்கும் காரணமாக அது இருந்தாலும் அதற்குக் காரணமானது எதுவும் இல்லை. இந்த ஆன்மாவே நாம் என்பதை எப்போது அறிகிறோமோ அப்போதுதான் நாம் சுதந்திரர்கள். ஆன்மா ஒருபோதும் மாறுதல் அடையாது. எந்தக் காரணமும் அதன்மீது செயல்பட முடியாது, ஏனெனில் அதுவே அனைத்திற்கும் காரணம். அது எந்தக் காரணமும் இன்றித் தன்னிச்சையாகவே உருவாகியது. வேறு எந்தக் காரணத்தாலும் செயல்படாத ஏதோ ஒன்றை நம்முள் நம்மால் காண முடியுமானால் நாம் ஆன்மாவை அறிந்துவிட்டோம்.

சுதந்திரம் என்பது மரணமிலாப் பெருநிலையுடன் பிரிக்க முடியாதபடி இணைந்த ஒன்று. சுதந்திரமாக இருக்க வேண்டு மானால் இயற்கையின் நியதிகளுக்கு அப்பாற்பட்டவனாக இருக்க வேண்டும். நாம் அறியாமையில் இருக்கும்வரைதான் நியதி நம்மைக் கட்டுப்படுத்தும். ஞானம் ஏற்படும்போது இந்த நியதிகள் எல்லாம் உண்மையில் நம்மில் உள்ள சுதந்திரமே என்று காண்போம். சங்கல்பம் ஒருபோதும் சுதந்திரமாக இருக்க முடியாது. ஏனெனில் அது காரணகாரியத்தின் அடிமை. ஆனால் இந்தச் சங்கல்பத்தின் பின்னணியில் இருக்கும் 'நான்' சுதந்திரமானது; அதுவே ஆன்மா. 'நான் சுதந்திரமானவன்' என்பதே நாம் வாழ்வை அமைத்துக்கொள்ள வேண்டிய அடிப் படையாகும். சுதந்திரம் என்பது மரணமிலாப் பெருநிலை. ❑

## 5. பிரபஞ்சமும் ஆன்மாவும்

இயற்கையில் உள்ள அனைத்தும் நுட்பமான விதை-உருவங்களிலிருந்து தோன்றுகின்றன, மேலும்மேலும் தூல வடிவம் பெறுகின்றன, சில காலம் வாழ்கின்றன, பிறகு, ஆரம்ப நுட்ப உருவில் ஒடுங்கிவிடுகின்றன. உதாரணமாக, நாம் வாழும் பூமி அண்டப்பிழம்பிலிருந்து (Nebulous) தோன்றியது, நாளடைவில் அது குளிர்ந்து இறுகி நாம் வாழும் இந்தப் பூமியாக மாறியது. எதிர்காலத்தில் இது சிதறித் துகள்துகள்களாகி தனது ஆரம்ப நிலையான அண்டப்பிழம்பில் கலந்துவிடும். நம் நினைவுக்கு எட்டாத காலத்திலிருந்து படைப்பு இப்படியே நடைபெற்று வருகிறது. இதுவே மனித வரலாறு, இயற்கையின் வரலாறு, உயிரின் வரலாறு.

ஒவ்வொரு பரிணாமத்திற்கு முன்னும் ஒடுக்கம் ஒன்று இருக்கும். மரம், அதன் காரணமான விதையில் உள்ளது. மனிதனின் முழுமையும் ஓர் உயிர்த்தாதுவில் (Protoplasm) உள்ளது. இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே நுட்பமான பிரபஞ்சக் கருவில் உள்ளது. இப்படியே ஒவ்வொன்றும் அதன் காரணத்தில் நுட்ப உருவில் ஒடுங்கி இருக்கிறது. பரிணாமம், அல்லது நுட்பத்திலிருந்து படிப்படியாகத் தூல உருவங்களாவது உண்மைதான். ஆனால் இத்தகைய பரிணாமம் ஒவ்வொன்றுக்கும் முன்னால் ஒடுக்கம் ஒன்று இருக்கும். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பரிணமிப்பதற்கு முன்பு ஒடுங்கியே இருந்திருக்க வேண்டும், அதன்பின் அது இப்படிப் பல்வேறு விதமாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்டது, பிறகு மீண்டும் ஒடுங்கி விடும்.

உதாரணமாக, ஒரு சிறு செடியின் வாழ்க்கையைக் கவனிப்போம். இந்தச் செடியை ஒரு தனி உயிர்ப் பொருளாக நாம் காண்பதற்கு இரண்டு அம்சங்கள் காரணமாகின்றன: ஒன்று அதன் வளர்ச்சியும் வாழ்வும், மற்றொன்று அதன் நலிவும் அழிவும். இந்த இரண்டும் சேர்ந்தே செடி என்ற ஒரு தனி உயிர்ப் பொருள் ஆகிறது. உயிர்க்குலம் முழுவதுமே ஒரு சங்கிலித்தொடர், அதில் ஒரு சங்கிலி தாவர இனம். இந்த

உயிர்த்தொடர், உயிர்த்தாது என்ற ஒரு சிறு கரு அணுவில் தோன்றிப் படிப்படியாகத் தாவரம், விலங்கு, பறவை என்று பரிணமித்து, நிறைமனிதனாக முடிகிறது. இந்தத் தொடரில் மனிதன் ஒரு சங்கிலி; விலங்குகள், பறவைகள், ஊர்வன, புழு முதலிய உயிர்களும் தாவரங்களும் பல்வேறு சங்கிலிகள். இப்போது இந்த எல்லாவகை உயிர்களுக்கும் முதற்கருவை ஆராய்ந்து பாருங்கள்; இதிலிருந்து பரிணமித்த பலவகை உயிரினங்களையும் ஒரே உயிரின் பல்வேறு தோற்றமாகப் பாருங்கள். ஒவ்வொரு பரிணாமமும் ஓர் ஒடுக்கத்தின் விரிவே என்பது விளங்கும்.

எங்கே தொடங்குகிறதோ அங்கே ஒடுங்குகிறது. இந்தப் பிரபஞ்சத்தின் முடிவு எது? அறிவு அல்லவா? பரிணாமவாதிகளின் கருத்துப்படி படைப்பில் கடைசிப் பரிணாமம் அறிவு. இதுவே படைப்பின் முடிவானால் இதுவே தொடக்கமாகவும் இருக்க வேண்டும். தொடக்கத்தில் இந்த அறிவு ஒடுங்கி இருந்தது, முடிவில் பரிணமிக்கிறது. எனவே இப்போது பிரபஞ்சத்தில் காணப்படுகின்ற மொத்த அறிவும் ஏற்கனவே ஒடுங்கியிருந்த ஒன்றுதான். இந்தப் பிரபஞ்ச அறிவையே நாம் கடவுள் என்கிறோம். இந்தக் கடவுளிலிருந்தே நாம் தோன்றினோம், அவரிடமே சென்று சேர்வோம் என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. எந்தப் பெயரால் வேண்டுமானாலும் அழையுங்கள், ஆனால் எல்லையற்ற இந்தப் பிரபஞ்ச அறிவு ஆரம்பத்தில் இருந்தது என்பதை மறுக்க முடியாது.

கூட்டுப்பொருள் என்பது என்ன? காரணப் பொருட்கள் பல ஒன்றுசேர்ந்து ஒரு காரியப் பொருளாக மாறுவதுதானே! எனவே இந்தக் கூட்டுப்பொருட்கள் எல்லாம் காரணகாரிய நியதிக்குக் கட்டுப்பட்டவையாகவே இருக்க வேண்டும். காரண காரிய நியதிகளின் எல்லைவரை மட்டுமே கூட்டுப்பொருட்களும் சேர்க்கைகளும் இருக்க முடியும். அதற்கு அப்பால் சேர்க்கை பற்றிய பேச்சுக்கே இடம் இல்லை; ஏனெனில் எந்த நியதியும் அங்கே செல்லாது. நாம் கண்டும் கேட்டும் உணர்ந்தும் கற்பனை செய்தும் கனவு கண்டும் இயங்குகின்ற இந்தப் பிரபஞ்சத்தில்தான் நியதிகளுக்கு இடமுண்டு. அதற்கும் அப்பால் நியதி என்ற கருத்திற்கே இடமில்லை. நாம் அறிவது அல்லது கற்பனை செய்வதுதான் நமது பிரபஞ்சம்; இனி, நமது புலன்களின் நேரடித் தொடர்பில் வருபவற்றையே நாம் அறிகிறோம், நமது மனத்தில் உள்ளவற்றையே கற்பனை

செய்கிறோம். உடம்பிற்கு அப்பாற்பட்டவை புலன்களுக்கும் அப்பாற்பட்டவை; மனத்திற்கு அப்பாற்பட்டவை கற்பனைக் கும் அப்பாற்பட்டவை, எனவே பிரபஞ்சத்திற்கு அப்பாற் பட்டவை, அதனால் காரணகாரிய நியதிக்கும் அப்பாற் பட்டவை. ஆன்மா காரணகாரிய நியதிக்கு அப்பாற்பட்டது. ஆதலால் கூட்டுப்பொருளாக இருக்க முடியாது. ஆன்மா எந்தக் காரணத்தின் காரியமும் அல்ல. எனவே அது என்றும் சுதந்திரமானது, நியதிக்குக் கட்டுப்பட்ட அனைத்தையும் ஆள்வது அது. கூட்டுப்பொருள் அல்லாததால் அதற்கு மரணம் இல்லை. ஏனெனில் மரணம் என்பது முதற்காரணமான தனிப் பொருட்களாவது; அழிவு என்பது, தான் தோன்றக் காரணமாக இருந்த ஒன்றில் திரும்ப ஒடுங்குவதுதானே! சாவு இல்லாததால் வாழ்வும் இல்லை. வாழ்வு, சாவு இரண்டும் ஒரே பொருளின் வெவ்வேறு தோற்றங்கள். எனவே ஆன்மா வாழ்வு, சாவு இவற்றிற்கு அப்பாற்பட்டது. நீங்கள் பிறக்கவில்லை, இறக்கவும் மாட்டீர்கள். பிறப்பும் இறப்பும் உடம்பிற்கே.

இருப்பதெல்லாம் இந்தப் பிரபஞ்சம் மட்டுமே என்கிறது அத்வைதம்; தூலமோ சூட்சுமமோ எல்லாம் இங்கேயே உள்ளன; காரணம், காரியம் இரண்டும் இங்கேயே இருக் கின்றன; விளக்கமும் இங்கேயே இருக்கிறது. தனிப்பொருள் என்பது பிரபஞ்சப் பொருளின் மிகச் சிறிய தோற்றம் மட்டுமே. நமது ஆன்மாவை ஆராய்வதன்மூலமே பிரபஞ்சத்தைப்பற்றி அறிகிறோம். அகத்தில் கண்ட முடிவுகள் புறப் பிரபஞ்சத்திற்கும் பொருந்தும். சொர்க்கம் போன்ற பல்வேறு உலகங்கள்—அவை உண்மையாகவே இருந்தாலும்—இந்தப் பிரபஞ்சத்திலேயே உள்ளன. அவை எல்லாம் சேர்ந்ததுதான் இந்த ஒருமை (Whole). எனவே முழுமை (Unity) என்பதன் முதல் கருத்து ஒருமை என்பதுதான். இந்த ஒருமை பல்வேறு சிறுசிறு அணுத் தொகுதி களால் ஆனது. நாம் ஒவ்வொருவரும் இந்த முழுமையின் ஒரு பகுதியே. தனித்தனியாகத் தோன்றினாலும் உண்மையில் நாம் ஒன்றே. இந்த முழுமையிலிருந்து நாம் வேறானவர்கள் என்ற எண்ணம் வலுக்கின்ற அளவு நமது துன்பமும் பெருகும். எனவே அத்வைதமே நீதிநெறியின் அடிப்படை. ❑

# 6. ஒழுங்குமுறைப் படைப்புக் கொள்கை

12 மார்ச் 1900

இந்தப் பிரபஞ்சத்தை ஆண்டவன் திட்டமிட்டே படைத்திருக்கிறார்; இயற்கையில் காணப்படும் ஒழுங்குமுறையே இதற்குச் சான்று என்றெல்லாம் சொல்வது பாலர்பாடம் என்ற அளவில் சிறப்பானதே. அவரது மாட்சிமை, ஆற்றல் ஆகியவற்றை எடுத்துக்காட்டி, குழந்தைகளுக்குக் கடவுள் தத்துவத்தைப் போதிக்க இது உதவலாம். இதற்குமேல் அதனால் பலனில்லை, அது பொருத்தமற்ற கருத்தும்கூட. கடவுள் எல்லாம் வல்லவர் என்று நாம் ஏற்றுக்கொண்டாலும், தத்துவ ரீதியில் அது அடிப்படை இல்லாத ஒன்று.

கடவுளுக்கு உள்ள படைப்புச் சக்தியை இயற்கை காட்டுகிறது என்றால், அதற்காகத் திட்டமிடுவது அவருடைய பலவீனத்தைக் காட்டும். அவர் எல்லாம் வல்லவராக இருந்தால் அவருக்குத் திட்டமும் தேவையில்லை, அட்டவணையும் தேவையில்லை; விரும்பினால் போதும் எல்லாம் நடைபெறும். ஆகவே இயற்கையில் இறைவனின் எவ்வித நோக்கமும் இல்லை, திட்டமும் இல்லை, ஒழுங்குமுறையும் இல்லை.

இந்தப் பிரபஞ்சம் மனிதனின் வரையறைக்கு உட்பட்ட அறிவின் விளைவே. மனிதன் தனது தெய்வீகத்தை உணரும் போது இந்த ஜட உலகம் மற்றும் இயற்கை எல்லாம் நாம் எவையாக அவற்றை அறிந்திருக்கிறோமோ அவையாக இருக்காது.

எங்கும் நிறைந்த இறைவன் எதையும் அடைவதற்காக இந்த உலோகாயத உலகைப் படைத்தார் என்ற பேச்சிற்கே இடமில்லை. அப்படி இருக்குமானால், அவர் இந்தப் பிரபஞ்சத்தால் எல்லைப்படுத்தப் பட்டவர் ஆகிவிடுவார். அவருடைய அனுமதியால்தான் இயற்கை இயங்குகிறது என்று சொல்வதால், அது அவருக்குத் தேவை, மனிதனைத் தூய்மை பெறச் செய்வதற்கோ வேறு எதற்கோ அது அவருக்கு அவசியம் என்பதில்லை.

படைப்பு மனிதனின் தேவைக்காகவே தவிர கடவுளின் தேவைக்காக அல்ல. பிரபஞ்சத்தின் அமைப்பில் கடவுளின்

திட்டம் எதுவும் இல்லை. அவர் எல்லாம் வல்லவராக இருக்கும் போது திட்டமிடுவதற்கான தேவைதான் என்ன? என்ன அவசியம்தான் இருந்திருக்க முடியும்? எதையும் செய்வதற்கு ஒரு ஏற்பாடோ, ஒரு திட்டமோ, ஒரு காரணமோ அவருக்கு எதற்கு? ஆண்டவன் திட்டமிட்டுச் செய்ததாகக் கூறுவது அவரை எல்லைக்கு உட்படுத்துவதாகும், அவர் எல்லாம் வல்லவர் என்பதை மறுப்பதுமாகும்.

உதாரணமாக நீங்கள் ஒரு பெரிய ஆற்றின் கரையில் நிற்கிறீர்கள். பாலம் கட்டாமல் தாண்டிச் செல்ல முடியாத அளவுக்குப் பெரியது அது. பாலம் கட்டித்தான் ஆற்றைக் கடக்க வேண்டும் என்ற உங்கள் நிலைமையே உங்கள் வரம்பைக் காட்டுகிறது. உங்களால் பாலத்தைக் கட்ட முடியும் என்பது உங்கள் பலத்தை உணர்த்துவதாக இருக்கலாம். ஆனாலும் பாலம் இல்லாமல் நீங்கள் தாண்டிச் செல்ல முடியாது என்பது உங்கள் பலவீனத்தையே காட்டுகிறது. உங்கள் சக்திக்கு ஒரு வரம்பில்லாமல், நீங்கள் பறந்தோ தாவியோ அந்த ஆற்றைக் கடக்க முடியுமானால் பாலம் கட்ட வேண்டிய தேவையில்லை. உங்கள் பலத்தைக் காட்டுவதற்காகத்தான் அந்தப் பாலத்தை அமைப்பதாக இருந்தால்கூட அதுவும் ஒரு பலவீனமே. ஏனெனில் அவ்வாறு பாலம் கட்டுவது உங்கள் கர்வத்தைக் காட்டுவதாக இருக்கும்.

அத்வைதமும் துவைதமும் அடிப்படையில் ஒன்றே, வெளிப்படுத்துவதில்தான் வேறுபாடு. பிதாவும் சுதனும் இருவர் என்று துவைதிகள் கூறுகிறார்கள், இருவரும் உண்மையில் ஒருவரே என்கிறார்கள் அத்வைதிகள். துவைதம் இயற்கையில் உள்ளது, புறத்தோற்றத்தில் உள்ளது. அத்வைதம் ஆன்மீகத்தின் சாரமாக உள்ளது.

ஆண்டவனை அடைவதற்குத் துறவும் தியாகமும் அவசியம் என்ற கருத்தை எல்லா மதங்களுமே கூறுகின்றன. ❑

## 7. இறைவனைப்பற்றிய கருத்து

சுதந்திரமான, அதாவது இயற்கை நியதிகளுக்கு அப்பாற்பட்ட ஒருவரையே மனித உள்ளம் வேட்கையுடன் தேடுகிறது. வேதாந்திகள் அத்தகைய நித்திய ஈசுவரன் அதாவது நிலையான இறைவன் ஒருவரை நம்புகிறார்கள். சாங்கியர்களும் பௌத்தர்களும் ஜன்யேசுவரனை நம்புகிறார்கள்; அதாவது, மனிதனாக இருந்து, ஆன்மீக சாதனைகள் செய்து கடவுளான ஒருவரை நம்புகிறார்கள். அவதாரக் கோட்பாட்டின்மூலம் புராணங்கள் இந்த இரு கருத்துக்களிடையேயும் சமரசம் காண்கின்றன. அதாவது ஜன்யேசுவரன் நித்ய ஈசுவரனே, அவர் மாயை காரணமாக ஜன்யேசுவரனாக உருக்கொண்டுள்ளார் என்று கூறுகின்றன. சாங்கியர்கள் நிலைபேறான இறைக் கருத்தை எதிர்க்கிறார்கள்; 'முக்தி பெற்ற ஆன்மா இந்தப் பிரபஞ்சத்தை எப்படிப் படைக்க முடியும்?' என்று அவர்கள் கேட்கிறார்கள். இந்த வாதம் அடிப்படையிலேயே பொய். ஏனெனில் முக்தரான ஒருவரை யாரும் கட்டுப்படுத்த முடியாது. அவர் முக்தர், அதாவது, விரும்புவதைச் செய்பவர். ஜன்யேசுவரனால் படைக்கவோ, காக்கவோ, அழிக்கவோ இயலாது என்று வேதாந்தம் கூறுகிறது. ❑

## 8. ஈசுவரனும் பிரம்மமும்

'வேதாந்தத் தத்துவத்தில் ஈசுவரனின் இடம் எது?'
என்ற கேள்விக்கு விடையாக ஐரோப்பாவில் கூறியது

ஒவ்வோர் உயிரணுவும் (cell) தனியானதாக இருந்தாலும் அவை சேர்ந்து அமைந்த உடம்பும் தனியான ஒன்றாக உள்ளது. அதுபோல் ஈசுவரன் தனிஉயிர்களின் மொத்தமாக இருந்தாலும் அவர் தனியானவரே. சமஷ்டி அல்லது தொகுதி—ஈசுவரன்; வியஷ்டி அல்லது பகுதி—ஜீவன். உடம்பும் உயிரணுக்களும் ஒன்றையொன்று சார்ந்து உள்ளன. அதுபோல் ஈசுவரனும் உயிர்களும் ஒருவரையொருவர் சார்ந்தே உள்ளனர். இவ்வாறு உயிர்களும் ஈசுவரனும் சேர்ந்தே இருப்பவர்கள். ஒருவர் இருந்தால் மற்றவர் இருந்தே தீர வேண்டும். மேலும் இந்தப் பூமியைத் தவிர மற்ற உயர் பூமிகளில் எல்லாம் தீமையைவிட நன்மையே மிகுந்துள்ளது. எனவே அனைத்தின் தொகுதியான ஈசுவரன் நன்மையின் வடிவம் எனலாம். அவர் எங்கும் நிறைந்தவர், எல்லாம் வல்லவர் என்பவற்றுக்கு விளக்கம் தேவையில்லை; அவர் உயிர்களின் தொகுதி என்பதே இதை விளக்குவதாக உள்ளது. பிரம்மம் என்பது இவையிரண்டிற்கும் அப்பாற்பட்டது; எதற்கும் கட்டுப்பட்ட ஒரு நிலை அல்ல அது. பகுதிகள் எதுவும் சேராத முழுமை அது மட்டுமே. அது கரு முதல் கடவுள் வரை ஊடுருவி நிற்பது. அது இல்லாமல் எதுவும் இருக்க முடியாது. உண்மை அனைத்தும் அந்தத் தத்துவமே, பிரம்மமே. நான் பிரம்மம் என்று நினைக்கும்போது நான் மட்டுமே இருக்கிறேன். மற்றவர்களுக்கும் இப்படியே. எனவே ஒவ்வொருவரும் அந்தப் பிரம்மமாகிய தத்துவத்தின் நிறைவே. ❑

# III. செயல்முறை வேதாந்தம்

## 1

வேதாந்தத் தத்துவத்தின் செயல்முறைப் பகுதியைப் பற்றிச் சில வார்த்தைகள் பேசும்படி என்னை நீங்கள் கேட்டிருக் கிறீர்கள். நான் முன்பே கூறியதுபோல் கோட்பாடு மிகவும் சிறப்பானதுதான், ஆனால் அதனை எப்படிச் செயல்முறைப் படுத்துவது? செயல்முறையில் பயன்படுத்த முடியாத கோட்பாடு கள் வெறும் அறிவு வளர்ச்சிக்கான பயிற்சியாக இருக்குமே தவிர, வேறு வகையான மதிப்பு அதற்கு இருக்காது. எனவே வேதாந்தம் ஒரு மதம் என்றால் அது நடைமுறையில் கடைப் பிடிக்கத் தக்கதாக இருக்க வேண்டும்; நமது வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் செயல்படுத்தத் தக்கதாக இருக்க வேண்டும். அது மட்டும் அல்ல, மதத்திற்கும் உலக வாழ்க்கைக் கும் இடையில் கற்பிக்கப்பட்டுள்ள போலி வேறுபாடுகள் எல்லாம் மறைய வேண்டும். ஏனெனில் வேதாந்தம் ஒருமையை, எல்லாம் ஒரே உயிர் என்ற தத்துவத்தைத்தான் உபதேசிக்கிறது.

மதத்தின் லட்சியங்கள் நமது வாழ்க்கையின் எல்லா அம்சங் களையும் தழுவுவதாக இருக்க வேண்டும்; நமது எண்ணங்களை எல்லாம் ஊடுருவி நிற்க வேண்டும். செயல் முறையில் அவை மிக அதிகமாக இருந்தாக வேண்டும். அவற்றின் செயல் முறைப் பகுதியை, போகப்போக உங்களுக்கு விளக்குவேன். இந்தத் தொடர் சொற்பொழிவுகள் அதற்கு அடிப்படையாக அமைகின்றன.

முதலில் நாம் கோட்பாடுகளை ஆராய்வோம். பிறகு அவை எப்படிக் காட்டுக் குகைகளிலிருந்து பரபரப்பான தெருக் களுக்கும் நகரங்களுக்கும் கொண்டு வரப்பட்டன என்பதைத் தெரிந்துகொள்வோம். இவற்றில் நாம் காணும் வினோதமான அம்சம் என்னவென்றால், இந்தக் கருத்துக்கள் எல்லாம் வனத் தில் ஏகாந்த வாழ்வின் விளைவாகக் கிடைத்தவை அல்ல; மிகவும் பரபரப்பான வாழ்க்கை நடத்துபவர்கள் என்று நாம்

நினைப்பவர்களிடமிருந்து, அதாவது மன்னர்களிடமிருந்தே இவை தோன்றியிருக்கின்றன.

ஆருணி என்ற முனிவரின் மகன் சுவேதகேது.[1] ஆருணி முனிவர் காட்டில் வாழ்ந்தவராகத்தான் இருக்க வேண்டும். எனவே சுவேதகேது காட்டிலேயே வளர்ந்தான். அவன் பாஞ்சால மன்னனான பிரவாஹண ஜைவலியின் அரண்மனையை அடைந்தான்.

சுவேதகேதுவிடம் அந்த மன்னன் கேட்டான்:

'மரணத்தின்போது உயிர்கள் எப்படி வெளியேறுகின்றன என்பது உனக்குத் தெரியுமா?'

'தெரியாது அரசே.'

'அவை எப்படி இங்கே திரும்புகின்றன?'

'தெரியாது அரசே.'

'முன்னோர்கள் சென்ற வழிகளும் தேவர்கள் போகும் பாதைகளும் உனக்குத் தெரியுமா?'

'இல்லை அரசே.'

அரசன் மேலும் பல கேள்விகளைக் கேட்டான். ஒன்றிற்கும் சுவேதகேதுவால் பதில் கூற முடியவில்லை. எனவே அவன், 'உனக்கு ஒன்றுமே தெரியவில்லை' என்று சுவேதகேதுவிடம் கூறிவிட்டான்.

சுவேதகேது தன் தந்தையிடம் திரும்பிச் சென்றான். அவனுடைய தந்தை, தம்மாலும் அவற்றிற்கு விடை கூற இயலாதென்று கூறினார். சுவேதகேதுவிற்குக் கற்பிக்கக் கூடாது என்பது அவரது எண்ணம் அல்ல. அவருக்கும் இவற்றைப்பற்றி எதுவும் தெரியவில்லை. எனவே சுவேதகேது தன் தந்தையுடன் அரசனை அணுகி, அந்த ரகசியங்களைத் தங்களுக்குத் தெளிவு படுத்துமாறு கேட்டுக் கொண்டான். அதற்கு அரசன், அந்த ரகசியங்களை இதுவரை அரசர்கள் மட்டுமே அறிந்திருந்தார்கள் என்றும், மதக்குருமார்களுக்கு இவைபற்றி ஒன்றும் தெரியாது என்றும் கூறினான். இருந்தாலும் அவர்கள் விரும்பியதால் அவர்களுக்குக் கற்பிக்கத் தொடங்கினான்.

இந்த வேதாந்தக் கருத்துக்கள், காடுகளில் சென்று தியானம் செய்ததால் மட்டும் உணரப்பட்டவை அல்ல; அவற்றின் மிகச் சிறந்த பகுதிகள் எல்லாம் அறிவுத்திறன் மிக்க, அதேவேளையில் அதிகமான வேலைகள் நிறைந்த அன்றாட வாழ்க்கை நடத்து

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 5. 3.

பவர்களால் வெளிப்படுத்தப்பட்டவை என்பதைப் பல்வேறு உபநிடதங்கள் வாயிலாக அறிகிறோம். லட்சக் கணக்கான மக்களை ஆளும் அரசனைவிடப் பரபரப்பு மிக்க ஒருவரை நாம் காண முடியாது. அவர்களுள் சிலர் ஆழ்ந்த சிந்தனையாளர்களாக இருந்திருக்கிறார்கள்.

இதையெல்லாம் பார்க்கும்போது, இந்தத் தத்துவம் செயல் முறைக்கு மிகவும் ஏற்புடையது என்பது தெரியவருகிறது. உங்களுள் பலரும் பகவத்கீதையைப் படித்திருக்கலாம். வேதாந்தத் தத்துவத்தின் மிகச் சிறந்த விளக்கவுரை அது. ஆச்சரியமான விஷயம் என்னவென்றால் பகவத்கீதை போர்க்களத்தில் கூறப்பட்டது. அங்குதான் ஸ்ரீகிருஷ்ணர் அர்ஜுனனுக்கு இந்தக் கருத்துக்களை உபதேசித்தார். தீவிரமான செயல்பாடு, அதன் நடுவில் எல்லையற்ற அமைதி—இதுதான் கீதையின் ஒவ்வொரு பக்கத்திலும் ஒளிவீசித் திளைக்கும் செய்தியாகும். இதுவே செயல்புரிவதன் ரகசியம். இதை அடைவதே வேதாந்தத்தின் லட்சியம். செயலற்ற நிலை என்றால் நாம் என்ன புரிந்துகொள்கிறோமோ, அந்த மந்த நிலை ஒரு போதும் வேதாந்தத்தின் லட்சியம் அல்ல. அதுதான் லட்சியம் என்றால் நம்மைச் சுற்றியுள்ள சுவர்களே மிகச் சிறந்த அறிவாளிகளாகிவிடும். அவைதாம் செயல்புரிவது இல்லையே! ஒன்றும் செய்யாமலிருக்கும் மண்ணும் மரங்களும் உலகில் சிறந்த ஞானிகள் ஆகிவிடும். அவையும் ஒன்றும் செய்வதில்லை அல்லவா! செயலற்ற நிலையை ஆசையுடன் இணைத்து விட்டால் அது செயல்நிலையாகிவிடும் என்பதும் கிடையாது. வேதாந்தத்தின் லட்சியமான உண்மையான செயல்நிலை என்பது, என்ன நடந்தாலும் சமநிலை குலையாத, கலங்காத, நிரந்தரமான அமைதியுடன் இணைந்தே இருக்கும். இதுவே செயல்புரிவதற்கு ஏற்ற மிகச் சிறந்த கருத்து என்பதை நமது அன்றாட வாழ்க்கை அனுபவத்தின்மூலம் நாம் உணரலாம்.

செயல்புரிவதற்குப் பொதுவாக நாம் கொள்கின்ற ஆசை கூட இல்லாமல் எப்படிச் செயல்புரிய முடியும் என்று என்னிடம் பலரும் அவ்வப்போது கேட்டதுண்டு. சிறு வயதில் நானும் அப்படியேதான் நினைத்திருந்தேன். ஆனால் வயதாக ஆக, அனுபவம் வளரவளர அது உண்மை இல்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். ஆசை குறைகின்ற அளவிற்கு நாம் நன்றாகச் செயல்புரிவோம். அமைதி நம்மிடம் மிகுந்தோறும் நமக்கு நன்மை பெருகுகிறது; நம்மால் அதிகம் செயல்புரிய

முடிகிறது. உணர்ச்சிகளைக் கட்டவிழ்த்து விடுமளவிற்கு நாம் ஆற்றலை இழக்கிறோம், நமது நரம்புகள் தளர்வுறுகின்றன, மனம் சஞ்சலத்திற்கு உள்ளாகிறது, மிகக் குறைந்த அளவே வேலை செய்ய முடிகிறது. வேலை செய்யச் செலவிட்டிருக்க வேண்டிய ஆற்றலை, ஒன்றுக்கும் பயன்படாத வெறும் உணர்ச்சிப் பெருக்கில் வீணாக்குகிறோம். மனம் ஒருமுகப் பட்டு, அமைதியாக இருக்கும்போதுதான் அதன் ஆற்றல் முழு வதும் நற்செயல் புரியப் பயன்படுகிறது. இந்த உலகம் தந்த செயல்வீரர்களின் வாழ்க்கையைப் பார்த்தால் அவர்கள் அற்புத மான அமைதி மிக்கவர்கள் என்பது தெரிய வரும். எதனாலும் அவர்களது சமநிலையைக் கலைக்க முடிவதில்லை. அதனால் தான் கோபப்படும் ஒரு மனிதனால் அதிக அளவு வேலை செய்ய முடியாமல் போய்விடுகிறது; எதற்கும் கோபப்படாத மனிதன் சிறப்பான பணிகளைச் செய்ய முடிகிறது. கோபத் திற்கோ வெறுப்பிற்கோ ஏதாவது ஆசைகளுக்கோ இடம் கொடுப்பவனால் செயல்புரிய முடியாது. அவன் தன்னைத் தானே சிதைத்துக் கொள்கிறானே தவிர உண்மையாக எதையும் செய்து முடிப்பதில்லை. அமைதியான, மன்னிக்கக்கூடிய, சம நோக்குடைய, நிலைகுலையாத மனம் உடையவனே மிக அதிக அளவு செயல்புரிய முடிகிறது.

வேதாந்தம் லட்சியத்தை உபதேசிக்கிறது. இந்த லட்சியம் என்பது, நாம் கண்கூடாகக் காண்பதற்கும் செயல்முறை என்று நாம் கூறுவதற்கும் எவ்வளவோ அப்பால் இருக்கிறது. மனித இயல்பில் இரு போக்குகள் உள்ளன. ஒன்று லட்சியத்தை வாழ்க்கையுடன் சமரசப்படுத்திக் கொள்வது, மற்றொன்று வாழ்க்கையை லட்சியத்தை நோக்கி உயர்த்திக் கொள்வது. நாம் இவற்றைப் புரிந்துகொள்வது அவசியம். ஏனெனில் முதலில் கூறிய போக்குத்தான் நமது வாழ்வைக் கவரக்கூடிய தாக இருக்கிறது. என்னால் சிலவகையான வேலைகளைத்தான் செய்ய முடியும் என்று நான் நினைக்கிறேன். ஒருவேளை இவற்றுள் பலவும் தீயவையாக இருக்கலாம்; இவற்றின் பின்னணியில் நின்று தூண்டுவது கோபம், பேராசை, சுயநலம் போன்ற உணர்ச்சிகளாக இருக்கலாம். இப்போது யாராவது என்னிடம் வந்து, சுயநலத்தையும் சுயநல இன்பத்தையும் விட்டு விடுவதை முதல்படியாகக் கொண்ட ஒரு லட்சியத்தைப்பற்றிக் கூறினால், அது நடக்காத காரியம் என்றே நான் நினைப்பேன். எனது சுயநலத்துடன் ஒத்துப்போகின்ற ஒரு லட்சியத்தை

என்னிடம் கூறினால், உடனே அதை மிகவும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக்கொள்வேன். அதுவே என்னுடைய லட்சியமாகிவிடும்.

'வைதீகம்' என்ற சொல் எப்படிப் பலவிதமாக விளக்கப் படுகிறதோ, அதுபோல் 'செயல்முறை' என்ற சொல்லையும் பலவிதமாக விளக்கலாம். 'என்னுடையதே வைதிகம், உன்னுடையது அவைதீகம்' என்பதுபோன்ற போக்குத்தான் செயல் முறையிலும் காணப்படுகிறது. அதாவது நான் எதைச் செயல் முறை என்று கருதுகிறேனோ அது ஒன்றே உலகத்தின் செயல் முறை என்று கூறுவது. நான் வியாபாரியானால் வியாபாரம் மட்டுமே செயல்முறைத் தொழில். ஒருவேளை நான் திருடனாக இருந்தால் திருடுவதே செயல்முறைக்கு மிகவும் ஏற்புடைய வழி, மற்றவை செயல்முறைக்கே பொருந்தாதவை. நாம் விரும்பு பவற்றிற்கும் நம்மால் செய்ய முடிந்தவற்றிற்கும் செயல்முறை என்ற சொல்லை எப்படிப் பயன்படுத்துகிறோம், பாருங்கள்! எனவே வேதாந்தம் மிகவும் செயல்முறைக்கு ஏற்புடையது என்று சொல்லும்போது இந்தப் பொருளில் புரிந்துகொள்ளக் கூடாது; வாழ்க்கையை லட்சிய நிலைக்கு உயர்த்துவது என்ற பொருளையே கொள்ள வேண்டும்.

எவ்வளவு உயர்ந்ததாக இருந்தாலும் வாழ்க்கையில் கடைப் பிடிக்க முடியாத ஒன்றை வேதாந்தம் லட்சியமாகக் கூறுவ தில்லை. ஒரு லட்சியமாக இருப்பதற்கு ஏற்றவாறு அது விளங் கவும் செய்கிறது. சுருங்கச் சொன்னால், நீ தெய்வீகமானவன், 'நீயே அது' என்பதே வேதாந்தத்தின் லட்சியம். இதுவே வேதாந்தத்தின் சாரம். எவ்வளவு பிரித்துப் பொருள் கொண் டாலும், தர்க்க அறிவாகிய சிலம்பம் விளையாடினாலும், வேதாந்தம் உணர்த்துவது மனித ஆன்மா தூய்மையானது, எல்லாம் அறிந்தது என்பதையே. ஆன்மா பிறப்பதாகவும் இறப்பதாகவும் நாம் கொண்டிருக்கும் மூடக் கருத்துக்கள் எல்லாம் பொருளற்ற பிதற்றல்கள். ஆன்மா பிறந்ததும் இல்லை, இறப்பதும் இல்லை. நாம் சாகப் போவதாக பயப்படுவது எல்லாம் வெறும் மூடநம்பிக்கைகள். என்னால் இதைச் செய்ய முடியும், இதைச் செய்ய முடியாது என்று கூறுவதும்கூடப் பொருளற்றவைகளே. நம்மால் எதையும் செய்ய முடியும்.

ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும் என்பதை வேதாந்தம் போதிக்கிறது. தனக்கு வெளியே உள்ள ஒரு சகுணக் கடவுளை நம்பாதவனை எப்படிச் சில மதங்கள் நாத்திகன் என்று கூறுகின்றனவோ, அது

போலவே, தன்னிடம் நம்பிக்கை இல்லாதவனை நாத்திகன் என்று வேதாந்தம் கூறுகிறது. நமது ஆன்மாவின் மகிமையில் நம்பிக்கையின்மையே நாத்திகம் என்று வேதாந்தம் கூறுகிறது. சந்தேகமின்றி, பலருக்கு இது பயங்கரக் கருத்துதான். இது அடைய முடியாத குறிக்கோள் என்று நம்மில் பலரும் நினைக்கலாம். ஆனால் இதை ஒவ்வொரு மனிதனாலும் அடைய முடியும் என்று வேதாந்தம் வலியுறுத்துகிறது. இந்த லட்சியத்தை அடைவதில் ஆண், பெண், சிறுவர்கள், இனம், பால்வேற்றுமை போன்ற எதுவும் தடையாக இருக்க முடியாது. இதை அனைவரும் அடையலாம். ஏனெனில் இது ஏற்கனவே அறியப் பட்டது, ஏற்கனவே இருப்பது என்று வேதாந்தம் கூறுகிறது.

இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள ஆற்றல்கள் அனைத்தும் ஏற்கனவே நம்முடையவைதான். நமது கண்களை நாமே கைகளால் மூடிக்கொண்டு இருட்டாக இருக்கிறது என்று அழுகிறோம். நம்மைச் சுற்றி இருள் என்பது இல்லவே இல்லை என்பதை உணருங்கள். கைகளை அகற்றுங்கள், எப்போதும் நிலவிக் கொண்டிருக்கின்ற அந்த ஒளியைக் காணலாம். இருள் என்பது ஒருபோதும் இருந்ததில்லை, பலவீனம் என்பது இருந்ததில்லை. நாம் பலவீனர்கள் என்று அழுகின்ற நாம் முட்டாள்களே. நாம் தூய்மையற்றவர்கள் என்று கதறுகின்ற நாம் முட்டாள்களே. எனவே லட்சியம் செயல்முறைக்கு ஏற்றது மட்டுமல்ல, அது எப்போதும் அப்படியேதான் இருந்து வந்திருக்கிறது என்பதையே வேதாந்தம் வலியுறுத்துகிறது. இந்த லட்சியம், இந்த உண்மை—இதுவே நமது சொந்த இயல்பு; மற்றவை அனைத்தும் பொய், உண்மையற்றது. 'நான் அழியக் கூடிய சாதாரண மனிதன்' என்று கூறும்போது உண்மைக்கு மாறுபட்ட ஒன்றை நீங்கள் கூறுகிறீர்கள். நீங்களே உங்களைப் பொய்யர்களாக்கிக் கொள்கிறீர்கள். ஏதோ கொடிய, வலுவற்ற, இழிவான ஒன்றினுள் உங்களை நீங்களே சுயமயக்கத்திற்கு ஆளாக்கிக் கொள்கிறீர்கள்.

பாவம் என்பதை வேதாந்தம் ஒத்துக்கொள்வதில்லை; தவறு என்பதையே ஏற்றுக் கொள்கிறது. அவற்றுள் மிகப் பெரிய தவறு, 'நான் பலவீனன், நான் பாவி, இழிவான அற்பப் பிராணி, இதையோ அதையோ செய்யத் திறனற்றவன்' என்று நமக்கு நாமே கூறுவதுதான் என்று வேதாந்தம் கூறுகிறது. இவ்வாறு எண்ணும்போதெல்லாம் உங்களைக் கட்டியிருக்கும் சங்கிலித் தொடரில் மேலும் ஒரு வளையத்தைச் சேர்த்துக்

கொள்கிறீர்கள்; உங்கள் ஆன்மாவை நீங்கள் ஆழ்த்தியிருக்கின்ற சுயமயக்கத்தில் மேலும் ஓர் அடுக்கைச் சேர்க்கிறீர்கள். எனவே, தான் பலவீனன், தான் தூய்மையற்றவன் என்று நினைப்பவன் தவறு செய்கிறான்; ஒரு தீய கருத்தை உலகில் பரவவிடுகிறான்.

நமது தற்போதைய வாழ்க்கையை, சுயமயக்கத்திற்கு உள்ளான இந்த வாழ்க்கையை, நாம் தவறுதலாகக் கொண்டுள்ள வாழ்க்கையை லட்சியத்துடன் சமரசப்படுத்தும் முயற்சி வேதாந்தத்தில் இல்லை. இந்தப் பொய்யான வாழ்க்கை ஒழிய வேண்டும், என்றும் நிலையாக இருந்துவரும் உண்மையான வாழ்க்கை வெளிவர வேண்டும், ஒளிவிட வேண்டும் என்பதையே அது வலியுறுத்துகிறது. இதை நாம் எப்போதும் மனத்தில் கொள்ள வேண்டும். ஒருவன் தூயவனாக மாறுகிறான் என்பது இல்லை, மேலும் மேலும் வெளித் தோற்றத்திற்கு வருகிறான் என்பதே உண்மை. திரை விலகுகிறது, ஆன்மாவின் இயல்பான தூய்மை வெளிப்படத் தொடங்குகிறது. எல்லையற்ற தூய்மை, சுதந்திரம், அன்பு, ஆற்றல் அனைத்தும் ஏற்கனவே நமக்குரியவை.

அடர்ந்த காடுகளிலும் குகைகளிலும் வசிப்பதால் மட்டுமல்ல, வாழ்க்கையின் எந்த நிலையிலுள்ள மனிதர்களாலும் இந்த லட்சியத்தை அடைய முடியும் என்று வேதாந்தம் கூறுகிறது. இந்த உண்மைகளைக் கண்டுபிடித்தவர்கள் காடுகளிலும் குகைகளிலும் வசித்து வந்தவர்களோ, குறிப்பிட்ட வாழ்க்கை நிலையில் இருந்தவர்களோ அல்ல என்பதை நாம் கண்டோம். அவர்கள் மிகவும் பரபரப்பான வாழ்க்கை நடத்தியவர்கள், பெரிய படைத்தலைவர்கள், அரியாசனத்தில் அமர்ந்து கோடிக்கணக்கான மக்களின் நல்வாழ்விற்காக ஆட்சி புரிந்தவர்கள் என்று நாம் நம்புவதற்குத் தகுந்த காரணங்கள் உள்ளன. அதிலும் அரசன் என்பவன் ஏறக்குறைய பொம்மைபோல் இருந்துவரும் இந்தக் காலம் போன்றதல்ல அந்தக் காலம். ஏகாதிபத்திய முடிமன்னர்கள் வாழ்ந்த காலம் அது. அப்படியிருந்தும் இந்தக் கருத்துக்களைச் சிந்திக்கவும், அவற்றை உணரவும் மற்றவர்களுக்கு உபதேசிக்கவும் அவர்களுக்கு நேரமிருந்தது. அவர்களது வாழ்க்கையுடன் ஒப்பிடும்போது, ஓய்வான வாழ்க்கை என்று கூறத்தக்க வாழ்க்கை வாழ்ந்து வருகின்ற நமக்கு இது செயல்முறைக்கு எவ்வளவு ஏற்றதாக இருக்கும்! நமக்கு வேலைகள் மிகக் குறைவு, ஓய்வு

நேரம் ஏராளம். இருந்தும் நம்மால் இதை அடைய முடியா தென்றால் அது பெருத்த அவமானம்!

பழங்காலச் சக்கரவர்த்திகளின் தேவைகளுடன் ஒப்பிட்டுப் பார்த்தால் நமது தேவைகள் ஒன்றும் இல்லாதவை. குரு க்ஷேத்திரப் போர்க்களத்தில் பெரிய படைத்தளபதியாக இருந்து, போர் செய்த அர்ஜுனனின் தேவைகளுடன் ஒப்பிட்டால் நமது தேவைகள் ஒன்றுமே இல்லை. அமளிதுமளியான அந்தப் போர்க்களத்திலும் வேதாந்தத் தத்துவங்களைச் சிந்திப்பதற்கும் அதைக் கடைப்பிடிப்பதற்கும் அவனுக்கு நேரம் இருந்தது. அதைவிட ஓய்வானதும், சுலபமானதும், வசதிகள் நிறைந்தது மான நமது வாழ்க்கையில், அவர்கள் செய்த அளவாவது நாம் செய்ய வேண்டாமா? நல்லது செய்ய வேண்டும் என்று உண்மை யிலேயே விரும்புவோமானால், இப்போது நமக்கு இருப்ப தாக எண்ணுகின்ற ஓய்வு நேரத்தைவிட அதிக நேரம் நமக்குக் கிடைப்பதைக் காண்போம். நமக்குக் கிடைத்திருக்கும் சுதந்திரத்தை நாம் சரியாகப் பயன்படுத்தினால், நமக்கு வேண்டும் என்று உறுதியாக நினைத்தால் இருநூறு லட்சியங் களை நாம் நிறைவேற்ற முடியும். ஆனால் லட்சியத்தை நடை முறை வாழ்க்கையின் மட்டத்திற்குக் கொண்டுவந்து அதன் மதிப்பைக் குறைத்துவிடக் கூடாது.

மிகவும் வருத்தம் தருகின்ற ஒன்று என்னவென்றால், நாம் செய்யும் தவறுகளைப் பலவிதக் காரணங்கள் காட்டி மன்னித்து, நமது முட்டாள்தனமான தேவைகளையும் ஆசைகளையும் பார்த்தாலும் நம்மைத் திருத்தாமல் நம்மைத் தவறாக வழி நடத்திச் செல்லும் மனிதர்களை நாம் அடைந்திருப்பதுதான். அவர்கள் கூறும் லட்சியம்தான் நமக்குத் தேவையான லட்சியம் என்று நமக்கும் தோன்றிவிடுகிறது. ஆனால் உண்மை அதுவல்ல. இப்படிப்பட்ட எதையும் வேதாந்தம் போதிக்கவில்லை. நடை முறை வாழ்க்கை நமது லட்சியத்துடன் ஒத்துப்போக வேண்டும். நிகழ்கால வாழ்க்கையை, என்றும் அழியாத நிரந்தரமான வாழ்க்கையுடன் இணையச் செய்யவேண்டும்.

வேதாந்தத்தின் மையக் கருத்து இந்த ஒருமைதான் என் பதை நீங்கள் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். இரண்டு உயிர், இருவித வாழ்க்கை, இரண்டு உலகங்கள் என்று மட்டுமல்ல, எதிலும் இரண்டு என்பது இல்லவே இல்லை. சொர்க்கங்களைப் பற்றியும், அவைபோன்ற விஷயங்களைப் பற்றியும் முதலில் வேதங்கள் கூறலாம். ஆனால் முடிவில்

அவற்றின் உயர்ந்த தத்துவங்களின் உன்னத லட்சியங்களைப் பற்றிக் கூறும்போது அவற்றையெல்லாம் ஒதுக்கிவிடுகின்றன. இருப்பது ஒரே வாழ்க்கை, ஒரே உலகம், ஒரே இருப்புதான். எல்லாமே அந்த ஒன்றுதான். வேறுபாடு எல்லாம் அளவில் தானே தவிர, தன்மையில் அல்ல. நமது வாழ்வுகளின் வேறு பாடு தன்மையில் இல்லை. விலங்குகளுக்கும் மனிதர்களுக்கும் வேறுபாடுகள் உள்ளன, அவை மனிதர்களின் உணவிற்காகவே படைக்கப்பட்டிருக்கின்றன என்பதுபோன்ற கருத்துக்களை வேதாந்தம் முற்றிலும் மறுக்கிறது.

விஞ்ஞானச் சோதனைகளுக்காக மிருகங்களை அறுப் பதைத் தடுப்பதான நல்லெண்ணத்துடன் ஒரு சங்கத்தை ஆரம்பித்துள்ளார்கள். ஒருநாள் இந்தச் சங்கத்தைச் சேர்ந்த ஒருவரிடம் நான், 'நண்பரே, மிருகங்களை உணவிற்காகக் கொல்வதை நீங்கள் ஒத்துக் கொள்கிறீர்கள், ஆனால் சோதனை களுக்காக ஓரிரு பிராணிகளை அறுப்பதைத் தவறு என்கிறீர் களே, அது ஏன்?' என்று கேட்டேன். அதற்கு அவர், 'மிருகங் களை விஞ்ஞான ஆராய்ச்சிக்காக அறுப்பது கொடுமை. ஆனால் அவை நமது உணவிற்காகத்தான் படைக்கப் பட்டுள்ளன' என்றார். ஒருமை என்னும்போது அது மிருகங் களையும் சேர்த்துதான் குறிக்கிறது. மனிதனின் வாழ்க்கை அழியாதது என்று கூறினால், அதுபோலவே மிருகங்களின் வாழ்க்கையும் அழியாததுதான். வேறுபாடுகள் அளவில்தானே தவிர, தன்மையில் அல்ல. அமீபாவும் நானும் ஒன்றே; வேறு பாடு வெறும் அளவில் மட்டுமே. வாழ்க்கையின் மிக உயர்ந்த நோக்கில் இந்த வேற்றுமைகள் மறைந்தே போகும். புல்லுக்கும் மரத்திற்கும் இடையில் பெரிய வேறுபாடு தெரியும். ஆனால் உயரமான இடத்தில் ஏறி அங்கிருந்து பார்த்தால் புல்லும் மரமும் ஏறக்குறைய ஒன்றுபோல்தான் தோன்றும். அது போலவே மிக உயர்ந்த லட்சிய நோக்கில் உயர்ந்த மனிதனும் தாழ்ந்த பிராணியும் ஒன்றே. கடவுள் என்று ஒருவர் இருப்பதை நீங்கள் நம்பினால், அவருக்கு, மிருகங்களும் மனிதர்களும் ஒன்றாகத்தான் இருக்க வேண்டும். தமது மனிதக் குழந்தை களிடம் கருணையுடனும், மிருகக் குழந்தைகளிடம் கொடூர மாகவும் இருக்கும் கடவுள், பேயைவிடக் கொடியவர். அப்படி ஒரு கடவுளை வழிபடுவதைவிட நான் நூறு முறை உயிரிழக்கத் தயாராக இருக்கிறேன். எனது முழு வாழ்க்கையையும் அவருடன் போராடுவதில்தான் செலவிடுவேன். ஆனால் வேறுபாடுகள்

கிடையாது. பொறுப்பற்ற, இரக்கமற்ற, ஒன்றும் அறியாதவர்களே வேறுபாடுகள் இருப்பதாகக் கூறுகிறார்கள்.

செயல்முறை என்ற சொல் தவறாகப் பயன்படுத்தப்படுகின்ற ஓரிடத்தைப் பார்ப்போம். நான் முற்றிலுமாக மாமிசம் சாப்பிடாதவன் அல்ல. ஆனால் அந்த லட்சியத்தை நான் புரிந்துகொள்கிறேன். அதை உண்ணும்போது அது தவறு என்பதை உணர்கிறேன். சில சூழ்நிலைகளில் உண்ண நேர்ந்தாலும் அது கொடியது என்பது எனக்குத் தெரியும். இந்த எனது பலவீனச் செயலை மறைப்பதற்காக, லட்சியத்தைக் கீழேயிறக்கி, நடைமுறை வாழ்க்கையின் மட்டத்திற்குக் கொண்டுவரக் கூடாது. புலால் உண்ணக் கூடாது, எந்த உயிருக்கும் துன்பம் தரக் கூடாது என்பதே லட்சியம். எல்லா விலங்குகளும் எனது சகோதரர்கள். அப்படி விலங்குகளையும் சகோதரர்களாக நீங்கள் கருதும்போதுதான், மானிட சகோதரத்துவம் மட்டும் அல்லாமல் அனைத்து ஆன்ம சகோதரத்துவத்தின் பாதையில் சிறிதாவது முன்னேறியவர்கள் ஆவீர்கள். இதெல்லாம் குழந்தை விளையாட்டுதான்! இதைப் பலரால் ஏற்றுக்கொள்ள முடியாது, ஏனெனில் இதில் அன்றாட நடைமுறை வாழ்க்கையை விட்டுவிட்டு லட்சியம் ஒன்றை நோக்கி முன்னேற வேண்டியிருக்கிறது. அப்படி இல்லாமல் அன்றாட வாழ்க்கையை ஒட்டிய ஒரு கொள்கையைக் கூறினால், அவர்கள் அதைச் செயல்முறைக்கு மிகவும் உகந்தது என்று ஏற்றுக்கொள்வார்கள்.

இப்படிப் பழமையிலிருந்து மாறாத தீவிர மன நிலையே மனிதர்களிடம் இருந்துவருகிறது. ஓரடிகூட முன்னேற நாம் விரும்புவதில்லை. மனித இனத்தைப்பற்றி எண்ணும்போதெல்லாம், பனியில் உறைந்து போனவர்களைப்பற்றி நான் படித்ததுதான் நினைவிற்கு வருகிறது. அந்த நிலையிலேயே அவர்கள் தூங்க விரும்புகிறார்கள். அதைக் கலைக்க நாம் முயற்சித்தால், 'என்னைத் தூங்கவிடுங்கள், பனியில் தூங்குவது எவ்வளவு சுகமாக இருக்கிறது!' என்கிறார்கள். அந்தத் தூக்கத்திலேயே அவர்கள் இறந்தும்விடுகிறார்கள். நமது இயல்பும் அவ்வாறே உள்ளது. கால்களிலிருந்தே மரக்கத் தொடங்கிவிட்டது, எனினும் நாம் தூங்க விரும்புகிறோம்.

எனவே நீங்கள் லட்சியத்தை அடைவதற்காகப் போராட வேண்டும். யாராவது ஒருவர் வந்து, லட்சியத்தை உங்கள் நிலைக்கு இறக்கிக் கொண்டுவந்து, உயர்ந்த லட்சியம் இல்லாத மதத்தைப்பற்றிக் கூற வந்தால் அதை மதிக்காதீர்கள்! என்னைப்

பொறுத்தவரை அது செயல்முறைக்குப் பொருந்தாத மதமே. ஆனால் யாராவது ஒருவர் மிக உயர்ந்த லட்சியத்தை உடைய மதத்தைக் காட்டினால் அதை ஏற்கத் தயாராக இருக்கிறேன். புலனின்பங்களையும் புலன்களின் பலவீனத்தையும் பரிந்து பேசுபவரிடம் எச்சரிக்கையாக இருங்கள். யாராவது அப்படிப் பட்ட ஒரு வழியைக் காட்டினால், அதைக் கேட்டு நடக்கும் அப்பாவிகளான நாம் புலன்களுக்கு அடிமையான மண் ணாங்கட்டிகளாகவே இருப்போம், ஒருபோதும் முன்னேற மாட்டோம்.

நான் இத்தகைய விஷயங்களை அதிகமாகப் பார்த்திருக் கிறேன், உலக அனுபவம் எனக்குச் சிறிது உண்டு. என் நாட்டில் மதப் பிரிவுகள் காளான்களைப் போன்று முளைக்கின்றன. ஆண்டுதோறும் புதிய பிரிவுகள் தோன்றிக்கொண்டே இருக் கின்றன. அவற்றுள் ஒரு விஷயத்தை நான் கவனித்துள்ளேன்; தசையாலான இந்த மனிதனை, உண்மைமனிதனுடன் ஒன்று படுத்திக் கூறாத பிரிவுகள் மட்டுமே வளர்கின்றன. பௌதீக உலகின் ஆரவாரங்களை மிகவுயர்ந்த லட்சியங்களுடன் சமரசப் படுத்துவது, கடவுளை மனித நிலைக்கு இறக்குவது போன்ற பொய்க் கருத்துக்கள் உள்ள இடங்களில் எல்லாம் அழிவே விளைவாக உள்ளது. உலகப் பற்றுக்களுக்கு அடிமையாகும் நிலைக்கு மனிதனை இழிவுபடுத்தக் கூடாது, அவனைக் கடவுள் நிலைக்கு உயர்த்த வேண்டும்.

அதேவேளையில் இந்தப் பிரச்சினைக்கு மற்றொரு பக்கமும் உள்ளது. நாம் மற்றவர்களை வெறுக்கக் கூடாது. நாம் எல்லோரும் ஒரே லட்சியத்தை நோக்கியே போய்க் கொண்டிருக்கிறோம். பலவீனத்திற்கும் பலத்திற்கும் உள்ள வேறுபாடு, அளவில் மட்டுமே; தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் உள்ள வேறுபாடு, அளவில் மட்டுமே; சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் உள்ள வேறுபாடு அளவில் மட்டுமே; வாழ்விற்கும் மரணத்திற்கும் உள்ள வேறுபாடும் அளவில் மட்டுமே. ஆக, இந்த உலகத்திலுள்ள வேறுபாடுகள் எல்லாம் அளவில்தானே தவிர, தன்மையில் இல்லை. அடிப்படையில் எல்லாம் ஒன்றே அல்லவா! எல்லாம் ஒன்றே. எண்ணமாக, வாழ்க்கையாக, உடலாக, ஆன்மாவாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்வது அதுவே. வேறுபாடுகள் எல்லாம் அளவில் மட்டுமே. எனவே நமது அளவிற்கு வளராதவர்களை வெறுக்க நமக்கு உரிமை யில்லை. யாரையும் வெறுக்காதீர்கள். முடிந்தால் உதவி

செய்யுங்கள். இல்லாவிட்டால் பேசாமல் கைகளைக் கட்டிக் கொண்டு, நம் சகோதரர்களாகிய அவர்களை வாழ்த்துங்கள். அவர்கள் தங்கள் வழியிலேயே முன்னேறிப் போகட்டும். கீழே இழுப்பதும் வெறுப்பதும் செயல்புரியும் முறையல்ல. எந்தச் செயலும் அந்த வழியில் சாதிக்கப்பட்டதில்லை. நாம் நம்முடைய ஆற்றல் அனைத்தையும் மற்றவர்களைக் குறை கூறுவதில் வீணாக்குகிறோம். விமர்சிப்பதும் குறைகூறுவதும் ஆற்றலைப் பயனற்ற முறையில் வீணாக்குவதாகும். ஏனெனில் நாம் எல்லோரும் ஒரே பொருளையே பார்க்கிறோம், ஏறக் குறைய ஒரே லட்சியத்தை நோக்கியே போய்க் கொண்டிருக் கிறோம். நம்மிடையே உள்ள வேறுபாடுகளுள் பெரும் பான்மையும் வெளிப்படுத்துவதிலுள்ள வேறுபாடுகள் என்பதைக் காலப்போக்கில்தான் நாம் உணர்கிறோம்.

பாவம் என்ற கருத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அது பற்றி வேதாந்தம் கூறுவதை இப்போது உங்களுக்குச் சொன் னேன். மற்ற கருத்து மனிதனைப் பாவி என்று கருதுகிறது. செயல்முறையில் இரண்டும் ஒன்றே; ஒன்று உடன்பாட்டில் கூறுகிறது, மற்றொன்று எதிர்மறையில் கூறுகிறது. ஒன்று மனிதனுக்கு அவனது வலிமையைக் காட்டுகிறது, மற்றொன்று பலவீனத்தைக் காட்டுகிறது. பலவீனம் இருக்கலாம், ஆனால் அதைப்பற்றிக் கவலைப்படாதீர்கள், நாம் வளர வேண்டும் என்கிறது வேதாந்தம்.

மனிதன் பிறந்தபோதே நோய்களும் கண்டுபிடிக்கப்பட்டு விட்டன. ஒவ்வொருவருக்கும் தன் நோய் தெரியும். அதைப் பிறர் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் நோயைப்பற்றி எப் போதும் எண்ணிக்கொண்டே இருப்பது நம்மைக் குணப் படுத்தாது, அதற்கு மருந்து வேண்டும். நாம் வெளியிலுள்ள எதையும் மறந்து விடலாம், நல்லவர்களைப்போல் நடிக்கலாம். ஆனால் நமது பலவீனங்கள் நமக்கு நன்றாகத் தெரியும். பல வீனங்களை எண்ணிக் கொண்டிருப்பதில் பலன் ஒன்றுமில்லை, பலத்தை வளர்த்துக் கொள்ளுங்கள். எப்போதும் பலவீனத்தை எண்ணிக் கொண்டிருப்பது பலத்தை வளர்க்கும் வழியல்ல என்று வேதாந்தம் கூறுகிறது. பலவீனத்திற்குப் பரிகாரம் பலத்தை நினைப்பதே தவிர, பலவீனத்தை நினைப்பதல்ல.

ஏற்கனவே தங்கள் உள்ளிருக்கும் ஆற்றலை மனிதர்களுக்கு எடுத்துக் கூறுங்கள். மனிதர்களைப் பாவிகள் என்று கூறுவதை விட்டுவிட்டு, அதற்கு மறுபக்கத்தை எடுத்துக் கொள்கிறது

வேதாந்தம்; 'நீ தூய்மையானவன், பூரணமானவன், நீ நினைக்கும் பாவம் என்பது உனக்கு உரியது அல்ல' என்று கூறுகிறது அது. ஆன்ம வெளிப்பாட்டின் மிகத் தாழ்ந்த நிலைகளே பாவங்கள். நீங்கள் ஆன்மாவின் உயர்ந்த நிலையை வெளிப்படுத்துங்கள். அதுவே நினைவில்கொள்ளப்பட வேண்டுவது. நாம் அனைவரும் அதைச் செய்ய முடியும். 'முடியாது, என்னால் இயலாது' என்று மட்டும் சொல்லாதீர்கள். நீங்கள் எல்லையற்றவர்கள். காலமும் இடமும்கூட, உங்கள் இயல்புடன் ஒப்பிடும்போது ஒன்றுமே இல்லை. நீங்கள் எதையும் செய்ய முடியும். எல்லாம் வல்லவர்கள் நீங்கள்.

இதுவே நீதிநெறிக் கோட்பாடுகள். நாம் சற்றுக் கீழே இறங்கி அவற்றை எவ்வாறு நகர வாழ்க்கை, கிராம வாழ்க்கை, தேசிய வாழ்க்கை, ஒவ்வொரு நாட்டினரின் குடும்ப வாழ்க்கை என்று நமது அன்றாட வாழ்க்கையில் செயல்முறைப்படுத்துவது என்பதைப் பார்ப்போம். மனிதன் இருக்கின்ற இடத்தில், இருக்கின்ற நிலையில் ஒரு மதம் அவனுக்குப் பயன்படவில்லை என்றால் அதனால் பெரிய பயன் ஒன்றுமில்லை. அது கொள்கையளவில் மட்டும் ஒருசிலரிடம் இருக்கும், அவ்வளவுதான். மனித குலத்திற்கு மதம் பயன்பட வேண்டுமானால், மனிதன் அடிமையாகவோ சுதந்திரனாகவோ இழிந்தவனாகவோ தூய்மையில் உயர்ந்தவனாகவோ எந்த நிலையிலும் எங்கிருந்தாலும் அது அவனுக்குச் சமமாகக் கைகொடுக்க வேண்டும். வேதாந்தக் கோட்பாடுகள், மதத்தின் லட்சியம் என்று என்ன பெயரில் கூறினாலும் இதைச் சாதிப்பதில்தான் அதன் நிறைவு உள்ளது.

தன்னம்பிக்கை லட்சியம் நமக்கு மிகப்பெரிய உதவியாகும். இந்தத் தன்னம்பிக்கை எங்கும் உபதேசிக்கப்பட்டு, செயல்முறையில் பின்பற்றப்படுமானால் நம்மிடையே உள்ள தீமைகளும் துயரங்களும் பெரும்பாலும் அழிந்துவிடும். மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும்போது, எந்த ஆணோ பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால், அதற்கு, மற்ற எல்லாவற்றையும்விட முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கைதான். பிறந்ததிலிருந்தே, நான் சிறப்படையப் போகிறேன் என்ற எண்ணத்துடன் அவர்கள் வாழ்ந்தார்கள், சிறந்தவர்கள் ஆனார்கள். எவ்வளவு முடியுமோ அவ்வளவு தாழ்ந்த நிலைக்கு ஒருவன் சென்றாலும், திடீரென ஒரு முரட்டுத் துணிச்சலுடன் மேலெழுந்து, தன்னம்பிக்கையுடன்

திகழும் நேரம் ஒன்று வந்தே தீரும். ஆரம்பத்திலேயே நாம் இதைத் தெரிந்துகொள்வது நல்லது. நமக்குத் தன்னம்பிக்கை வளர ஏன் இந்தக் கசப்பான அனுபவங்கள் எல்லாம்? மனிதர்களுக்கிடையில் உள்ள வேறுபாடுகளுக்கு எல்லாம் காரணம் தன்னம்பிக்கையும் அது இல்லாதிருப்பதுமே என்பதைக் காணலாம். அனைத்தையும் தன்னம்பிக்கை சாதிக்கும். என் வாழ்க்கையில் நானே அதை உணர்ந்திருக்கிறேன்; இன்றும் உணர்ந்து கொண்டிருக்கிறேன். எனக்கு வயது ஏறஏற அந்த நம்பிக்கை வளர்ந்தே வருகிறது.

தன்னிடம் நம்பிக்கை இல்லாதவனே நாத்திகன். கடவுளிடம் நம்பிக்கை இல்லாதவனை நாத்திகன் என்று பழைய மதங்கள் கூறின. புது மதமோ தன்னிடம் நம்பிக்கை இல்லாதவனே நாத்திகன் என்கிறது. ஆனால் இந்த நம்பிக்கை, சிறிய-நான் என்பதைச் சார்ந்ததாக இருக்கக் கூடாது. ஏனெனில் ஒருமையே வேதாந்தத்தின் கோட்பாடு. நீங்களே அனைத்துமாதலால் அனைத்திலும் நம்பிக்கை கொள்வது என்பதே இதன் பொருள். உங்களிடம் நீங்கள் அன்புகொள்வது என்பது அனைத்திலும், அதாவது விலங்குகளிலும் மற்ற எல்லாவற்றிடமும்கூட அன்பு கொள்வதே. நீங்களும் எல்லாமும் ஒன்றே. இந்த மேலான நம்பிக்கையே உலகைச் சிறக்கச் செய்யும். நான் இதை உறுதியாக நம்புகிறேன்.

'என்னைப்பற்றி எனக்கு எல்லாம் தெரியும்' என்று உண்மையின் உறுதியுடன் கூற வல்லவனே மனிதருள் உயர்ந்தவன். உங்கள் உடலுக்குப் பின்னால் எவ்வளவு சக்தி, எத்தனை வகை ஆற்றல்கள், வேகங்கள் எல்லாம் மறைந்துள்ளன என்பது உங்களுக்குத் தெரியுமா? மனிதனிலுள்ள அனைத்தையும் அறிந்த விஞ்ஞானி யாராவது இருக்கிறார்களா? மனிதன் தோன்றி கோடிக்கணக்கான ஆண்டுகள் கழிந்துவிட்டன; எனினும் அவனது ஆற்றல்களின் கோடியில் ஒரு பகுதியே வெளிப்படுத்தப் பட்டுள்ளது. எனவே பலவீனன் என்று உங்களைச் சொல்லிக் கொள்ளாதீர்கள். வெளிப்படையாகத் தோன்றும் இந்த இழிவுகளுக்கெல்லாம் பின்னால் என்னென்ன சக்திகள் உள்ளன என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? உங்கள் ஆற்றலில் கடுகளவே நீங்கள் அறிந்துள்ளீர்கள். எல்லையற்ற ஆற்றல் மற்றும் எல்லையற்ற ஆனந்தத்தின் கடல் உங்களுள் உள்ளது.

முதலில் இந்த ஆன்மாவைப்பற்றிக் கேட்க வேண்டும். நீங்கள் அந்த ஆன்மாவே என்பதை அல்லும் பகலும் கேட்டு

வாருங்கள். அந்த எண்ணம் உங்கள் நாடி நரம்புகளில் பாயும் வரை, உங்கள் ஒவ்வொரு துளி ரத்தத்திலும் கலந்து துடிக்கும் வரை, உங்கள் தசையிலும் எலும்பிலும் ஊறும்வரை, அதை இரவுபகலாக உங்களுக்குள்ளேயே கூறுங்கள். 'நான் பிறப் பற்றவன், இறப்பற்றவன், பேரின்ப மயமானவன், எல்லாம் அறிந்தவன், எல்லாம் வல்லவன், என்றும் மகத்தான ஆன்மா' என்ற இந்த ஒரே லட்சியத்தால் உங்கள் உடம்பு நிறைந்திருக் கட்டும். இரவுபகலாக அதையே எண்ணுங்கள்; அது உங்கள் வாழ்க்கையுடன் கலந்து ஒன்றும்வரை அதையே சிந்தியுங்கள், அதையே தியானியுங்கள். அதிலிருந்து செயலாற்றல் வெளிப் படும். 'இதய நிறைவு காரணமாக வாய் பேசுகிறது.' இதய நிறைவாலேயே கைகளும் செயல் புரியும், செயலாற்றல் நிகழும். இந்த லட்சியத்தால் உங்களை நிறையுங்கள். நீங்கள் எதைச் செய்தாலும் இதையே சிந்தியுங்கள். இந்தச் சிந்தனையின் ஆற்றலால் உங்கள் செயல்கள் அனைத்தும் பெருக்கப்படும், மாறுபாடு அடையும், தெய்வீகமாகும். ஜடப்பொருள் வலிமை யானது என்றால் சிந்தனை எல்லாம்வல்லது. இந்தச் சிந்தனை உங்கள் வாழ்க்கையில் முத்திரை பதிக்கட்டும். எல்லாம் வல்ல உங்கள் ஆற்றல், உங்கள் சிறப்பு, உங்கள் மகிமை இவை பற்றிய சிந்தனையால் உங்களை நிறையுங்கள், உங்கள் தலை யில் மூட நம்பிக்கை எதுவும் புகாதிருக்கக் கடவுள் அருள் புரியட்டும்! பிறப்பிலிருந்தே இத்தகைய மூடநம்பிக்கைகள் நம்மீது ஆதிக்கம் செலுத்தாமல் இருக்குமாறும் நமது வளர்ச்சியைக் கெடுக்கின்ற பலவீனம், தீமை போன்ற கருத்துக் கள் நம்மைச் சூழ்வதையும் கடவுள் தடுப்பாராக! மிக உயர்ந்த, மிகச் சிறந்த உண்மைகளை அறியவல்ல எளிய பாதைகளை மனிதன் அடையக் கடவுள் கருணை செய்வாராக! மனிதன் இவற்றைக் கடந்தேயாக வேண்டியிருக்கிறது. உங்கள் பின்னால் வருபவர்களுக்குப் பாதையை மேலும் கடினமாக்காதீர்கள்.

இவை சிலவேளைகளில் கொடிய கொள்கைகளாகத் தோன்றும். இந்தக் கருத்துக்களைக் கேட்டாலே நடுங்குபவர் களை நான் கண்டிருக்கிறேன். ஆனால் இவற்றைச் செயல் முறைக்குக் கொண்டு வர விரும்புபவர்கள் முதன்முதலாக அறிய வேண்டிய பாடம் இதுவே. நீங்கள் பலவீனர் என்று உங்களுக்கோ பிறருக்கோ ஒருபோதும் கூறாதீர்கள். முடிந்தால் உலகிற்கு நன்மை செய்யுங்கள், ஆனால் தீமை செய்யாதீர்கள். உங்களை நீங்களே தாழ்த்திக் கொள்வது, கற்பனைத்

தெய்வங்களை நோக்கிப் பிரார்த்திப்பது என்று உங்கள் குறுகிய எண்ணங்களுள் பலவும் மூடநம்பிக்கைகளே என்பது உங்கள் உள்ளத்திற்கே தெரியும். உங்கள் பிரார்த்தனை நிறைவேறியது என்று ஒரு சம்பவத்தை எனக்குக் காட்டுங்கள் பார்க்கலாம். நீங்கள் பெறும் விடைகள் அனைத்தும் உங்கள் இதயங்களி லிருந்தே பிறந்தவை. பேய் என்ற ஒன்று இல்லை என்பது நமக்குத் தெரியும். ஆனாலும் இருளில் நிற்க நேர்ந்தால் ஏதோ ஒன்று நம்மீது ஊர்வது போன்ற உணர்ச்சி வந்துவிடுகிறது. ஏனெனில் நாம் குழந்தைகளாக இருந்தபோதே, இத்தகைய அச்சமூட்டும் கருத்துக்கள் நம் மூளையில் திணிக்கப்பட்டு விட்டன. சமுதாயத்திற்காகவோ, நண்பர்களின் வெறுப்பைச் சம்பாதிக்க நேரும் என்பதற்காகவோ, நீண்ட காலம் வளர்ந்து வந்த மூட நம்பிக்கைகளை இழந்து விடுவோம் என்பதற் காகவோ, விமர்சனங்களுக்குப் பயந்தோ இத்தகைய கருத்துக் களை மக்களுக்குச் சொல்லாதீர்கள். இவற்றை அடக்கி ஆளுங்கள்!

பிரபஞ்சத்தின் ஒருமை, தன்னம்பிக்கை இவற்றைத் தவிர மேலும் கற்பிக்க மதத்தில் வேறு என்ன இருக்கிறது? ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக மனித குலம் இந்த ஒரே குறிக்கோளை நோக்கியே சென்று கொண்டிருக்கிறது. இன்னும் இதற்காகவே உழைத்துக் கொண்டிருக்கிறது. இப்போது உங்கள் பங்கை நீங்கள் செய்ய வேண்டும். உங்களுக்கு உண்மை தெரிந்துள்ளது. எங்கும் இதுவே கற்பிக்கப் படுகிறது. தத்துவமும் மனஇயலும் மட்டுமல்ல, உலகாயத விஞ்ஞானங்கள்கூட இதையே கூறுகின்றன.

பிரபஞ்சத்தின் ஒருமையை மறுக்கும் விஞ்ஞானி எங்கிருக் கிறார்? பல உலகங்களைப் பற்றிப் பேசுபவர்கள் யார் இருக் கிறார்கள்? இவை எல்லாம் மூடநம்பிக்கைகளே. ஒரே ஒரு வாழ்க்கைதான் இருக்கிறது. அதுபோல் உலகமும் ஒன்றுதான் இருக்கிறது. இந்த ஒரு வாழ்க்கையும், இந்த ஒரே உலகமும்தான் நமக்குப் பலவாகத் தோற்றம் அளிக்கிறது. இந்தப் பன்மை வெறும் கனவு போன்றதே. நாம் கனவு காணும்போது, ஒன்று மறைந்ததும் தொடர்ந்து மற்றொன்று வருகிறது. கனவில் நீங்கள் வாழ்வதில்லை. ஒவ்வொரு கனவாக, காட்சிக்குப்பின் காட்சி யாக உங்கள் முன்னால் விரிகின்றன. உலகின் விஷயமும் அப்படித்தான். இப்போது அதில் தொண்ணூறு சதவீதம் துன்பமும் பத்து சதவீதம் இன்பமும் உள்ளது. ஒருவேளை சில

நாட்களுக்குப் பிறகு தொண்ணூறு சதவீதம் மகிழ்ச்சி இருப்பது போல் தோன்றலாம். அதைச் சொர்க்கம் என்று அழைப்போம். ஆனால் இவை எல்லாம் மறைந்து, உலகமே கடவுளாகவும் சொந்த ஆன்மாவே கடவுளாகவும் தோன்றும் நேரம் ஒன்று மகான்களுக்கு வருகிறது. எனவே உண்மையில் பல உலகங்கள் இல்லை, பல வாழ்க்கைகள் இல்லை. இந்தப் பன்மைத் தோற்றங்கள் எல்லாம் ஒரே பரம்பொருளின் வெளிப்பாடுகளே. அந்த ஒரே பரம்பொருள்தான் ஜடப்பொருள், உணர்வு, எண்ணம் என்று அனைத்தாகவும் தோன்றுகிறது. ஒன்றே பலவாகத் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. எனவே நமது முதல் வேலை என்னவென்றால் இந்த உண்மையை நாம் உணர்வதும் உலகிற்குச் சொல்வதுமே.

இந்த உலகமெங்கும் இந்த லட்சியம் எதிரொலிக்கட்டும், மூடநம்பிக்கைகள் மறையட்டும். பலவீனர்களிடம் இதைச் சொல்லுங்கள். மீண்டும்மீண்டும் சொல்லுங்கள். நீ தூய்மையானவன், நீ உறங்கியது போதும், விழித்தெழு, இந்தத் தூக்கம் உனக்கு உகந்ததல்ல, விழித்தெழு, இது உனக்குத் தக்கதல்ல, உன்னைப் பலவீனன், அற்பன் என்று எண்ணாதே! எல்லாம் வல்லவனே, விழித்தெழு. உனது உண்மை இயல்பை வெளிப்படுத்து. உன்னைப் பாவி என்று கருதுவது உனக்குப் பொருந்தாது. உன்னைப் பலவீனன் என்று நினைப்பது உனக்குப் பொருந்தாது. இதை உலகிற்குக் கூறு, உனக்கும் கூறு. தொடர்ந்து வரும் விளைவைப் பார். மின்னல்வேகத்தில் எப்படி அனைத்தும் வெளிப்படுகிறது, எப்படி மாறுகிறது என்பதைப் பார். இவை எல்லாவற்றையும் மனித சமுதாயத்திற்குக் கூறு, அவற்றின் ஆற்றலைப்பற்றி எடுத்துக் கூறு, பின்னர் எப்படி நம் அன்றாட வாழ்க்கையில் அதைப் பயன்படுத்துவது என்பதை அறிந்துகொள்ளலாம்.

நமது வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் ஒவ்வொரு செயலிலும் விவேகத்தைச் செயல்படுத்த வேண்டும். நல்லது எது, கெட்டது எது, உண்மை எது, பொய் எது என்பதைப் பகுத்தறிய வேண்டும். அதற்கு, தூய்மையும் ஒருமையுமே உண்மையின் உரைகல் என்பதை அறிய வேண்டும். ஒருமையை உணர்த்துபவை எல்லாம் உண்மை. அன்பு உண்மையானது, வெறுப்பு பொய்யானது. ஏனென்றால் வெறுப்பு பன்மைக்கு வழிவகுக்கிறது, மனிதனை மனிதனிடமிருந்து பிரிக்கிறது. எனவே இது தவறானது, பொய்யானது. இது பிரிக்கும் சக்தி.

இது பிரித்து, முடிவில் அழித்துவிடுகிறது. அன்பு இணைக்கிறது, ஒருமையை வளர்க்கிறது. அன்பில் நீங்கள் ஒன்றாகிறீர்கள்; தாய் குழந்தையுடனும், குடும்பங்கள் நகரத்துடனும், உலகம் விலங்கினத்துடனும் ஒன்றாகின்றன. இருப்பது அன்பே. அன்பே கடவுள். இருப்பவை அனைத்தும் அந்த ஒன்றேயான அன்பின் வெளிப்பாடுகளே. வெளிப்பாட்டில் ஏற்றத் தாழ்வு இருக்கலாம். இந்த வேறுபாடுகளும் அளவில் மட்டுமே. அனைத்தும் ஒரே அன்பின் வெளிப்பாடுகளே. எனவே நமது செயல்கள் எல்லாம் ஒருமைக்கு வழிவகுக்கிறதா, வேறுபாடுகளைத் தோற்றுவிக்கிறதா என்பதைப் பார்க்க வேண்டும். வேறுபாடுகளை ஏற்படுத்துமானால் அந்தச் செயலை விட்டுவிட வேண்டும். ஒருமையை நோக்கி நம்மை இட்டுச் செல்லுமானால் அவை நிச்சயமாக நற்செயல்களே. நமது எண்ணங்களிலும் அதுபோலவே. அவை ஒருமையைக் குலைத்து பன்மையை வளர்க்கின்றனவா அல்லது ஒருமைப்படுத்தி ஒவ்வோர் ஆன்மாவையும் இணைத்து ஒரு பெரும் சக்தியாக்குகின்றனவா? இதைச் செய்தால் நாம் அவற்றை ஏற்றுக்கொள்வோம், இல்லாவிட்டால் குற்றம்புரிபவை என்று ஒதுக்கி விடுவோம்.

ஒருபோதும் அறிய முடியாத எதையும் நீதிநெறிக் கோட்பாடுகள் சார்ந்திருப்பது இல்லை; அறிய முடியாத எதையும் அவை உபதேசிப்பதும் இல்லை. ஆனால் உபநிடதங்கள், 'அறிய முடியாத கடவுளென நாம் யாரை வழிபடுகிறோமோ அவரை உங்களுக்கு உபதேசிக்கிறேன்' என்கிறது. ஆன்மாவின் மூலமாகவே எல்லாவற்றையும் நாம் அறிய முடிகிறது. நான் இந்த நாற்காலியைப் பார்க்கிறேன், ஆனால் இந்த நாற்காலியைப் பார்ப்பதற்குமுன் நான் என்னைப் பார்க்க வேண்டும், பின்னர் நாற்காலியைப் பார்க்க வேண்டும். ஆன்மாவின் உள்ளும் ஆன்மாவின் மூலமாகவும்தான் நான் நாற்காலியைக் காண்கிறேன். ஆன்மாவின் உள்ளேயும் ஆன்மாவின் மூலமாகவும்தான் நான் உங்களை அறிகிறேன்; உலகம் முழுவதையும் அறிகிறேன். எனவே ஆன்மா அறியப்பட முடியாதது என்று கூறுவது வடிகட்டின முட்டாள்தனம்.

ஆன்மாவை விலக்குங்கள். இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே மறைந்துவிடும். ஆன்மாவின் உள்ளும் அதன் மூலமாகவுமே எல்லா அறிவும் ஏற்படுகிறது. எனவே எல்லாவற்றையும்விட அது நன்றாக அறியப்படுவது. நீங்களே அது. 'நான்' என்று

நீங்கள் கூறுவது அதனையே. இந்த என்னுடைய 'நான்' எப்படி உங்களுடைய 'நான்' ஆக முடியும் என்று நீங்கள் வியப்படைய லாம். எப்படி இந்த எல்லைக்கு உட்பட்ட 'நான்' எல்லையற்ற ஒன்றாக முடியும் என்று ஆச்சரியப்படலாம். ஆனால் அதுதான் உண்மை. எல்லைக்கு உட்பட்டிருப்பது என்பது வெறும் கற்பனை! அந்த எல்லையற்றது மூடப்பட்டிருப்பது போல் உள்ளது. அதன் ஒருசிறு பகுதி நான் ஆகவெளிப்படுகிறது. எல்லையற்ற ஒன்றிற்கு ஒருபோதும் எல்லை இருக்க முடியாது, அப்படித் தோன்றுவது கற்பனை. எனவே இந்த ஆன்மா ஆண், பெண், குழந்தை, ஏன், விலங்குகள் என்று ஒவ்வொருவராலும் அறியப்பட்டதாகிறது. அவரை அறியாமல் நாம் வாழவோ அசையவோ முடியாது. அவரின்றி நமது இருப்பே இல்லை. அனைத்திற்கும் தலைவரான அவரை அறியாமல் நம்மால் ஒரு கணம்கூட மூச்சுவிடவோ உயிர் வாழவோ முடியாது. வேதாந்தம் கூறும் கடவுள் மற்ற எல்லாவற்றையும்விட எல்லோ ராலும் நன்கு அறியப்பட்டவர், வெறும் கற்பனைக் கடவுளல்ல.

இது செயல்முறைக்கு ஏற்ற கடவுளைப்பற்றிக் கூறுவது ஆகாதென்றால், அத்தகைய ஒரு கடவுளைப்பற்றி எப்படிப் போதிப்பது? நம் முன்னால் காண்கின்ற, எங்கும் நிறைந்திருக் கின்ற, எல்லா உயிரிலும் விளங்குகின்ற, புலன்களைவிட உண் மையாக இருக்கின்ற ஒருவரைவிடச் செயல்முறைக்கு ஏற்ற ஒரு கடவுளை நாம் எங்கே காண முடியும்? ஏனெனில் நீங்களே அந்த எங்கும் நிறைந்த, எல்லாம் வல்ல, பரம்பொருள்; ஆன்மாக் களுக்கெல்லாம் ஆன்மா. நீங்கள் அந்தப் பரம்பொருள் இல்லை என்று நான் சொன்னால் அது பொய் சொல்வதாகும். இதை நான் உணர்ந்தாலும் எல்லா நேரத்திலும் உணராவிட்டாலும் அறிந்தேயிருக்கிறேன். அவர்தான் அந்த ஏகப்பரம்பொருள், ஒருமை, எல்லாவற்றின் உண்மையான உயிர்த் தத்துவம்.

வேதாந்தத்தின் இந்த நீதிநெறிக் கருத்துக்களின் விளக்கங் களை நாம் பார்க்க வேண்டியுள்ளது. எனவே நீங்கள் சற்றுப் பொறுமையாக இருக்க வேண்டும். மிகச் சாதாரணமான கருத்துக்களிலிருந்து எப்படி மகோன்னதமான இந்த ஒருமை லட்சியம் வந்தது என்பதையும், அது பிரபஞ்சம்தழுவிய அன் பாக எப்படி மாறிவருகிறது என்பதையும்பற்றி விரிவாக, தெளி வாக நாம் தெரிந்துகொள்ள வேண்டும். சில அபாயங்களைத் தவிர்ப்பதற்காக நாம் இதைப் படித்தேயாக வேண்டும். கீழ்நிலை யிலிருந்து இதைப் படிப்படியாக ஆராய உலகத்தினருக்கு

நேரம் கிடைப்பதில்லை. பின்னால் வருவோருக்கு உண்மையைக் கொடுக்க முடியாவிட்டால் நாம் மேல்படியில் நிற்பதில் என்ன பயன்? எனவே அதன் செயல்முறைப் பகுதிகளை ஆராய்வது நல்லது. முதலில் அறிவுப் பகுதிகளைப் பார்ப்பது மிகவும் இன்றியமையாதது. அறிவால் பெரிய பயனொன்றும் இல்லை என்று தெரிந்தாலும் அதைச் செய்தேயாக வேண்டும். இதயம் தான் மிக முக்கியமானது. ஏனெனில் இதயத்தால்தான் இறைவனைப் பார்க்கிறோம். அறிவால் அல்ல. அறிவு என்பது ஒரு துப்புரவுப் பணியாளன் மட்டுமே. அது நமது பாதையைச் சுத்தமாக்கித் தருகிறது. அது போலீசைப் போன்ற ஒரு இரண்டாம் நிலைப் பணியாளன். சமூகம் செயல்படுவதற்குப் போலீஸ் இருந்தேயாக வேண்டும் என்ற அவசியம் இல்லை. கலகங்களைத் தடுப்பதும் தவறுகளை விலக்குவதும்தான் போலீசின் வேலை. அறிவும் அதைத்தான் செய்கிறது. அறிவு நூல்களைப் படிக்கிறோம், முடித்தபின்னரோ 'இறையருளால் தொல்லை ஒழிந்தது' என்று எண்ணுகிறோம். ஏனெனில் அறிவு என்பது குருடு, அதனால் இயங்க முடியாது, அதற்குக் கைகளோ கால்களோ இல்லை. இதயமே, உணர்ச்சியே செயல்படுகிறது; இது மின்சக்தியைவிட பிற எந்தச் சக்திகளையும்விட எல்லையற்ற மடங்கு அதிக வேகத்துடன் செயல்படுகிறது. நீ இதயம் உள்ளவனா, உணர்ச்சி நிறைந்தவனா—இதுதான் கேள்வி. அப்படியானால் நீ கடவுளைக் காண்பாய். இப்போது உங்களிடமுள்ள உணர்ச்சியே ஆழமாகி, தெய்வீகமாகி, மிகவுயர்ந்த நிலைக்குச் சென்று இறுதியில் எல்லாவற்றையும் உணர்கின்ற, எல்லாவற்றிலும்உள்ள ஒருமையை உணர்கின்ற, தன்னிலும் பிறரிலும் கடவுளை உணர்கின்ற நிலையை அடைகிறது. புத்தியால் அது முடியவே முடியாது. 'விதவிதமாகப் பேசுவது, நூல்களை விதவிதமாக விளக்குவது—இவையெல்லாம் பண்டிதர்களின் இன்பத்திற்கே உதவும், ஆன்ம முக்திக்கு உதவாது'.[1]

தாமஸ் ஏ. கெம்பிஸ் என்பவர் எழுதிய நூலை[2] நீங்கள் படித்திருந்தால் ஒவ்வொரு பக்கத்திலும் அவர் எப்படி இந்தக் கருத்தை வலியுறுத்தியிருக்கிறார் என்பது தெரியும். அவர் மட்டுமல்ல, ஏறக்குறைய எல்லா மகான்களும் இதே கருத்தைக்

---

1. வாக்வைகரீ சப்தஜரீ சாஸ்த்ரவ்யாக்யான கௌசலம் |
வைதுஷ்யம் விதுஷாமேவ தத்வத்புக்தயே ந து முக்தயே ||
—விவேக சூடாமணி, 58.

2. Imitation of Christ.

கூறவே செய்துள்ளார்கள். புத்தி அவசியம்தான், அது இல்லாவிடில் நாம் வழிதவற நேரும், குற்றங்களைச் செய்ய நேரும். இதை அறிவு தடுக்கிறது, இதற்குமேல் அதைக்கொண்டு ஏதாவது செய்யலாம் என்று எண்ணாதீர்கள். அது மந்தமானது; அது இரண்டாம் நிலை உதவி மட்டுமே. உண்மையான உதவி உணர்ச்சியிலிருந்தே, அன்பிலிருந்தே வருகிறது. பிறருக்காக நீங்கள் உணர்ச்சி கொள்கிறீர்களா? உணர்கிறீர்களானால் ஒருமைநிலையில் வளர்கிறீர்கள். பிறருக்காக உணர்ச்சி கொள்ளாவிட்டால் நீங்கள், இதுவரை பிறந்தவர்களுள் மிகப் பெரிய மேதையாக இருந்தாலும் நீங்கள் வெறும் பூஜ்யமே. நீங்கள் வெறும் வறட்டு அறிவாளிகள், அவ்வளவுதான். நூல்களைப் படிக்கத் தெரியாவிட்டாலும் மொழிகள் தெரியாவிட்டாலும், உங்கள் உள்ளத்தில் உணர்ச்சி இருக்குமானால் நீங்கள் நேரான வழியில்தான் போகிறீர்கள். இறைவன் உங்களுடையவரே.

மகான்களின் சக்தியெல்லாம் எங்கே இருந்தது என்பதை உலக வரலாற்றிலிருந்து நீங்கள் அறியவில்லையா? எங்கே? புத்தியிலா? அவர்களுள் யாராவது தத்துவ நூலோ, மிக நுணுக்கமான தர்க்க நூலோ எழுதினார்களா? இல்லவே இல்லை. அவர்கள் சிறிதே பேசினார்கள். ஏசுவைப் போன்று உள்ளத்தில் உணர்ச்சிகொள், நீ ஏசு ஆவாய். புத்தரைப்போல் உணர்ச்சி கொள், புத்தராவாய். உணர்ச்சியே வாழ்க்கை, உயிர், வலிமை. அதில்லாமல் எவ்வளவு தீவிரமான அறிவு முயற்சியாலும் கடவுளை அடைய முடியாது. இயங்கும் சக்தியற்ற உறுப்புகள் போன்றதே அறிவு. உணர்ச்சிகள் அவற்றுள் புகுந்து அவற்றை இயக்கியபிறகுதான் அவை இயங்குகின்றன; பிறர்மீதும் செயல் படுகின்றன. உலகம் முழுவதும் இப்படித்தான் நடக்கிறது. இதை எப்போதும் நினைவில் வைக்க வேண்டும்.

வேதாந்தத்தின் ஒழுக்க நெறிகளில் இது மிகவும் செயல் முறைக்குப் பொருத்தமானது. அதாவது நீங்கள் எல்லோரும் மகான்களே, மகான்களாகத்தான் இருக்க முடியும் என்கிறது வேதாந்தம். உங்கள் நடத்தைக்குச் சாஸ்திரம் அத்தாட்சி அல்ல, நீங்கள்தான் சாஸ்திரங்களுக்கு அத்தாட்சி. சாஸ்திரங்கள் உண்மையைத்தான் கூறுகின்றன என்று உங்களுக்கு எப்படித் தெரியும்? ஏனெனில் நீங்களே உண்மை, அதை நீங்கள் உணர்கிறீர்கள். இதையே வேதாந்தம் கூறுகிறது. ஏசு, புத்தர் போன்ற மகான்கள் வாழ்ந்ததற்கு என்ன அத்தாட்சி உள்ளது? நீங்களும்

நானும் அவர்களைப்போல் உணர்ச்சி கொள்கிறோம் என்பது தான். இவ்வாறே அவர்களும் உண்மையில் இருந்திருப்பார்கள் என்று அறிகிறோம். நமது மகத்தான இதயம்தான் அவர்களது மகத்தான இதயத்திற்கு அத்தாட்சி. நமது இறைத்தன்மைதான் இறைவன் இருப்பதற்கே அத்தாட்சி. நீங்கள் ஒரு மகான் அல்ல என்றால் கடவுள் என்று ஒருவர் இருப்பதும் உண்மையல்ல. நீங்கள் கடவுள் அல்ல என்றால், வேறு எந்தக் கடவுளும் இருந்ததுமில்லை, இருக்கப் போவதும் இல்லை. இதுவே பின் பற்ற வேண்டிய லட்சியம் என்று வேதாந்தம் கூறுகிறது. நாம் ஒவ்வொருவரும் மகான்களாக வேண்டும். ஏற்கனவே நீங்கள் அவ்வாறே இருக்கிறீர்கள். இதை அறியுங்கள், அவ்வளவுதான். ஆன்மாவால் முடியாத ஏதாவது உண்டென்று ஒருபோதும் எண்ணாதீர்கள். அப்படி எண்ணுவதே குற்றம். பாவம் என்ற ஒன்று உண்டென்றால் அது, நீங்கள் உங்களையோ பிறரையோ பலவீனர் என்று சொல்வதுதான். ❑

## 2

ஒரு சிறுவனுக்கு ஞானம் எப்படி வந்தது என்பதுபற்றி சாந்தோக்கிய உபநிடதத்தில் உள்ள மிகப் பழமையான கதை[1] ஒன்றைப்பற்றி உங்களுக்குச் சொல்லப்போகிறேன். அந்தக் கதையின் போக்கு நயமற்றுத் தோன்றினாலும், அதில் ஒரு கோட்பாடு, ஓர் உட்கருத்து உள்ளது. ஒரு சிறுவன் தன் தாயிடம், 'அம்மா, நான் வேதங்கள் கற்றுக்கொள்ளப் போகிறேன். எனவே என் தந்தையின் பெயரையும் நான் பிறந்த குலத்தின் பெயரையும் எனக்குச் சொல்லுங்கள்' என்று கேட்டான். அந்தத் தாய் திருமணம் ஆனவள் அல்ல. இந்தியாவில் ஒரு பெண் திருமணம் ஆகாமல் குழந்தை பெற்றுக்கொண்டால், அந்தக் குழந்தையைச் சமுதாயம் ஏற்றுக்கொள்ளாது, விலக்கி வைத்துவிடும். அந்தக் குழந்தைக்கு வேதங்கள் படிக்கும் தகுதியும் இல்லாமல் போய்விடும். எனவே அந்தப் பெண், 'மகனே, உனது குலம் என்ன என்பது எனக்குத் தெரியாது. நான் பல இடங்களில் வேலை செய்து பிழைத்து வந்தேன். உன் தந்தை யார் என்பதும் எனக்குத் தெரியாது. ஆனால் என் பெயர் ஜாபாலா, உன் பெயர் சத்தியகாமன்' என்றாள்.

அந்தச் சிறுவன் ஒரு முனிவரிடம் சென்று தன்னை மாணவனாக ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினான். அதற்கு அந்த முனிவர், 'குழந்தாய், உன் தந்தையின் பெயர் என்ன? உன் குலம் என்ன?' என்று கேட்டார். தன் தாயிடம் கேட்டுவந்த விஷயங்களை அப்படியே முனிவரிடம் கூறினான் அந்தச் சிறுவன். அதைக் கேட்ட அந்த முனிவர், 'தன்னைப் பற்றிய இத்தகைய இழிவான உண்மையைப் பிராமணனைத் தவிர யாரும் சொல்ல முடியாது. நீ ஒரு பிராமணனாகத் தானிருக்க வேண்டும். எனவே நான் உனக்குக் கற்றுத் தருகிறேன். நீ உண்மை நெறி பிறழாதவன்' என்று கூறி அந்தச் சிறுவனைத் தம்மிடமே வைத்துக் கல்வி கற்பித்து வந்தார்.

---

1. சாந்தோக்கிய உபநிடதம், 4. 4–9

இந்தியாவில் பழங்காலத்தில் இருந்த சில வினோதமான கல்விமுறைகளைப்பற்றிக் கூறப் போகிறேன். அந்த முனிவர் சத்தியகாமனிடம் நானூறு மெலிந்த, வலுவற்ற பசுக்களைக் கொடுத்து, அவற்றைக் காட்டிற்கு ஓட்டிச் சென்று பராமரித்து, அவற்றுடன் காட்டிலேயே வாழுமாறும் அந்தப் பசுக்கள் ஆயிரமாகப் பெருகிய பின்னரே அவன் வீட்டிற்குத் திரும்பும் படியும் கட்டளை இட்டார். அவனும் அவ்வாறே சில காலம் அங்கு வாழ்ந்தான். சில ஆண்டுகளுக்குப் பின் ஒருநாள் அந்த மந்தையிலிருந்த ஒரு கொழுத்த காளை சத்தியகாமனிடம், 'நாங்கள் இப்பொழுது ஆயிரம் பேராகிவிட்டோம். எனவே நீ எங்களை உன் குருவிடம் அழைத்துச் செல். நான் உனக்கு பிரம்மத்தைப்பற்றி உபதேசிக்கிறேன்' என்றது. சத்தியகாமனும், 'உபதேசியுங்கள் ஐயா' என்று கேட்டுக்கொண்டான். அந்தக் காளை கூறியது; 'கிழக்கு, இறைவனின் ஒரு பகுதி; அது போலவே மேற்கு; அது போன்றதே தெற்கு; அவ்வாறே வடக்கும். நான்கு முக்கியத் திசைகளும் பிரம்மத்தின் நான்கு பகுதிகள். இனி பிரம்மத்தைப்பற்றி உனக்குச் சிலவற்றை நெருப்பு உபதேசிக்கும்.'

நெருப்பும் முக்கியமான ஒரு சின்னமாக அந்த நாட்களில் கருதப்பட்டது. ஒவ்வொரு மாணவனும் அக்கினி வளர்த்து அதில் ஆஹுதி அளிக்க வேண்டும். சத்தியகாமன் மறுநாள் குருவின் வீடு நோக்கிப் புறப்பட்டான். மாலை நேரம் வந்ததும், வழக்கம்போல் அக்கினி மூட்டி வழிபாடு செய்ய ஆரம்பித்தான். அப்போது அந்த நெருப்பிலிருந்து ஒரு குரல் எழுந்து, 'ஓ சத்தியகாமா' என்று அழைத்தது. சத்தியகாமனும், 'சொல்லுங்கள் பிரபோ!' என்றான். (இதேபோன்று சாமுவேல் ஆச்சரியமான குரல் ஒன்றைக் கேட்டதுபற்றிப் பழைய ஏற்பாட்டில் உள்ளது உங்களுக்கு நினைவிருக்கலாம்) 'சத்தியகாமா, நான் உனக்கு பிரம்மத்தைப்பற்றிச் சிறிது உபதேசிப்பதற்காக வந்துள்ளேன். இந்தப் பூமி பிரம்மத்தின் ஒரு பகுதி, வானமும் சொர்க்கமும் அதன் பகுதிகள். கடலும் அதன் ஒரு பகுதியே' என்று கூறியது அந்தக் குரல். பின்னர் இன்ன பறவை பிரம்மத்தைப்பற்றி மேலும் கூறும் என்றும் கூறியது.

சத்தியகாமன் தனது பயணத்தைத் தொடர்ந்தான். மாலையில் வழக்கம்போல் அக்கினி வளர்த்து வழிபாடு செய்து கொண்டிருந்தபோது அன்னப் பறவை ஒன்று அங்கு வந்தது. அது அவனிடம், 'நான் உனக்குப் பிரம்மத்தைப்பற்றிச் சிறிது

கூறப் போகிறேன். சத்தியகாமா, நீ வழிபடும் இந்த நெருப்பு, அந்தப் பிரம்மத்தின் ஒரு பகுதி. சூரியன் ஒரு பகுதி, சந்திரன் ஒரு பகுதி, மின்னலும் அந்தப் பிரம்மத்தின் ஒரு பகுதி. மத்கு என்ற பறவை மேலும் உனக்கு பிரம்மத்தைப்பற்றிக் கூறும்' என்று சொல்லியது.

அடுத்த நாள் மாலை அந்தப் பறவை வந்தது. சத்திய காமனுக்குப் பழைய அதே குரல் கேட்டது. 'நான் உனக்கு பிரம்மத்தைப் பற்றிச் சிறிது கூறுகிறேன். பிராணன் பிரம் மத்தின் ஒரு பகுதி, காட்சி ஒரு பகுதி, கேட்பது ஒரு பகுதி, மனம் ஒரு பகுதி' என்றது.

கடைசியில் அந்தச் சிறுவன் குருவின் வீட்டை அடைந்து அவரைப் பணிந்தான். குரு சத்தியகாமனைப் பார்த்த உடனேயே அவனிடம், 'சத்தியகாமா, உன் முகம் பிரம்மத்தை அறிந்த வனின் முகம்போல் ஒளிர்கிறதே. உனக்கு யார் பிரம்மத்தைப் பற்றி உபதேசித்தது?' என்று கேட்டார். அதற்குச் சத்தியகாமன், 'மானிடரல்லாத ஜீவன்கள்' என்று கூறினான். பின்னர் தொடர்ந்து, 'ஆனால் சுவாமி, தாங்கள் எனக்கு உபதேசிக்க வேண்டும் என்பதே என் ஆசை. ஏனெனில் குருவிடமிருந்து பெறும் ஞானம் மட்டுமே மேலான நன்மைக்கு அழைத்துச் செல்லும் என்று, தங்களைப் போன்ற பெரியவர்கள் கூறக் கேட்டுள்ளேன்' என்றான். அவரும் அவனுக்குத் தாம் தேவர் களிடமிருந்து பெற்ற ஞானத்தைப் போதித்தார். 'எதுவும் விடப் படவில்லை, ஆம், எதுவும் விடப்படவில்லை!'

காளை, அக்கினி, பறவை போன்ற உருவகக் கதை களுடன் கூடவே அந்தக் காலக் கருத்துக்களின் நோக்கையும் போக்கையும் நாம் அறிகிறோம். இந்தக் குரல்கள் அனைத்தும் நம்முள்ளேயே உள்ளன என்னும் மகத்தான கருத்தின் முளையை நாம் இங்கே காண்கிறோம். இந்த உண்மைகளை இன்னும் தெளிவாக அறியும்போது அந்தக் குரல் நமது இதயத்திலேயே இருப்பதை உணர்கிறோம். அந்த மாணவன், தான் எப்போதும் உண்மையையே கேட்டு வருகிறோம் என்பதை அறிந்திருந் தாலும், அவன் கொண்ட விளக்கம் சரியில்லை. தன்னிட மிருந்தே வந்த அந்தக் குரலை அவன் வெளியிலிருந்து வந்ததாக நினைத்தான்.

இதிலிருந்து கிடைக்கும் இரண்டாவது கருத்து என்ன வென்றால் பிரம்ம ஞானத்தைச் செயல்முறைப் படுத்துவதே. உலகம் எப்போதும் மதத்தின் செயல்முறை சாத்தியக்

கூறுகளையே தேடி வருகிறது. அவை எப்படி மேன்மேலும் செயல்முறைக்கு ஏற்றவை ஆகின்றன என்பதையே இத்தகைய கதைகள்மூலம் நாம் அறிகிறோம். மாணவர்கள் நன்கு அறிந்தவற்றின் மூலம் இந்த உண்மை விளக்கப்பட்டது. அவர் கள் வழிபடும் அக்கினியே பிரம்மம் மற்றும் பூமி பிரம்மத்தின் ஒரு பகுதி என்றெல்லாம் கூறப்பட்டது.

அடுத்த கதை[1] உபகோசல காமலாயனைப் பற்றியது. இவன் இந்தச் சத்தியகாமனின் சீடன். உபதேசம் பெறுவதற்காக அவன் சத்தியகாமனிடம் சில காலம் தங்கி இருந்தான். ஒரு முறை சத்தியகாமன் பயணம் செல்ல நேர்ந்தது. தனியாக இருந்த சீடன் மனக் கவலை மிக்கவனானான். அவன் உண்பதுகூட இல்லை என்பதைக் கண்ட குருவின் மனைவி அதற்கான காரணத்தைக் கேட்டபோது சீடன், ‘அம்மா, நான் சாப்பிடக்கூட முடியாத அளவுக்குக் கவலையுடன் இருக் கிறேன்’ என்றான். அப்போது அவன் வழிபடும் அக்கினி யிலிருந்து ஒரு குரல் எழுந்து, ‘இந்தப் பிராணன் பிரம்மம், ஆகாசம் பிரம்மம், ஆனந்தம் பிரம்மம். பிரம்மத்தை அறிவா யாக!’ என்றது. அதற்கு உபகோசலன், ‘ஐயா, இந்தப் பிராணன் பிரம்மம் என்பதை நான் அறிவேன். ஆனால் ஆகாசமும் ஆனந்தமும் பிரம்மம் என்பது எனக்குத் தெரியவில்லை’ என் றான். அதற்கு அந்தக் குரல், ‘ஆகாசமும் ஆனந்தமும் நமது இதயத்தில் இருக்கும் சுத்த சைதன்யம் என்னும் ஒரே உண்மையைக் குறிப்பவை’ என்று விளக்கியது. எனவே பிரம்மம் என்பது பிராணனும் நமது இதயத்தில் இருக்கும் ஆகாசமுமே என்று அது கூறியது.

பின்னர் அந்த அக்கினி அவனுக்கு உபதேசித்தது: ‘நீ வழிபடும் இந்தப் பூமி, உணவு, அக்கினி, சூரியன் இவையும் பிரம்மத்தின் உருவங்களே. சூரியனில் காணப்படும் புருஷன் நானே. இதை அறிந்து தியானிப்பவனின் எல்லா பாவங்களும் மறைகின்றன. அவன் மகிழ்ச்சியுடன் நீண்ட நாட்கள் வாழ்வான். திசைகள், சந்திரன், நட்சத்திரங்கள், நீர் அனைத்திலும் உறைபவன் நானே. இந்தப் பிராணன், ஆகாசம், சொர்க்கங்கள், மின்னல் ஆகியவற்றிலும் உறைபவன் நானே.’ இங்கும் செயல் முறை மதத்தின் அதே கருத்தைக் காண்கிறோம். அவர்கள் வழிபட்டு வந்த அக்கினி, சூரியன், சந்திரன் போன்றவையும்,

1. சாந்தோக்கிய உபநிடதம், 4. 10–17.

அவர்களுக்குப் பழக்கமான குரலுமே கதைகளின் கருவாகி அவர்களுக்கு உயர்ந்த கருத்துக்களை உபதேசித்தன.

இதுவே வேதாந்தத்தின் உண்மையான செயல்முறைப் பகுதி. இது உலகத்தை அழிப்பதில்லை, அதனை விளக்குகிறது; இது மனிதனை அழிப்பதில்லை, அவனை விளக்குகிறது; இது தனித்துவத்தை அழிப்பதில்லை, உண்மையான தனித்துவம் எது என்பதைக் காட்டி அதை விளக்குகிறது. இந்த உலகம் வீணானது, உலகம் என்ற ஒன்றே இல்லை என்று கூறாமல், 'இந்த உலகம் உண்மையில் என்ன என்பதைப் புரிந்துகொண்டால் அது உங்களுக்குத் தீங்கு செய்யாது' என்று கூறுகிறது. உபகோசலனிடம், அவன் வழிபடும் அக்கினி, சூரியன், சந்திரன், மின்னல் போன்றவை பொய் என்று அந்தக் குரல் கூறவில்லை, ஆனால் சூரியன், சந்திரன், மின்னல், அக்கினி போன்றவற்றில் உறையும் சக்தியே அவனிடமும் உள்ளது என்று கூறியது. இதனால் அவனது காட்சியே மாறியது. முன்பு ஆஹுதிகளை அளித்து வழிபட்ட சாதாரணமான நெருப்பு இப்போது அவன் கண்களுக்குப் புதிய உருப் பெற்றது, தெய்வமாகியது. இவ்வாறே பூமியும் பிராணனும் சூரியன், சந்திரன், நட்சத்திரம், மின்னல் அனைத்துமே வேறுதோற்றம் பெற்று தெய்வீகமாகிவிட்டன. அவற்றின் உண்மை இயல்பு அறியப்பட்டு விட்டது. அனைத்திலும் இறைவனைக் காண்பதே வேதாந்தத்தின் சாரம்; பொருட்களின் புறத் தோற்றங்களை விடுத்து அவற்றின் உண்மை இயல்பை அறிவதே.

மற்றும் ஒரு கருத்து உபநிடதங்களில் புகட்டப்படுகிறது; 'கண்களின் மூலம் ஒளிர்வது பிரம்மமே. அவரே அழகானவர், ஒளிர்பவர் அவர், இந்த உலகெங்கும் பிரகாசிப்பவர் அவரே. கண்ணொளி என்பதை, தூயவர்களிடம் மிளிரும் தனி ஒளி என்று விளக்குகிறார் உரையாசிரியர் ஒருவர். மனிதன் தூயவனாகும்போது அவனது கண்களில் அத்தகைய ஒளி வீசும் என்றும், அந்த ஒளி உண்மையில், உள்ளும் புறமும் எங்கும் நிறைந்துள்ள ஆன்மாவின் ஒளியே என்றும் கூறப்படுகிறது. கிரகங்கள், நட்சத்திரங்கள், சூரியன்கள் இவற்றில் ஒளிர்வதும் அதே ஒளிதான்.

இந்தப் புராதனமான உபநிடதங்களில் காணப்படுகின்ற பிறப்பு, இறப்பு போன்ற வேறு சில கோட்பாடுகளைப்பற்றி இப்போது பார்க்கலாம்.[1] அது அனேகமாக உங்களுக்குப்

1. சாந்தோக்கிய உபநிடதம், 5. 4–10.

பிடிக்கலாம். சுவேதகேது பாஞ்சால மன்னனைக் காணச் சென்றான். அந்த அரசன் சுவேதகேதுவிடம், 'இறந்த பிறகு மக்கள் எங்குச் செல்கிறார்கள்? எப்படி அவர்கள் திரும்பி வருகிறார்கள்? அந்த மறு உலகம் ஏன் நிரம்புவதே இல்லை? இவை உனக்குத் தெரியுமா?' என்று கேட்டான். தனக்கு விடை தெரியாது என்றான் சுவேதகேது. பின்னர் அவன் தன் தந்தையிடம் சென்று அதே கேள்விகளைக் கேட்டான். தந்தையும் தமக்கு விடை தெரியாது என்று கூறினார். அதனால் இருவரும் அரசனிடமே திரும்பி வந்தனர். அப்போது அரசன், இந்த உண்மைகள் மதக் குருமார்களுக்குத் தெரியாது என்றும் அரசர்கள் மட்டுமே அறிவார்கள் என்றும் அதனால்தான் அரசர்கள் உலகை ஆள முடிகிறது என்றும் கூறினார்.

பின்னர் தந்தை அரசனுடனே சில நாட்கள் தங்கிச் சேவை செய்தார். கடைசியில் அரசன் உபதேசிக்கத் தொடங்கினான்: 'கௌதமரே, அந்த மற்றோர் உலகம் என்பது அக்கினியே. சூரியனே அதன் எரிபொருள். கிரணங்களே புகை. பகலே சுவாலை. நாட்கள் அதன் சுடர்கள். சந்திரனே தணல். நட்சத்திரங்கள் நெருப்புப் பொறிகள். இந்த அக்கினியில் தேவர்கள் நம்பிக்கை என்னும் நெருப்பை ஆஹுதியாக அளிக்கின்றனர். இதிலிருந்தே அரசனான சோமன் பிறக்கிறான்.' தொடர்ந்து உபதேசித்தான்: 'இந்தச் சிறிய அக்கினிக்கு வழிபாடு செய்ய வேண்டாம். இந்த உலகம் முழுவதுமே அக்கினி. இந்த ஆஹுதி அளித்தலும் வழிபாடும் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டே இருக்கிறது. தேவர்களும் தேவதைகளும் பிறரும் இதை வழிபடுகிறார்கள். மனிதனே, மனித உடலே அக்கினியின் மிகவுயர்ந்த சின்னம்!'

இங்கு லட்சியம் செயல்முறைப் படுத்தப்படுவதைக் காண்கிறோம். பிரம்மமே எங்கும் பார்க்கப்படுகிறது. இந்தக் கதைகளில் எல்லாம் உட்கருத்து ஒன்று உள்ளது. அது இதுதான்: நாம் கண்டுபிடிக்கும் சின்னங்களெல்லாம் நமக்கு உதவியாகவும் சிறப்பாகவும் இருந்தாலும், நாம் கண்டுபிடிக்க முடிந்த அனைத்தையும்விடச் சிறப்பான சின்னங்கள் ஏற்கனவே உள்ளன. கடவுளை வழிபடுவதற்கு நீங்கள் உருவம் ஒன்றைக் கண்டுபிடிக்கலாம். ஆனால் அதைவிட மிக நல்ல உருவம் ஏற்கனவே உள்ளது, அதுதான் மனிதன். நீங்கள் கடவுளை வழிபட ஒரு கோயில் கட்டலாம். அது நல்லதுதான். ஆனால் அதைவிட மிகவும் நல்லது, மிகவும் உயர்ந்தது ஏற்கனவே இருந்துவருகின்ற மனித உடலே.

வேதங்களுக்கு இரண்டு பகுதிகள் உள்ளன என்பது உங்களுக்கு நினைவிருக்கும். அவை கர்மகாண்டம், ஞானகாண்டம். காலப்போக்கில் கர்மகாண்டத்தில் கிரியைகள் பெருகி சிக்கல்கள் நிறைந்து அவற்றிலிருந்து விடுபடவே முடியாமல் போய் விடுமோ என்ற அளவுக்கு ஆகிவிட்டது. எனவே உபநிடதங்களில் இவை ஏறக்குறைய நீக்கப்பட்டுவிட்டதைக் காண்கிறோம். ஆனால் முற்றிலுமாக ஒதுக்கித் தள்ளிவிடாமல், அவற்றை விளக்கி, அவை படிப்படியாக நீக்கப்படுகிறது. பழங் காலத்தில் யாகங்கள் போன்றவை மிகுந்திருந்தன. பின்னர் தத்துவ ஞானிகள் வந்தனர். ஏற்கனவே இருப்பதைப் பிடுங்கி அழிக்கின்ற நவீனச் சீர்திருத்தங்களைப் போல் அவர்களின் சீர்திருத்தம் எதிர்மறையானதாக இருக்கவில்லை. மாறாக, சின்னங்களின் இடத்தில் அவர்கள் மற்றொன்றைப் பாமரர்களுக்குக் கொடுத்தார்கள். 'இதோ அக்கினி என்னும் சின்னம் உள்ளது; அது நல்லது. ஆனால் இதோ இந்தப் பூமி என்ற மற்றொரு சின்னம் உள்ளதே! அது எத்தனைக் கம்பீரமும் பெருமையும் வாய்ந்ததாக உள்ளது! இதோ சிறிய கோயில் ஒன்று உள்ளது. ஆனால் இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே கோயில்தானே! மனிதன் எங்கு வேண்டுமானாலும் வழிபடலாமே! மண்மீது மனிதர்கள் வழிபடும் உருவங்கள் இதோ, வழிபடுவதற்காக வரைந்துள்ள சித்திரங்கள் இதோ, பலிபீடங்கள் அதோ! ஆனால் இவை அனைத்திலும் சிறந்த, உயிர் வாழ்கின்ற, உணர்வுமிக்க மனித உடம்பு என்ற பலிபீடம் உள்ளதே! உயிரற்ற சின்னங்களை வழிபடுவதைவிட இது மிக மேலானது அல்லவா?' என்றார்கள் அவர்கள்.

இப்போது வினோதமான ஒரு கோட்பாட்டிற்கு வருகிறோம். எனக்கே அது சரியாகப் புரியவில்லை. உங்களால் இதிலிருந்து ஏதாவது அறிய முடியுமானால் அறிந்து கொள்ளுங்கள். தியானத்தின்மூலம் தன்னைத் தூய்மைப்படுத்தி ஞானம் பெற்ற மனிதன், இறந்ததும் முதலில் ஒளிமயமான உலகத்திற்குச் செல்கிறான். அங்கிருந்து பகலாக இருக்கும் இடத்திற்குச் செல்கிறான். அங்கிருந்து வளர்பிறைக்குச் செல்கிறான். அங்கிருந்து சூரியன் வடக்கு நோக்கிச் செல்லும் ஆறு மாதங்களுக்கும், அங்கிருந்து வருடத்திற்கும், அங்கிருந்து சூரியனுக்கும், அங்கிருந்து சந்திரனுக்கும், சந்திரனிலிருந்து மின்னல் உலகிற்கும் செல்கிறான். அங்கு அவன் மனிதனல்லாத ஒருவரைச் சந்திக்கிறான். அவர் இவனை (எல்லைக்கு

உட்பட்ட) பிரம்மத்திடம் அழைத்துச் செல்கிறார். இதுதான் தேவர்களின் வழி. முனிவர்களும் ஞானிகளும் இறந்த பிறகு இந்த வழியில்தான் போகிறார்கள். அவர்கள் மீண்டும் திரும்பு வதில்லை. இந்த மாதம், வருடம் என்பதையெல்லாம் தெளி வாக அறிந்தவர்கள் யாருமில்லை. ஒவ்வொருவரும் தனக்குத் தோன்றியவாறு பொருள் கூறுகின்றனர். சிலர் இவை வெறும் பிதற்றல் என்று கூறுகின்றனர். சூரிய மண்டலத்திற்குப் போவது, சந்திர மண்டலத்திற்குப் போவது, மின்னல் மண்டலத்தில் ஒருவன் அந்த ஆன்மாவுக்கு உதவி செய்வது இவைபற்றி யாருக்கும் எதுவும் தெரியாது.

சந்திர மண்டலத்தில் உயிர்கள் வாழ்கின்றன என்பது இந்துக்களிடையே நிலவும் ஒரு கருத்து. அங்கிருந்து உயிர் எப்படி வந்தது என்பதைக் காண்போம். இந்தப் பிறவியில் நற்செயல்கள் புரிந்த, ஆனால் ஞானம் பெறாதவர்கள் இறந்ததும் முதலில் புகை வழியாகவும், பின்னர் இரவிற்குள்ளும், பிறகு தேய்பிறையின் பதினைந்து நாட்களுக்கும், பிறகு சூரியன் தென் திசை நோக்கிச் செல்லும் ஆறு மாதங்களுக்கும், பிறகு தங்கள் முன்னோர்கள் வாழும் உலகிற்கும், பின்னர் ஆகாசத்திற்கும் சென்று சந்திர மண்டலத்தை அடைகிறார்கள். அங்கு அவர்கள் தேவர்களுக்கு உணவாக மாறுகிறார்கள். பின்னர் தேவர்களாகப் பிறந்து, நல்வினைப் பயன் முடியும்வரை அங்கே வாழ்கிறார்கள். நல்வினைப் பயன்கள் முடிந்ததும் மீண்டும் அதே வழியில் பூமிக்கு வருகிறார்கள். அப்போது முதலில் ஆகாசமாகி, பின்னர் காற்றாகி, பின்னர் புகையாகி, பிறகு பனிமூட்டமாகி, பின்னர் மேகமாகி அதன்பிறகு மழைத்துளிகளாகப் பூமியில் விழு கிறார்கள், பிறகு உணவுப் பொருட்களுள் புகுந்து, மனிதரால் உண்ணப்பட்டு அவர்களது குழந்தைகளாகின்றனர். நற்செயல் புரிந்தவர்கள் நல்ல குடும்பத்தில் பிறக்கிறார்கள்; தீய செயல் புரிந்தவர்கள் இழிந்தவர்களாக, ஏன், விலங்குகளாகக் கூடப் பிறக்கின்றனர். விலங்குகள் தொடர்ந்து இந்த உலகிற்கு வருவதும் இங்கிருந்து போவதுமாக இருக்கின்றன. அதனாலேயே இந்த உலகம் நிறைவதும் இல்லை, முற்றிலும் காலியாவதும் இல்லை.

இதிலிருந்தும் நாம் பல கருத்துக்களைப் பெறலாம், போகப் போக நன்கு புரிந்துகொள்ளலாம். இவற்றின் பொருளைச் சிறிது பார்ப்போம். சொர்க்கத்திற்குச் செல்வதைக் கூறும் பகுதியைவிட அங்கிருந்து அவர்கள் பூமிக்குத் திரும்புவதைக்

கூறும் பகுதி சற்று தெளிவாக இருக்கிறது. ஆனால் கடவுளை அறியாததுவரை நிலையான சொர்க்கம் என்பது ஒன்றும் இல்லை என்பதுதான் அதன் முழுக் கருத்து என்று எனக்குத் தோன்றுகிறது. பலன் கருதி, இந்த உலகில் நற்செயல்கள் புரிந்த, ஆனால் கடவுளை அடையாதவர்கள் இறந்த பிறகு இந்த வழி அந்த வழி என்று எவ்வாறாவது சொர்க்கத்தைச் சேர்கிறார்கள். நாம் பிறப்பதைப் போலவே அங்கு அவர்கள் தேவர்களின் குழந்தைகளாகப் பிறந்து, நல்வினைப் பயன் அனுமதிக்கும்வரை அங்கு வாழ்கிறார்கள்.

வேதாந்தத்தின் அடிப்படைக் கருத்தொன்று இதன்மூலம் வெளியாகிறது. அதாவது பெயரும் உருவமும் கொண்டவை நிலையானவை அல்ல என்பதே அது. இந்தப் பூமி நிலையற்றது, ஏனெனில் அதற்குப் பெயரும் உருவமும் உள்ளது. அதுபோல் சொர்க்கங்களும் நிலையற்றவையாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில் அவற்றிற்கும் பெயரும் உருவமும் உள்ளன. நிலையான சொர்க்கம் என்று கூறுவதே முரணானது. ஏனெனில் பெயரும் உருவமும் உள்ளவை அனைத்தும் காலத்தில் முடிய வேண்டும். இவை வேதாந்தத்தின் முடிவான கோட்பாடுகள். எனவே சொர்க்கங்கள் பற்றிய கருத்துக்கள் கைவிடப்பட்டன.

சொர்க்கம் நிலையானது என்ற கருத்து சம்ஹிதையில் காணப்படுகிறது. இது ஒருவாறு முகமதியர்களிடமும் கிறிஸ்தவர்களிடமும் நிலவும் கருத்தைப் போன்றதே. முகமதியர்கள் இதை இன்னும் சற்று உறுதியாகச் சொல்கிறார்கள். சொர்க்கத்தில் ஆறுகளும் அழகிய தோட்டங்களும் நிறைந்திருக்கும் என்று அவர்கள் கூறுகிறார்கள். அரேபியப் பாலைவனங்களில் மிகவும் வேண்டப்படுவது தண்ணீர். எனவே சொர்க்கத்தைத் தண்ணீர் நிறைந்த இடமாகக் கருதுகிறான் முகமதியன். ஆண்டில் ஆறு மாதம் மழை பொழியும் நாட்டில் பிறந்தவன் நான். நான் சொர்க்கத்தை வறண்ட பகுதியாக எண்ண வேண்டும் போலும்! அதுபோல்தான் ஆங்கிலேயர்களும். சம்ஹிதையில் கூறப்பட்டுள்ள சொர்க்கங்கள் நிலையானவை. இறந்து போனவர்கள் அங்கு அழகிய உடலைப் பெற்றுத் தங்கள் முன்னோர்களுடன் என்றும் மகிழ்ச்சியாக வாழ்கிறார்கள். பெற்றோர், பிள்ளைகள், உற்றார் உறவினர் என்று எல்லோரையும் சந்தித்து, இங்கு வாழ்வதைப் போலவே வாழ்ந்தாலும் மகிழ்ச்சி அங்கு அதிகம் நிலவுகிறது. இந்த வாழ்விலுள்ள துன்பங்கள், இடர்பாடுகள் அனைத்தும் மறைந்து

மகிழ்ச்சி நிறைந்த சிறப்பான வாழ்க்கை மட்டுமே அங்கு இருக்கிறது. இந்த நிலையை எவ்வளவுதான் சுகபோகமானது என்று மனிதர்கள் கூறினாலும், உண்மை என்பது ஒன்று, சுகபோகம் என்பது மற்றொன்றே . அல்லவா! உண்மையின் உச்சநிலையை அடையும்வரை உண்மை என்பது சுகமளிப்பதாக இல்லாத சந்தர்ப்பங்களும் உள்ளன. மாற்றங்களை விரும்பாததே மனித இயல்பு. அது ஏதாவது ஒன்றைச் செய்கிறது, பிறகு அதிலிருந்து வெளியே வர முடியாமல் துன்புறுகிறது. புதிய கருத்துக்களை மனம் ஏற்றுக் கொள்வதில்லை. ஏனெனில் அவை வசதிக் குறைவுகளை ஏற்படுத்துகின்றன.

உபநிடதங்களில் ஓர் அற்புத மாறுதல் நிகழ்வதைக் காண்கிறோம்: இறந்தவர்கள் தங்கள் முன்னோர்களுடன் வாழ்ந்து வருகின்ற சொர்க்கங்கள் நிலையானவையாக இருக்க முடியாது. ஏனெனில் பெயரும் உருவமும் உடைய எதுவும் அழியத்தானே வேண்டும் என்று அவை கூறுகின்றன. உருவத்துடன் கூடிய சொர்க்கங்கள் இருந்தால், காலப்போக்கில் அவை அழிந்தேயாக வேண்டும். கோடிக்கணக்கான ஆண்டுகள் அவை இருக்கலாம், ஆனால் அவை அழிய வேண்டிய காலம் ஒன்று வந்தே தீரும். இதனுடன் மற்றொரு கருத்தும் வெளிப்படுகிறது. இந்த உயிர்கள் பூமிக்குத் திரும்ப வேண்டியவையே. சொர்க்கங்கள் என்பவை நல்வினைகளின் பயனை அவர்கள் அனுபவிக்கும் இடம். நல்வினைப் பயன் தீர்ந்ததும் மீண்டும் அவை பூமிக்குத் திரும்பி விடுகின்றன. இதிலிருந்தும் ஒன்று புரிகிறது; மிகப் புராதன காலத்திலேயே காரணகாரியத் தத்துவத்தைப் பற்றி மனிதன் அறிந்திருந்தான் என்பதே அது. நமது தத்துவவாதிகள் இதனை எப்படித் தத்துவ விளக்கங்களாலும் தர்க்க மொழிகளாலும் வெளியிட்டார்கள் என்பதைப் பின்னர் பார்ப்போம். ஆனால் இங்கே அவை ஏறக்குறைய மழலை மொழி போலவே உள்ளன.

இந்த நூல்களைப் படிக்கும்போது, இவை அனைத்தும் அக அனுபவங்களே என்பதை உணரலாம். இவை செயல்முறைக்கு உகந்ததாக இருக்க முடியுமா என்று என்னை நீங்கள் கேட்டால், முதலில் இவை செயல்முறைக்கு உகந்தவை, பின்னரே தத்துவ நெறி என்பதுதான் என் பதில். முதலில் இவை அனுபவிக்கப்பட்டன, அறியப்பட்டன; பின்னரே எழுதப்பட்டன என்பதை நீங்கள் காணலாம். பண்டைய சிந்தனையாளர்களுடன் இந்த உலகம் பேசியது, பறவைகள்

பேசின, விலங்குகள் பேசின, சூரியனும் சந்திரனும் பேசினர். சிறிதுசிறிதாக அவர்கள் பொருட்களை உணர்ந்தார்கள், இயற்கையின் இதயத்துள் புகுந்தார்கள். சிந்தனைத் திறத்தாலோ தர்க்க வாதத்தாலோ இன்று செய்யப்படுவதுபோல் பிறரது கருத்துக்களைப் பொறுக்கியெடுத்து ஒரு பெரிய நூல் இயற்றியோ, அவர்களுடைய நூல்களுள் ஒன்றைக் கொண்டு, நான் செய்வதுபோல் நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தியோ அல்லாமல் அமைதியான, பொறுமையான ஆராய்ச்சியின் மூலமே அவர்கள் உண்மையைக் கண்டறிந்தார்கள். இதன் முக்கிய நெறி செயல்முறையே, அப்படியே எப்போதும் இருந் தாகவும் வேண்டும். மதம் என்பது எப்போதும் செயல்முறை விஞ்ஞானமே. கருத்தளவில் மட்டுமே உள்ள மதம் என்பது என்றுமே இருந்ததில்லை. இனி இருக்கப் போவதுமில்லை. முதலில் செயல்முறை, பின்னரே அறிவு.

உயிர்கள் திரும்பி வருகின்றன என்ற கருத்து எப்போதுமே இருந்து வந்தது. பலனை எதிர்பார்த்து நற்செயல்கள் புரிபவர்கள் அதனைப் பெறுகின்றனர். ஆனால் இந்தப் பலன்கள் நிலை யானவை அல்ல. பலன் என்பது செயல் அதாவது காரணத்தின் அளவினதாகவே இருக்கும் என்ற காரணகாரியக் கருத்து வெகு அழகாகக் கூறப்படுவதை நாம் இங்கே காண்கிறோம். காரணத்தைப் போலவே காரியமும் இருக்கும். காரணம் முடிவுள்ளது, எனவே காரியமும் முடிவுள்ளதாகவே இருக்க வேண்டும். காரணம் நிலையானதாக இருந்தால் விளைவும் நிலையானதாக இருக்கும். ஆனால் நற்செயல் புரிவது போன்ற காரணங்கள் எல்லாம் எல்லை உள்ளவை. ஆதலால் எல்லை யற்ற விளைவுகளை இவற்றால் ஏற்படுத்த முடியாது.

நாம் இப்போது கேள்வியின் மறுபக்கத்திற்கு வருகிறோம். நிலையான சொர்க்கம் என்பது இருக்க முடியாது. அது போலவே நிலையான நரகம் என்ற ஒன்றும் இருக்க முடியாது. வாழ்வில் ஒவ்வொரு கணமும் தீமையே செய்யும் ஒரு தீயவன் நான் என்று வைத்துக் கொள்ளுங்கள். ஆனாலும் எனது எல்லையற்ற வாழ்க்கையுடன் இந்த வாழ்க்கையை ஒப்பிட்டால், இது ஒன்றுமே இல்லை. எனவே நிரந்தரமான தண்டனை என்ற ஒன்று இருக்குமானால், முடிவுள்ள காரணத்திலிருந்து முடிவில்லாத விளைவு ஏற்படுவதாக ஆகிறது. அது ஒருபோதும் நடக்க முடியாது. என் வாழ்நாள் முழுவதும் நற்செயல் செய் தால் நிரந்தரமான சொர்க்கத்தைப் பெறுவேன் என்று

சொன்னால் அது எப்படித் தவறு ஆகுமோ, அது போன்றது தான் இதுவும்.

உண்மையை அறிந்தவர்களுக்கு, அதை உணர்ந்தவர்களுக்கு மூன்றாவது ஒரு வழி உள்ளது. மாயைத் திரையைக் கடந்து செல்ல இது ஒன்றே வழி—அதுதான் உண்மையை அனுபவிப்பது. உண்மையை அனுபவிப்பது என்பது எதுவென உபநிடதங்கள் கூறுகின்றன—நன்மை, தீமை இவற்றை ஒத்துக் கொள்ளாமலிருப்பது; ஆனால் இவையெல்லாமே ஆன்மாவிலிருந்து வருகின்றன, எல்லாவற்றிலும் ஆன்மா இருக்கிறது என்பதை அறிந்து கொள்வது. அதாவது இந்த உலகத்தை மறுப்பது, கண்களை அதிலிருந்து திருப்பிவிடுவது, இறைவனைச் சொர்க்கத்தில்போல் நரகத்திலும், வாழ்வில்போல் சாவிலும் காண்பது. இதுதான் நான் கூறியதன் பொருள்.

இந்த உலகம் கடவுளின் ஒரு சின்னம். ஆகாசம் இறைவனே, நாம் வாழ்ந்திருக்கும் இடமும் அவரே. எல்லாம் பிரம்மமே. இவற்றைக் காணவும் உணரவும் வேண்டுமே தவிர, வெறுமனே பேசுவதோ சிந்திப்பதோ போதாது. அனைத்திலும் இறைவனே, பிரம்மமே நிறைந்திருப்பதை ஆன்மா அறிந்துவிட்டால் அது சொர்க்கத்திற்கோ நரகத்திற்கோ வேறெங்குமோ போவதைப் பற்றிக் கவலைப்படாது; இந்தப் பூமியிலோ சொர்க்கத்திலோ மீண்டும் பிறப்பதைப் பற்றியும் அது கவலைப்படாது. ஆன்மாவைப் பொறுத்தவரையில் இவையெல்லாம் பொருளற்றவை. ஏனெனில் எல்லா இடமும் ஒன்றுதான். எல்லா இடங்களும் இறைவனின் கோயில்; எல்லா இடங்களும் புனித பூமி; சொர்க்கம், நரகம் என்று எங்கிலும் அது காண்பது இறைவனின் சான்னித்தியத்தையே. நன்மை தீமை, வாழ்வு சாவு இவை ஒன்றுமே இல்லை. இருப்பது எல்லையற்ற ஒன்றான பிரம்மமே.

இந்த நிலையை அடைபவன் அப்போதே சுதந்திரன் ஆகிறான் என்று வேதாந்தம் கூறுகிறது. அவன் மட்டுமே இந்த உலகில் வாழ்வதற்குத் தகுதி உடையவன், மற்றவர்களுக்கு அந்தத் தகுதி இல்லை. தீமையைக் காண்பவன் எப்படி இந்த உலகில் வாழ முடியும்? அவனது வாழ்க்கை ஒரு துன்பச்சுமையே. அபாயங்களைக் காண்பவனின் வாழ்க்கை துன்பம் நிறைந்தது. மரணத்தைக் காண்பவனின் வாழ்க்கை துன்பம் நிறைந்தது. உண்மையை அறிந்து எல்லாவற்றிலும் உண்மையைக் கண்டவனே இந்த உலகில் வாழ முடியும்.

அவனால் மட்டுமே, 'இந்த வாழ்வை நான் அனுபவிக்கிறேன், இந்த வாழ்வில் நான் மகிழ்ச்சியாக இருக்கிறேன்' என்று சொல்ல முடியும்.

இதற்கிடையில், நரகத்தைப் பற்றிய கருத்து வேதங்களில் எங்குமே இல்லை என்பதையும் நான் உங்களுக்குக் கூறிக்கொள் கிறேன். அது பின்னாளில் புராணங்களில்தான் எழுந்தன. வேதங்களைப் பொறுத்தவரை மிகக் கடுமையான தண்டனை இந்த உலகில் மீண்டும் பிறப்பதே, திரும்பவும் வருவதே. ஆரம் பத்திலிருந்தே இந்தக் கருத்து நிர்க்குணத்தை நோக்கிச் செல் வதைக் காண்கிறோம். தண்டனை, வெகுமதி என்ற கருத்துக்கள் மிகவும் பௌதீகமானவை. நம்மைப் போலவே ஒருவனை விரும்பவும், இன்னொருவனை வெறுக்கவும் கூடிய மனிதக் கடவுள்கருத்திற்குத்தான் இவை பொருத்தமாக இருக்கும். இத்தகைய கடவுள் மட்டுமே தண்டனைகளோ வெகுமதிகளோ கொடுப்பார். இப்படிப்பட்ட கடவுளை நாம் சம்ஹிதையில் காண்கிறோம். அங்கே பயம் என்னும் கருத்து நுழைகிறது. ஆனால் உபநிடதங்களில் வந்த உடனேயே பயம் என்னும் கருத்து மறைந்து, அந்த இடத்தில் நிர்க்குணக் கருத்து ஏற்படு கிறது. எப்போதுமே உருவத்துடன் இணைந்திருக்கும் மனித னால் இந்த நிர்க்குணக் கருத்தைப் புரிந்துகொள்வது இயல் பாகவே மிகவும் கடினமானதுதான். பெரிய சிந்தனையாளர் களாகக் கருதப்படுபவர்கள்கூட இந்த நிர்க்குணக் கடவுள் கருத்தால் வெறுப்படைகின்றனர். ஆனால் கடவுளை மனித உருவில் எண்ணுவது பொருளற்றதாகவே எனக்குத் தோன்று கிறது. உயிருள்ளிருக்கும் கடவுள், உயிரற்ற கடவுள்; யாரும் பார்க்காத யாரும் அறியாத கடவுள், அறிந்த கடவுள்— இவற்றுள் எது உயர்ந்த கருத்து?

நிர்க்குணக் கடவுளே உயிர்க் கடவுள்; ஒரு தத்துவம். சகுணக் கடவுள், நிர்க்குணக் கடவுள் இரு கொள்கைகளுக்கும் உள்ள வேறுபாடு இதுவே—சகுணக் கடவுள்-கொள்கை மனித வடிவத்துடன் நின்றுவிடும். நிர்க்குணக் கடவுளோ தேவதை, மனிதன், மிருகம் எல்லாமாகத் திகழ்வதுடன், புலனாகாதவை யாகவும் இருக்கிறார். ஏனெனில் நிர்க்குணம் என்னும்போது அது குணங்களுடன் கூடிய அனைத்தையும் தழுவியது, பிரபஞ்சத்திலுள்ள அனைத்தின் மொத்தம், இதுதவிர எல்லை யற்றும் உள்ளது. 'எப்படி ஒரே அக்கினி உலகில் பிரவேசித்து, பல்வேறு வடிவங்களில் வெளிப்படுகிறதோ, அவை தவிர

எல்லையற்றதாகவும் இருக்கிறதோ'[1] அதுபோன்றதே நிர்க்குண நிலை.

வாழும் கடவுளையே நாம் வழிபட விரும்புகிறோம். நான் என் வாழ்க்கை முழுவதிலும் கடவுளைத் தவிர வேறு எதையும் கண்டதில்லை, நீங்களும் அப்படியே. இந்த நாற்காலியைப் பார்க்க வேண்டுமானால் முதலில் கடவுளைக் காண்கிறீர்கள், பின்னர் அவரிலும் அவர் மூலமும்தான் நாற்காலியைக் காண் கிறீர்கள். 'நான் இருக்கிறேன்' என்று கூறியபடியே அவர் எங்கும் இருக்கிறார், 'நான் இருக்கிறேன்' என்று உணர்கின்ற அந்தக் கணமே ஸத்தாகிய, இருப்பாகிய பரம்பொருளை நீங்கள் உணர்கிறீர்கள். நமது இதயத்திலும் பிற உயிர்களிலும் கடவுளைக் காண முடியாவிட்டால் வேறு எங்கு போய்க் காண முடியும்? 'ஆணும் நீயே, பெண்ணும் நீயே, சிறுமியும் நீயே, சிறுவனும் நீயே, தடியுடன் தள்ளாடி நடக்கும் வயோதிகனும் நீயே, இளமைத் துடிப்புடன் கம்பீரமாக நடக்கும் இளைஞனும் நீயே.'[2] இருப்பவை எல்லாம் நீயே. அற்புதமான, வாழும் கடவுளாகிய நீயே இந்தப் பிரபஞ்சத்தில் ஒரே உண்மைப் பொருள்.

ஒரு திரைக்குப் பின்னால் எங்கோ வாழ்கின்ற, யாரா லும் ஒருபோதும் காண முடியாத பரம்பரைக் கடவுளைப் பற்றிய கருத்திலிருந்து இந்தக் கருத்து பயங்கரமாக முரண் பட்டிருப்பதுபோல் பலருக்கும் தோன்றலாம். புரோகிதர் களோ, நாம் அவர்களைப் பின்பற்றி, அவர்கள் சொல்வதைக் கேட்டு, அவர்கள் நமக்குக் காட்டும் வழியில் நடந்தால் நாம் இறந்த பிறகு கடவுளை நேருக்குநேர் காண்பதற்குரிய அனு மதிச் சீட்டைத் தருவார்களாம்! சொர்க்கங்களைப் பற்றிய கருத்துக்கள் அனைத்தும் புரோகிதர்களின் பொருளற்ற தொழில்முறையின் சிறு உருமாற்றங்களே தவிர வேறென்ன? அவற்றிற்கு இந்த நிர்க்குணக் கருத்து அழிவுபூர்வமானதுதான். அது சர்ச்களிலும் கோயில்களிலும் உள்ள புரோகிதர்களின்

---

1. அக்னிர்யதைகோ புவனம் ப்ரவிஷ்டோ ரூபம் ரூபம்
ப்ரதிரூபோ பபூவ।
ஏகஸ்ததா ஸர்வபூதாந்தராத்மா ரூபம் ரூபம் ப்ரதி ரூபோ பஹிச்ச ॥
—கட உபநிடதம், 2. 2. 9

2. த்வம் ஸ்த்ரீ த்வம் புமானஸி த்வம் குமார உத வா குமாரீ।
த்வம் ஜீர்ணோ தண்டேன வஞ்சஸி த்வம் ஜாதோ
பவஸி விச்வதோ முக:॥
—ச்வேதாஸ்வதர உபநிடதம், 4. 3

தொழிலை ஒழித்துக்கட்டிவிடுகிறது. இப்போது இந்தியாவில் பஞ்சம் நிலவுகிறது. ஆனால் அங்கே உள்ள கோயில்களில் ஒரு நாட்டையே வாங்கும் அளவு நகைகள் உள்ளன. புரோகிதர்கள் இந்த நிர்க்குணக் கருத்தை மக்களிடம் பேசினால் அவர்களது தொழில் போய்விடும். எனினும் நாம் சுயநலமின்றி, புரோகிதர் களின் ஆதிக்கமின்றி இதனை உபதேசிக்கவேண்டும். நீயும் கடவுள், நானும் கடவுளே. யார் யாரைப் பணிவது? யார் யாரை வழிபடுவது? கடவுளின் மிகவுயர்ந்த கோயில் நீயே. வேறு கோயில்களையோ, சிலைகளையோ, புனித நூல்களையோ வழிபடுவதைவிட உன்னை வழிபடுவதே சிறப்பானது.

ஏன் சிலர் முற்றிலும் முரண்பட்ட கருத்துக்களுடன் இருக்கிறார்கள்? அவர்கள் விரலிடுக்குகளில் நழுவும் மீன்களைப் போன்றவர்கள். தாங்களே செயல்முறையில் சிறந்த அனுபவம் உடையவர்கள் என்று அவர்கள் சொல்கிறார்கள். மிகவும் நல்லது. ஆனால் இங்கேயே உங்களையே வழிபடுவதைவிட உயர்ந்த செயல்முறை வேறு எது இருக்க முடியும்? நான் உங்களைப் பார்க்கிறேன், உணர்கிறேன், நீங்களே கடவுள் என்பதை அறிகிறேன். அல்லாவைத் தவிர வேறு கடவுள் இல்லை என்று முகமதியர்கள் சொல்கிறார்கள். கடவுள் அல் லாத வேறு எதுவுமே இல்லை என்று வேதாந்தம் கூறுகிறது. இந்தக் கருத்து உங்களுள் பலரை அச்சுறுத்தலாம். ஆனால் சிறிதுசிறிதாக நீங்கள் புரிந்துகொள்வீர்கள்.

வாழும் கடவுள் உங்களுள் இருக்கிறார். ஆனால் நீங்கள் சர்ச்களையும் கோயில்களையும் கட்டிக்கொண்டு பல கற்பனைப் பிதற்றல்களை நம்பிக்கொண்டு திரிகிறீர்கள். மனித உடம்பில் உள்ள மனித ஆன்மா ஒன்றே வழிபடத் தக்க கடவுள். எல்லா விலங்குகளும்கூடக் கோயில்களே, ஆனால் மனிதனே இவற்றுள் மிகச் சிறந்தவன். கட்டிடங்களுள் தாஜ்மகால்போல் கோயில்களுள் மனிதனே சிறந்தவன். இந்தக் கோயிலில் என்னால் வழிபட முடியவில்லை என் றால் மற்ற கோயில்களால் எனக்கு எந்தப் பயனும் இல்லை. ஒவ்வொரு மனித உடல் என்னும் கோயிலிலும் உள்ள கடவுளை நான் உணர்கின்ற கணமே, ஒவ்வொரு மனிதனிலும் கடவுளைக் கண்டு அவன்முன் நான் வணங்கி நிற்கின்ற அந்தக் கணமே, நான் தளையிலிருந்து விடுபடுகிறேன். என்னைக் கட்டியுள்ள பந்தங்கள் எல்லாம் விலகுகின்றன. நான் சுதந்திரனாக ஆகிறேன்.

இதுவே செயல்முறைக்கு ஏற்ற சிறந்த வழிபாடு. கொள்கைகளுக்கோ ஊகங்களுக்கோ இங்குச் சற்றும் இடமில்லை. என்றாலும் இது பலரைப் பயமுறுத்துகிறது. இது சரியல்ல என்று அவர்கள் கூறுகிறார்கள். எங்கோ ஒரு சொர்க்கத்தில் இருக்கும் கடவுள் ஒருவர், தாமே கடவுள் என்று யாரிடமோ கூறியதாகத் தங்கள் முப்பாட்டனார்கள் சொல்லிவந்த பழைய கொள்கைகளையே அவர்கள் கூறி வருகிறார்கள். அந்தக் காலம் முதல் நம்மிடம் கொள்கைகள் மட்டுமே உள்ளன. அவர்களுக்கு இதுதான் செயல்முறை, நமது கருத்துக்கள் செயல்முறைக்குப் பொருந்தாததாம்! ஒவ்வொருவரும் தனக்கேற்ற ஒரு பாதையை அமைத்துக்கொள்ள வேண்டும் என்று வேதாந்தம் கூறுவது உண்மையே. ஆனால் பாதையே லட்சியமாகாது. சொர்க்கத்தில் இருக்கும் கடவுளை வழிபடுவது என்பதெல்லாம் தவறல்ல. ஆனால் அவை உண்மையை நோக்கிச் செல்லும் படிகளே தவிர, அவையே உண்மை ஆகாது. அவை நல்லவை, மிகவும் அழகானவை; அவற்றுள் அற்புதமான கருத்துக்களும் உள்ளன. ஆனால் வேதாந்தம் ஒவ்வொரு படியிலும், 'நண்பா, அறிய முடியாதவர் என்று நீ வழிபடுபவரையே நீயென்று நான் வழிபடுகிறேன். அறிய முடியாதவராக யாரை நீ வழிபடுகிறாயோ, யாரை இந்த உலகம் முழுவதிலும் தேடுகிறாயோ அவர் என்றும் உன்னுள்ளேயே உள்ளார். அவர்மூலமே நீ வாழ்கிறாய். இந்த உலகத்தின் நிலையான சாட்சி அவரே'. 'வேதங்கள் அனைத்தும் யாரை வழிபடுகின்றனவோ, இல்லை இல்லை, அதற்கும் மேலாக என்றும் நிலையான இந்த ''நான்'' என்பதில் யார் எப்போதும் உள்ளாரோ அவர் இருப்பதாலேயே இந்தப் பிரபஞ்சம் நிலைத்திருக்கிறது. பிரபஞ்சத்தின் வாழ்வும் ஒளியும் அவரே. இந்த ''நான்'' உன்னிடம் இல்லாவிட்டால் உன்னால் சூரியனைக் காண முடியாது, எல்லாம் இருண்டதாகவே காணப்படும். அவர் ஒளிர்வதால்தான் நீ இந்த உலகைக் காண்கிறாய்.'

பொதுவாக இங்கு ஒரு பிரச்சினை எழுப்பப்படுகிறது. அதாவது இவையெல்லாம் மிகப் பெரிய கஷ்டத்திற்கு வழிகோலும் என்பதே அது. 'நான் கடவுள். நான் செய்வதெல்லாம், நினைப்பதெல்லாம் நன்மையே. ஏனெனில் கடவுள் தீமை செய்வாரா?' என்று நாம் ஒவ்வொருவரும் எண்ணலாம். இப்படித் தவறாகப் பொருள்கொள்ளும் அபாயம் இருப்பதாகவே வைத்துக் கொள்வோம். ஆனால் மறு பக்கத்தில் இதே அபாயம் இல்லையென நிரூபிக்க முடியுமா? அவர்கள்

தங்களிலிருந்து வேறுபட்ட, சொர்க்கத்தில் இருக்கின்ற ஒரு கடவுளை வழிபடுகிறார்கள். அவரிடம் பயப்படுகிறார்கள். இவர்கள் பயத்தால் நடுங்கிய வண்ணமே பிறக்கிறார்கள். வாழ்க்கை முழுவதும் நடுங்கிக்கொண்டே இருக்கிறார்கள். இதனால் இந்த உலகம் பெரிதாக முன்னேறிவிட்டதா? சகுணக் கடவுளைப் புரிந்துகொண்டு வழிபடுபவர்கள் ஒருபக்கம், நிர்க்குணக் கடவுளைப் புரிந்துகொண்டு வழிபடுபவர்கள் மற்றொரு பக்கம்—எந்தப் பக்கத்தில் உலகின் மகோன்னதமான செயல்வீரர்கள் இருந்தனர்? எந்தப் பக்கத்தில் மாபெரும் செயல் வீரர்களும் மாபெரும் ஒழுக்க சீலர்களும் இருந்தனர்? நிச்சயமாக நிர்க்குணக் கடவுளை வழிபடும் பக்கம்தான். அச்சத்தால் நீதி நெறி வளரும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? அது ஒரு போதும் முடியாது. 'ஒருவன் மற்றொருவனைப் பார்ப்பது, ஒருவன் மற்றொருவனுக்குத் துன்பம் செய்வது இவை அனைத்தும் மாயை, வேறு ஒருவர் இருப்பதைக் காணாமல், வேறு ஒருவருக்கும் தீங்கு செய்யாமல் எல்லாமே ஆன்மாவாகி விடும்போது யார் யாரைக் காண்பது? யாரை யார் உணர்வது?'[1] எல்லாம் அவரே, அதேவேளையில் எல்லாம் நானே. ஆன்மா புனிதம் அடைந்துவிட்டது. அப்போது, அப்போது மட்டுமே நாம் அன்பு என்றால் என்ன என்பதைப் புரிந்துகொள்ள முடியும். அச்சத்தால் அன்பு வரவே வராது. அன்பின் அடிப் படையே சுதந்திரம்தான். நாம் உண்மையிலேயே இந்த உலகத்தை நேசிக்கத் தொடங்கும்போதுதான் சகோதரத்துவம் என்றால் என்ன, மனிதகுலம் என்பது என்ன என்பதையெல்லாம் தெரிந்துகொள்ள முடியும்; அதற்கு முன்பல்ல.

எனவே நிர்க்குணக் கொள்கை பயங்கரமான தீமையில் உலகை ஆழ்த்திவிடும் என்று கூறுவது சரியல்ல. சகுணக்கடவுள் கொள்கையால் மட்டும் தீமைகள் ஏற்படவில்லையா? அது பிரிவினைவாதத்தை உண்டாக்கவில்லையா? அதனால் அவர்கள் தங்களுக்குள் அடித்துக்கொண்டு, மண்டையை உடைத்துக்கொண்டு உலகம் முழுவதையும் ரத்தக் கடலாக்க வில்லையா? 'எனது கடவுள்தான் பெரியவர். இதைப் போர் முனையில் தீர்மானித்துக் கொள்வோம்'—இதுவே துவைதக் கொள்கையால் உலகம் முழுவதிலும் ஏற்பட்ட விளைவு.

---

1. ஒப்பிடுக:
பிருஹதாரண்யக உபநிடதம், 4. 5. 15; 2. 4. 14. & சாந்தோக்கிய உபநிடதம் 7. 24. 1

இந்தக் குறுகிய வழிகளிலிருந்து வெளியே வாருங்கள், பகலின் பரந்த வெளிச்சத்திற்கு வாருங்கள், எல்லையற்ற ஆன்மா சிறிய குழிகளில் வாழ்ந்து திருப்தி காண முடியுமா? ஒளியுலகிற்கு வாருங்கள். இந்தப் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தும் உங்களுடையதே. கைகளை நீட்டி அதனை அணைத்துக் கொள்ளுங்கள். எப்போதாவது அப்படி உங்களுக்கு செய்யத் தோன்றுமானால் நீங்கள் கடவுளை உணர்ந்துவிட்டீர்கள்.

'எல்லையற்ற, பெருமைமிக்க, சிறப்பான இந்த அன்பால் பிரபஞ்சமே பொங்கிப் பெருகிப் பரவுவதுவரை தெற்கிலும் வடக்கிலும் கிழக்கிலும் மேற்கிலும் விண்ணிலும் மண்ணிலும் தமது அன்பு வெள்ளத்தைப் பாய்ச்சினார் என்று வரும் புத்தரது அறவுரையின் பகுதி உங்கள் நினைவுக்கு வருகிறதா? அந்த உணர்ச்சி கொள்ளும்போதே நீங்கள் உண்மையான மனிதர். இந்தப் பிரபஞ்சம் முழுவதும் ஒருவரே. அற்ப விஷயங்களை உதறித் தள்ளுங்கள். எல்லையற்ற ஒன்றைப் பெறுவதற்காகச் சாதாரண விஷயங்களை விட்டுவிடுங்கள். பேரானந்தத்தைப் பெறுவதற்காக இந்தச் சிறிய இன்பங்களை விட்டுவிடுங்கள். எல்லாமே உங்களுடையவை, ஏனெனில் நிர்க்குணம் என்பது சகுணத்தையும் தன்னுள் அடக்கியதே.

கடவுள் சகுணமானவர், அதேவேளையில் நிர்க்குணமாகவும் இருக்கிறார். எல்லையற்ற, நிர்க்குணமான புருஷனே மனிதனாகத் தோன்றுகிறான். எல்லையற்ற நாம் நம்மையே சிறுசிறு எல்லைகளுக்குள் கட்டுப்படுத்தியது போலுள்ளது. எல்லையற்றிருப்பதே நமது உண்மை இயல்பு என்கிறது வேதாந்தம். அது ஒருபோதும் மறைவதில்லை, என்றென்றும் நிலைத்திருக்கும். நாம் நமது கர்மங்களால் நம்மைக் கட்டுப்படுத்திக் கொள்கிறோம். கழுத்தைச் சுற்றிக் கட்டிய சங்கிலி போல் இந்தக் கர்மம் நம்மை இழுத்துவந்து எல்லைக்கு உட்படுத்தியிருக்கிறது. சங்கிலியை உடைத்து எறிந்து சுதந்திரராகுங்கள். நியதிகளை எல்லாம் உங்கள் கால்களின் கீழிட்டு மிதியுங்கள். மனித இயல்பில் எந்த நியதியும் இல்லை, விதியும் இல்லை, வினையும் இல்லை. எல்லையற்றதற்கு எப்படி ஒரு நியதி இருக்க முடியும்? சுதந்திரம் என்பது அதன் மூலமந்திரம். சுதந்திரம் என்பது அதன் இயல்பு, அதன் பிறப்புரிமை.

முதலில் சுதந்திரராக இருங்கள். பின்னர் எத்தனை தனித்துவங்களை வேண்டுமானாலும் உங்கள் விருப்பம்போல் வைத்துக் கொள்ளுங்கள். பின்னர் நாம் மேடையில் தோன்றி

பிச்சைக்காரன் வேடத்தில் நடிக்கும் நடிகனைப்போல் நடிப் போம். நடிப்புப் பிச்சைக்காரனையும் உண்மையிலேயே தெருவில் பிச்சையெடுக்கும் பிச்சைக்காரனையும் ஒப்பிட்டு வேறுபாடுகளைக் காணுங்கள். ஒருவேளை இருவரும் பார் வைக்கு ஒன்றுபோல் தானிருப்பார்கள். பேச்சு வார்த்தைகளும் ஒன்றுபோலவே உள்ளன. ஆனாலும் எத்தனை வேறுபாடு! ஒருவன் பிச்சை எடுப்பதன்மூலம் ஆனந்தத்தை அனுபவிக் கிறான், மற்றொருவன் துன்பமும் துயரமும் அடைகிறான். எது இந்த வேறுபாட்டை ஏற்படுத்துகிறது? ஒருவன் சுதந்திரன், மற்றவன் கட்டுண்டவன். தன் வறுமை உண்மையல்ல, தான் நாடகத்திற்காகத் தரித்துள்ள வேடம் அது என்பதை நடிகன் உணர்ந்திருக்கிறான். உண்மைப் பிச்சைக்காரனோ தான் விரும் பினாலும் விரும்பாவிட்டாலும் பிச்சையெடுப்பதே தனது நிலை, தான் பிச்சையெடுத்தே தீர வேண்டும் என்று எண்ணு கிறான். இதுதான் நியதி. நமது உண்மை இயல்பை அறியாதது வரை, இயற்கைச் சக்திகள் ஒவ்வொன்றாலும் முன்னும் பின்னும் அலைக்கழிக்கப்பட்டு இயற்கையிலுள்ள எல்லா வற்றிற்கும் அடிமைகளாக இருக்கும் பிச்சைக்காரர்களே நாம். உதவி வேண்டி நாம் உலகம் முழுவதும் கதறுகிறோம், உதவி கிடைப்பதில்லை. கற்பனைக் கடவுள்களை நோக்கி அழு கிறோம், உதவி கிட்டுவதில்லை. ஆனாலும் உதவி வரும் என்று நம்பிக்கையுடன் இருக்கிறோம். இப்படிக் கதறி அழுவதும் நம்பிக் காத்திருப்பதுமாக ஒரு வாழ்க்கை முழுவதும் வீணா கிறது. இதே நாடகம் தொடர்ந்து நடைபெறுகிறது.

சுதந்திரராக இருங்கள். யாரிடமிருந்தும் எதையும் எதிர் பார்க்காதீர்கள். உங்கள் கடந்தகால வாழ்க்கையைச் சற்றுத் திரும்பிப் பார்ப்பீர்களானால், கிடைக்காத உதவியைப் பிறரிடம் எதிர்பார்த்து ஏமாந்தது உங்கள் நினைவிற்கு வரும். வந்த உதவிகள் எல்லாம் உங்களுள் இருந்து வந்ததே. செய்த செயலின் பலனையே நீங்கள் பெறுகிறீர்கள். ஆனாலும் மற்றவர்களிட மிருந்து உதவியை எதிர்பார்க்கிறீர்கள்! என்ன வினோதம்! பணக்காரனின் வீட்டு முற்றத்தில் எப்போதும் பலர் கூடி இருப்பார்கள். நீங்கள் கவனித்துப் பார்த்தால் அவர்கள் ஒரே மனிதர்கள் இல்லை என்பது தெரியும். அந்தப் பணக்காரனிட மிருந்து ஏதாவது கிடைக்கும் என்று அவர்கள் நம்பியிருக் கிறார்கள். அவர்களுக்கு எதுவும் கிடைப்பதில்லை. இப்படியே நமது வாழ்க்கையும் வாழ்நாளெல்லாம் எதிர்பார்த்து,

எதிர்பார்த்து, எதிர்பார்த்து முடிவில்லாத எதிர்பார்த்த லிலேயே கழிந்துவிடுகிறது.

எதிர்பார்ப்பதை விட்டுவிடு என்கிறது வேதாந்தம். நீ ஏன் எதிர்பார்க்கிறாய்? உனக்கு எல்லாம் இருக்கிறது; இல்லை யில்லை, நீயே எல்லாமாக இருக்கிறாய். பின் எதை நீ எதிர் பார்க்கிறாய்? பைத்தியம் பிடித்த அரசன் ஒருவன் தனது நாட்டின் அரசனையே தேடித் திரிந்தானாம்! அவனால் என் றாவது அரசனைக் கண்டுபிடிக்க முடியுமா? முடியாது. ஏனெனில் அவனே அல்லவா அந்த அரசன்! நாட்டிலுள்ள நகரந்தோறும் கிராமந்தோறும் வீடுதோறும் அவன் தேடலாம், அழுது புலம்பலாம், ஆனாலும் அவனால் அரசனைக் கண்டு பிடிக்க முடியாது. ஏனெனில் அவன்தானே அந்த அரசன்! நாமும் முட்டாள் தனமாகக் கடவுளைத் தேடி அலைவதை விட்டுவிட்டு நாமே கடவுள் என்பதை அறிய வேண்டும். நாமே கடவுள் என்ற உண்மையை உணரும்போது மகிழ்ச்சியும் நிறைவும் அடைகிறோம். இப்படிப் பைத்தியக்காரத்தனமாகத் தேடி அலைவதை விட்டுவிட்டு உலகமாகிய நாடக மேடையில் உங்கள் பங்கை மட்டும் ஏற்று நடியுங்கள்.

நாம் காணும் காட்சி முழுவதும் மாறிவிட்டது. இந்த உலகம் ஒரு நிரந்தரமான சிறைச்சாலையாக இல்லாமல் சிறந்த விளையாட்டு மைதானமாகிவிட்டது. போட்டியும் பொறாமை களும் ஒழிந்து, பேரானந்தம் நிறைந்த, வசந்தகாலப் பூக்கள் நிறைந்த, வண்ணத்துப் பூச்சிகள் பறந்து திரியும் இன்பப் பேருலகமாகி விடுகிறது. நரகமாகக் காட்சி அளித்த அதே உலகம் சொர்க்க பூமியாகக் காட்சி அளிக்கிறது, கட்டுண்டவர் களுக்கு இது கடும் சித்திரவதைக் கூடம், சுதந்திரமானவர் களுக்கோ இது வேறுவிதமாகக் காட்சி அளிக்கிறது. இந்த வாழ்க்கையே பிரபஞ்ச வாழ்க்கை. சொர்க்கமும் மற்ற இடங் களும் இங்கேயே உள்ளன. மனிதர்களின் பிரதிபிம்பங் களான தேவர்களும் இங்கேயே உள்ளனர். தேவர்கள் தங்களைப் போன்று மனிதனைப் படைக்கவில்லை, மாறாக மனிதனே தேவர்களைப் படைத்தான். மூல அச்சுக்கள் இங்கேயே உள்ளன. இதோ இந்திரன், இதோ வருணன்; பிரபஞ்சத்தின் தேவர்கள் அனைவரும் இங்கேயே உள்ளனர். நாமே நமது நகல்களாக அவர்களை வெளிப்படுத்தினோம். நாமே இந்தத் தேவர் களின் மூல அச்சுக்கள். நாமே உண்மையானவர்கள். வழிபட வேண்டிய ஒரே தேவர்கள் நாமே.

இதுவே வேதாந்தத்தின் கருத்து. இதுவே அதன் செயல் முறை. சுதந்திரர்களானதும் பைத்தியம் பிடித்துப்போய் சமுதாயத்தை உதறிவிட்டுக் காட்டிற்கு ஓடிக் குகைகளில் வாழ்ந்து உயிரைவிட வேண்டிய அவசியம் இல்லை. நாம் எங்கே இருந்தோமோ அங்கேயே இருப்போம். ஒன்றே ஒன்று: எல்லாவற்றையும் நன்கு புரிந்துகொள்வோம், அவ்வளவுதான். அதே நிகழ்ச்சிகள் தொடரும்; ஆனால் அவை புதிய பொருளைத் தரும். இந்த உலகை நாம் இன்னும் அறியவில்லை. சுதந்திரர்களாகும்போதுதான் அது என்ன என்பதை அறிந்து கொள்வோம்; அதன் உண்மை இயல்பைத் தெரிந்து கொள்வோம். விதி, நியதி, வினை என்பதெல்லாம் நமது இயல்பின் மிகச் சிறு பகுதியே என்பதை அப்போது காண்போம். இது ஒரு பக்கம், மற்ற பக்கத்தில் எப்போதும் சுதந்திரம் இருந்தே வந்தது. நாம் இதை அறியவில்லை. அதனால்தான், துரத்தப்பட்ட முயல் தரையில் முகத்தைப் புதைத்துக் கொள்வதுபோல் தீமையிலிருந்து விடுபடுவதற்கான வெற்று முயற்சிகளில் ஈடுபடுகிறோம். மாயையின் காரணமான நமது உண்மை நிலையை மறக்க முயல்கிறோம், அது முடியவில்லை. அது எப்போதும் நம்மைக் கூவியழைத்துக்கொண்டே இருக்கிறது. கடவுளையும் தேவர்களையும் நாம் தேடியபோதும் புறச் சுதந்திரத்தை நாடிய போதும் உண்மையில் நமது உண்மை இயல்பையே தேடினோம். நாம் அந்தக் குரலைத் தவறாக எடுத்துக் கொண்டோம். அந்தக் குரல் நெருப்பிலிருந்தோ தேவனிடமிருந்தோ சூரியன், சந்திரன் அல்லது நட்சத்திரங்கள் போன்றவற்றிலிருந்தோ வருவதாக எண்ணினோம். இறுதியில் அவை நம்முள்ளிருந்தே வந்தன என்பதைத் தெரிந்து கொண்டோம். முடிவில்லாத சுதந்திரத்தைப்பற்றி ஒலித்துக் கொண்டிருக்கின்ற முடிவில்லாத அந்தக் குரல் நம்முள்ளேயே உள்ளது. அதன் கீதம் என்றுமே ஒலித்துக் கொண்டிருக்கிறது. அந்த ஆன்ம கீதத்தின் ஒரு பகுதி இந்தப் பூமியாக, நியதியாக, பிரபஞ்சமாக ஆகியுள்ளது. எனினும் அது என்றும் நமதாகவே இருந்தது. நம்முடையதாகவே என்றும் இருக்கும். வேதாந்தத்தின் குறிக்கோளை ஒரு வார்த்தையில் சொல்ல வேண்டுமானால் மனிதனை உள்ளது உள்ளபடி அறிவது என்பதே. வெளிப்பட்டு நிற்கும் கடவுளாகிய உங்கள் சகோதர மனிதனை வழிபடவில்லை என்றால் வெளிப்பட்டுத் தோன்றாத கடவுளை எப்படி வழிபட முடியும்?— இதுதான் வேதாந்தத்தின் செய்தி.

'காணும் உங்கள் சகோதரனிடம் உங்களால் அன்பு கொள்ள முடியாதென்றால் காணாத கடவுளிடம் நீங்கள் எப்படி அன்பு கொள்ள முடியும்?' என்று பைபிள் கூறுவது நினைவுக்கு வருகிறதா? மனித முகங்களில் அவரைக் காண முடியவில்லை என்றால் மேகங்களிலும், உயிரற்ற ஜடப்பொருட் களால் ஆன உருவங்களிலும், மூளை புனைந்த கற்பனைக் கதைகளிலும் எப்படிக் காண முடியும்? ஆணிலும் பெண்ணிலும் நீங்கள் கடவுளைக் காணத் தொடங்கும்போதுதான் உங்களை மத உணர்வு உடையவன் என்று நான் சொல்வேன். அதன் பின்பே, 'உன் வலது கன்னத்தில் அடித்தால் இடது கன்னத்தை யும் காட்டு' என்பதன் பொருளை நீங்கள் புரிந்துகொள்வீர்கள். மனிதனையே, ஏன், எல்லாவற்றையும் கடவுளாகப் பார்க்கும் போதுதான் புலியும்கூட வரவேற்கத் தக்கதாகும். உங்கள் முன் தந்தை, தாய், நண்பன், குழந்தை என்று பல்வேறு உருவங் களில் தோன்றும் ஒவ்வொருவரும் அந்த அழிவற்ற ஆனந்தப் பொருளான கடவுளே. நம்முடன் விளையாடும் நமது ஆன்மாவே.

நமது மானிட உறவுமுறைகள் இப்படித் தெய்வீகமாவது போலவே, கடவுளிடமும் நமது உறவுமுறை பலவிதமாக மாறு படலாம். நாம் அவரை நமது தந்தை, தாய், நண்பன், காதலன் என்றெல்லாம் கருதலாம். கடவுளைத் தந்தையாகக் கருதுவதை விடத் தாயாகக் காண்பது உயர்ந்த லட்சியம். அதைவிடச் சிறந்தது நண்பனாகக் கருதுவது. ஆனால் அனைத்திலும் மேலானது காதலனாக எண்ணுவதே. காதலிப்பவருக்கும் காதலிக்கப்படுபவருக்கும் வேறுபாடு இல்லாத நிலைதான் அனைத்திலும் உச்சம்.

பழைய பாரசீகக் கதை உங்கள் நினைவிற்கு வரலாம். காதலன் ஒருவன் தன் காதலியின் வீட்டிற்குச் சென்று கதவைத் தட்டினான். உள்ளிருந்து, 'யாரது?' என்று கேள்வி வந்தது. அதற்கு அவன், 'நான்தான்' என்றான். உள்ளிருந்து எந்தப் பதிலும் வரவில்லை. மீண்டும், 'நான் வந்திருக்கிறேன்' என்றான், கதவு திறக்கப்படவில்லை. மூன்றாம் முறையாகக் கதவைத் தட்டினான். 'யாரங்கே?' என்ற கேள்வி மீண்டும் வந்தது. அதற்கு அந்தக் காதலன், 'என் அன்பே, நான் நீயே' என்றான். உடனே கதவு திறந்தது. கடவுளிடம் நமது தொடர்பும் இவ்வாறே இருக்க வேண்டும். எல்லாவற்றிலும் இறைவனே இருக்கிறான். எல்லாமாகவும் அவனே இருக்கிறான். ஒவ்வோர்

ஆணும் பெண்ணும் நாம் தொட்டறியக்கூடிய, ஆனந்தமயமான, வாழும் கடவுளே. கடவுள் அறிய முடியாதவர் என்று யார் சொன்னார்கள்? அவனைத் தேடியலைய வேண்டும் என்று யார் சொன்னார்கள்? நாம் கடவுளை என்றும் காண்கிறோம். நாம் அவருள்ளேயே என்றும் வாழ்கிறோம். அவர் எங்கும் எப்போதும் அறியப்படுபவர், என்றென்றும் வழிபடப்படுபவர்.

இப்போது பிற வழிபாட்டு முறைகள் தவறல்ல என்ற மற்றொரு கருத்து எழுகிறது. சடங்குகளும் கிரியைகளும், அவை எவ்வளவு பண்படாதவை என்று கருதப்பட்டாலும், அவற்றால் இறைவனை வழிபடுபவர்கள் தவறான வழியில் செல்பவர்களல்ல என்பது முக்கியமாக நாம் நினைவில்கொள்ள வேண்டியவற்றுள் ஒரு கருத்தாகும். இது உண்மையிலிருந்து உண்மைக்குச் செல்லும் பயணம், தாழ்ந்த உண்மையிலிருந்து மேலான உண்மைக்குச் செல்லும் ஒரு பயணம். இருள் என்பது ஒளி குறைந்தநிலை. தீமை என்பது நன்மை குறைந்த நிலை. தூய்மையின்மை என்பது தூய்மை குறைந்த நிலை. பிறரும் நம்முடன் ஒரே பாதையில் வருபவர்கள் என்பதை உணர்ந்து அவர்களுடன் அன்பாகவும் கருணையுடனுமே நாம் வாழ வேண்டும். இதை மறக்கக் கூடாது. நீங்கள் சுதந்திரராக இருந்தால் மற்றவர்களும் விரைவாகவோ சற்றுத் தாமதமாகவோ சுதந்திரம் அடைவார்கள் என்பதை நினைக்க வேண்டும். நீங்கள் சுதந்திரமாக இருந்தால் எப்படி உங்களால் நிலையற்றதைப் பார்க்க முடியும்? உண்மையில் நீங்கள் தூயவராக இருந்தால் தூய்மையின்மையை நீங்கள் எப்படிக் காண முடியும்? உள்ளே இருப்பதுதான் வெளியில் தோன்றுகிறது. நம்முள் தூய்மை யின்மை இல்லாமல் வெளியில் அதைக் காண முடியாது.

வேதாந்தத்தின் செயல்முறைக் கருத்துக்களுள் இதுவும் ஒன்று. இதனை நாம் வாழ்க்கையில் செயல்படுத்துவோம் என்று நான் நம்புகிறேன். இதைச் செயல்முறையில் கொண்டு வரவே நமது முழு வாழ்வும் உள்ளது. ஆனால் அதிருப்தியுடனும் நிறைவற்றும் செயல்படுவதை விட்டு திருப்தியுடனும் நிறை வுடனும் நாம் செயலாற்ற வேண்டும். ஏனெனில் உண்மை நம் முள்ளேயே உள்ளது என்பது நமக்குத் தெரியும். அது நமது பிறப்புரிமை. கைக்கு எட்டும்படி அதை வெளிப்படுத்துவதே நாம் செய்ய வேண்டியது. ❑

4-ஞா18

## 3

சாந்தோக்கிய உபநிடதத்தில் நாரதர் என்ற முனிவர் சனத்குமாரர் என்ற மற்றொரு முனிவரிடம் வந்து பல்வேறு கேள்விகளைக் கேட்கிறார். அவற்றுள் ஒன்று, தர்மம்தான் எல்லாவற்றிற்கும் உண்மையான அடிப்படையா என்பதாகும். அதற்குப் பதிலை சனத்குமாரர் படிப்படியாக நாரதருக்கு விளக்குகிறார்:[1] இந்தப் பூமியைவிட உயர்ந்த ஒன்று உள்ளது, அதைவிட உயர்ந்தது வேறு ஒன்று உள்ளது என்று கூறி முடிவாக ஆகாசத்தைப்பற்றிக் கூறுகிறார். ஆகாசம் ஒளியைவிட உயர்ந்தது, ஏனெனில் ஆகாசத்தில்தான் சூரியன், சந்திரன், மின்னல், நட்சத்திரங்கள் என்று எல்லாம் இருக்கின்றன. ஆகாசத்தில்தான் நாம் வாழ்கிறோம், மடியவும் செய்கிறோம்.

பின்னர் ஆகாசத்தைவிட மிக உயர்ந்தது ஏதாவது இருக்கிறதா என்ற கேள்வி எழுகிறது. அதற்குப் பிராணனைப் பற்றிக் கூறுகிறார் சனத்குமாரர். வேதாந்தத்தின்படி, பிராணன்தான் வாழ்க்கையின் உயிர்நாடி. ஆகாசத்தைப் போலவே இதுவும் எங்கும் நிறைந்த ஒரு தத்துவம். உடலிலோ அல்லது வேறு எங்குமோ நடைபெறும் இயக்கங்களுக்கெல்லாம் இந்தப் பிராணனே காரணம். இது ஆகாசத்தைவிட உயர்ந்தது, இதன் மூலமே எல்லாம் உயிர்வாழ்கின்றன. தாயிலும் தந்தையிலும் சகோதரியிலும் குருவிலும் இந்தப் பிராணனே உள்ளது. பிராணனே எல்லாம் அறிவது.

நான் உங்களுக்கு மற்றொரு பகுதியைப் படிக்கிறேன். இதில் சுவேதகேது தன் தந்தையிடம் உண்மை என்பதைப் பற்றிக் கேட்கிறான். தந்தையும் பல விஷயங்களைக் கற்பித்துவிட்டு முடிவாக, 'எல்லா பொருட்களுடையவும் நுண்ணிய காரணமாக இருப்பது எதுவோ, அதனாலேயே அனைத்தும் ஆக்கப்பட்டிருக்கிறது. அதுவே எல்லாமாக இருக்கிறது, ஓ சுவேதகேது, அதுவே உண்மை, அதுவே ஆன்மா, நீ அதுவாகவே

1. சாந்தோக்கிய உபநிடதம், 7. 12. 1

இருக்கிறாய்'[1] என்றார். பிறகு பல உதாரணங்களைக் காட்டு கிறார்: 'ஓ சுவேதகேது, தேனீ பலவிதமான பூக்களிலிருந்து தேனைச் சேகரிக்கிறது. அந்தத் தேன் துளிகளுக்கு, தாம் இன்ன மரத்திலிருந்து, இந்த மலரிலிருந்து வந்தோம் என்று தெரியாது. அதுபோலவே ஸத்திலிருந்து, இருப்பிலிருந்து தோற்றத்திற்கு வந்துள்ள நாம் அதை மறந்துவிட்டோம். அந்த மிக நுண்ணிய சாரப்பொருள் எதுவோ, அதிலேயே, இருப்பவை அனைத்தின் உண்மை உள்ளது. அதுதான் ஆன்மா, ஓ சுவேதகேது, அதுவே நீ'[2] என்றார்.

அவர் மற்றொரு உதாரணத்தையும் கூறுகிறார்: 'எல்லா நதிகளும் கடலில் கலந்த பிறகு அவை தாங்கள் தனித்தனியான நதிகளாக இருந்தோம் என்பதை உணர்வதில்லை. அது போலவே, நாமும் ஸத்திலிருந்து வந்த பிறகு, அதுவே நாம் என்று அறிவதில்லை. ஓ சுவேதகேது, நீ அதுவாகவே இருக் கிறாய்.'[3] இவ்வாறு அவரது உபதேசங்கள் தொடர்கின்றன.

அறிவைப்பற்றி இரண்டு கொள்கைகள் உள்ளன. ஒன்று தனிப்பட்ட கொள்கையைக் கொண்டு பொதுக் கொள்கையை யும், அந்தப் பொதுக் கொள்கையிலிருந்து உலகம்தழுவிய கொள்கையையும் கண்டுபிடித்துக் கூறுவது. மற்றொன்று எந்தப் பொருளை விளக்க வேண்டுமோ, அதை, முடிந்தவரை அதன் சொந்த இயல்பிலிருந்தே விளக்குவது.

முதல் கொள்கையின்படிப் பார்த்தால் நம்முடைய அறிவு முழுவதும் உண்மையில் படிப்படியாக உயர்ந்த நிலைகளுக்கு செல்கின்ற பாகுபடுத்தல்களே. தனியாக ஏதாவது ஒன்று நிகழ்ந்தால் நாம் அதனால் திருப்தி அடையாதது போலிருக் கிறோம். அதே நிகழ்ச்சி மீண்டும்மீண்டும் நடைபெறுமானால் நாம் திருப்தி அடைகிறோம்; அதை நியதி என்றும் கூறுகிறோம். ஓர் ஆப்பிள் கீழே விழும்போது நாம் திருப்தி அடைவதில்லை. எல்லா ஆப்பிள்களும் கீழே விழும்போது அதை நாம் புவியீர்ப்பு விசை என்று பெயரிடுகிறோம், திருப்தி அடைகிறோம். உண்மை என்னவென்றால் நாம் தனிக் கொள்கையிலிருந்து பொதுக் கொள்கைக்கு வருகிறோம் என்பதே.

மதத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்பும்போதும் இந்த விஞ்ஞான முறையையே பயன்படுத்த வேண்டும். அதே

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 8. 7
2. சாந்தோக்கிய உபநிடதம், 6. 9. 1, 2, 4.
3. சாந்தோக்கிய உபநிடதம், 6. 10. 1,2.

முறை இங்கும் பொருந்துகிறது. உண்மையில் இதுவே எங்கும் விளங்கும் முறையாக இருந்துவந்துள்ளது. உங்களுக்கு மொழி பெயர்த்துச் சொல்லிக் கொண்டிருக்கின்ற இந்த நூல்களைப் படித்ததில் என்னால் காண முடிந்த மிகப் பழமையான கருத்து, தனிநிலையிலிருந்து பொதுநிலைக்குச் செல்லும் இந்த முறை தான். 'ஒளிமிக்கவர்கள்' (தேவர்கள்) எப்படிக் கலந்து ஒரே தத்துவமாக ஆகிறார்கள் என்பதை நாம் காண்கிறோம். நமது பண்டைய சிந்தனையாளர்களும் பிரபஞ்சம் பற்றிய கருத்துக் களில் இப்படித்தான் மேன்மேலும் ஆராய்ந்துகொண்டே போவதைக் காண்கிறோம். நுண்ணிய மூலங்களிலிருந்து மிக நுண்ணியவற்றிற்கு, மேலும் நுண்ணியவற்றிற்கு வந்து எங்கும் நிறைந்த ஆகாசம் என்ற கருத்திற்கு வருவதைக் காண்கிறோம். இன்னும் ஆழ்ந்து சென்று எங்கும் பரந்துள்ள சக்தி அல்லது பிராணன் என்பதற்கு வருகிறார்கள். இவை எல்லாவற்றின் ஊடே, ஒன்று மற்றதிலிருந்து மாறுபட்டதல்ல என்ற தத்துவம் ஊடுருவி நிற்கிறது. இந்த ஆகாசமே உயர்ந்த நிலையில் பிராண னாகக் காட்சியளிக்கிறது; அல்லது இந்தப் பிராணனே தூல வடிவில் ஆகாசமாகத் தோன்றுகிறது. இந்த ஆகாசம் மேலும் தூலமாகிக்கொண்டே செல்கிறது.

சகுணக் கடவுளைப் பொதுமைப்படுத்துவது மற்றொரு கருத்து. எப்படி இது அடையப்படுகிறது என்பதையும், அந்தப் பொதுமையே உணர்வுகளின் மொத்தத் தொகுதி என்று அழைக்கப்பட்டது என்பதையும் நாம் முன்னரே பார்த்தோம். இதில் ஒரு குறைபாடு ஏற்படுகிறது. இந்தப் பொதுமைப்படுத்தல் முழுமையாகாதது. இயற்கையின் ஒருபுற உண்மைகளான உணர்வுகளை மட்டுமே நாம் எடுத்துக்கொண்டு பொதுமைப் படுத்துகிறோம், மறுபுறத்தை விட்டுவிடுகிறோம். எனவே முதலில் இது ஒரு குறைபாடுள்ள பொதுமைப்படுத்தல் ஆகும்.

இதில் மற்றொரு குறைபாடு உள்ளது. இது இரண்டாவது கருத்தைப் பற்றியது. ஒவ்வொரு பொருளும் அதன் இயல்பைக் கொண்டே விளக்கப்பட வேண்டும். ஒரு பிசாசு இழுப்பதால் தான் ஒவ்வோர் ஆப்பிளும் கீழே விழுகிறது என்று நம்புகின்ற பலர் இருக்கலாம். ஆனால் ஆப்பிள் விழுவதற்கான விளக்கம் புவியீர்ப்பு விசை என்பதே. இந்த விளக்கம் முற்றிலும் திருப்தி கரமானதாக இல்லை என்பது நமக்குத் தெரிந்தாலும் மற்ற வற்றைவிடச் சற்று ஏற்றுக்கொள்ளக் கூடியதாக இருக்கிறது. ஏனெனில் அந்தப் பொருளின் இயல்பைக் கொண்டே அது

விளக்கப்படுகிறது. ஆனால் மற்றதோ புறக் காரணம் ஒன்றைக் காட்டுகிறது. இவ்வாறே நமது அறிவு முழுவதும் விளக்கப் படுகிறது. பொருளுடைய இயல்பின் அடிப்படையில் அமைந்த விளக்கம்தான் விஞ்ஞானரீதியான விளக்கம். புறக் காரணங் களால் விளக்கப்படுபவை விஞ்ஞானரீதியானவை அல்ல.

சகுணக் கடவுள் இந்த உலகத்தின் படைப்பிற்குக் காரண மானவர் என்ற விளக்கமும் இந்தச் சோதனைக்கு உட்பட வேண்டும். அந்தக் கடவுள் இயற்கைக்கு வெளியே இருப்பவர், இயற்கையுடன் எந்தவிதத் தொடர்பும் இல்லாதவர். இயற்கை அந்தக் கடவுளின் உத்தரவால் சூன்யத்திலிருந்து உண்டாக் கப்பட்டது என்று சொன்னால் அது விஞ்ஞானரீதியான கொள்கையாகாது. இதுவே சகுணக் கடவுள்கருத்து சார்ந்த மதங்களில் காலங்காலமாக உள்ள குறைபாடாக இருந்து வரு கிறது. சகுணக் கடவுள் மானிடப் பண்புகளுடன் கூடியவர், ஆனால் அந்தப் பண்புகள் அவரிடம் மிகப் பல மடங்கு அதிக மாக இருக்கும். அவர் தமது விருப்பமாத்திரத்தால் சூன்யத் திலிருந்து இந்த உலகத்தைப் படைத்தார். அவர் இந்த உலகத் திலிருந்து வேறுபட்டவர். சகுணக் கடவுள்கொள்கையில் இந்த இரு குறைபாடுகளும் பொதுவாக இருந்தே வருகின்றன. இதனால் இரண்டு பிரச்சினைகள் எழுகின்றன.

முதலில், நாம் முன்னரே பார்த்ததுபோல் இது போதுமான பொதுமைக் கொள்கையாக இல்லை. இரண்டாவதாக, இது இயற்கையிலிருந்தே இயற்கைக்கான விளக்கமாகவும் இல்லை. காரணம் காரியம் அல்ல; காரணம் காரியத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டது என்கிறது இந்தக் கொள்கை. ஆனால் காரியம் என்பது காரணத்தின் மாறுபட்ட வடிவம் என்பதே மனித அறிவு நமக்குக் காட்டும் உண்மை. நவீன விஞ்ஞானத்தின் கண்டுபிடிப்புக்கள் இந்தக் கருத்தை நோக்கியே ஒவ்வொரு நாளும் செல்கின்றன. சமீப காலத்தில் எல்லோரும் ஏற்றுக் கொள்கின்ற கொள்கை பரிணாம வாதம். காரியம் என்பது காரணத்தின் மறு வடிவமே; காரணத்தின் ஒழுங்குபடுத்தப் பட்ட வடிவமே. காரணம்தான் காரியமாக உருவெடுக்கிறது என்பதே பரிணாம வாதத்தின் அடிப்படைக் கோட்பாடு. சூன்யத்திலிருந்து படைப்பு வந்தது என்னும் கொள்கை இன்றைய விஞ்ஞானிகளின் நகைப்பிற்கே இடம் கொடுக்கும்.

மதம் இந்தச் சோதனைகளைத் தாங்கி நிற்குமா? இந்த இரண்டு சோதனைகளுக்கும் ஈடுகொடுத்து நிற்கும் மதக்

கொள்கைகளையே நவீன மனங்கள், பகுத்தறிவு மனங்கள் ஏற்றுக்கொள்ளும். மதக் குருமார்கள், கோயில்கள், சாஸ்தி ரங்கள் இவற்றை நம்பச் சொன்னால் இன்றைய மனிதனால் அதை ஏற்றுக்கொள்ள முடியாதது மட்டுமல்ல, பயங்கரமான அவநம்பிக்கைக் கூட்டம் ஒன்று உருவாகவும் அது வழிவகுக்கும். நம்புவதுபோல் வெளியில் காட்டிக் கொள்பவர்களிடமும், உள்ளத்தில் பயங்கரமான அவநம்பிக்கை உள்ளது. பிறரோ, மதம் என்பதே மதக் குருமார்களின் வித்தைகள் என்று அதி லிருந்து விலகிப்போய் விடுகின்றனர்.

மதம் என்பது ஒருவித தேசச் சடங்காகச் சுருக்கப்பட்டு விட்டது. பண்டைய சிறந்த சமுதாயத்தின் ஏதோ எஞ்சியுள்ள ஓர் அடையாளம் அது. அது இருக்கட்டும். நவீனகால மனிதனின் முன்னோர்களுக்கு மதம் உண்மையாகத் தேவைப் பட்ட அளவுக்கு இன்று அதன் தேவையை யாரும் உணர வில்லை. அந்த நிலைமை போய்விட்டது. தனது அறிவுபூர்வ மான ஆராய்ச்சிகளுக்கு அது திருப்திகரமாக இல்லை என்பதை நவீன மனிதன் கண்டுவிட்டான். சகுணக் கடவுள் கருத்து, படைப்புக் கருத்து, ஒவ்வொரு மதத்திலும் உள்ள துவைதக் கருத்துக்கள்—இவையெல்லாம் இனியும் செல்லுபடியாகாது. இந்தியாவில் இவை நிலைபெறாததன் காரணம் பௌத்தர்கள். பழைய காலத்தில் இந்த விஷயத்தில்தான் அவர்கள் தங்கள் வெற்றியையும் நிலைநாட்டினர். இயற்கை எல்லையற்ற சக்தி உடையது என்றும் தனது தேவைகளைத் தானே பூர்த்தி செய்து கொள்ள வல்லது என்றும் இருந்தால், இயற்கையைத் தவிர இன்னொன்று இருப்பதாக வற்புறுத்துவது சிறிதும் தேவை யற்றது; ஆன்மாகூடத் தேவையற்றது என்பதை பௌத்தர்கள் எடுத்துக்காட்டினர்.

பொருளும் அதன் தன்மைகளும் பற்றிய விவாதம் மிகவும் பழமையானது. பழைய மூடநம்பிக்கைகள் இப்போதும் இருந்து வருவதைச் சிலவேளைகளில் காணலாம். தன்மை என்பது பொருளைச் சேர்ந்ததா? உயிரற்ற ஜடம் என்று நாம் கூறும் பொருளில் நீளம், அகலம், பருமன் இவை ஒட்டியிருக்கிறதா? பொருள் மாறாதபோது தன்மை அப்படியே இருக்குமா, மாறுமா?—இவையே இடைக்காலங்களிலும், ஏன், அதற்கு நீண்ட காலத்திற்குப் பின்னரும்கூட விவாதத்திற்கான விஷயங் களில் ஒன்றாக இருந்ததை நீங்கள் பலரும் படித்திருக்கலாம். இதை நான் வருத்தத்துடனேயே கூறுகிறேன். இதற்கு

பௌத்தர்கள், 'அத்தகைய பொருள் என்ற ஒன்று இருப்பதற்கு ஆதாரம் ஒன்றுமே இல்லை, இருப்பவை அதன் தன்மைகள் மட்டுமே. அதற்கு அப்பால் நீ பார்க்கக்கூடியது எதுவுமே இல்லை' என்கிறார்கள். இதுவே தற்கால ஆஜ்ஞேயவாதிகளுள் (Agnostics) பலரது கருத்தாகும்.

பொருளுக்கும் அதன் குணங்களுக்கும் இடையில் உள்ள இந்த விவாதம் சற்று உயர்ந்த நிலையில் அறுதி உண்மைக்கும் (noumenon) தோன்றும் உண்மைக்கும் (phenomenon) இடையிலுள்ள விவாதமாக உருவெடுக்கிறது. தோன்றும் உண்மையாகிய இந்த உலகம், அதாவது தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கின்ற இந்தப் பிரபஞ்சம் இதோ உள்ளது. இதற்குப் பின்னால் மாறுபடாத ஒன்று இருக்கிறது. தோன்றும் உண்மை, அறுதி உண்மை இரண்டுமே உண்மை என்று சிலர் ஏற்றுக்கொள்கிறார்கள். வேறு சிலர், இன்னும் உறுதியான காரணங்களைக் காட்டி இந்த இரண்டையும் ஏற்க உரிமை யில்லை என்கிறார்கள். நாம் பார்ப்பதும் உணர்வதும் நினைப்பதும் வெறும் தோற்றமே, இந்தத் தோற்றத்திற்குப் பின்னால் ஒன்று இருக்கிறது என்று கூற உங்களுக்கு எந்த அதிகாரமும் இல்லை என்பது அவர்கள் கூற்று. அவர்களின் கேள்விக்குப் பதிலும் இல்லை.

வேதாந்தத்தின் அத்வைதக் கொள்கை ஒன்றே இதற்குப் பதிலளிக்கிறது. ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது என்பது தான் உண்மை. அந்த உண்மை, தோன்றும் உண்மையாகவும் இருக்கலாம், அறுதி உண்மையாகவும் இருக்கலாம். மாறக் கூடிய ஒன்று உள்ளது; அதற்கு உள்ளும் அதன்மூலமாகவும் வேறொன்று உள்ளது, அது மாறாதது; —இவ்வாறு இரண்டு இருப்பது உண்மையல்ல. இருப்பது ஒன்றே. அது மாறுபடுவதுபோல் தோன்றுகிறது. ஆனால் உண்மையில் மாற்றமின்றி இருக்கிறது. உடல், மனம், ஆன்மா என்று பலவாக எண்ணி நாம் பழகிவிட்டோம். ஆனால் உண்மையில் இருப்பது ஒன்றே. அந்த ஒன்றே பல வடிவங்களில் தோற்றம் அளிக்கிறது.

அத்வைதிகளின் பிரபலமான உதாரணத்தை எடுத்துக் கொள்ளுங்கள். கயிறு, பாம்புபோல் தோன்றுகிறது. இருளோ அல்லது வேறு ஏதோ காரணத்தால் சிலர் கயிற்றைப் பாம்பாக எண்ணுகின்றனர். அறிவு வரும்போது பாம்பு மறைந்து அது கயிறு என்பது தெரிகிறது. எனவே மனத்தில் பாம்பின் எண்ணம் இருக்கும்போது கயிறு எண்ணம் மறைகிறது, கயிறு எண்ணம்

இருக்கும்போது பாம்பு எண்ணம் இருப்பதில்லை என்பதை இந்த உதாரணத்திலிருந்து அறிகிறோம். தோன்றும் உண்மையை அதாவது நம்மைச் சுற்றியிருக்கும் தோற்றங்களை மட்டுமே காணும்போது அறுதி உண்மை மறைகிறது. மாறுதலற்ற அறுதி உண்மையைக் காணும்போது, தோன்றும் உண்மை மறைந்து விடுகிறது.

இப்போது நாம் பிரத்தியட்சவாதிகள் (Realists), லட்சிய வாதிகள் (Idealists) என்ற இருவரின் நிலையையும் தெளிவாகப் புரிந்துகொள்கிறோம். பிரத்தியட்சவாதி தோன்றும் உண்மையை மட்டும் ஏற்றுக் கொள்கிறான், லட்சியவாதி அறுதி உண்மையை ஏற்றுக் கொள்கிறான். மாற்றங்கள் பற்றிய கருத்துக்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டு நின்று உலகைப் பார்க்கவல்ல ஆற்றல் பெற்ற லட்சியவாதிக்கு, அதாவது உண்மையான லட்சியவாதிக்கு மாறுபடும் இந்த உலகம் மறைந்தே விடுகிறது. உலகம் மாயை, மாற்றம் என்பதே இல்லை என்று சொல்ல அவனுக்கே உரிமை உண்டு. ஆனால் பிரத்தியட்சவாதிகள் மாறுபடுபவற்றையே பார்க்கிறார்கள். அவர்களுக்கு, மாறுபாடற்றது மறைந்துவிடுகிறது. உலகம் உண்மை என்று கூறத்தான் அவர்களுக்கு உரிமை உண்டு.

இந்தத் தத்துவத்தின் விளைவு என்ன? சகுணக் கடவுள் கொள்கை போதுமானதல்ல, அதைவிட மேலானதற்கு, நிர்க் குணக் கருத்திற்கு நாம் சென்றாக வேண்டும் என்பதுதான். நாம் தர்க்கபூர்வமாகச் செல்லக்கூடியது அந்த இடத்திற்குத்தான். இதனால் சகுணக் கடவுள்கருத்து அழிந்துவிடும் என்பதோ, சகுணக் கடவுள் இல்லை என்பதை நிரூபிப்பதற்கான ஆதாரங் களைக் காட்டப் போகிறோம் என்பதோ அல்ல. சகுணநிலையை விளக்க வேண்டுமானால் நிர்க்குண நிலைக்குச் சென்றாக வேண்டும். ஏனெனில் நிர்க்குண நிலை என்பது சகுண நிலையை விட மிக மேலான ஒரு பொதுமைக் கொள்கையாகும். நிர்க்குண மானது மட்டுமே எல்லையற்றதாக இருக்க முடியும். சகுண நிலை எல்லைக்கு உட்பட்டது. இப்படி நாம் சகுணக் கருத்தைப் பாதுகாக்கிறோமே தவிர அழிக்கவில்லை. நிர்க்குணக் கடவுள் கருத்திற்கு இடமளித்தால் சகுணக் கடவுள்கருத்து அழிந்து விடும் என்ற சந்தேகம் அடிக்கடி எழுகிறது. ஆனால் வேதாந்தத்தின் கருத்து தனித்துவத்தை அழிப்பதல்ல, அதை உண்மையாகப் பாதுகாப்பதே. உலகைக் கருத்தில் கொள்ளாமல், தனி மனிதத்துவம் என்பது பிரபஞ்சத்துவம் என்பதைக்

காட்டாமல், எந்த வழியிலும் தனிமனிதனை நிரூபிக்க முடியாது. உலகிலுள்ள பிறவற்றிலிருந்து தனிமனிதன் வேறுபட்டவன் என்று நாம் எண்ணினால் அந்தக் கருத்து ஒருகணம்கூட நிற்க முடியாது. அத்தகைய ஒன்று இருந்ததே இல்லை.

இப்போது, பொருளின் இயல்பிலிருந்தே அதன் விளக்கம் வர வேண்டும் என்ற இரண்டாவது கருத்தை உபயோகப்படுத்து வோம். இங்கே மேற்கண்டதைவிட மிகத் துணிவானதும் புரிந்து கொள்ளக் கடினமானதுமான ஒரு கருத்திற்கு வந்து சேர்வோம். நமது மிக உயர்ந்த பொதுமையான நிர்க்குணப் பொருள் நம் முள்ளேயே இருக்கிறது, நாமே அது என்பதுதான் அந்தக் கருத்து. 'சுவேதகேது, நீயே அது!' நீயே அந்த நிர்க்குணப் பரம் பொருள். உலகெங்கும் நீ தேடி அலையும் கடவுள் என்றும் நீயே. இங்கு 'நீ' என்பது சகுணக் கருத்தில் அல்ல, நிர்க்குணக் கருத்திலேயே. நாம் அறிந்த இந்தத் தோன்றும் மனிதன் என்ப வன் குணங்களுடன் கூடியவன். ஆனால் அவனது உண்மை நிர்க்குணமே. சகுணத்தைப் புரிந்துகொள்ள நாம் நிர்க்குணத் தைக் கருத்தில் கொண்டாக வேண்டும். தனிப்பட்டதைக் குறிக்கப் பொதுவானதைக் கருத்தில் கொண்டேயாக வேண்டும். அந்த நிர்க்குணமே மெய்ப்பொருள், மனிதனின் ஆன்மா.

இதுபற்றிய வேறு பல கேள்விகள் உள்ளன. போகப்போக அவற்றிற்குப் பதில் கூற முயற்சிக்கிறேன். பலசிக்கல்கள் தோன்ற லாம். முதலில் அத்வைதத்தின் நிலையைப் பற்றித் தெளிவாகப் புரிந்துகொள்வோம். நாம் பலவாகத் தோன்றுகிறோம், ஆனால் நமது உண்மை ஒன்றே. அந்த ஒன்றிலிருந்து வேறுபட்டவர் களாக நம்மை நாம் எவ்வளவு குறைவாக நினைக்கிறோமோ அவ்வளவு நமக்கு நல்லது. அந்த முழுப் பொருளிலிருந்து நாம் வேறுபட்டவர்கள் என்று எவ்வளவு அதிகமாக நினைக் கிறோமோ, அவ்வளவுக்கு நமது துயரமும் அதிகமாகும்.

இந்த அத்வைதக் கோட்பாட்டில் நீதிநெறிகளுக்கான அடிப்படையைக் காண்கிறோம். வேறெங்கிருந்தும் எந்த நீதி நெறியையும் நாம் பெற முடியாதென்று நான் உறுதியாகக் கூறுவேன். நீதிநெறி என்பது குறிப்பிட்ட ஒருவரது அல்லது பலரது சங்கல்பங்கள் என்பதே பழைய கருத்தாக இருந்ததை நாம் அறிவோம். இன்று இதை மிகச்சிலரே ஏற்றுக் கொள் வார்கள், ஏனெனில் இந்தக் கருத்து முழுமையான பொதுமைக் கருத்து அல்ல. 'இதைச் செய்யாதே, அதைச் செய்யாதே' என்று இந்துக்கள் கூறுகிறார்கள். ஏன் என்று கேட்டால்

வேதம் கூறுவதாகச் சொல்வார்கள். ஆனால் கிறிஸ்தவர்கள் வேதங்களுக்குக் கட்டுப்பட வேண்டியதில்லை. கிறிஸ்தவர்களும், 'இதைச் செய், அதைச் செய்யாதே' என்று பைபிள் கூறுவதாகச் சொல்கிறார்கள். ஆனால் பைபிளில் நம்பிக்கையில்லாதவர்களை அது கட்டுப்படுத்தாது.

எனவே இந்த எல்லாவிதமான கருத்துக்களையும் தன்னுள் அடக்கவல்ல பரந்த கொள்கை நமக்கு வேண்டும். படைப்பவரான ஒரு சகுணக் கடவுளை கோடிக்கணக்கானோர் நம்பத் தயாராக இருக்கிறார்கள். அறிவுத்திறன் மிக்க பலருக்கோ அத்தகைய கருத்துக்கள் போதுமானவையாக இல்லை; அவற்றைவிட மேலான ஒன்று அவர்களுக்குத் தேவையாக இருக்கிறது. அவர்களுக்கெல்லாம் இடமளிக்கும் அளவிற்கு ஒரு மதம் பரந்ததாக இல்லாதபோது, சமுதாயத்திலுள்ள அறிஞர்கள் எப்போதும் மதத்திற்கு வெளியே தனித்தே நின்றனர். இந்த நிலை இன்றுபோல் இவ்வளவு தீவிரமாக என்றுமே இருந்ததில்லை. முக்கியமாக ஐரோப்பாவில் இப்படிப் பட்ட நிலைதான் உள்ளது. இத்தகைய மனங்களையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்றால் மதம் போதிய அளவு பரந்த நோக்குடையதாக இருக்க வேண்டும். அது கூறும் கொள்கைகளெல்லாம் அறிவுபூர்வமானவையாக இருக்க வேண்டும். மதங்கள் தங்களை அறிவாராய்ச்சிக்குக் கட்டுப் பட்டவை அல்ல என்று ஏன் கூறிக் கொள்ள வேண்டும் என்பது தெரியவில்லை.

மதங்களாக இருந்தாலும், அவை அறிவாராய்ச்சி என்ற அளவுகோலால் பார்க்கப்படவில்லை என்றால் அவற்றைப் பற்றிச் சரியான முடிவுக்கு நாம் வர முடியாது. மிகவும் பயங்கரமான ஒன்றை ஒரு மதம் அனுமதிக்கலாம். உதாரணமாக, முகமதியர் அல்லாத பிறரைக் கொல்ல முகமதிய மதம் அனுமதிக்கிறது. 'முகமதிய மதத்தில் நம்பிக்கை இல்லாதவர்கள் முகமதியர் ஆக மறுத்தால் அவர்களைக் கொன்றுவிடுங்கள்' என்று குரானில் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. அவர்களைத் தீக்கோ வாளுக்கோ இரையாக்கலாம். இது தவறு என்று கூறினால் உடனே முகமதியர்கள், 'அது உனக்கு எப்படித் தெரியும்? அது தவறென எப்படி நீ அறிவாய்? எங்கள் நூல் இது சரி என்று கூறுகிறதே!' என்று கேட்பார்கள். அது இயல்புதான்.

எங்கள் நூல் மிகவும் பழமையானது என்று நீங்கள் சொன்னால் தங்கள் நூல்கள் இன்னும் பழமையானவை

என்பார்கள் பௌத்தர்கள். இந்துக்களோ, தங்கள் நூல்கள் அனைத்தையும்விடப் பழமையானது என்பார்கள். எனவே நூல்களை அடிப்படையாகக் கொள்வது பயன்படாது. அவற்றை ஒப்பிட்டுப் பார்ப்பதற்கான அளவுகோல் எது? மலைப் பிரசங்கத்தைப் பாருங்கள் என்று நீங்கள் கூறினால், முகமதியர்கள் குரானில் உள்ள நீதிநெறிகளைப் பாருங்கள் என்று பதிலளிப்பார்கள். இவை இரண்டுள் சிறந்தது எது என்று தீர்மானித்துக் கூறும் நடுவர் யார் என்று கேட்பார்கள் முகமதியர்கள். இந்தச் சச்சரவில் பைபிளோ குரானோ நடுவராக இருக்க முடியாது. அதற்கு, எதையும் சாராத தனிப்பட்ட ஒன்று வேண்டும். அது எந்த நூலாகவும் இருக்க முடியாது. அது உலகம்தழுவிய ஒன்றாக இருக்க வேண்டும். அறிவைவிட உலகம் தழுவிய ஒன்று எது இருக்க முடியும்? ஆனால் அறிவு போதிய வலுவானதல்ல, உண்மையை அறிய அது எப்போதும் பயன்படுகிறது என்று சொல்ல முடியாது. பல வேளைகளில் அது தவறிவிடுகிறது. எனவே ஒரே முடிவு சர்ச்சின் அதிகாரத்தை ஏற்றுக்கொள்வதுதான் என்று கூறப்படுகிறது. ரோமன் கத்தோலிக்கர் ஒருவர் இப்படித்தான் என்னிடம் கூறினார். ஆனால் அதில் என்ன நியாயம் இருக்கிறது என்பது எனக்குத் தெரியவில்லை. அறிவு பலவீனமானது என்றால், மதக் குருமார்களின் கூட்டம் அதைவிடப் பலவீனமானது. அவர்கள் கூறுவதை என்னால் ஏற்க முடியாது, அறிவு வழியில்தான் நான் போவேன் என்றே நான் கூறுவேன். ஏனெனில் அறிவு பலவீனமானதாக இருந்தாலும், அதன்மூலம் உண்மையை அடையும் வாய்ப்பு என்றாவது கிடைக்கலாம். மற்ற வழிகளில் அந்த நம்பிக்கைகூட இல்லை.

எனவே நாம் அறிவுவழியைப் பின்பற்ற வேண்டும். ஆனால் அந்த வழியை நம்பாதவர்களிடமும் நாம் பரிவுடன் நடந்து கொள்ள வேண்டும். கண்மூடித்தனமாக, எந்தவிதமான அடிப்படையுமின்றி இருபது கோடி தேவர்களை நம்புவதைவிட அறிவை நம்பி நாத்திகர்களானாலும் அதுவே மனித குலத்திற்கு நல்லது. நாம் வேண்டுவது முன்னேற்றம், விரிவு, மெய்யுணர்வு. வெறும் கொள்கைகள் மனிதனை ஒருபோதும் உயர்த்தியதே இல்லை. எத்தனை நூல்களாலும் நம்மைத் தூயவராக்க முடியாது. மெய்யுணர்விலேயே உண்மையான ஆற்றல் உள்ளது. அது நம்மிடமே உள்ளது. தீவிரமாகச் சிந்திப்பதாலேயே நாம் அதை அடைகிறோம். மனிதர்கள் சிந்திக்கட்டும். மண்ணாங்

கட்டி ஒருபோதும் சிந்திப்பது இல்லை, ஆனால் அது மண்ணாங் கட்டியாகவே இருக்கிறது. அறிவுஜீவி என்பதில்தான் மனித னுடைய பெருமை இருக்கிறது. சிந்திப்பது அவனது இயல்பு. இதனால்தான் அவன் விலங்குகளிடமிருந்து வேறுபடுகிறான். நான் அறிவுபூர்வமாகச் சிந்தித்து அந்த வழியில் செல்பவன். நூல்களைப் பிரமாணமாக ஏற்றுக் கொள்வதால் ஏற்படும் தீமைகளை நான் நன்கு அறிவேன். ஏனெனில் அதனை அதன் எல்லைவரை உபயோகப்படுத்திய நாட்டில் பிறந்தவன் நான்.

படைப்பு என்பது வேதங்களிலிருந்து தோன்றியதாக இந்துக்கள் நம்புகிறார்கள். பசு என்ற ஒன்று இருக்கிறது என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்? பசு என்ற வார்த்தை வேதங்களில் இருப்பதிலிருந்துதான். வெளியில் மனிதன் ஒருவன் இருக்கிறான் என்று எப்படி நீங்கள் அறிவீர்கள்? மனிதன் என்ற வார்த்தை வேதங்களில் இருப்பதிலிருந்துதான். வேதங்களில் இந்த வார்த்தை இல்லை என்றால் மனிதன் என்பவனே வெளியில் இருந்திருக்க மாட்டான். இப்படித்தான் இந்துக்கள் கூறுகின்றனர். நூல்களைப் பிரமாணமாகக் கொள் வதன் மிதமிஞ்சிய எல்லை இது. நான் படித்த முறையில் அவர்கள் படிக்கவில்லை. ஆனால் ஆற்றல் மிக்க சிலர் அதை எடுத்துக்கொண்டு மிக அருமையான, அறிவுபூர்வமான கருத்துக்களை நிறுவியுள்ளனர். அதைத் தர்க்க முறையில் ஆராய்ந்து ஒரு தத்துவநெறியையே உருவாக்கியுள்ளனர். ஆயிரக் கணக்கான அறிஞர்கள் ஆயிரக்கணக்கான ஆண்டு களாக இந்தக் கொள்கையை உருவாக்கி வந்துள்ளனர். நூல் களைப் பிரமாணமாகக் கொள்வதன் வலிமை இத்தகையது. இதனால் விளையும் ஆபத்துக்களும் பல. மனித இனத்தின் வளர்ச்சியையே அது தடை செய்கிறது. நாம் வேண்டுவது வளர்ச்சியே என்பதை மறக்கக் கூடாது. உண்மையைவிடச் சார்பு உண்மைகள் அனைத்திலும் இந்தப் பயிற்சி தேவை யாகிறது. அதுவே நமது வாழ்க்கை.

நாம் அறிந்த மற்ற எல்லா மதக் கருத்துக்களையும்விட அறிவுபூர்வமானதாக இருக்கிறது என்பது அத்வைதக் கொள்கையின் பெருமையாகும். மற்ற கொள்கைகள் எல்லாம், கடவுள்பற்றிய கருத்துக்கள் எல்லாம் ஒருதலைப் பட்சமானவை. சகுணக் கருத்து அறிவுபூர்வமானதும் அல்ல. எனினும் இந்த முழுமையற்ற கருத்துக்களும் பலருக்குத் தேவையாக இருப்பதால், அத்வைதக் கொள்கை அவற்றையும் அணைத்து

கம்பீரமாக நிற்கிறது. சகுணக் கருத்து அறிவுபூர்வமானதல்ல என்று சிலர் கூறுகிறார்கள். ஆனால் அது மனத்திற்கு ஏற்றதாக, ஆறுதல் அளிப்பதாக இருக்கிறது. மனத்திற்கு ஆறுதலான ஒரு மதமே பலருக்குத் தேவை. எனவே அது அவர்களுக்கு இன்றியமையாதது. உண்மையின் ஒளியைத் தாங்க சிலராலேயே முடியும்; அதையே லட்சியமாகக் கொண்டு வாழ மிகச் சில ராலேயே முடியும். எனவே இந்த வசதியான மதம் இருந்தே யாக வேண்டும். இன்னும் சிறப்பான மதத்தைப் பலர் அடைய அது உதவுகிறது. சிறிய வட்டத்திற்குள் உழன்று, தாங்கள் முன்னேறச் சிறு விஷயங்களையே வேண்டி நிற்பவர்கள் உயர்ந்த கருத்துக்களை எண்ண ஒருபோதும் முயல்வதில்லை. அவர்களின் கருத்துக்கள் சிறு தேவர்களையும் சின்னங் களையும் பற்றியவையாக இருந்தாலும் அவை நல்லவை, அவர் களுக்கு உதவுபவை. ஆயினும் நிர்க்குணத்தைப்பற்றிப் புரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் அதன்மூலம்தான் மற்றவை அனைத்தையும் விளக்க முடியும்.

சகுணக் கடவுள்கருத்தை எடுத்துக் கொள்வோம். நிர்க் குணக் கருத்தைப் புரிந்துகொள்ளக்கூடிய, நம்புகின்ற ஜான் ஸ்டுவர்ட் மில் (John Stuart Mill) போன்ற ஒருவர், சகுணக் கடவுள் கிடையாதென்றும், அந்தக் கருத்தை நிரூபிக்க முடியா தென்றும் கூறலாம். நிரூபிக்க முடியாது என்பதை நானும் ஒத்துக்கொள்கிறேன். ஆனால் நிர்க்குணப் பரம்பொருளின் நிலைகளுள் மனித அறிவுக்கு எட்டிய மிக உயர்ந்த கருத்து சகுணக் கடவுள்தான். படைப்பு என்பதே அந்தத் தனிப் பரம் பொருளின் பலவிதத் தோற்றங்களைத் தவிர வேறு என்னவாக இருக்க முடியும்? நம் முன் உள்ள ஒரு புத்தகம் போன்றது அது. அதைப் படிப்பதற்காக ஒவ்வொருவரும் தங்கள் அறிவைக் கொண்டு வந்துள்ளனர். ஒவ்வொருவரும் தங்களுக்குத் தாங் களே அதைப் படித்துக் கொள்ளவும் வேண்டும். எல்லா மனிதர் களின் அறிவிற்கும் பொதுவான ஒன்று உள்ளது. எனவே மனித இனத்தின் அறிவிற்குச் சில விஷயங்கள் ஒருபோலவே தோன்றுகின்றன. நானும் நீயும் நாற்காலியை ஒருபோலவே பார்க்கிறோம் என்பது, நமது மனங்களுக்குப் பொதுவான ஒன்று இருக்கிறது என்பதை நிரூபிக்கிறது. ஆனால் வேறு ஒரு புலன் உடைய ஒருவன் வந்தால் அவனால் அந்த நாற்காலியைப் பார்க்க முடியாது. ஒருபோலப் படைக்கப்பட்டவர்கள் ஒரு போலவே காண்பார்கள்.

இவ்வாறு இந்த உலகமே சார்பற்றது, மாறாதது, அறுதி உண்மையானது; தோன்றுபவை அனைத்தும் அதை அறிவால் உணர்ந்ததே. எல்லாவிதமான தோற்றங்களும் எல்லைக்கு உட்பட்டவை என்று முதலில் காண்கிறீர்கள். நம்மால் பார்க்க முடிந்த, உணர முடிந்த, சிந்திக்க முடிந்த அனைத்தும் நம் அறிவால் எல்லைப்படுத்தப் பட்டுள்ளன. நாம் சிந்திக்கின்ற சகுணக் கடவுள்கூட உண்மையில் ஒரு தோற்றமே. இந்தத் தோன்றும் உலகில்தான் காரணகாரியக் கருத்து இருக்கிறது. எனவே இந்தப் படைப்பின் காரணமாகிய கடவுளும் எல்லைக்கு உட்பட்டவர் என்றே கருத வேண்டியிருக்கிறது. ஆனால் நிர்க்குணக் கடவுளும் அவரே. முன்னரே கூறியதுபோல் பிரபஞ்சம் என்பது நம் அறிவால் உணரப்பட்ட நிர்க்குணக் கடவுளே. இந்தப் படைப்பில் உண்மையென்று சொல்லத்தக்க அனைத்தும் அந்த நிர்க்குணப் பரம்பொருளே. அதற்கு உருவங்களையும் கருத்துக்களையும் தருவது நம் அறிவே. உண்மையென்று இந்த மேஜையில் ஏதாவது உண்டானால், அது அந்தக் கடவுளே. மேஜை வடிவத்தைக் கொடுத்தது நமது அறிவு. மற்ற உருவங்களும் இப்படியே.

உதாரணமாக, தோன்றும் உலகில் அசைவு அல்லது இயக்கம் என்பது இன்றியமையாத ஒன்று. ஆனால் அதைப் பிரபஞ்ச நிலையில் தொடர்புபடுத்த முடியாது. ஒவ்வொரு சிறிய பொருளும் இந்தப் பிரபஞ்சத்திலுள்ள அணு ஒவ்வொன்றும் எப்போதும் மாறிக்கொண்டும் இயங்கிக்கொண்டுமே இருக்கின்றன. ஆனால் பிரபஞ்சத்தை முழுமையானதாக எடுத்துக் கொண்டால், அது மாறுபாடு இல்லாததாக இருக்கிறது. ஏனென்றால் இயக்கம், மாறுபாடு என்று நாம் கூறுபவை எல்லாம் சார்புடையவை. இயங்காத ஒன்றுடன் தொடர்புபடுத்தியே இயங்குகின்ற ஒன்றை நாம் புரிந்துகொள்ள முடியும். இயக்கத்தை அறிய இரண்டு பொருட்கள் இருக்க வேண்டும். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் ஒரு தொகுதியாக எடுத்துக் கொண்டால் அது இயங்க முடியாது. எதை வைத்து அது இயங்கும்? அது மாறுவதாகவும் சொல்ல முடியாது. எதன் பொருட்டு அது மாறுபடும்? எனவே முழுமை என்பது தனிப் பொருளாக உள்ளது. அதற்குள் உள்ள ஒவ்வொரு துகளும் தொடர்ந்து இயங்கிக்கொண்டும் மாறிக்கொண்டும் இருக்கிறது. அது ஒரேவேளையில் மாறுபாடு உடையதாகவும் மாறுபாடு இல்லாததாகவும் உள்ளது. நிர்க்குணமாகவும்

சகுணமாகவும் இருப்பது அதுவே. பிரபஞ்சம், இயக்கம், கடவுள் இவை பற்றிய நமது கருத்து இதுவே. 'நீ அதுவாக இருக்கிறாய்' என்பதன் பொருளும் இதுவே.

இவ்வாறு நிர்க்குணக் கருத்து சகுணக் கருத்தை விலக்குவதற்குப் பதிலாக, சார்பற்றது சார்புடையதைத் தள்ளுவதற்குப் பதிலாக நம் மனத்திற்கும் புத்திக்கும் திருப்தியளிக்கும் வகையில் விளக்கம் தருகிறது. சகுணக் கடவுளும் பிரபஞ்சத்தில் உள்ள அனைத்துமே நம் மனங்களின்மூலம் காணப்படும் அதே நிர்க்குணப் பொருளே. நமது சிறு மனங்கள், சிறுசிறு தனித்துவங்கள் இவற்றை விட்டுவிடும்போது நாம் பரம்பொருளுடன் ஒன்றிவிடுவோம். 'நீ அதுவாக இருக்கிறாய்' என்பதன் பொருள் இதுவே. எனவே நாம் நமது உண்மை நிலையை தனி நிலையை உணர வேண்டும்.

எல்லைக்கு உட்பட்ட மனிதன் தனது அடிப்படை ஆதாரத்தை மறந்து தன்னை அதிலிருந்து முற்றிலும் வேறுபட்டவனாக எண்ணுகிறான். தனிப்பட்டுத் தோன்றுகின்ற நிலையில் நாம் நமது உண்மை இயல்பை மறந்துவிடுகிறோம். இந்த வேறுபாடுகளை விட்டுவிட வேண்டும் என்று அத்வைதம் கூறவில்லை. அவற்றை உள்ளபடி அறிந்துகொள்ள வேண்டும் என்பதே அதன் கொள்கை. உண்மையில் நாம் அந்த எல்லையற்ற பரம்பொருளே. அந்த எல்லையற்ற உண்மை தன்னை வெளிப்படுத்திக் கொள்ளக்கூடிய வடிகால்களே நமது தோற்றங்கள். பரிணாமம் என்று நாம் கூறுகின்ற மாற்றங்கள் அனைத்தும் ஆன்மா தனது எல்லையற்ற சக்தியை மேன்மேலும் வெளிப்படுத்துவதற்கான முயற்சியே. எல்லையற்றதன் இந்தப் பகுதியில், அதாவது சகுணப் பகுதியில் நாம் எங்கும் நிற்க முடியாது. நமது ஆற்றல், நிறைவு, ஞானம் இவை அனைத்தும் எல்லையற்று வளர்ந்தேதீரும். எல்லையற்ற ஆற்றல், எல்லையற்ற உண்மை, எல்லையற்ற நிறைவு இவை நமதே. இவற்றை நாம் பெற வேண்டியதில்லை; ஏனெனில் அவை நம்முடையவை. அவற்றை வெளிப்படுத்த வேண்டும், அவ்வளவுதான்.

அத்வைதக் கொள்கையின் மையக் கருத்து இது. புரிந்துகொள்ளக் கடினமான ஒன்று இது. என்னைச் சுற்றியுள்ளவர்கள் குழந்தைப் பருவம் முதல் எனக்கு பலவீனத்தையே கற்றுத் தந்தார்கள். பிறந்ததிலிருந்தே நான் ஒரு பலவீனமானவன் என்றே சொல்லி வந்தனர். இப்போது, எனது ஆற்றலையே அறிந்து கொள்வது கடினமானதுதான்.

ஆனால் விவேகத்தாலும் ஆராய்ச்சியாலும் அதை அறிகிறேன், உணர்கிறேன்.

இந்த உலகத்தில் காணும் அறிவெல்லாம் எங்கிருந்து வந்தது? அவை நம்மிடமே இருந்தது. எந்த அறிவு நமக்கு வெளியே இருக்கிறது? ஒன்றுமே இல்லை. அறிவு என்பது ஒரு போதும் ஜடப்பொருளில் இல்லை, மனிதனிடமே இருக்கிறது. ஒருவரும் அறிவைப் படைப்பதில்லை. தன்னுள்ளிருந்தே மனிதன் அதை வெளியே கொண்டுவருகிறான். அது அங்கேயே உள்ளது. ஒருவேளை கடுகில் எட்டில் ஒரு பங்கே இருக்கக்கூடிய ஆலம்விதையில், ஏக்கர்கணக்கான பரப்பில் பரந்து நிற்கும் ஆலமரம் அடங்கியுள்ளது. எல்லா சக்தியும் விதையினுள் அடங்கியிருந்தது. உயிரணுவுள் மிகப் பெரிய அறிவாற்றல் அடங்கி இருக்கிறது என்று நாம் ஏற்றுக்கொள்ளும்போது, எல்லையற்ற சக்தியும் அதனுள் அடங்கியிருக்கக் கூடாதா? இருக்கத்தான் வேண்டும் என்பதை நாம் அறிவோம். இது முரணாகத் தோன்றலாம். ஆனால் இதுவே உண்மை. நாம் ஒவ்வொருவரும் ஓர் உயிரணுவிலிருந்துதான் வெளிவந்தோம். இப்போது நாம் பெற்றிருக்கும் ஆற்றல்கள் அனைத்தும் அதில் சுருண்டு கிடந்தன. உணவிலிருந்து அது வந்தது என்று சொல்ல முடியாது. உணவை ஒரு மலையாகக் குவித்தாலும் அதிலிருந்து ஏதாவது சக்தி வெளிப்படுமா? எனவே சக்தி, உயிரணுவில் வெளிப்படையாகத் தெரியாவிட்டாலும் அங்கேதான் அது இருந்தது.

மனிதன் அறிந்தாலும் அறியாவிட்டாலும் அவனது ஆன்மாவில் எல்லையற்ற சக்தி உள்ளது. அவன் அதை உணரும் திறத்தைப் பொறுத்தே அது வெளிப்படுகிறது. கட்டுக்கடங்காத இந்த அரக்கன் தூக்கம் கலைந்து எழுவதுபோல் மெல்லமெல்ல எழுகிறான், தனது ஆற்றலை உணர்கிறான், விழிப்புப் பெறுகிறான். அவனது விழிப்புணர்வு திடப்படுந்தோறும் அவனது தளைகள் மேன்மேலும் அறுபடுகின்றன, கட்டப்பட்ட சங்கிலிகள் சுக்கல்சுக்கலாக உடைகின்றன. அவன் தனது எல்லையற்ற அறிவையும் ஆற்றலையும் உணர்ந்து எழுந்து நிற்கும் நாள் வந்தே தீரும். அந்த மாபெரும் நிகழ்ச்சியை விரைவுபடுத்த நாம் அனைவரும் உதவி செய்வோம்! ❑

## 4

இதுவரை நாம் பொதுவானதைப் பற்றியே அதிகமாகப் பார்த்தோம். இன்று தனிப்பட்டதற்கும் பொதுவானதற்கும் உள்ள தொடர்பு பற்றிய வேதாந்தத்தின் கருத்தைக் கூறப் போகிறேன். தெளிவாக விளக்கப்பட்ட, குறிப்பிட்ட எல்லைக்கு உட்பட்ட ஆன்மா ஒவ்வோர் உயிருக்கும் இருப்பதாகப் பழைய துவைத வேதக் கோட்பாடுகளில் கூறப்படுவதுபற்றி நாம் கண்டோம். ஒவ்வொருவரின் இந்தத் தனி ஆன்மாவைப்பற்றி எத்தனையோ கொள்கைகள் எழுந்துள்ளன! ஆனால் மிக முக்கியமான விவாதங்கள் வேதாந்திகளுக்கும் பௌத்தர்களுக்கும் இடையில் ஏற்பட்டன. வேதாந்திகள், தனி மனித ஆன்மா தன்னளவிலேயே பூரணமானது என்று நம்பினார்கள். பௌத்தர்கள், அப்படியொரு தனி ஆன்மாவே இல்லை என்று முற்றிலுமாக மறுத்துவிடுபவர்கள். இது கிட்டத்தட்ட இங்கே, ஐரோப்பாவில், பொருளும் அதன் குணமும்பற்றி ஏற்பட்ட விவாதம் போன்றதே என்பதை முன்பே கூறி இருக்கிறேன். ஒரு பிரிவினர் குணங்களுக்குப் பின்னால் பொருள் ஒன்று இருக்கிறது என்றும் குணங்கள் அதையே சார்ந்திருக்கும் என்றும் கூறுகிறார்கள். மற்றொரு பிரிவினரோ, பொருள் என்ற ஒன்றே தேவையில்லை, குணங்கள் தாமாகவே இருக்க முடியும் என்கின்றனர். ஆன்மாவைப் பற்றிய மிகப் பழமையான கருத்து தற்போதத்தை (self-identity) 'நான் நானே' என்பதை அடிப்படையாகக் கொண்டது. அதாவது நேற்றைய நானும் இன்றைய நானும் ஒன்றே; இன்றைய நான்தான் நாளைய நானாகவும் இருப்பேன். உடம்பில் எத்தனையோ மாறுதல்கள் ஏற்பட்டாலும், நான் அதே நான்தான் என்று நம்புகிறேன். இது எல்லைக்கு உட்பட்ட ஆனால் பரிபூரணமான தனிப்பட்ட ஆன்மாவை நம்புகின்ற பிரிவினரின் முக்கிய வாதம் என்று தோன்றுகிறது.

புராதன பௌத்தர்கள் இத்தகைய கொள்கைகள் தேவையே இல்லை என்றார்கள். நாம் அறிந்தது, அறிய முடிவது

அனைத்தும் இந்த மாற்றங்களை மட்டுமே என்று அவர்கள் வாதிட்டார்கள். மாற்றமில்லாத, மாற முடியாத, ஒரு பொருள் இருப்பதாகக் கொள்வது தேவையற்றது. அப்படி ஒரு மாறாத பொருள் இருந்தாலும், அதை நாம் ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது. அதை அறிவது என்னும் சொல்லிற்குப் பொருளே இல்லை.

இதே ஆராய்ச்சி இன்று ஐரோப்பாவில் ஒரு பக்கம் மத வாதிகள் மற்றும் லட்சியவாதிகளுக்கும், மறுபக்கம் நவீன உடன்பாட்டினர் (Modern Positivist) மற்றும் ஆஜ்ஞேயவாதி களுக்கும் இடையே நடந்துவருவது உங்களுக்குத் தெரியும். மாறாத ஒன்று உண்டென்றும் அதை நாம் காணலாமென்றும் ஒரு பிரிவினர் கூறுகின்றனர். இவர்களுடைய பிரதிநிதியே உங்கள் ஹெர்பர்ட் ஸ்பென்சர் (Herbert Spencer). காம்டே (Comte) என்பவரைத் தலைவராகக் கொண்டவர்களும் இன்றைய ஆஜ்ஞேயவாதிகளுமே மற்ற பிரிவினர். சில ஆண்டு களுக்கு முன் ஹெர்பர்ட் ஸ்பென்சருக்கும் பிரெடரிக் ஹாரி சனுக்கும் (Frederick Harrison) இடையில் நடந்த வாதங்களை உங்களுள் சிலர் கவனித்திருக்கலாம். மாறுபாடுகளுக்குப் பின்னால் ஒரே பொருள் உள்ளது என்று ஒரு பிரிவினரும், அப்படி ஒரு பொருள் தேவையில்லை என்று மற்ற பிரிவினரும் நிகழ்த்திய விவாதம் அதே பழைய பிரச்சினைதான் என்பதை அறிந்திருப்பீர்கள். மாறாத ஒன்றின் துணையாலேயே மாறு பாடுகளை நாம் அறிய முடியுமென ஒரு பிரிவினர் கூறுகின்றனர். அது தேவையே இல்லையென மறுபிரிவினர் வாதிடுகின்றனர். மாறும் ஒன்றைப் பற்றியே நாம் சிந்திக்க முடியும், மாறாததைப் பற்றி நாம் அறியவோ உணரவோ அனுபவிக்கவோ முடியாது என்று அவர்கள் கூறுகின்றனர்.

இந்தியாவில் மிகப் பழைய காலத்திலும் இந்தப் பெரும் பிரச்சினைக்கு முடிவு காணப்படவில்லை. குணங்களுக்குப் பின்னால் குணங்கள் அல்லாத ஒரு பொருள் உண்டு என்பதற்குச் சான்றுகள் இல்லை என்பதைக் கண்டோம். அது மட்டுமின்றி, தற்போதமும் அதை நிரூபிக்க முடியாது. இனி, நினைவின் தொடர்ச்சி இருக்கிறது என்பதாலும் அதை நிரூபிக்க முடி யாது; அதாவது, இன்று இருக்கின்ற நான் நேற்று இருந்த அதே நான்தான், ஏனெனில் அதை நினைவு கூர்கிறேன், எனவே என்னுள் தொடர்ச்சியான பொருள் இருக்கிறது என்ற வாதமும் கூட அதை நிரூபிக்க முடியாது.

இன்னொரு வாதம் இருக்கிறது; அது வெறும் சொல் அலங்காரமும் வார்த்தை ஜாலமுமே: ஒருவன், 'நான் செய்கிறேன்', 'நான் போகிறேன்', 'நான் கனவு காண்கிறேன்', 'நான் தூங்குகிறேன்', 'நான் அசைகிறேன்' முதலிய வாக்கியங்களை அமைப்பதாகக் கொள்வோம். இதில் செய்தல், போதல், கனவு காணல் முதலியவை மாறுகின்றன. 'நான்' என்பது மாறாதிருக்கின்றது. எனவே இந்த 'நான்' என்பது மாறாத ஒன்று, தனிப் பொருள் என்றும் இந்த மாறுபாடுகள் அனைத்தும் உடலைச் சார்ந்தவை என்றும் இவர்கள் கூறுகிறார்கள். இது மிகத் தெளிவானதாக, நம்பத் தகுந்ததாகத் தோன்றினாலும், சொல் வண்ணத்தை மட்டுமே அடிப்படையாகக் கொண்டுள்ளது. 'நான்' என்பதையும் செய்தல், போதல், கனவு காணல் முதலியவற்றையும் காகிதத்தில் எளிதாகப் பிரித்துவிடலாம்; மனத்தில் பிரிப்பது எளிதல்ல.

நான் சாப்பிடும்போது, சாப்பிடுபவனாக என்னைக் காணும்போது சாப்பிடுவதுடன் ஒன்றிவிடுகிறேன். நான் ஓடும் போது, ஓட்டமும் நானும் வேறல்ல. ஆகவே தற்போத வாதமும் அதிக வலிமை உள்ளதாக இல்லை. நினைவு வாதமும் வலு வற்றதே. நான் ஒருவனாக இருக்கிறேன் என்பதற்கு நினைவே அடிப்படையானால், நான் மறந்துபோன பல காரியங்கள் என்னில் ஒரு பகுதியல்ல என்றாகிவிடும். குறிப்பிட்ட சூழ்நிலை களில் சிலர் தங்கள் கடந்தகாலம் முழுவதையும் மறந்துவிடு வதைக் காண்கிறோம். பல பைத்தியக்காரர்கள் தங்களைக் கண்ணாடி மனிதர்களாகவோ விலங்காகவோ எண்ணு கிறார்கள். அந்த மனிதர்களின் இருப்பு, நினைவைப் பொறுத்துத் தான் இருக்கிறது என்றால், அவன் கண்ணாடியாகிவிட்டான் என்றல்லவா கூற வேண்டும். இது உண்மையல்ல. எனவே தற்போதம் என்பது நினைவு என்னும் வலிமையற்ற ஒன்றைச் சார்ந்தது என்று கொள்ள முடியாது. எனவே எல்லைக்கு உட்பட்ட ஆனால் நிறைவும் தொடர்ச்சியும் உள்ள ஆன்மா என்பதைக் குணங்களிலிருந்து வேறுபட்டதாக நிரூபிக்க முடியாது. குறுகியதான, குணங்களுடன் கூடிய, எல்லைக்கு உட்பட்ட ஒன்றை நாம் நிரூபிக்க முடியாது.

மற்றொருபுறம் பழமையான பௌத்தர்களின் வாதங்கள் மிகவும் வலிமையுடையனவாகத் தோன்றுகின்றன—குணங்களைத் தவிர வேறு எதுவும் நமக்குத் தெரியாது; தெரிந்து கொள்ளவும் முடியாது. புலனறிவுகள் மற்றும் உணர்ச்சிகள்

என்று அழைக்கப்படுகின்ற குணங்களின் தொகுதியே ஆன்மா என்பதே அவர்களின் கருத்து. இத்தகைய ஒரு தொகுதியே ஆன்மா. இந்த ஆன்மா தொடர்ந்து மாறிக்கொண்டே இருக்கிறது.

ஆன்மா பற்றிய அத்வைதக் கொள்கை இந்த இரண்டு கருத்துக்களையும் இணைக்கிறது. பொருளை அதன் குணத்திலிருந்து தனித்துப் பிரித்துப் பார்க்க முடியாது; மாறுபாடு, மாறுபாடின்மை இரண்டையும் ஒரே வேளையில் இணைக்க முடியாது; ஆனால், பொருள் என்று அழைக்கப்படுகின்ற அதுவேதான் குணம், பொருளும் அதன் குணமும் இரண்டல்ல—இதுதான் அத்வைதியின் கருத்து. மாறுபடாததே மாறுபடுவதாகவும் தோன்றுகிறது. அடிப்படைப் பொருளான அந்த மாறாத பொருள் பிரபஞ்சத்திலிருந்து வேறுபட்டது அல்ல. தோன்றும் உண்மையிலிருந்து மாறுபட்டதல்ல அறுதி உண்மை. அறுதி உண்மையே தோன்றும் உண்மையாக ஆகியுள்ளது. ஆன்மா என்ற ஒன்று இருக்கிறது, அது மாறாதது. உணர்ச்சிகள், அனுபவங்கள் என்றெல்லாம் நாம் கூறுபவை மட்டுமல்லாமல் உடலும்கூட வேறு நோக்கிலிருந்து பார்க்கப் படும் அதே ஆன்மாவே. நமக்கு உடல்களும் ஆன்மாக்களும் இருப்பதாக நாம் எண்ணிப் பழகிவிட்டோம். ஆனால் உண்மையில் இருப்பது ஒன்றே.

நான் என்னை உடம்பு என்று நினைக்கும்போது, நான் உடம்பு மட்டுமே. நான் வேறு ஏதோ ஒன்று என்று கூறுவது பொருளற்றது. என்னை நான் ஆன்மா என்று நினைக்கும்போது உடம்பு மறைந்து விடுகிறது, உடல் உணர்ச்சியே மறைந்துவிடுகிறது. உடல் உணர்ச்சிமறையாமல் ஆன்மாவை ஒருவராலும் உணர முடியாது. குணங்களின் அனுபவம் மறையாமல் பொருளின் அனுபவமும் யாருக்கும் கிடைக்காது.

அத்வைதத் தத்துவத்தின் பழைய கயிறு-பாம்பு உருவகம் இந்தக் கருத்தை இன்னும் நன்றாக விளக்கும். ஒருவன் கயிற்றைப் பாம்பாகக் காணும்போது கயிறு மறைந்துவிடுகிறது; கயிறு என்று எண்ணும்போது பாம்பு மறைந்துவிடுகிறது, கயிறு மட்டுமே இருக்கிறது. இரண்டோ மூன்றோ இருக்கிறது என்ற கருத்து, நமது அறிவுக் குறைவினாலேயே ஏற்படுகிறது. நாம் அவற்றைப்பற்றிக் கேள்விப்பட்டிருப்போம், புத்தகங்களில் படித்திருப்போம், அதனால் உண்மையிலேயே உடல், ஆன்மா என்று இரண்டு இருப்பதாக எண்ணவும் தலைப்படுகிறோம்.

உண்மையில் இத்தகைய இரண்டு சேர்ந்த அனுபவம் இல்லை; உடலை உணர்கிறோம் அல்லது ஆன்மாவை உணர்கிறோம். இதை நிரூபிக்க வாதங்கள் எதுவும் தேவையில்லை. உங்கள் மனத்திலேயே உணர்ந்துகொள்ளலாம்.

நீங்கள் உங்களை ஆன்மாவாக, உடலிலிருந்து பிரிந்த ஒன்றாக நினையுங்கள். அப்படி நினைக்கவே முடியாதோ என்றுதான் ஆரம்பத்தில் தோன்றும். ஏதோ ஒருசிலரால் முடியலாம். அவர்கள் தங்களை ஆன்மாவாக உணரும்போது அவர்களுக்கு உடல் நினைவே இருக்காது. ஆழ்ந்த தியானத் தாலோ, சுய மனவசியத்தாலோ, நரம்புத் தளர்ச்சியாலோ, அல்லது மருந்துகள் மூலமாகவோ சிலநேரங்களில் சிலர் வினோதமான மனநிலைகளில் இருப்பதை நீங்கள் கேள்விப் பட்டிருக்கலாம். ஒருவேளை பார்த்தும் இருக்கலாம். அவர் களின் அனுபவங்களிலிருந்து ஒன்றை நீங்கள் தெரிந்துகொள்ள முடியும். அவர்கள் அகமுகமாக ஒன்றைக் காணும்போது வெளியே எல்லாம் மறைந்துவிடுகிறது. ஒன்றே உள்ளது என்பது இதிலிருந்து தெளிவாகிறது. அந்த ஒன்றே பல உருவங்களில் காணப்படுகிறது. இந்தப் பல்வேறு உருவங்கள்தான் காரண காரியத் தொடர்பை ஏற்படுத்துகின்றன. காரணகாரியத் தொடர்பு என்பது பரிணாமமே. ஒன்று மற்றொன்றாக மாறு வதே. சிலவேளைகளில் காரணம் மறைவது போலாகி அதன் இடத்தில் காரியம் எஞ்சி நிற்கிறது. இந்த உடலுக்குக் காரணம் ஆன்மா என்பதாக வைத்துக்கொண்டால், அந்த நேரத்திற்கு ஆன்மா மறைந்து உடல் நிலைக்கிறது; உடல்மறையும்போது ஆன்மா எஞ்சுகிறது. உடலும் ஆன்மாவும் இரண்டு என்பதை மறுக்கின்ற பௌத்தர்களின் வாதத்திற்குப் பதில் இதுவே. இங்கே இருமை மறுக்கப்பட்டு பொருள் மற்றும் குணங்கள் என்பவை பல உருவங்களில் தோன்றும் ஒன்றே என்பது காட்டப்படுகிறது.

இந்த மாறாத தன்மை என்பது முழுமைக்குத்தான் பொருந்துமே தவிர, தனிப்பகுதிக்குப் பொருந்தாது என்ப தையும் நாம் கண்டோம். மாற்றம், இயக்கம் இவற்றிலிருந்தே பகுதி என்ற கருத்து தோன்றுகிறது. எல்லைக்கு உட்பட்ட அனைத்தையும் நாம் அறியலாம், உணரலாம். ஏனெனில் அவை மாறுபவை. ஆனால் முழுமை என்பது மாறாததாகத்தான் இருக்க வேண்டும். ஏனெனில் அதைத் தவிர வேறொன்றும் இல்லை. எனவே வேறொன்றுடன் தொடர்பு ஏற்பட்டு

மாறுபாடு அடைய வாய்ப்பும் இல்லை. மாற்றம் என்பது எப்போதுமே மாறாத ஒன்றை அல்லது குறைவாக மாறும் ஒன்றைப் பொறுத்தே நிகழ்கிறது.

எனவே அத்வைதக் கருத்துப்படி, ஆன்மா பிரபஞ்சம் தழுவியது, மாற்றமில்லாதது, அழிவற்றது என்பதை முடிந்த வரையில் நிரூபிக்கலாம். தனிப்பட்ட பொருள் பற்றித்தான் சிரமம் ஏற்படும். எல்லைக்கு உட்பட்ட, சிறிய, தனி ஆன்மாக்களைப்பற்றி நாம் கொண்டிருக்கும் துவைதக் கருத்துக்களை என்ன செய்வது? அவை இவ்வளவு தூரம் நம்மைப்பற்றிக் கொண்டிருக்கின்றன. அவற்றையும் நாம் கடந்தாக வேண்டும்!

முழுமை என்ற நிலையில் நாம் அழிவற்றவர்கள் என்பதைப் பார்த்தோம். ஆனால் முழுமையின் பகுதிகளாக, அம்சங்களாக இருந்துகொண்டே அழிவற்ற நிலையை அடையவும் விரும்புகிறோம். இங்குதான் பிரச்சினை எழுகிறது. நாம் எல்லையற்றவர்கள், அதுவே நமது உண்மையான தனித்துவம் என்பதைக் கண்டோம். ஆனால் இந்தச் சிறிய ஆன்மாக்கள் தனியாக இருக்க வேண்டுமென்றும் படாதபாடு படுகிறோம். இந்தச் சிறிய ஆன்மாக்கள் தனியானவை என்றாலும் தொடர்ந்து வளர்ந்துகொண்டே இருப்பதை நமது தினசரி அனுபவத்தால் அறியும்போது அவை என்னவாகின்றன? அவை மாறுகின்றன, மாறாமலும் இருக்கின்றன. நேற்று இருந்த நான்தான் இன்றும் இருக்கிறேன், ஆனால் சிறிது மாறியும் இருக்கிறேன். இப்போது துவைதக் கொள்கையை விட்டுவிடுவோம். இந்த எல்லா மாற்றங்களுக்கு இடையிலும் மாறாத ஒன்று உள்ளது என்றும் புதிய பரிணாமவாதத்தின்படி 'நான்' என்பது தொடர்ந்து மாறிக் கொண்டும் விரிந்துகொண்டும் வருகின்ற ஒன்று என்பதையும் தெரிந்துகொள்வோம்.

ஒரு சிப்பி-உயிரினத்தின் (mollusc) பரிணாமமே மனிதன் என்பது உண்மையானால் அந்த உயிரும் மனிதனும் ஒன்றே; மனிதனில் அந்த உயிர் மிகவும் விரிந்திருக்கிறது. அவ்வளவுதான். சிப்பி-உயிரினத்திலிருந்து மனிதன்வரை, எல்லையற்றதை நோக்கி ஒரு தொடர்ந்த விரிவு உள்ளது. எனவே எல்லைக்கு உட்பட்ட இந்த ஆன்மாவை, எல்லையற்ற தனித்துவத்தை நோக்கித் தொடர்ந்து விரிவடைந்து செல்லும் தனித்துவம் என்று கூறலாம். பூரண தனித்துவம் என்பது இந்த எல்லையற்றதை அடையும்போதுதான் ஏற்படுகிறது. ஆனால் எல்லையற்றதன் இந்தப் பக்கத்தில் அது தொடர்ந்து

மாறிக்கொண்டும் வளர்ந்துகொண்டும் இருக்கின்ற ஒன்றாகவே உள்ளது.

தனக்குமுன் தோன்றிய நெறிகளை எல்லாம் சமரசப் படுத்தியது அத்வைத வேதாந்தத்தின் சிறப்புகளுள் குறிப்பிடும் படியான ஒன்றாகும். பல இடங்களில் இது தத்துவ விளக்கத் திற்கு உதவி செய்கிறது, சில இடங்களில் அவற்றைத் தாக்குகிறது. பரிணாம வாதம் என்று நீங்கள் அழைக்கின்ற கருத்தை எங்கள் பழைய தத்துவ ஞானியர் அறிந்திருந்தார்கள். அதாவது வளர்ச்சி என்பது மெல்லமெல்ல, படிப்படியாக நிகழும் ஒன்று என்பது அவர்களுக்குத் தெரிந்திருந்தது. எனவே முந்தைய நெறிகளை சமரசப்படுத்துவதில் அவர்கள் ஈடுபட்டார்கள். பழைய கருத்துக் களுள் ஒன்றைக்கூட அவர்கள் விடவில்லை. இந்தத் தொடர்ந்த வளர்ச்சி, விரிவு இவற்றைப் பற்றிய அறிவோ அனுபவமோ இல்லாதிருந்தது பௌத்த மதத்தின் தவறாகும். அதனால், தங்களுக்கு முன்பு லட்சியத்தை நோக்கிச் சென்றவர்களின் கொள்கைகளுடன் புத்தமதம் தன்னைச் சமரசப்படுத்த முயல வில்லை. பழைய நெறிகள் பயனற்றவை, தீங்கிழைப்பவை என்று கூறி ஒதுக்கப்பட்டன.

மத விஷயத்தில் இத்தகைய எண்ணம் மிகவும் கொடுமை யானது. புதிய சிறந்த கருத்துக்களை அடைந்ததும், அதுவரை தான் கடைப்பிடித்த கருத்துக்கள் எல்லாம் தீமையானவை, தேவையற்றவை என்று மனிதன் தீர்மானித்துவிடுகிறான். அவை இப்போது எவ்வளவு பண்படாததாக, தேவையற்றவையாக இருந்தாலும், அவன் இந்த உயர்ந்த நிலைக்கு வருவதற்கு அவை எவ்வளவு உதவி செய்தன, தேவையாக இருந்தன என்பதை அவன் நினைத்துப் பார்ப்பதில்லை. நாம் எல்லோரும் இப்படியேதான் வளர வேண்டியிருக்கிறது; முதலில் பண்படாத எண்ணங்களில் வளர்கிறோம், அவற்றிலிருந்து நன்மை பெற்று, உயர்ந்த நிலைக்கு வருகிறோம். எனவே பழமையான கொள்கை களையும் அத்வைதம் நட்புடன் வரவேற்கிறது. துவைதமும், அதற்கு முன்பிருந்த மற்ற பிரிவுகளும் அத்வைத வேதாந்தத்தில் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன; ஆதரவளிக்கும் எண்ணத்தில் அல்ல, அவையும் ஒரே உண்மையின் வெளிப்பாடுகளே, அத் வைதம் அடைந்துள்ள அதே முடிவுகளுக்கு வழிவகுப்பவையே என்ற நிலையிலேயே அவை ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

மனித இனம் கடந்துசெல்ல வேண்டிய இந்தப் பல்வேறு படிகளை வாழ்த்துக்களுடன் நாம் காக்கவேண்டுமே தவிர

சாபத்துடன் அல்ல. எனவே இந்த துவைதக் கருத்துக்கள் எல்லாம் ஒருபோதும் விலக்கப்படவில்லை, புறக்கணிக்கப் படவும் இல்லை. அவை வேதாந்தத்துடன் இணைத்தே பத்திர மாக வைக்கப்பட்டுள்ளன. ஆன்மா எல்லைக்கு உட்பட்டது, ஆனால் தன்னளவில் பூரணமானது என்ற துவைதக் கருத்திற்கு வேதாந்தத்தில் இடம் அளிக்கப்படுகிறது.

துவைதத்தின்படி, மனிதன் இறந்தபின் வேறு உலகங் களுக்குச் செல்கிறான். இந்தக் கருத்துக்கள் வேதாந்தத்தில் அப்படியே முழுமையாக இடம் பெற்றுள்ளன. வளர்ச்சி என் பதை அத்வைத நெறி ஏற்றுக் கொள்வதால் இந்தக் கொள் கைகளும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன, அவற்றிற்குரிய இடம் அளிக்கப்படுகின்றன. அவையும் உண்மையின் ஒரு சிறிய பகுதியை எடுத்துக் காட்டுவதாக அமைவதால் அவையும் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.

துவைதக் கருத்தின்படி, இந்தப் பிரபஞ்சம் ஜடப்பொருள் அல்லது சக்தியின் படைப்பு, ஒரு குறிப்பிட்ட சங்கல்பத்தின் விளையாட்டு என்றே கருதப்பட வேண்டும். இந்தச் சங்கல் பமும் பிரபஞ்சத்திலிருந்து வேறானதாகவே கருதப்பட வேண்டும். இந்த நோக்கில் பார்த்தால் ஒரு மனிதன் தன்னை இரண்டு இயல்புகள் உடையவனாக அதாவது உடல், ஆன்மா என்று இரண்டாகப் பார்க்க வேண்டும். ஆன்மா என்பது எல்லைக்கு உட்பட்டதாக இருந்தாலும் தன்னளவில் அது பூரணத்துவம் வாய்ந்ததே. இத்தகைய மனிதனின் மரணமிலாப் பெருநிலை, எதிர்கால வாழ்வு பற்றிய கருத்துக்கள் ஆன்மாவைப் பற்றிய அவனது கருத்துக்களுக்கு ஏற்பவே இருக்கும். இத்தகைய துவைதக் கருத்துக்களும் வேதாந்தத்தில் காணப்படுவதால், அவற்றுள் சிலவற்றைப்பற்றி உங்களுக்குச் சொல்ல நான் கடமைப்பட்டிருக்கிறேன்.

துவைதக் கொள்கையின்படி, நமக்கு ஓர் உடல் இருக்கிறது. இதற்குப் பின்னால் அவர்கள் நுண்ணுடல் என்று அழைக்கின்ற உடல் உள்ளது. இந்த நுண்ணுடலும் ஜடப்பொருளால் ஆனது தான், ஆனால் நுண்ணிய ஜடப் பொருளால் ஆனது. அது நமது கர்மம் அனைத்தின் அதாவது, செயல்களுடையவும் சம்ஸ்காரங்களுடையவும் உறைவிடமாக உள்ளது. இவையே பின்னர் வெளித் தோன்றுகின்றன. நாம் எண்ணுகின்ற ஒவ்வோர் எண்ணமும் நாம் செய்கின்ற ஒவ்வொரு செயலும் சூட்சுமமாகி, விதை வடிவில் மாறியது போலாகி, இந்த நுண்ணிய உடலில்

ஆற்றல் வடிவமாக உறைகிறது. சில காலத்திற்குப் பிறகு வெளி வந்து உரிய பலனைக் கொடுக்கிறது. இந்தப் பலன்கள் மானிட வாழ்வை உருவாக்குகின்றன. இவ்வாறு மனிதன் தனது வாழ்க்கையைத் தானே அமைத்துக் கொள்கிறான். ஆனால் தனக்குத்தானே ஏற்படுத்திக்கொள்ளும் சட்டங்களைத் தவிர வேறு எதற்கும் அவன் கட்டுப்பட்டவன் அல்ல.

நன்மைக்கோ தீமைக்கோ நமது எண்ணங்கள், நமது சொற்கள், நமது செயல்கள் இவை நம்மைச் சுற்றி நாமே ஏற்படுத்திக் கொண்டுள்ள வலையின் இழைகளாகவே உள்ளன. நாம் ஏதாவது ஓர் ஆற்றலை இயக்கத்திற்கு உட்படுத்தினால் அதன் விளைவுகளை ஏற்றேயாக வேண்டும். இதுவே கர்ம நியதி. இந்த நுண்ணுடலுக்குப் பின்னால் ஜீவன் அல்லது தனி மனிதனின் ஆன்மா உள்ளது. இந்த ஆன்மாவின் உருவத்தைப் பற்றியும் அளவைப் பற்றியும் பலவிதமான கருத்துக்கள் உள்ளன. சிலர் அது அணுவைப் போன்று மிகச் சிறியது என்றும், அவ்வளவு சிறியதல்ல என்று வேறு சிலரும், இன்னும் சிலர் அது மிகப் பெரியதென்றும் பலவிதமாகக் கூறுகின்றனர். இந்த ஜீவன், பிரபஞ்ச ஆன்மாவின் ஓர் அம்சம். அது எல்லையற்றது, ஆரம்பம் இன்றியே அது இருக்கிறது, முடிவின்றி இருக்கவும் செய்யும். தனது உண்மை நிலையாகிய தூய்மையை வெளிப் படுத்தவே அது இந்த உருவங்களை எல்லாம் எடுத்து, கடந்து செல்கிறது. இந்த வெளிப்பாட்டைத் தடுக்கும் ஒவ்வொரு செயலும் ஒவ்வோர் எண்ணமும் தீய செயல், தீய எண்ணம். இந்த ஜீவன் விரிவடையவும், அதன் உண்மை நிலையை வெளிப் படுத்தவும் உதவுகின்ற ஒவ்வொரு செயலும் ஒவ்வோர் எண்ணமும் நல்லவை. இந்தியாவிலுள்ள சிறிதும் பண்படாத துவைதிகளுக்கும், மிக முன்னேறிய அத்வைதிகளுக்கும் பொது வாக ஒரு கருத்து இருக்கிறது—ஆன்மாவின் சாத்தியக்கூறுகளும் ஆற்றல்களும் அனைத்துமே அதனுள்ளே உள்ளன, அவை எந்தப் புறக் காரணத்திலிருந்தும் வருபவை அல்ல என்பது தான் அந்தக் கருத்து. ஆன்மாவில் அவை இயங்கா நிலையில் (potential form) உள்ளன. இந்த ஆற்றல்களை வெளிப்படுத்து வதே வாழ்க்கையின் முழுவேலையாக இருக்கிறது.

மறுபிறவிக் கொள்கையும் அவர்களிடம் உள்ளது. அதாவது இந்த உடல் அழிந்த பிறகு, ஜீவன் மற்றோர் உடலை எடுக்கும், அது அழிந்த பின்னர் வேறோர் உடலை எடுக்கும். இப்படியே தொடர்ச்சியாக இங்கோ அல்லது வேறு

உலகங்களிலோ அது உடலை எடுக்கிறது. ஆனால் இந்த உலகத்திற்குத்தான் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் நமது நோக்கத்திற்கு மற்ற உலகங்களைவிட இந்த உலகம்தான் மிகவும் உதவுவதாகக் கருதப்படுகிறது. மற்ற உலகங்களில் துன்பங்கள் மிகச் சிறிதளவே உள்ளது. அந்தக் காரணத்தாலேயே, உயர்ந்த விஷயங்களைச் சிந்திக்கும் வாய்ப்புகளும் அங்குக் குறைவு என்று அவர்கள் கூறுகிறார்கள். ஆனால் இந்த உலகம் சிறிது இன்பமும் அதிகத் துன்பமும் கலந்தது போல் உள்ளது. எனவே ஜீவன் விரைவாகவோ தாமதித்தோ தனது தூக்கத்திலிருந்து விழித்து, தான் சுதந்திரம் அடைவதைப் பற்றி நினைக்க முடிகிறது. இந்த உலகில், உயர்ந்த லட்சியங்களை நினைக்கப் பணக்காரர்களுக்கு மிகக் குறைவான வாய்ப்புகளே உள்ளன. அதுபோல், சொர்க்கத்தில் ஜீவன் முன்னேற அதிக வாய்ப்பு இல்லை. அங்கே ஜீவனின்நிலை, இங்கேயுள்ள பணக்காரனின் நிலையைப்போல்கூட இல்லாமல், வாய்ப்பு இன்னும் குறைகிறது. அங்கு ஜீவன் நோயற்ற நுண்ணுடலைப் பெறுகிறான். உண்ணவோ அருந்தவோ தேவையில்லை. அவர்களின் எல்லா ஆசைகளும் நிறைவேறுகின்றன. ஆனால் அங்கு ஒவ்வோர் இன்பமாக அனுபவித்துக்கொண்டே இருப்பதில் ஜீவன் தனது உண்மை இயல்பை முற்றிலும் மறந்துவிடுகிறான். இன்னும் சில உயர்ந்த உலகங்கள் உள்ளன. அங்கே இன்பங்கள் இருந்தாலும் ஜீவன் முன்னேற வாய்ப்புகளும் உள்ளன.

சில துவைதிகளின் குறிக்கோள் மிகவுயர்ந்த சொர்க்கம் ஆகும். அங்கு ஜீவன்கள் கடவுளுடன் என்றென்றைக்குமாக வாழ்கின்றனர். அவர்களுக்கு அழகிய உடல் இருக்கும். நோயோ மரணமோ மற்ற துன்பங்களோ அங்கில்லை. அவர்களின் விருப்பங்கள் அனைத்தும் நிறைவேறுகின்றன. அவர்களுள் சிலர் அவ்வப்போது இந்த உலகத்திற்குத் திரும்பி வந்து, வேறு உடல் எடுத்து, மனிதர்களுக்குக் கடவுளை அடையும் வழியைக் காட்டுகின்றனர். உலகின் மிகப் பெரிய ஆச்சாரியர்கள் இத்தகையவர்களே. இவர்கள் சுதந்திரர்கள். இறைவனுடன் உயர்ந்த உலகங்களில் வசித்து வந்தவர்கள். துன்பப்படும் மனித குலத்தின் மீதுள்ள அன்பாலும் கருணையாலும் மீண்டும் பிறவி எடுத்து அவர்கள் உய்யும் வழியைக் காட்டுகிறார்கள்.

இது லட்சியமாகவோ முடிந்த முடிவாகவோ இருக்க முடியாது என்று அத்வைதம் கூறுவது நமக்குத் தெரியும்.

உடம்பற்ற நிலைதான் லட்சியமாக இருக்க முடியும். லட்சியம், எல்லையுள்ளதாக இருக்க முடியாது. எல்லையற்றதற்குக் குறைந்த எதுவும் லட்சியமாக முடியாது. எல்லையற்ற உடல் என்ற ஒன்று இருக்க முடியாதல்லவா? அது முடியாதது. ஏனெனில் எல்லைக்கு உட்படுவதால்தான் உடலே உண்டா கிறது. எல்லையற்ற எண்ணம் என்பதும் இருக்க முடியாது. ஏனெனில் எண்ணமும் எல்லைக்குள்தான் எழுகிறது. எனவே நாம் உடல், எண்ணம் இவற்றைக் கடந்து செல்ல வேண்டும் என்று அத்வைதம் கூறுகிறது. இந்தச் சுதந்திர நிலையை நாம் இனி அடைய வேண்டியதில்லை, அது ஏற்கனவே நமதாக இருக்கிறது என்று அத்வைதம் கூறுவதையும் நாம் கண்டோம். அதை மறந்திருக்கிறோம், மறுக்கிறோம். பூரணத்துவம் என்பதை நாம் அடைய வேண்டியதில்லை, அது ஏற்கனவே நம்மிடம் உள்ளது. மரணமிலாப் பெருநிலையோ ஆனந்தமோ நாம் அடைய வேண்டியவை அல்ல, அவை ஏற்கனவே நம்மிடம் இருக்கின்றன. எப்போதும் நம்முடையவையாகவே இருந்து வருகின்றன. நீங்கள் சுதந்திரர் என்று தைரியமாகக் கூற முடியு மானால் இந்தக் கணமே நீங்கள் சுதந்திரர்கள். நீங்கள் கட்டுப் பட்டவர் என்று கூறினால் அப்படியே இருப்பீர்கள். இதையே அத்வைதம் துணிவாக முழங்குகிறது. நான் உங்களுக்குத் துவைதிகளின் கருத்துக்களையும் கூறினேன். நீங்கள் விரும்பு வதை ஏற்றுக்கொள்ளலாம்.

வேதாந்தத்தின் மிகவுயர்ந்த குறிக்கோளைப் புரிந்து கொள்வது மிகவும் கடினம். அதைப்பற்றி எப்போதும் விவாதங்கள் நிகழ்கின்றன. மக்கள் சில கருத்துக்களை ஏற்றுக் கொண்டார்களானால் மற்ற கொள்கைகளை மறுக்கவும் எதிர்க்கவும் ஆரம்பித்து விடுகிறார்கள். இது ஒரு பெரிய பிரச்சினை. உங்களுக்குப் பிடித்ததை நீங்கள் கடைப்பிடியுங் கள். அதுபோலவே மற்றவர்கள் தங்களுக்கு விருப்பமானதைப் பின்பற்ற விடுங்கள். நீங்கள் இந்தச் சிறிய தனித்துவத்தையே பற்றிக்கொண்டிருக்க விரும்பினால் இதிலேயே இருங்கள். இத்தகைய ஆசைகளையெல்லாம் கொள்ளுங்கள், இதிலேயே மன நிறைவு அடையுங்கள்! திருப்தியுற்றிருங்கள். உங்கள் மனித நிலை அனுபவம் சிறப்பாக, நல்லதாக இருக்குமானால் வேண்டிய அளவு அதை அனுபவியுங்கள். உங்களால் அனு பவிக்க முடியும், ஏனெனில் உங்கள் அதிர்ஷ்டத்தை உருவாக்கு பவர் நீங்களே. மனிதநிலையை விட்டுவிடும்படி உங்களை

யாரும் வற்புறுத்த முடியாது. விரும்பும்வரை மனிதர்களாக இருங்கள். அதை ஒருவரும் தடுக்க முடியாது.

நீங்கள் தேவதையாக விரும்பினால் தேவதையாகலாம். இதுதான் நியதி. ஆனால் தேவதையாக விரும்பாத சிலரும் இருக்கலாம். அவர்களது கருத்து பயங்கரமானது என்று நினைக்க உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? நூறு ரூபாயை இழக்க நீங்கள் அஞ்சி நடுங்கலாம். ஆனால் தங்கள் சொத்து அனைத்தையும் இழந்தாலும் துளிகூட வருந்தாதவர்களும் இருக்கலாம். அத்தகையவர்கள் இருந்தார்கள், இருக்கிறார்கள். உங்கள் நிலையிலிருந்து அவர்களை ஏன் தீர்மானிக்க வேண்டும்? நீங்கள் உங்கள் எல்லைக் கோடுகளுக்குள் வாழ்பவர்களாக இருக்கலாம், இந்தச் சிறு லெளகீகக் கருத்துக்களே உங்கள் உயர்ந்த லட்சியமாகவும் இருக்கலாம். அது உங்கள் விருப்பம். உங்கள் விருப்பப்படியே நடக்கட்டும். ஆனால் உண்மையைக் கண்ட வேறு சிலர் இருக்கிறார்கள். அவர்களால் இந்தச் சிறிய எல்லைகளுக்குள் திருப்தியாக இருக்க முடியாது. இதையெல்லாம் அவர்கள் அனுபவித்து முடித்துவிட்டார்கள். இதைக் கடந்து அப்பால் செல்லவே அவர்கள் விரும்புகிறார்கள். இந்த உலகமும் அதன் எல்லாவிதமான இன்பங்களும் அவர்களுக்கு வெறும் சேற்றுக்குட்டை மட்டுமே. அவர்களை உங்கள் கருத்துக்களால் ஏன் கட்டுப்படுத்த விரும்புகிறீர்கள்! இத்தகைய மனப்போக்கை விட்டுவிடுங்கள். ஒவ்வொருவருக்கும் அவரவருக்குரிய இடத்தை அளியுங்கள்.

தென் கடல் தீவுகளில் பெரும் புயலில் அடியுண்ட சில கப்பல்களைப் பற்றிய ஒரு கதையை நான் படிக்க நேர்ந்தது. அதைப் பற்றிய படமும் ஆங்கிலப் பத்திரிகை ஒன்றில் (Illustrated London News) வந்தது. ஒரே ஓர் ஆங்கிலேயக் கப்பலைத் தவிர மற்றவை அனைத்தும் உடைந்து போயின. ஆங்கிலேயக் கப்பல் மட்டுமே தாக்குப்பிடிக்க முடிந்தது. தாங்கள் மூழ்கிப் போவதைப்பற்றிச் சிறிதும் எண்ணாமல், கப்பல்தளத்தில் நின்று, புயலை எதிர்த்துச் செல்லும் கப்பல்களை உற்சாகப்படுத்துபவர்கள் அந்தப் படத்தில் காணப்பட்டனர்.[1] அவர்களைப் போல் தைரியத்துடனும் கருணையுடனும் இருங்கள். உங்கள் நிலைக்கு மற்றவர்களைக் கீழே இழுக்காதீர்கள்.

---

1. சாமோவா தீவுகளுக்கருகில் நின்ற பிரிட்டிஷ் கப்பலான H.M.S காலியோபியும் அமெரிக்கப் போர்க் கப்பல்களும்.

மற்றொரு முட்டாள்தனமான எண்ணமும் உள்ளது: நமது சிறிய தனித்துவத்தை இழந்தால், ஒழுக்கமே சிதைந்து மனித குலமே கதியற்றுப் போய்விடும் என்பதே அது. ஏதோ அனைவரும் மனித குலத்திற்காக உயிர் துறப்பது போல்தான் பேசுகிறார்கள்! கடவுள்தான் உங்களைக் காப்பாற்ற வேண்டும்! ஒவ்வொரு நாட்டிலும் இருநூறு ஆண்களும் பெண்களும் உண்மையிலேயே மனித இனத்திற்கு நன்மை செய்ய எண்ணினால் போதும். ஐந்து நாட்களில் பூமியே சொர்க்கமாகி விடாதா! மனித குலத்திற்காக நாம் எப்படி உயிரை விடுகிறோம் என்பது நமக்குத் தெரியாதா என்ன? இவை வெறும் வாய் ஜம்பமே தவிர வேறல்ல. தங்கள் சிறிய தனித்துவத்தைப்பற்றிச் சிறிதும் நினைக்காதவர்களே மனித குலத்திற்கு, மேலான நன்மை புரிந்திருக்கிறார்கள் என்பதையும் ஆண்களும் பெண்களும் தங்களைப்பற்றியே எண்ணியிருந்தால் அந்த அளவுக்குப் பிறருக்கு உதவியிருக்க முடியாது என்பதையுமே உலக வரலாறு காட்டுகிறது. ஒன்று சுயநலமின்மை, இன்னொன்று சுயநலம். சிற்றின்பங்களைப் பற்றிப்பிடித்திருப்பதும் தொடர்ந்து அதை அனுபவிக்க ஆசைப்படுவதும் சுயநலம். இது உண்மையின் மீதுள்ள விருப்பத்திலிருந்தோ, பிறர்மீதுள்ள கருணையிலிருந்தோ ஏற்பட்டதல்ல; 'எனக்கே எல்லாம் வேண்டும், மற்றவர்களைப்பற்றி எனக்கென்ன கவலை?' என்ற கீழான சுயநலத்தால் இதயத்தை நிரப்புவதன் காரணமாகத் தோன்றுவது இது. நான் இப்படித்தான் நினைக்கிறேன். ஒரு சிறிய உயிரைக் காப்பதற்காக, தங்கள் நூற்றுக்கணக்கான பிறவிகளையும் துறக்கத் துணிந்த அந்தப் பண்டைய மாபெரும் தீர்க்கதரிசிகளையும் ரிஷிகளையும் போன்ற நன்னெறி பிறழாத ஏராளம் பேர் இந்த உலகில் இருக்க வேண்டுமென நான் விரும்புகிறேன். ஒழுக்க நெறி, பிறருக்கு நன்மை செய்வது இவை இன்று வெறும் பேச்சளவிலேயே நின்றுவிட்டன! முட்டாள்தனம்!

கௌதம புத்தரைப் போன்ற ஒழுக்கசீலர்களைப் பார்க்க நான் விரும்புகிறேன். அவர் எந்த சகுணக் கடவுளையோ தனிப்பட்ட ஆன்மாவையோ நம்பவில்லை. அதைப்பற்றிக் கவலைப்படவே இல்லை. முழுமையான ஆஜ்ஞேயவாதியாக இருந்த அவர், யாருக்காகவும் தமது உயிரைத் தியாகம் செய்யத் தயாராக இருந்தார். அவர் தமது வாழ்நாள் முழுவதும் பிறரது நன்மைக்காகவே உழைத்தவர்; அவர்களது நன்மையைப் பற்றியே நினைத்தவர். அவரது வரலாற்றை எழுதியவர் அவரது

பிறப்பைப்பற்றி எழுதும்போது, அவர் பலரது நன்மைக்காகவும் பலரது நல்வாழ்க்கைக்காகவுமே பிறந்தார் என்று சரியாகவே சொல்லியிருக்கிறார். அவர் காட்டிற்குச் சென்று தியானத்தில் ஈடுபட்டது தமது முக்திக்காக அல்ல. துன்பத்தால் எரிந்து கொண்டிருக்கிறது உலகம். அதிலிருந்து விடுபட ஒரு வழியை அவர் காண வேண்டும்; 'இந்த உலகில் ஏன் இவ்வளவு துன்பம் உள்ளது?' என்பதே அவர் வாழ்வை நிறைத்திருந்த கேள்வி. நாம் புத்தரைப் போல் ஒழுக்க நெறியில் நிற்பதாக நீங்கள் எண்ணுகிறீர்களா!

சுயநலம் மிகுந்தோறும் மனிதன் ஒழுக்கம் கெட்ட வனாகிறான். இனத்திற்கும் இது பொருந்தும். சுயநலம் மிகுந்த இனமே மிகக் கொடுமை நிறைந்ததாகவும் தீமை பயப்பதாகவும் இருந்திருக்கிறது. அரேபிய தீர்க்கதரிசி நிறுவிய மதத்தைப் போல் துவைதக் கொள்கையை இவ்வளவு அழுத்தமாகப் பின்பற்றிய மதம் வேறு எதுவும் இல்லை; அதுபோல் அவ்வளவு ரத்தம் சிந்தியதும், பிறரிடம் அவ்வளவு கொடூரமாக நடந்து கொண்டதும் வேறு எந்த மதமும் இல்லை. குரான் கூறும் அறிவுரைகளை நம்பாதவனை உடனே கொன்றுவிடும்படி அது கூறுகிறது. அது ஒரு கருணையாம்! அந்த நம்பிக்கையற்ற வர்களைக் கொல்வதுதான் அழகிய பெண்களும் பலவித இன்ப நுகர்ச்சிகளும் நிறைந்த சொர்க்கத்தை அடையும் நிச்சயமான வழியாம்! இந்த நம்பிக்கைகளால் எவ்வளவு ரத்தம் சிந்தப் பட்டிருக்கிறது என்பதைப் பாருங்கள்!

கிறிஸ்தவ மதத்தில் இத்தகைய கொடூரம் சற்றுக் குறைந்து காணப்படுகிறது. தூய கிறிஸ்தவ மதத்திற்கும் வேதாந்தத் திற்கும் இடையில் வித்தியாசம் மிகக் குறைவே. ஒருமைக் கருத்தை அங்கும் நீங்கள் காணலாம். ஆனால் மக்கள் பற்றிப் பிடித்துக்கொள்ள எளிதாக இருப்பதற்காக துவைதக் கருத்துக் களை உபதேசித்து, அதன்மூலம் அவர்கள் உயர்ந்த குறிக் கோளை அடையச் செய்தார் ஏசு. 'பரலோகத்திலிருக்கும் எங்கள் தந்தை' என்று கூறிய அவரே 'நானும் என் தந்தையும் ஒன்று' என்பதையும் உபதேசித்தார். 'நானும் என் தந்தையும் ஒன்று' என்ற நிலையை அடைய 'பரலோகத் தந்தையே' வழி காட்டுகிறார் என்பது அவருக்குத் தெரியும். ஏசுவின் மதத்தில் ஆசிகளும் அன்புமே இருந்தன. ஆனால் பண்படாத கொள்கைகள் உள்ளே புகுந்ததும், அரேபிய மதத்தைவிட இழிந்த நிலைக்கு அது வந்துவிட்டது. இந்தச் சிறிய 'நான்'

என்பதற்காகப் போரிடுவது, இந்த வாழ்க்கையில் வைத்துள்ள பற்று போதாமல், இறந்ததற்குப் பிறகும் அது தொடர வேண்டும் என்று விரும்புவது—இவையெல்லாம் உண்மையில் கொடூரமே. இதை அவர்கள் சுயநலமின்மை என்கிறார்கள். இதுவே ஒழுக்கத்திற்கு அடிப்படையாம்! ஒழுக்கநெறிக்கு இதுதான் அடிப்படை என்றால் கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும்! இந்தச் சிறிய 'நான்' போய்விட்டால் ஒழுக்க நெறியே அழிந்துவிடும் என்றே பலரும் எண்ணுகின்றனர். இவர்கள் இன்னும் சிறிது விவரம் தெரிந்தவர்களாக வேண்டும். இந்தச் சிறிய 'நான்' மறைந்த பிறகே ஒழுக்க நெறி பிழைக்கும் என்னும் கருத்தை அவர்கள் அச்சத்துடன் பார்க்கிறார்கள். இன்பத்தையும் நன்மை அனைத்தையும் அளிப்பது 'நான்' அல்ல, 'நீ' என்பதே.

சொர்க்கமோ நரகமோ இருக்கிறதா இல்லையா என்று யார் கவலைப்படுகிறார்கள்? ஆன்மா இருக்கிறதா இல்லையா என்று யார் கவலைப்படுகிறார்கள்? மாறாத ஒன்று உள்ளதா இல்லையா என்று யார் கவலைப்படுகிறார்கள்? இதோ உலகம் இருக்கிறது, அதில் துன்பம் நிறைந்திருக்கிறது. செல்லுங்கள்! புத்தர் செய்ததுபோல் துன்பத்தைக் குறைக்கப் பாடுபடுங்கள்! இல்லாவிடில் அந்த முயற்சியில் உயிரை விடுங்கள். உங்களையே மறந்து விடுங்கள். இதுவே படிக்க வேண்டிய முதற்பாடம். நீங்கள் நாத்திகரோ, ஆத்திகரோ, ஆஜ்ஞேயவாதியோ, வேதாந்தியோ, கிறிஸ்தவரோ, முகமதியரோ யாராக இருந்தால் என்ன, இதுவே நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டிய முதற்பாடம். எல்லோருக்கும் பொதுவான ஒரே பாடம் என்னவென்றால் இந்தச் சிறிய ஆன்மா அழிந்து உண்மையான ஆன்மா நிறுவப் பட வேண்டும், என்பதுதான்.

இரண்டு சக்திகள் இணையாகச் செயல்படுகின்றன; ஒன்று, 'நான்' என்கிறது, மற்றொன்று, 'நான் அல்ல' என்கிறது. மனிதர்களிடம் மட்டுமல்ல விலங்குகளிலும், விலங்குகளில் மட்டுமல்ல சிறிய புழுவிலும் அவை வெளிப்படுகின்றன. மனிதனின் ரத்தத்தில் நகம் தோய்க்கும் பெண்புலி, குட்டிகளைக் காப்பாற்றுவதற்காகத் தன் உயிரையே கொடுக்கும். அது போலவே பிறரைக் கொல்வது இயற்கையே என எண்ணும் கொடியவனும், பசியால் வாடும் மனைவி மக்களைக் காப்ப தற்காகத் தன் உயிரையே தயங்காமல் கொடுக்க முன்வரலாம். ஆகவே படைப்பு முழுவதும் இந்த இரண்டு சக்திகளும்

அடுத்தடுத்துச் செயல்பட்டு வருகின்றன. எங்கே இதில் ஒன்றை நீங்கள் பார்க்கிறீர்களோ அங்கே மற்றொன்றும் இருந்தேதீரும். இவற்றுள் ஒன்று தன்னலம், மற்றது தன்னலமின்மை; ஒன்று சேர்த்துக் கொள்வது, மற்றொன்று தியாகம் செய்வது; ஒன்று எடுப்பது, மற்றொன்று கொடுப்பது. கீழானதிலிருந்து மிக உயர்ந்ததுவரை இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே இந்த இரு சக்திகளின் விளையாட்டு மைதானமே. இதற்கு விளக்கம் தேவையில்லை, கண்கூடாகத் தெரிவது இது.

இந்தப் பிரபஞ்சத்தின் அடிப்படைச் செயல்பாடுகளும் பரிணாமமும் போட்டி, போராட்டம் என்ற இரண்டின் மீதே இருக்கிறது என்று கூற சமுதாயத்தில் எந்த இனத்திற்கு என்ன உரிமை இருக்கிறது? ஆசை, சண்டை, போட்டி, போராட்டம் இவற்றால்தான் இந்த உலகம் நடக்கிறது என்று கூற அவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? இவை இருப்பதை நாம் மறுக்கவில்லை. ஆனால் மற்ற சக்தியின் செயலாற்றலை ஏன் மறுக்க வேண்டும்? அன்பு, 'நான் அல்ல' என்று கூறும் தியாகம் இவையே இந்த உலகத்திலுள்ள ஆக்கபூர்வமான சக்திகள் என்பதை யாராவது மறுக்க முடியுமா? மற்றது அன்பாற்றலின் தவறான உபயோகமே. அன்பின் சக்தியே போட்டியை உண்டாக்குகிறது. போட்டிக்கு உண்மைக் காரணம் அன்பின் ஆற்றலே. உண்மையான தீமையின் வித்து சுயநலமின்மையே. நன்மைதான் தீமையை உண்டாக்குகிறது. அதன் முடிவும் நன்மையே. நன்மையின் ஆற்றலைத் தவறாகச் செலுத்துவதே அது. கொலை செய்பவன், தன் குழந்தையின் மீதுள்ள அன்பால் தூண்டப்பட்டு அதைச் செய்திருக்கலாம். அவனது அன்பு பலகோடி உயிர்களிடம் இல்லாமல் அந்தச் சிறிய குழந்தையிடம் கட்டுண்டுவிடுகிறது. கட்டுண்டாலும் இல்லையென்றாலும் ஒரே அன்பே அது.

எவ்வாறு வெளிப்பட்டாலும் சரி, இவ்வுலகின் தூண்டு சக்தி என்பது அந்த அற்புதமான சுயநலமின்மை, தியாகம், அன்பு, இவையே. இங்குள்ள ஒரே உண்மையான உயிருள்ள சக்தி அதுவே. எனவே வேதாந்தி இந்த ஒருமையை வலியுறுத்துகிறான். பிரபஞ்சத்திற்கு இரண்டு காரணங்கள் இருக்க முடியாது. எனவே நாம் இதை வற்புறுத்துகிறோம். அழகியதான வியப்பிற்குரியதான அதே அன்புதான் எல்லைக்கு உட்படுவதால் தீமையாக, இழிவாகத் தோன்றும் என்றால் பிரபஞ்சம் முழுவதும் ஒரே ஒரு அன்பின் சக்தியாலேயே

விளக்கப்படுவதைக் காணலாம். இல்லாவிடில் பிரபஞ்சத்திற்கு இரண்டு காரணங்களை ஒப்புக்கொள்ள நேரும்—ஒன்று நன்மை, மற்றொன்று தீமை; ஒன்று அன்பு, மற்றொன்று வெறுப்பு. எது அறிவுபூர்வமானது? நிச்சயமாக ஒரேசக்திக் கொள்கையே.

துவைதம் அல்லாத கருத்துக்களைப்பற்றிப் பார்ப்போம். நான் அதிக நேரம் துவைதக் கருத்தில் நிற்க முடியாதுதான். ஒழுக்கம், சுயநலமின்மை இவற்றின் மிகவுயர்ந்த லட்சியமும் உயர்ந்த தத்துவக் கருத்தும் இணைந்து போகக்கூடியவை என்று நிரூபிப்பதே எனது நோக்கம். நன்னெறி, ஒழுக்கம் இவற்றை அடைவதற்காக உங்கள் எண்ணங்களை நீங்கள் கீழே கொண்டுவர வேண்டியதில்லை. மாறாக, நன்னெறி, ஒழுக்கம் இவற்றின் உண்மையான அடிப்படையை அடைவதற்கு மிகவும் உயர்ந்த தத்துவங்களும் விஞ்ஞான முடிவுகளும் தேவை. மனித அறிவு என்பது அவனது நல்வாழ்விற்கு எதிரானது அல்ல. மாறாக நம் வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் அறிவு மட்டுமே நம்மைக் காப்பாற்றுகிறது. இந்த அறிவே வழிபாடாகும். அறிவு வளருந்தோறும் நமக்கு நல்லது.

எல்லா தீமைகளும் தோன்றக் காரணம் எல்லையற்ற ஒன்றிற்கு நாம் எல்லையை ஏற்படுத்தியதே என்கிறான் வேதாந்தி. அன்பு, எல்லைக்கு உட்பட்டு சிறிய பாதைகள்மூலம் செல்லும் போது தீமையாகத் தெரிகிறது. இறுதியில் பாதையின் மறு கோடியை எட்டும்போது அதுவே கடவுளாகத் திகழ்கிறது. தீமைபோல் தோன்றும் அனைத்தின் காரணமும் நம்மிடமே உள்ளது என்கிறது வேதாந்தம். இயற்கையைக் கடந்த யாரையும் இதற்காகக் குற்றம் சாட்டாதீர்கள். நம்பிக்கை அற்றவர்களாக மனம் உடைந்து போகாதீர்கள். யாராவது வந்து கைகொடுக்கா விட்டால் தப்பிப்போக முடியாத இடத்தில் சிறைப்பட்டுள் ளோம் என்று நினைத்து மனம் தளரவும் வேண்டாம். அப்படி இருக்க முடியாது என்கிறது வேதாந்தம். நாம் பட்டுப்புழுக் களைப் போல் இருக்கிறோம். நம்மிடமிருந்தே நூலை இழைத்துக் கூட்டை உண்டாக்குகிறோம். நாளடைவில் நாமே அதற்குள் கட்டுப்படுகிறோம். ஆனால் இது எப்போதும் இவ்வாறிருப்பதில்லை. அந்தக் கூட்டிலேயே நாம் மெய்யுணர்வு பெற்றுப் பட்டுப்பூச்சியைப்போல் சுதந்திரமாக வெளியேறு வோம். இந்தக் கர்ம வலையை நாமே நம்மைச் சுற்றிப் பின்னி யிருக்கிறோம். அறியாமை காரணமாக பந்தப்பட்டவர்களைப்

போல் நம்மைக் கருதிக்கொண்டு உதவிக்காகக் கதறி அழுகிறோம்.

ஆனால் உதவி வெளியிலிருந்து வருவதில்லை; நமக்கு உள்ளிருந்தே வருகிறது. இந்தப் பிரபஞ்சத்திலுள்ள எல்லா கடவுள்களிடமும் கதறி அழுங்கள். நான் வருடக்கணக்காகக் கதறி அழுதேன். கடைசியில் உதவி வந்தது, ஆனால் அது எனக்கு உள்ளிருந்துதான் வந்தது. நான் செய்த தவறை விலக்க வேண்டியதாயிற்று. இதுதான் ஒரே வழி. என்னைச் சுற்றி நானே பின்னியுள்ள வலையை நானே அறுத்தேயாக வேண்டும். அதற்கான ஆற்றலும் என்னுள் உள்ளது. நல்ல முயற்சியோ தீய முயற்சியோ என் வாழ்வின் எந்த முயற்சியும் வீணான தில்லை என்பது உறுதி. கடந்த நல்வினை, தீவினை இரண்டின் விளைவே நான். எனது வாழ்க்கையில் நான் பலவிதத் தவறுகள் செய்திருக்கலாம். ஆனால் இந்தத் தவறுகளைச் செய்யாமல் இருந்திருந்தால் இந்த நிலைக்கு வந்திருக்க மாட்டேன் என்பது உறுதி. எனவே தவறுகள் செய்ததற்காக நான் வருந்தவில்லை. உடனே நீங்களும் வீட்டிற்குச் சென்று, வேண்டுமென்றே தவறுகள் செய்ய வேண்டும் என்பது எனது கருத்து அல்ல. என்னைத் தவறாகப் புரிந்துகொள்ளாதீர்கள். ஆனால், செய்த தவறுகளுக்காக வருந்தி அழ வேண்டாம். முடிவில் எல்லாம் சரியாகிவிடும் என்பதில் உறுதி கொள்ளுங்கள். இதற்கு மாறாக இருக்க முடியாது. ஏனெனில் நன்மையே நமது இயல்பு, தூய்மையே நமது இயல்பு. அந்த இயல்பை ஒருபோதும் அழிக்க முடியாது. நமது உண்மை இயல்பு எப்போதும் ஒரே தன்மையாகவே இருக்கும்.

நாம் புரிந்துகொள்ள வேண்டியது இதுவே. தவறு, தீமை என்றெல்லாம் நாம் சொல்பவற்றைப் பலவீனத்தாலேயே நாம் செய்கிறோம். பலவீனமோ அறியாமையால் வருகிறது. பாவம் என்பதைவிடத் தவறு என்ற வார்த்தையே சிறந்ததென நான் கருதுகிறேன். பாவம் என்பது முதலில் நல்ல வார்த்தையாகத்தான் இருந்தது. ஆனால் பின்னர் அதில் ஒட்டிக்கொண்ட கருத்து எனக்குச் சற்றுப் பயமளிப்பதாக உள்ளது. யார் நம்மை அறிவிலிகளாக, மாற்றினார்கள்? நாமே நம் கைகளால் கண்களை மூடிக்கொண்டு இருட்டாக இருக்கிறது என்று அழுகிறோம். கைகளை எடுங்கள்! வெளிச்சம் தெளிவாகிறது. வெளிச்சம் எப்போதும் இருக்கிறது. மனித ஆன்மாவின் சுய ஒளி எப்போதும் உள்ளது.

நவீன விஞ்ஞானிகள் என்ன சொல்கிறார்கள் என்பதை நீங்கள் கேட்கவில்லையா? பரிணாமத்திற்குக் காரணம் என்ன? ஆசை. விலங்கு ஏதோ ஒன்றைச் செய்ய விரும்புகிறது, அதற்கு ஏற்ற சூழ்நிலைகள் அமையவில்லை. எனவே ஒரு புதிய உடலைப் படைக்கிறது. யார் படைத்தது? அந்த விலங்கே, அதன் சங்கல்பமே. நீங்கள் மிகச் சிறிய அமீபாவிலிருந்து இந்த நிலைக்கு வளர்ந்திருக்கிறீர்கள். இன்னும் உங்கள் சங்கல்பத்தை விரித்துக் கொண்டே செல்லுங்கள். இன்னும் மேலே போவீர்கள். இந்தச் சங்கல்பம் எல்லாம் வல்லது. அது எல்லாம் வல்லது என்றால், ஏன் என்னால் எல்லாவற்றையும் செய்ய முடியவில்லை என்று நீங்கள் கேட்கலாம். ஆனால் நீங்கள் உங்கள் சிறிய 'நான்' என்பதைப் பற்றி அல்லவா எண்ணுகிறீர்கள். அமீபாவிலிருந்து மனித நிலைவரை உங்களையே பின்னோக்கிப் பாருங்கள். யார் இவ்வளவு தூரம் செய்தது? உங்கள் சங்கல்பமே. அப்படியானால் அது எல்லாம் வல்லது என்பதை உங்களால் மறுக்க முடியுமா? இவ்வளவு உயர்ந்த நிலைக்கு உங்களைக் கொண்டு வந்தது, மேலும் உயர்ந்த நிலைக்குக் கொண்டு போகவும் செய்யும். உங்களுக்கு வேண்டியது குண நலன், உறுதியான சங்கல்பம் இவையே.

உங்கள் இயல்பே தீமையானது, ஏதோ சில தவறுகள் செய்து விட்டதால் நீங்கள் வீட்டிற்குச் சென்றதும் கந்தல் துணியைக் கட்டிக்கொண்டு, சாம்பலைப் பூசிக்கொண்டு, உங்கள் வாழ்நாள் முழுவதும் அழுதுகொண்டிருக்க வேண்டும் என்று சொன்னால் அது உங்களுக்கு உதவி செய்வதாகாது. மாறாக அது மேலும் உங்களைப் பலவீனப்படுத்தவே செய்யும். அப்படிக் கூறினால் நான் உங்களுக்கு நன்மைக்கான வழியைவிடத் தீமைக்கான வழியையே காட்டியதாகும். இந்த அறை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இருள்மண்டிக் கிடப்பதாக வைத்துக் கொள்வோம். நீங்கள் உள்ளே வந்து, 'ஐயோ, ஒரே இருளாக இருக்கிறதே!' என்று அழுகிறீர்கள். அதனால் இருள் மறையுமா? ஒரு தீக்குச்சியை உரசுங்கள், கணநேரத்தில் ஒளி வருகிறது. வாழ்நாள் முழுவதும், 'ஐயோ, தீமை செய்து விட்டேன், பல தவறுகளைச் செய்து விட்டேனே!' என்று புலம்புவதால் என்ன பயன்? இதை எடுத்துச் சொல்ல ஒரு பேயும் தேவையில்லை. ஒளியைக் கொண்டுவாருங்கள், ஒரு கணத்தில் தீமை மறைந்துவிடும். குணநலனைச் செம்மைப் படுத்துங்கள். எப்போதும் தூயதான, ஒளிமிக்க, உங்கள் உண்மை

இயல்பை வெளிப்படுத்துங்கள். நீங்கள் சந்திக்கும் ஒவ்வொரு வரிலும் அதைத் தட்டி எழுப்புங்கள். மிகக் கேவலமான மனிதனிலும், அவனுள்ளிருக்கும் உண்மை ஆன்மாவைக் காணும் நிலையை நாம் ஒவ்வொருவரும் எட்ட வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அவர்களைக் குறை கூறுவதற்குப் பதிலாக, 'ஒளி மிக்கவனே, எழுந்திரு. எப்போதும் தூயவனே எழுந்திரு. பிறப்பு இறப்பு அற்றவனே எழுந்திரு. எல்லாம் வல்லவனே, எழுந்து உனது உண்மை இயல்பை வெளிப்படுத்து. இந்த அற்ப நிலைகள் உனக்குத் தகுந்தவை அல்ல' என்று சொல்லுங்கள்.

இதுவே அத்வைதம் கூறும் மிக உயர்ந்த பிரார்த்தனை. நமது உண்மை இயல்பை, நம்முள்ளே எப்போதும் விளங்கும் கடவுளை, எல்லையற்றதும் எல்லாம் வல்லதும் நன்மை தரு வதும் தன்னலம் அற்றதும் எல்லைகள் இல்லாததுமான அதை எப்போதும் நினைப்பதுதான் ஒரே பிரார்த்தனை. அந்த இயல்பு சுயநலமற்றதாக இருப்பதால் வலிமை நிறைந்த தாகவும் பயமற்றதாகவும் உள்ளது. சுயநலத்திலிருந்தே பயம் வருகிறது. தனக்காக ஒன்றை விரும்பாதவன் யாரைக் கண்டு பயப்பட வேண்டும்? யார் அவனைப் பயமுறுத்த முடியும்? மரணத்திற்கு அவன் ஏன் அஞ்ச வேண்டும்? தீமையால் அவனை அச்சுறுத்த முடியுமா?

எனவே நாம் அத்வைதிகளாக இருந்தால், இந்தக் கணத் திலிருந்தே நமது பழைய நான் இறந்து அழிந்துவிட்டதென்று எண்ண வேண்டும். இந்தப் பழைய திரு, திருமதி, குமாரி, இன்னார் என்பவை எல்லாம் மறைந்துவிட்டன. அவை வெறும் மூடநம்பிக்கைகள். எஞ்சியிருப்பது என்றும் தூய்மையான, எப்போதும் உறுதியான, எல்லாம் வல்ல, எல்லாம் அறிந்த பொருள். அது மட்டுமே நம்மிடம் எஞ்சியுள்ளது. எல்லா பயமும் நம்மிடமிருந்து அகன்றுவிடுகிறது. எங்கும் நிறைந்த நமக்கு யார் தீங்கு செய்ய முடியும்? நம்மிடமிருந்து எல்லா பலவீனங்களும் அகன்றுவிட்டன. இனி நமது ஒரே வேலை நமது சகோதரர்களிடமும் இந்த அறிவை வளர்ப்பதே. அவர்கள் தூய ஆன்மா என்பது நமக்குத் தெரியும், அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்களுக்கு இதைக் கற்பிக்க வேண்டும். அவர்கள் தங்கள் எல்லையற்ற இயல்பை வெளிப்படுத்த நாம் உதவ வேண்டும். உலகம் முழுவதற்கும் இப்போது தேவை யானது இதுதான் என்றே நான் நினைக்கிறேன்.

இந்தக் கொள்கைகள் பழமையானவை, பழைய மலைகளையும்விடப் புராதனமானவை. எல்லா உண்மையும் நிலையானவை. உண்மை என்பது யாருடைய சொத்தும் இல்லை. எந்தவோர் இனமும், எந்தத் தனிமனிதனும் உண்மைக்குத் தனிப்பட்ட சொந்தம் பாராட்ட முடியாது. உண்மை என்பது எல்லா ஆன்மாக்களின் இயல்பு. யாரால் அதனிடம் தனிப்பட்ட உரிமை கொண்டாட முடியும்? ஆனால் இதை நாம் செயல்முறையில் கொண்டுவர வேண்டும், எளிமையாக்க வேண்டும். (ஏனெனில் மிக உயர்ந்த உண்மைகள் எப்போதும் எளிமையாகவே இருக்கும்). சமுதாயத்திலுள்ள ஒவ்வொருவரிடமும் இது ஊடுருவி, உயர்ந்த அறிவாளிகள், சாதாரண மனிதர்கள், ஆண், பெண், குழந்தை அனைவருக்கும் ஒரேவேளையில் பொதுவுடைமையாகத் திகழ வேண்டும். தர்க்க வாதங்கள், தத்துவக் கோட்பாடுகள், சாஸ்திரங்கள், கிரியைகள் எல்லாம் ஒருகாலத்தில் நல்லவையாக இருந்திருக்கலாம். ஆனால் இப்போது எல்லாவற்றையும் மிகவும் எளிமையாக்குவோம். ஒவ்வொரு மனிதனிடமும் உள்ள மெய்ப்பொருளையே வழிபடு பொருளாகவும், ஒவ்வொரு மனிதனும் வழிபடுபவனாகவும் திகழும் பொன்னாளைக் கொண்டுவருவோம்! ❑

# I. சொற்பொழிவுகள்

## 1. மதத்தின் ஆரம்பம்[1]

அடர்ந்த காடு. எண்ணற்ற வண்ணங்கள் எழில்கொஞ்சும் இதழ்கள் மெல்லென வீசி காற்றில் படபடக்க நின்ற மலர்கள் மென்மையாக ஆடியும் அசைந்தும் களித்தன. பல்வேறு நிறங்கள் கொண்ட சிறகுகளுடன் பறந்து திரிந்த பறவை கணங்கள் எழுப்பிய சுரங்கள் அந்த வனமெங்கும் எதிரொலித்தன. என் உள்ளத்தில் அமைதியைப் பெய்த இவை, என் தோழர்களாக இருந்த இவை நேற்று இருந்தன; இன்று இல்லை, மறைந்துவிட்டன. அவை எங்கே போயின? என்னுடன் இருந்து என் சுகதுக்கங்களைப் பகிர்ந்துகொண்ட, என் இன்பங்களிலும் பொழுதுபோக்குகளிலும் கலந்துகொண்ட என் விளையாட்டு நண்பர்களையும் காணவில்லை. எங்கே? நான் குழந்தையாக இருந்தபோது என்னைச் சீராட்டித் தாலாட்டிப் பேணி வளர்த்தவர்கள், வாழ்நாள் முழுவதும் என்னைப்பற்றிய சிந்தை ஒன்றையே எண்ணமாகக் கொண்டிருந்தவர்கள், எனக்காக எல்லாவற்றையும் செய்ய ஆயத்தமாக இருந்தவர்கள்—அவர்களும் போய்விட்டார்கள். எல்லோரும் போய்விட்டார்கள், போய்க்கொண்டிருக்கின்றார்கள், போய்விடுவார்கள்; ஒவ்வொரு பொருளும் போயிற்று, போய்க் கொண்டிருக்கிறது, போய்விடும். இவர்கள் எல்லாம் எங்கே சென்றனர்? இவையெல்லாம் எங்கே போயின—இந்தக் கேள்விதான் ஆதிகால மனிதனின் மனத்தில் எழுந்தது, பதிலை எதிர்பார்த்து நின்றது. 'ஏன் அப்படி? எல்லாம் நலிந்து மண்ணோடு மண்ணாவதை அவன் கண்முன் காணவில்லையா? இவை சென்ற இடம் தேடி அவன் ஏன் தலையைப் புண்ணாக்கிக் கொள்ள வேண்டும்?' என்று நீங்கள் கேட்கலாம்.

எல்லாம் வாழ்ந்துகொண்டிருக்கின்றன—இதுதான் ஆதிகால மனிதன் முதலில் கண்டது. உருக்குலைந்து அழிவதாகிய

1. சுவாமிஜி முதன்முறை அமெரிக்கா சென்றிருந்தபோது, மேலைநாட்டுச் சீடர் ஒருவர் கேட்ட கேள்விக்கு விடையாக எழுதியது.

மரணம் அவனைப் பொறுத்தவரை பொருளற்றதாக இருந்தது. மக்கள் அவனிடம் வருகிறார்கள், போகிறார்கள், திரும்பவும் வருகிறார்கள். சிலவேளைகளில் அவர்கள் போகிறார்கள், ஆனால் திரும்ப வருவதில்லை. ஆகவே உலகின் மிகப் பழைய மொழியில் மரணம் என்பது, ஏறக்குறைய, போவது என்ற கருத்திலேயே குறிப்பிடப்படுகிறது. இதுதான் மதத்தின் ஆரம்பம். 'இவர்கள் எங்கே போகிறார்கள்?'—இந்தப் பிரச்சினைக்கு விடைதேடி எங்கும் அலைந்தான் அவன்.

உறங்கிக் கொண்டிருக்கின்ற உலகிற்கு ஒளியையும் வெப்பத்தையும் இன்பத்தையும் தன் ஆயிரக்கணக்கான கிரணக் கரங்களில் அள்ளிக்கொண்டு தோன்றுகிறான் காலைக் கதிரவன்; மெல்ல மெல்லப் பயணிக்கிறான். அந்தோ! அவனும் மறைகிறான், சாய்ந்து கீழே இறங்கி மெல்ல மறைந்துவிடுகிறான். ஆனால் மறுநாள் அதே மாட்சிமையோடும் அழகோடும் மீண்டும் தோன்றுகிறான். அழகிய தாமரை மலர்கள்—நாகரீகத் தின் பிறப்பிடங்களான நைல் நதியிலும் சிந்து நதியிலும் டைகிரிஸ் ஆற்றிலும் மலர்ந்து நிற்கின்ற அவை அவனது கதிர்கள் பட்டதும் கூம்பிய இதழ்களை விரித்துக் கண் விழித்து மலர்கின்றன. கதிரவனின் ஒளி தேயத்தேய அவையும் கண் அயர்ந்துவிடுகின்றன. ஆகவே சில உள்ளன; அவை வருகின்றன, போகின்றன, மீண்டும் உயிர் பெற்றதுபோல் மீண்டும் கல்லறை யிலிருந்து வருகின்றன. இதுதான் முதல் விடை. எனவேதான் மிகப் பண்டைய மதங்களில் தாமரையும் சூரியனும் முக்கியச் சின்னங்களாகத் திகழ்ந்தன.

சின்னங்கள் எதற்காக? ஏனெனில் தனிக்கருத்து—அது என்ன கருத்தாக இருந்தாலும் சரி—வெளிப்படும்போது நாம் காணக்கூடிய, உணரக்கூடிய தூல ஆடையை அணிந்து கொண்டுதான் வர முடியும். இது நியதி. போகிறது, ஆனால் உலகைவிட்டே போய்விடவில்லை என்ற கருத்தை வெளிப்படுத்த வேண்டுமானால், அதை ஒரு மாற்றம், ஒரு தற்காலிக உருமாற்றம் என்றுதான் சொல்ல வேண்டி யிருந்தது. எந்தப் பொருள் நம் புலன்களைத் தாக்கி, அதிர்வு களாக மனத்திற்குள் சென்று, ஒரு புதிய கருத்தை வெளிப் படுத்துகிறதோ, அந்தப் புதிய கருத்தை வெளிப்படுத்த, அந்தப் பொருளையே நாம் ஓர் ஆதாரமாக, மையமாகக் கொள்ள வேண்டியுள்ளது. அதனால்தான் சூரியனும் தாமரையும் முதல் சின்னங்களாயின.

எங்குப் பார்த்தாலும் ஆழமான பள்ளங்கள்—இருண்ட, கிடுகிடு பள்ளங்கள்; கீழே எல்லாம் இருட்டும் பயங்கரமும்தான், தண்ணீருக்கடியில் கண்களைத் திறந்தாலும் பார்க்க முடியாது. மேலேயோ ஒளி, ஒரே ஒளி, இரவில்கூட நட்சத்திரக் கூட்டங்கள் ஒளிதந்து கொண்டிருக்கின்றன. நான் நேசிப்பவர்கள் எல்லோரும் எங்கேதான் போய்விட்டார்கள்? கீழே ஒரே கும்மிருட்டு மண்டிக் கிடக்கிறதே, அங்கே போயிருக்க மாட்டார்கள்; மேலே அணையா ஒளி திகழ்கிறதே, அங்குதான் சென்றிருப்பார்கள். இதற்கு ஒரு புதுச் சின்னம் தேவைப்பட்டது—அதுதான் அக்கினி. கொழுந்து விட்டெரியும் ஜுவாலைகளுடன் அது சிறிது நேரத்தில் காட்டையே அழித்துவிடுகிறது, உணவைச் சமைக்கிறது, வெப்பம் அளிக்கிறது, காட்டு மிருகங்களைத் துரத்துகிறது, உயிர் கொடுக்கிறது, உயிரைக் காப்பாற்றுகிறது. இனி, அதன் ஜுவாலைகள் மேலே போகின்றனவே தவிர கீழே செல்வதில்லை. ஆகவே இதோ இன்னொரு சின்னம்—மேலேயுள்ள ஒளியுலகங்களுக்கு நம்மை எடுத்துச் செல்வதான அக்கினி, அந்த ஒளியுலகங்களுக்குச் சென்றுவிட்டவர்களையும் நம்மையும் இணைப்பதான அக்கினி. 'ஓ இக்னிஸ், பிரகாசமானவர்களுக்கு எங்கள் தூதரே' என்று மிகப் பழைய குறிப்பு ஒன்று கூறுகிறது. ஆகவே உணவுகளையும், பானங்களையும், இந்தப் பிரகாசமானவர்களுக்குப் பிடித்தது என்று அவர்கள் கருதுகின்ற மற்ற பொருட்களையும் அக்கினியில் இடுகிறார்கள். வேள்வியின் ஆரம்பம் இதுதான்.

ஆகவே ஆதிமனிதனின் முதல் கேள்விக்கு, அவனைத் திருப்திப்படுத்தத் தக்க விடை கிடைத்துவிட்டது. இப்போது அடுத்த கேள்வி எழுந்தது: இவை எல்லாம் எங்கிருந்து வந்தன? இந்தக் கேள்வி ஏன் முதலில் வரவில்லை? ஏனெனில் நாம் திடீர் மாறுதலையே நன்றாக ஞாபகம் வைத்துக் கொள்கிறோம். துன்பம், துயரம், பிரிவு போன்றவை நம் மனத்தில் ஆழமாகப் பதிவதுபோல் இன்பம், மகிழ்ச்சி, சேர்க்கை போன்றவை பதிவதில்லை. இன்பமும் மகிழ்ச்சியும் சுகமும் நமது இயல்பு. அந்த இயல்புக்கு மாறாகத் திடீரென்று நம்மில் குறுக்கிடுகின்ற எதுவும் இயல்புக்கு ஒத்தவற்றைவிட நம் மனத்தில் ஆழப் பதிகின்றன. ஆகவே மரணத்தையே மிகப்பெரிய பிரச்சினையாகக் கொண்டு அதற்குத்தான் முதலில் தீர்வு காண நேர்ந்தது. பின்பு முன்னேற்றம் அதிகரிக்க அதிகரிக்க, இவை எங்கிருந்து வந்தன என்ற இந்தக் கேள்வி பிறந்தது.

வாழ்கின்ற ஒவ்வொன்றும் இயங்குகின்றது: நாம் இயங்குகின்றோம்; நமது சங்கல்பம் நமது உறுப்புகளை இயங்கும்படிச் செய்கின்றது. சங்கல்பத்தின் கட்டுப்பாட்டின்கீழ் நமது உறுப்புக்கள் வடிவங்களைப் படைக்கின்றன. எனவே இயங்குகின்ற ஒவ்வொன்றிலும் சங்கல்பம் என்ற இயக்கி (motor) இருக்கிறது—இன்றைய குழந்தை கொள்வதான இந்தக் கருத்தையே குழந்தை நிலையிலிருந்த அன்றைய மனிதனும் கொண்டிருந்தான். காற்று ஒரு சங்கல்பத்தை உடையது. மேகம் முதலான இயற்கை அனைத்தும் தனித்தனி சங்கல்பங்களாலும், மனங்களாலும், ஆன்மாக்களாலும் நிரம்பியுள்ளன. நாம் பல பொருட்களைப் படைப்பது போலவே அவை இவை எல்லாவற்றையும் படைக்கின்றன. அவர்களே, அந்தத் தேவர்களே, இலோஹிம்[1]களே இவை அனைத்தையும் படைத்தவர்கள்.

இதற்கிடையில் மனித சமுதாயம் வளர்ந்தது. சமுதாயத்தில் ஒரு மன்னன் இருந்தான். ஒளி மிக்கவர்களான இந்த இலோஹிம்களுக்கு இடையேயும் ஏன் ஒரு தலைவன் இருக்கக் கூடாது? ஆகவே ஒரு தேவதேவன், ஒரு இலோஹிம்-யாவே கற்பனை செய்யப்பட்டான். அவன் தேவதேவன், அவனே தன் தனிச் சங்கல்பத்தால் அனைத்தையும் படைத்தான். இந்த ஒளிமிக்கவர்களான இலோஹிம்களையும் படைத்தவன் அவனே. பல விண்மீன்களையும் கோளங்களையும் நியமித்தது அவனே. அதுபோல் இயற்கையின் பல்வேறு செயல்பாடுகளைக் கவனித்துவரத் தேவர்களையோ தேவதூதர்களையோ நியமித்தவனும் அவனே—சிலர் மரணத்தைக் கவனிக்கின்றனர், வேறு சிலர் பிறப்பைக் கவனிக்கின்றனர். இவ்வாறு பலர் பல்வேறு செயல்பாடுகளைக் கண்காணிக்கின்றனர்.

ஒரு தேவதேவன் தன் ஆற்றல் மிகுதியால் மற்ற எல்லா தேவர்களைவிடவும் உயர்ந்திருக்கிறான் என்ற இந்தக் கருத்து எல்லா மதங்களுக்கும் மூலங்களான ஆரியர் மற்றும் செமிட்டிக் இனத்தினரிடையே பொதுக்கருத்தாக உள்ளது. ஆனால் ஆரியர்கள் இங்கிருந்து ஒரு புதிய தொடக்கத்தை வகுக்கிறார்கள்; இது ஒரு மாபெரும் மாற்றுப் பாதை. அவர்களது கடவுள் தேவதேவன் மட்டும் அல்ல, அவர்தான் மேலுலகில் உள்ள தந்தை. இதுதான் அன்பின் ஆரம்பம். செமிட்டிக் கடவுள் கர்ஜனை செய்பவர், பயங்கரமானவர்,

1. தெய்வம் என்பதற்கான ஹீப்ரு மொழிச் சொல்.

சேனைகளுக்குத் தலைவர். இந்தக் கருத்துக்களுடன் தந்தை என்ற ஒரு புதுக் கருத்தை ஆரியன் சேர்த்தான்.

சமுதாயம் வளரவளர இந்த இரு மதங்களின் வேறுபாடு நன்றாகத் தெரியலாயிற்று. உண்மையைச் சொல்வதானால், மனிதப் பேரினத்தின் ஒரு கிளையான செமிட்டிக் இனத்தின் மத வளர்ச்சி இந்த இடத்தில் தடைப்பட்டுவிட்டது. செமிட்டிக் கடவுளைக் காண முடியாது. அது மட்டுமல்ல, கண்டால் மரணம்தான் நேரிடும். ஆரியர்களின் இறைவனைக் காண முடியும் என்பதுடன் உயிர்களின் குறிக்கோள் அவர்; வாழ்வின் ஒரே நோக்கம் அவரைக் காண்பதே. மன்னர்மன்னனானத் தங்கள் கடவுளை செமிட்டிக் இனத்தினர் வழிபடுவதும் அவர் வகுத்த விதிகளைப் பின்பற்றுவதும் அவர் தரும் தண்டனைக்குப் பயந்தே. ஆரியரோ அவரைத் தந்தையாக, தாயாக, நண்பனாக நேசிக்கின்றனர். 'என்னை நேசிக்க வேண்டுமானால், என் நாயையும் நேசிக்க வேண்டும்' என்பார்களே, அதைப்போல் அந்தத் தந்தையின் படைப்பான உயிர்கள் அனைத்தையும் நேசிக்க வேண்டும். ஏனெனில் அவை அவருடையவை. செமிட்டிக் இனத்தாருக்கு, செமிட்டிக் மக்களுக்கு இந்த வாழ்வு போர்க்கள எல்லைப்புறமாகத் திகழ்கின்றது, மனிதனின் நன்றியைச் சோதிப்பதற்காகவே ஆண்டவன் அவனை இங்கே வைத்திருக்கிறான். ஆரியனுக்கோ ஒரு லட்சியத்திற்கான பாதையே இந்த வாழ்வு.

செமிட்டிக் இனத்தினருக்குக் கடமையைச் சரியாகச் செய்தால் போதும், சொர்க்கத்தில் என்றென்றைக்குமாக இன்பம் அனுபவிக்கலாம். ஆனால் ஆரியனுக்கோ கடவுள்தான் அந்தச் சொர்க்கம். செமிட்டிக்கிற்கு இறை-சேவை என்பது ஒரு பயனைப் பெறுவதற்கான ஒரு கருவி, அதாவது இன்பத்தையும் மகிழ்ச்சியையும் பெற ஒரு வழி. ஆனால் ஆரியனுக்கோ இன்பம் துன்பம் எல்லாமே வழிகள், இறைவனே முடிவு, லட்சியம். சொர்க்கத்திற்குப் போவதற்காக கடவுளை வழிபடுகிறான் செமிட்டிக். ஆரியனோ கடவுளை அடைவதற்காகச் சொர்க்கத்தை உதறித் தள்ளுகிறான். சுருக்கமாக இதுதான் முக்கிய வேறுபாடு. ஆரியனுடைய வாழ்க்கையின் குறிக்கோள் கடவுளைக் காண்பதுதான்—அன்பரின் முகத்தைக் காண்பது. ஏனெனில் அவரின்றி இவனால் வாழ முடியாது. 'நீ இல்லாவிட்டால் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் எல்லாம் தங்கள் ஒளியை இழக்கின்றன.' ❑

## 2. மத உரிமைகள்

நியூயார்க், 5 ஜனவரி 1896

ஒளிவீசியெழுகின்ற உதய சூரியனைக் குழந்தைக் காலத்தில் எவ்வளவு குதூகலமாகப் பார்த்தீர்கள் என்பது உங்களுக்கு ஞாபகம் இருக்கலாம். உங்கள் வாழ்க்கையில் ஏதோ சில வேளையிலாவது சற்றே நின்று அஸ்தமன சூரியனைக் கண் கொட்டாமல் பார்த்திருப்பீர்கள், அதற்கும் அப்பால் என்ன இருக்கிறது என்று உங்கள் கற்பனையைக் கொண்டு ஊடுருவ முயன்றிருப்பீர்கள். பிரபஞ்சம் முழுவதிலும் இந்தக் காரியம் தான் நடந்துகொண்டிருக்கிறது—உதயமாவது, பிறகு எங்கோ மறைந்துவிடுவது; தெரியாத இடத்திலிருந்து பிரபஞ்சம் தோன்றுவது, பிறகு தெரியாத இடத்திற்கே சென்றுவிடுவது; இருளிலிருந்து குழந்தையாகத் தவழ்ந்து வருவது, பிறகு கிழவனாக இருட்டில் மறைவது.

நமது இந்தப் பிரபஞ்சம், புலன்களாலும், பகுத்தறிவினாலும், தர்க்க அறிவினாலும் அறியப்படுகின்ற இந்தப் பிரபஞ்சம் இரு பக்கத்திலும் எல்லையற்றதும், அறியப்படாததும், ஒருபோதும் அறிய முடியாததுமானதால் எல்லைப் படுத்தப்பட்டுள்ளது. இங்குதான் தேடவேண்டியிருக்கிறது, இங்குதான் ஆராய வேண்டியிருக்கிறது, இங்குதான் உண்மைகளும் உள்ளன. இங்கிருந்துதான் மதம் எனப்படுகின்ற ஒளி உலகிற்கு வருகிறது. உண்மையில் மதம் புலன்கடந்ததைச் சேர்ந்தது, புலன்தளத்தைச் சேர்ந்தது அல்ல. அது தர்க்கத்திற்கு அப்பாற்பட்டது, அறிவிற்கும் அப்பாற்பட்டது. அது ஒரு காட்சி, ஒரு பேருணர்வு; அறியப்படாததும், அறிய முடியாததுமானதற்குள் மூழ்கி, அறிய முடியாத அதனை அறிகின்ற நிலைக்கு மேலான ஒரு நிலை. ஏனெனில் அதனை ஒருபோதும் 'அறிய' முடியாது. மனித சமுதாயத்தின் ஆரம்பத்திலிருந்தே இந்தத் தேடல் மனித உள்ளத்தில் இருந்திருக்கிறது என்று நான் நம்புகிறேன். இந்தப் போராட்டம் இல்லாத, அப்பால் உள்ள ஒன்றிற்கான இந்தத் தேடல் இல்லாத, மனித

ஆராய்ச்சியோ அறிவோ இல்லாத ஒரு காலம் உலக வரலாற்றில் இருந்ததில்லை. மனித மனம் என்னும் நமது இந்தச் சிறிய பிரபஞ்சத்தில் ஓர் எண்ணம் தோன்றுகிறது. எங்கிருந்து? நமக்குத் தெரியாது. மறையும்போது அது எங்கே போகிறது? அதுவும் நமக்குத் தெரியாது. அண்டமும் பிண்டமும் ஒரே பாதையில் உள்ளன, ஒரே வகை நிலைகளை அடைகின்றன, ஒரே சுருதியில் ஒலிக்கின்றன என்று தோன்றுகிறது.

மதங்கள் புறத்திலிருந்து வருபவை அல்ல, அகத்திலிருந்து வருபவை என்ற இந்துக் கொள்கையை விளக்க முயற்சிக்கிறேன். மனமும் உடம்பும் இருக்கும்வரை, சிந்தனையும் வாழ்க்கையும் நிலைக்கும்வரை மத உணர்வை மனிதனால் விட முடியாது, அந்த அளவுக்கு அது அவனில் ஊறியுள்ளது என்பது என் நம்பிக்கை. அவன் சிந்திக்கும்வரையில் இந்தப் போராட்டம் இருந்துகொண்டுதான் இருக்கும், அவன் ஏதாவது ஒருவகை மதத்தை வைத்துக்கொண்டுதான் இருப்பான். இவ்வாறுதான் உலகில் பலவகையான மதங்கள் ஏற்பட்டுள்ளன. இது நம்மைத் தடுமாறவைக்கின்ற ஒரு ஆராய்ச்சிதான், ஆனாலும் பலர் நினைப்பதுபோல் வீண் ஆராய்ச்சியல்ல. இந்தக் குழப்பத்திலும் ஓர் இயைபு இருக்கிறது, இந்த அபசுரங்களுக்கு இடையிலும் ஒரு சுருதி இழையோடவே செய்கிறது, இதைக் கேட்கத் தயாராக இருப்பவன் அந்தச் சுருதியை அறிந்துகொள்வான்.

தற்சமயம் கேள்விகளிலெல்லாம் மிகப்பெரிய கேள்வி இதுதான்: அறியக்கூடியதும், அறியப்பட்டதுமானது அறிய முடியாததும் அறியப்படாததுமானதால் இரண்டு பக்கங் களிலும் எல்லைப்படுத்தப்பட்டிருப்பதை நாம் ஏற்றுக்கொள் கின்ற பட்சத்தில் அந்த அறியாததற்காக ஏன் போராட வேண்டும்? அறியப்பட்டதைக் கொண்டு திருப்தியுறக் கூடாதா? உண்பது, குடிப்பது, சமுதாயத்திற்குச் சிறிது நன்மை செய்வது இவற்றுடன் நிம்மதியாக இருக்கக் கூடாதா? இப்படிப் பலர் நினைக்கவும் செய்கிறார்கள். 'உலகத்திற்கு நன்மை செய். அவ்வளவுதான் மதம். அப்பால் என்ன இருக்கிறது என்று மூளையைக் குழப்பிக் கொள்ளாதே' என்றுதான் மிகப் பெரிய பண்டிதரிலிருந்து மழலை பேசும் குழந்தைவரை எல்லோருக்கும் சொல்லப்படுகிறது. இப்படிச் சொல்லிச்சொல்லி இது ஓர் உண்மைபோலவே ஆகிவிட்டது.

ஆனால் நல்ல வேளையாக, அப்பால் என்ன இருக்கிறது என்று நாம் விசாரித்துத்தான் ஆக வேண்டும். இங்கே தெரிவது,

அதாவது வெளிப்பட்டுத் தெரிவது வெளிப்படாததன் ஒரு பகுதி மட்டுமே. எல்லையற்ற ஆன்மப் பிரபஞ்சத்தின் ஒரே ஒரு பகுதி புலனுணர்வுத் தளத்திற்குள் நீட்டப்பட்டது போலுள்ளது, அந்த ஒரு பகுதி மட்டுமே புலன்களால் அறியப்படுகின்ற உலக மாக உள்ளது. அப்பால் என்ன இருக்கிறது என்று தெரியாமல் இந்தச் சிறிய பகுதியை எப்படி விளக்க முடியும்? எப்படிப் புரிந்துகொள்ள முடியும்?

ஒருசமயம் சாக்ரடீஸ் ஏதன்ஸ் நகரில் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தபோது, கிரேக்க நாட்டிற்கு வந்திருந்த ஒரு பிராமணரைப் பார்த்தாராம். அப்போது அவரிடம், 'மனித இனம் கற்க வேண்டிய மிகப் பெரிய கல்வி மனிதன்தான்' என்று சொன்னாராம். அதற்கு அந்த பிராமணர், 'கடவுளைத் தெரிந்துகொள்ளாமல் மனிதனை எப்படித் தெரிந்துகொள்ள முடியும்?' என்று கேட்டாராம். ஒருபோதும் அறிய முடியாத வரும் தனியானவரும் எல்லையற்றவரும் பெயரற்றவருமான கடவுள்—நீங்கள் விரும்புகின்ற எந்தப் பெயரால் வேண்டு மானாலும் அவரை அழைத்துக் கொள்ளுங்கள்—அவர்தான் அறியப்பட்டதற்கும், அறியக் கூடியதற்கும், அதாவது, இந்த வாழ்க்கைக்கு அடிப்படைக் காரணமாக, ஒரே விளக்கமாக, ஒரே காரணமாக இருக்கிறார். எந்த ஜடப்பொருளையும் எடுத்துக் கொள்ளுங்கள், வேதியியல், இயற்பியல், வானஇயல், உயிர்நூல் என்று எந்த விஞ்ஞானத்தை வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளுங்கள், அதைப் படியுங்கள், ஆராய்ச்சி செய்து கொண்டே போங்கள். அப்போது ஜடப்பொருட்கள் எல்லாம் கரையத் தொடங்கி, நுண்ணியதாகி, மேலும் நுண்ணியதாகும். கடைசியில் ஜடப்பொருட்களிலிருந்து ஜடமற்றதற்குத் தாண்ட வேண்டிய ஒரு கட்டம் வரும். ஜடப்பொருள் கரைந்து நுண் பொருளாகிறது, இயற்பியல் தத்துவமாக மாறுகிறது. எல்லா அறிவியல்களிலும் இதுவே நடக்கிறது. நமது சமுதாயம், நமது பரஸ்பர உறவு, நமது மதம், நமது நீதிநெறி என்று நம்மிடம் உள்ள எல்லாவற்றிலும் இதுவே நடக்கிறது.

பயனை மட்டும் கருத்தில் கொண்டதான ஒரு நீதிநெறியை வகுப்பதற்கான முயற்சிகள் நடைபெறுகின்றன. பகுத்தறிவுக்கு ஏற்புடைய அத்தகைய ஒரு நெறியை உருவாக்குங்கள் என்று நான் சவால் விடுகிறேன். பிறருக்கு நன்மை செய். ஏன்? ஏனெனில் அதில் உங்களுக்கு அதிக நன்மை இருக்கிறது என்று சொல் கிறீர்கள். 'நான் இந்தப் பயனைப்பற்றிக் கவலைப்படவில்லை;

நான் மற்றவர்களின் கழுத்தை அறுத்தாவது பணக்காரன் ஆக விரும்புகிறேன்' என்று ஒருவன் சொல்வதாக வைத்துக் கொள்வோம். நீங்கள் என்ன பதில் சொல்வீர்கள்? உங்கள் பயன்நோக்கு வாதத்தால் அந்த வாதத்தையே அவன் மட்டம்தட்டிவிட்டான்.

ஆனால் உலகத்திற்கு நன்மை செய்வதால் எனக்கு என்ன லாபம்? பிறர் மகிழ நான் நாயாக உழைப்பதற்கு நான் என்ன மடையனா? சமுதாயத்தை விட்டால் அறிவுள்ளது வேறெதுவும் கிடையாது, ஐம்புலன்களை விட்டால் உலகில் வேறு ஒரு சக்தியும் கிடையாது என்றால், நான் ஏன் மகிழ்ச்சியாக இருக்கக் கூடாது? என் சகோதரர்களின் கழுத்தை அறுப்பதால் நான் மகிழ்ச்சியாக இருப்பேன் என்றால், போலீசிடமிருந்தும் என்னால் தப்பித்துக் கொள்ளலாம் என்றால் நான் அதை ஏன் செய்யக் கூடாது? இதற்கு உங்கள் பதில் என்ன? ஏதாவது பலனை நீங்கள் காட்டியே தீர வேண்டும். மிகவும் வற்புறுத்திக் கேட்டால், 'நண்பா, நல்லவனாக இருப்பது நல்லது' என்பீர்கள். மனித உள்ளத்தில் ஏதோ ஒன்று, 'நன்மை செய்வது நல்லது' என்று சொல்கிறதே அந்தச் சக்தி எது? அந்தச் சக்திதான் ஆன்மாவின் கம்பீரமான அழகை நமக்குக் காட்டுகிறது; நல்லவனாக இருப்பதன் அழகைக் காட்டுகிறது; நல்லதன் வசீகர சக்தியைக் காட்டுகிறது; நல்லதற்கு உள்ள எல்லையற்ற சக்தியைக் காட்டுகிறது. இதைத்தான் நாம் கடவுள் என்று அழைக்கிறோம், இல்லையா?

இரண்டாவதாக, இன்னும் மென்மையான ஒரு விஷயத்தைப் பற்றிச் சிறிது பேச விரும்புகிறேன். கவனித்துக் கேளுங்கள். நான் சொல்வதைப் பற்றி எந்த அவசர முடிவுக்கும் வர வேண்டாம் என்றும் கேட்டுக் கொள்கிறேன். நாம் உலகிற்குப் பெரிதாக எந்த நன்மையும் செய்துவிட முடியாது. உலகிற்கு நன்மை செய்வது மிகவும் நல்லதுதான். ஆனால் அவ்வாறு அதிக நன்மை செய்ய நம்மால் முடியுமா? எத்தனையோ நூறு வருடங்களாக நாம் போராடி வந்திருக்கிறோமே, இந்தக் காலத்தில் உலகிற்கு நிறைய நன்மை செய்துவிட்டோமா, உலகின் மொத்த மகிழ்ச்சியை அதிகரித்துவிட்டோமா? உலகின் மகிழ்ச்சியை வளர்ப்பதற்காக நாள்தோறும் ஆயிரக்கணக்கான வழிகள் கண்டுபிடிக்கப்படுகின்றன. இது ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. நான் கேட்கிறேன், இன்று உலகில் உள்ள மகிழ்ச்சி ஒரு நூற்றாண்டிற்கு முன்னர் இருந்ததைவிட அதிகமாக இருக்கிறதா? அது இயலாது.

ஏனெனில் கடலில் ஓர் இடத்தில் அலை எழுகிறது என்றால், அது இன்னோர் இடத்தில் பள்ளம் விழுவதன் காரணத்தினால் தான். ஒரு நாடு செல்வம் கொழிப்பதாகவும் ஆற்றல் மிக்கதாக வும் இருக்கிறது என்றால், அது எங்கேயோ இன்னொரு நாடு வீழ்த்தப்பட்டதன் காரணமாகத்தான் இருக்க வேண்டும். கண்டு பிடிக்கப்படுகின்ற ஒவ்வோர் எந்திரமும் இருபது பேரைப் பணக்காரர்களாக்கும், அதேவேளையில் இருபதாயிரம் பேரை ஏழைகளாக்கும். போட்டியின் நியதியே இதுதான். ஆற்றலின் மொத்தம் எப்போதும் ஒரே அளவாகத்தான் உள்ளது. துன்பம் இல்லாமல் இன்பம் இருக்க முடியும் என்று சொல்வது நியாய மற்றது, அந்த முயற்சி ஓர் அசட்டுத் துணிச்சலும்கூட. இந்தச் சாதனங்களை அதிகரிப்பதன்மூலம் நீங்கள் உலகின் தேவை களை அதிகரிக்கிறீர்கள். தேவைகள் அதிகம் என்றால் தணியாத தாகம் என்று பொருள், அதைத் தீர்க்கவே முடியாது. இந்தத் தேவையை, இந்தத் தாகத்தை எது திருப்தி செய்ய முடியும்? இந்தத் தாகம் இருக்கும்வரை துன்பத்தையும் தவிர்க்க முடியாது. இன்பமும் துன்பமும் மாறிமாறி வருவதுதான் வாழ்க்கையின் இயல்பு.

நீங்கள் நன்மை செய்வதற்காகத்தான் இந்த உலகம் படைக்கப்பட்டிருக்கிறதா என்ன? உலகில் வேறு எந்தச் சக்தியும் வேலை செய்யவில்லையா என்ன? என்றும் இருப்பவரான, எல்லாம் வல்லவரான, கருணைக்கடலான, எப்பொழுதும் விழித்துக் கொண்டிருப்பவரான, உலகம் தூங்கும்பொழுதும் தூங்காதவரான, கண் இமைகள் அசையாதவரான அந்தக் கடவுள் உங்களிடமும் என்னிடமும் உலகை ஒப்படைத்து விட்டுச் செத்துப்போய் விட்டாரா என்ன? இந்தப் பரந்த ஆகாயமே அல்லவா எப்பொழுதும் திறந்துள்ள அவரது கண் ணாக உள்ளது. அவர் இறந்துவிடவில்லையே! இந்தப் பிரபஞ்சத் தில் அவர் செயல்படவில்லையா என்ன? அது இயங்கிக் கொண்டுதான் இருக்கிறது. நீங்கள் அவசரப்பட வேண்டாம், உங்களையும் வருத்தப்படுத்திக் கொள்ளவேண்டாம்.

[சுவாமிஜி இங்கு பூதம் நாய்வாலை நிமிர்த்த முயன்ற கதையைச் சொன்னார்][1]

உலகிற்கு நன்மை செய்ய விரும்பும் நம் நிலைமையும் அப்படித்தான் இருக்கிறது. ஆகையால், சகோதரர்களே, நாம்

---

1. ஞானதீபம், சுடர் 1 பக்கம் 124 பார்க்க.

எல்லோரும் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக நாயின் வாலை நிமிர்த்தவே முயன்று கொண்டிருக்கிறோம். அது வாத நோய் போன்றது. அதைக் காலிலிருந்து விரட்டுங்கள், தலைக்குப் போகும்; தலையிலிருந்து விரட்டுங்கள், உடம்பில் வேறு எங்காவது போகும்.

உலகைப்பற்றிய மிகக்கொடிய துன்பநோக்குக் கருத்து இது என்று உங்களுள் பலருக்குத் தோன்றலாம். ஆனால் அப்படியில்லை. இன்ப நோக்கு, துன்ப நோக்கு இரண்டும் தவறு. இரண்டும் எல்லைகள். சாப்பிடவும் குடிக்கவும் நிறைய இருக்கும்வரை, உடுத்த நல்ல உடைகள் இருக்கும்வரை ஒருவன் இன்ப நோக்கு உடையவன். அதே மனிதன் எல்லாவற்றையும் இழந்துவிட்டால் துன்ப நோக்கு உடையவனாகி விடுகிறான். பணத்தையெல்லாம் இழந்து ஏழையாகிப் பரிதவிக்கும்போது தான் மனிதகுலச் சகோதரத்துவக் கருத்து அவனிடம் தீவிரமாகத் தோன்றும். இதுதான் உலகம். பல நாடுகளைப் பார்க்கப்பார்க்க, எனக்கு வயது ஆகஆக நான் இன்ப நோக்கு, துன்பநோக்கு இரண்டு எல்லைகளையும் தவிர்க்க விரும்புகிறேன். இந்த உலகம் நல்லதும் அல்ல, தீயதும் அல்ல. இது கடவுளின் உலகம். இது நன்மைக்கும் தீமைக்கும் அப்பாற்பட்டது, தன்னளவில் பரிபூரணமானது.

இத்தகைய பல காட்சிகளைக் காட்டியவாறு கடவுளின் சங்கல்பம் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. தொடக்கமும் முடிவும் இல்லாமல் இது நடந்துகொண்டே இருக்கும். இது ஓர் பயிற்சிக்கூடம். இங்கு நீங்களும் நானும் இன்னும் கோடிக் கணக்கான உயிர்களும் வந்து, பயிற்சி செய்து, தங்களை உறுதியானவர்களாக, பூரணமானவர்களாக ஆக்கிக்கொள்ள வேண்டும். அதற்காகத்தான் இது இருக்கிறது.

ஒரு பரிபூரணமான பிரபஞ்சத்தைக் கடவுளால் படைக்க முடியாது என்றோ, உலகின் துயர்களை அவரால் துடைக்க முடியாது என்றோ அல்ல. ஓர் இளம் பெண்ணும் ஒரு பாதிரியும் தொலைநோக்கிமூலம் சந்திரனைப் பார்த்த கதை உங்களுக்குத் தெரியும் என்று நினைக்கிறேன். சந்திரனில் இருந்த சில புள்ளி களைப் பார்த்துவிட்டுப் பாதிரி, 'அவை ஏதோ சர்ச்களின் முகடுகளாக இருக்க வேண்டும்' என்று சொன்னார். 'என்ன முட்டாள்தனம்! அது இளம் காதலர்கள் முத்தமிடும் காட்சி' என்றாள் அந்தப் பெண். இந்த உலகைப் பொறுத்தவரையிலும் நாம் இதைத்தான் செய்துகொண்டிருக்கிறோம். நாம் உள்ளே

இருக்கும்போது, உள்ளே இருப்பதைப் பார்ப்பதாக நினைக் கிறோம். வாழ்க்கையின் எந்தத் தளத்தில் நாம் இருக்கிறோமோ அதற்கேற்பத்தான் பிரபஞ்சத்தைக் காண்கிறோம்.

சமையலறையில் உள்ள தீ நல்லதும் அல்ல, தீயதும் அல்ல. அந்தத் தீ சமைக்க உதவும்போது அதனை வாழ்த்துகிறீர்கள்; 'ஆகா, இது எவ்வளவு நல்லது' என்று சொல்கிறீர்கள். அது உங்கள் விரலைச் சுடும்போது, 'இந்தத் தீ எவ்வளவு கொடியது' என்கிறீர்கள். அவ்வாறே இந்தப் பிரபஞ்சம் நல்லதும் அல்ல, தீயதும் அல்ல. இதுதான் சரியான, நியாயமான கருத்து. உலகம் எப்படி இருக்கிறதோ அப்படித்தான் இருக்கும். உலகின் செயல் நமக்கு நன்மை பயக்கும் வகையில் நாம் நடந்துகொண்டால் அதை நல்லது என்கிறோம். நமக்கு அது தீமை பயக்கும்படியாக நாம் நடந்துகொண்டால் அது தீயது என்கிறோம். கபடமில்லாத வர்களாக, யாருக்குமே துன்பம் விளைவிக்க விரும்பாதவர் களாக, மகிழ்ச்சியாக இருக்கும் குழந்தைகள் இன்ப நோக்கு உடையவர்களாக இருப்பதைக் காண்பீர்கள். அவர்கள் இன்பக் கனவு கண்டுகொண்டிருப்பார்கள். இதயத்தில் எத்தனையோ ஆசைகளைச் சுமந்துகொண்டு, அவற்றை நிறைவேற்ற வழி தெரியாமல் தவிக்கின்ற வயதானவர்கள், குறிப்பாக, வாழ்க்கை யில் அதிகமாக அடிபட்டு, அங்குமிங்குமாகப் பந்தாடப்பட்ட வர்கள் மிகவும் துன்பநோக்கு உடையவர்களாக இருப்பார்கள். மதம் உண்மையை அறிய விரும்புகிறது. இந்த உண்மையைப் பற்றிய அறிவில்லாவிட்டால், வாழ்க்கை வாழத் தகுதியற்றது என்பதுதான் அது முதலில் கண்டுபிடித்தது.

அப்பால் என்ன இருக்கிறது என்பது தெரியாவிட்டால் வாழ்வு ஒரு பாலைவனம், மனித வாழ்க்கை வீணே. இப்பொழுது உள்ளதைக் கொண்டு திருப்தியாக இருங்கள் என்று சொல்வது எளிது. பசுக்களும் நாய்களும் எல்லா மிருகங்களும் அப்படித் தான் இருக்கின்றன. அதனால்தான் அவை மிருகங்களாக இருக் கின்றன. மனிதன் இப்போது உள்ளதைக் கொண்டு திருப்தி அடைந்து, அப்பால் என்ன இருக்கிறது என்று தேடுவதை விடு வானானால், அவன் பழையபடி மிருக நிலைக்கே போக நேரும். மதம்தான், அப்பால் என்ன இருக்கிறது என்ற தேடல் தான் மனிதனுக்கும் மிருகத்திற்கும் உள்ள வேறுபாடு. இயற்கை யாக மேலே பார்க்கின்ற ஒரே மிருகம் மனிதன்தான் என்றும் மற்ற மிருகங்கள் எல்லாம் கீழே பார்க்கின்றன என்று சரியாகத் தான் சொல்லப்பட்டிருக்கிறது. மேலே பார்ப்பது, மேலே

போவது, நிறைநிலையைத் தேடுவது இவற்றுக்குத்தான் முக்தி என்று பெயர். எவ்வளவு விரைவாக மனிதன் மேலே போகிறானோ, அவ்வளவு சீக்கிரம் அவன் அந்த உண்மை என்னும் முக்தி நிலைக்கு உயருகிறான். இது உங்கள் சட்டைப் பையில் இருக்கும் காசையோ, நீங்கள் உடுத்தியிருக்கும் உடையையோ, நீங்கள் குடியிருக்கும் வீட்டையோ பொறுத்தது அல்ல; உங்கள் மூளையில் உள்ள ஆன்மீகச் சிந்தனைச் செல்வத்தைப் பொறுத்தது இது. மானிட முன்னேற்றத்திற்கு இதுதான் காரணம். எல்லா பௌதீக முன்னேற்றத்திற்கும் அறிவு முன்னேற்றத்திற்கும் இதுதான் ஆதாரம். மனித இனத்தைத் தூண்டி, முன்னுக்குச் செல்லுமாறு அதற்கு உற்சாகம் கொடுப்பதும் இதுவே.

மனித குலத்தின் லட்சியம்தான் என்ன? இன்பமா, புலன் நுகர்ச்சியா? சொர்க்கத்தில் எக்காளத்தை ஊதிக்கொண்டு அரியணையைச் சுற்றி வாழ்வார்கள் என்று பழங்காலத்தில் கூறப்பட்டது. தற்காலத்தில் இந்த லட்சியம் போதாது என்று கருதி அதை இன்னும் விரிவுபடுத்தியிருக்கிறார்கள், அங்கே திருமணங்களும் நடக்குமாம். இது ஒரு விரிவுபடுத்தல் என்றால் அது மோசமான விரிவுபடுத்தல் என்றுதான் சொல்ல வேண்டும்.

சொர்க்கத்தைப்பற்றிக் கூறப்படுகின்ற பலவிதமான கருத்துக்களும் மனத்தின் பலவீனத்தைத்தான் காட்டுகின்றன. அந்தப் பலவீனம் இதுதான்: முதலில் புலனின்பம்தான் வாழ்க்கையின் லட்சியம் என்று நினைக்கிறார்கள். இரண்டாவதாக, ஐந்து புலன்களுக்கும் அப்பால் அவர்களால் எதையும் எண்ணிப் பார்க்க முடியவில்லை. பயன்நோக்குவாதிகளைப் போல் இவர்களுடைய கருத்தும் அப்படியே நியாயமற்றது. ஆனால் தற்காலத்திலுள்ள நாத்திகப் பயன்நோக்குவாதிகளைவிட இவர்கள் எவ்வளவோ பரவாயில்லை. கடைசியாக, இந்தப் பயன்நோக்குவாதிகள் கூறுவது குழந்தைத்தனமானது. 'இது எங்கள் அளவுகோல். உலகம் முழுவதும் இதன்படிதான் இயங்கவேண்டும்' என்று சொல்ல இவர்களுக்கு என்ன உரிமை இருக்கிறது? வெறும் உணவும் பணமும் உடையும்தான் கடவுள் என்று போதிக்கின்ற உங்கள் அளவுகோலைக் கொண்டுதான் ஒவ்வோர் உண்மையும் தீர்மானிக்கப்பட வேண்டும் என்று சொல்ல உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?

மதம் உணவை உட்கொண்டு உயிர் வாழ்வதில்லை, ஒரு வீட்டிலும் வசிப்பதில்லை. 'மதத்தினால் என்ன நன்மை? அது

ஏழைகளின் வறுமையைப் போக்குமா? அவர்களுக்கு நிறைய ஆடைகள் கொடுக்குமா?' என்று திரும்பத்திரும்ப மறுப்புக்கள் எழுப்பப்படுவதை நீங்கள் கேட்கிறீர்கள். அவற்றைச் செய்ய முடியவில்லை என்றால் அதனால் மதம் உண்மையல்ல என்று ஆகிவிடுமா? நீங்கள் ஒரு வானியல் கோட்பாட்டை விளக்கிக் கொண்டிருக்கும்போது ஒரு குழந்தை, 'அதனால் மிட்டாய் கிடைக்குமா?' என்று கேட்கிறது. 'இல்லை, கிடைக்காது' என்றுதான் நீங்கள் பதில் அளிப்பீர்கள். 'அப்படியானால் அது பயனற்றது' என்று குழந்தை சொல்லும். தங்கள் நிலையிலிருந்துதான் உலகம் முழுவதையும் குழந்தைகள் பார்க்கின்றன; அதாவது, அவை மிட்டாய் கொடுக்குமா என்பதுதான் அவர்களது கேள்வி. இந்த உலகக் குழந்தைகளும் அதையேதான் செய்கின்றன. வருத்தம் என்னவென்றால், பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியான இந்தக் காலத்தில் இந்தக் கூட்டமே படித்தவர்கள், பகுத்தறிவாளர்கள், தர்க்க ரீதியானவர்கள், மிகவும் புத்திசாலிகள் என்றெல்லாம் கருதப்படுவதுதான்!

உயர்ந்தவற்றை நமது கீழான தரங்களைக் கொண்டு தீர்மானிக்கக் கூடாது. எதையும் அதன் அளவுகோலைக் கொண்டுதான் அளக்க வேண்டும். எல்லையற்றதை எல்லையற்றதால்தான் அளக்க வேண்டும். மதம் மனிதனின் வாழ்க்கை முழுவதையும் ஊடுருவி நிற்கிறது; நிகழ்காலத்தை மட்டும் அல்ல, இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் அனைத்தையும் ஊடுருவி நிற்கிறது. அழியாத ஆன்மாவிற்கும், அழியாத கடவுளுக்கும் உள்ள நிரந்தரத் தொடர்பே அது. மனித வாழ்க்கையின்மீது அதன் ஐந்து நிமிடப் பாதிப்பைக் கொண்டு அதை அளப்பது நியாயமாகுமா? நிச்சயமாக நியாயமில்லை. ஆனால் இவையெல்லாம் எதிர்மறை வாதங்கள்.

இப்போது, 'மதத்தால், உண்மையில் எதையாவது சாதிக்க முடியுமா?' என்ற கேள்வி எழுகிறது. அதனால் முடியும்.

உண்மையிலேயே மதம் உணவையும் உடைகளையும் கொடுக்க முடியுமா? முடியும். கொடுக்கிறது, எப்போதும் அது கொடுத்து வந்திருக்கிறது. இதைவிட எல்லையற்ற மடங்கு சிறந்தவற்றையும் அதனால் தர முடியும், அழிவற்ற வாழ்க்கையை அது மனிதனுக்குக் கொடுக்கிறது. மனிதனுக்கு அவனது இன்றைய நிலையைக் கொடுத்தது அதுதான், இந்த மிருக மனிதனைத் தெய்வமாக்கப்போவதும் அதுதான். மதம் செய்யக் கூடியது இதுதான். மனித சமுதாயத்திலிருந்து மதத்தை

எடுத்துவிடுங்கள், என்ன மிஞ்சும்? மிருகங்கள் நிறைந்த காடுதான்.

மனித குலத்தின் குறிக்கோள் புலனின்பம்தான் என்று கொள்வது அபத்தம் என்று நான் விளக்க முயன்றேன். ஆதலால் அறிவுதான் வாழ்க்கை லட்சியம் என்று முடிவாகிறது. ஆயிரக் கணக்கான ஆண்டுகளாகப் போராடியும் உண்மையைத் தேடுவதிலும் சரி, உலகத்திற்கு நன்மை செய்வதிலும் சரி நாம் அப்படியொன்றும் பெரிதாகச் சாதித்துவிடவில்லை என்பதை விளக்க முயன்றேன்.

ஆனால் மனிதகுலம் அறிவில் மாபெரும் முன்னேற்றம் அடைந்துள்ளது. இந்த முன்னேற்றத்தின் மிகப் பெரிய பயன் மனிதனின் வசதிகளை அதிகரிப்பதில்லை, மிருக மனிதனிலிருந்து ஒரு தெய்வத்தை உருவாக்குவதிலேயே உள்ளது.

அறிவின் காரணமாக இயல்பாகவே இன்பம் விளைகிறது. கிடைக்க முடிந்தவற்றுள் மிகப் பெரியது புலனின்பம்தான் என்று குழந்தைகள் நினைக்கின்றன. புலனின்பத்தை விட நுண்ணிய இன்பமான அறிவின்பம் மனிதனில் உள்ளது என்பது உங்களில் பலருக்கும் தெரியும். ஒரு நாய் சாப்பிடுவதில் அடையும் இன்பத்தை நாம் அடைய முடியாது. இதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். மனிதனுக்கு எங்கிருந்து இன்பம் கிடைக்கிறது? பன்றியோ நாயோ உலகையே மறந்து சாப்பிடும் போது அவற்றிற்குக் கிடைக்கிறதே, அந்த இன்பம் மனிதனுக்கு இல்லை. பன்றி எப்படிச் சாப்பிடுகிறது என்று கவனியுங்கள். அது சாப்பிடும்போது பிரபஞ்சத்தையே மறந்துவிடுகிறது, அதன் உயிரே அந்த உணவில்தான் இருக்கிறது. அது கொல்லப் படலாம், ஆனால் உணவு இருக்கும்போது அது வேறு எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. அந்தப் பன்றி பெறுகின்ற பேரின்பத்தை எண்ணிப் பாருங்கள். மனிதனுக்கு அது கிடைப்பதில்லை. அது எங்கே போயிற்று? மனிதன் அதை அறிவின்பமாக மாற்றி விட்டான். மதச் சொற்பொழிவுகளைக் கேட்டுப் பன்றி இன்புற முடியாது. இது அறிவின்பத்தைவிட ஒரு படி உயர்ந்தது; அதுவே ஆன்மீக தளம், தெய்வீக விஷயங்களில் ஆன்மீக இன்பம் காண்பது, தர்க்கத்தையும் அறிவையும் கடந்து அப்பால் திளைப்பது. அதை அடைய வேண்டுமானால் நாம் புலனின்பங்களை விடவேண்டும். இதுதான் மிக உயர்ந்த பலன். நான் இன்புறுவதும் எல்லாரும் இன்புறுவதும்தான் பலன். அதைத்தான் நாம் நாடுகிறோம்.

மிருகம் புலன்களின்மூலம் இன்புறுவதைவிட மனிதன் அறிவின்மூலம் அதிகம் இன்புறுவதை நாம் காண்கிறோம். மனிதன் தன் அறிவுஇயல்பில் இன்புறுவதைவிட ஆன்மீக இயல்பில் அதிகம் இன்புறுகிறான். ஆகவே மிகவுயர்ந்த அறிவு ஆன்மீக அறிவாகத்தான் இருக்க வேண்டும். இந்த அறிவின் காரணமாகப் பேரின்பம் விளைகிறது. இந்த உலகின் பொருட்கள் எல்லாம் அந்த உண்மையறிவு மற்றும் பேரின்பத்தின் நிழல்கள், அவற்றின் மூன்றாந்தரமான அல்லது நாலாந்தரமான வெளிப்பாடுகள் மட்டுமே.

மனித குலத்தை நேசிக்கும்போது இந்தப் பேரின்பமே உங்களுக்குக் கிடைக்கிறது. இந்த ஆன்மீக இன்பத்தின் நிழல் தான் மனித அன்பு. இதை அந்தப் பேரின்பத்துடன் குழப்பிக் கொள்ளாதீர்கள். இதுதான் பெரிய தவறு: நமது இந்தச் சிறு அன்பை, காமம் கலந்த அன்பை, மனித அன்பை, அற்ப விஷயங்களில் நாம் கொள்கின்ற பற்றை, சமுதாயத்தில் வாழ்கின்ற மனிதர்களிடம் நாம் கொள்கின்ற மின்வெட்டுப் போன்ற கவர்ச்சியைத் தவறாக அந்த ஆன்மீக இன்பம் என்று கொள்கிறோம். அழிவற்ற நிலை அல்லாத ஒன்றை அழிவற்ற நிலை என்று எண்ணத் தலைப்படுகிறோம், அது தவறு. ஆங்கிலத்தில் வேறு சொல் கிடைக்காமையால் அதை bliss (பேரானந்தம்) என்று அழைக்கிறேன். இதுவே அழிவற்ற அறிவு. இதுவே நமது லட்சியம்.

உலகம் முழுவதும் எங்கெல்லாம் மதங்கள் இருந்தாலும் சரி, இனி தோன்றுமானாலும் சரி அவையெல்லாம் ஒரே மூலத்திலிருந்துதான் தோன்றின, இனியும் அப்படித்தான் தோன்றும். அதுதான் மேலைநாடுகளில் நீங்கள் கூறும் ஆன்மப் பேருணர்வு (Inspiration). பல நாடுகளில் இதற்குப் பல பெயர்கள் சொல்கிறார்கள்.

ஆன்மப் பேருணர்வு என்றால் என்ன? மத அறிவுக்கான ஒரே மூலம் இந்த ஆன்மப் பேருணர்வுதான். மதம் புலன்களுக்கு அப்பாற்பட்ட தளத்தைச் சேர்ந்தது என்று பார்த்தோம். அது 'கண்களால் பார்க்க முடியாதது, காதுகளால் கேட்க முடியாதது, மனத்தினால் எட்ட முடியாதது, வார்த்தைகளால் விவரிக்க முடியாதது.' அதுதான் மதத்தின் செயல்படுதளம், லட்சியம்; அங்கிருந்துதான் நாம் ஆன்மப் பேருணர்வு என்று அழைப்பது வருகிறது. ஆகவே புலன்களுக்கு அப்பால் செல்ல ஏதாவது வழி இருந்தாக வேண்டும் என்று ஆகிறது. நம்முடைய

பகுத்தறிவு, புலன்களுக்கு அப்பால் செல்ல முடியாது என்பது முற்றிலும் உண்மை. நமது பகுத்தறிவெல்லாம் புலன்களுக்கு உட்பட்டது, புலன்களுக்குக் கிடைக்கின்ற தகவல்களைப் பொறுத்தது. ஒரு மனிதனால் புலன்களுக்கு அப்பால் போக முடியுமா? அறிய முடியாததை மனிதன் அறிய முடியுமா? இதைக் கொண்டுதான் மதத்தை நாம் தீர்மானிக்க முடியும்; அப்படித்தான் தீர்மானிக்கப்பட்டு வந்துள்ளது. தொன்று தொட்டே புலன்களுக்குத் தடையாக அந்த ஊடுருவ முடியாத சுவர் இருந்து வந்திருக்கிறது. தொன்றுதொட்டே கோடிக் கணக்கான ஆண்களும் பெண்களும் அப்பால் என்ன இருக் கிறது என்பதைத் தெரிந்துகொள்வதற்காக அந்தச் சுவரில் முட்டிக்கொண்டுள்ளனர். லட்சக்கணக்கானோர் தோல்வி கண்டனர், லட்சக்கணக்கானோர் வெற்றி பெற்றனர். இதுதான் உலகின் வரலாறு. யாருமே வெற்றி பெறவில்லையென்று இன்னும் லட்சக்கணக்கானோர் நினைக்கிறார்கள். இவர்கள் தான் இன்றைய சந்தேகவாதிகள். முயற்சி செய்தால் மனிதன் இந்தச் சுவருக்கு அப்பால் செல்ல முடியும்.

விவேகம் மட்டும் என்றல்ல, புலன்கள் மட்டும் என்றல்ல, புலன்களுக்கு அப்பாற்பட்ட பல விஷயங்கள் அவனில் உள்ளன. இதைச் சற்று விரிவாகப் பார்ப்போம். அது உங்களிடமும் இருக்கிறது என்று நீங்கள் உணர்வீர்கள் என்று நான் நம்பு கிறேன். நான் என் கையை அசைக்கிறேன். என் கையை அசைப் பதை நான் உணர்கிறேன், அறிகிறேன். அதை நான் உணர்வு என்று அழைக்கிறேன். என் கையை நான் அசைக்கிறேன் என்ற உணர்வு எனக்கு இருக்கிறது. என் இதயம் இயங்கிக் கொண் டிருக்கிறது, ஆனால் அந்த உணர்வு எனக்கு இல்லை. இதயத்தை இயக்குவது யார்? என் கையை இயக்கிய அதே நபராகத்தான் இருக்க வேண்டும். எனவே கையை அசைக்கவும் பேசவும் செய்கின்ற அந்த நபர் உணர்வுடனும் செயல்படுகிறார், உணர் வின்றியும் செயல்படுகிறார். ஆகவே இந்த நபர் இரண்டு தளங் களில் செயல்பட முடியும் என்று தெரிகிறது—உணர்வுத்தளம் ஒன்று, அதற்குக் கீழ் உள்ள உணர்வறு தளம் இன்னொன்று. உணர்வறு தளத்திலிருந்து வருகின்ற தூண்டுதல்களை இயல்புணர்ச்சி என்கிறோம்; உணர்வுத் தளத்திலிருந்து வரும் தூண்டுதல்களைப் பகுத்தறிவு என்கிறோம்.

இதற்கும் உயர்ந்த தளம் ஒன்று உள்ளது, அதுதான் உணர்வு கடந்த நிலை. இது உணர்வு நிலைக்கு அப்பாற்பட்டது

ஆகையால் உணர்வறு நிலையைப் போலவே தோன்றும். இது உணர்வு நிலைக்கு மேம்பட்ட நிலை, அதற்குக் கீழ்ப்பட்ட நிலையல்ல. இது இயல்புணர்ச்சி அல்ல, இது ஆன்மப் பேருணர்வு. இதற்கு நிரூபணம் உள்ளது. இதுவரை உலகம் தோற்றுவித்துள்ள தீர்க்கதரிசிகளையும் ரிஷிகளையும் பாருங்கள். அவர்கள் சிலவேளைகளில், வாழ்க்கையின் சில கணங்களில் வெளியுலகைப் பற்றிய உணர்வே இல்லாததுபோல் இருந்திருக்கிறார்கள். தொடர்ந்து அவர்களிடமிருந்து வந்த எல்லா அறிவும் அவர்கள் அந்த நிலையில் இருந்தபோதுதான் கிடைத்தது என்று அவர்கள் பின்னர் சொல்லியிருக்கிறார்கள். சாக்ரடீஸைப் பற்றி ஒரு தகவல் உண்டு. அவர் படையுடன் சென்று கொண்டிருந்தபோது அழகிய சூரிய உதயத்தைப் பார்த்தார். அது அவரது மனத்தில் ஓர் எண்ணத் தொடரை எழுப்பியது. இரண்டு நாள் உலக நினைவேயின்றி அவர் அங்கே அப்படியே நின்றார். சாக்ரடீஸ் பின்னர் உலகிற்குக் கொடுத்த அறிவு இத்தகைய நிலையிலிருந்துதான் அவருக்குக் கிடைத்ததாம். குருமார்கள், தீர்க்கதரிசிகள் போன்றோர் தங்கள் வாழ்க்கையில் குறிப்பிட்ட சில நேரங்களில் உணர்வு நிலையிலிருந்து அதற்கும் மேற்பட்ட நிலைக்குச் சென்றுள்ளார்கள். அவர்கள் திரும்ப உணர்வு நிலைக்கு வரும்போது ஒளியுடன் வருகிறார்கள், அப்பாலுள்ள அந்த நிலையிலிருந்து நமக்குச் செய்திகள் கொண்டு வருகிறார்கள். அவர்களே ஆன்மப் பேருணர்வு பெற்ற தீர்க்கதரிசிகள்.

ஆனால் ஒரு பேரபாயம் இருக்கிறது. தாம் ஆன்மப் பேருணர்வு பெற்றுள்ளதாக யாரும் சொல்லலாம், பலர் அப்படிச் சொல்லவும் செய்கிறார்கள். இதை எப்படிக் கண்டு பிடிப்பது? தூக்கத்தின்போது நாம் உணர்வறு நிலையில் இருக்கிறோம். மூடன் தூங்கப் போகிறான், மூன்று மணி நேரம் அயர்ந்து தூங்குகிறான், எழும்போது அதே மூடனாகத்தான் இருக்கிறான், இன்னும் மோசமாகவும் இருக்கக்கூடும். ஆனால் நாசரேத்தின் ஏசு உருமாற்றத்திற்குள் (transfiguration)செல்கிறார், வெளிப்படும்போது ஏசு கிறிஸ்துவாக வெளிப்படுகிறார். வேறுபாடு அவ்வளவே. ஒன்று ஆன்மப் பேருணர்வு, இன்னொன்று இயல்புணர்ச்சி; ஒன்று குழந்தை, இன்னொன்று அனுபவம் மிகுந்த முதியவர். இந்த ஆன்மப் பேருணர்வை நாம் ஒவ்வொருவரும் பெறலாம். எல்லா மதங்களுக்கும் அதுதான் ஆதாரம், எல்லா உயர் அறிவுக்கும் அதுதான் ஆதாரமாக இருக்கும்.

இருக்கும் பாதையில் சில அபாயங்கள் உள்ளன. சில வேளைகளில் போலிப் பேர்வழிகள் மக்களை ஏமாற்றப் பார்ப்பதுண்டு. இன்று இது மிகவும் அதிகமாகிக் கொண்டிருக்கிறது. என் நண்பர் ஒருவரிடம் அழகிய படம் ஒன்று இருந்தது. சிறிது மத நம்பிக்கை உள்ளவரான ஒரு பணக்காரர் அந்தப் படத்தின் மீது கண்ணாக இருந்தார். ஆனால் என் நண்பர் படத்தை விற்கவில்லை. ஒருநாள் அந்தப் பணக்காரர் வந்து என் நண்பரிடம், 'எனக்கு ஆன்மப் பேருணர்வு வந்தது, தெய்வத்திடமிருந்து எனக்கு ஒரு செய்தி வந்துள்ளது' என்று சொன்னார். 'என்ன செய்தி?' என்று கேட்டார் நண்பர். 'அந்தப் படத்தை நீங்கள் எனக்குக் கொடுக்க வேண்டும் என்பதுதான் செய்தி' என்றார் அவர். என் நண்பர் புத்திசாலி. அவர் உடனே, 'என்ன ஆச்சரியம்! எனக்கும் அதேதான் நிகழ்ந்தது, அந்தப் படத்தை உங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்று எனக்கும் செய்தி வந்தது. சரி, காசோலையைக் கொண்டு வந்தீர்களா?' என்று கேட்டார். 'காசோலையா, எந்தக் காசோலை?' என்றார் அவர். 'ஓ உங்களுக்கு வந்த பேருணர்வு சரியில்லையென்று நினைக்கிறேன். ஒரு லட்சம் டாலர் கொண்டு வருபவருக்குப் படத்தைக் கொடுக்கும்படிதான் எனக்குச் செய்தி வந்தது. எனவே முதலில் காசோலையைக் கொண்டு வாருங்கள்' என்றார் என் நண்பர். பணக்காரர், தாம் அகப்பட்டுக்கொண்டோம் என்று தெரிந்து, பேருணர்வுப் பிதற்றலை விட்டுவிட்டார்.

இவைதான் அபாயங்கள். பாஸ்டனில் ஒருவன் என்னிடம் வந்து, தனக்குக் காட்சிகள் கிடைத்ததாகவும், யாரோ தன்னுடன் இந்திய மொழியில் பேசியதாகவும் சொன்னான். 'அதைப் பார்த்தால்தான் நான் நம்புவேன்' என்றேன் நான். உடனே அவன் ஏதேதோ எழுதிக் காட்டினான், அத்தனையும் பிதற்றல்கள். எனக்குத் தெரிந்தவரை இத்தகைய மொழி இந்தியாவில் இருந்ததும் இல்லை, இருக்கப்போவதும் இல்லை, அந்த மொழியைப் பேசுவதற்குரிய நாகரீகத்தை இந்தியர்கள் இன்னும் அடையவில்லை என்று அவனிடம் சொன்னேன். நான் ஒரு போக்கிரி, சந்தேகவாதி என்று நினைத்துக்கொண்டு போயிருப்பான் அவன். அவன் எங்காவது ஒரு பைத்தியக்கார விடுதியில் இருக்கிறான் என்று கேள்விப்பட்டால் ஆச்சரியப் படுவதற்கில்லை.

இவைதான் இரண்டுவகையான அபாயங்கள்—ஏமாற்றுப் பேர்வழிகளால் ஏற்படும் அபாயம், முட்டாள்களால் வரும்

அபாயம். இவற்றைக் கண்டு நாம் நின்றுவிட வேண்டாம். ஏனெனில் எல்லா பெரிய காரியங்களும் அபாயங்கள் சூழ்ந்த தாகவே உள்ளன. இருந்தும் நாம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

சிலவேளைகளில் துளிக்கூட நியாயமில்லாமல் பேசுபவர் களையும் நான் கண்டிருக்கிறேன். ஒருவன் வந்து, 'இன்ன தெய்வத்திடமிருந்து எனக்கு இன்ன செய்தி வந்திருக்கிறது, உங்களால் இதை மறுக்க முடியுமா? அந்தத் தெய்வம் இருக்க முடியாதா, அந்தச் செய்தியை அவர் அனுப்பவில்லையா, அவரால் அனுப்பத்தான் இயலாதா?' என்று கேட்பான். நூற்றுக்குத் தொண்ணூறு முட்டாள்களும் அதை அப்படியே ஏற்றுக் கொள்வார்கள், அது சரியாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைப்பார்கள்.

உலகில் எதுவும் நடக்க வாய்ப்பு உண்டு என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டும், அடுத்த ஆண்டே பூமி ஒரு நட்சத்திரத்துடன் மோதி தூள்தூளாக உடைந்து போகலாம். 'அதை நிரூபி' என்று கேட்க உங்களுக்கு உரிமை உண்டு. வக்கீல்கள் சொல்வதுபோல், சொல்பவனே நிரூபிக்கவும் வேண்டும். ஒரு தெய்வத்திடமிருந்து எனக்குச் செய்தி வந்தது என்று நான் சொன்னால் அதை நிரூபிக்க வேண்டியது உங்கள் கடமை அல்ல, நான்தான் அதை நிரூபிக்க வேண்டும். ஏனெனில் நான்தான் அதைச் சொன்னேன். நிரூபிக்க முடியவில்லை யென்றால் நான் வாயை மூடிக்கொண்டிருப்பது நல்லது.

இந்த இரண்டு அபாயங்களையும் தவிர்த்துவிட்டு நீங்கள் என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள். நம்மில் பலருக்கும் செய்திகள் கிடைக்கின்றன, அல்லது செய்திகள் கிடைப்பதாக நினைக்கவாவது செய்கிறோம். அந்தச் செய்திகள் உங்களைப் பற்றியுள்ளவரையில் உங்கள் விருப்பப்படிச் செய்யுங்கள். ஆனால் அது பிறருடன் உங்களுக்குள்ள தொடர்பைப் பற்றியும் அணுகுமுறையைப் பற்றியும் இருந்தால் அதைச் செயல்படுத்து முன் நூறு தடவை சிந்தியுங்கள். அப்பொழுது உங்களுக்கு அபாயம் இல்லை.

மதத்திற்கு இந்த ஆன்மப் பேருணர்வுதான் ஆதாரம். ஆனால் அது பல அபாயங்களால் சூழப்பட்டுள்ளதைக் கண் டோம். மிகவும் மோசமான அபாயம் என்னவென்றால் மிகைப் படுத்திச் சொல்வதுதான். சிலர் வரிந்துகட்டிக் கொண்டு, தாங்கள் தெய்வத்திடமிருந்து செய்தி கொண்டு வந்திருப்ப

தாகவும், தெய்வம் தங்கள் மூலம் மட்டுமே செய்தி அனுப்புவார் என்றும், வேறு யாருக்கும் அந்த உரிமை இல்லை என்றும் சொல்கிறார்கள். இது அபத்தம் என்பது கண்கூடாகத் தெரிகிறது. பிரபஞ்சத்தில் எது இருந்தாலும் சரி அது பிரபஞ்சம் தழுவியதாக இருக்க வேண்டும். அப்படி இல்லாத ஓர் அசைவு கூடப் பிரபஞ்சத்தில் இல்லை. ஏனெனில் பிரபஞ்சம் முழுவதும் நியதிகளால் ஆளப்படுகிறது. அது முற்றிலும் ஓர் ஒழுங்கு முறையுடன் இயங்குகிறது, முழுவதும் இயைபுடன் உள்ளது. ஆகவே ஓர் இடத்தில் உள்ளது எங்கும் இருக்க வேண்டும். மிகப் பெரிய சூரியனும் நட்சத்திரங்களும் எத்தகைய அமைப்பில் உள்ளனவோ, அதே அமைப்பில்தான் ஒவ்வோர் அணுவும் உள்ளது. ஒருவன் ஆன்மப் பேருணர்வு பெற்றான் என்றால் எல்லோருக்கும் அதனைப் பெறுவதற்கான வாய்ப்பு உண்டு. அதுதான் மதம்.

இந்த அபாயங்கள், மாயைகள், மன மயக்கங்கள், போலித் தனங்கள், மிகைப்படுத்திச் சொல்வது போன்ற அனைத்தையும் தவிர்த்து, மத உண்மைகளை நேருக்குநேர் சந்தியுங்கள், மத விஞ்ஞானத்துடன் நேரிடைத் தொடர்பு கொள்ளுங்கள். எண்ணற்ற கொள்கைகளையும் கோட்பாடுகளையும் நம்புவதிலோ, சர்ச்களுக்கும் கோயில்களுக்கும் போவதிலோ, குறிப்பிட்ட சில நூல்களைப் படிப்பதிலோ மதம் இல்லை. நீங்கள் கடவுளைக் கண்டிருக்கிறீர்களா? நீங்கள் ஆன்மாவைப் பார்த்திருக்கிறீர்களா? அல்லது அதற்காகப் போராடிக் கொண்டிருக்கிறீர்களா? எதிர்காலத்திற்காகக் காத்திருக்காமல் இங்கேயே இப்போதே பார்க்க வேண்டும். எதிர்காலம் என்பது என்ன? எல்லையற்ற நிகழ்காலம்தான் அது. காலம் என்பதே என்ன? ஒவ்வொரு வினாடியாகத் திரும்பத்திரும்ப வருவதுதானே? ஆகவே மதம் இங்கேயே, இப்பொழுதே, இந்த வாழ்க்கையிலேயே உள்ளது.

இன்னும் ஒரு கேள்வி: எது லட்சியம்? மனிதன் தொடர்ந்து முன்னேறிக்கொண்டே இருக்கிறான், அவன் அடைவதற்கான நிறைநிலை என்ற லட்சியம் எதுவும் இல்லை என்று தற்காலத்தில் சொல்லப்படுகிறது. முன்னேறுகிறோமாம், நெருங்கிக் கொண்டே இருக்கிறோமாம், ஆனால் அடைவதில்லையாம்—இதன் பொருள் என்னவாக இருந்தாலும் சரி, எத்தனை அழகாக இருந்தாலும் சரி, அது அபத்தம் என்பது தெளிவு. நேர்கோட்டிலேயே சென்று கொண்டிருக்கின்ற இயக்கம் ஏதாவது

உண்டா? நேர்கோட்டை இழுத்துக்கொண்டே போனால் அது வட்டமாக முடியும், ஆரம்பித்த இடத்திற்கே திரும்ப வந்து சேரும். நீங்கள் எங்கு ஆரம்பித்தீர்களோ அங்கு வந்து சேர வேண்டும். நீங்கள் கடவுளில் ஆரம்பித்தீர்கள், மீண்டும் கடவுளையே போய்ச் சேரவும் வேண்டும். மீதி என்ன இருக்கிறது? விரிவான செயல்பாடு. நீங்கள் விடாமல் செயல்பட வேண்டும்.

இன்னும் ஒரு கேள்வி: நாம் முன்னேற முன்னேற மதத்தைப் பற்றிய புதிய உண்மைகளைக் கண்டுபிடிக்க வேண்டுமா? ஆம், இல்லை. முதலாவதாக, மதத்தைப்பற்றி இன்னும் அதிகமாக எதுவும் தெரிந்துகொள்ள முடியாது, எல்லாம் தெரிந்தாகி விட்டது. நம்முள் ஓர் ஒருமை இருக்கிறதென்று உலக மதங்கள் எல்லாமே கூறுகின்றன. அந்த வகையில் பார்த்தால், அப்படிக் கடவுளுடன் ஒன்றியிருப்பதைவிட முன்னேற்றம் ஒன்றும் இருக்க முடியாது. வேறுபாடுகளுக்குள் இந்த ஒருமையைக் காண்பதுதான் அறிவு. நான் உங்களை ஆண்களும் பெண் களுமாகக் காண்கிறேன், இது வேறுபாடு, உங்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து மனிதர்கள் என்று கூறும்போது அது விஞ்ஞான அறிவாகிறது. வேதியியலை எடுத்துக் கொள்ளுங்கள். தெரிந்த எல்லா பொருட்களையும் அவற்றின் மூலகங்களாகப் பிரிக்கவும், முடிந்தால் எந்த மூலகத்திலிருந்து மற்ற எல்லா மூலகங்களும் உருவாயினவோ அந்த மூலகத்தைக் கண்டு பிடிக்கவும் வேதியியல் அறிஞர்கள் முயன்று கொண்டிருக்கிறார்கள். அந்த ஒரே மூலகத்தைக் கண்டுபிடிக்கும் காலமும் வரலாம். அந்த மூலகமே மற்ற எல்லா மூலகங்களுக்கும் பிறப்பிடம். அதனை அடைந்த பிறகு அவர்கள் மேலே செல்ல முடியாது, வேதியியல் பூரணமாகிவிடும். மத விஞ்ஞானத்திலும் அதுபோல்தான். நம்முள் அந்தப் பூரணமான ஒருமையைக் கண்டுபிடித்துவிட்டால் அதற்குமேல் முன்னேற்றம் இல்லை. 'நானும் என் பிதாவும் ஒன்று' என்று கண்டு பிடிக்கப்பட்ட போதே, மதத்தைப்பற்றிய கடைசி வார்த்தை சொல்லியாகி விட்டது. அதற்குப் பிறகு விரிவான செயல்முறை மட்டுமே எஞ்சியுள்ளது.

குருட்டு நம்பிக்கை என்ற பொருளில் எந்த நம்பிக்கையும் உண்மையான மதத்தில் கிடையாது. எந்தப் பெரிய போதகரும் அப்படிப் போதித்ததில்லை. சீரழிவின் காரணமாகத்தான் இது நிகழ்கிறது. மூடர்கள் தாங்கள் யாராவது ஒரு பெரிய மகானின்

சீடர்கள் என்று சொல்லிக்கொண்டு, அவர்களுக்கு அதற்குரிய அதிகாரம் இல்லாவிட்டாலும்கூடக் கொள்கைகளை அப்படியே நம்பும்படி மக்களுக்கு உபதேசிக்கிறார்கள். எதை நம்புவது? கண்மூடித்தனமாக நம்புவது மனிதனைக் கீழ் நிலைக்கே கொண்டு செல்லும். வேண்டுமானால் நாத்திகர் களாக இருங்கள், ஆனால் கேள்வி கேட்காமல் எதையும் நம்பாதீர்கள். ஏன் உங்களை மிருக நிலைக்கு இழிவுபடுத்த வேண்டும்? அதனால் நீங்கள் உங்களை மட்டும் கெடுத்துக் கொள்ளவில்லை, சமுதாயத்தையும் கெடுக்கிறீர்கள், உங்கள் பின்னால் வரப்போகிறவர்களுக்கு ஆபத்தை ஏற்படுத்துகிறீர்கள்.

எழுந்து நில்லுங்கள், பகுத்தறிவுடன் பாருங்கள், கண்மூடித் தனமாக எதையும் நம்பாதீர்கள். நம்புவதல்ல மதம், மதம் என்பது இருப்பதும் ஆவதும். அதுதான் மதம். அந்த நிலையை அடைந்தால்தான் உங்களுக்கு மத உணர்வு இருக்கிறது என்று பொருள். அதற்கு முன்பு நீங்கள் மிருகங்களைவிட எந்த விதத் திலும் உயர்ந்தவர்கள் அல்ல. புத்தர் பெருமான் கூறியதுபோல், 'நீங்கள் கேட்டதை நம்பாதீர்கள், தலைமுறை தலைமுறையாக உங்களிடம் வந்த கொள்கைகள் என்பதற்காக நம்பாதீர்கள், பலர் கண்மூடித்தனமாகப் பின்பற்றுகிறார்கள் என்பதற்காக நம்பாதீர்கள், யாரோ ஒரு மகான் சொன்னார் என்பதற்காக நம்பாதீர்கள், பழக்கத்தால் உங்களுக்குப் பிடித்துப்போனவை என்பதற்காக நம்பாதீர்கள், உங்கள் ஆச்சாரியர்களும் பெரிய வர்களும் சொல்கிறார்கள் என்பதற்காக நம்பாதீர்கள். சிந்தித்துப் பாருங்கள், சீர்தூக்கிப் பாருங்கள், அதனால் வருகின்ற முடிவு பகுத்தறிவுக்கு ஒத்ததாக இருக்குமானால், அது எல்லோருக்கும் நன்மை பயக்குமானால் அதை ஏற்றுக் கொள்ளுங்கள், அதன்படிச் செல்லுங்கள்.' ❑

## 3. உலகம்தழுவிய மதத்தின் குறிக்கோள்

அது பல்வேறு மனங்களையும் வழிகளையும்
எப்படித் தழுவிக்கொள்ள வேண்டும்

நியூயார்க், 12 ஜனவரி 1896

நம் புலன்கள் எவ்வளவு தூரம் எட்டினாலும், நம் மனம் எவ்வளவு கற்பனை செய்தாலும் அங்கே இரண்டு சக்திகளின் செயல்களையும் எதிர்ச் செயல்களையும் காண்கிறோம். அவற்றுள் ஒன்று மற்றொன்றுக்கு எதிராகச் செயல்பட்டு, நம்மைச் சுற்றிலும் காணப்படுகின்ற பல்வேறு நிகழ்ச்சிகளையும் மனத்தில் நாம் உணர்கின்ற பலவிதமான உணர்ச்சிகளையும் உருவாக்கிக் கொண்டே இருக்கின்றன. புற உலகத்தில் இந்த எதிர்ச் சக்திகளின் செயல்கள் ஈர்ப்பு மற்றும் விலகல் அல்லது ஈர்க்கும் சக்தி மற்றும் விலக்கும் சக்தி என்பனவாகத் தங்களை வெளிப்படுத்திக் கொள்கின்றன; அக உலகத்தில் அன்பு, வெறுப்பு, நன்மை, தீமை என்பனவாக வெளிப்படுகின்றன. நாம் சிலவற்றை விலக்குகிறோம், சிலவற்றை ஈர்க்கிறோம். நாமும் சிலவற்றால் ஈர்க்கப்படுகிறோம், சிலவற்றால் விலக்கப் படுகிறோம். எந்தக் காரணமுமே இல்லாமல் சிலரிடம் நமக்கு ஒரு கவர்ச்சி ஏற்படுவதை வாழ்க்கையில் பல நேரங்களில் காண்கிறோம். அதுபோல் சிலரைக் கண்டாலே வெறுப்பாக இருப்பதையும் உணர்கிறோம்.

இது எல்லோருக்கும் பொருந்தும். செயல்பாட்டுத் துறை உயர உயர இந்த எதிர்ச் சக்திகளின் உந்துதலும் ஆதிக்கமும் பல மடங்கு அதிகரிக்கும். மனித சிந்தனையிலும் வாழ்க்கையிலும் மிக உயர்ந்த தளம் மதம்தான். ஆகவே இந்தச் சக்திகளின் செயல்பாடு இங்கே மிகவும் அதிகமாக உள்ளது. மனிதன் இதுவரை அறிந்த அன்பு நிலைகளுள் மிக உயர்ந்த நிலை மதத்திலிருந்துதான் வந்தது. அதுபோல் மனிதன் இதுவரை அறிந்த வெறுப்பு நிலைகளில் மிகக் கொடூரமான வெறுப்பும் மதத்திலிருந்துதான் வந்தது. உலகம் இதுவரை கேட்டுள்ள அமைதி

வாசகங்களுள் உன்னதமானவை மத போதகர்கள் பேசியவை; உலகத்தின் காதுகளில் இதுவரை விழுந்த கண்டனங்களில் மிகக் கடுமையானவற்றைப் பேசியவர்களும் மதப் பிரச்சாரகர்களே.

ஒரு மதத்தின் லட்சியம் உயர்ந்ததாக இருக்கும் அளவிற்கு, இயக்க அமைப்பு நுண்மையாக இருக்கும் அளவிற்கு அதன் செயல்பாடுகள் அற்புதமானவையாக இருக்கும். மதத்தைப் போல் வேறெந்த மனித உந்துசக்தியும் உலகை இந்த அளவுக்கு ரத்த வெள்ளத்தில் ஆழ்த்தியதில்லை. அதே வேளையில் ஏழைகளுக்கு இவ்வளவு மருத்துவமனைகளும் விடுதிகளும் வந்ததும் அதே மதத்தால்தான். மனிதர்களை மட்டுமல்லாமல் மிகத் தாழ்ந்த மிருகங்களையும் இவ்வளவு பரிவுடன் நேசித்திருக்கும் மனித சக்தி, மதத்தைத் தவிர வேறெதுவும் இல்லை. நம்மைக் கொடிய அரக்கர்களாக்குவதும் மதத்தைப்போல் வேறெதுவும் இல்லை, கருணைக் கடலாக்குவதும் மதத்தைப்போல் வேறெதுவும் இல்லை. இதுவரை இப்படித்தான் இருந்து வந்திருக்கிறது; இனியும் இப்படித்தான் இருக்கும் என்று எண்ண இடமும் இருக்கிறது. ஆனால் இந்தக் கூச்சலுக்கும் குழப்பத்திற்கும் இடையிலும், இந்தப் போட்டிக்கும் போராட்டத்திற்கும் இடையிலும், மதங்கள் மதப் பிரிவுகள் இவற்றின் இந்த வெறுப்புக்கும் பொறாமைக்கும் இடையிலும் இவற்றையெல்லாம் மீறி, அவ்வப்போது சில கம்பீரமான குரல்கள் எழுந்துள்ளன; அவை அமைதியையும் சமரசத்தையும் பிரச்சாரம் செய்தபடி துருவத்துக்குத் துருவம் ஒலிப்பது போலுள்ளன. அந்த அமைதியும் சமரசமும் என்றாவது வருமா?

இந்த உக்கிரமான மதப் போராட்டங்களினூடே ஒரு தடையற்ற சமரசம் என்றாவது சாத்தியமா? இந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் உலகம் அதைப்பற்றியே அதிகம் சிந்தித்துக் கொண்டிருக்கிறது; சமுதாயத்தில் அதற்காகப் பல திட்டங்கள் வகுக்கப்பட்டு அவற்றை நடைமுறைக்குக் கொண்டுவர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஆனால் அது எவ்வளவு சிரமம் என்பது நமக்குத் தெரியும். வாழ்க்கைப் போராட்டத்தின் உக்கிரத்தைத் தணிப்பதோ, மன இறுக்கத்தைக் (tension) குறைத்துக்கொள்வதோ மனிதனால் ஏறக்குறைய முடியாததாக உள்ளது. வாழ்க்கையின் புறப்பகுதியான, தூலமான இந்தப் பௌதீகத் தளத்தில் அமைதியையும் சமரசத்தையும் நிலவச் செய்வது இவ்வளவு கடினம் என்றால், மனிதனின்

அகத்தில் அமைதியும் சமரசமும் நிலவச் செய்து, அக இயற்கையை ஆள்வது அதைவிட ஆயிரம் மடங்கு கடினம்.

இப்போதைக்கு வார்த்தை வலைகளிலிருந்து விடுபடும்படி உங்களைக் கேட்டுக் கொள்கிறேன். அன்பு, அமைதி, தானம், சமத்துவம், உலகம்தழுவிய சகோதரத்துவம் போன்றவற்றைக் குழந்தைப் பருவத்திலிருந்தே நாம் கேட்டு வருகிறோம். ஆனால் நம்மைப் பொறுத்தவரை அவை பொருளற்ற வெறும் வார்த்தைகளாக ஆகிவிட்டன. அவற்றை நாம் கிளிப்பிள்ளை களைப் போல் சொல்லிக் கொண்டிருக்கிறோம், அது நமது இயல்பாகவும் ஆகிவிட்டது. அதை நம்மால் விலக்க முடிவ தில்லை. உன்னதமான இந்தக் கருத்துக்களை முதலில் இதயத்தில் உணர்ந்த மகான்கள் இந்த வார்த்தைகளை உருவாக்கினார்கள். அந்தக் காலத்தில் இவற்றின் பொருள் பலருக்குப் புரிந்திருந்தது. பிற்காலத்தில் அறிவிலிகள் அவற்றைப் பயன்படுத்த ஆரம்பித் தார்கள். அவர்கள் மதத்தை வெறும் வார்த்தை ஜாலமாக மாற்றிவிட்டார்கள்; மதத்தை நடைமுறைக்குப் பயன்படுகின்ற ஒரு கருவியாக அவர்கள் கருதவே இல்லை; மதம் என்பது 'எங்கள் தந்தையின் மதம்', 'எங்கள் தேசத்தின் மதம்' என்றெல்லாம் ஆகிவிட்டது. மதத்தைப் பின்பற்றுவது நாட்டுப் பற்றின் ஓர் அம்சமாக ஆகிவிட்டது. நாட்டுப்பற்று எப்போதும் ஒருதலைப்பட்சமானது. மதத்தில் சமரசத்தைக் கொண்டு வருவது கடினமாகவே இருக்க வேண்டும். இருந்தாலும் மத சமரசம் என்ற பிரச்சினையை நாம் ஆராய்வோம்.

ஒவ்வொரு மதத்திலும்—அங்கீகரிக்கப்பட்ட பெரிய மதங் களையே இங்கே நான் குறிப்பிடுகிறேன்—மூன்று பகுதிகள் இருப்பதை நாம் காணலாம். முதலில் தத்துவம். மதம் எவ்வளவு தூரம் வரை செயல்பட இயலும் என்ற எல்லையை இது காட்டுகிறது; அடிப்படைக் கோட்பாடுகளை வகுக்கிறது; லட்சியத்தைக் காட்டி, அதை அடைவதற்கான வழிமுறைகளைக் காட்டுகிறது. இரண்டாவது, தத்துவங்களின் தூல உருவமான புராணங்கள். இதில் மனிதர்கள் அல்லது தெய்வங்களைப் பற்றிய கதைகள் போன்றவை உள்ளன. ஏறக்குறைய கற்பனைக் கதைகளான இவைமூலம் இங்கே தனித் தத்துவங்கள் விளக்கப் படுகின்றன. மூன்றாவது சடங்குகள். இது மிகவும் தூலமானது. புலன்களுக்கு இதமானவையான உருவ வழிபாடு, கிரியைகள், முத்திரைகள், ஆசனங்கள், மலர்கள், வாசனைப் பொருட்கள் போன்ற விஷயங்கள் இதில் அடங்கும். இது சடங்குப் பகுதி.

அங்கீகரிக்கப்பட்ட எல்லா மதங்களிலும் இந்த மூன்று பகுதிகளையும் காணலாம். சில மதங்கள் ஒரு பகுதியை அதிகமாகவும், சில மதங்கள் மற்றப் பகுதிகளை அதிகமாகவும் வற்புறுத்துகின்றன.

முதல் பகுதியான தத்துவத்தை இப்போது ஆராய்வோம். உலகம்தழுவிய தத்துவம் இருக்கிறதா? இதுவரை இல்லை. ஒவ்வொரு மதமும் தனக்கென்று சில கோட்பாடுகளை வகுக்கிறது, அவை மட்டும்தான் ஒரே உண்மை என்று வற்புறுத்துகிறது; அது மட்டுமல்ல, அவற்றை நம்பாதவர்கள் பயங்கர நரகத்திற்குத்தான் போவார்கள் என்றும் கருதுகிறது. தங்கள் நம்பிக்கையைப் பிறர்மீது திணிக்க வாளை ஓங்கவும் மதங்கள் தயங்குவதில்லை. கொடிய தன்மையின் காரணமாகச் செய்யப்படுவது அல்ல இது, மதவெறி என்ற மூளை வியாதியே இதற்குக் காரணம். இந்த மத வெறியர்கள் நேர்மையானவர்கள், மனிதர்களுள் மிகவும் உண்மையானவர்கள். ஆனால் மற்ற பைத்தியங்களைப் போலவே பொறுப்பற்றவர்கள். மத வெறி என்ற இந்த வியாதி, வியாதிகளில் மிகவும் ஆபத்தானது. மனித இயல்பின் கொடிய அம்சங்களெல்லாம் இந்த மத வெறியால் எழுப்பப்படுகின்றன; கோபம் தூண்டப்படுகிறது, நரம்புகள் முறுக்கேறுகின்றன; மனிதன் புலிபோல் ஆகிறான்.

புராணங்களுள் ஏதாவது ஒற்றுமை உள்ளதா, ஏதாவது சமரசம் காணப்படுகிறதா? எல்லா மதங்களும் ஒப்புக்கொள்கின்ற உலகம்தழுவிய புராணம் ஏதாவது இருக்கிறதா? நிச்சயமாக இல்லை. எல்லா மதங்களுக்கும் தனித்தனியாகப் புராணங்கள் இருக்கின்றன. இதில் 'எங்கள் புராணங்கள் பொய்க் கதையல்ல' என்று ஒவ்வொரு மதமும் சொல்கிறது. ஓர் உதாரணத்தின் மூலம் இந்தப் பிரச்சினையை அறிய முயல்வோம். கருத்தை விளக்குவதுதான் எனது நோக்கமே தவிர எந்த மதத்தையும் விமர்சனம் செய்வதல்ல. கடவுள் வெள்ளைப் புறாவின் வடிவம் தாங்கி பூமிக்கு வந்தார் என்பது கிறிஸ்தவர்களின் நம்பிக்கை. கிறிஸ்தவனுக்கு இது வரலாறு, புராணம் அல்ல. கடவுள் பசுவில் வெளிப்பட்டிருக்கிறார் என்பது இந்துக்களின் நம்பிக்கை. ஆனால் இவ்வாறு நம்புவது வெறும் புராணக் கதை, மூட நம்பிக்கை; வரலாறு அல்ல என்று கிறிஸ்தவர்கள் சொல்கிறார்கள். ஒரு பெட்டியைச் செய்து, அதன் இரண்டு பக்கங்களிலும் தேவதைகளின் உருவங்களைப் பொறித்து வைத்தால் அது புனிதங்களுள் எல்லாம் புனிதமான ஒன்றாகி

விடுகிறது என்று யூதர்கள் நினைக்கிறார்கள். அது ஜெஹோவாவால் புனிதமாகக் கருதப்படுகிறது என்பது அவர்கள் கருத்து. ஆனால் ஓர் அழகான ஆண் அல்லது பெண் வடிவத்தில் இந்த உருவத்தை அமைத்தால், உடனே, 'இது பயங்கரம், இதை உடைத்தெறியுங்கள்' என்பார்கள். புராணங்களைப் பொறுத்தவரை நமது ஒற்றுமை இதுதான்.

'எங்கள் தீர்க்கதரிசி இன்ன அற்புதத்தை நிகழ்த்தினார்' என்று ஒருவன் சொன்னால் உடனே மற்றவர்கள், 'அது வெறும் மூடநம்பிக்கை' என்பார்கள். அதேவேளையில் தங்கள் தீர்க்கதரிசி இன்னும் மகத்தான அற்புதங்களைச் சாதித்திருக்கிறார் என்பார்கள், அது அவர்களுக்கு வரலாறு.

வரலாற்றிற்கும் புராணத்திற்கும் இடையில் இருப்பதாக இவர்களின் மூளையில் உள்ள நுண்ணிய வேறுபாட்டை அறிந்துகொள்ளக்கூடிய ஒருவர் எனக்குத் தெரிந்தவரை இல்லை. இத்தகைய கதைகள் எல்லாம், அவை எந்த மதத்தைச் சேர்ந்தவையாக இருந்தாலும் சரி கட்டுக் கதைகள்தான்; ஏதோ சில இடங்களில் சிறிதளவு வரலாற்று ஆதாரம் இருக்கலாம்.

அடுத்தபடியாகச் சடங்குகளைப் பார்ப்போம். ஒரு மதப் பிரிவு ஒரு வகையான சடங்கு முறையைப் பின்பற்றுகிறது; அதுவே புனிதமானது, மற்ற பிரிவுகளின் சடங்குகள் சுத்த மூட நம்பிக்கை என்று அது சொல்கிறது. ஒரு பிரிவு ஏதோ ஒரு குறிப்பிட்ட உருவத்தை வழிபடுகிறது. அதைப் பார்த்து வேறு ஒரு பிரிவு, 'ஐயோ, சகிக்கவில்லையே' என்று கூச்சலிடுகிறது.

உதாரணத்திற்கு, பொதுவான ஓர் உருவத்தை எடுத்துக் கொள்வோம். ஆண்குறிச் சின்னம் நிச்சயமாகப் பாலுணர்வு சம்பந்தப்பட்டதே. ஆனால் காலப்போக்கில் அந்தத் தொடர்பு மறக்கப்பட்டு, அது இப்போது படைப்புக் கடவுளின் சின்னமாகக் கருதப்படுகிறது. அதனைச் சின்னமாகக் கொண்டுள்ள நாட்டினர் அதை ஒருபோதும் ஆண்குறியாக நினைப்பதில்லை; அது ஒரு சின்னம், அவ்வளவுதான். ஆனால் வேறு ஒரு பிரிவைச் சேர்ந்தவனுக்கோ, மற்றோர் இனத்தைச் சேர்ந்தவனுக்கோ அது ஆண்குறியாகவே தெரிகிறது; உடனே அவன் அதைக் கண்டனம் செய்யத் தொடங்குகிறான். அதே வேளையில் அவன் செய்கின்ற ஏதோ ஒன்று இவர்களுக்குச் சகிக்க முடியாததாகத் தோன்றலாம். இதை விளக்குவதற்கு இரண்டு உதாரணங்களை—ஆண்குறிச் சின்னத்தையும், கிறிஸ்தவர்களின் புனிதச் சடங்கையும் (Sacrament) எடுத்துக்கொள்கிறேன்:

ஆண்குறிச் சின்னம் கிறிஸ்தவர்களுக்கு அருவருப்பைத் தரு கிறது; கிறிஸ்தவர்களின் புனிதச் சடங்கு இந்துக்களுக்கு அரு வருப்பைத் தருகிறது. ஒருவனது நல்ல குணங்களைப் பெறு வதற்காக அவனைக் கொன்று அவனுடைய மாமிசத்தைத் தின்பதையும் ரத்தத்தைக் குடிப்பதையும் குறிப்பதே கிறிஸ்தவர் களின் புனிதச் சடங்கு. இது காட்டுமிராண்டித்தனம் என் பார்கள் இந்துக்கள். சில காட்டுவாசிகள் செய்வது இதுதான். ஒருவன் வீரனாக இருந்தால் அவனைக் கொன்று அவனுடைய இதயத்தை அவர்கள் சாப்பிடுகிறார்கள். அவ்வாறு செய்தால் அவனது வீரமும் துணிச்சலும் தங்களுக்கு வரும் என்று அவர்கள் நம்புகிறார்கள். இந்தக் காட்டுமிராண்டித்தனமே கிறிஸ்தவர்களின் புனிதச் சடங்கின் ஆரம்பம் என்பதை சர் ஜான் லூப்பக் (Sir John Lubback) போன்ற உண்மையான கிறிஸ்தவர்கூட ஒப்புக்கொள்கிறார். ஆனால் பொதுவாக இதைக் கிறிஸ்தவர்கள் ஒப்புக் கொள்வதில்லை. இந்தச் சடங்கு எதைக் குறிக்கிறது என்பதை அவர்கள் நினைத்துப் பார்ப்பதே இல்லை. அது புனிதமானது, அவ்வளவுதான் அவர்களுக்கு வேண்டும். ஆகவே சடங்குகளிலும் எல்லோரும் ஆமோதித்து ஒப்புக்கொள்கின்ற உலகம்தழுவிய ஒரு சின்னம் இல்லை. இந்த நிலைமையில் உலகம்தழுவிய தன்மை எங்கே? அப்படியானால் உலகம்தழுவிய மதத்தை உருவாக்குவது எப்படி? ஆனால் அது ஏற்கனவே இருக்கிறது; அது என்ன என்று பார்ப்போம்.

உலகச் சகோதரத்துவத்தைப்பற்றி நாம் கேள்விப்படு கிறோம். சமுதாயங்கள் வரிந்துகட்டிக் கொண்டு இதைப் பிரச்சாரம் செய்கின்றன. எனக்கு ஒரு பழைய கதை நினைவுக்கு வருகிறது. குடிப்பது இந்தியாவில் தவறாகக் கருதப்படுகிறது. இரண்டு சகோதரர்கள் ஒரு நாள் இரவு ரகசியமாகக் குடிக்கத் தீர்மானித்தார்கள். மிகவும் ஆசாரசீலரான அவர்களுடைய மாமா பக்கத்து அறையில் தூங்கிக் கொண்டிருந்தார். ஆகவே குடிக்கத் தொடங்குவதற்கு முன்னால், 'நாம் சத்தம் செய்யக் கூடாது, சத்தம் கேட்டால் மாமா எழுந்து விடுவார்' என்று தங்களுக்குள் சொல்லிக் கொண்டார்கள். பின்னர் குடிக்கத் தொடங்கினார்கள். 'சத்தம் போடாதே, மாமா எழுந்து விடு வார்' என்று ஒருவருக்கு ஒருவர் சொல்லிக் கொண்டார்கள். இதையே ஒருவனைவிட மற்றவன் உரத்துச் சொல்ல ஆரம்பித்தான். சத்தம் அதிகமாகியது, மாமா எழுந்து வந்து எல்லா விஷயத்தையும் கண்டு பிடித்துவிட்டார். அந்தக்

குடிகாரர்களைப் போலவே நாமும், 'உலகச் சகோதரத்துவம், நாம் எல்லோரும் சமம், ஆகவே நாம் ஒரு புது நெறியை ஏற்படுத்துவோம்' என்று கூச்சலிடுகிறோம். புதிய நெறியைத் தொடங்கியவுடனேயே சமத்துவத்தை எதிர்க்க ஆரம்பிக்கிறோம். அதன்பிறகு சமத்துவமாவது ஒன்றாவது! முஸ்லிம்கள் உலகச் சகோதரத்துவத்தைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆனால் இதனால் உண்மையில் என்ன ஏற்படுகிறது? முஸ்லீம் அல்லாத யாரையும் அவர்கள் தங்கள் சகோதரத்துவத்தினுள் ஏற்றுக் கொள்வதில்லை; அவனது தலை வெட்டப்படுவதற்கான சாத்தியக்கூறுதான் அதிகம். கிறிஸ்தவர்களும் உலகச் சகோதரத்துவத்தைப் பற்றிப் பேசுகிறார்கள்; ஆனால் கிறிஸ்தவர் அல்லாதவர்கள் நெருப்பில் வாட்டப்படுகின்ற நிரந்தர நரகத்தைத்தான் அடைவார்களாம்.

இவ்வாறு நாம் உலகச் சகோதரத்துவத்தையும் சமத்துவத்தையும் தேடி உலகமெல்லாம் அலைகிறோம். இப்படிப்பட்ட பேச்சுகளைக் கேட்கும்போது நீங்கள் சற்றுக் கவனமாக இருக்க வேண்டும். ஏனென்றால் இந்தப் பேச்சுகளுக்குப் பின்னால் தீவிர சுயநலம் இருக்கிறது. 'குளிர் காலத்தில் சிலவேளைகளில் கருமேகம் தோன்றுகிறது; இடிமேல் இடி இடிக்கிறது, ஆனால் மழை பொழிவதில்லை. மழைக் காலத்திலோ மேகங்கள் கர்ஜிப்பதில்லை, ஆனால் மழை பொழிந்து உலகை வெள்ளத்தால் நிரப்புகின்றன.' அதுபோல் உண்மையான உழைப்பாளிகளும் சரி, இதயத்தில் உலகச் சகோதரத்துவத்தை உண்மையாக உணர்பவர்களும் சரி, அதிகம் பேசுவதில்லை; உலகச் சகோதரத்துவத்திற்காகப் புதிய நெறிகளையும் உண்டாக்குவதில்லை. ஆனால் அவர்களுடைய ஒவ்வொரு செயலும், அவர்களுடைய ஒவ்வோர் அசைவும், அவர்களுடைய வாழ்க்கை முழுவதுமே அவர்கள் மனித குலத்தின் சகோதரத்துவத்தை உண்மையில் உணர்ந்திருக்கிறார்கள் என்பதை, அவர்கள் எல்லோரிடமும் அன்பும் இரக்கமும் காட்டுகிறார்கள் என்பதைக் காட்டும். அவர்கள் பேசுவதில்லை, ஆனால் செய்கிறார்கள், வாழ்கிறார்கள். இந்த உலகில் வீறாப்புப் பேச்சுத்தான் அதிகம். நமக்கு வேண்டியது குறைவான பேச்சு, நிறைவான உழைப்பு.

மதத்தைப் பொறுத்தவரையில் உலகம்தழுவிய எந்த அம்சத்தையும் காண்பது கஷ்டம் என்பதை இதுவரை பார்த்தோம். இருந்தாலும் இந்த அம்சங்கள் இருப்பது நமக்குத் தெரி

யும். நாம் எல்லோரும் மனிதர்கள், ஆனால் நாம் எல்லோரும் சமமா? நிச்சயமாக இல்லை. எல்லோரும் சமம் என்று யார் சொல்கிறார்கள்? பைத்தியக்காரன்தான் அப்படிச் சொல்வான். அறிவிலோ, ஆற்றலிலோ, தோற்றத்திலோ நாம் சமமாக இருக் கிறோமா? ஒருவன் மற்றவனைவிடப் பலசாலியாக இருக்கிறான்; ஒருவன் மற்றவனைவிடப் புத்திசாலியாக இருக்கிறான். நாம் எல்லோரும் சமமென்றால் இந்த வேறுபாடுகள் ஏன்? யார் இவற்றை ஏற்படுத்தியது? நாமேதான். நம்மிடையே ஆற்றலில் ஏற்றத்தாழ்வு உள்ளது, அறிவில் ஏற்றத் தாழ்வு உள்ளது, உடல்பலத்தில் ஏற்றத்தாழ்வு உள்ளது; இவை நம்மிடையே ஏற்றத்தாழ்வை உண்டாக்கியே தீரும். இருந்தாலும் சமத்துவக் கருத்து நம் இதயத்திற்கு இதமாக இருக்கிறது என்பதும் நமக்குத் தெரியும்.

நாம் மனிதர்கள். சிலர் ஆண்கள், சிலர் பெண்கள். இங்கே கறுப்பு மனிதன், அங்கே வெள்ளை மனிதன். ஆனால் எல்லோ ரும் மனிதர்கள், எல்லோரும் ஒரே மனித குலத்தைச் சேர்ந்த வர்கள். நமது முகங்கள் பலவிதமானவை; எந்த இரண்டு முகங்களும் ஒரே மாதிரி இல்லை, இருந்தாலும் நாம் எல்லோ ரும் மனிதர்கள். இந்த ஒரே மனிதகுலம் எங்கே? கறுப்பாகவோ வெளுப்பாகவோ இருக்கின்ற ஆணையோ பெண்ணையோ பார்க்கிறேன்; ஆனால் இந்த முகங்களுக்கெல்லாம் பின்னால் அவற்றை ஊடுருவிக் கொண்டு பொதுவான மனிதத்துவம் ஒன்று இருப்பதும் எனக்குத் தெரிகிறது. அதைக் கிரகிக்கவோ, உணரவோ, வெளிப்படுத்தவோ முயன்றால் முடியவில்லை. இருந்தாலும் அது இருக்கிறது என்பது எனக்கு நிச்சயமாகத் தெரிகிறது. ஏதாவது ஒன்று நிச்சயமாக இருக்கிறது என்று நான் சொல்ல முடியுமானால், அது எல்லோருக்கும் பொது வான இந்த மனிதத்துவத்தையே. இந்தப் பொதுத் தன்மையின் மூலமாகத்தான் உங்களை ஆணாகவோ பெண்ணாகவோ என்னால் பார்க்க முடிகிறது. உலகம்தழுவிய மத விஷயத்திலும் அப்படியே. கடவுள் என்ற பொதுத் தன்மையே உலகிலுள்ள எல்லா மதங்களின் ஊடேயும் இழையோடுகிறது. இது நிரந்தர மாக இருக்கிறது, இருந்தாக வேண்டும். 'இந்த முத்துக்களை யெல்லாம் கோக்கின்ற நூல் நானே'. ஒவ்வொரு முத்தும் ஒரு மதம் அல்லது மதப் பிரிவு. இந்தப் பல்வேறு முத்துக்களைக் கோக்கும் நூலே கடவுள். மனிதர்களில் பெரும்பாலோருக்கு இந்த உண்மை தெரிவதில்லை.

வேறுபாட்டில் ஒருமை என்பது பிரபஞ்சத்தின் அமைப்பு. நாம் எல்லோரும் மனிதர்கள், ஆனாலும் ஒருவருக்கொருவர் வேறுபட்டிருக்கிறோம். மனித குலத்தின் ஓர் அங்கம் என்ற முறையில் நாமெல்லோரும் ஒன்று, திரு இன்னார் என்ற முறையில் நான் உங்களிடமிருந்து வேறுபடுகிறேன். ஆண் என்ற முறையில் நாம் பெண்களிடமிருந்து வேறுபடுகிறோம். ஆனால் மனித குலம் என்ற முறையில் எல்லாம் ஒன்றே. மனிதன் என்ற முறையில் நாம் மிருகங்களிலிருந்து வேறுபடுகிறோம்; ஆனால் உயிர்கள் என்ற முறையில் ஆண், பெண், மிருகங்கள், தாவரங்கள் எல்லாம் ஒன்றே. இருப்பு (Existence) என்ற அடிப்படையில் நாம் இந்த முழுப் பிரபஞ்சத்துடனும் ஒன்றுபட்டிருக்கிறோம். பிரபஞ்சத்தின் அந்த அறுதி ஒருமையே, அந்தப் பிரபஞ்ச இருப்பே கடவுள். அவரில் நாமெல்லாம் ஒன்று. அதே வேளையில் வெளிப்பாட்டில் இந்த வேறுபாடுகள் இருந்தே தீர வேண்டும். நமது வேலை, நமது ஆற்றல்கள் எல்லாம் வெளிப்பாடுகள்; வெளிப்பாடுகள் என்ற அளவில் வேறு பாடுகள் இருந்தே தீரும்.

மனித குலம் முழுவதுமே நம்பிக்கைகொள்ள வேண்டிய ஒரு கொள்கைத் தொகுதிதான் உலகம்தழுவிய மதம் என்றால் அத்தகைய ஒரு மதம் இருக்கவே முடியாது என்பது நமக்குத் தெரிகிறது. எல்லா முகங்களும் ஒரேமாதிரி இருக்க முடியாது. அப்படி ஒரு காலம் வரவே வராது.

அதேபோல் எல்லோரும் ஒப்புக் கொள்ளக்கூடிய புராணம் ஒன்று இருக்காது, இருக்கவும் முடியாது. சடங்கை எடுத்துக் கொண்டாலும் அப்படி உலகம்தழுவிய ஒன்று இருக்க முடியாது. அப்படிப்பட்ட நிலைமை வரவே வராது, வருமானால் உலகம் அழிந்துவிடும். ஏனென்றால் வேறுபாடே வாழ்க்கையின் முதல் அம்சம். உருவமுள்ள உயிர்களாக நம்மைச் செய்வது எது? வேறுபாடுதான். முழுமையான சமச்சீர்நிலை என்றால் அது நமது அழிவே. சமமாகவும் சீராகவும் பரவுவது வெப்பத்தின் இயல்பு. இந்த அறையில் அவ்வாறு அது சீராகப் பரவி சமப்பட்டுவிட்டால், நடைமுறையைப் பொறுத்தவரையில் அந்த வெப்பம் பயனற்றதாகிவிடும்.

இந்தப் பிரபஞ்சத்தில் இயக்கத்திற்குக் காரணமாக இருப்பது எது? சமநிலைக் குலைவுதான். எங்கும் சமத்துவமே நிலவ வேண்டும் என்றால் அது பிரபஞ்சம் அழிந்த பின்னர்தான் முடியும், அதற்குமுன்பு முடியாது. அது மட்டுமல்ல, அப்படி

ஒரு நிலை ஆபத்தானதும்கூட. நாம் எல்லோரும் ஒரே மாதிரி சிந்திக்க வேண்டும் என்று விரும்பக் கூடாது. அப்படி நேர்ந்தால் சிந்திப்பதற்குச் சிந்தனைகளே இருக்காது. சிந்திப்பதற்கு எதுவுமில்லாமல் எகிப்திய மம்மிகளைப்போல் ஒருவரை ஒருவர் வெற்றுப்பார்வை பார்த்துக் கொண்டுதான் நாம் எல்லோரும் இருக்க வேண்டும். இந்த வேற்றுமை, வேறுபாடு, சமநிலைக் குலைவு இவையே நமது முன்னேற்றத்திற்கும் சிந்தனைகளுக்கும் உயிர்நாடி. இது எப்போதும் இப்படியேதான் இருக்க வேண்டும்.

அப்படியானால் உலகம்தழுவிய மதத்தின் குறிக்கோள் என்று நான் சொல்வதன் பொருள் என்ன? எல்லோரும் ஒப்புக் கொள்ளக் கூடிய உலகம்தழுவிய ஒரு தத்துவத்தையோ, உலகம் தழுவிய ஒரு புராணத்தையோ, உலகம்தழுவிய ஒரு சடங்கையோ நான் குறிப்பிடவில்லை. ஏனென்றால் மிகவும் சிக்கலான, மிகவும் அற்புதமான சக்கரத்திற்குள் சக்கரமாக உள்ள இந்த உலக எந்திரம் சுழன்றுகொண்டே இருந்தாக வேண்டும் என்பது எனக்குத் தெரியும். அப்படியானால் நாம் என்ன செய்ய முடியும்? சக்கரங்களுக்கு எண்ணெய் போட முடியும், அவற்றின் உராய்வைக் குறைக்க முடியும், அந்த எந்திரத்தைத் தடையில்லாமல் சுழலச் செய்ய முடியும். எப்படி? இயற்கையாகவே வேறுபாடு அவசியம் என்பதை ஏற்றுக் கொள்வதன் மூலம். நாம் எல்லோரும் இயல்பாகவே ஒன்றுதான் என்பதை எப்படி நாம் உணர்ந்திருக்கிறோமோ அதைப் போலவே வேறுபாட்டையும் உணர வேண்டும். உண்மையை வெளிப்படுத்த லட்சம் வழிகள் இருக்கலாம், ஒவ்வொரு வழியும் அது செல்லுமளவுக்கு உண்மை என்பதை நாம் உணர வேண்டும். ஒரு பொருளை நூறு கோணங்களிலிருந்து பார்க்கலாம், ஒவ்வொரு கோணத்திலிருந்தும் நாம் பார்ப்பதும் அந்தப் பொருளைத்தான் என்பதை உணர வேண்டும். சூரியனை உதாரணமாக எடுத்துக் கொள்வோம். உதயத்தின்போது பூமியில் நின்று கொண்டிருக்கும் ஒருவன் சூரியனைப் பார்க்கிறான். அது ஒரு பெரிய பந்துபோல் தெரிகிறது. அவன் சூரியனை நோக்கிப் பயணம் செய்கிறான், ஒரு காமிராவோடு போகிறான். சூரியனை அடையும்வரை பல நிலைகளில் சூரியனைப் புகைப்படம் எடுக்கிறான். இந்தப் படங்கள் ஒவ்வொன்றும் மற்றதிலிருந்து வேறுபட்டே இருக்கும். அவன் திரும்பி வரும்போது அவை வெவ்வேறு சூரியர்களின் படங்கள்போல் தெரியும். ஆனாலும்

அவை எல்லாமே ஒரே சூரியனை அவன் பல நிலைகளில் படம் பிடித்தது என்பது நமக்குத் தெரியும்.

கடவுளின் விஷயமும் இப்படியேதான். உயர்ந்த தத்துவம் ஆகட்டும், தாழ்ந்த தத்துவம் ஆகட்டும், மிகச் சிறப்பான புராணம் ஆகட்டும், மிகச் சாதாரணமான புராணம் ஆகட்டும், மிக நுண்ணிய சடங்கு ஆகட்டும், பில்லிசூனியம் ஆகட்டும்—இவையனைத்தின் மூலமாகவும் ஒவ்வொரு பிரிவும், ஒவ்வோர் ஆன்மாவும், ஒவ்வொரு நாடும், ஒவ்வொரு மதமும் அறிந்தோ அறியாமலோ போராடியவாறே கடவுளை நோக்கியே முன்னேறிச் செல்கின்றன. மனிதன் பெறுகின்ற உண்மையின் தரிசனங்கள் ஒவ்வொன்றும் இறைக் காட்சியே தவிர வேறல்ல. நாம் எல்லோருமே தண்ணீர் எடுப்பதற்காகக் கையில் பாத்திரங்களுடன் ஏரிக்குச் செல்கிறோம். ஒருவரிடம் டம்ளர், ஒருவரிடம் கூஜா, ஒருவரிடம் வாளி என்று ஒவ்வொருவரிடமும் ஒவ்வொரு விதமான பாத்திரம் இருக்கிறது. நாம் எல்லோரும் நம் பாத்திரங்களை நிரப்பிக் கொள்கிறோம். நம் ஒவ்வொருவரிடம் உள்ள தண்ணீர் டம்ளரில் நிரப்பியவனிடம் டம்ளர் வடிவில், கூஜாவில் நிரப்பியவனிடம் கூஜா வடிவில் என்று நம் கையில் இருக்கும் பாத்திரங்களின் வடிவைப் பெறுகிறது. ஆனால் எல்லா பாத்திரங்களிலும் இருப்பது தண்ணீர், தண்ணீரைத் தவிர வேறெதுவும் அல்ல. மதங்களின் விஷயமும் இப்படித்தான். நமது மனங்களே இந்தப் பாத்திரங்கள். நாம் ஒவ்வொருவரும் கடவுளை உணர முயல்கிறோம். இந்தப் பாத்திரங்களை நிரப்பும் தண்ணீர்தான் கடவுள். நமது மனப்பாத்திரத்தின் வடிவத்திற்கு ஏற்ப இறைக்காட்சி பெறுகிறோம். இருந்தாலும் அவர் ஒருவரே. ஒவ்வொரு மனத்திலும் அவர் கடவுளாகவே இருக்கிறார். உலகம்தழுவிய ஒன்றை இங்கு மட்டுமே நாம் காண முடியும்.

கொள்கையளவில் இதுவரை சரிதான். ஆனால் இந்த மத சமரசத்தைச் செயல்படுத்துவதற்கான செயல்முறை வழி என்ன? மதங்களின் வேறுபட்ட கருத்துக்கள் எல்லாம் உண்மை என்ற உணர்வு மிகப் பழங்காலத்திலிருந்தே உள்ளது. இத்தகைய சமரசத்தை உருவாக்குவதற்கும், எல்லா மதங்களையும் அன்பின் மூலம் ஒன்றுபடுத்துவதற்கும், இந்தியா, அலெக்ஸாண்டிரியா, ஐரோப்பா, சீனா, ஜப்பான், திபெத், கடைசியாக அமெரிக்கா ஆகிய நாடுகளில் எல்லாம் நூற்றுக்கணக்கான முயற்சிகள் நடந்திருக்கின்றன. நடைமுறைக்கு ஏற்புடைய திட்டம் எதையும் பின்பற்றாததால் இந்த முயற்சிகளெல்லாம் தோற்றன. உலகின்

எல்லா மதங்களும் சரியானவை என்பதைப் பலர் ஒப்புக்கொண் டுள்ளனர், ஆனால் இந்த ஒவ்வொரு மதமும் தன்னுடைய தனித்துவத்தை இழக்காமலே ஒன்றுசேர்ந்திருப்பதற்கான நடைமுறைத் திட்டம் எதையும் இவர்கள் காட்டவில்லை.

மத விஷயத்தில் ஒருவனது தனித்துவத்தை அழிக்காமல் அதே வேளையில் அவன் மற்ற அனைவருடனும் ஒன்றுபட் டிருப்பதற்கான ஒரு வழியைக் காட்டுகின்ற திட்டம் மட்டுமே நடைமுறைக்கு ஏற்புடையதாக இருக்க முடியும். ஆனால் இது வரை இவ்வாறு மத சமரசத்திற்காக முயன்ற திட்டங்களெல் லாம் எல்லா மதங்களின் கருத்துக்களையும் உள்ளடக்குவதாகக் கூறின; ஆனால் நடைமுறையில் எல்லாவற்றையும் சில குறிப் பிட்ட கோட்பாடுகளுக்குள் அடக்க முயன்றன. அதன் காரண மாகப் புதிய மதப் பிரிவுகள் உண்டாகி, அவை ஒன்றுக்கொன்று சண்டையிலும் போட்டியிலும் போராட்டத்திலும் ஈடுபட்டது தான் மிச்சம்.

நானும் ஒரு சிறிய திட்டம் வைத்திருக்கிறேன். அது வெற்றிபெறுமா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் கலந்துரையாடுவதற்காக அதை உங்கள் முன் வைக் கிறேன். என் திட்டம் என்ன? முதலில், 'எதையும் அழிக் காதீர்கள்' என்ற கோட்பாட்டை ஏற்றுக் கொள்ளுமாறு மனித குலத்தை வேண்டுவேன். அழிவுப் பிரச்சாரம் செய்கின்ற சீர்திருத்தவாதிகள் உலகிற்கு எந்த நன்மையும் செய்வதில்லை. எதையும் உடைக்காதீர்கள், கீழே இழுக்காதீர்கள்; மாறாக ஆக்குங்கள். முடிந்தால் உதவி செய்யுங்கள். முடியாவிட்டால் கையைக் கட்டிக்கொண்டு, நடப்பதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருங்கள். உதவி செய்ய முடியாவிட்டாலும் தொந்தரவு செய்யாதீர்கள். ஒருவன் உண்மையாகத் தன் கொள்கைகளில் ஈடுபாட்டுடன் இருக்கும்வரை அவனது கொள்கைகளை எதிர்த்து எதுவும் பேசாதீர்கள்.

இரண்டாவதாக, ஒருவன் எந்த நிலையில் இருக்கிறானோ, அந்த நிலையிலிருந்து அவனை உயர்த்த முயல வேண்டும்.

கடவுளே எல்லா மதங்களின் மையம் என்பதும் நாம் ஒவ் வொருவருமே இந்த மதங்களாகிய ஆரங்களுள் (Radii) ஒன்றின்மூலம் அவரை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறோம் என்பதும் உண்மையானால் நாம் எல்லோருமே அந்த மையத்தை அடைந்தே தீருவோம் என்பது நிச்சயம். எல்லா ஆரங்களும் சந்திக்கின்ற அந்த மையத்தில் நமது எல்லா வேறுபாடுகளும்

விலகிவிடும். ஆனால் மையத்தை அடையும்வரை வேறுபாடுகள் இருந்தே தீரும். எல்லா ஆரங்களும் ஒரே மையத்திலேயே சந்திக்கின்றன. ஒவ்வொருவரும் தங்கள் இயல்புப்படி ஒவ்வோர் ஆரத்தின் வழியாகப் பயணம் செய்கின்றனர். நாம் ஒவ்வொரு வரும் நமது வழியிலேயே பயணம் செய்தால் நிச்சயமாக மையத்தை அடைவோம். ஏனெனில் 'எல்லா நதிகளும் கடலி லேயே சங்கமமாகின்றன.' நாம் ஒவ்வொருவரும் நம் இயல்புக்கு ஏற்பவே வளர்ந்து கொண்டிருக்கிறோம், முன்னேறிக் கொண் டிருக்கிறோம்.

காலப்போக்கில் ஒவ்வொருவரும் மிக உயர்ந்த உண்மையை உணர்ந்தே தீர்வார்கள். ஏனெனில் மனிதர்கள் தாங்களேதான் தங்களுக்குப் போதித்துக் கொள்ள வேண்டும். நீங்களும் நானும் என்ன செய்ய முடியும்? ஒரு குழந்தைக்குக் கூடப் போதிக்க முடியும் என்று நீங்கள் நினைக்கிறீர்களா? முடியாது. குழந்தை தனக்குத்தானே போதித்துக் கொள்கிறது. வாய்ப்புகளை ஏற்படுத்தித் தருவதும் தடைகளை நீக்குவதுமே உங்கள் கடமை. செடி வளர்கிறது. நீங்களா செடியை வளரச் செய்கிறீர்கள்? அந்தச் செடியைச் சுற்றி ஒரு வேலியைப் போட்டு, அதை எந்த மிருகமும் தின்னாமல் பார்த்துக் கொள்வதோடு உங்கள் கடமை முடிந்துவிடுகிறது. செடி, தானே வளர்கிறது. மனிதனின் ஆன்மீக வளர்ச்சியும் இதே போன்றதுதான். உங்களுக்கு யாரும் போதிக்க முடியாது; உங்களை யாரும் ஆன்மீக உணர்வுடையவர்களாக ஆக்க முடியாது. உங்களுக்கு நீங்கள்தான் போதித்துக் கொள்ள வேண்டும். உங்கள் வளர்ச்சி உங்களுள் இருந்துதான் வரவேண்டும்.

புற ஆசிரியர் என்ன போதிக்க முடியும்? தடைகளை ஓரளவு நீக்க முடியும், அதோடு அவரது கடமை முடிந்துவிடு கிறது. ஆகவே முடிந்தால் உதவி செய்யுங்கள், ஆனால் அழிக் காதீர்கள். மனிதர்களை ஆன்மீக உணர்வு பெற்றவர்களாகச் செய்ய முடியும் என்ற எண்ணத்தை விட்டுவிடுங்கள். அது இய லாத காரியம். உங்களுக்கு உங்கள் ஆன்மாவைத் தவிர வேறு ஆசிரியர் இல்லை. இதை உணருங்கள். இதனால் என்ன பயன்?

சமுதாயத்தில் பல்வேறு இயல்புகளைக் காண்கிறோம், பல்லாயிரம் விதமான சிந்தனைகளையும் மனப்போக்குகளையும் காண்கிறோம். அவற்றையெல்லாம் ஒரே பொதுப்பிரிவில் அடக்குவது முடியாத காரியம். ஆனால் செயல்முறை வசதிக்கு நான்கு பிரிவுகளாக வகுப்பது போதுமானது.

முதலில் செயல்வீரன்; அவன் உழைக்க விரும்புகிறான். அவனது தசைகளிலும் நரம்புகளிலும் அபரிமிதமான சக்தி இருக்கிறது. மருத்துவமனைகள் கட்டுவது, சேவைகளில் ஈடு படுவது, சாலைகள் அமைப்பது, திட்டங்கள் இடுவது, அமைப்பு களை உருவாக்குவது என்று செயலே அவனுடைய நோக்கம்.

பிறகு நுண்மையையும் அழகையும் மிக அதிகமான அளவுக்கு நேசிக்கின்ற உணர்ச்சிமிக்க மனிதன் இருக்கிறான். அவன் அழகை நினைத்துப் பார்க்க விரும்புகிறான்; இயற்கை யின் வனப்பான பக்கத்தை ரசிக்க விரும்புகிறான்; அன்பையும் அன்புக் கடவுளையும் ஆராதிக்க விரும்புகிறான். இதுவரை தோன்றிய மகான்கள் அனைவரையும், எல்லா மதங்களின் தீர்க்கதரிசிகளையும், கடவுளின் அவதாரங்களையும் முழு மனத்துடன் நேசிக்கிறான். ஏசுவோ புத்தரோ இருந்தார்களா இல்லையா என்று அறிவுபூர்வமாக நிரூபிக்க முடியுமா என்றெல் லாம் அவன் கவலைப்படுவதில்லை. ஏசுவின் மலைப் பிரசங்கம் எந்த நாளில் நடந்தது, ஸ்ரீகிருஷ்ணர் சரியாக எந்த நேரத்தில் பிறந்தார் என்பதையெல்லாம்பற்றி அவனுக்குக் கவலை யில்லை. அவனுக்கு வேண்டியதெல்லாம் அவர்கள் மட்டுமே, அவர்களுடைய அந்த அன்பு வடிவங்கள் மட்டுமே. அவனது லட்சியம் அத்தகையது. உணர்ச்சிமிக்கவனின் இயல்பு இதுவே.

அடுத்து தன் ஆன்மாவை ஆராய விரும்பும் ராஜயோகி. மனித மனத்தின் செயல்பாடுகள் எவை, நம்முள் என்னென்ன சக்திகள் இயங்குகின்றன, அவற்றை எப்படி அறிவது, கையாள் வது, கட்டுப்படுத்துவது என்பதைப் பற்றியெல்லாம் புரிந்து கொள்ள விரும்புகிறான் அவன். இது யோக மனம்.

அடுத்து தத்துவவாதி. அவன் எல்லாவற்றையும் எடை போட்டுப் பார்க்க விரும்புகிறான்; மனிதத் தத்துவத்தின் சாத்தியக் கூறுகளுக்கு அப்பால்கூடத் தன் அறிவைச் செலுத்த விரும்புகிறான்.

மனித குலத்தில் பெரும்பாலோருக்குத் திருப்தி அளிக்கும் விதமாக ஒரு மதம் இருக்க வேண்டுமானால், அது இந்த வேறு பட்ட மனங்களுக்கு இடம் தரவல்லதாக இருக்க வேண்டும். இந்தத் தகுதி இல்லாத இன்றைய நெறிகள் ஒருதலைப் பட்டன வாக இருக்கின்றன. பக்தியையும் உணர்ச்சிப் பெருக்கையும் பிரச்சாரம் செய்கின்ற ஒரு நெறியினரிடம் நாம் போகிறோம். அவர்கள் பாடுகிறார்கள், அழுகிறார்கள், அன்பைப் போதிக் கிறார்கள். ஆனால் அவர்களிடம், 'நண்பர்களே, இதெல்லாம்

சரிதான்; ஆனால் இதைவிட உறுதியான ஏதோ சிறிது அறிவு, சிறிது தத்துவம் இவை எனக்கு வேண்டும். நான் படிப்படியாக, அறிவுபூர்வமாக அனைத்தையும் புரிந்துகொள்ள விரும்பு கிறேன்' என்று சொன்னால் போதும்; 'போ, வெளியே', என்று கழுத்தைப் பிடித்துத் தள்ளிவிடுவார்கள்; ஏன், முடிந்தால் மறுவுலகிற்கு அனுப்பவும் தயங்க மாட்டார்கள். உணர்ச்சிப் பாங்கான பக்தர்களுக்கு மட்டுமே இந்த நெறி உதவ முடியும். இவர்கள் மற்றவர்களுக்கு உதவி செய்யாததுடன் அவர்களை அழிக்கவும் முயல்கிறார்கள். பிறருக்கு உதவ மாட்டார்கள் என்பது மட்டுமல்ல, பிறர் உண்மையானவர்கள் என்பதை அவர்கள் நம்புவதும் இல்லை என்பதுதான் கொடுமை.

இனி, இந்தியா மற்றும் கீழை நாடுகளின் அறிவைப்பற்றிப் பிரமாதமாகப் பேசுகின்ற தத்துவவாதிகள் இருக்கிறார்கள். ஏதோ ஐம்பது எழுத்துக்கள் கொண்ட பெரியபெரிய மனஇயல் வார்த்தைகளை எல்லாம் பயன்படுத்துவார்கள். ஆனால் என்னைப்போல் ஒரு சாதாரண மனிதன் அவர்களிடம் போய், 'எனக்கு ஆன்மீகம் வருமாறு ஏதாவது கூற முடியுமா?' என்று கேட்பதாக வைத்துக் கொள்வோம். உடனே ஒரு இளக்கார மான புன்னகையுடன், 'ஓ, நீ அறிவில் எங்களைவிட மிகவும் தாழ்ந்தவன்; ஆன்மீகத்தைப்பற்றி நீ என்ன புரிந்துகொள்ள முடியும்?' என்று சொல்வார்கள். இவர்கள் உச்சாணிக் கொம்பில் இருக்கும் தத்துவவாதிகள். 'வெளியே போங்கள்' என்று மரியாதையாகச் சொல்கிறார்கள்.

பிறகு ராஜயோகிகள். பல்வேறு உலகங்கள், மனத்தின் பல நிலைகள், மன ஆற்றலால் என்னவெல்லாம் சாதிக்க முடியும் என்று எதைப் பற்றியெல்லாமோ பேசுவார்கள். ஒரு சாதாரண மனிதன் அவர்களிடம் போய், 'நான் செய்வதற்கு ஏற்றதாக ஏதாவது சொல்லுங்கள். கற்பனை செய்வது போன்றதில் எனக்கு அதிகப் பழக்கமில்லை. எனக்கு ஏற்புடைய ஏதேனும் ஒன்றை உங்களால் தர முடியுமா?' என்று கேட்டால், உடனே கேலியாக ஒரு சிரிப்பு சிரிப்பார்கள். பிறகு, 'இந்த முட்டாள் சொல்வதைக் கேளுங்கள்; இவனுக்கு எதுவுமே தெரியாது, இவனது வாழ்க்கையே வீண்' என்பார்கள். இப்படித்தான் உலகம் முழு வதும் நடந்து கொண்டிருக்கிறது. இந்தப் பல்வேறு நெறிகளைச் சார்ந்த தீவிரவாதிகள் அனைவரையும் சேர்த்து ஓர் அறையில் அடைத்து, அவர்களின் இந்தக் கேலிப் புன்னகைகளை எல்லாம் புகைப்படம் எடுக்க வேண்டும் என்று எனக்குத் தோன்றுகிறது.

இப்போது மதங்களும் மற்றவையும் இருக்கும் நிலைமை இதுதான். ஆனால் எல்லா மனங்களுக்கும் ஏற்புடையதான ஒரு மதத்தைப் பரப்பவே நான் விரும்புகிறேன். அந்த மதம் தத்துவம், பக்தி, தியானம், உழைப்பு எல்லாவற்றையும் சமமாகப் போதிப்பதாக இருக்கும். கல்லூரிப் பேராசிரியர்களும் விஞ்ஞானிகளும் அறிவுபூர்வமாக ஆராய விரும்புவார்கள். வேண்டிய அளவுக்கு அவர்கள் ஆராயட்டும். ஆனால் முடிவில், இந்த அறிவுபூர்வமான விளக்கங்களுக்கும் ஆராய்ச்சிக்கும் எல்லை இருக்கிறது, அதற்கு அப்பால் அறிவு பயன்படாது என்பதை அவர்கள் உணர்வார்கள். 'கடவுள், மோட்சம் எல்லாம் மூடநம்பிக்கைகள், அவற்றை விட்டு ஒழியுங்கள்' என்பார்கள். அவர்களுக்கு நான் சொல்கிறேன்: 'திருவாளர் தத்துவவாதியே, உங்கள் உடம்பு இருக்கிறதே, அது இவற்றை விடப் பெரிய மூடநம்பிக்கை. எனவே அதனை விடுங்கள். சாப்பாட்டிற்காக வீட்டிற்கோ, தத்துவ ஆராய்ச்சிக்காக வகுப்பு களுக்கோ போகாதீர்கள். உடலை விடுங்கள். அது முடியா விட்டால் கருணைக்காக ஏங்கி அழுங்கள்.' ஏனெனில் இந்தப் பிரபஞ்சம் ஒன்றே, பிரபஞ்சத்தில் உள்ளது ஒன்றே என்று போதிக்கின்ற தத்துவத்தை உணர்வது எவ்வாறு என்று காட்டக் கூடியதாக மதம் இருக்க வேண்டும்.

அதேபோல் ராஜயோகி வந்தால், நாம் அவர்களை வர வேற்க வேண்டும், மனத்தைப் பற்றிய ஆராய்ச்சியை அவர் களுக்கு விளக்கிக் காட்டத் தயாராக இருக்க வேண்டும். உணர்ச்சிப் பெருக்கினர் வந்தால் நாம் அவர்களோடு அமர்ந்து சிரிக்கவும், கடவுளை நினைத்து அழவும் தயாராக இருக்க வேண்டும்; 'அன்பெனும் மதுவை அருந்திப் பித்தர்களாக வேண்டும்.' தீவிரமான செயல்வீரன் வந்தால் இயன்றவரையில் அவனுடன் உழைக்க வேண்டும்.

இந்த நான்கு வகைகளின் இணைப்பே உலகம்தழுவிய மதத்திற்கு மிகவும் நெருங்கியுள்ள குறிக்கோளாகும். இந்த ஞானம், யோகம், பக்தி, கர்மம் எல்லா அம்சங்களும் சமநிலை யில் நிறைவாக உள்ள மனம் கொண்டவர்களாக எல்லோரும் இருப்பதற்குக் கடவுள் அருள் புரிந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! அதுதான் லட்சியம், நிறைமனித லட்சியம் என்று நான் கருதுவது இதைத்தான். இந்த அம்சங்களுள் ஒன்றோ இரண்டோ உள்ளவர்கள் என்னைப் பொறுத்தவரை 'ஒரு தலைப் பட்ச'மானவர்களே. இத்தகைய 'ஒருதலைப்

பட்ச'மானவர்களால்தான் இந்த உலகம் ஏறக்குறைய நிறைந் துள்ளது. அவர்களுக்குத் தங்கள் பாதை மட்டுமே தெரியும், மற்ற எல்லாம் அவர்களைப் பொறுத்தவரை அபாயமானவை, பயங்கரமானவை. இந்த நான்கு வழிகளிலும் சமச்சீராக இயைந் திருப்பதுதான் மதத்தைப்பற்றி நான் கொள்கின்ற லட்சியம். இந்தியாவில் நாங்கள் யோகம் என்று சொல்கின்ற முறையால் இந்த மதத்தை உருவாக்க முடியும். யோகம் என்றால் இணைப்பு என்பது பொருள். செயல்வீரனுக்கு, மனிதனையும் மனித குலத்தையும் ஒன்றாக இணைப்பது. யோகிக்கு, அவனுடைய தாழ்ந்த, உயர்ந்த ஆன்ம நிலைகளை இணைப்பது. பக்தனுக்கு அவன் அவனது இஷ்ட தெய்வத்துடன் இணைவது. தத்துவ வாதிக்கோ இருக்கும் எல்லாவற்றின் இணைப்பு இது.

யோகம் என்பதன் பொருள் இதுவே. இது ஒரு சம்ஸ்கிருத வார்த்தை. யோகத்தின் இந்த நான்கு பிரிவுகளுக்கும் சம்ஸ்கிருதத் தில் வெவ்வேறு பெயர்கள் இருக்கின்றன. இத்தகைய இணைப்பை நாடுபவன் யோகி. செயல்வீரன் கர்ம யோகி என்றும், அன்பின்மூலம் இணைப்பை நாடுபவன் பக்தி யோகி என்றும், தியானம், மன ஆராய்ச்சி இவைமூலம் இணைப்பை நாடுபவன் ராஜயோகி என்றும், தத்துவ ஆராய்ச்சியின்மூலம் இணைப்பை அடைய முயல்பவன் ஞானயோகி என்றும் அழைக்கப்படுகிறான்.

முதலில் ராஜயோகத்தை எடுத்துக் கொள்கிறேன். மனத்தைக் கட்டுப்படுத்துவதான இந்த ராஜயோகம் என்பது என்ன? உங்கள் நாட்டில் யோகம் என்ற சொல்லை அர்த்தமற்ற பல விஷயங்களுடன் சம்பந்தப்படுத்தியுள்ளீர்கள். இந்தப் பிதற்றல்களுடன் யோகத்திற்கு எந்தச் சம்பந்தமும் இல்லை என்பதை முதலில் உங்களுக்குச் சொல்லிவிட்டே நான் ஆரம்பிக் கிறேன். இந்த யோகங்களில் ஒன்றுகூட நாம் அறிவுபூர்வ மாகச் சிந்திக்கக் கூடாது என்றோ, ஏமாற வேண்டும் என்றோ, நம் அறிவைப் புரோகிதர்கள் கையில் ஒப்படைத்துவிட வேண் டும் என்றோ, அது போன்ற எதையுமோ சொல்லவில்லை. தேவ தூதர் யாருக்கும் நாம் விசுவாசமாக இருந்தேயாக வேண் டும் என்றும் இவை சொல்வதில்லை. உங்கள் பகுத்தறிவைப் பற்றிக்கொள்ளுங்கள், உடும்புப்பிடியாகப் பிடித்துக் கொள் ளுங்கள் என்றே இந்த யோகங்கள் எல்லாம் சொல்கின்றன.

எல்லா உயிரினங்களிலும் அறிவுபெற மூன்றுவகைக் கருவிகள் உள்ளன. முதலாவது இயல்புணர்ச்சி; இது

மிருகங்களிடம் மிகவும் வளர்ச்சி பெற்றிருக்கும். அறிவிற்கான கருவிகளில் மிகத் தாழ்ந்தது இது. அறிவிற்கான இரண்டாவது கருவி எது? பகுத்தறிவு. இது மனிதனிடம் மிகவும் உச்ச நிலையில் இருப்பதைக் காணலாம். இயல்புணர்ச்சி ஒரு போதுமான கருவியல்ல. மிருகங்களைப் பொறுத்தவரையில் அவற்றின் செயல்படு எல்லை மிகவும் குறுகியது, அந்த எல்லைக்குள் தான் இயல்புணர்ச்சி செயல்படுகிறது. மனிதனிடம் அது பேரளவிற்குப் பகுத்தறிவாகப் பரிணமித்து நிற்கிறது. இங்கே செயல்படு எல்லையும் மிகவும் விரிவடைந்திருக்கிறது. ஆனால் பகுத்தறிவும் போதுமானது அல்ல. உண்மையை அறியும் பாதையில் அது சிறிது தூரம் மட்டுமே போக முடியும்; அதன் பிறகு மேலே போக முடியாமல் நின்றுவிடுகிறது. அதைப் பலவந்தமாக மேலே தள்ள முயன்றால் சர்வ குழப்பமே மிஞ்சும்; பகுத்தறிவே பகுத்தறிவற்றதாகி விடும், தர்க்கம் வெற்று வாதங்களுடன் சுழன்றுசுழன்று வரும்.

நமது புலனறிவுக்கு (perception) அடிப்படையாக இருக்கின்ற ஜடப்பொருள், சக்தி இரண்டையும் உதாரணத்திற்கு எடுத்துக் கொள்வோம். ஜடப்பொருள் என்பது என்ன? எதன் மீது சக்தி செயல்படுகிறதோ அது ஜடப்பொருள். சக்தி என்பது என்ன? எது ஜடப்பொருளின்மீது செயல்படுகிறதோ அது சக்தி. சிக்கல் உங்களுக்குத் தெரிகிறது. இதையே நியாய அறிஞர்கள் அன்யோன்யாச்ரய தோஷம் என்று அழைக்கிறார்கள். அதாவது ஒரு கருத்து மற்றொரு கருத்தைச் சார்ந்திருக்கிறது; இந்தக் கருத்து முதல் கருத்தையே சார்ந்திருக்கிறது. பகுத்தறிவுக்கு முன்னால் ஒரு பெரிய தடை இருப்பதைக் காண்கிறோம். பகுத்தறிவால் இதைக் கடந்து போக முடிவதில்லை. ஆனாலும் இந்தத் தடைக்கு அப்பாலுள்ள எல்லையற்றதன் பேரரசில் நுழைய இது துடிக்கிறது. நமது புலன்கள் உணர்கின்ற, நமது மனம் நினைக்கின்ற இந்த உலகம், இந்தப் பிரபஞ்சம் நமது உணர்வுத் தளத்தில் நீட்டப்பட்டுள்ள எல்லையற்றதன் ஓர் அணு மட்டுமே என்றுதான் சொல்ல வேண்டும். உணர்வால் வரையறுக்கப்பட்ட அந்தக் குறுகிய எல்லைக்குள் மட்டுமே நமது பகுத்தறிவு இயங்க முடியும், அதற்கு அப்பால் முடியாது. ஆகவே அப்பால் நம்மை அழைத்துச் செல்ல வேறொரு கருவி தேவை, அதுவே அக விழிப்புணர்வு.

ஆகவே இயல்புணர்ச்சி, பகுத்தறிவு, அகவிழிப்புணர்வு— இவை மூன்றும் அறிவு பெறுவதற்கான மூன்று கருவிகள்.

இயல்புணர்ச்சி மிருகங்களிடம் காணப்படுவது, பகுத்தறிவு மனிதனிடம் காணப்படுவது, அகவிழிப்புணர்வு தெய்வ-மனிதர் களிடம் காணப்படுவது. ஆனால் அறிவிற்கான இந்த மூன்று கருவிகளின் முளைகளும் அதிகமாகவோ குறைவாகவோ வளர்ச்சி பெற்ற நிலையில் எல்லா மனிதர்களிடமும் இருக் கின்றன. இவை பரிணமிக்க வேண்டுமானால் அந்த முளைகள் ஏற்கனவே இருந்தாக வேண்டும். இந்தக் கருவிகளுள் ஒன்று மற்றொன்றின் பரிணாமம், எனவே அதற்கு முரண்படாது என்பதை நாம் நினைவில்கொள்ள வேண்டும். பகுத்தறிவே அக விழிப்புணர்வாகப் பரிணமிக்கிறது. எனவே அக விழிப் புணர்வு பகுத்தறிவுக்கு முரணாக இருப்பதில்லை; மாறாக அதனை நிறைவு பெறச் செய்கிறது. பகுத்தறிவு அடைய முடி யாதவற்றை அக விழிப்புணர்வினால் வெளிச்சத்திற்குக் கொண்டுவர முடியும்; அவை பகுத்தறிவுக்கு முரண்பாடாக இருப்பதில்லை. குழந்தையின் நிறைவே முதியவன், அவன் குழந்தையிலிருந்து முரண்படுவதில்லை.

தாழ்ந்த நிலையிலுள்ள கருவியை உயர்ந்த நிலையிலுள்ள கருவியாகத் தவறாக நினைத்துக் கொள்வதில்தான் பெரும் ஆபத்து உள்ளது என்பதை எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். பல நேரங்களில் இயல்புணர்ச்சியை அக விழிப் புணர்வு என்று உலகுக்கு அறிவித்து விடுகிறார்கள். தொடர்வது, தங்களிடம் தீர்க்கதரிசன சக்தி உள்ளது என்றெல்லாம் பொய்ப் பிரச்சாரம். முட்டாளும், அரைப் பைத்தியமும் தங்கள் மூளை யில் தோன்றுகின்ற குழப்பங்களையெல்லாம் அக விழிப்புணர்வு என்று நினைத்து, தங்களை எல்லோரும் பின்பற்ற வேண்டு மென்று விரும்புகின்றனர். இதுவரை உலகில் செய்யப்பட்ட முரண்பாடான, பகுத்தறிவுக்குப் பொருந்தாத, அர்த்தமற்ற பிரச்சாரங்கள் எல்லாமே அக விழிப்புணர்வு என்ற போர்வை யில் செய்யப்பட்டவையே; குழப்பம் மிகுந்த இத்தகைய பைத்தியக்கார மூளைகளின் இயல்புணர்ச்சிகளே.

உண்மையான போதனையின் முதல் பரிசோதனை அது பகுத்தறிவுக்கு முரண்பாடாக இருக்கக் கூடாது என்பதுதான். யோகங்கள் எல்லாவற்றிற்கும் இதுவே அடிப்படையாக இருப்பதை நீங்கள் காணலாம். மனஇயல் யோகமான, இணைப் பிற்கு மனஇயல் வழியான ராஜயோகத்தை எடுத்துக் கொள் வோம். இது விரிவான ஒரு விஷயம். இந்த யோகத்தின் மையக் கருத்தை மட்டுமே நான் இப்போது சொல்ல முடியும். அறிவு

பெறுவதற்கு நமக்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. தாழ்ந்த நிலை மனிதன் முதல் மிக உயர்ந்த யோகி வரையில் இந்த ஒரே வழியைத்தான் பயன்படுத்தியாக வேண்டும். அந்த வழிதான் மன ஒருமைப்பாடு. சோதனைச் சாலையில் ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கின்ற வேதியியல் விஞ்ஞானி, தன் மன சக்தியை யெல்லாம் ஒருமுகப்படுத்தி, ஓரிடத்தில் குவித்து, மூலகங்களின் மீது செலுத்துகிறான்; மூலகங்களைப் பகுத்துக் காண்கிறான், இவ்வாறு அறிவு பெறுகிறான். வானஇயல் அறிஞனும் தன் மன சக்திகளையெல்லாம் ஓரிடத்தில் ஒருமுகப்படுத்தி, அதைத் தொலைநோக்கியின் மூலம் வான மண்டலப் பொருட்களில் செலுத்துகிறான்; நட்சத்திரங்களும் மண்டலங்களும் தாமாக வந்து தங்கள் ரகசியத்தை அவனுக்கு வெளிப்படுத்துகின்றன.

கற்பிக்கின்ற பேராசிரியராக இருந்தாலும் சரி, கற்றுக் கொள்கின்ற மாணவனாக இருந்தாலும் சரி அறிவை நாடுகின்ற ஒவ்வொருவரின் விஷயமும் இதுதான். நீங்கள் நான் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். என் பேச்சு உங்களைக் கவரு மானால் உங்கள் மனம் அதில் ஒருமுகப்படும். இந்த ஒருமைப் பாட்டின் காரணமாக, அப்போது மணி அடிப்பதுகூட இந்த ஒருமைப்பாட்டின் காரணமாக உங்கள் காதில் விழாது. மனத்தை ஒருமுகப்படுத்துகின்ற அளவுக்கு உங்களால் எனது பேச்சைப் புரிந்துகொள்ள முடியும். எனது அன்பையும் ஆற்றல் களையும் ஒருமுகப்படுத்த முடிகின்ற அளவுக்கு நான் சொல்ல விரும்புவதை என்னால் சிறப்பாக வெளிப்படுத்த முடியும். இந்த ஒருமைப்பாட்டு ஆற்றல் அதிகமாகும் அளவுக்கு ஏற்ப நாம் பெறுகின்ற அறிவின் அளவும் அதிகமாகும். ஏனெனில் அறிவு பெறுவதற்கான ஒரே வழி இதுவே. செருப்புக்குப் பாலீஷ் போடுபவன்கூடத் தன் மனத்தை ஒருமுகப்படுத்தினால் நன்றாகப் பாலீஷ்போட முடியும். மனத்தை ஒருமுகப்படுத்து கின்ற சமையல்காரனால் மிக நன்றாகச் சமைக்க முடியும்.

பணம் சம்பாதிப்பதிலும் சரி, கடவுளை வழிபடுவதிலும் சரி, மற்ற எதைச் செய்வதிலும் சரி, மன ஒருமைப்பாடு ஆற்றல் வாய்ந்ததாக இருக்கின்ற அளவுக்கு அந்தக் காரியத்தை நன்றாகச் செய்ய முடியும். இந்த ஒரு முயற்சியால் மட்டுமே, இந்த ஒரு சாவியால் மட்டுமே இயற்கையின் கதவுகளைத் திறக்க முடியும், அதன் ஒளியை வெளியே கொண்டுவர முடியும். இந்த ஒருமைப்பாட்டுச் சக்தியே அறிவுப் பொக்கிஷத்திற்கான ஒரே திறவுகோல். ராஜயோகம் இதைப்பற்றிதான் முக்கியமாக

விளக்குகிறது. நம் உடம்பு இப்போது இருக்கும் நிலையில் நாம் மிகவும் சஞ்சலப் பட்டவர்களாக இருக்கிறோம், நமது மனம் தனது ஆற்றல்களையெல்லாம் நூற்றுக்கணக்கான பொருட்களின்மீது செலுத்தி, சிதறடித்து, வீணாக்குகிறது. எண்ணங்களை அமைதிப்படுத்தி ஏதாவது ஒரு பொருளின்மீது மனத்தை ஒருமுகப்படுத்த முயலும்போது, நாம் விரும்பாத பல்லாயிரக்கணக்கான உந்துவேகங்கள் மூளையில் கிளர்ந்தெழுகின்றன; ஆயிரக்கணக்கான எண்ணங்கள் மனத்தில் எழுந்து அதை நிலைகுலைக்கின்றன. அவற்றைத் தடுத்து, மனத்தை எவ்வாறு கட்டுப்படுத்துவது என்பதை விளக்குவதே ராஜயோகம்.

இப்போது, செயலின்மூலம் கடவுளை அடையும் நெறியான கர்மயோகத்தைப் பார்ப்போம். ஏதாவது ஒரு வேலை செய்துகொண்டே இருப்பதற்காகவே பிறந்ததுபோல் பலர் சமுதாயத்தில் இருப்பதைக் காண்கிறோம். அவர்களால் சிந்தனைத் தளத்தில் மனத்தை ஒருமுகப்படுத்த முடியாது. தூலமான, தெளிவாகத் தெரிகின்ற செயலில் மட்டுமே அவர்களுடைய எண்ணம் முழுவதும் குவிந்துள்ளது. இதுபோன்ற வாழ்க்கைக்கும் ஒரு சாதனைமுறை வேண்டும். நாம் ஒவ்வொருவரும் ஏதாவது ஒரு செயலில் ஈடுபட்டிருக்கிறோம். ஆனால் செயலின் ரகசியம் தெரியாததால் பெரும்பாலும் ஆற்றல்களில் பெரும்பகுதியை வீணடித்து விடுகிறார்கள். கர்மயோகம் இந்த ரகசியத்தை விளக்குகிறது; எங்கே, எப்படிச் செயல் புரிவது, நமக்கு முன் இருக்கும் செயலில் நமது ஆற்றல்கள் முழுவதையும் பயன்படுத்தி எப்படி மிகப்பெரும் லாபத்தை அடைவது என்பதையெல்லாம் போதிக்கிறது.

இந்த ரகசியத்தோடு கூடவே செயலுக்கு எதிராகக் கூறப்படுகின்ற ஓர் ஆட்சேபத்தையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும்—செயல் துன்பத்தைத் தருகிறது என்பதே அது. ஆனால் துன்பமும் வேதனையும் பற்றின் காரணமாக வருபவை. நான் வேலை செய்ய எண்ணுகிறேன், யாரோ ஒருவருக்கு நன்மை செய்ய விரும்புகிறேன், ஆனால் நூற்றுக்குத் தொண்ணூறு சம்பவங்களில் நாம் யாருக்கு உதவி செய்தோமோ, அவர் நன்றி மறந்து எனக்குப் பகைவராவதுதான் நடக்கும். விளைவு—எனக்குத் துன்பம். இதைப்போன்ற நிகழ்ச்சிகள் செயலிலிருந்து மனிதர்களை விலகச் செய்கின்றன. துன்பமும் வேதனையும் விளையுமோ என்ற பயம் மனிதகுலத்தின் உழைப்பு, சக்தி இவற்றில் கணிசமான பகுதியை வீணாக்கி விடுகின்றன.

பற்றில்லாமல், யாருக்கு எதற்காக உதவி செய்கிறோம் என்றெல்லாம் பார்க்காமல் செயலுக்காகவே செயல்புரிவது எப்படி என்பதைக் கர்மயோகம் போதிக்கிறது. செயல்புரிவது கர்மயோகியின் இயல்பாக உள்ளது, செயல்புரிவது நல்லது என்று அவன் உணர்கிறான்—இதனால்தான் அவன் செயல் புரிகிறான். இதற்குமேல் எந்தப் பலனையும் அவன் எதிர்பார்ப் பதில்லை. அவன் எப்போதும் கொடுப்பவனாக இருக்கிறான், எதையும் ஏற்பவனாக இருப்பதில்லை. அவன் கொடுப்பது அவனுக்குத் தெரியும், ஆனால் அதற்குப் பிரதியாக அவன் எதையும் எதிர்பார்ப்பதில்லை. ஆகவே துன்பத்தின் பிடியில் அவன் சிக்குவதில்லை. துன்பம் எப்போது வந்தாலும் சரி, அதற்குக் காரணம் 'பற்றின்' எதிர்விளைவு மட்டுமே.

அடுத்து, உணர்ச்சிப் பெருக்குடைய மனிதனுக்கான பக்தி யோகம். அவன் கடவுளை நேசிக்க விரும்புகிறான். சடங்குகள், மலர்கள், வாசனைப் பொருட்கள், அழகான ஆலயங்கள், உருவ வழிபாடு போன்றவற்றை நம்புகிறான், அவற்றில் ஈடுபாடு உடையவனாக இருக்கிறான். அவர்கள் செய்வது தவறு என்று சொல்வதா? உங்களுக்கு நான் ஓர் உண்மையைச் சொல்ல வேண்டும். மிகச் சிறந்த புராணங்களையும் சடங்குகளையும் கொண்ட மதப் பிரிவுகள்தான் உலகின் மாபெரும் மகான் களைத் தோற்றுவித்திருக்கின்றன—இதை நினைவில் கொள்வது நல்லது, அதுவும் இந்த நாட்டில் அது முக்கியமாக வேண்டும். உருவமோ சடங்கோ இல்லாமல் கடவுளை வழிபட முயன்ற மதங்கள் எல்லாமே, மதத்தில் நுண்மையாகவும் அழகாகவும் இருக்கும் விஷயங்களைக் கருணையில்லாமல் அழித்துவிட்டன. இந்த மதங்கள் உயிரற்றவை; மிஞ்சிப்போனால், வெறித்தன மான கொள்கைகள், அவ்வளவுதான். உலக வரலாறே இதற்குச் சாட்சியாக உள்ளது. ஆகவே சடங்குகளையும் புராணங்களை யும் பற்றிக் கேவலமாகப் பேசவேண்டாம். விரும்புபவர்கள் அவற்றைக் கடைப்பிடிக்கட்டும். இளக்காரமாக உங்கள் பற் களைக் காட்டி, 'அவர்கள் முட்டாள்கள், அவர்கள் பின் பற்றட்டும்' என்று சொல்லாதீர்கள், அது சரியல்ல.

என் வாழ்வில் நான் கண்ட மாமனிதர்கள், ஆன்மீகத்தில் அற்புதமாக முன்னேறியவர்கள் எல்லாருமே இந்தச் சடங்குகள் மூலமாக முன்னுக்கு வந்தவர்களே. அவர்களின் காலடியில் அமர்வதற்குக்கூட நமக்குத் தகுதியில்லை, நாம் அவர்களைக் குறை கூறுவதா! இந்தக் கருத்துக்கள் மனித மனங்கள்மீது

எவ்வாறு செயல்படுகின்றன, அவற்றுள் எதை ஏற்பது, எதை விலக்குவது என்பதெல்லாம் நமக்கு எப்படித் தெரியும்? போதிய ஆதாரம் எதுவும் இல்லாமல் எதை வேண்டுமானாலும் விமர்சிப்பது நமது வாடிக்கையாகி விட்டது. வேண்டிய புராணங்களை மக்கள் வைத்துக் கொள்ளட்டும், அவற்றி லிருந்து வேண்டிய அளவு ஊக்கம் பெறட்டும்; ஏனெனில் உணர்ச்சிவசப்படுகின்ற இயல்புடையவர்கள் உண்மையைப் பற்றிய சூட்சும விளக்கங்களைப் பற்றியெல்லாம் கவலைப்படு வதில்லை என்பதை நீங்கள் கருத்தில் கொள்ள வேண்டும். அவர்களைப் பொறுத்தவரை, கடவுள் நமக்கு எட்டக்கூடியவர், அவர் மட்டுமே உண்மையானவர். அவர்கள் அவரை உணர் கிறார்கள், காண்கிறார்கள், கேட்கிறார்கள், அன்பு செலுத்து கிறார்கள். தங்கள் கடவுளை அவர்கள் வழிபட்டுக் கொள்ளட்டும். ஓர் அழகிய சிலையைப் பார்த்தவுடனே அதை உடைத்து, அது எந்தப் பொருளால் செய்யப்பட்டுள்ளது என்று அறிய விரும்புகின்ற முட்டாள்தனமே உங்கள் பகுத்தறிவு என்று அவர்கள் கருதுகிறார்கள்.

சொர்க்கத்திற்குப் போவது, குழந்தைகள், செல்வம் இவற்றைப் பெறுவது என்று எந்த லாப நோக்கமும் இல்லாமல், அன்பு செய்வது நல்லது என்ற ஒன்றிற்காக மட்டுமே கடவுளை நேசிப்பது எப்படி, நன்மையை நாடுவது எப்படி என்பதை பக்தியோகம் போதிக்கிறது. அன்பே அன்பின் மாபெரும் பரிசு, கடவுளே அன்பு என்று பக்தியோகம் போதிக்கிறது. படைப் பவர், எங்கும் நிறைந்தவர், எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர், அனைத்திற்கும் மேலான ஆண்டவன், தந்தை, தாய் என்றெல்லாம் கடவுளைப் போற்றுமாறு பக்தியோகம் போதிக் கிறது. அன்பே கடவுள் என்பதுதான் கடவுளைப்பற்றிச் சொல்லக்கூடிய மிக மேலான சொல், மனித மனம் நினைக்கக் கூடிய மிக உயர்ந்த கருத்து. எங்கெல்லாம் அன்பு இருக்கிறதோ அங்கெல்லாம் அவர் இருக்கிறார். 'எங்கேயானாலும் சரி, எந்த வடிவிலும் சரி அன்பு இருக்குமானால், அங்கே கடவுள் இருக் கிறார்.' கணவன் மனைவியை முத்தமிடும்போது அந்த முத்தத்தில் அவர் இருக்கிறார்; தாய் குழந்தையை முத்தமிடும் போது அந்த முத்தத்தில் அவர் இருக்கிறார். நண்பர்கள் கைகோத்துச் செல்லும்போது அங்கே அன்பு வடிவமாக அவர் இருக்கிறார். ஒரு மாமனிதர் மனித குலத்தை நேசித்து, அதற்கு உதவி செய்ய விரும்பும்போது, அன்பை அள்ளி வழங்க அவர்

அங்கே இருக்கிறார். எங்கெல்லாம் விசாலமான உள்ளம் இருக் கிறதோ அங்கெல்லாம் அவர் வெளிப்படுகிறார். பக்தியோகம் போதிப்பது இதைத்தான்.

கடைசியாக ஞானயோகத்திற்கு வருகிறோம். ஞானயோகி, நாம் பார்க்கின்ற இந்த உலகத்திற்கு அப்பால் போக விரும்பு பவன், சிந்தனையாளன், தத்துவவாதி. அவன் இந்த உலகின் அற்ப விஷயங்களால் திருப்தி அடைவதில்லை. உண்பது, அருந்துவது போன்ற தினசரி வழக்கங்களுக்கு அப்பால் போவது அவனது நோக்கம். ஆயிரக்கணக்கான நூல்களின் போதனை களால்கூட அவன் திருப்தி அடைவதில்லை. ஏனெனில் மிஞ்சிப் போனால் அந்த நூல்கள் இந்தச் சிறிய உலகத்தை அவனது கண்முன் கொண்டு வரலாம், அவ்வளவுதான். வேறு எதுதான் அவனுக்குத் திருப்தி அளிக்கும்? பல்லாயிரக்கணக்கான வெவ் வேறு உலகங்களும் அவனுக்குத் திருப்தி அளிப்பதில்லை, அவனுக்கு இவையெல்லாம் இருப்புக் (Existence) கடலில் ஒரு சிறு துளி மட்டுமே. இவற்றையெல்லாம் கடந்து, உண்மையை உள்ளபடிக் காண்பதன்மூலம், அதை உணர்வதன்மூலம், அது வாக இருப்பதன்மூலம், பரம்பொருளுடன் இரண்டாகக் கலந்துவிடுவதன்மூலம் இருப்பின் மையத்திற்கே செல்ல விரும்பு கிறான். அவன்தான் ஞானயோகி. தாய், தந்தை, பிரபஞ்சத்தைப் படைப்பவர், அதைப் பாதுகாத்து வழி காட்டுபவர் என்றெல் லாம் சொல்வது அவனைப் பொறுத்தவரை கடவுளை விளக்கு வதற்குப் போதியவை அல்ல. அவனது உயிரின் உயிர், அவனது ஆன்மாவின் ஆன்மா—அதுவே அவனுக்குக் கடவுள், அவனது சொந்த ஆன்மாவே கடவுள். கடவுளைத் தவிர வேறு எதுவுமே இல்லை. அழியும் தன்மை கொண்ட பகுதிகளை எல்லாம் தத்துவத்தின் உறுதியான வாதங்களால் அவன் தூள்தூளாக்கி விடுகிறான், கடைசியில் மிஞ்சுவது கடவுள்தான்.

ஒரே மரத்தில் இரண்டு பறவைகள் இருக்கின்றன. ஒன்று மேல்கிளையிலும் மற்றொன்று கீழ்க் கிளையிலும் அமர்ந் துள்ளன. மேல்கிளைப் பறவை அமைதியாக, சாந்தமாக, கம்பீர மாக, தனது மகிமையில் தானே மூழ்கி இருக்கிறது. கீழ்க்கிளைப் பறவை கிளைக்குக்கிளை பறந்து, இனிப்பும் கசப்புமான பழங் களை மாறிமாறி உண்டு, இன்பத்தையும் துன்பத்தையும் மாறி மாறி அனுபவித்துக் கொண்டிருக்கிறது. சில காலத்திற்குப் பிறகு அது மிகவும் கசப்பான ஒரு பழத்தைத் தின்ன நேர்கிறது, அதனால் வெறுப்புற்று மேலே மற்ற பறவையைப் பார்க்கிறது.

அந்தப் பறவையின் சிறகுகள் தங்கமயமாக ஜொலித்துக் கொண்டிருக்கின்றன. அது இனிப்புப் பழங்களையும் சாப்பிடுவதில்லை, கசப்புப் பழங்களையும் தின்பதில்லை; அதற்கு இன்பமும் இல்லை, துன்பமும் இல்லை. அது அமைதியாக தனக்குள் மூழ்கி இருக்கிறது. தன்னைத் தவிர வேறு எதையும் அது காண்பதில்லை.

கீழ்க்கிளைப் பறவை இந்த நிலைக்கு ஏங்குகிறது. ஆனால் சீக்கிரமே இதை மறந்து மறுபடியும் பழங்களைச் சாப்பிட ஆரம்பிக்கிறது. சிறிதுகாலம் கழிகிறது. விஷமாகக் கசக்கின்ற ஒரு பழத்தை மறுபடியும் தின்கிறது, வெறுப்படைந்து மேலே பார்க்கிறது, மேல்கிளைப் பறவையின் நிலையை அடைய முயல்கிறது. மறுபடியும் அதை மறக்கிறது, பழைய விஷயங்களில் ஈடுபடுகிறது, மறுபடியும் மேலே பார்க்கிறது. இவ்வாறே நடந்து கொண்டிருக்கிறது. கடைசியில் மேல்கிளைப் பறவைக்கு மிக அருகே இது சென்றுவிடுகிறது. அதன் சிறகொளி பிரதிபலித்து தன்மீது தழுவிச் செல்வதைக் காண்கிறது. அப்போது கீழ்க்கிளைப் பறவை ஒரு மாற்றத்தை உணர்கிறது. தான் கரைந்து, மறைந்து விடுவதைப்போல் அதற்குத் தோன்றுகிறது. அது இன்னும் பக்கத்தில் போகிறது. அப்போது முழுவதும் கரைகிறது, இறுதியில் இந்த அற்புதமான மாற்றத்தைப் புரிந்து கொள்கிறது. மேல்கிளைப் பறவையின் அதே தோற்றம் கொண்ட நிழலே, அதன் பிரதிபலிப்பே கீழ்க்கிளைப் பறவை; அடிப்படையில் எப்போதுமே அது மேல்கிளைப் பறவையாகவேதான் இருந்து வந்திருக்கிறது. கீழ்க்கிளையின் அந்தச் சின்னப்பறவை இனிப்புகசப்புப் பழங்களைச் சாப்பிட்டதும், மாறிமாறி இன்ப துன்பங்களை அனுபவித்ததும் எல்லாம் வெறும் கற்பனை, வெறும் கனவு. உண்மையான பறவை மேல்கிளையில் எப்போதுமே அமைதியாக, சாந்தமாக, கம்பீரமாக, மகிமைமிக்கதாக, கவலைகளுக்கு அப்பாற்பட்டதாக, துன்பங்களுக்கு அப்பாற்பட்டதாக இருந்திருக்கிறது.[1]

மேல்பறவைதான் பரமாத்மா, பிரபஞ்சத்தின் தலைவன்; கீழ்ப்பறவை ஜீவாத்மா, மனிதன். அவன்தான் இந்த உலகின் இனிப்புகசப்புப் பழங்களைத் தின்று கொண்டிருக்கிறான். அவனுக்கு அவ்வப்போது ஒரு பலத்த அடி விழுகிறது. சிறிது நேரத்திற்குப் பழங்களைத் தின்பதை விட்டுவிட்டு அறியாத

1. முண்டக உபநிடதம் 3. 1. 1-3.

கடவுளை நாடுகிறான். அப்போது வருகிறது ஒளிவெள்ளம். இந்த உலகம் வெறும் பகட்டுக் காட்சி என்பதை அவன் உணர்கிறான். ஆனால் மறுபடியும் புலன்கள் அவனைக் கீழே இழுக்கின்றன. மறுபடியும் அவன் உலகின் இனிப்புசுசப்புப் பழங்களை முன்போலவே தின்னத் தொடங்குகிறான். மீண்டும் வருகிறது ஒரு பேரடி. அவனது இதயம் திறக்கிறது, தெய்வீகப் பேரொளி அங்கே நிறைகிறது. இவ்வாறு அவன் மெள்ளமெள்ள இறைவனை நெருங்குகிறான். நெருங்கநெருங்க பழைய அவன் கரையத் தொடங்குகிறான். போதிய அளவு அருகில் வரும் போது, தானே அந்த இறைவன் என்பதை உணர்கிறான்; 'பிரபஞ்சத்தின் உயிர் என்றும், அணுவிலும் சூரியர்களிலும் சந்திரர்களிலும் இருப்பவன் என்றும் உனக்கு நான் கூறிய அதே கடவுள் நமது வாழ்க்கைக்கும் ஆதாரமாக உள்ளார். அவர் நமது அந்தராத்மா, இன்னும் சொல்லப்போனால் நீயே அது' என்று முழங்குகிறான்.

ஞானயோகம் போதிப்பது இதைத்தான். மனிதன் அடிப்படையில் தெய்வீகமானவன் என்று அது அவனுக்குக் கற்பிக்கிறது. நாம் ஒவ்வொருவருமே பூமியில் பிறந்துள்ள கடவுள்தான் என்று கூறி, வாழ்வின் உண்மையான ஒருமையைக் காட்டுகிறது அது. நம் காலின் கீழ் ஊர்ந்து செல்லும் சாதாரணமான புழு முதல், பயபக்தியோடும் ஆச்சரியத்தோடும் நாம் போற்றுகின்ற தெய்வங்கள்வரை எல்லோரும் ஒரு இறைவனின் வெளிப்பாடுகளே.

கடைசியாக, இந்த எல்லா யோகங்களையும் நடைமுறையில் கடைப்பிடிப்பது மிகவும் அவசியம். வெறும் ஏட்டுப் படிப்பு எந்தப் பயனையும் தராது. முதலில் அவற்றைப் பற்றிக் கேட்க வேண்டும், பிறகு சிந்திக்க வேண்டும். அந்தச் சிந்தனைகளைப் பகுத்தறிவால் ஆராய வேண்டும், அவற்றை மனத்தில் பதிக்க வேண்டும், அவை நமது வாழ்க்கையுடன் ஒன்றிக் கலக்கும்வரை அவற்றைத் தியானிக்க வேண்டும், உணர வேண்டும். அதன்பிறகு மதம் வெறும் கருத்துக் குவியலாகவோ, கொள்கைகளாகவோ, அறிவுபூர்வமான ஒப்புதலாகவோ மட்டும் இருக்காது. அது நமது வாழ்க்கையுடன் இரண்டறக் கலந்துவிடும். அறிவுபூர்வமான ஒப்புதலின் காரணமாக இன்று நாம் பல முட்டாள்தனமான கருத்துக்களை ஏற்றுக் கொள்வோம், நாளைக்கே அவற்றை மாற்றியும் விடுவோம். ஆனால் உண்மையான மத உணர்வு மாறுவதில்லை. மதம் என்பது

அனுபூதி; பேச்சோ, கோட்பாடுகளோ, கொள்கைகளோ, அவை எவ்வளவு அழகாக இருந்தாலும், மதம் ஆகாது. கேட்பதும் ஒப்புதலும் அல்ல, அதுவாகவே இருப்பதும் அதுவாகவே ஆவதும்தான் மதம். நாம் நம்பும் பொருளாகவே நாம் மாறிவிடுவதுதான் மதம். ❑

## 4. மதம்: முறைகளும் நோக்கமும்

லண்டன், 14 மே 1896

உலக மதங்களை ஆராய்வதில் பொதுவாக இரண்டு முறைகள் பின்பற்றப்படுவதைக் காண்கிறோம். கடவுளிடமிருந்து மனிதனுக்குச் செல்வது ஒருவகை. செமிட்டிக் மதத் தொகுதிகளில் இதைக் காண்கிறோம். இவற்றில் கடவுளைப்பற்றிய கருத்து ஏறக்குறைய ஆரம்பத்திலேயே வருகிறது, ஆனால் ஆச்சரியம் என்னவென்றால் ஆன்மாவைப்பற்றிய ஒரு கருத்துகூட அங்கே கிடையாது. பழங்கால ஹீப்ரூக்கள் சமீபகாலம்வரை மனித ஆன்மாபற்றிய எந்தக் கோட்பாட்டையும் உருவாக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஒருவகை மனம் மற்றும் சில ஜடப் பொருள் பகுதிகள் இவற்றால் உருவானவனே மனிதன், அவ்வளவுதான். மரணத்தோடு எல்லாம் முடிவடைந்து விடுகின்றன. ஆனால் மறுபுறம், இதே இனத்தினர் கடவுளைப் பற்றி மிகவும் அற்புதமான கருத்தை உருவாக்கியுள்ளனர். இது ஒரு முறை. இது செமிட்டிக் இனத்தினரின் வழி.

மற்றொன்று மனிதனின் வாயிலாகக் கடவுளை அடைவது. இது சிறப்பாக ஆரியர்களைச் சார்ந்தது. ஆரியன் ஆன்மாவிலிருந்து தொடங்கினான். கடவுளைப்பற்றிய அவனது கருத்துக்கள் மங்கலானவையாக, உருப்பெறாதவையாக, தெளிவற்றவையாக இருந்தன. ஆனால் மனித ஆன்மாவைப்பற்றிய அவனது கருத்து தெளியத்தெளிய அதே விகிதத்தில் கடவுளைப்பற்றிய அவனது கருத்தும் தெளிவுற்றது. ஆகவே வேதங்களில் உள்ள ஆராய்ச்சி ஆன்மாவின்மூலமே இருந்தது. கடவுளைப்பற்றி ஆரியர்கள் எய்திய அறிவனைத்தும் மனித ஆன்மாமூலமாகவே கிடைத்தது. ஆகவே தெய்வத்தை உள்ளே தேடுவது என்பது அவர்களுடைய தத்துவ நெறிகளின்மீது பதிந்த தனி முத்திரையாகும். ஆரியன் தெய்வத்தை எப்போதும் தன்னுள்தான் தேடினான். நாளடைவில் இது ஒரு தனி இயல்பாகிவிட்டது. அவர்களுடைய கலைகளிலும் நடைமுறை விவகாரங்களிலும் இது தெரிகிறது. மத சாதகன் ஒருவனைச் சித்தரிக்கின்ற ஐரோப்பியப்

படத்தைப் பாருங்கள்; கண்கள் திறந்து மேல்நோக்கியபடி விண்ணைப் பார்த்து நிற்கும். இது இயற்கைக்கு வெளியே அவன் கடவுளைத் தேடுவதாகும். ஆனால் இந்தியாவில், கண்கள் மூடியிருப்பதாக அந்த ஓவியம் காட்டப்படும். அவன் அகத்தில் பார்த்துக் கொண்டிருப்பதைக் குறிப்பது அது.

புற இயற்கை, அக இயற்கை என்னும் இவையே மனிதன் கற்க வேண்டிய இரண்டு விஷயங்கள். இவையிரண்டும் முரண் பட்டவைபோல் முதலில் தோன்றினாலும், சாதாரண மனிதனைப் பொறுத்தவரை, எண்ண உலகமாகிய அக உலகத் தினால்தான் புறவுலகம் முற்றிலும் ஆக்கப்பட்டிருக்கிறது. எல்லா நாடுகளிலும், குறிப்பாக மேலை நாடுகளில் பெரும் பான்மையான தத்துவ நெறிகள் ஜடப்பொருளும் மனமும் முரணானவை என்ற கருத்துடன்தான் தொடங்குகின்றன. ஆனால் இரண்டும் ஒன்றையொன்று நோக்கியே சென்று கொண்டிருக்கின்றன, முடிவில் இவை கலந்து எல்லையற்ற பூரணமாகி விடுகின்றன. இப்படி அலசிப் பார்ப்பதால் ஒன்று உயர்ந்தது, ஒன்று தாழ்ந்தது என்று நான் கருதுவதாக எண்ண வேண்டாம். புற உலகின் வாயிலாக உண்மையை நாட விரும்பு பவர்கள் தவறான பாதையில் செல்கிறார்கள் என்பதோ, அக உலகின் மூலமாக உண்மையைத் தேடுபவர்கள் உயர்ந்தவர்கள் என்பதோ என் கருத்து அல்ல. இவையிரண்டுமே ஆராய்ச்சி முறையின் இரண்டு வழிகள், இரண்டும் இருக்கத்தான் வேண்டும், இரண்டையும் பின்பற்றத்தான் வேண்டும். இறுதியில் இரண்டும் சந்திப்பதை நாம் காண்போம். உடம்பு உள்ளத்திற்குப் பகையல்ல, உள்ளமும் உடம்பிற்குப் பகையல்ல என்பதை நாம் காண்போம். ஆனால் உடம்பு ஒரு பெரிய விஷயம் அல்ல என்று கருதும் பலரை நாம் பார்க்கிறோம். உடம்பு ஒரு நோய், பாவத்தின் வடிவம் என்றெல்லாம் எண்ணிய பலர் பண்டைக் காலங்களில் எல்லா நாடுகளிலும் இருந்தனர். பின்னால் வேதங்கள் கற்பிப்பதுபோல் உடம்பு மனத்தில் கரைகிறது, மனம் உடலில் கரைகிறது என்பதைப் பார்க்கிறோம்.

'ஒரு பிடி களிமண்ணின் இயல்பை அறிவதால் பிரபஞ்சத் திலுள்ள எல்லா களிமண்ணையும் உணர்வோம். அதுபோல் எதை அறிந்தால் மற்ற எல்லாவற்றையும் நாம் தெரிந்துகொள்ள இயலும்?'[1] என்பதுதான் எல்லா வேதங்களின் ஊடேயும்

1. சாந்தோக்கிய உபநிடதம், 6. 1. 3-4

விளங்குகின்ற ஒரே கருத்து என்பதை நினைவில்கொள்ள வேண்டும். சொல்லப்போனால், மனித அறிவு அனைத்தின் அடிப்படையே இதுதான். அதாவது நாமெல்லோரும் தேடிச் சென்று கொண்டிருக்கின்ற ஒருமையைக் கண்டுபிடிப்பதே, அறிவு அனைத்தின் நோக்கம். நமது வாழ்வின் ஒவ்வொரு செயலும், அவை மிகவும் உலோகாயதமான தூலமான செயல்களாக இருந்தாலும் சரி, மிகமிக நுண்மையான மிகமிக உயர்ந்ததான மிகமிக ஆன்மீகமயமான செயல்களாக இருந்தாலும் சரி, ஒருமையைக் காண்பது என்ற இந்த லட்சியத்தை நோக்கியே எல்லாமே ஒரேபோல் செல்கின்றது.

ஒருவன் தனியாக இருக்கிறான், பிறகு திருமணம் செய்து கொள்கிறான். இது மேற்பார்வைக்குத் தன்னலச் செய்கையாகத் தோன்றலாம். ஆனால் அதேவேளையில் இந்தச் செயலைத் தூண்டிய சக்தி, அந்த ஒருமையைக் கண்டுபிடிப்பது என்பது தான். அவனுக்குப் பிள்ளைகள் இருக்கிறார்கள், நண்பர்கள் இருக்கிறார்கள்; அவன் தாய்நாட்டை நேசிக்கிறான், அந்த அன்பு உலகின்மீது நேசமாக விரிகிறது, இறுதியில் இந்தப் பிரபஞ்சத்தையே தழுவக்கூடிய அன்பாக அது கனிகிறது. தடுக்க முடியாதபடி நாம் அந்த நிறைநிலையை நோக்கி இழுத்துச் செல்லப்படுகிறோம். ஒருமையை நமது இந்தச் சிறிய-நான் என்பதைக் கொன்று, நம்மை மேலும்மேலும் விரியச் செய்து அந்த ஒருமையை அடைவது என்பதே நிறைநிலையை நோக்கிச் செல்வது, விரைந்து நாடிச் சென்று கொண்டிருக்கின்ற இலக்கு, குறிக்கோள் இதுவே. ஒவ்வோர் அணுவும் தனக்கு அருகிலுள்ள அணுவை அடைந்து அதனுடன் கலக்க முயல்கிறது. இவ்வாறு அணுக்கள் அணுக்களோடு சேர்ந்து பெரிய பந்துகளாகி, அவை பூமிகளாகவும் சூரியர்களாகவும் சந்திரர்களாகவும் விண்மீன்களாகவும் கிரகங்களாகவும் ஆகின்றன. அவையும் ஒன்றோடு ஒன்று கலக்கத் தீவிரமாக விரைகின்றன. இறுதியில் இந்தப் பிரபஞ்சம் அனைத்தும்—மனப் பிரஞ்சமும் ஜடப் பிரபஞ்சமும்—கலந்து ஒன்றாகிவிடும்.

அண்டத்தில் மிக விரிவான அளவில் நடக்கின்ற நிகழ்ச்சி முறை, பிண்டத்தில் சிறிய அளவில் நடக்கிறது. பிரபஞ்சம் தனித்துள்ளது, வேறுபட்டதாக உள்ளது; அதேவேளையில் ஒருமையை, பிரிவின்மையை நாடி விரைந்து கொண்டிருக்கிறது. அதுபோல் பிண்டத்தை எடுத்துக் கொண்டாலும், ஒவ்வோர் ஆன்மாவும் பிறவற்றிலிருந்து பிரிக்கப்பட்டதுபோல் தனித்துப்

பிறப்பதாகவே நினைக்கிறது. ஓர் ஆன்மா எந்த அளவுக்கு அறியாமையில் ஆழ்ந்துள்ளதோ, அறிவொளியின்றிக் கிடக்கிறதோ அந்த அளவுக்கு அது பிரபஞ்சத்திலிருந்து தன்னை வேறாகக் கருதுகிறது. மனிதன் எந்த அளவுக்கு அறியாமையில் மூழ்கியுள்ளானோ அந்த அளவுக்கு தான் இறக்கப்போகிறோம், பிறக்கப் போகிறோம் என்றெல்லாம் நினைக்கிறான். இத்தகைய எண்ணங்கள் அவனது இந்த வேறுபட்டிருக்கின்ற நிலையின் வெளிப்பாடே.

அறிவு வரும்போது மனிதன் முதிர்ச்சி அடைகிறான், அவனிடம் ஒழுக்கம் நிலவுகிறது, பிரிவின்மைக் கருத்து ஆரம்பிக்கிறது. மனிதன் புரிந்துகொள்கிறானோ இல்லையோ, அவன் தன்னலமற்றவனாகுமாறு பின்னாலிருந்து அந்தச் சக்தி தூண்டுகின்றது. எல்லா ஒழுக்க நெறிக்கும் இதுவே அடிப்படை. எல்லா மொழிகளிலும், எல்லா மதங்களிலும், எல்லா தீர்க்க தரிசிகளாலும் போதிக்கப்பட்ட எல்லா நீதிநெறிகளின் சாரம் இதுதான். 'சுயநலமற்று இருங்கள்', 'நான் அல்ல நீ'—இதுதான் எல்லா ஒழுக்கநெறிகளுக்கும் பின்னணி. இதன் பொருள் என்ன? தனித்துவம் என்பதே இல்லை, நீ என்னில் ஒரு பகுதி, நான் உன்னில் ஒரு பகுதி என்பதை ஏற்றுக்கொள்வது; நான் உன்னைத் துன்புறுத்தினால், என்னையே துன்புறுத்துகிறேன், உனக்கு உதவினால் எனக்கே உதவுகிறேன் என்பதை ஏற்றுக்கொள்வது; நீ உயிர் வாழ்கின்றபொழுது எனக்கு இறப்பு இருக்க இயலாது என்பதை ஏற்றுக்கொள்வது. இந்தப் பிரபஞ்சத்தில் ஒரு புழு உயிருடன் இருக்கும்வரையில் நான் எப்படிச் சாக முடியும்? ஏனெனில் என் உயிர் அந்தப் புழுவின் உயிரிலும் உள்ளது. அதேவேளையில் இது ஒரு பாடமும் கற்பிக்கிறது, உதவி செய்யாமல் நம் சகோதரர்களுள் ஒருவரையும் நாம் புறக்கணிக்க இயலாது, ஏனெனில் அவர்களின் நலத்தில்தான் நம் நலம் இருக்கிறது. வேதாந்தம் முழுவதிலும் சரி, மற்றைய மதங்களிலும் சரி இந்தக் கருத்துதான் ஊடுருவியுள்ளது.

பொதுவாக மதங்கள் மூன்று பகுதிகளாகப் பிரிந்து அமைகின்றன. முதற்பகுதியில் மதத்தின் தத்துவம், அதன் சாரம், அதன் கோட்பாடுகள் உள்ளன. இந்தக் கோட்பாடுகள் புராணத்தில், அதாவது மகான்கள், வீரர்கள், தேவதைகள், தேவர்கள், தெய்வங்கள் என்று இவர்களுடைய வாழ்க்கை வரலாறுகளில் உருப்பெறுகின்றன. புராணத்தின் கருத்தே ஆற்றலை வலியுறுத்துவதுதான். சற்று தாழ்ந்த புராணங்களில், ஆதிகால

மனிதன் கண்ட புராணங்களில் இந்த ஆற்றல் தோள்வலிமை யாக வெளிப்படுகிறது. அந்தப் புராணங்களின் நாயகர்கள் மாபெரும் வீரர்கள்; ஒருவன் உலகனைத்தையும் வென்றுவிடு வான்—அத்தகைய பலசாலிகள்.

மனிதன் வளரவளர தோள்வலிமையைவிட உயர்ந்த ஒரு சக்திக்கு உருக்கொடுக்க வேண்டும். ஆதலால் அவன் போற்றிய வீரர்களும் தங்கள் ஆற்றலைச் சற்று மேலான ஒன்றில் வெளிப் படுத்துகிறார்கள். சிறந்த புராணங்களின் நாயகர்கள் அறத்தில் மிக உயர்ந்த ஆன்றோர்களாக உள்ளார்கள். ஒழுக்கமானவர் களாகவும் தூயவர்களாகவும் தங்களை உருவாக்கிக் கொள்வதில் அவர்களுடைய ஆற்றல் புலனாகின்றது. பேரலைபோல் பொங்கி வருகின்ற தன்னலம், அநீதி போன்றவற்றைத் தனித்து நின்றே எதிர்கொண்டு அவற்றைப் பின்வாங்கும்படிச் செய்து விடுவார்கள் அவர்கள்.

மதங்களின் மூன்றாம் பகுதி சின்னங்கள், அதாவது உருவ வழிபாடு, சடங்கு என்று நாம் அழைப்பவை. நாயகர்களின் வாழ்க்கை மற்றும் புராணங்களின்மூலம் போதிக்கப்படுகின்ற உண்மையைக்கூட எல்லோராலும் அறிந்துகொள்ள முடிவ தில்லை. அதைவிடக் கீழ்நிலை மனங்கள் உள்ளன. குழந்தைகள் போல் அவர்களுக்குப் பாலர் வகுப்பு வேண்டியிருக்கிறது. அதற்காக உருவானவையே சின்னங்கள். இவற்றை அவர்கள் கிரகிக்கலாம், உணரலாம், புரிந்துகொள்ளலாம், தூலப்பொருட் களைப்போல் பார்க்கலாம், கையாளலாம்.

இவ்வாறு ஒவ்வொரு மதத்திலும் தத்துவம், புராணம், சடங்கு என்ற மூன்று நிலைகள் இருப்பதைக் காண்கிறோம். இந்தியாவில் இந்த மூன்று நிலைகளும் நன்கு வரையறுத்துப் பிரிக்கப்பட்டுள்ளது, வேதாந்தத்திற்கு ஒரு சிறந்த அனுகூலமாக உள்ளது. மற்ற மதங்களில் தத்துவங்களும் புராணங்களும் பிரிக்க இயலாதபடி ஒன்றோடு ஒன்று பின்னிக் கிடக்கின்றன. புராணங்கள் ஓங்கி வளர்ந்து தத்துவங்களை விழுங்கிவிட்டன; பல நூற்றாண்டுகளின் காலப்போக்கில் தத்துவங்கள் மறைந்தே விட்டன. தத்துவங்களுக்கான விளக்கங்களும் உதாரணங்களும் தத்துவங்களையே மறைத்துவிடுகின்றன. விளக்கங்களையும் தீர்க்கதரிசியையும் போதகர்களையும் மட்டுமே மக்களும் பார்க் கிறார்கள்; தத்துவங்கள் இருந்த இடம் தெரியாமல் போய் விட்டன என்றுதான் சொல்ல வேண்டும். இன்றுகூட ஏசுவை ஒதுக்கிவிட்டு, கிறிஸ்தவ மதத்தின் தத்துவங்களை மட்டும்

ஒருவன் துணிந்து போதிப்பானானால் மக்கள் அவனை எதிர்ப் பார்கள்; அவன் செய்வது தவறு, கிறிஸ்தவ மதத்தையே அவன் தாக்குகிறான் என்று நினைப்பார்கள். முகமதிய மதத்தின் தத்துவங்களை மட்டும் ஒருவன் போதித்தால் முகமதியர்களும் அப்படித்தான் நினைப்பார்கள். ஏனெனில் தூலமான கருத்துக் களும், மாமனிதர்கள் மற்றும் தீர்க்கதரிசிகளின் வரலாறுகளும் தத்துவங்களை முற்றிலும் பின்னணியில் தள்ளிவிட்டன.

வேதாந்தத்திற்கு உள்ள முக்கியமான அனுகூலம் என்ன வென்றால் அது ஒரு தனித்த மனிதனால் வகுக்கப்பட்டதல்ல. எனவே பௌத்தம், கிறிஸ்தவம், இஸ்லாம் போன்ற மதங்களில் நிகழ்ந்ததுபோல், இங்கே ஒரு தீர்க்கதரிசியோ போதகரோ இயல்பாகவே தத்துவங்களை மறைக்கவோ, பின்னணியில் தள்ளவோ செய்யவில்லை. தத்துவங்கள் வாழ்கின்றன, தீர்க்க தரிசிகள் இரண்டாம் பட்சமாக்கப்பட்டதுபோல் தோன்று கிறது, அவர்களை வேதாந்தம் குறிப்பிடவும் இல்லை. உப நிடதங்கள் ஒரு குறிப்பிட்ட தீர்க்கதரிசியைப் பற்றிக் கூறவில்லை. ஆனால் பல தீர்க்கதரிசிகளையும் தீர்க்கதரிசினிகளையும்பற்றிக் கூறுகின்றன. பண்டைய ஹீப்ருக்களிடையே இத்தகைய கருத்து நிலவியது. ஆனாலும் ஹீப்ரு இலக்கியத்தின் பெரும்பகுதி யையும் மோசஸ் ஆக்கிரமிக்கிறார்.

இத்தகைய தீர்க்கதரிசிகள் மதத்துறையில் நாட்டையே கையில் வைத்திருப்பது தவறு என்பது என்னுடைய கருத்தல்ல. ஆனால் தத்துவங்கள் முற்றிலுமாக மறக்கப்பட்டால் அது நிச்சயமாக தீங்கு விளைவிக்கும். தத்துவங்கள் சம்பந்தப்பட்ட வரையில் நமக்கு நல்ல உடன்பாடு இருக்க முடியும், ஆனால் தனிநபர்களைப்பற்றி அப்படிச் சொல்ல முடியாது. தனிநபர்கள் நம் உணர்ச்சிகளையே தொடுவார்கள், தத்துவங்களோ அவற்றைவிட மேலான அதாவது நம்முடைய அமைதியான விவேகத்தைத் தொடும். தத்துவங்கள் இறுதியில் வெற்றிகண்டே தீரும். ஏனெனில் அதுதான் மனிதனின் மனிதத்துவம். உணர்ச்சி கள் பல வேளைகளில் நம்மை மிருகங்களின் நிலைக்கு இழுத்துச் சென்றுவிடுகின்றன. உணர்ச்சிகள் பகுத்தறிவைவிடப் புலன் களுடன்தான் அதிகம் தொடர்புள்ளவையாக இருக்கின்றன. எனவே தத்துவங்கள் முற்றிலுமாக மறக்கப்பட்டு, உணர்ச்சிகள் ஆதிக்கம் செலுத்தும்போது மதம் இழிந்து மதவெறியாக, பிரி வினை வாதமாக மாறுகிறது. அரசியல் கட்சிகள் போன்ற வற்றைவிட இவை உயர்ந்தவை அல்ல. அச்சுறுத்துகின்ற மூடக்

கொள்கைகள் பின்பற்றப்படும், இந்தக் கருத்துக்களுக்காக சகோதரர்களின் கழுத்தையும் அறுக்க ஆயிரம்பேர் ஆயத்தமாக இருப்பார்கள். இதன் காரணமாகத்தான் மாமனிதர்களும் தீர்க்க தரிசிகளும் நன்மையைத் தூண்டுகின்ற சக்தியாகத் திகழ்ந் தாலும், அவர்கள் எந்தத் தத்துவங்களுக்குப் பிரதிநிதியாக உள்ளார்களோ, அந்தத் தத்துவங்களைப் புறக்கணிப்பார் களானால் அது பேரபாயத்தை விளைவிக்கும். இது மக்களை மத வெறியில் கொண்டு சேர்க்கும், உலகை ரத்த வெள்ளத்தில் மூழ்கடிக்கும்.

வேதாந்தம் இந்தச் சிக்கலைத் தவிர்க்க முடிகிறது. ஏனெனில் அங்கே தனிப்பட்ட ஒரு தீர்க்கதரிசி இல்லை. அது பல தீர்க்கதரிசிகளைக் கொண்டது, அவர்களை ரிஷிகள் என்று சொல்வார்கள். ரிஷி என்ற சொல் காண்பவர் என்று பொருள் படுகிறது; உண்மைகளைக் காண்பவர்கள் அவர்கள், மந்திரங் களைக் காண்பவர்கள் அவர்கள். மந்திரம் என்றால் மனனம் செய்வது, மனத்தால் சிந்திப்பது. ரிஷிகள் இந்தச் சிந்தனை களைக் கண்டவர்கள். இவை குறிப்பிட்ட சிலரின் சொத்தல்ல; எவ்வளவு மேலானவர்களாக இருந்தாலும் ஒருவருக்கோ, ஒருத்திக்கோ மட்டும் சொந்தமானவை அல்ல; உலகம் தந்த மாமனிதர்களான புத்தருக்கும் ஏசுவிற்கும்கூட உரிமையானவை அல்ல. மாமனிதரான புத்தருக்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை மிகச் சாதாரணமான ஒருவனுக்கும் உண்டு. ஏசுவிற்கு எவ்வளவு உரிமை உண்டோ அவ்வளவு உரிமை நிலத்தில் ஊர்கின்ற ஒரு புழுவுக்கும் உண்டு. ஏனெனில் அவை பிரபஞ்சம்தழுவிய தத்துவங்கள். இவை ஒருபோதும் படைக்கப் படவில்லை; எக்காலத்திலும் இருந்துவருகின்றன, என்றும் இருக்கும். விஞ்ஞானம் இன்று நமக்குக் கற்பிக்கின்ற எந்த நியதிகளைப் பின்பற்றியும் படைக்கப்பட்டவையல்ல இவை. அவை மறைந்து கிடக்கின்றன, பிறகு கண்டுபிடிக்கப்படுகின்றன, ஆனால் இயற்கையில் என்றென்றும் இருக்கின்றன. நியூட்டன் பிறந்திருக்காவிட்டாலும் புவியீர்ப்பு விதி அப்படியேதான் இருந்திருக்கும்; அப்படியே வேலை செய்திருக்கத்தான் செய்யும். அதைக் கண்டுபிடித்து, உருக்கொடுத்து, மனித இனத்தின் உணர்வுக்குப் புலனாகச் செய்த பெருமை மேதையான நியூட்டனைச் சார்ந்தது.

இந்த மத விதிகளும், இந்த ஆன்மீகப் பேருண்மைகளும் அப்படித்தான். இவை என்றென்றும் செயல்பட்டுக்கொண்டே

இருக்கின்றன. வேதங்களும் பைபிள்களும் குரான்களும் எதுவுமே இல்லையென்றாலும், ரிஷிகளும் தீர்க்கதரிசிகளும் பிறக்கவே இல்லை என்றாலும் இந்த விதிகள் இருக்கவே செய்யும். அவை உள்ளடங்கிக் கிடந்தன, அவ்வளவுதான். மெதுவாக ஆனால் படிப்படியாகச் செயல்பட்டு, அவை மனித இனத்தையும் மனித இயல்பையும் உயர்த்தவே செய்யும். இவற்றைக் கண்டவர்கள், கண்டுபிடித்தவர்கள் தீர்க்கதரிசிகள். ஆகவே ஆன்மீகத் துறையில் இவர்கள் கண்டுபிடிப்பாளர்கள். பௌதீக விஞ்ஞானத்துறையில் எப்படி நியூட்டனும் கலிலியோவும் தீர்க்கதரிசிகளோ, அப்படி இந்த ரிஷிகள் ஆன்மீகத் துறையில் தீர்க்கதரிசிகள். இவற்றுள் எந்த விதிகளிடமும் இவர்கள் தனி உரிமை பாராட்ட முடியாது; இவை இயற்கை முழுவதற்குமே பொதுவான சொத்து.

வேதங்கள் என்றும் இருப்பவை என்று இந்துக்கள் சொல்வதன் கருத்து இப்போது நமக்கு விளங்குகிறது. அதாவது இயற்கைக்கு எப்படி முதலும் முடிவும் இல்லையோ, அப்படியே இந்த விதிகளுக்கு ஆதியுமில்லை, அந்தமும் இல்லை. எத்தனையோ பூமிகள் தோன்றும், எத்தனையோ மண்டலங்கள் பிறக்கும். சிலகாலம் செயல்படும், மீண்டும் குழப்பாழில் (chaos) ஒடுங்கிவிடும். ஆனால் பிரபஞ்சம் அப்படியேதான் இருக்கிறது. கோடிக் கணக்கான மண்டலங்கள் தோன்றுகின்றன, கோடிக் கணக்கான மண்டலங்கள் அழிகின்றன, ஆனால் பிரபஞ்சம் அப்படியேதான் இருக்கும். ஒரு குறிப்பிட்ட கிரகம் சம்பந்தப்பட்ட வரையில் காலத்தின் தொடக்கத்தையும் முடிவையும் கூறலாம்; ஆனால் பிரபஞ்சம் சம்பந்தப்பட்ட வரையில் காலம் என்பதற்கு எந்தப் பொருளும் இல்லை. அதுபோலவே இயற்கை விதிகள், பௌதீக விதிகள், மன விதிகள், மற்றும் ஆன்மீக விதிகளும் தொடக்கமும் முடிவும் அற்றவையாக இருக்கின்றன. இவற்றை மனிதன் விளக்க முயன்றதெல்லாம் ஒரு சில ஆண்டுகளில், அதாவது, ஆயிரக்கணக்கிலே என்று கணக்கிடக் கூடிய கால எல்லைக்குள்தான். எல்லையற்றதான தொகுதி அப்படியேதான் இருக்கிறது, ஆகையால் முதன்முதலில் வேதங்களிலிருந்து நாம் கற்கும் ஒரு பெரிய பாடம், மதம் இப்போதுதான் தொடங்கியிருக்கிறது என்பதுதான். எல்லையற்றதான ஆன்மீகப் பெருங்கடல் நாம் கண்டுபிடித்து விளக்குவதற்காக, வாழ்க்கையில் செயல்முறைப்படுத்துவதற்காக நம் முன் விரிந்து கிடக்கிறது. இந்த உலகம் பல்லாயிரக் கணக்கில் தீர்க்கதரிசிகளைக்

கண்டுவிட்டது; இன்னும் கோடிக் கணக்கானவர்களைக் காணப் போகிறது.

பண்டைய நாட்களில் ஒவ்வொரு சமுதாயத்திலும் பல தீர்க்கதரிசிகள் இருந்த காலங்கள் உண்டு. உலகிலுள்ள ஒவ்வொரு நகரத்தின் ஒவ்வொரு தெருவிலும் தீர்க்கதரிசிகள் நடமாடும் காலம் வரும். பண்டைக் காலங்களில், அசாதாரண மான சில குறிப்பிட்ட மனிதர்கள் சமுதாயச் சட்டங்களின் காரணமாகத் தீர்க்கதரிசிகளாக ஆக்கப்பட்டார்கள். மதவாதி யாகக் கருதப்பட வேண்டும் என்றால் தீர்க்கதரிசியாக இருக்க வேண்டும். ஆணானாலும் சரி, பெண்ணானாலும் சரி தீர்க்க தரிசி ஆனால்தான் அவர் மதவாதியாகக் கருதப்படுவார் என்ற காலம் வந்துகொண்டிருக்கிறது. இந்தக் கருத்துக்களைச் சிந்திக் கின்ற திறமையிலோ எடுத்துச் சொல்லும் திறமையிலோ மதத்தின் ரகசியம் இல்லை; வேதங்கள் கற்பிப்பதுபோல், இவற்றை உணர்வதில்தான், இதுவரை உணரப்படாத புதிய, உயர்ந்த உண்மைகளைக் கண்டுபிடித்து சமுதாயத்திற்குச் சொல்வதில்தான் மதத்தின் ரகசியம் இருக்கிறது என்று நாம் அறிந்துகொள்வோம். மத ஆராய்ச்சிதான் தீர்க்கதரிசிகளை உண்டாக்கும் பயிற்சியாக வேண்டும். பள்ளிகளும் கல்லூரி களும் தீர்க்கதரிசிகள் உருவாவதற்கான பயிற்சிக் கூடங்கள் ஆக வேண்டும், பிரபஞ்சம் முழுவதும் தீர்க்கதரிசிகள் ஆக வேண்டும். ஒருவன் தீர்க்கதரிசி ஆகாதவரை அவனைப் பொறுத்தவரை மதம் ஒரு கேலிக்கூத்து, ஒரு பழமொழி, அவ்வளவுதான். நாம் ஒரு சுவரைப் பார்ப்பதைவிட ஆயிரம் மடங்கு அதிகமாக மதத்தைப் பார்க்க வேண்டும், உணர வேண்டும், அனுபூதியில் அடைய வேண்டும்.

மதத்தின் இந்தப் பலவிதத் தோற்றங்களுக்கு அடிப்படை யாக ஒரு கோட்பாடு உள்ளது, நமக்காக அது ஏற்கனவே விளக்கமாகக் கூறப்பட்டு விட்டது. ஒருமையை அடைந்ததும் ஒவ்வோர் அறிவியலும் முடிவடைய வேண்டும், ஏனெனில் அதற்கு மேல் நாம் போக முடியாது. பரிபூரண ஒருமை நிலையை அடைந்த பின் அந்த அறிவியல் நமக்குச் சொல்ல ஒரு விதியும் கிடையாது. விவரங்களைச் செயல்முறைப்படுத்து வதுதான் மதங்களின் வேலை.

எந்த அறிவியலையும் எடுத்துக் கொள்ளுங்கள், உதாரணத் திற்கு வேதியியல். எந்த ஒரு மூலகத்திலிருந்து மற்ற எல்லா மூலகங்களையும் தயாரிக்க முடியுமோ, அந்த மூலகத்தைக்

கண்டுபிடித்ததும் வேதியியல் பூரணமாகிவிடுகிறது. அதன்பிறகு நாம் செய்ய வேண்டியதெல்லாம், அந்த ஒரு மூலகத்தின் பல்வேறு புதிய சேர்க்கைகளைக் கண்டுபிடித்து, அவற்றை வாழ்க்கையில் பயன்படுத்துவதுதான்.

மதத்திலும் அதுதான். வேதங்களின் கடைசி வார்த்தைகள் என்று சொல்லப்படுகின்ற 'நானே அவன்' என்பது கண்டு பிடிக்கப்பட்டபோதே, அந்த ஒருவனே இருக்கிறான், அவனுள் தான் ஜடப்பொருளாலும் மனத்தாலும் ஆன பிரபஞ்சம் உள்ளது, அவனைத்தான் கடவுள், பிரம்மம், அல்லா, ஜெஹோவா என்று எத்தனையோ பெயர்களால் அழைக் கிறார்கள் என்பது கண்டுபிடிக்கப்பட்டபோதே, யுகயுகங் களுக்கு முன்பான அந்தக் காலத்திலேயே மதத்தின் பெரிய கோட்பாடுகள், விரிவு, திட்டம் எல்லாம் கண்டுபிடிக்கப்பட்டு விட்டன. இதற்கு அப்பால் நாம் போக இயலாது. அந்தச் சிறப் பான தத்துவம் நமக்காக வரைபடம் போல் விளக்கப்பட்டு விட்டது. நமது வேலை அதன் விவரங்களை நிரப்பி, நம் வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் அதைப் பயன்படுத்திக் கொள்வதுதான். ஒவ்வொருவரும் தீர்க்கதரிசியாக வேண்டும் என்றே நாம் இப்போது செயல்பட வேண்டும். நம் முன் பெரிய பணி காத்திருக்கிறது.

தீர்க்கதரிசி என்றால் யார் என்பதைப் பண்டைக் காலங் களில் பலர் அறியவில்லை. சங்கல்பத்தாலோ, ஏதோ சிறந்த அறிவுச் சக்தியாலோ உயர்ந்த ஞானத்தைத் தற்செயலாகப் பெற்ற ஒருவன் அவன் என்றே அவர்கள் கருதினார்கள். ஆனால் அவன் யாராக இருந்தாலும் சரி, எந்த நிலையில் இருந்தாலும் சரி, இந்த அறிவு ஒவ்வொருவருடையவும் பிறப்புரிமை என்பதை யும், இந்தப் பிரபஞ்சத்தில் தற்செயலாக நடப்பது என்று எதுவும் இல்லை என்பதையும் விளக்கிக் காட்ட இந்த நவீன காலத்தில் நாம் தயாராக இருக்கிறோம். தற்செயலாகக் கிடைக்கப் பெற்றவன் என்று நாம் நினைக்கின்ற மனிதன் அதற் காகச் சிறிதுசிறிதாக வெகுகாலம் நிச்சயமாகப் பாடுபட்டிருப் பான். ஆகவே நம் முன் உள்ள கேள்வி, 'நீங்கள் தீர்க்கதரிசிகள் ஆக விரும்புகிறீர்களா?' என்பதுதான். விரும்பினால் நிச்சயமாக ஆவோம்.

தீர்க்கதரிசிகளை உருவாக்குவதுதான் நம் முன் உள்ள பெரிய பணி. தெரிந்தோ தெரியாமலோ எல்லா மதங்களும் இந்த இலக்கை நோக்கித்தான் முன்னேறிக்

கொண்டிருக்கின்றன. ஆனால் ஒரு வித்தியாசம்: இந்த வாழ்க்கையில் நாம் ஆன்மீக உண்மைகளை நேரிடையாகக் காண முடியாது என்றும், இறந்தபிறகு இன்னொரு உலகில், இன்னொரு வேளையில் ஆன்ம தத்துவத்தைப் பற்றிய காட்சிகள் கிடைக்கும் என்றும், அப்பொழுதுதான் நாம் உணர முடியும் என்றும், அதுவரை நம்பத்தான் வேண்டும் என்றும் சில மதங்கள் கூறுகின்றன. இப்படிக் கூறுபவர்களிடம், 'அப்படியானால் ஆன்மீக உண்மைகள் இருக்கின்றன என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?' என்று வேதாந்தம் கேட்கிறது. அதற்கு அவர்கள், 'அறியப்படாததும் அறிய முடியாததுமான உண்மைகளைத் தங்கள் வாழ்க்கையிலேயே கண்ட குறிப்பிட்ட சிலர் இருந்தார்கள்' என்றுதான் பதில் சொல்ல நேரும். இதிலும் ஒரு சங்கடம் இருக்கிறது. இந்தக் குறிப்பிட்ட சிலர் அந்த உணர்வைத் தற்செயலாகப் பெற்றார்கள் என்றால் நாம் அதை நம்பக் கூடாது. தற்செயலான ஒன்றை நம்புவது பாவம், ஏனெனில் நாம் அதை அறிய முடியாது.

அறிவு என்பது என்ன? தனி இயலை அழிப்பது. சிறுவன் ஒருவன் தெருவிலோ, மிருகக் காட்சிச் சாலையிலோ வினோத மான அதாவது தனியான ஒரு மிருகத்தைப் பார்ப்பதாக வைத்துக் கொள்வோம். அது இன்னது என்பது அவனுக்குத் தெரியாது. பிறகு இத்தகைய மிருகங்கள் நூற்றுக்கணக்காக இருக்கின்ற அயல்நாடு ஒன்றிற்குப் போகிறான், அங்கே அவற்றைக் கண்டதும் அவன் திருப்தி அடைகிறான், அது என்ன மிருகம் என்பதை அறிகிறான். எனவே அடிப்படைத் தத்துவத்தை அறிவதே அறிவு. அந்தத் தத்துவத்தின் தொடர் பின்றி ஒரு தனிப் பொருளைக் காண்பது அறிவாகாது. அடிப் படைத் தத்துவத்தின் தொடர்பில்லாமல் ஒரு பொருள் அல்லது பல பொருட்களைக் காணும்போது நாம் இருளில் ஆழ்கிறோம், எதுவும் அறிவதில்லை. தீர்க்கதரிசிகள் தனிப்பட்ட மனிதர்கள், அப்பால் உள்ளதைக் காணும் உரிமை அவர்களுக்கு மட்டும் தான் உண்டு, மற்றவர்களுக்குக் கிடையாது என்றால் நாம் அந்தத் தீர்க்கதரிசிகளை நம்ப முடியாது, ஏனெனில் அவை அடிப்படைத் தத்துவத்தின் தொடர்பு இல்லாத தனி விஷயங் களாகி விடும். நாமும் தீர்க்கதரிசிகளாகும்போதுதான் அவர் களை நம்ப முடியும்.

கடற்பாம்பைப் பற்றிய வேடிக்கைக் கதைகளை உங்களுள் பலரும் கேட்டிருப்பீர்கள், பத்திரிகைகளில் படித்திருப்பீர்கள்.

ஏன் அவை வேடிக்கை? ஏனெனில் ஏதோ ஓரிருவர் எப்போதோ வந்து சொன்ன கதைகள் அவை. அதை மற்றவர்கள் பார்த்த தில்லை. இவர்கள் அதைச் சரிபார்ப்பதற்கான அடிப்படைத் தத்துவம் இல்லை. அதனால் உலகம் அதை நம்பவில்லை. ஒரு தீர்க்கதரிசி காற்றில் மறைந்து சென்றார் என்று ஒருவன் என்னிடம் வந்து சொன்னால் அதைக் காண்கின்ற உரிமை எனக்கும் உண்டு. 'உன் அப்பாவோ தாத்தாவோ அதைப் பார்த் திருக்கிறார்களா?' என்று நான் கேட்பேன். 'இல்லை, ஆனால் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு அது நிகழ்ந்தது' என்று அவன் சொல்வான். அதை நான் நம்பவில்லை என்றால் கால மெல்லாம் நான் நெருப்பில் வறுபட வேண்டுமாம்!

என்ன மூட நம்பிக்கைகளின் மூட்டை இது! மனிதனை அவனது தெய்வ நிலையிலிருந்து மிருக நிலைக்கு இழுத்துச் செல்வதே இதன் விளைவாக இருக்கும். இப்படி எதையும் நம்ப வேண்டுமானால் பகுத்தறிவு நமக்கு ஏன் அளிக்கப்பட வேண்டும்? பகுத்தறிவிற்கு எதிராக எதையும் நம்புவது மாபெரும் தெய்வ நிந்தனை ஆகாதா? கடவுள் தந்துள்ள மிகப் பெரிய அன்பளிப்பான பகுத்தறிவைப் பயன்படுத்தாமல் இருக்க நமக்கு என்ன உரிமை இருக்கிறது? தாம் அளித்த பகுத்தறிவைப் பயன் படுத்தாமல் கண்மூடித்தனமாக நம்புகின்ற ஒருவனைவிட பகுத் தறிவைச் செயல்படுத்துகின்ற ஒருவனையே, அவன் நம்பாத வனாக இருந்தாலும், ஆண்டவன் மன்னிப்பார் என்று நான் நினைக்கிறேன். அவன் தன் இயல்பை இழிவுபடுத்துகிறான்; மிருக நிலைக்கு இறங்குகிறான்; புலன்களைக் கெடுத்துச் சாகி றான். நாம் பகுத்தறிவைப் பயன்படுத்த வேண்டும், ஒவ்வொரு நாட்டிலும் உள்ள பண்டைய நூல்கள் கூறுகின்ற தீர்க்கதரிசிகள் மற்றும் மாமனிதர்களின் உண்மையைப் பகுத்தறிவால் நிரூபிக்க முடியுமானால், அவர்களை நாம் நம்பலாம். அத்தகைய தீர்க்க தரிசிகள் நம்மிடையே தோன்றும்போதும் நாம் நம்ப முடியும். அவர்கள் தனிப்பட்ட மனிதர்கள் அல்ல, சில தத்துவங்களின் விளக்கங்களே என்பதை அப்போது நாம் காண்போம். அவர்கள் பாடுபட்டார்கள், அந்தத் தத்துவம் இயற்கையாகவே அவர் களிடம் வெளிப்பட்டது. நம்மில் அந்தத் தத்துவம் வெளிப்பட வேண்டுமானால் நாமும் பாடுபட வேண்டும். அவர்கள் தீர்க்க தரிசிகள், நாமும் தீர்க்கதரிசிகளாகும்போதுதான் அவர்களை நாம் நம்புவோம். தெய்வீக விஷயங்களை அவர்கள் நேரில் கண்டார்கள். புலன்களின் எல்லையைக் கடந்து அப்பால்

உள்ளதன் காட்சியை அவர்கள் பெற்றார்கள். நாமும் இத்தகைய பேற்றை அடையும் போதுதான் இதை நம்ப முடியும், அதற்கு முன்பு அல்ல.

இதுதான் வேதாந்தத்தின் ஒரே கோட்பாடு. மதம் என்பது இங்கே, இப்பொழுதே இருக்கிறது என்று அது கூறுகிறது. இந்த வாழ்வு-அந்த வாழ்வு, வாழ்வு-சாவு, இந்த உலகம்-அந்த உலகம் போன்ற கருத்துக்களெல்லாம் மூட நம்பிக்கை மற்றும் விருப்புவெறுப்புக்களின் காரணமாகத் தோன்றியவை. காலத்தில் நாமாகப் போடுகிற தடையைத் தவிர வேறு எந்தத் தடையும் இல்லை. இயற்கையில் நாம் செய்கின்ற சில மாறுதல்களைத் தவிர பத்து மணிக்கும் பன்னிரண்டு மணிக்கும் என்ன வேறுபாடு இருக்கின்றது? காலம் அதே கதியில்தான் ஓடிக்கொண்டிருக்கிறது. இதில் இந்த வாழ்வு, அந்த வாழ்வு என்றெல்லாம் சொல்வதில் என்ன பொருள் இருக்கிறது? எல்லாம் காலத்தைப் பொறுத்தது. காலத்தின் கதியில் இழந்த ஒன்றை, செயலை விரைவுபடுத்துவதன்மூலம் நாம் ஈடு செய்ய முடியும். இதனால்தான் மதத்தை இப்போதே உணர வேண்டும் என்று வேதாந்தம் சொல்கிறது.

நீங்கள் மத உணர்வு பெற வேண்டுமானால், எந்த மதத்தையும் சாராமல் தொடங்க வேண்டும், பாடுபட்டு உண்மைகளை உணர வேண்டும், நீங்களே பார்க்க வேண்டும். அதன்பிறகு, அதன்பிறகு மட்டுமே நீங்கள் மத உணர்வு பெற்றவர். அதற்கு முன்பு நீங்கள் நாத்திகர்களைவிட உயர்ந்தவர்கள் அல்ல, அவர்களைவிடக் கீழ் என்றுதான் சொல்ல வேண்டும். ஏனெனில் நாத்திகன் நேர்மையானவன்; 'இவற்றைப் பற்றி எனக்குத் தெரியாது' என்று தைரியமாகக் கூறுகிறான். மற்றவர்கள் ஒன்றும் தெரியாதவர்கள், ஆனாலும் 'நாங்கள் பெரிய மதவாதிகள்' என்று தம்பட்டமடித்துக் கொள்கிறார்கள். அது என்ன மதமோ என்னவோ யாருக்கும் தெரியாது. ஏதோ பாட்டிக் கதையை அப்படியே விழுங்கினார்கள், அத்துடன் புரோகிதர்களும் நம்பும்படிச் சொன்னார்கள், நம்பாவிட்டால் ஜாக்கிரதை என்று எச்சரிக்கையும் செய்தார்கள். இப்படித்தான் இவை நடக்கின்றன.

மதத்தை அனுபூதியில் உணர்வது ஒன்றுதான் ஒரே வழி. நாம் ஒவ்வொருவரும் கண்டுபிடித்தேயாக வேண்டும். அப்படியானால் உலகில் இந்த பைபிள்களால் என்ன பயன்? பயன் உள்ளது, தேசப் படங்கள்போல் அவை நமக்கு உதவுகின்றன.

இங்கு வருவதற்கு முன்பு இங்கிலாந்தின் படத்தை நான் எத்தனையோ தடவை பார்த்திருக்கிறேன். இங்கிலாந்தைப்பற்றி ஓரளவு அறிந்துகொள்ள அது எனக்கு உதவியது. ஆனால் நான் இங்கு வந்தபோதோ, படத்திற்கும் நாட்டிற்கும் எவ்வளவு பெரிய வித்தியாசம்! அதே வித்தியாசம்தான் அனுபூதிக்கும் நூல்களுக்கும். இந்த நூல்கள் வெறும் தேசப்படங்கள் மட்டுமே; அவை பண்டைய மனிதர்களின் அனுபவங்களைக் கூறுபவை; அவர்களது வழியைப் பின்பற்றி, அவர்களைப் போலவே, இல்லை, அவர்களைவிட அதிகமாகவே கண்டுபிடிக்க நம்மைத் தூண்டுபவை.

வேதாந்தத்தின் முதல் கோட்பாடு இதுதான்: அனுபூதிதான் மதம். அனுபூதி பெற்றவனே மதவாதி. அனுபூதி பெறாதவன், 'எனக்குத் தெரியாது' என்று சொல்பவனைவிட எந்த விதத்திலும் மேலானவன் அல்ல; பார்க்கப்போனால் அவனைவிடக் கீழ் நிலையில் உள்ளவன். ஏனெனில் 'தெரியாது' என்று சொல்பவனிடம் நேர்மை இருக்கிறது. அனுபூதியைப் பெறுவதில் நூல்கள் மிகவும் உதவி செய்கின்றன; வெறும் வழிகாட்டிகள் போல் மட்டுமின்றி அறிவுரைகளை வழங்குகின்றன, சாதனை முறைகளைக் கற்பிக்கின்றன. ஒவ்வொரு துறையும் அதற்கென்று தனித்த ஆராய்ச்சி முறையை உடையதாக இருப்பதால் இந்த நூல்களின் துணை நமக்குத் தேவையாக உள்ளது.

'நான் மதவாதியாக இருக்க விரும்பினேன். இவற்றையெல்லாம் அனுபூதியில் காண முயன்றேன், ஆனால் முடியவில்லை. எனவே நான் அதனை நம்ப மாட்டேன்' என்று கூறுகின்ற பலரைப் படித்தவர்களிடையேயும் காண முடியும். 'மத உணர்வு உடையவனாக இருப்பதற்கு என் ஆயுள் முழுவதும் முயன்றேன். அதில் ஒன்றுமில்லை' என்று உங்களிடம் கூறுபவர்களையும் ஏராளமாகப் பார்த்திருப்பீர்கள். ஒருவன் வேதியியல் அறிஞன், பெரிய விஞ்ஞானி. அவன் வந்து உங்களிடம் அதை நம்பச் சொல்கிறான். அதற்கு நீங்கள் அவனிடம், 'வேதியியலை நான் நம்ப மாட்டேன். ஏனெனில் வேதியியல் விஞ்ஞானி ஆவதற்காக நான் என் ஆயுட்காலம் முழுவதும் முயன்றும் பயன் கிடைக்கவில்லை' என்று சொல்வீர்கள். அவன், 'எப்போது முயன்றீர்கள்?' என்று கேட்பான். அதற்கு நான் 'படுக்கைக்குச் செல்லும்போது தினமும், ''ஓ வேதியியலே என்னிடம் வா'' என்று ஜபித்துவிட்டுத்தான் படுக்கைக்குப் போவேன். ஆனால் அது வரவில்லை' என்று சொல்வீர்கள்.

அவன் உங்களைப் பார்த்துச் சிரித்துவிட்டு, 'அப்பனே, வழி அது அல்ல; பரிசோதனைச் சாலைக்குப் போக வேண்டும், எல்லா அமிலங்களையும் காரங்களையும் எடுத்து அடிக்கடி உங்கள் கைகளைப் பொசுக்கிக்கொள்ள வேண்டும், அப்படிச் செய்திருந்தால் அது உங்களுக்கு வேதியியலைக் கற்றுத் தந்திருக்கும்' என்று சொல்வான்.

மதத்திற்காக அத்தகைய கடின உழைப்பை மேற்கொள் கிறீர்களா? ஒவ்வொரு விஞ்ஞானத்திற்கும் அதைக் கற்கும் முறை இருக்கிறது. மதத்தை அதற்குரிய வழியில் கற்க வேண்டும், அதற்குரிய முறைகளும் இருக்கின்றன. ஒன்றைக் கண்டுபிடித்த, மதத்தை அனுபூதியில் உணர்ந்த, உலகின் பண்டைய தீர்க்க தரிசிகள் அனைவரிடமிருந்தும் ஏதாவது ஒன்றைக் கற்றுக் கொள்ள இயலும், கற்றே தீர வேண்டும். அவர்கள் தனிப்பட்ட சிறந்த வழிகளைக் காட்டுவார்கள்; அவற்றின்மூலமாக மட்டுமே மத உண்மைகளை உணர முடியும். அவர்கள் வாழ்நாள் முழு வதும் போராடினார்கள்; மனத்தைப் பண்படுத்துவதற்கான சிறந்த வழிகளைக் கண்டார்கள்; மிக நுண்மையாக உணரும் நிலைக்குத் தங்கள் மனத்தைக் கொண்டுவந்து, அந்த நிலை யிலிருந்து அவர்கள் மத உண்மைகளைக் கண்டார்கள். மதவாதி ஆவதற்கு, மதத்தைக் காண்பதற்கு, மதத்தை உணர்வதற்கு, ஒரு தீர்க்கதரிசியாக ஆவதற்கு இந்த முறைகளைப் பயிற்சி செய்ய வேண்டும். இப்படி முயன்ற பிறகு ஒன்றுமில்லை என்று கண்டால்தான், 'மதத்தில் ஒன்றுமில்லை, ஏனெனில் நான் முயன்று பார்த்தேன், ஆனால் தோல்வியே கண்டேன்' என்று சொல்ல நமக்கு உரிமையுண்டு.

இதுதான் எல்லா மதங்களின் செயல்முறைப் பகுதியாகும். உலகத்திலுள்ள எல்லா மதங்களின் சாஸ்திரங்களிலும் இதைத் தான் காண்கிறோம். தத்துவங்களையும் கோட்பாடுகளையும் கற்பிப்பதோடு அவை நின்று விடுவதில்லை, மகான்களின் வாழ்க்கையில் பயிற்சி முறைகளைக் காண்கிறோம். ஒழுக வேண்டிய முறை இதுதான் என்று தெளிவாக சாஸ்திரங்கள் வரையறுக்காதவற்றை மகான்களுடைய வாழ்க்கையின் சாதாரண விஷயங்களிலிருந்து அதாவது உண்பது, பருகுவது போன்ற விஷயங்களிலிருந்துகூடக் கற்றுக்கொள்ள முடியும். அவர்களுடைய வாழ்க்கை, அவர்களுடைய பயிற்சி, அவர் களுடைய வழி எல்லாமே பாமர மக்களிலிருந்து மாறுபட் டிருந்தன. இவைதான் அவர்களுக்கு உயர்ந்த ஒளியையும்

தெய்வீகக் காட்சிகளையும் அளித்தன. இத்தகைய காட்சியைப் பெற விரும்பினால், இத்தகைய முறைகளைப் பின்பற்ற நாம் தயாராக இருக்க வேண்டும். பயிற்சி, உழைப்பு—இவையே அந்த நிலைக்கு நம்மை அழைத்துச் செல்லும்.

எனவே வேதாந்தத்தின் திட்டம் இதுதான்: முதலில் கோட்பாடுகளை வரையறுத்தல், குறிக்கோளை நிறுவுதல், பிறகு அந்தக் குறிக்கோளை அடைய வேண்டிய முறையைக் கற்பித்தல், அதாவது மதத்தைப் புரிந்துகொள்ளவும் அதை அனுபூதியில் உணரவும் செய்தல்.

இதிலும் பல்வேறு வழிகள் வேண்டும். இயல்புகளில் நாம் மாறுபட்டவர்கள். ஒரே வழி இருவருக்குப் பொருந்தாது. ஒவ்வொரு மனமும் தனிப்போக்கு உடையது, எனவே வழிகளும் வேறுபடத்தான் செய்யும். சிலர் மிகவும் உணர்ச்சிவசப்படு பவராக இருப்பார்கள், சிலர் தத்துவவாதிகளாக பகுத்தறிவுவாதி களாக இருப்பார்கள், சிலர் எல்லாவகையான சடங்குகளையும் பின்பற்றுபவர்களாக, அதாவது தூலமானவை தேவைப்படு பவர்களாக இருப்பார்கள். சடங்கு, உருவ வழிபாடு போன்ற எதையும் பொருட்படுத்தாத ஒருவன் இருப்பான், இவையெல் லாம் அவனுக்கு மரணத்திற்குச் சமமானவை. மற்றொருவனோ உடம்பு முழுவதும் தாயத்துகளின் ஒரு மூட்டையையே கட்டிக் கொண்டிருப்பான், இத்தகைய சின்னங்களை அவன் மிகவும் விரும்புகிறான். உணர்ச்சி ததும்புகின்றவன் எல்லோருக்கும் தானங்கள் செய்ய விரும்புகிறான்; அவன் அழுகிறான், சிரிக் கிறான். ஆகவே அனைவருக்கும் ஒரே வழியை காட்ட இயலாது. உண்மையை அடைய ஒரேஒரு வழிதான் இருக்குமானால், வேறுவிதமாக மன அமைப்புக் கொண்டவர்களுக்கு அது மரணத்தைத் தவிர வேறெதுவும் அல்ல. எனவே வழிகள் வேறு பட்டுதான் இருக்க வேண்டும்.

வேதாந்தம் இதை உணர்கிறது; எனவே நாம் பின்பற்றுவதற் காக உலகத்தின் முன்பு பல்வேறு வழிகளை வைக்க முயல்கிறது. நீங்கள் விரும்புகின்ற ஏதாவது ஒரு வழியை ஏற்றுக் கொள் ளுங்கள். ஒன்று ஏற்புடையதாக இல்லை என்றால் இன் னொன்று ஒத்து வரலாம். ஒரேஒரு மதம்தான் இருக்க வேண்டு மென்று பலர் விரும்புகிறார்கள். ஆனால் இந்தக் கோணத் திலிருந்து பார்க்கும்போது உலகில் எத்தனையோ மதங்களும் போதகர்களும் தீர்க்கதரிசிகளும் இருப்பது எவ்வளவு மகிமை வாய்ந்ததாக, சிறப்பு மிக்கதாக இருக்கிறது! இந்த உலகம்

அனைத்தும் முகமதியர்களாகத் திகழ வேண்டுமென்று முகமதியர்களும், உலகமே கிறிஸ்தவர்களாகத் திகழ வேண்டுமென்று கிறிஸ்தவர்களும், பௌத்தர்களாகத் திகழ வேண்டுமென்று பௌத்தர்களும் விரும்புகிறார்கள். ஆனால் வேதாந்தமோ, 'உலகில் ஒவ்வொருவரும் விருப்பம்போல் தனித்து நிற்கட்டும். அவர்கள் ஒவ்வொருவருக்கும் பின்னணியாக இருப்பது ஒரே தத்துவம்தான், ஒருமைதான். எவ்வளவுக்கெவ்வளவு அதிகமான தீர்க்கதரிசிகளும், அதிகமான நூல்களும், அதிகமான ரிஷிகளும், அதிகமான வழிமுறைகளும் உள்ளனவோ அவ்வளவுக்கவ்வளவு உலகுக்கு நல்லது' என்கிறது.

சமுதாய வாழ்க்கையில் தொழில்கள் அதிகமாக இருக்கின்ற அளவுக்கு அந்தச் சமுதாயத்திற்கு நன்மை, அந்தச் சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் வாழ வழி கிடைக்கும். சிந்தனையுலகிலும், மத உலகிலும் அப்படியே. இன்று அறிவியலில் பல்வேறு பிரிவுகள் இருப்பது எவ்வளவு வசதியாக உள்ளது. இத்தனை பிரிவுகள் இருப்பதால், சிறந்த மனப் பண்பாடு பெறுவதற்கான சாத்தியக்கூறு ஒவ்வொருவருக்கும் எவ்வளவு அதிகமாகிறது! பௌதீக உலகிலும் இவ்வாறு பல விஷயங்கள் நம் முன் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும், நமக்கு வேண்டியதை, நமக்கு மிகவும் பொருத்தமானதை நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியும். மத உலகிலும் அவ்வாறே. பல மதங்கள் இருப்பது இறைவனின் மிகச் சிறந்த அருள்திட்டம். ஒவ்வொருவருக்கும் தனி மதம் கிடைக்கும்வரை ஒவ்வொரு நாளும் மதங்களின் தொகை பெருகிக்கொண்டே போகவும் அவர் அருள் புரிய வேண்டும்!

வேதாந்தம் இதை உணர்ந்திருக்கிறது. எனவே அது ஒரே உண்மையை உலகிற்குப் போதிக்கிறது, பல வழிமுறைகளை ஏற்றுக் கொள்கிறது. யாரைப் பற்றியும் அது எந்தக் குறையும் கூறவில்லை. நீங்கள் கிறிஸ்தவனாக இருக்கலாம், பௌத்தனாக இருக்கலாம், யூதனாயிருக்கலாம், இந்துவாயிருக்கலாம்; எந்தப் புராணத்தையும் நம்பலாம், நாசரத்திலோ மெக்காவிலோ இந்தியாவிலோ வேறு எந்த இடத்திலோ தோன்றிய தீர்க்கதரிசியை நம்பலாம், நீங்களே ஒரு தீர்க்கதரிசியாக இருக்கலாம்—வேதாந்தம் அதை எதிர்ப்பதே இல்லை. எது எல்லா மதங்களின் பின்னணியாகவும், எல்லா தீர்க்கதரிசிகளும் மகான்களும் ரிஷிகளும் எதன் விளக்கங்களும் வெளிப்பாடுகளும் மட்டுமோ அந்தத் தத்துவத்தையே வேதாந்தம் போதிக்கிறது. விரும்பினால்

உங்கள் தீர்க்கதரிசிகளின் எண்ணிக்கையை அதிகப்படுத்துங்கள், அதற்கு ஆட்சேபணை இல்லை. அது தத்துவத்தைத்தான் பிரச்சாரம் செய்கிறது, வழிமுறைகளை உங்களிடம் விட்டுவிடுகிறது. உங்களுக்குப் பிடித்த எந்த நெறியை வேண்டுமானாலும் தேர்ந்தெடுங்கள், எந்தத் தீர்க்கதரிசியை வேண்டுமானாலும் பின்பற்றுங்கள். ஆனால் உங்கள் இயல்புக்கு ஏற்ற முறையை மட்டுமே தேர்ந்தெடுங்கள். அப்போதுதான் நீங்கள் நிச்சயமாக முன்னேற முடியும். ❑

# 5. உலகம்தழுவிய மதத்தை உருவாக்குவதற்கான வழி

கலிபோர்னியா, 28 ஜனவரி 1900

கடவுளின் ஒளியை நம்மீது பொழியாத எந்தத் தேடலுமே மனித இதயத்திற்கு நெருக்கமானதாக இருப்பதில்லை. பழங் காலத்திலும் சரி, தற்காலத்திலும் சரி, ஆன்மா, கடவுள், மனிதனின் விதி இவற்றைப் பற்றிய ஆராய்ச்சிளைப்போல், வேறெந்த ஆராய்ச்சியிலும் மனித சக்தி இவ்வளவு அதிக அளவில் செலவாகவில்லை. நமது தினசரி வேலைகள், முன் னேற்ற ஆர்வங்கள், அலுவல்கள் இவற்றில் நாம் எவ்வளவுதான் மூழ்கியிருந்தாலும் இந்த நமது மிகப் பெரிய போராட்டங் களுக்கு இடையில் ஏதாவது ஒரு நேரத்தில் ஓர் இடைவெளி வருகிறது; மனம் ஒரு நிமிடம் நிற்கிறது, இந்த உலகிற்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்றைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறது. சிலவேளைகளில் புலன்களுக்கு அப்பாலுள்ள உலகின் தரிசனம் அதற்குக் கிடைக்கிறது, அதனை அடைய வேண்டும் என்ற போராட்டம் உடனே தொடங்குகிறது. எல்லா நாடுகளிலும் எல்லா காலங்களிலும் இப்படியேதான் இருந்து வந்திருக்கிறது. மனிதன் அப்பால் காண விரும்புகிறான்; விரி வடையத் துடிக்கிறான். முன்னேற்றம், பரிணாமம் என்றெல் லாம் நாம் சொல்கிறோமே, அவையெல்லாம் மனிதனின் விதியைத் தேடல், கடவுளைத் தேடல் என்ற அந்த ஒரு தேடலை வைத்தே எப்போதும் அளவிடப்பட்டு வந்திருக்கிறது.

எந்த நாட்டை எடுத்துக் கொண்டாலும் சமுதாயப் போராட்டங்களே பல்வேறு சமுதாய அமைப்புகளாக வெளிப் படுகின்றன. அதுபோல் மனிதனின் ஆன்மீகப் போராட்டமே பல்வேறு மதங்களாக வெளிப்படுகின்றன. இந்தச் சமுதாய அமைப்புகள் இடைவிடாமல் போட்டியிலும் சண்டையிலும் ஈடுபட்டிருப்பதுபோல் மதங்களும் ஒன்றோடொன்று இடைவிடாமல் சண்டையிட்டுக் கொண்டிருக்கின்றன. ஒரு

குறிப்பிட்ட சமுதாய அமைப்பைச் சேர்ந்தவர்கள், தங்களுக்கு மட்டுமே வாழ உரிமை இருக்கிறது என்று உரிமை கொண்டாடு கிறார்கள்; இயன்றவரையில் எளியவர்களின் பலவீனத்தைப் பயன்படுத்தி அந்த உரிமையை நிலைநாட்ட விரும்புகிறார்கள். இப்போது தென் ஆப்ரிக்காவில் இத்தகைய கடுமையான போராட்டம் நடந்து கொண்டிருப்பது நமக்குத் தெரியும். அது போலவே ஒவ்வொரு மதப் பிரிவும் வாழும் உரிமை தனக்கு மட்டுமே உண்டு என்று உரிமை கொண்டாடியிருக்கிறது.

இவ்வாறு, மனிதனுக்கு அளவற்ற பேறுகளைக் கொடுத் திருப்பதும் மதம்தான்; மிகுந்த துன்பத்தைக் கொடுத்திருப்பதும் மதம்தான் என்பது நமக்குத் தெரிகிறது. அமைதியையும் அன்பையும் அதிகமாக அள்ளித் தெளித்திருப்பதும் மதம்தான்; அதேவேளையில் மிக பயங்கரமான வெறுப்பை விதைத் திருப்பதும் மதம்தான். மனித சகோதரத்துவத்தை சிறப்பாகக் காட்டியிருப்பதும் மதம்தான்; மனிதர்களுக்கு இடையே கொடிய பகைமையை வளர்த்திருப்பதும் மதம்தான். தர்ம ஸ்தாபனங்களையும், மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் மிருகங் களுக்கும் மருத்துவமனைகளையும் அதிக அளவில் ஏற்படுத் தியதும் மதம்தான்; உலகையே ரத்த வெள்ளத்தில் அதிகமாக மூழ்கடித்ததும் மதம்தான்.

அதேவேளையில் அங்கே ஓர் அடிப்படைச் சிந்தனை ஓட்டம் தொடர்ந்து இருப்பதை நாம் காண்கிறோம். ஒத்துப் போகாத, முரண்பட்ட இந்தப் பல்வேறு பிரிவுகளுக்கிடையே சமரசம் காணத் தத்துவ அறிஞர்கள், மத ஒப்புமை ஆராய்ச்சி யாளர்கள் என்று எல்லோருமே எவ்வளவோ முயல்கிறார்கள்; இன்னும் முயன்று கொண்டிருக்கிறார்கள். சில நாடுகளில் இந்த முயற்சிகள் வெற்றி பெற்றன, ஆனால் உலகத்தைப் பொறுத்தவரையில் இந்த முயற்சிகள் தோல்வியையே கண்டன.

எல்லா நெறிகளும் வாழ அனுமதிக்கப்பட வேண்டும்; ஒவ்வொரு நெறிக்கும் உள்ளடங்கிய ஒரு பொருள் இருக்கிறது, ஒரு கருத்து இருக்கிறது. ஆகவே உலக நன்மைக்காக அவை வளர உதவ வேண்டும் என்ற கருத்துக்களுடன்கூடிய சில மதங்கள் மிகப் பழங்காலத்திலிருந்தே நம்மிடம் வந்துள்ளது. தற்காலத்திலும் அதே கருத்து நிலவுகிறது, அதனை நடை முறைக்குக் கொண்டு வருவதற்கான முயற்சிகளும் அவ்வப் போது மேற்கொள்ளப்படுகின்றன. ஆனால் இந்த முயற்சிகள் நாம் எதிர்பார்க்கின்ற அளவுக்கு எப்போதும் பயன்

தருவதில்லை, திறனை வெளிக்காட்டுவதில்லை. அது மட்டு மல்ல, இன்னும் வருத்தத்திற்குரிய விஷயம் என்னவென்றால், சிலவேளைகளில் பூசல்களில்தான் அதிகமாக நாம் இறங்கி விடுகிறோம்.

ஒருதலைப் பட்சமாகச் சிந்திப்பதை விட்டுவிட்டு, சற்று பொதுஅறிவுக் கண்ணோட்டத்துடன் பார்த்தோமானால், உலகின் சிறந்த மதங்கள் அனைத்திலும் உத்வேகமான உயிரூட்டும் சக்தி இருப்பது விளங்கும். இது எங்களுக்குத் தெரியாது என்று சிலர் சொல்லலாம். ஆனால் தெரியாது என்கின்ற சாக்குப்போக்கு செல்லாது. 'வெளி உலகத்தில் என்ன நடக்கிறது என்பது எனக்குத் தெரியாது, எனவே வெளி உலகத்தில் எதுவுமே இல்லை' என்று சொல்பவன் மன்னிக்கத் தக்கவன் அல்ல. உலகின் மதச் சிந்தனைகளுடைய போக்கை அறிந்தவர் களுக்கு உலகத்தின் சிறந்த மதங்களில் ஒன்றுகூட அழியவில்லை என்பது நன்றாகத் தெரிந்திருக்கும். அது மட்டுமல்ல, அவை ஒவ்வொன்றும் முன்னேறிக் கொண்டிருக்கின்றன. கிறிஸ்தவர்கள் அதிகரிக்கின்றனர், முஸ்லீம்கள் பெருகி வருகின்றனர், இந்துக்கள் வேரூன்றிக் கொண்டிருக்கின்றனர். யூதர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக்கொண்டே போகிறது; அவர்கள் அதிகரிப்பதும், உலகமெங்கும் பரவிவருவதும் யூத மதத்தை விரிவு படுத்துவதற்கு உதவுகிறது.

மிகப் பழைய சிறந்த மதங்களுள் ஒன்று மட்டுமே பரவாமல் சுருங்கிவிட்டது. அது பழங்காலப் பாரசீகர்களின் மதமான பார்ஸி மதம். முஸ்லீம்கள் பாரசீகத்தை வென்றபோது இந்த மதத்தைச் சேர்ந்த சுமார் ஒரு லட்சம் பேர் இந்தியாவில் அடைக்கலம் புகுந்தார்கள். சிலர் பாரசீகத்திலேயே தங்கி விட்டார்கள். பாரசீகத்தில் இருந்தவர்களின் எண்ணிக்கை முஸ்லீம்களின் இடைவிடாத கொடுமை காரணமாக மிகவும் குறைந்து, இப்போது கிட்டத்தட்டப் பத்தாயிரம் பேர்களே இருக்கிறார்கள். இந்தியாவில் சுமார் எண்பதாயிரம் பேர் இருக் கிறார்கள், ஆனால் அவர்களுடைய எண்ணிக்கை அதிகரிக்க வில்லை. அவர்களைப் பொறுத்தவரையில் ஒரு கஷ்டம் இருக் கிறது. யாரையும் மதமாற்றம் செய்து அவர்கள் தங்கள் மதத்தில் சேர்த்துக் கொள்வதில்லை. இந்தியாவில் குறைந்த எண்ணிக்கை யிலேயே உள்ள இவர்களும் நெருங்கிய உறவில் மணம் செய்து கொள்ளும் கொடிய வழக்கத்தின் காரணமாக எண்ணிக்கையில் அதிகரிப்பதில்லை. இந்த ஒரு மதத்தைத் தவிர மற்ற எல்லா

சிறந்த மதங்களும் வாழ்கின்றன, பரவுகின்றன, வளர்ந்து கொண்டிருக்கின்றன.

உலகின் சிறந்த மதங்களெல்லாம் மிகப் புராதனமானவை என்பதை நாம் நினைவில்கொள்ள வேண்டும். சமீபத்தில் எந்தப் புதிய சிறந்த மதமும் தோன்றவில்லை. அதுமட்டுமல்ல. உலகின் ஒவ்வொரு மதமும் கங்கைக்கும் யூஃப்ரடிஸ் நதிக்கும் இடைப் பட்ட பகுதியில்தான் தோன்றின, தோன்றியிருக்கின்றன என்பதையும் நாம் நினைவில் கொள்ள வேண்டும். ஐரோப்பாவிலோ அமெரிக்காவிலோ ஒரு சிறந்த மதம்கூடத் தோன்றவே இல்லை. எல்லா மதங்களுக்கும் பிறப்பிடம் ஆசியாதான்.

தற்கால விஞ்ஞானிகள் சொல்வதுபோல, தகுதி உள்ளவர்களுக்கே வாழ்வு (survival of the fittest) என்பது உண்மையானால் இந்த மதங்கள் இன்னும் இருப்பது, அவை சிலராலாவது பின் பற்றப் படுவதற்குத் தகுதியானவை என்பதையே காட்டுகிறது. இந்த மதங்கள் ஏன் இருக்க வேண்டும் என்பதற்குக் காரணம் இருக்கிறது, இவை பலருக்கு நன்மையைக் கொடுக்கின்றன. முஸ்லீம் மதத்தைப் பாருங்கள், தெற்கு ஆசியாவின் சில பகுதிகளில் அது வேகமாகப் பரவுகிறது; ஆப்ரிக்காவிலோ காட்டுத் தீபோல் பரவிக் கொண்டிருக்கிறது. பௌத்த மதம் மத்திய ஆசியா முழுவதிலும் பரவியவண்ணம் இருக்கிறது.

யூதர்களைப்போலவே இந்துக்களும் மத மாற்றம் செய்வதில்லை. இருந்தாலும் மற்ற மதங்களைச் சேர்ந்தவர்களுள் சிலர் இந்து மதத்தின் பழக்க வழக்கங்களைப் படிப்படியாக ஏற்றுக்கொண்டு, கிட்டத்தட்ட இந்துக்களைப்போல் வாழ ஆரம்பித்து விட்டார்கள்.

கிறிஸ்தவ மதம் பரவிக் கொண்டிருப்பது உங்களுக்குத் தெரிந்த விஷயம். ஆனால் அது பரவுவதில் முயற்சிக்குத் தகுந்த பலன் இருக்கிறதா என்பது எனக்குத் தெரியவில்லை. கிறிஸ்தவர்களின் முயற்சியில் ஒரு பெரிய குறை இருக்கிறது; மேலை இயக்கங்கள் அனைத்திலும் உள்ள குறைதான் அது—எந்திரமே முக்கால்வாசிச் சக்தியையும் விழுங்கி விடுகிறது, அதாவது மதத்தைப் பரப்புவதில் அவர்களது விதிவிலக்குகளே அதிகமாக இருக்கின்றன. மதப் பிரச்சாரம் ஆசியர்களுக்கு மட்டுமே கைவந்த கலை. அமைப்புகள், சமுதாய இயக்கங்கள், படைகள், அரசாங்கங்கள் இவற்றில் மேலைநாட்டினர் திறமைசாலிகள் தான். ஆனால் மதப் பிரச்சாரத்தில் அவர்கள் ஆசியர்களின் அருகில் நெருங்க முடியாது. அது எப்போதும் ஆசியர்களுக்கு

மட்டுமே எப்போதும் கைவந்த கலையாக இருந்து வந்திருக்கிறது; ஆசியர்கள் அதிகமாக விதிவிலக்குகளைப் பொருட்படுத்துவதில்லை.

இந்தச் சிறந்த மதங்களெல்லாம் இருப்பதும் பரவுவதும் வளர்வதும், நாம் மனித இன வரலாற்றில் காணும் உண்மை. இதில் ஏதோ ஒரு அர்த்தம் இருக்கிறது. எல்லாம் வல்லவரும் கருணைக் கடலுமான இறைவன், இந்த மதங்களில் ஒன்றைத் தவிர மற்ற எல்லாம் அழிய வேண்டுமென்று விரும்பியிருந்தால் அது நெடுங்காலத்திற்கு முன்பே நிறைவேறியிருக்கும். இந்த மதங்களில் ஒன்றுதான் உண்மை, மற்றவை போலிகள் என்பது உண்மையாயிருந்தால் அந்த மதம் இதற்குள் உலகம் முழுவதும் பரவியிருக்கும். ஆனால் அப்படி நடக்கவில்லை, எந்த ஒரு தனி மதமும் உலகம் முழுவதையும் ஆக்கிரமிக்கவில்லை. எல்லா மதங்களுமே சில காலங்களில் முன்னேறுகின்றன, சிலவேளைகளில் பின்னடைகின்றன.

இதை நினைத்துப் பாருங்கள்: உங்கள் நாட்டில் ஆறு கோடி மக்கள் இருக்கிறார்கள், அதில் இரண்டு கோடி பேர் மட்டுமே எல்லாவிதமான மதங்களையும் பின்பற்றுகிறார்கள். ஆகவே தொடர்ந்த முன்னேற்றம் என்பது இல்லை. புள்ளி விவரம் எடுத்தால், எல்லா நாடுகளிலுமே மதங்கள் சிலவேளைகளில் முன்னேறுவதையும் சிலவேளைகளில் பின்னடைவதையும் காணலாம். மதப் பிரிவுகள் பெருகிக்கொண்டே இருக்கின்றன. தங்கள் மதமே உண்மையானது, தங்கள் மத நூலில்தான் கடவுள் எல்லா உண்மைகளையும் அறிவித்திருக்கிறார் என்றும் உரிமை கொண்டாடுவது உண்மையானால், இத்தனை மதப் பிரிவுகளுக்குக் காரணம் என்ன? ஒரே நூலை ஆதாரமாகக் கொண்டு ஐம்பது வருடங்களில் இருபது மதப் பிரிவுகள் தோன்றுகின்றன. கடவுள் எல்லா உண்மையையும் சில நூல்களில் தெரிவித்திருந்தால், நாம் ஒருவரோடொருவர் அடித்துக் கொள்வதற்காக அவர் அவற்றைத் தந்திருக்க மாட்டார். ஆனால் நாம் அடித்துக் கொள்கிறோம். ஏன் அப்படி? மதம்பற்றிய எல்லா உண்மைகளும் நிறைந்த ஒரு நூலைக் கடவுள் தந்தால் கூட அதனால் நமக்குப் பயன் ஒன்றும் இருக்காது. ஏனென்றால் அதை யாராலும் புரிந்துகொள்ள முடியாது. உதாரணத்திற்குப் பைபிளையும் பல்வேறு கிறிஸ்தவ மதப் பிரிவுகளையும் எடுத்துக் கொள்வோம். ஒவ்வொரு பிரிவினரும் தங்களுக்குத் தோன்றிய படி பைபிளை அர்த்தம் செய்துகொண்டு தாங்கள் மட்டுமே

அதைப் புரிந்து கொண்டிருப்பதாகவும், மற்றவர்கள் கூறுவதெல் லாம் தவறு என்றும் சொல்கிறார்கள். எல்லா மதங்களுடைய விஷயமும் இதுதான். முஸ்லீம்கள், பௌத்தர்கள் இவர் களுடைய மதங்களில் பல பிரிவுகள் இருக்கின்றன. இந்து மதத்திலோ நூற்றுக்கணக்கான பிரிவுகள் இருக்கின்றன. ஆன்மீக விஷயங்களில் மனிதர்கள் எல்லோரையும் ஒரே கருத்து உடையவர்களாக ஆக்குவது முடியாத காரியம் என்று காண்பிப் பதற்காகத்தான் இந்த உண்மைகளை எடுத்துச் சொன்னேன். அதற்காகச் செய்த முயற்சிகள் இதுவரை வெற்றி பெற்றதில்லை, இனியும் வெற்றி பெறப் போவதில்லை.

இன்றுகூட, ஒருவன் ஒரு கொள்கையைத் தொடங்கு கிறான், அதைப் பின்பற்றுபவர்களிடமிருந்து அவன் இருபது மைல் சென்றால் போதும், அதற்குள் அவர்கள் இருபது புதிய பிரிவுகளைத் தோற்றுவித்து விடுவார்கள். இது எப்போதும் நடந்து கொண்டிருப்பதை நாம் காண்கிறோம். எல்லோரையும் ஒரேவகைக் கருத்துக்களைப் பின்பற்றச் செய்வது முடியாத காரியம், இது வெளிப்படையான உண்மை. இப்படி இருப்பதற் காக நான் கடவுளுக்கு நன்றி சொல்கிறேன். நான் எந்த மதப் பிரிவுக்கும் விரோதி அல்ல. மதப் பிரிவுகள் இருப்பதற் காக நான் சந்தோஷப்படுகிறேன். அவை மேன்மேலும் பெருக வேண்டும் என்பதே என் விருப்பம். ஏன்? நீங்களும் நானும் எல்லோரும் ஒரே எண்ணங்களைச் சிந்திக்க ஆரம்பித் தால் சிந்திக்க எண்ணங்களே இல்லாமல் போய்விடும் என்பதால்தான்.

இரண்டோ அதற்கு மேற்பட்ட சக்திகளின் மோதல்தான் ஒரு பொருளின் இயக்கத்திற்குக் காரணம் என்பது நமக்குத் தெரியும். அதுபோல் எண்ணங்களின் மோதலே, சிந்தனையில் வேறுபாடே சிந்தனையை விழிப்படையச் செய்கிறது. நாம் அனைவரும் ஒரே மாதிரி நினைப்பதானால், எகிப்திய மம்மி களைப்போல் ஒருவரை ஒருவர் பார்த்து விழித்துக் கொண் டிருக்க வேண்டியதுதான், அதற்குமேல் எதுவும் இல்லை. வேக மாக ஓடும் ஜீவநதியில்தான் சுழல்கள் இருக்கும். தேங்கிநிற்கும் நீரில் சுழல் இருக்காது. மதங்கள் அழிந்துவிட்டால் மதப் பிரிவு களும் இருக்காது. பிறகு எங்கும் அமைதி, மயான அமைதிதான். ஆனால் மனித குலத்திற்குச் சிந்தனைச் சக்தி இருக்கும்வரை மதப் பிரிவுகளும் இருந்தே தீரும். வேறுபாடே உயிரோட்டத் தின் அறிகுறி, அது இருந்தேயாக வேண்டும். எவ்வளவு

மனிதர்கள் இருக்கிறார்களோ, அவ்வளவு மதப் பிரிவுகள் பெருக நான் பிரார்த்திக்கிறேன். அப்போது ஒவ்வொருவருக்கும் அவர்களுக்கென்று சொந்தமான பாதை இருக்கும், அவர்களது சொந்தச் சிந்தனைமுறை இருக்கும்.

ஆனால் இது ஏற்கனவே இருக்கிறது. நாம் ஒவ்வொருவரும் நமது சொந்த வழியிலேயே சிந்தனை செய்கிறோம். ஆனால் நமது இந்த இயற்கையான போக்குக்கு எப்போதும் தடை இருந்துகொண்டே இருந்திருக்கிறது; இன்னும் இருக்கிறது. நேரடியாக வாளைப் பயன்படுத்தவில்லையென்றால் வேறு வழிகள் பயன்படுத்தப்படுகின்றன. நியூயார்க்கின் பிரபலமான மதப் பிரச்சாரகர்களுள் ஒருவர் சொல்வதைக் கேளுங்கள்: 'பிலிப்பைன் நாட்டை வென்றேயாக வேண்டும், ஏனெனில் அங்கே கிறிஸ்தவ மதத்தைப் பரப்புவதற்கு அது ஒன்றே வழி.' பிலிப்பைன் நாட்டினர் கத்தோலிக்கர்கள்; அந்த மதப் பிரச்சாரகர் அவர்களைப் பிரெஸ்பிடேரியர்களாக்க விரும்பு கிறார். அதற்காகத் தனது இனத்தினர்மீது இந்தக் கொடிய கொலைப் பாவத்தைச் சுமத்தவும் அவர் தயாராக இருக்கிறார். என்ன பயங்கரம்! இத்தனைக்கும் இந்த மனிதர் அமெரிக்கா விலுள்ள பிரபல மதப் பிரச்சாரகர்களுள் ஒருவர், நிறைய படித்தவர். இத்தகைய ஒருவர் இப்படி வெட்கமின்றிப் பிதற்று கிறார். உலகம் என்ன ஆவது? அவரை உற்சாகப்படுத்த ஒரு கூட்டமும் இருந்துவிட்டால் கேட்கவே வேண்டாம்! இதுவா நாகரீகம்? இது புலியின் வெறித்தனம், மனிதனைத் தின்னும் ஆதிவாசிகளின் ரத்ததாகம்; அது புதிய பெயரிலும் புதிய சூழ் நிலைகளிலும் வெளிவருகிறது. வேறு எதுவாக இருக்க முடியும்?

இப்போதே இப்படி இருந்தால், ஒவ்வொரு பிரிவினரும் மற்றப் பிரிவினரை அடியோடு ஒழிப்பதற்குத் தங்களாலான முயற்சிகளையெல்லாம் செய்த பழங்காலத்தின் பயங்கரத்தை நினைத்துப் பாருங்கள். வரலாறு அதைக் காட்டுகிறது. நம் முள்ளே உள்ள புலி உறங்கிக் கொண்டிருக்கிறது; சாகவில்லை. வாய்ப்பு கிடைத்தால் போதும், அது தாவிப் பாய்ந்து, தன் கொடூரத்தைக் காட்டத் தவறுவதில்லை. கண்ணுக்குத் தெரி கின்ற வாள்போன்ற ஆயுதங்களைவிடப் பயங்கரமான ஆயுதங் களான அலட்சியம், சமுதாய வெறுப்பு, சமுதாயத்திலிருந்து விலக்குதல் போன்றவை இருக்கின்றன. நாம் சிந்திப்பதைப் போலவே சிந்திக்காத மக்கள்மீது நாம் பிரயோகிக்கின்ற இந்த ஆயுதங்கள் பயங்கர ஆயுதங்களில் எல்லாம் பயங்கரமானவை.

ஒவ்வொருவரும் ஏன் நம்மைப் போலவே சிந்திக்க வேண்டும்? ஒரு காரணமும் எனக்குத் தெரியவில்லை. நான் பகுத்தறிவு உடையவனாக இருப்பேனானால், அவர்கள் நான் சிந்திப்பது போலவே சிந்திக்காதது எனக்கு மகிழ்ச்சியையே அளிக்க வேண்டும். மயானம் போன்ற இடத்தில் வாழ நான் விரும்ப வில்லை; மனிதர்கள் வாழும் உலகில் ஒரு மனிதனாக வாழவே விரும்புகிறேன். சிந்திப்பவர்கள் வேறுபடத்தான் வேண்டும், சிந்தனையின் முதல் அடையாளம் வேறுபாடே. நான் சிந்தனை யாளனாக இருந்தால், கருத்து வேறுபாடுகள் கொண்ட சிந்தனை யாளர்களுக்கு இடையே வாழ்வதைத்தான் விரும்புவேன்.

'இத்தனை வேறுபாடுகளும் எப்படி உண்மையாக இருக்க முடியும்?' என்ற கேள்வி எழுகிறது. ஒரு விஷயம் உண்மையாக இருந்தால் அதன் மறுப்பு பொய்யாகத்தான் இருக்கும். முரண் பட்ட கருத்துக்கள் ஒரே சமயத்தில் எப்படி உண்மையாக இருக்க முடியும்? இந்தக் கேள்விக்குத்தான் நான் பதில் சொல்ல விரும்புகிறேன். ஆனால் முதலில் உங்களை ஒன்று கேட்கிறேன்: உலகின் மதங்கள் எல்லாம் உண்மையிலேயே ஒன்றுக்கொன்று முரண்பட்டவையா? மதங்களின் உன்னதமான சிந்தனைகள் பொதியப்பட்டுள்ள அந்தப் போர்வைகளை, புறத் தோற்றங் களை நான் சொல்லவில்லை; பலவிதமான கட்டிடங்கள், பல் வேறு மொழிகள், வெவ்வேறு சடங்குகள், வேறுபட்ட நூல்கள் இவற்றைப் பற்றி நான் சொல்லவில்லை. நான் குறிப்பிடுவது ஒவ்வொரு மதத்தினுடைய மையக்கருத்தையே. ஒவ்வொரு மதத் திற்கும் ஒரு மையக் கருத்து இருக்கிறது. இந்த மையக் கருத்து மதத்திற்கு மதம் வேறுபடலாம், ஆனால் அவை முரண்பட்ட வையா? அவை ஒன்றுக்கொன்று முரண்பட்டவையா அல்லது ஒன்றையொன்று நிறைவு செய்பவையா என்பதே கேள்வி.

நான் சிறுவனாக இருந்தபோதே இதைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்கினேன். அன்று முதல் இன்றுவரை அதை ஆராய்ந்து வருகிறேன். அதில் நான் கண்ட முடிவு உங்களுக்குச் சற்று உதவியாக இருக்கும் என்பதால் அதை உங்கள் முன் வைக் கிறேன். என்னைப் பொறுத்தவரை மதங்கள் ஒன்றுக்கொன்று முரண்பட்டவை அல்ல; ஒன்றை ஒன்று நிறைவு செய்பவை. ஒவ்வொரு மதமும் மகத்தான பிரபஞ்சம்தழுவிய உண்மையின் ஒரு பகுதியை எடுத்துக் கொள்கிறது; அதற்கு உருக் கொடுப் பதிலும், உதாரணங்கள் காட்டி விளங்குவதிலும் தன் ஆற்றல் முழுவதையும் ஈடுபடுத்துகிறது. ஆகவே இது இணைப்பு

முயற்சியே தவிர விலக்கும் முயற்சி அல்ல. இதுதான் கருத்து. ஒன்றுக்குப்பின் ஒன்றாகப் பல மதங்கள் தோன்றுகின்றன, ஒவ்வொன்றும் ஒரு மேலான கருத்தை எடுத்துக் கொள்கிறது, இந்தக் கருத்துக்களுடன் பல்வேறு லட்சியங்களை இணைக்கிறது; இவ்வாறுதான் மனிதகுலம் முன்னேற்றப் பாதையில் செல்கிறது.

மனிதன் ஒருபோதும் தவறிலிருந்து உண்மைக்குப் போவதில்லை; உண்மையிலிருந்து உண்மைக்குப் போகிறான், சிறு உண்மையிலிருந்து பெரிய உண்மைக்குப் போகிறான். நிச்சயமாகத் தவறிலிருந்து உண்மைக்குப் போவதில்லை. குழந்தை தந்தையைவிடச் சிறந்தவன் ஆகலாம்; அதற்காகத் தந்தை பயனற்றவர் என்றாகுமா? குழந்தை என்பது தந்தையும், அவருடன் வேறு சிலவும் சேர்ந்ததே. குழந்தைப் பருவத்தில் இருந்த அறிவைவிட இப்போதைய நமது அறிவு உயர்வானதாக இருக்கிறது, அதற்காகக் குழந்தைப் பருவத்தின் அறிவை இழிவாக நினைக்கலாமா? அது பயனற்றது என்று சொல்லலாமா? குழந்தைப் பருவ அறிவுடன் ஏதோ அதிகம் சேர்ந்ததுதான் நமது இப்போதைய அறிவு.

அது மட்டுமல்லாமல் ஒரே பொருளைப்பற்றிக் கிட்டத்தட்ட முரண்பட்ட கருத்துக்கள் இருக்கலாம். ஆனால் அந்தக் கருத்துக்கள் ஒரே பொருளைக் குறிப்பவைதான். ஒருவன் சூரியனை நோக்கிச் செல்வதாக வைத்துக் கொள்வோம். முன்னே போகப்போக அவன் சூரியனைப் புகைப்படம் எடுத்துக்கொண்டே செல்கிறான். அவன் திரும்பி வந்து அந்தப் படங்களை எல்லாம் நம் முன் வைக்கிறான். அவற்றுள் எந்த இரண்டும் ஒத்திருக்கவில்லை. ஆனாலும் இவை பல நிலைகளில் எடுக்கப்பட்ட அதே சூரியனின் படங்களே என்பதை யார் மறுப்பார்கள்? இந்தச் சர்ச்சை நான்கு கோணங்களிலிருந்து படம் பிடியுங்கள், ஒவ்வொன்றுமே வித்தியாசமாக இருக்கும். ஆனால் அவை எல்லாமே இந்தச் சர்ச்சைத்தான் குறிக்கும்.

அதுபோல் நாம் எல்லோருமே ஒரே உண்மையைப் பல்வேறு கோணங்களிலிருந்து பார்க்கிறோம். இந்தக் கோணங்கள் நமது பிறப்பு, கல்வி, சூழ்நிலை போன்றவற்றைப் பொறுத்து வேறுபடுகின்றன. சூழ்நிலைகள் அனுமதிக்கின்ற அளவு உண்மையை நாம் காண்கிறோம்; அந்த உண்மையை நமது உள்ளத்தின் வண்ணம் பூசுகிறோம், நமது அறிவால் புரிந்து கொள்கிறோம், நமது மனத்தால் கிரகிக்கிறோம். அந்த

உண்மையில் நமக்கு எவ்வளவு தொடர்பு இருக்கிறதோ அந்த அளவுக்கத்தான், எந்த அளவுக்குக் கிரகித்துக் கொள்ள முடி கிறதோ அந்த அளவுக்குத்தான் அறிந்துகொள்ள முடியும். மனிதனுக்கு மனிதன் வேறுபாட்டிற்கும், முரண்பாடான கருத்துக்களுக்கும் இதுதான் காரணம். இருந்தாலும் நாம் எல்லோரும் பிரபஞ்சம்தழுவிய அந்த ஒரே உண்மையைச் சேர்ந்தவர்களே.

ஆகவே கடவுளின் அரசாங்கத்தில் மனிதகுலத்தின் நன்மைக்காகச் செயல்படுகின்ற வெவ்வேறு சக்திகளே இந்த மதங்கள் என்பதுதான் என் கருத்து. இவற்றுள் ஒன்றுகூட அழிய முடியாது, ஒன்றைக்கூட அழிக்கவும் முடியாது. இயற்கைச் சக்திகள் எதையும் அழிக்க முடியாததுபோல் இந்த ஆன்மீகச் சக்திகளையும் அழிக்க முடியாது. ஒவ்வொரு மதமும் வாழ்ந்து கொண்டிருப்பதைக் காண்கிறோம். சில நேரங்களில் முன்னேற்றமும், சிலகாலங்களில் பின்னடைதலும் இருக்கலாம், சிலவேளைகளில் அதன் புறப் பகட்டுகள் பல தகர்ந்துவிடலாம், சில வேளைகளில் அது பகட்டுகளால் நிறைந்து காணப்படலாம். ஆனால் அதன் மையக் கருத்து எப்போதும் அப்படியே இருக் கிறது, அது அழிவதில்லை. ஒவ்வொரு மதமும் கொண்டிருக்கும் லட்சியமும் அழிவதில்லை. ஆகவே எல்லா மதங்களும் தெரிந்தே முன்னேற்றப் பாதையில் நடைபோடுகின்றன.

எல்லா நாடுகளின் தத்துவ அறிஞர்களும் பிறரும் கனவு கண்ட உலகம்தழுவிய மதம் ஏற்கனவே இருக்கிறது. அது இங்கே இருக்கிறது. உலகம்தழுவிய சகோதரத்துவம் போலவே உலகம்தழுவிய மதமும் ஏற்கனவே இருக்கிறது. பல நாடுகளில் சுற்றிய உங்களுள் பலர் ஒவ்வொரு நாட்டிலும் சகோதர சகோதரிகளைக் காணவில்லையா? உலகம் முழுவதிலும் நான் கண்டிருக்கிறேன். சகோதரத்துவம் ஏற்கனவே இருக்கிறது, சிலர் அதைக் காணவில்லை; அவர்கள்தான் புதிய சகோதரத்துவம் வேண்டும் என்று தொண்டை கிழியக் கத்தி, ஏற்கனவே இருப் பதையும் கெடுக்கிறார்கள்.

உலகம்தழுவிய மதமும் ஏற்கனவே இருக்கிறது. பல்வேறு மதங்களின் புரோகிதர்களும் பிரச்சாரகர்களும் சிறிது நேரம் வாயை மூடிக்கொண்டாலே போதும், உலகம்தழுவிய மதம் இருப்பது நமக்குத் தெரியும். அதை நாம் அறியாமல் செய்வது புரோகிதர்கள்தான். அது நமக்குத் தெரிந்துவிட்டால் அவர் களின் பிழைப்பு கெட்டுவிடும். ஒவ்வொரு நாட்டிலும் புரோகி

தர்கள் பழமைவாதிகளாக இருப்பதைப் பார்த்திருப்பீர்கள். ஏன் அப்படி? அவர்களுள் மக்களை வழிநடத்திச் செல்பவர்கள் மிகவும் குறைவு; பலரும் மக்களால் வழிநடத்தப் படுபவர்களாக, மக்களின் அடிமைகளாக, வேலைக்காரர்களாக இருக்கிறார்கள். 'அது உலர்ந்தது' என்று நீங்கள் சொன்னால், அவர்களும் 'அது உலர்ந்தது' என்பார்கள். 'அது கறுப்பு' என்று சொன்னால் அதற்கும் ஆமாம் போடுவார்கள். மக்கள் முன்னேறினால் புரோகிதர்களும் முன்னேறியே தீர வேண்டும், அவர்கள் பின்தங்க முடியாது. ஆகவே அவர்களைக் குறை கூறுவதை விட்டுவிட்டு—இப்போது புரோகிதர்களைக் குறை கூறுவதே வழக்கமாகப் போய்விட்டது—உங்களைக் குறை கூறுங்கள். அவரவர் தகுதிக்கு ஏற்றதுதான் கிடைக்கும்.

மக்களுக்குப் புதிய, முன்னேற்றக் கருத்துகளைப் போதித்து, அவர்களை முன்னேற்ற விரும்பும் புரோகிதர்களின் கதி என்ன ஆகும்? ஒருவேளை அவரது பிள்ளைகள் பட்டினி கிடக்க நேரும், அவர் கந்தலைக் கட்டிக்கொள்ள நேரும். நம்மை ஆள் கின்ற சட்டங்களுக்கு அவர்களும் கட்டுப்பட்டவர்களே. 'நீங்கள் முன்னேறுகிறீர்களா, முன்னேறுங்கள், நல்லது' என்பார்கள் அவர்கள். பொதுமக்களின் கருத்திற்குப் பயப்படாத சிலரும் இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்கள் உண்மையைப் பார்க் கிறார்கள், உண்மையை மட்டுமே மதிக்கிறார்கள். உண்மை அவர்களை ஆட்கொண்டுவிட்டது. அவர்களால் முன்னேறு வதைத் தவிர வேறு எதுவும் செய்ய முடியாது. அவர்கள் பின்னால் திரும்பிப் பார்ப்பதே இல்லை. அவர்களைப் பொறுத்தவரையில் மனிதர்கள் யாரும் இல்லை; கடவுள் மட்டுமே உண்டு. அவரே அவர்களுக்கு வழிகாட்டும் ஒளி. அவர்கள் அந்த ஒளியைப் பின்பற்றுகிறார்கள்.

மார்மன் (Mormon) பிரிவைச்[1] சேர்ந்த ஒருவரை இங்கே சந்தித்தேன். தங்கள் நெறியில் சேரும்படி அவர் என்னை வற்புறுத்தினார். அவரிடம் நான், 'உங்கள் கருத்துக்களை நான் மிகவும் மதிக்கிறேன்; ஆனால் சில விஷயங்களில் நமக்குள் கருத்து வேறுபாடு இருக்கிறது. நான் ஒரு துறவியர் சங்கத்தைச் சேர்ந்தவன். நீங்களோ பல பெண்களைத் திருமணம் செய்து கொள்வதில் நம்பிக்கை உள்ளவர்கள். போகட்டும், நீங்கள்

---

1. 1830-இல் அமெரிக்காவில் ஆரம்பிக்கப்பட்ட கிறிஸ்தவ மதப் பிரிவு; 'The Church of Jesus Chrisit of Lattet-day Saints' என்று அழைக்கப்படுகிறது.

ஏன் இந்தியாவிற்குப் போய்ப் பிரச்சாரம் செய்யக் கூடாது?' என்று கேட்டேன். அவர் சற்று திகைப்புற்று, 'திருமணத் திலேயே உங்களுக்கு நம்பிக்கை இல்லை, நாங்களோ பல பெண் களை மணப்பதில் நம்பிக்கை வைத்திருக்கிறோம். அப்படியும் என்னை உங்கள் நாட்டிற்குப் போய்ப் பிரச்சாரம் செய்யச் சொல்கிறீர்களே' என்று கேட்டார். அதற்கு நான், 'இந்திய மக்கள் யார் எந்த மதக் கருத்தை எடுத்துச் சொன்னாலும் கேட் பார்கள். நீங்கள் இந்தியாவுக்குப் போக வேண்டும் என்று நான் விரும்புகிறேன். அதற்கு முதல் காரணம், நான் பல பிரிவுகள் இருக்க வேண்டும் என்பதில் நம்பிக்கை கொண்டவன் என்பது; இரண்டாவதாக இந்தியாவில் உள்ள சிலர் தற்போது இருக்கும் நெறிகளால் திருப்தி அடையவில்லை. இதனால் அவர்கள் மதத்தில் ஈடுபடாமலே இருக்கிறார்கள். அவர்களில் சிலர் உங்களைப் பின்பற்றலாம்' என்று பதிலளித்தேன்.

மதப் பிரிவுகள் இருக்கின்ற அளவுக்கு மக்கள் மதத்தைப் பின்பற்றுவதற்கான வாய்ப்புகள் அதிகமாகும். பலவகை உணவு நிறைந்த ஹோட்டலில் எல்லாவகை ருசியுடையவர்களும் பசியாறலாம். ஆகவே ஒவ்வொரு நாட்டிலும் மதப் பிரிவுகள் பெருக வேண்டும் என்று நான் விரும்புகிறேன், அப்போதுதான் அதிகமானோர் ஆன்மீகத்தில் ஈடுபடுவதற்கான வாய்ப்பு கிடைக்கும். மக்களுக்கு மதத்தில் பிரியமில்லை என்று நினைக் காதீர்கள். அதை நான் நம்பவில்லை. மக்களுக்கு வேண்டியதை மதப் பிரச்சாரகர்களால் கொடுக்க முடியவில்லை. நாத்திகன், உலோகாயதன் என்றெல்லாம் முத்திரை குத்தப்பட்ட ஒருவன் தனக்குத் தேவையான உண்மையை அளிக்கின்ற ஒருவனைச் சந்திப்பானானால் சமுதாயத்தின் சிறந்த ஆன்மீகவாதியாக மாறக்கூடும்.

நாம் நமக்குப் பிடித்தபடிதான் சாப்பிட முடியும். உதாரண மாக இந்துக்களாகிய நாங்கள் கைகளால் சாப்பிடுகிறோம். எங்கள் விரல்கள் உங்களுடைய விரல்களைவிட அதிக நெகிழ்ச்சித்திறன் உடையவையாக இருக்கின்றன. உங்களால் எங்களைப்போல் விரல்களை பயன்படுத்த முடியாது. உணவு கிடைத்தால் மட்டும் போதாது, அதைச் சொந்த வழியில் நாம் சாப்பிட முடியவும் வேண்டும். நமக்கு ஆன்மீகச் சிந்தனை களைத் தந்தால் மட்டும் போதாது; அதை நமது வழிக்கு ஏற்ப தர வேண்டும், அவை நமது மொழியில், நமது ஆன்மாவின் மொழியில் தரப்பட வேண்டும். அப்போதுதான் அவை நமக்குத்

திருப்தி தரும். எனது மொழியில் பேசுபவன் வந்து உண்மையை எனது மொழியில் தந்தால் அதை நான் உடனே புரிந்துகொள்கிறேன், என்றென்றைக்குமாக அதை ஏற்றுக்கொள்கிறேன். இது ஒரு பெரிய உண்மை.

மனித மனம் பல நிலைகளில் உள்ளது, பலவகைப்பட்டது; ஆதலால் மதங்களின் வேலை மிகவும் கடினம் என்பது நமக்குத் தெரிகிறது. ஒருவன் சில கோட்பாடுகளை உருவாக்குகிறான், அந்த மதம் மனித குலம் முழுவதையும் திருப்திப் படுத்தக் கூடியது என்று தீர்மானமாகக் கூறுகிறான். கையில் ஒரு சிறிய கூண்டை எடுத்துக்கொண்டு கடவுளின் மிருகக்காட்சி சாலையான இந்த உலகில் வந்து, 'கடவுள், யானை, மற்ற எல்லாமே இந்தக் கூண்டிற்குள்தான் போக வேண்டும்; யானையைத் துண்டுதுண்டாக வெட்ட வேண்டியிருந்தாலும் அது இந்தக் கூண்டிற்குள்தான் போயாக வேண்டும்' என்கிறான். சில நல்ல கருத்துகளைக் கொண்ட ஒரு நெறி இருக்கலாம். அதைப் பின்பற்றுபவர்கள், 'எல்லோரும் இந்த நெறியைப் பின்பற்ற வேண்டும்' என்று கூறுகிறார்கள். 'அவர்களுக்கெல்லாம் இடமில்லையே' என்று சொன்னால், 'அதைப்பற்றிக் கவலை இல்லை. அவர்களைத் துண்டுதுண்டாக வெட்டியாவது உள்ளே சேர்த்துக் கொள்வோம்; அவர்கள் உள்ளே வராவிட்டால் என்னவாகும் தெரியுமா? அதோகதிதான்' என்று அவர்கள் சொல்கிறார்கள்.

சற்று நின்று நிதானித்து, 'மக்கள் ஏன் நம்மைக் கவனிக்கவில்லை' என்று யோசிக்கின்ற பிரச்சாரகனையோ, நெறியையோ இதுவரை நான் பார்த்ததில்லை. அதற்குப் பதிலாக, 'மக்கள் கெட்டவர்கள்' என்று மக்களைச் சபிக்கிறார்கள். 'மக்கள் ஏன் என் வார்த்தைகளைக் கேட்பதில்லை? அவர்கள் உண்மையைக் காணுமாறு செய்ய என்னால் ஏன் முடியவில்லை? அவர்கள் புரிந்துகொள்ளும் வகையில் என்னால் ஏன் பேச முடியவில்லை? என்னால் ஏன் அவர்களின் கண்களைத் திறக்க முடியவில்லை?' என்று அவர்கள் கேட்பதே இல்லை. நிச்சயமாக அவர்கள் அறிய வேண்டியது ஏராளம் உள்ளது. அவர்களது போதனைகளை மக்கள் கவனிக்கவில்லை என்றால் அவர்கள் சபிக்க வேண்டியது தங்களையே தவிர மக்களையல்ல. ஆனால் குற்றம் எப்போதும் மக்கள்மீதுதான் சுமத்தப்படுகிறது. எல்லோருக்கும் ஏற்புடையதாகத் தங்கள் நெறியை விரிவாக்க அவர்கள் முயல்வதில்லை.

ஆகவே ஏன் இவ்வளவு குறுகிய மனப்பான்மை இருக்கிறது என்பதும், உண்மையின் ஒரு பகுதி, தானே முழு உண்மை என்று ஏன் அறிவித்துக் கொள்கிறது என்பதும், எல்லைக்கு உட்பட்ட ஒரு சிறிய பகுதி, தானே எல்லையற்றதென்று ஏன் பறைசாற்றிக் கொள்கிறது என்பதும் இப்போது நமக்குப் புரிகிறது. தவறான சிந்தனைகளின் காரணமாக இந்தச் சில நூறு வருடங்களில் தோன்றிவிட்ட சிறுசிறு நெறிகளை நினைத்துப் பாருங்கள், கடவுளைப் பற்றிய எல்லையற்ற உண்மை முழுவதும் தங்களுக்கே உரிமையானது என்று அவை என்ன மூர்க்கத் தனமாக உரிமை கொண்டாடுகின்றன! இந்த ஆணவத்தை என்னென்பது! இது எதையாவது காட்டுகிறது என்றால் அது மனிதர்களின் வீண்பகட்டை மட்டுமே. இப்படிப்பட்ட ஆரவாரங்கள் எப்போதும் தோல்வியே காண்கின்றன என்பதில் ஆச்சரியமில்லை. கடவுளின் அருளால் அவை எப்போதும் தோல்வியே அடையவும் செய்கின்றன. இதில் முஸ்லீம்கள் கரைகண்டவர்கள்; அவர்களது முன்னேற்றத்தில் ஒவ்வோர் அடியும் வாளின்மூலமே செய்யப்பட்டது; ஒரு கையில் குரான், மறு கையில் வாள்; ‘குரானை ஏற்றுக்கொள், இல்லாவிட்டால் ஒழிந்துபோ. உனக்கு வேறு வழியே இல்லை’—இதுதான் அவர்களின் வழி. அவர்களுடைய வெற்றி எவ்வளவு மகத்தானதாக இருந்தது என்பதை வரலாறு சொல்கிறது, அறுநூறு வருட காலம் யாராலும் அவர்களைத் தடுக்க முடியவில்லை. ஆனால் அதன்பிறகு அவர்கள் அலறியடித்துக் கொண்டு இதை நிறுத்திக் கொள்ள நேர்ந்தது. இதே முறைகளைப் பின்பற்றினால் மற்ற மதங்களுக்கும் இதே கதிதான்.

நாம் வெறும் சிறு குழந்தைகள். எப்போதும் மனித இயல்பை மறந்துவிடுகிறோம். வாழ்க்கையை ஆரம்பிக்கும் போது நம் எதிர்காலம் பிரகாசமானதாக இருக்கும் என்று நம்புகிறோம், நமது நம்பிக்கையை எதுவும் அசைக்க முடிவதில்லை. ஆனால் வயதாக ஆக வேறுவிதமாகச் சிந்திக்கிறோம். மதங்களின் விஷயமும் இப்படித்தான். ஆரம்ப காலத்தில் சிறிது பரவியதும், இனி சில வருடங்களில் மனித குலத்தின் மனத்தையே மாற்றிவிட முடியும் என்று நினைக்கின்றன; மக்களை மதம் மாற்றுவதற்காகப் பலவந்தத்திலும் கொலை செய்வதிலும் இறங்குகின்றன. பிறகு வருகிறது தோல்வி, அதன்பிறகு உண்மையைப் புரிந்துகொள்ளத் தொடங்குகின்றன. தாங்கள் செய்ய ஆரம்பித்ததில் இந்த

மதங்கள் வெற்றி பெறவில்லை என்பதைக் காண்கிறோம். அதுவும் ஒரு பெரிய பேறுதான். அந்த வெறிக் கூட்டத்தில் ஒன்று, உலகம் முழுவதையும் வென்றிருந்தால் இன்று மனிதனின் நிலைமை என்னவாக இருக்கும் என்பதை யோசித்துப் பாருங்கள். அவை வெற்றி பெறாததற்குக் கடவுளுக்கு நன்றி செலுத்துவோம்!

ஆனாலும் ஒவ்வொரு நெறியும் ஒரு பெரிய உண்மையின் பிரதிநிதியாக இருக்கிறது. ஒவ்வொரு மதத்திலும் ஒரு சிறந்த லட்சியம் இருக்கிறது—அதுதான் அந்த மதத்தின் ஆதாரம். ஒரு பழைய கதை என் நினைவுக்கு வருகிறது. மனிதர்களைக் கொல்கின்ற, கொடிய அட்டகாசங்களைச் செய்கின்ற சில அரக்கிகள் இருந்தனர். அவர்களை யாரும் கொல்ல முடிய வில்லை. அவர்களின் உயிர் சில பறவைகளில் இருந்தன, அந்தப் பறவைகளுக்கு ஆபத்தில்லாதவரை அந்த அரக்கியரை ஒன்றும் செய்ய முடியாது என்பதைக் கண்டுபிடித்தனர். அதைப் போல் நம் ஒவ்வொருவருக்கும் ஓர் உயிர்ப் பறவை இருப்பது போலுள்ளது. அதில்தான் நம் உயிர் உள்ளது. நம் ஒவ்வொரு வரின் வாழ்க்கையிலும் ஒரு லட்சியம் இருக்கிறது, செய்ய வேண்டிய ஒரு பணி இருக்கிறது. ஒவ்வொரு மனிதனும் அத்தகைய லட்சியத்தின், பணியின் உருவமே. எதை இழந் தாலும், அந்த லட்சியத்தை இழக்காமல் இருந்தால், அந்தப் பணி தடைபடாமல் இருந்தால் நம்மை எதுவும் அழிக்க முடி யாது. செல்வம் வரலாம், போகலாம்; மலையளவு துன்பம் வரலாம்; ஆனால் அந்த லட்சியத்தை அழியாமல் பாதுகாத்தால் நம்மை எதுவுமே அழிக்க முடியாது. நமக்கு வயது ஏறலாம், நூறு வயது ஆகலாம், அந்தப் பணி மட்டும் நம் இதயத்தில் புத்துணர்வுடன் புதியதாக இருந்தால் நம்மை எது அழிக்க முடியும்? அந்த லட்சியத்தை இழந்துவிட்டால், அந்தப் பணி தடைபட்டால் நம்மை எதுவுமே காப்பாற்ற முடியாது. உலகிலுள்ள அனைத்துச் செல்வங்களும், அனைத்துச் சக்தி களும்கூட நம்மைக் காப்பாற்ற முடியாது.

நாடு என்பது தனி நபர்களின் தொகுதியே தவிர வேறு என்ன? ஆகவே மனித குலத்தின் இயைபில், ஒவ்வொரு நாட் டிற்கும் ஒரு தனிப் பணி இருக்கிறது. அந்த நாடு தனது லட்சியத்தில் உறுதியாக இருக்கும்வரை அந்த நாட்டை யாரும் அழிக்க முடியாது. ஆனால் அது தன் பணியை உதறிவிட்டு வேறு எதையோ நாடிச் செல்லுமானால், அதன் வாழ்நாள்

குறுகி விடுகிறது, சீக்கிரத்திலேயே அது அழிந்துவிடுகிறது. மதங்களின் விஷயமும் இப்படியேதான். பழைய மதங்களெல்லாம் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கின்றன என்பதே, அவை தங்கள் பணியை விடாமல் பற்றிக்கொண்டிருக்கின்றன என்பதைக் காட்டுகிறது. அவற்றின் எல்லா தவறுகளையும் மீறி, கஷ்டங்களை மீறி, சண்டைகளை மீறி, சடங்குகள் சம்பிரதாயங்கள் போன்ற புற ஓட்டை மீறி அவற்றின் இதயம் ஆரோக்கியமாக உள்ளது—துடித்துக் கொண்டிருக்கிறது, வாழ்ந்து கொண்டிருக்கிறது. எந்த மேலான பணிக்காக அவை தோன்றினவோ அந்தப் பணியை அவை கைவிடவில்லை. அந்த லட்சியத்தை ஆராய்வது மிகவும் நல்லது.

உதாரணத்திற்கு இஸ்லாமை எடுத்துக் கொள்வோம். இஸ்லாமை வெறுப்பதுபோல் கிறிஸ்தவர்கள் வேறு எந்த மதத்தையும் அவ்வளவு வெறுப்பதில்லை. மிகமிகத் தாழ்ந்த நிலை மதமே இஸ்லாம் என்பது கிறிஸ்தவர்களின் அபிப்பிராயம். ஒருவன் இஸ்லாமைத் தழுவியவுடன், இஸ்லாமியர்கள் அனைவரும் எந்த வேற்றுமையும் பாராட்டாமல் மனப்பூர்வமாக அவனைத் தங்கள் சகோதரனாக ஏற்றுக் கொள்கிறார்கள். வேறு எந்த மதத்திலும் இதைக் காண முடியாது. ஒரு செவ்விந்தியன் முஸ்லீமாக மாறினால், துருக்கி சுல்தான்கூட அவனோடு அமர்ந்து உணவுகொள்ளத் தயங்க மாட்டார். அவன் அறிவுள்ளவனாக இருந்தால் எந்தப் பதவியை அவன் அடையவும் தடையில்லை. ஆனால் இந்த நாட்டில், வெள்ளையர்களும் நீக்ரோக்களும் சேர்ந்து பிரார்த்திக்க அனுமதிக்கின்ற ஒரு சர்ச்சைக்கூட நான் பார்த்ததில்லை. இஸ்லாம் மதத்திலோ எல்லோரும் சமம். இதை நினைத்துப் பாருங்கள். இஸ்லாமின் சிறப்பு இது. குரானில் பல இடங்களில் வெறும் லெளகீகக் கருத்துக்களைக் காண்கிறோம், அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். தங்கள் மதத்தினரிடையேயுள்ள செயல்முறை சகோதரத்துவத்தை உலகிற்குப் போதிப்பதே இஸ்லாமின் பணி; இஸ்லாமின் சிறப்பு அம்சமே இதுதான். சொர்க்கம், நரகம் போன்ற மற்ற கருத்துக்கள் எதுவும் இஸ்லாம் அல்ல; அவை பின்னால் சேர்க்கப்பட்டவை.

இந்துக்களைப் பொறுத்தவரையில் ஒரே தேசியக் கருத்து ஆன்மீகம் என்பதே. கடவுளைப் பற்றிய கருத்தை விளக்குவதில் இவ்வளவு சக்தியைச் செலவழித்த மதம் உலகில் வேறு எதுவும் இல்லை; சாஸ்திரங்களும் வேறு எதுவும் இல்லை. உலகியல்

தொடர்பு எதுவும் மாசுபடுத்த முடியாத அளவுக்கு அவர்கள் ஆன்மாவை விளக்க முயன்றிருக்கிறார்கள். ஆன்மா தெய்வீக மானதாகத்தான் இருக்க வேண்டும்; ஆன்மாவை ஆன்மா வாகவே தவிர மனிதனாகப் புரிந்துகொள்ளக் கூடாது. அந்த ஒருமையை உணர்வது, எங்கும் நிறைந்த இறைவனை உணர்வது, இதுபற்றித்தான் இந்து மதத்தில் எங்கும் சொல்லப்பட்டிருக் கிறது. கடவுள் சொர்க்கத்தில் இருக்கிறார் என்றெல்லாம் சொல்வது முட்டாள்தனம் என்பது இந்து மதத்தின் கருத்து. அது வெறும் மனித நிலையில் கற்பிக்கப்பட்ட இறைக் கருத்து. சொர்க்கங்கள் எல்லாம் இப்போது இங்கே இருக்கின்றன. எல்லையற்ற கால வெள்ளத்தில், ஒரு கணநேரம் மற்ற எந்தக் கண நேரத்தையும் போன்றதே. நாம் கடவுளை நம்பினால் இப்போதே அவரைப் பார்க்க முடியும். அனுபூதியில் ஏதோ உணர்ந்த பின்தான் மதம் என்பதே ஆரம்பிக்கிறது என்று நாங்கள் நினைக்கிறோம். கோட்பாடுகளை நம்புவதோ, அறிவு பூர்வமாக ஏற்றுக்கொள்வதோ, கருத்துக்களை வெளியிடுவதோ மதம் அல்ல. கடவுள் என்று ஒருவர் இருக்கிறார் என்றால், 'அவரை நீ பார்த்திருக்கிறாயா?'—இதுதான் கேள்வி. 'இல்லை' என்று சொன்னால் அவரை நம்புவதற்கு உனக்கு என்ன உரிமை இருக்கிறது? கடவுள் இருக்கிறாரா என்ற சந்தேகத்தில் இருப் பாயானால், அவரை அறிய ஏன் பாடுபடக் கூடாது? உலகைத் துறந்து, இந்த ஒரே லட்சியத்திற்காக வாழ்க்கையை ஏன் அர்ப்பணிக்கக் கூடாது? துறவும் ஆன்மீகமுமே இந்தியாவின் இரண்டு சிறந்த கருத்துக்கள். இவற்றில் இந்தியா உறுதி யாக இருப்பதால்தான் அதன் தவறுகள் பெரிதாகத் தெரிவ தில்லை.

கிறிஸ்தவ மதத்தின் மையக் கருத்தும் இதுவேதான். 'கவனமாக இருந்து பிரார்த்தனை செய்யுங்கள், பரலோகம் அருகிலேயே இருக்கிறது'; அதாவது 'உங்கள் மனத்தைத் தூய்மைப்படுத்திக் கொண்டு தயாராக இருங்கள்.' இந்த ஊக்கம் தளர்வதே இல்லை. மிகவும் கஷ்டமான காலங்களிலும்கூட, மிகவும் மூடநம்பிக்கைகள் நிறைந்த கிறிஸ்தவ நாடுகளிலும்கூட, மற்றவர்களுக்கு உதவி செய்வது, மருத்துவமனைகள் கட்டு வது—இவற்றின்மூலம் கடவுளின் வருகைக்குத் தங்களைத் தயார்படுத்திக்கொள்ள முயன்று கொண்டிருப்பதை நினைவு கூருங்கள். அந்த லட்சியத்தில் உறுதியாக இருக்கும்வரை அவர் களின் மதம் வாழும்.

ஒரு லட்சியம் என் மனத்தில் எழுகிறது. அது வெறும் கனவாகவும் இருக்கலாம். இந்த உலகில் என்றாவது அது செயல்முறையாகுமா என்பது எனக்குத் தெரியாது. ஆனால் கடின உண்மைகளிலேயே வாழ்ந்து சாவதைவிடக் கனவு காண்பது சிலவேளைகளில் நல்லதுதான். கனவில் ஆனாலும் மேலான உண்மைகள் நல்லவையே; அவை தீய கருத்துக்களை விட நல்லவை. எனவே ஒரு கனவுதான் காண்போமே! மனம் பல படித்தரங்களில் உள்ளது என்பது உங்களுக்குத் தெரியும். சிலர் பிரத்தியட்சப் பகுத்தறிவுவாதிகளாக இருக்கலாம். உருவ வழிபாடு, சடங்குகள் பற்றி அவர்கள் கவலைப்படுவதில்லை. அறிவுபூர்வமான, உறுதியான கருத்துக்களே அவர்களைத் திருப்திப்படுத்து. ப்யூரிடன் கிறிஸ்தவர்கள் (Puritans), முஸ்லீம்கள் இவர்கள் இருக்கிறார்கள். தங்கள் வழிபாட்டுக் கூடத்தில் ஒரு விக்கிரகத்தையோ படத்தையோகூட இவர்கள் அனுமதிப்பதில்லை. நல்லது. கலையார்வம் கொண்ட சிலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு உன்னதமான கலை வேண்டும்—அழகிய வரிகள், கோடுகள், வண்ணங்கள், மலர்கள், உருவங்கள், நிறங்கள் எல்லாம் வேண்டும். கடவுளைக் காண்பதற்கு மெழுகுவர்த்தி, விளக்குகள், மற்றும் மதச் சடங்குகளோடு சம்பந்தப்பட்ட ஆடம்பரப் பொருட்கள், சின்னங்கள் இவை யெல்லாம் வேண்டும். உங்கள் மனம் அறிவின்மூலம் கடவுளை நாடுவதுபோல் அவர்கள் இவற்றின்மூலம் நாடுகிறார்கள். பிறகு பக்தன் இருக்கிறான்; அவனது ஆன்மா கடவுளுக்காக ஏங்கி அழுகிறது; அவரைப் போற்றி வழிபடுவதைத் தவிர அவனுக்கு வேறு சிந்தனையே இல்லை. இனி, இவர்களிடமிருந்தெல்லாம் தனித்து நிற்கும் தத்துவவாதி இருக்கிறான். 'என்ன முட்டாள் தனம்! கடவுளைப் பற்றி எப்படிப்பட்ட கருத்துகள்!' என்று நினைக்கிறான் அவன்.

இவர்கள் ஒருவரை ஒருவர் கேலி செய்து கொள்ளலாம். ஆனால் ஒவ்வொருவருக்கும் இந்த உலகத்தில் இடம் உண்டு. இந்தப் பல்வேறு மனங்களும், பலதரப்பட்ட வகைகளும் எல் லாம் தேவைதான். லட்சிய மதம் என்ற ஒன்று எப்போதாவது இருக்குமானால், அது இந்த எல்லா மனங்களுக்கும் வேண்டி யதைக் கொடுக்கும் அளவுக்கு விசாலமாக பெரியதாக இருக்க வேண்டும். அது தத்துவ வாதிக்குத் தத்துவத்தின் ஆற்றலைத் தர வேண்டும்; வழிபடுபவனுக்குப் பக்தனின் இதயத்தைத் தர வேண்டும். உருவ வழிபாடு செய்பவர்களுக்கு, சின்னங்களின்

மூலம் கிடைக்கின்ற சிறந்த விளக்கத்தைத் தர வேண்டும். கவிஞர்களுக்கு அவர்களால் ஏற்றுக்கொள்ள முடிந்த அளவுக்கு உணர்ச்சிகளைத் தர வேண்டும். இப்படிப்பட்ட விசாலமான மதத்தை உருவாக்குவதற்கு நாம் முதலில் மதங்கள் தோன்றிய காலத்திற்குப் போக வேண்டும், அவற்றையெல்லாம் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

ஆகவே நமது தாரக மந்திரம் ஏற்றுக் கொள்தல்; விலக்குதல் அல்ல, சகிப்புத்தன்மை அல்ல. ஏனென்றால் சகிப்புத் தன்மை என்று நாம் எதைச் செல்கிறோமோ, அது பொதுவாக தெய்வ நிந்தையாகத்தான் உள்ளது. அதை நான் நம்பவில்லை. நான் ஏற்றுக்கொள்தலையே நம்புகிறேன். நாம் ஏன் சகித்துக்கொள்ள வேண்டும்? சகிப்புத் தன்மை என்றால், மற்றவர்கள் செய்வது தவறு என்று நான் நினைத்தும், அதைப் பொறுத்துக்கொண்டு அவர்களை வாழ விடுவது. நீங்களும் நானும் மற்றவர்களை வாழ அனுமதிக்கிறோம் என்று நினைப்பதே தெய்வ நிந்தை அல்லவா, பழங்கால மதங்களையெல்லாம் நான் ஏற்றுக் கொள்கிறேன்; அவை ஒவ்வொன்றுடனும் இணங்கி அப்படியே வழிபடுகிறேன்; அவை ஒவ்வொன்றும் எந்த முறையில் கடவுளை வழிபட்டாலும், அந்த முறையில் நானும் அவர்களுடன் வழிபடுகிறேன். முஸ்லீம்களின் மசூதிக்குப் போவேன்; கிறிஸ்தவர்களின் சர்சுக்குச் சென்று சிலுவையின் முன் முழந்தாளிடுவேன்; புத்த விஹாரங்களில் சென்று புத்தரிலும் தர்மத்திலும் சரணடைவேன். எல்லா இதயங்களையும் பிரகாசப்படுத்துகின்ற பேரொளியைக் காண்பதற்காகக் காடு சென்று தியானத்தில் ஈடுபட்டிருக்கின்ற இந்துவுடன் தியானம் செய்வேன்.

இவற்றைச் செய்வது மட்டுமல்ல, எதிர்காலத்தில் தோன்றப் போகின்ற மதச் சிந்தனைகளுக்காக எனது இதயத்தைத் திறந்தும் வைத்திருப்பேன். கடவுளின் நூல் முடிந்துவிட்டதா, அல்லது தெய்வீகப் பேருணர்வுகள் தொடர்கின்றனவா? அந்த நூல்—உலகின் ஆன்மீகப் பேருணர்வுகள் நிறைந்த அந்த நூல் அற்புதமானது. பைபிள், வேதங்கள், குரான் என்று புனித நூல்கள் அனைத்தும் அந்த நூலில் சில பக்கங்கள் மட்டுமே; எண்ணற்ற பக்கங்கள் இன்னும் திறக்கப்பட வேண்டியுள்ளன. அவற்றின் வெளிப்பாட்டிற்காக அந்தப் புத்தகத்தைத் திறந்தே வைத்திருப்பேன். நாம் நிகழ்காலத்தில் இருக்கிறோம், ஆனால் எல்லையற்ற எதிர்காலத்திற்காக நம்மைத் தயாராக வைத்திருப்போம். பழங்காலத்தில் இருந்தவற்றை ஏற்றுக் கொள்கிறோம், நிகழ்காலத்தின்

ஒளியை அனுபவிக்கிறோம், எதிர்காலத்திற்காக இதயத்தின் எல்லா ஜன்னல்களையும் திறந்து வைத்திருக்கிறோம். பழங்கால தீர்க்கதரிசிகள் அனைவரையும் வணங்குகிறேன்; தற்கால மகான்கள் எல்லோரையும் வணங்குகிறேன்; எதிர்காலத்தில் வரப்போகின்ற அனைவரையும் வணங்குகிறேன்! ❑

# 6. மதப் பயிற்சி

கலிபோர்னியா, 18 ஏப்ரல் 1900

நாம் பல நூல்களைப் படிக்கிறோம், பல சாஸ்திரங்களைப் படிக்கிறோம். சிறு வயதிலிருந்தே பல கருத்துக்களைப் பெறு கிறோம், அவற்றை அவ்வப்போது மாற்றவும் செய்கிறோம். மதம் என்றால் என்ன என்பதைக் கொள்கையளவில் புரிந்து கொள்கிறோம். செயல்முறை மதம் என்றால் என்ன என்பதும் நமக்குத் தெரியும் என்று நினைக்கிறோம். இப்போது, செயல் முறை மதத்தைப்பற்றிய என் கருத்தை உங்களுக்குச் சொல்லப் போகிறேன்.

எங்கு பார்த்தாலும் செயல்முறை மதத்தைப்பற்றி கேள்விப் படுகிறோம். இவற்றையெல்லாம் ஆராய்ந்து பார்த்தால் வருவது ஒரே ஒரு கருத்து—அதுதான் மனிதநேயம். மதம் என்பது அவ்வளவுதானா? செயல்முறை கிறிஸ்தவம்பற்றி இங்கே தினமும் கேட்கிறோம்—அதாவது ஒருவன் சக மனிதர்களுக்கு ஏதோ நன்மை செய்துவிட்டான். எல்லாம் அவ்வளவுதானா?

வாழ்க்கையின் லட்சியம் என்ன? இந்த உலகம்தான் வாழ்க்கையின் லட்சியமா? வேறு ஒன்றும் இல்லையா? நாம் இப்போது இருப்பதுபோல்தான் இருக்க வேண்டுமா? இதற்கு மேலாக இருக்க வேண்டாமா? எந்தத் தடையும் இல்லாமல் சுலபமாக ஓடுகின்ற ஒரு எந்திரமாக இருக்க வேண்டியவன் தானா மனிதன்? இன்று அவன் அனுபவித்துக் கொண்டிருக் கிறானே, அந்தத் துன்பங்கள் மட்டுந்தானா அவனுக்கு? இதற்கு மேல் அவனுக்கு வேறு எதுவும் கிடையாதா!

பல மதங்களின் மிகவுயர்ந்த கனவு இந்த உலகம்தான். ... நோயோ வறுமையோ துன்பங்களோ இல்லாத ஒரு காலத்தைப் பற்றி மக்களுள் பெரும்பான்மையினர் கனவு கண்டு கொண் டிருக்கின்றனர். அப்போது எங்கும் நன்மை மட்டும்தான் இருக்குமாம்! அதனால் செயல்முறை மதத்திற்கு என்ன பொருள் என்றால், 'தெருக்களைச் சுத்தமாக வையுங்கள், அழகாக வையுங்கள்', அவ்வளவுதான்! இத்தகைய செயல்முறை

மதத்தை மக்கள் மகிழ்ந்து ஏற்றுக்கொள்வதையும் நாம் காண் கிறோம்.

சுகபோகம்தான் வாழ்க்கையின் குறிக்கோளா? அப்படி யானால் மனிதனாக இருப்பதே பெரிய தவறு. நாயையோ பூனையையோவிட அதிக உற்சாகத்துடன் சுவைத்து உண்ண மனிதனால் முடியுமா! மிருகக் காட்சிசாலைக்குச் சென்று அங்குக் காட்டுமிருகங்கள் எலும்பிலிருந்து தசையைப் பிய்த்து எடுப்பதைப் பாருங்கள்! போங்கள், ஒரு பறவையாக ஆகுங்கள். .. மனிதனாக இருப்பது எவ்வளவு தவறு! காலங்காலமாக நான் போராடியதெல்லாம், இப்படிப் புலனின்பங்களில் உழல்கின்ற ஒரு மனிதன் ஆவதற்குத்தான் என்றால் என் வாழ்க்கை வீணே.

ஆகவே செயல்முறை மதம்பற்றிய சாதாரணக் கருத்து எங்கே கொண்டுபோய் விடுகிறது என்பதைக் கவனியுங்கள். பிறருக்கு நல்லது செய்வது பெரிய காரியம்தான். ஆனால் அதுதான் எல்லாம் என்று சொல்லும்போது, அது வெறும் உலோகாயதமாக மாறுவதான ஆபத்து இருக்கிறது. அது மதம் அல்ல; நாத்திகத்தைவிடச் சிறந்ததும் அல்ல; மாறாக, அதை விடச் சற்றுக் குறைவானதே.

ஓ கிறிஸ்தவர்களே! சகோதர மக்களுக்காக உழைப்பது, மருத்துவமனைகள் கட்டுவது—இவற்றைத் தவிர வேறு எதையும் நீங்கள் உங்கள் பைபிளில் காணவில்லையா?. ... கடைக்காரன் தனது கண்ணோட்டத்தில் ஏசுவைப் பார்க்கிறான், 'ஏசு எவ்வளவு நன்றாகக் கடை வைத்திருப்பார்' என்கிறான். ஆனால் ஏசு மதுக் கடையையோ, பலசரக்குக் கடையையோ வைத்திருக்க வும் மாட்டார், பத்திரிகை ஆசிரியராகவும் இருந்திருக்க மாட் டார். இத்தகைய செயல்முறை மதம் நல்லதுதான், தீயதல்ல. ஆனால் அது பாலர் வகுப்பு மதம். அது நம்மை எங்கேயும் கொண்டு செல்லாது. ...

உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருக்குமானால், நீங்கள் கிறிஸ்தவராக இருப்பீர்களானால், 'உமது சித்தம் செயல்படுவ தாக' என்று நாள்தோறும் திரும்பத்திரும்பச் சொல்கிறீர்களே, அதன் பொருள் என்ன என்று சற்றே சிந்தித்துப் பாருங்கள்! 'உமது சித்தம் செயல்படுவதாக' என்று சொல்கின்ற ஒவ்வொரு நொடியும், உண்மையில், 'ஓ ஆண்டவனே! எனது சித்தத்தை நிறைவேற்றி வைப்பீராக!' என்பதையே அப்படிச் சொல் கிறீர்கள். இறைவன் தன் திட்டங்களைச் செயல்படுத்திக் கொண் டிருக்கிறார். அவர்கூடத் தவறுகள் செய்துள்ளார், அதை

நீங்களும் நானும் சரிசெய்யப் போகிறோம், அப்படித்தானே! பிரபஞ்சத்தின் சிற்பிக்குக் கேவலம் சாதாரணத் தச்சர்கள் கற்றுக் கொடுக்கப் போகிறார்கள்! அவர் இந்த உலகை ஒரு விகாரமான இடமாக விட்டுச் சென்றுவிட்டார், அதை நீங்கள் அழகு படுத்தப் போகிறீர்கள், அப்படித்தானே!

இவை எல்லாவற்றின் லட்சியம்தான் என்ன? என்றாவது புலன்கள் லட்சியமாக இருக்க முடியுமா? சுகபோகங்களை நுகர்வது லட்சியமாக இருக்க முடியுமா? என்றாவது இந்த வாழ்க்கை ஆன்மாவின் லட்சியமாக இருக்க முடியுமா? அப்படி யானால் இந்தக் கணமே சாவது நல்லது, இந்த வாழ்க்கை வேண்டாம்! இதுதான் மனிதனின் விதியானால், அதாவது அவன் ஒரு பூரண எந்திரமாகத்தான் இருக்கப் போகிறான் என்றால் நாம் மீண்டும் மரங்களாகவும் கற்களாகவும் போக வேண்டியதுதான். ஒரு பசு பொய் சொன்னதாகவோ, ஒரு மரம் திருடியதாகவோ நீங்கள் கேள்விப்பட்டது உண்டா? அவை பரிபூரணமான எந்திரங்கள், அவை தவறுகள் செய்வ தில்லை. எல்லாம் முடிந்துவிட்டதோர் உலகில் அவை வாழ் கின்றன. ... இது செயல்முறை மதம் இல்லை என்றால், மதத்தின் லட்சியம்தான் என்ன? அப்படி ஒன்று இருக்க முடியாது.

நாம் எதற்காக இங்கே இருக்கிறோம்? சுதந்திரத்திற்காகவும் அறிவிற்காகவும்தான். சுதந்திரம் பெறுவதற்காக நாம் அறிவைத் தேடுகிறோம். சுதந்திரத்திற்கான ஒரு உச்சக் குரல்—இதுதான் நம் வாழ்க்கை. ... விதையிலிருந்து முளைத்தெழுந்து, பூமியைப் பிளந்துகொண்டு செடி ஆகாயத்தை நோக்கி வளர்கிறதே, அதன் காரணம் என்ன? சூரியன் பூமிக்கு அளிக்கின்ற கொடை யின் பொருள் என்ன? உங்கள் வாழ்க்கைதான் என்ன? சுதந்திரத் திற்கான அதே போராட்டம்தான். சுற்றியுள்ள இயற்கை நம்மை அழுத்திவைக்க முயல்கிறது, அதைமீறி ஆன்மா தன்னை வெளிப்படுத்திக்கொள்ள விரும்புகிறது. இயற்கையுடனான போராட்டம் தொடர்ந்தவண்ணமே உள்ளது. சுதந்திரத்திற்கான இந்தப் போராட்டத்தில் எத்தனையோ பொருட்கள் நசுக்கப் படும், உடைக்கப்படும். அதுதான் உங்கள் உண்மைத் துன்பம். போர்க்களத்தில் புழுதியும் தூசியும் மலைமலையாக எழுப்பப் படத்தான் வேண்டும். 'நான் வெல்வேன்' என்று இயற்கை கூறுகிறது. ஆன்மாவோ, 'நான்தான் வெற்றிபெற வேண்டும்' என்று சொல்கிறது. 'பொறு! உன்னை வாளா இருக்கச் செய்யச் சிறிது சுகபோகம் தருவேன்' என்கிறது இயற்கை. ஆன்மாவும்

சிறிதுநேரம் அந்தச் சுகபோகத்தில் மூழ்கி, ஒரு கணத்திற்கு மதி மயங்குகிறது, ஆனால் மறுகணமே சுதந்திரம் வேண்டுமென்று கூவுகிறது. பன்னெடுங்காலமாக ஒவ்வோர் இதயத்திலும் எழுந்துவருகின்ற இந்த நிரந்தரக் கூக்குரலைக் கவனித்துள்ளீர் களா? நாம் வறுமையினால் ஏமாற்றப்படுகிறோம். நாம் பணக் காரர்களாகிறோம், பணத்தால் ஏமாற்றப்படுகிறோம். நாம் அறிவிலிகள் எனவே படிக்கிறோம், ஆனால் அறிவும் நம்மை ஏமாற்றிவிடுகிறது. ஒருவனும் ஒருபோதும் திருப்தியடை வதில்லை. அதுதான் துன்பத்தின் காரணம். ஆனால் அதுதான் எல்லா நன்மைகளுக்கும்கூடக் காரணமாக இருக்கிறது. அது தான் உண்மையான அடையாளம். இந்த உலகால் எப்படித் திருப்தி அடைய முடியும்?. ... நாளையே இந்த உலகம் சொர்க்கம் ஆகுமானால், 'இதை எடுத்துக்கொள்ளுங்கள், எங்களுக்கு வேறு ஏதாவது தாருங்கள்' என்று சொல்வோம்.

எல்லையற்ற மனித ஆன்மா எல்லையற்றதைத் தவிர வேறெதனாலும் ஒருபோதும் திருப்தி அடைய முடியாது. எல்லையற்ற ஆசை எல்லையற்ற அறிவினால்தான் நிறைவடை யும், அதற்குக் குறைவான எதனாலும் அல்ல. உலகங்கள் வரும், போகும். அதனால் என்ன? ஆன்மா வாழ்கிறது, விரிவடைந்து கொண்டே இருக்கிறது. உலகங்கள் ஆன்மாவிற்குள் நுழைந்தாக வேண்டும், கடலில் நீர்த் துளிகள் மறைவது போன்று அவை அங்கே மறைந்தாகவும் வேண்டும். அந்த உலகமா ஆன்மாவின் லட்சியமாக இருப்பது!

நமக்குச் செயல்முறைப் பொதுஅறிவு இருக்குமானால் நாம் திருப்தியுற மாட்டோம். நாம் திருப்தியுடன் இருக்க வேண்டும் என்றுதான் பல்லாண்டு காலமாகக் கவிஞர்கள் பாடிவருகிறார்கள். ஆனால் அப்படி யாரும் திருப்தி அடைந்த தாகத் தெரியவில்லை. 'விதி உங்களிடம் தந்ததை வைத்துக் கொண்டு திருப்தியாக இருங்கள்' என்று மகான்கள் போதிக் கின்றனர்; கவிஞர்கள் அப்படித்தான் பாடுகின்றனர்; அமைதி யாக இரு, திருப்திகொள் என்றே நமக்கு நாம் சொல்லிக் கொள்ளவும் செய்கிறோம். ஆனாலும் நாம் என்னவோ திருப்தி அடையவில்லை. என் ஆன்மாவைத் திருப்தி செய்கின்ற பொருள் இந்த உலகில் கிடையாது; மேல் உலகிலும் கீழ் உலகிலும் கிடையாது என்பது அழிவற்ற நியதி. என் ஆன்மா வின் ஆசைக்கு முன்னால் நட்சத்திரங்களும், மேல் கீழ் உலகங் களும், பிரபஞ்சம் முழுவதும் வெறுக்கத்தக்க ஒரு நோயே தவிர

வேறல்ல. இது உண்மை. இந்த உண்மையை உணர்த்தாத ஒவ்வொன்றும் தீமை. இந்த உண்மையை உணர்த்தாத, அதன் முக்கியத்துவத்தை, அதன் லட்சியத்தை உணர்த்தாத ஒவ்வோர் ஆசையும் தீமை. இயற்கை முழுவதும் தன் அணுக்கள் ஒவ் வொன்றின்மூலமும் ஒரே ஒரு காரியத்திற்காகத்தான் கூவிக் கொண்டிருக்கிறது. அதுதான் பரிபூரண சுதந்திரம்.

அப்படியானால் செயல்முறை மதம் என்பது என்ன? அந்த நிலையை, பரிபூரணச் சுதந்திர நிலையை அடைவதுதான். அதனை அடைய இந்த உலகம் உதவினால் நல்லது. இல்லை யானால், இதுவரையுள்ள ஆயிரக்கணக்கான தளைகளோடு அதுவும் ஒரு தளையாகுமானால், அது தீமையே. உடைமைகள், கல்வி, அழகு என்று எல்லாமே அந்த லட்சியத்தை அடைய உதவுகின்றவரையில் பயனுள்ளவை, செயல்முறை மதிப்பு உள்ளவை. சுதந்திர இலக்கை அடைய உதவாமல் போகும்போது அவை நிச்சயமான ஆபத்தாகவே முடியும். பிறகு செயல்முறை மதம் என்பதுதான் என்ன? இந்த உலகம் மற்றும் மறுவுலகப் பொருட்களையெல்லாம் அந்த ஒரே இலக்கை அடைய, அதாவது சுதந்திரத்தை அடையப் பயன்படுத்த வேண்டும். துளி இன்பமோ, துளியளவு சுகமோ பெற வேண்டுமானால் இதயமும் மனமும் இணைந்த எல்லையற்ற சக்தியைச் செலவு செய்தாக வேண்டும்.

இந்த உலகில் உள்ள நன்மை மற்றும் தீமையின் மொத்த அளவைப் பாருங்கள். ஏதாவது மாற்றம் உள்ளதா? பன்னெடுங் காலம் கழிந்துவிட்டது, செயல்முறை மதமும் பன்னெடுங்கால மாக இருந்துவருகிறது. ஒவ்வொரு முறையும் பிரச்சினைக்குத் தீர்வு கிடைத்துவிடும் என்று உலகம் நினைத்தது. ஆனால் அதே பிரச்சினைதான் இன்றும் உள்ளது. அதன் உருவம் வேண்டு மானால் மாறலாம். ... கணக்கற்ற கடைகளுக்குக் காச நோயையும் நரம்பு வியாதிகளையும் விற்பனை செய்கின்ற விஷம் போன்றது அது. .. அது பழைய வாயுரோகம் போன்றது, அதை ஓர் இடத் திலிருந்து விரட்டுங்கள், மற்றோர் இடத்திற்குப் போகிறது. நூறு வருடங்களுக்கு முன்பு மனிதன் நடந்து சென்றான், அல்லது குதிரையில் சென்றான். இப்பொழுது, ரயிலில் செல் கிறோம் என்று மகிழ்ச்சியாக இருக்கிறான். ஆனால் அதற்காக அதிக வேலை செய்து, அதிகம் சம்பாதிக்க வேண்டியிருக்கிறதே என்று வருந்தவும் செய்கிறான். வேலையைக் குறைக்கின்ற ஒவ் வோர் எந்திரமும் மனிதனின் வேலைப் பளுவை அதிகரிக்கிறது.

நீங்கள் எப்படி அழைத்தாலும் சரி, இந்தப் பிரபஞ்சம் அல்லது இயற்கை எல்லைக்கு உட்பட்டதாகத்தான் இருக்க வேண்டும், எல்லையற்றதாக இருக்க முடியாது. பரம்பொருள் இயற்கையாக மாற வேண்டுமானால் அது காலம், இடம், காரணகாரியம் இவற்றால் கட்டுப்பட வேண்டும். (நம்மிடம் உள்ள) சக்தி எல்லைக்கு உட்பட்டது. நீங்கள் அதை ஓர் இடத்தில் பயன்படுத்தலாம், இன்னோர் இடத்தில் இழக்கலாம். ஆனால் மொத்தச் சக்தி என்னவோ எப்போதும் ஒன்றுதான். ஓர் இடத்தில் அலை எழுந்தால், இன்னோர் இடத்தில் பள்ளம் விழுகிறது. ஒரு நாடு பணத்தில் கொழித்தால் மற்ற நாடுகள் வறுமையில் வாடுகின்றன. தீமையை நன்மை சமன் செய்கிறது. அலையின் உச்சியில் இருப்பவன், அந்தக் கணத்திற்கு, எல்லாம் நன்மையே என்று எண்ணிக் கொள்கிறான், பள்ளத்தில் இருப்பவன் உலகமே தீமை என்கிறான். ஆனால் அனைத்திலிருந்தும் விலகித் தனித்து நின்று பார்ப்பவன், எங்கும் தெய்வீக லீலையைக் காண்கிறான். சிலர் அழுகிறார்கள், சிலர் சிரிக்கிறார்கள். சிரிப்பவர்கள், பின்பு தங்கள் முறை வரும்போது அழுவார்கள், மற்றவர்கள் சிரிப்பார்கள். நாம் என்ன செய்ய முடியும்? நம்மால் ஒன்றும் செய்ய முடியாதென்பது நமக்குத் தெரியும். ...

நன்மை செய்ய வேண்டும் என்பதற்காக நம்மில் எத்தனை பேர் காரியங்கள் செய்கிறோம்? மிகவும் குறைவு! அவர்களை விரல்விட்டு எண்ணிவிடலாம். பிறர் நன்மை செய்கிறார்கள், ஆனால் அது வற்புறுத்தலின் காரணமாக. ... நாம் எங்கும் நிற்க முடியாது. அடியும் உதையும் பட்டு, அங்குமிங்கும் அலைக்கழிக்கப் பட்டவாறே முன்னேறிக் கொண்டிருக்கிறோம். நாம் என்ன செய்ய முடியும்? உலகமும் அப்படியேதான் இருக்கும், பூமியும் அப்படியேதான் இருக்கும், அது நீலத்திலிருந்து பழுப்பாக மாறும், பழுப்பிலிருந்து நீலமாகும், அவ்வளவுதான். ஒரு மொழி இன்னொரு மொழிக்கு மாற்றம் செய்யப்படுகிறது, ஒரு தீமைக்குவியலின் இடத்தில் இன்னொரு தீமைக் குவியல்— இதுதான் நடந்துகொண்டிருக்கிறது. .. ஓர் இடத்தில் 'ஆறு' என்கிறோம், இன்னோர் இடத்தில் 'அரை டஜன்' என்கிறோம், அவ்வளவுதான். உங்களைப்போல் தத்துவச் சொற்பொழிவைக் கேட்கச் செவ்விந்தியனால் முடியாது. ஆனால் அவனால் உணவை நன்றாக ஜீரணிக்க முடியும். அவனைத் துண்டு துண்டாக வெட்டுங்கள், அடுத்தகணமே சரியாகிவிடுவான்.

உங்களுக்கும் எனக்கு ஒரு சிராய்ப்பு போதும், மருத்துவ மனையில் ஆறு மாதம் நாம் இருக்க நேரும். ...

உயிரினங்கள் எவ்வளவு தூரம் கீழ்நிலையில் இருக்கின் றனவோ, அந்த அளவுக்குப் புலன்களில் இன்பம் காண்பவை யாக உள்ளன. மிகக் கீழ்நிலை விலங்கினங்களையும் அவற்றின் ஸ்பரிச உணர்ச்சியையும் எண்ணிப் பாருங்கள். அவற்றிற்கு எல்லாம் ஸ்பரிசம்தான். ... மனிதனை எடுத்துக்கொள்ளுங்கள், அவன் எவ்வளவுக்கெவ்வளவு நாகரீகத்தில் பின்தங்கியவனோ, அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய புலன்கள் அவன்மீது ஆதிக்கம் செலுத்துகின்றன. ... உயிரினம் உயர்நிலையை அடைய அடைய, அவை புலன்களில் இன்பம் காண்பது குறைகிறது. நாய் உணவை அனுபவித்துச் சாப்பிடுகிறது, ஆனால் தத்துவச் சிந்தனையால் வரும் இன்பத்தை அதனால் அறிந்துகொள்ள முடியாது. அறிவின் காரணமாக உங்களுக்குக் கிடைக்கின்ற அற்புத இன்பம் அதற்குக் கிடையாது. புலனின்பம் பெரிதுதான். ஆனால் அதைவிடப் பெரியது அறிவின்பம். பாரிஸ் நகரில் ஐம்பது வகை உணவுடன் விருந்துண்ணும்போது, அது இன்ப மாகத்தான் இருக்கிறது. ஆனால் வானமண்டல ஆய்வுக் கூடத் தில் நின்றுகொண்டு நட்சத்திரங்களைப் பார்க்கும்போது. ... உலகங்கள் உருவாவதையும், வந்துபோவதையும் காணும்போது, ஆ! அதை நினைத்துப் பாருங்கள்! இந்த இன்பம் முன்னையதை விடப் பெரிதாகத்தான் இருக்க வேண்டும், ஏனெனில் இங்கே நீங்கள் சாப்பாட்டையே மறந்துவிடுகிறீர்கள். உலகப் பொருட் களிலிருந்து கிடைக்கும் இன்பத்தைவிட அந்த இன்பம் பெரிதாகத்தான் இருக்கவேண்டும். ஏனெனில் இதில் நீங்கள் மனைவி, மக்கள், கணவன் எல்லாவற்றையும் மறக்கிறீர்கள், புலனின்பங்களையே மறந்துவிடுகிறீர்கள். அதுதான் அறிவின்பம். அது புலனின்பத்தைவிடப் பெரிய இன்பமாகத் தான் இருக்க வேண்டும். இது எல்லோருக்கும் தெரிந்ததுதான்— பெரிய இன்பத்திற்காகத்தானே சிறிய இன்பத்தை விட்டுக் கொடுப்பார்கள்! இதுதான் செயல்முறை மதம்—சுதந்திரத்தை அடைதல், துறவை அடைதல். துறந்து செல்லுங்கள்!

உயர்ந்தவை வேண்டுமானால் கீழானவற்றைத் துறந்து விடுங்கள், சமுதாயத்தின் அடிப்படை என்ன? ஒழுக்கம், நீதி நெறி, சட்டங்கள் இவைதான். துறந்து செல்லுங்கள். அடுத்த வனுடைய சொத்திற்கான ஆசை, அடுத்தவனைக் கெடுப்பதில் நாட்டம் போன்ற அற்பத்தனங்களை விடுங்கள். எளியோரை

வாட்டுவதால் கிடைக்கும் இன்பம், பொய் சொல்லிப் பிறரை ஏமாற்றுவதால் கிடைக்கும் இன்பம்—இவை அனைத்தையும் துறந்துவிடுங்கள். ஒழுக்கம் அல்லவா சமுதாயத்தின் அடிப் படை? நெறி தவறுவதைத் துறப்பதுதானே திருமணம்? காட்டு மிராண்டி திருமணம் செய்து கொள்வதில்லை, மனிதன் திருமணம் செய்துகொள்கிறான், ஏனெனில் அவன் துறக்கிறான். இப்படிச் சொல்லிக்கொண்டே போகலாம். துறந்துவிடுங்கள்! துறந்துவிடுங்கள்! தியாகம் செய்யுங்கள்! விட்டுவிடுங்கள்— பூஜ்யத்திற்காக அல்ல, ஒன்றும் இல்லாததற்காக அல்ல, உயர்ந் ததை அடைவதற்காக. ஆனால் இதை யாரால் செய்ய முடியும்? உயர்ந்தது கிடைக்காதவரை உங்களால் முடியாது. நீங்கள் பேச லாம், நீங்கள் போராடலாம், பல காரியங்கள் செய்ய நீங்கள் முயலலாம். ஆனால் உயர்ந்தது கிடைத்ததும் துறவு தானாக வந்து சேரும். கீழானது அப்போது தானாகவே விலகிவிடும்.

இதுதான் செயல்முறை மதம். வேறு என்ன? தெருக்களைச் சுத்தம் செய்வதும் மருத்துவமனைகள் கட்டுவதுமா? அவற்றின் மதிப்பு துறப்பதில்தான் இருக்கிறது. துறப்பதற்கு எல்லையே இல்லை. இவ்வளவுதான், இதற்குமேல் இல்லை என்று துறவுக்கும் எல்லை வகுக்கிறார்கள்—இதுதான் சங்கடம், ஆனால் துறவுக்கு எல்லையே இல்லை.

கடவுள் உள்ள இடத்தில் வேறு எதுவும் இல்லை. உலகம் உள்ள இடத்தில் கடவுள் இல்லை. ஒளியும் இருளும்போல் இவை இரண்டும் ஒருபோதும் இணைவதில்லை. கிறிஸ்தவ மதத்திலிருந்தும் போதகரின் வாழ்க்கையிலிருந்தும் நான் அறிந்துகொண்டது இதுதான். இதுதானே பௌத்த மதம்? இதுதானே இந்து மதம்? இதுதானே முகமதிய மதம்? எல்லா முனிவர்களும் ஆச்சாரியர்களும் போதிப்பது இதுதானே? துறக்க வேண்டிய உலகம் எது? அது இங்கேயே இருக்கிறது. அதை நம்முடனேயே தூக்கிக்கொண்டு அலைகிறோம். அது தான் நமது உடம்பு. இந்த உடம்பிற்காகத்தான், அதை நேர்த்தி யாக வைத்துக்கொண்டு அதற்குக் கொஞ்சம் சுகம் கொடுப்பதற் காகத்தான் நான் அடுத்தவன்மீது கை வைக்கிறேன். இந்த உடம்பிற்காகத் தான் நான் மற்றவர்களைத் துன்புறுத்துகிறேன்; தவறுகள் செய்கிறேன்.

மாமனிதர்கள் இறக்கிறார்கள், சாதாரண மனிதர்கள் இறக்கிறார்கள், தேவர்கள் இறக்கிறார்கள். மரணம்! மரணம்! எங்கு பார்த்தாலும் மரணம்! முடிவற்ற இறந்தகாலத்தின்

மயானமே இந்த உலகம். இருந்தும் நாம் [இந்த உடம்பைப்] பற்றிப்பிடித்திருக்கிறோம்: 'நான் ஒருபோதும் சாக மாட்டேன்' என்று நினைக்கிறோம். [உடம்பு இறந்துதான் ஆகவேண்டு மென்று] தெரிந்தும் அதனுடன் ஒட்டிக்கொள்கிறோம். அதிலும் அர்த்தம் இருக்கவே செய்கிறது, [ஏனெனில் ஒருவகை யில் நாம் இறப்பதில்லை.] அழிவற்றது ஆன்மா, ஆனால் அதை விட்டுவிட்டு உடம்புடன் ஒட்டிக்கொள்வதுதான் நாம் செய்யும் தவறு.

நீங்கள் உலோகாயதவாதிகள், ஏனெனில் உடம்புதான் நீங்கள் என்று நினைக்கிறீர்கள். என்னை ஒருவன் குத்தினால், 'நான் குத்துப்பட்டேன்' என்கிறேன், அடித்தால் 'நான் அடிபட்டேன்' என்று சொல்கிறேன். நான் உடம்பு இல்லையென்றால் அப்படி ஏன் சொல்ல வேண்டும்? நான் ஆன்மா என்று சொல்லிப் பயனில்லை, ஏனெனில் இப்போது நான் உடம்பாகத் தான் இருக்கிறேன், என்னை நான் ஜடப்பொருளாக மாற்றிக் கொண்டுவிட்டேன். அதனால்தான் நாம் உடம்பைத் துறக்க வேண்டும், நமது உண்மை நிலைக்குத் திரும்பிப் போக வேண்டும். நான் ஆன்மா. இந்த ஆன்மாவை எந்த ஆயுதமும் தாக்க முடியாது, எந்த வாளும் வெட்ட முடியாது, எந்தத் தீயும் எரிக்க முடியாது, எந்தக் காற்றும் உலர்த்த முடியாது. அது பிறப்பற்றது, படைக்கப்படாதது, ஆரம்பமும் முடிவும் இல்லாதது, மரணமற்றது, பிறவிகள் அற்றது, எங்கும் நிறைந்தது. அதுவே நான். இந்தச் சிறு களிமண்கட்டியை நான் என்று நினைத்துக் கொள்வதுதான் எல்லா துன்பங்களுக்கும் காரணம். நான் என்னை ஜடப்பொருளுடன் ஒன்றுபடுத்திக்கொண்டு அதன் விளைவுகளை அனுபவிக்கிறேன்.

என்னை ஆன்மாவுடன் ஒன்றுபடுத்திக்கொள்வதே செயல் முறை மதம். தவறாக ஒன்றுபடுத்திக்கொள்வதை விடுங்கள். அதில் நீங்கள் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கிறீர்கள்? நீங்கள் இரண்டாயிரம் மருத்துவமனைகள் கட்டியிருக்கலாம், ஐம்பதாயிரம் சாலைகள் அமைத்திருக்கலாம், ஆனால் நீங்கள் ஆன்மா என்று உணராவிட்டால் இவற்றால் என்ன பயன்? நாயின் உணர்ச்சிகளுடன் நாயைப்போல் சாகிறீர்கள். தான் ஜடம், அழிந்துவிடப்போகிறோம் என்று நினைப்பதால்தான் நாய் அழுகிறது, ஊளையிடுகிறது.

மரணத்தைத் தவிர்க்க முடியாது. நீரிலும் காற்றிலும் அரண்மனையிலும், சிறையிலும் எங்குமே மரணம் நிலவுகிறது.

எது உங்களைப் பயமற்று இருக்கச் செய்யும்? நீங்கள் அந்த எல்லையற்ற, இறப்பற்ற, பிறப்பற்ற ஆன்மா என்ற அனுபூதி. அதைத் தீ எரிக்க முடியாது, எந்த ஆயுதமும் அழிக்க முடியாது, எந்த விஷமும் கொல்ல முடியாது. இது வெறும் கொள்கையல்ல, நினைவில் வையுங்கள். வெறும் ஏட்டுச் சுரைக்காய் அல்ல. ... கிளிப்பிள்ளைபோல் சொன்னதைத் திருப்பிச் சொல்வதும் அல்ல. 'ராம் ராம்' என்று எப்போதும் சொல்லும்படி கிளிக்குக் கற்றுக் கொடுக்கலாம். ஆனால் பூனை வந்து அதன் கழுத்தைக் கௌவட்டும், அது எல்லாவற்றையும் மறந்துவிடும்' என்று என் குருதேவர் சொல்வார். நீங்கள் தொடர்ந்து பிரார்த்தனை செய்யலாம், உலகிலுள்ள எல்லா சாஸ்திரங்களையும் படிக்கலாம், எல்லா தெய்வங்களையும் வழிபடலாம்; ஆனால் ஆன்மாவை உணராதவரை உங்களுக்குச் சுதந்திரம் கிடையாது. வெறும் பேச்சோ கொள்கையோ தர்க்கமோ அல்ல, அனுபூதி பெற வேண்டும். அதைத்தான் நான் செயல்முறை மதம் என்று சொல்கிறேன்.

ஆன்மாபற்றிய இந்த உண்மையை முதலில் கேட்க வேண்டும். கேட்டபின் அதைப்பற்றிச் சிந்தியுங்கள். பிறகு அதைப்பற்றித் தியானம் செய்யுங்கள். வீண் வாதங்கள் இனி வேண்டாம். நீங்கள் எல்லையற்ற ஆன்மா என்பதை ஒருமுறை நிச்சயம் செய்துகொள்ளுங்கள். அது உண்மையானால் நீங்கள் உடம்பு என்பது பொய். நீங்கள் ஆன்மா, அதை உணர வேண்டும். ஆன்மா தன்னை ஆன்மாவாகப் பார்க்க வேண்டும். இப்போது ஆன்மா தன்னை உடம்பாகப் பார்க்கிறது. அது நிற்க வேண்டும். இந்த அனுபூதி வரத் தொடங்கியவுடனேயே நீங்கள் முக்தர்களாகி விடுவீர்கள்.

இந்தக் கண்ணாடியைப் பார்க்கிறீர்கள், இது வெறும் தோற்றம் என்பது உங்களுக்குத் தெரியும். அது வெறும் ஒளியும் அதிர்வும் என்று கூறுகிறார்கள் சில விஞ்ஞானிகள். ... ஆன்மாவைக் காண்பது இதைவிட எல்லையற்ற மடங்கு உண்மை. அதுதான் ஒரே உண்மையான நிலை, ஒரே உண்மையான உணர்ச்சி, உண்மையான காட்சி. நீங்கள் காண்கின்ற இந்த எல்லா பொருட்களும் வெறும் கனவுகள். அது இப்போது உங்களுக்குத் தெரிகிறது. பழைய லட்சியவாதிகள் மட்டும் அல்ல, தற்கால இயற்பியல் அறிஞர்களும், 'நாம் காண்பது ஒளியைத்தான், அதிர்வுகளின் வேறுபாட்டால்தான் வேறு மாற்றங்கள் ஏற்படுகின்றன' என்று சொல்கிறார்கள். ...

நீங்கள் கடவுளைக் கண்டாக வேண்டும், ஆன்மாவை உணர்ந்தாக வேண்டும். அதுதான் செயல்முறை மதம். 'எளிய உள்ளம் படைத்தவர்கள் பாக்கியவான்கள்; ஏனெனில் பரலோக சாம்ராஜ்யம் அவர்களுடையது' என்று ஏசு போதித்தார். செயல்முறை மதம் என்று இதை நீங்கள் சொல்வதில்லை. அது என்ன வெறும் வேடிக்கைப் பேச்சா? எதைத்தான் நீங்கள் செயல்முறை மதம் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? கடவுள்தான் நம்மைக் காப்பாற்ற வேண்டும்! 'தூய இதயம் படைத்தவர்கள் பாக்கியவான்கள், அவர்கள் இறைவனைத் தரிசிப்பார்கள்.' இதற்கு என்ன பொருள்? தெருக்களைச் சுத்தம் செய்வது, மருத்துவமனைகள் கட்டுவது என்பதெல்லாமா? நீங்கள் தூய மனத்துடன் செய்தால் அவை நல்ல காரியங்கள், அவ்வளவுதான். ஒருவனுக்கு இருபது டாலர் கொடுத்துவிட்டு, உங்கள் பெயர் வந்திருக்கிறதா என்று சான்பிரான்சிஸ்கோவின் எல்லா பத்திரிகைகளையும் வாங்கிப் பார்க்காதீர்கள். உங்களுக்கு யாரும் உதவ மாட்டார்கள் என்று உங்கள் நூல்களிலேயே நீங்கள் படிக்கவில்லையா? இறைவனுக்கே செய்யும் வழிபாடாக எண்ணி ஏழைகளுக்கும் துயருறுபவர்களுக்கும் பலவீனர்களுக்கும் சேவை செய்யுங்கள். அதைச் செய்துவிட்டால், பலன் இரண்டாம் பட்சம்தான். லாபம் கருதாமல் செய்யப்படுகின்ற இத்தகைய செயல்கள் ஆன்மாவிற்கு நன்மை செய்கின்றன. பரலோக சாம்ராஜ்யம் இத்தகையவர்களுடையது.

பரலோக சாம்ராஜ்யம் நம்முள் இருக்கிறது. அங்கே அவர் இருக்கிறார். ஆன்மாக்களுக்கெல்லாம் ஆன்மா அவர். உங்கள் ஆன்மாவிலேயே அவரைப் பாருங்கள். அதுதான் செயல்முறை மதம். அதுதான் முக்தி. இதில் எவ்வளவு தூரம் முன்னேறியிருக்கிறோம், எவ்வளவு தூரம் உடம்பைப் போற்றிப் பாதுகாக்கிறோம், ஆன்மாவான கடவுளை உண்மையில் எவ்வளவு தூரம் நம்புகிறோம், நாம் ஆன்மா என்பதை எவ்வளவு தூரம் நம்புகிறோம் என்று நாம் ஒருவரை ஒருவர் கேட்டுக்கொள்வோம். அதுதான் சுயநலமின்மை, அதுதான் முக்தி, அதுதான் உண்மையான வழிபாடு. உங்களை உணருங்கள். செய்ய வேண்டியதெல்லாம் அதுவே. உங்களை உள்ளது உள்ளபடி உணருங்கள், அதாவது நீங்கள் எல்லையற்ற ஆன்மா என்பதை உணருங்கள். இதுதான் செயல்முறை மதம். வேறு எதுவும் செயல்முறைக்கு ஒத்துவராதவை. ஏனெனில் அவை எல்லாம் மறைந்துவிடும். அது ஒன்றுதான் மறையாது. அது அழிவற்றது.

மருத்துவமனைகள் இடிந்துவிடும், ரயில் பாதை அமைப்பவர்களும் அழியத்தான் செய்வார்கள், பூமியே பாளம்பாளமாக வெடித்துவிடும், சூரியர்களும் இருந்த இடம் தெரியாமல் அழிக்கப்பட்டுவிடும். ஆன்மா என்றென்றும் இருக்கும்.

எது உயர்ந்தது? அழியக்கூடிய இந்த பொருட்களின் பின்னால் ஓடுவதா, ... மாறாத ஒன்றை வழிபடுவதா? எது செயல்முறைக்கு உகந்தது? பொருட்களை அடைவதற்காக வாழ்க்கையின் எல்லா சக்திகளையும் செலவழிப்பதும், அவற்றை அடையும்முன் மரணம் வந்துவிட, அவற்றை எல்லாம் விட்டுப் போவதா, அல்லது என்றும் மாறாததை வழிபடுவதா? எல்லாவற்றையும் வெற்றிகொண்ட ஓர் அரசன் இருந்தான். மரணம் நெருங்கியதும் அவன், 'என் பேழைகள் அனைத்தையும் என் முன் கொண்டுவாருங்கள்' என்று சொன்னான். 'அந்தப் பெரிய வைரத்தை எடுங்கள்' என்றான். அதைத் தன் மார்பில் வைத்துக் கொண்டு அழுதான். நாயைப்போல் அழுதுகொண்டே இறந்தான்.

'நான் வாழ்கிறேன்' என்று மனிதன் சொல்கிறான். மரண பயம்தான் அவனை ஓர் அடிமைபோல் உயிருடன் ஒட்டிக் கொண்டிருக்கச் செய்கிறது என்பது அவனுக்குத் தெரியாது. 'நான் இன்பம் அனுபவிக்கிறேன்' என்று அவன் சொல்கிறான். இயற்கை அவனை அடிமைகொண்டுவிட்டது என்பதை அவன் கனவில்கூட அறிவதில்லை.

இயற்கை நம் எல்லோரையும் அரைத்துக் கொண்டிருக்கிறது. உங்களுக்குக் கிடைத்த ஒரு துளி இன்பத்தை எண்ணிப் பாருங்கள். இயற்கை தன் வேலையை உங்களைக் கொண்டு முடிக்கிறது. கடைசியில் இறந்ததும் நீங்கள் செடிகள் வளர உரமாகிறீர்கள்! இருந்தும் இன்பத்தை நாமே சம்பாதித்ததாக நாம் எல்லோரும் நினைக்கிறோம். இப்படிச் சக்கரம் சுழன்று கொண்டே போகிறது.

ஆகவே ஆன்மாவை ஆன்மாவாக உணர்வதுதான் செயல்முறை மதம். மகோன்னதமான இந்தக் கருத்திற்கு நம்மை அழைத்துச் செல்கின்றவரையில் வேறு எதுவும் நல்லதுதான். துறவு, தியானம்—இவற்றால்தான், புலன்களைத் துறப்பதால்தான், நம்மை ஜடப்பொருளோடு கட்டிக் கீழிழுத்து வைத்திருக்கின்ற முடிச்சுக்களை வெட்டுவதால்தான் அந்த அனுபூதியை அடைய வேண்டும். 'எனக்கு உலக சுகபோகங்கள் வேண்டாம், புலன் வாழ்க்கை வேண்டாம், இவற்றைவிட உயர்ந்த ஒன்று

வேண்டும்'—இதுதான் துறவு. பிறகு தியான பலத்தால் இதுவரை ஏற்பட்டுவிட்ட கேடுகளைக் களையுங்கள்.

இயற்கையின் குரலுக்கு ஏவலர்களாக நிற்கிறோம் நாம். வெளியில் ஓசை எழுந்தால் அதைக் கேட்க வேண்டும், ஏதாவது நிகழ்ந்தால் அதைப் பார்க்க வேண்டும். குரங்குகளைப்போல் இருக்கிறது நமது நிலைமை. இரண்டாயிரம் குரங்குகள் ஒன்று சேர்ந்தால் அதுவே நாம். நாம் ஒவ்வொருவரும் அப்படியே. எதிலும் மூக்கை நுழைப்பவை குரங்குகள். நம்மாலும் சும்மா இருக்க முடியாது, ஆனால் அதற்கு 'இன்பம் அனுபவிப்பது' என்று பெயர் சூட்டிக் கொள்கிறோம். நல்ல வேடிக்கை! நாம் இன்பத்தை அனுபவிக்கிறோம், அனுபவிக்காமல் நம்மால் இருக்க முடியாது, நாம் அனுபவிக்க வேண்டும் என்று இயற்கை விரும்புகிறது. ஓர் இனிய இசை! நான் அதைக் கேட்கிறேன். கேட்பதோ கேட்காமல் இருப்பதோ என் கையில் உள்ளது என்று நினைத்துக்கொள்கிறேன்! 'துயரத்தின் ஆழத்திற்குப் போ' என்று சொல்கிறது இயற்கை. ஒரு நொடியில் நான் துயரில் ஆழ்கிறேன். ... புலனின்பங்களைப் பற்றியும் உடைமைகளைப் பற்றியும் பேசுகிறோம். என்னைப்பற்றி ஒருவன், 'இவர் பெரிய அறிவாளி' என்று நினைக்கிறான், இன்னொருவன், 'இவர் ஒரு முட்டாள்' என்று எண்ணுகிறான். எதுவும் தெரியாமலே இந்தச் சீரழிவு, இந்த அடிமைத்தனம்! இருட்டறையில் நாம் தலையோடு தலை மோதிக்கொள்கிறோம். ...

தியானம் என்பது என்ன? இவை எல்லாவற்றையும் தடுப்பதற்கான சக்தியைத் தருவதுதான் தியானம், 'பார், அதோ ஓர் அழகான பொருள்' என்று இயற்கை நம்மை அழைக்கிறது, 'கண்களே, பார்க்காதீர்கள்' என்று நான் கண்களுக்கு உத்தரவிடுகிறேன். கண்கள் பார்ப்பதில்லை. 'இதோ நல்ல நறுமணம், முகர்ந்து பார்' என்கிறது இயற்கை. 'முகராதே' என்று நான் மூக்கிற்குச் சொல்கிறேன். மூக்கு முகர்வதில்லை. இயற்கையின் கொடுமை தொடர்கிறது—என் குழந்தைகளில் ஒன்றைக் கொல்கிறது; 'மடையா, உட்கார்ந்து அழு. துக்கத்தில் அழுந்திச் சாகு' என்கிறது. 'அழுந்த வேண்டிய அவசியமில்லை' என்று கூறி, குதித்து எழுகிறேன் நான். சுதந்திரமாக இருக்க வேண்டும். எப்போதாவது இதைப் பயிற்சி செய்து பாருங்கள்.... [தியானத்தில்] இந்த இயற்கையைக் கணநேரத்திற்கு நீங்கள் மாற்ற முடியும். இந்தச் சக்தி உங்களுக்குக் கிடைத்தால் அதுவே சொர்க்கம் ஆகாதா, முக்தி ஆகாதா? தியானத்தின் சக்தி அதுதான்.

அதை அடைவது எப்படி? பல வழிகளில். ஒவ்வோர் இயல்பிற்கும் ஒரு தனி வழி இருக்கிறது. ஆனால் பொதுவான அம்சம் என்னவென்றால், மனத்தைப் பற்றிக்கொள்ளுங்கள். மனம் ஓர் ஏரியைப் போன்றது. அதில் போடப்படும் ஒவ்வொரு கல்லும் அலைகளை எழுப்புகின்றன. இந்த அலைகள், நாம் யார் என்பதை நாம் பார்க்க விடுவதில்லை. முழு நிலவின் பிம்பம் ஏரியில் விழுகிறது, ஆனால் மேற்பரப்பு கொந்தளிப்பாக இருப்பதால் அந்தப் பிம்பத்தை நாம் தெளிவாகக் காண முடிய வில்லை. கொந்தளிப்பு அடங்கட்டும். இயற்கை அலை எழுப் பாமல் பார்த்துக் கொள்ளுங்கள். அமைதியாக இருங்கள். சிறிது நேரம் சென்றால் இயற்கையே உங்களை விட்டுவிடும். நாம் யார் என்பது அப்போது நமக்குத் தெரியவரும். கடவுள் ஏற்கனவே அங்கே இருக்கிறார். ஆனால் மனம் புலன்களின் பின்னால் ஓடிஓடிச் சலனப்பட்டுக்கொண்டே இருக்கிறது. புலன்களைத் தடுத்து நிறுத்துங்கள், அப்பொழுதும் மனம் சுழன்று கொண்டுதான் இருக்கிறது. நான் நன்றாகத்தான் இருக்கிறேன் என்று நினைத்துக்கொண்டு, இப்போது இறைவனைத் தியானம் செய்ய ஆரம்பிக்கிறேன். அடுத்த நிமிடமே என் மனம் லண்டனுக்குத் தாவுகிறது. அங்கிருந்து இழுத்தால், அது, நான் நியூயார்க்கில் முன்பு செய்த காரியங் களை நினைத்துப் பார்ப்பதற்காக அங்குச் செல்கிறது. தியானத் தினால்தான் இந்த அலைகளை நிறுத்த வேண்டும்.

மெதுவாக, படிப்படியாக நாம் நம்மைப் பயிற்றுவிக்க வேண்டும். இது வேடிக்கை அல்ல—ஒருநாள் அல்ல, பல ஆண்டுகள் அல்ல, பல பிறவிகள் ஆனாலும் ஆகலாம். பரவா யில்லை. முயற்சி தொடர வேண்டும். தெரிந்தே, நீங்களாகவே முயற்சியைத் தொடர வேண்டும். அங்குலம் அங்குலமாக நாம் முன்னேறுவோம், கடைசியில் உண்மையான செல்வத்தை உணர்வோம், அடைவோம். அதனை யாரும் நம்மிடமிருந்து பறிக்க முடியாது, யாரும் அழிக்க முடியாது. அந்த இன்பத்தை எந்தத் துயரமும் அழிக்க முடியாது. ...

இத்தனைக் காலமாக நாம் பிறரைச் சார்ந்தே இருந்துள் ளோம். ஒருவரால் நமக்குச் சற்று இன்பம் கிடைக்கிறது, அந்த ஆள் போய்விட்டாலோ, என் இன்பமும் அவனுடன் போய் விடுகிறது. ... மனிதனின் அசட்டுத்தனத்தைப் பாருங்கள்: இன்பத் திற்காக அவன் மனிதர்களைச் சார்கிறான். பிரிவு, துன்பம் தரக்கூடியதுதான். இன்பத்திற்காகப் பணத்தை நம்ப முடியுமா?

பணம் கைமாறிச் செல்வது அல்லவா! மாறாத ஆன்மாவை விட்டுவிட்டு, உடல்நலத்தையோ, வேறு எதையோ சார்வது, இன்றோ நாளையோ துன்பத்தைக் கொண்டுவந்தே தீரும்.

எல்லையற்ற ஆன்மாவைத் தவிர மற்ற எல்லாம் மாறிக் கொண்டிருக்கின்றன. மாற்றம் என்னும் சுழல்தான் எங்கும். நிரந்தரம் என்பது உங்களைத் தவிர வேறு எங்கும் இல்லை. அங்குதான் மாறாத பேரின்பம் உள்ளது. அதை நமக்குத் திறந்து காட்டுகின்ற வாசல்தான் தியானம். பிரார்த்தனைகள், சடங்குகள், பிற வழிபாட்டு முறைகள் எல்லாமே தியானத்திற்கு இட்டுச் செல்கின்ற வெறும் பாலர் வகுப்புகள் மட்டுமே. நீங்கள் பிரார்த்தனை செய்கிறீர்கள், ஏதாவது நிவேதனம் செய்கிறீர்கள். இவையெல்லாம் ஒருவனது ஆன்மீக சக்தியை அதிகரிக்கின்றன என்று ஒரு நம்பிக்கை இருந்தது. மந்திரங்கள், மலர்கள், உருவங்கள், கோயில்கள், தீபாராதனைகள் போன்ற சடங்குகள் எல்லாமே மனத்தை ஒரு குறிப்பிட்ட நிலைக்குக் கொண்டு வருகின்றன. ஆனால் அந்த நிலை எப்போதும் ஆன்மாவிலேயே உள்ளது, வேறு எங்கும் இல்லை. எல்லோரும் இதைச் செய்து கொண்டிருக்கிறார்கள், ஆனால் தெரியாமல் செய்கிறார்கள், நீங்கள் தெரிந்து செய்யுங்கள். இதுதான் தியானத்தின் சக்தி. உங்களிடமுள்ள எல்லா அறிவும் உங்களிடம் எப்படி வந்தது? தியானத்தின் சக்தியால்தான். தன் ஆழங்களில் இருந்த அறிவை ஆன்மா தானாகவே கடைந்தெடுத்தது. அதற்கு வெளியில் எந்த அறிவாவது உள்ளதா? இறுதியில் தியானத்தின் சக்தி நம்மை உடம்பிலிருந்து பிரிக்கிறது; அப்போது ஆன்மா தன்னை உள்ளது உள்ளபடி அறிகிறது; தான் பிறக்காத, பிறப் பற்ற, இறப்பற்றதாக உணர்கிறது. இனி எந்தத் துன்பமும் இல்லை, உலகில் பிறப்பும் இல்லை, பரிணாம வளர்ச்சியும் இல்லை. தான் என்றென்றும் பரிபூரணமாக சுதந்திரமாக இருந்ததை ஆன்மா அறிகிறது. ❑

## 7. மதம் என்றால் என்ன?

17 ஜூன் 1900

தண்டவாளத்தின் மீது ஒரு பெரிய ரயில் விரைவாக ஓடிக் கொண்டிருக்கிறது, அந்தத் தண்டவாளங்களுள் ஒன்றில் ஊர்ந்து கொண்டிருந்த சிறு புழு ரயில் வருகின்ற வழியை விட்டு விலகி, தன் உயிரைக் காப்பாற்றிக் கொண்டது. ஒரு நொடியில் நசுங்கக்கூடிய சாதாரணமான இந்தச் சிறிய புழு உயிருள்ள ஒன்று. அத்தனை பெரிய ரயில் ஓர் எந்திரம், வெறும் எந்திரம் மட்டுமே. ஒன்றுக்கு உயிர் இருக்கிறது என்றும், இன்னொன்று உயிரற்ற ஜடப்பொருள் என்றும், அதன் சக்தி ஆற்றல் வேகம் எல்லாம் உயிரற்ற ஒரு எந்திரத்தைச் சேர்ந்தது, அது வெறும் எந்திரம் மட்டுமே என்றும் கூறுகிறீர்கள். அந்த எந்திரம் சிறிது பட்டாலே உயிரை இழந்திருக்கக் கூடிய அந்தத் தண்டவாளத்தில் ஊர்ந்த சிறிய புழுவை, அந்தப் பெரிய ரயிலுடன் ஒப்பிடும்போது புழு மகோன்னதமானது. ஏனெனில் இது எல்லையற்றதன் ஒரு சிறு பகுதி, அதனால் அது ஆற்றல் மிக்க எந்திரத்தைவிட உயர்ந்தது.

ஏன் அப்படி? உயிருள்ளது, உயிரற்றது என்று எப்படி வேறுபடுத்தி அறிகிறோம்? உருவாக்கியவன், அது எப்படி இயங்க வேண்டும் என்று செய்தானோ அப்படியே எந்திரம் செயல்படுகிறது; அதன் இயக்கம் உயிருள்ள இயக்கம் அல்ல. அப்படியானால் உயிருள்ளதற்கும் உயிரற்றதற்கும் எப்படி வித்தியாசம் கண்டுபிடிப்பது? உயிருள்ளதில் சுதந்திரம் இருக்கிறது, அறிவு இருக்கிறது; உயிரற்றதில் எல்லாம் கட்டப்பட்டிருக்கிறது. அங்கே சுதந்திரம் இருக்க முடியாது, ஏனெனில் அங்கு அறிவு இல்லை. நம்மை எந்திரங்களிலிருந்து பிரித்துக் காட்டுகின்ற இந்தச் சுதந்திரத்திற்காகத்தான் நாம் எல்லோரும் முயன்று கொண்டிருக்கிறோம். இன்னும் அதிகச் சுதந்திரத்துடன் விளங்குவதுதான் நமது அனைத்து முயற்சிகளின் இலக்கு, ஏனெனில் பூரண சுதந்திரத்தில்தான் நிறைநிலை இருக்க முடியும். நாம் அறிந்திருந்தாலும் அறியாதிருந்தாலும், எல்லா

வழிபாடுகளுக்கும் அடிப்படையாக இருப்பது சுதந்திரத்தை அடைவதற்கான முயற்சிதான்.

உலகம் முழுவதிலும் உள்ள பல்வேறு வழிபாடுகளை ஆராய்ந்தால், பண்படாத மனிதர்கள் பேய்கள், பூதங்கள், முன்னோர்களின் ஆவிகள் இவற்றை வழிபடுவது தெரிய வரும். இன்னும் பாம்பு வழிபாடு, தேவதை வழிபாடு, இறந்தவர்களின் வழிபாடு போன்றவற்றையும் அங்கே காணலாம். அவர்கள் ஏன் இப்படிச் செய்ய வேண்டும்? ஏனெனில் தங்களுக்குத் தெரியாத ஒரு வழியில் இவை தங்களைவிட உயர்ந்தவை, அதிக சக்தி வாய்ந்தவை, தங்கள் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தக் கூடியவை என்று அவர்கள் உணர்கிறார்கள். ஆகவே அவை தங்களைத் துன்புறுத்தாவண்ணம் அவற்றைத் திருப்தி செய்ய முயல்கிறார்கள்; அதாவது, இன்னும் அதிகச் சுதந்திரம் அடைய விரும்புகிறார்கள். இந்த உயர்ந்த தேவதைகளின் தயவைச் சம்பாதித்து, தாங்கள் உழைத்துப் பெற வேண்டியதை அவர்களின் அன்பளிப்பாகப் பெற விரும்புகிறார்கள்.

உலகம் ஓர் அற்புதத்தை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதையே இது காட்டுகிறது. இந்த எதிர்பார்த்தல் நம்மை ஒருபோதும் விடுவதில்லை. வேண்டாமென்று நாம் என்னதான் முயன்றாலும், ஆச்சரியமானதையும் அசாதாரணமானதையும் பின்தொடர்ந்து ஓடிக்கொண்டுதான் இருக்கிறோம். மனம் என்பது என்ன? வாழ்க்கையின் பொருளையும் மர்மத்தையும் இடைவிடாது ஆராய்ந்து கொண்டிருப்பதுதானே! பண்படாதவர்கள்தான் இவற்றின் பின்னால் ஓடுகிறார்கள் என்று நாம் சொல்லலாம். ஆனால் கேள்வி என்னவோ அப்படியேதான் இருக்கிறது—அதை ஏன் ஆராய வேண்டும்?

யூதர்கள் ஓர் அற்புதத்தை எதிர்நோக்கியிருந்தார்கள். இந்த ஆயிரக்கணக்கான வருடங்களாக உலகம் முழுவதும் அதையே கேட்டுக் கொண்டிருக்கிறது. மேலும் உலகம் முழுவதும் திருப்தியின்மை உள்ளது. ஒரு லட்சியத்தை எடுக்கிறோம், அதை நோக்கிப் பாதி வழி போவதற்குள் இன்னொரு லட்சியத்தை வகுக்கிறோம். இனி, மிகவும் பாடுபட்டு ஒரு லட்சியத்தைத் தேடி ஓடுகிறோம், பிறகு அது தேவையில்லை என்று அறிகிறோம். திரும்பத்திரும்ப இந்த அதிருப்தி ஏற்பட்டுக் கொண்டேயிருக்கிறது. அதிருப்தியே இருக்குமானால் மனத்தில் வேறு என்ன இருக்க முடியும்? எங்கும் பரவியுள்ள இந்தத் திருப்தியின்மைக்கு என்ன பொருள்? இதற்குக் காரணம் சுதந்திரமே

ஒவ்வொரு மனிதனின் லட்சியமாக இருப்பதுதான். அதை அவன் எப்போதும் தேடிக் கொண்டிருக்கிறான், அதை அடைவதற்கான போராட்டமே அவனுடைய வாழ்க்கை. பிறந்தவுடனேயே குழந்தை இயற்கையின் நியதியை எதிர்க்கின்றது. தன் தளைக்கு எதிராக அது தெரிவிக்கும் ஆட்சேபக் குரல்தான் அதன் முதல் அழுகை.

இந்தச் சுதந்திர ஆசைதான் முற்றிலும் சுதந்திரமாக இருக்கின்ற ஒரு பரம்பொருளைப் பற்றிய கருத்தைத் தருகிறது. கடவுளைப்பற்றிய கருத்து என்பது மனித அமைப்பின் ஓர் அடிப்படைமூலம். வேதாந்தத்தின் சத்-சித்- ஆனந்தம்தான், கடவுளைப்பற்றி நம் மனம் எண்ணிப் பார்க்கக்கூடிய மிக உயர்ந்த கருத்து. அறிவின் சாரமாகவும், இயல்பாகவே ஆனந்த வடிவமாகவும் அவர் இருக்கிறார். சட்டப்படி நடப்பதற்காகவும், மனித இயற்கையை அடக்குவதற்காகவும் நாம் அந்த அகக் குரலை வெகுகாலமாக அழுத்தி வைத்திருக்கிறோம். ஆனால் மனித இயல்புணர்ச்சி அந்த இயற்கை நியதிகளை எதிர்க்கிறது. இதன் உட்பொருளை நாம் அறியாமலிருக்கலாம். ஆனால் மனிதத் தன்மைக்கும் ஆன்மீக உணர்வுக்கும் உள்ள போராட்டம், தாழ்ந்த மனத்திற்கும் உயர்ந்த மனத்திற்கும் உள்ள போராட்டம் நமக்குத் தெரியாமல் நடக்கவே செய்கிறது. இந்தப் போராட்டம்தான் நமது தனிவாழ்வை, நாம் நமது 'தனித்துவம்' என்று கூறுகின்றோமே, அதைக் காப்பாற்ற முயல்கிறது.

நாம் பிறவி-புரட்சியாளர்கள் என்ற இந்த அற்புத உண்மையை நரகங்களும் நமக்கு அறிவுறுத்துகின்றன. வாழ்வின் முதல் உண்மையையே, அதாவது பெருகி விரைந்து வருகின்ற வாழ்க்கை ஓட்டத்தையே நாம் பிறந்ததும் எதிர்க்கிறோம்; 'எங்களுக்கு ஒரு நியதியும் கிடையாது' என்று கூச்சலிடுகிறோம். நியதிகளுக்குக் கீழ்ப்படிவதுவரை நாம் எந்திரங்கள் போன்றவர்களே. அதுவரை பிரபஞ்சம் தன் கதியில்தான் சென்றுகொண்டிருக்கும், நாம் அதைத் தடுக்க இயலாது. நியதிகளே மனித இயல்பாகி விடுகின்றன. இந்தத் தளையைத் தகர்த்து, சுதந்திரம் பெறுவதற்காக எப்போது போராடத் தொடங்குகிறோமோ, அதுதான் நமது உயர் வாழ்க்கைக்கான முதல் அறிகுறி. 'சுதந்திரம், ஓ சுதந்திரம்! சுதந்திரம், ஓ சுதந்திரம்' என்பதுதான் ஆன்மாவின் கீதம். ஆனால் அந்தோ! இயற்கையில் கட்டுண்டு கிடப்பதுதான் அதன் தலைவிதி போலும்!

அற்புதச் சக்திகளைப் பெறுவதற்காகப் பாம்புகள், பேய்கள், பூதங்கள் என்று இத்தனை வழிபாடுகளும், இத்தனை கொள்கைகளும், முறைகளும் ஏன் இருக்க வேண்டும்? இதில் உயிர் இருக்கிறது, இருப்பு (ஸத்) இருக்கிறது' என்று சொல்கிறோமே, ஏன்? இந்தத் தேடலிலும், வாழ்க்கையைப் புரிந்து கொள்வதற்கான முயற்சியிலும், ஸத் என்பதை விளக்க முயன்று கொண்டிருப்பதிலும் பொருள் இருக்கத்தான் வேண்டும். இது பொருளற்றதாக, வீணானதாக இருக்க முடியாது. சுதந்திரமாக இருப்பது என்பது மனிதனின் முடிவற்ற முயற்சி. இப்போது நாம் அறிவியல் என்று கூறுகிறோமே, அது பல ஆயிரம் வருடங்களாக சுதந்திரம் அடையத்தான் போராடிக் கொண்டிருக்கிறது. மக்கள் சுதந்திரம் கேட்கிறார்கள், ஆனால் இயற்கையில் என்னவோ சுதந்திரம் இல்லை. எங்கும் நியதிகள் தான். இருந்தும் போராட்டம் தொடர்ந்து கொண்டிருக்கிறது. சூரியனிலிருந்து அணுவரை இயற்கை முழுவதும் நியதியில் கட்டுப்பட்டவை. மனிதனுக்கும் சுதந்திரம் என்பதே கிடையாது. ஆனால் நாம் அதை நம்ப முடிவதில்லை. ஆரம்பத்திலிருந்தே நாம் நியதிகளை ஆராய்ந்து வந்துள்ளோம்; இருந்தும் மனிதன் நியதிகளுக்கு உட்பட்டவன் என்பதை நம்புவதில்லை, நம்பவும் மாட்டோம். 'சுதந்திரம், ஓ சுதந்திரம்' என்று ஆன்மா ஓலமிட்டுக்கொண்டே இருக்கிறது. கடவுளைப் பரிபூரண சுதந்திரர் என்று கொண்டபின், தான் தளையில் என்றும் கட்டுண்டு கிடக்க மனிதனால் முடியாது. அவன் மேலே செல்ல வேண்டும். போராட்டம் தனக்காக இல்லையென்றால் அது மிகவும் கடினமானது என்று அவன் கருதுவான். 'நான் பிறப்பிலேயே அடிமை, நான் கட்டுண்டிருக்கிறேன்; ஆனால் இயற்கையால் கட்டுப்படாத ஒருவர் இருக்கிறார். அவர் சுதந்திரர், இயற்கையின் தலைவர்' என்று தனக்குள் சொல்லிக் கொள்கிறான்.

ஆகவே கடவுளைப்பற்றிய கருத்தும் தளையைப்பற்றிய கருத்தைப் போலவே மனத்தின் ஒரு முக்கியமான, அடிப்படையான பகுதியாக இருக்கிறது. இரண்டுமே சுதந்திரக் கருத்தின் விளைவுகள். சுதந்திரக் கருத்து இல்லாவிட்டால் செடியில் உயிர் இருக்க முடியாது. செடியிலும் சரி, புழுவிலும் சரி, உயிர் தனித்துவ நிலைக்கு உயர வேண்டியுள்ளது. அவை அறியாமலே இந்தச் சுதந்திரத்திற்கான முயற்சி நடைபெற்றுக் கொண்டிருக்கிறது—பன்மை, நியதி, உருவம் இவற்றைக் காப்பாற்றவே செடி வளர்கிறது, இயற்கையைக் காப்பாற்ற அல்ல.

முன்னேற்றத்தின் ஒவ்வோர் அடியும் இயற்கைக்கு அடங்கி யிருக்கிறது என்ற கருத்து, சுதந்திரக் கருத்திற்கு மாறாக இருக் கிறது. உலோகாயதக் கருத்து ஓங்கிக்கொண்டிருக்கிறது, சுதந்திரக் கருத்தும் ஓங்கிக் கொண்டிருக்கிறது, இவற்றுக் கிடையே போராட்டமும் நடந்து கொண்டிருக்கிறது. இனச் சண்டைகளைப் பற்றியும், மதச் சண்டைகளைப் பற்றியும் கேள்விப்படுகிறோம். ஆனால் இனங்களும் மதங்களும் இருப்பது நியாயமானது, சரியானது; அவை இருக்க வேண் டியவையே. சங்கிலி நீண்டுகொண்டே போகிறது; இயற்கை யாகப் போராட்டமும் வளர்ந்து கொண்டேதான் போகும்; ஆனால் எல்லோரும் ஒரே லட்சியத்தை அடையத்தான் முயன்று கொண்டிருக்கிறோம் என்பதை அறிந்திருந்தால் போராட்டங் களுக்கு இடமே இல்லை.

சுதந்திரமே வடிவானவரை, இயற்கையின் தலைவரைத் தான் நாம் கடவுள் என்று அழைக்கிறோம். அவரை மறுக்க முடியாது. ஏனெனில் சுதந்திரக் கருத்தின்றி நாம் உயிர் வாழவோ இயங்கவோ முடியாது. நீங்கள் சுதந்திரமானவர்கள் என்னும் நம்பிக்கை இல்லாவிட்டால் இங்கே வந்திருப்பீர்களா? நாம் ஏன் சுதந்திரமாக இருக்க இப்படி எப்பொழுதும் முயன்று கொண்டிருக்கிறோம் என்பதற்கு உயிரியல் வல்லுனர்கள் ஒரு வேளை ஏதாவது விளக்கம் கூறலாம், கூறவும் செய்வார்கள். அது எப்படி இருந்தாலும் சுதந்திரக் கருத்து இருக்கத்தான் செய்கிறது. நீங்கள் இயற்கையின் கட்டுப்பாட்டில் இருக் கிறீர்கள், அதை மீற முடியாதுபோல் தோன்றுவதை எப்படி மறுக்க முடியாதோ, அதேபோல் இதையும் மறுக்க முடியாது.

தளை—விடுதலை, ஒளி—நிழல், நன்மை—தீமை இவை இருந்தேயாக வேண்டும். தளை இருப்பதே சுதந்திரம் அங்கே மறைந்திருப்பதைக் காட்டுகிறது. ஒன்று உண்மையானால் இன்னொன்றும் சமஅளவில் உண்மையே. சுதந்திரக் கருத்து இருக்கத்தான் வேண்டும். பண்படாத மனிதனிடம், தான் கட்டுண்டிருக்கிறோம் என்ற கருத்து உள்ளது; ஆனால் இதனை அவன் சுதந்திரத்திற்காகப் போராடுவது என்று இப்போது புரிந்துகொள்ள முடியாது என்பது உண்மையானாலும் சுதந்திரக் கருத்து அவனிடம் இருக்கத்தான் செய்கிறது. பாவமும் அசுத்தமும் தன்னைக் கட்டுப்படுத்துகின்றன என்றெல்லாம் அவன் பெரிதாக நினைப்பதில்லை. ஏனெனில் அவனது இயல்பு மிருகங்களைவிடச் சற்றுதான் உயர்ந்தது. அவன் எதிர்த்துப்

போராடுவது பௌதீக நிலையிலுள்ள தளையையே, பௌதீக இன்பத்தை அனுபவிப்பதற்குத் தடை வந்தால் அவன் போராடுகிறான். இந்தத் தாழ்ந்த நிலைத் தளைஉணர்வே உயர்ந்து விரிந்து மனத்தளவிலான தளைஉணர்வாக, ஒழுக்க நிலையிலுள்ள தளைஉணர்வாகப் பரிணமிக்கிறது; ஆன்மீக சுதந்திர தாகமாக மாறுகிறது. இங்கே அறியாமைத் திரை வழியாக தெய்வீகம் மங்கலாக ஒளிவீசக் காண்கிறோம். முதலில் திரை மிகக் கனமாக இருப்பதால் ஒளி பெரும்பாலும் தெரியாமலே இருக்கலாம்; எனினும் அது அங்கே இருக்கிறது; சுதந்திரம், நிறைநிலை என்ற பெருஞ்சுடர் என்றும் தூயதாக, மங்காததாகத் திகழ்ந்துகொண்டுதான் இருக்கிறது. இதையே பிரபஞ்சத்தை ஆள்பவர், சுதந்திரர் என்று மனிதன் உருக் கொடுக்கிறான். பிரபஞ்சம் முழுவதும் ஒன்று; வேறுபாடு எல்லாம் அளவில்தான், கருத்தில்தான் என்பது அவனுக்கு இன்னும் தெரியாது.

இயற்கை முழுவதுமே இறைவனின் வழிபாடுதான். உயிர் இருக்கின்ற இடமெல்லாம் சுதந்திரத் தேடலும் காணப்படுகிறது. இந்தச் சுதந்திரம்தான் கடவுள். இயற்கை முழுவதன்மீதும் ஆணை செலுத்தும் ஆற்றலை இந்தச் சுதந்திரம் நமக்கு அளிக்கிறது; ஆனால் இது அறிவின்றி சாத்தியமில்லை. அறிவு முதிரமுதிர, நமக்கு இயற்கை மீதுள்ள ஆதிக்கம் மேன்மேலும் வளர்கிறது. இந்த வெற்றியே நம்மை வலிமை உடையவர்கள் ஆக்குகிறது. முழுச் சுதந்திரரான, இயற்கையை வென்றவரான ஒருவர் இருப்பாரானால் அவர் இயற்கைபற்றிய முழு அறிவு பெற்றவராக, எங்கும் நிறைந்தவராக, எல்லாம் அறிந்தவராக இருக்க வேண்டும். இவற்றுடன் சுதந்திரம் கைகோத்துச் செல்ல வேண்டும். இவற்றைப் பெற்ற ஒருவரே இயற்கைக்கு அப்பாற்பட்டவராக இருக்க முடியும்.

முழுச் சுதந்திரத்திலிருந்து பிறக்கின்ற அருட்செல்வம்தான் அழியாத பேரமைதிதான் மதத்தைப் பற்றிய மிக உயர்ந்த கருத்தாகும். இதுதான் வேதாந்தத்தின் கடவுள்-கருத்துக்கள் அனைத்திற்கும் அடிப்படையாக இருக்கிறது. அவர் முற்றிலும் சுதந்திரர், எதனாலும் கட்டுப்படாதவர், எந்த மாற்றமும் இல்லாதவர், இயற்கையுடன் எந்தத் தொடர்பும் இல்லாதவர். எதுவும் அவரிடம் ஒரு மாற்றத்தை ஏற்படுத்த முடியாது. இத்தகைய சுதந்திரம்தான் உங்களிடமும் என்னிடமும் இருக்கிறது. இதுவே உண்மையான சுதந்திரம்.

மகோன்னதமான தமது மாறாத ஆன்மாவிலேயே கடவுள் எப்போதும் நிலைபெற்றிருக்கிறார். நீங்களும் நானும் அவருடன் ஒன்றுபட முயல்கிறோம். ஆனால் இயற்கையுடனும் தினசரி வாழ்வின் தேவைகளுடனும், பணத்துடனும், புகழுடனும், மனித அன்புகளுடனும், இயற்கையின் இத்தகைய மாறுதல்களுடனும் ஒன்றுபடுகிறோம்; அதனால் கட்டுப்படுகிறோம். இயற்கை ஒளிர்கிறதே. அந்த ஒளி யாரைச் சார்ந்தது? சூரியனையோ சந்திரனையோ நட்சத்திரங்களையோ அல்ல; அது கடவுளைச் சார்ந்தது. சூரியனின் ஒளியோ அல்லது நமது உணர்வின் ஒளியோ, எங்கே ஒளி இருந்தாலும் அது கடவுளே. அவர் ஒளிரும்போது எல்லாம் அவரால் ஒளிர்கின்றன.

இந்தக் கடவுள் சுயம் நிரூபணமானவர், உருவமற்றவர், எல்லாம் அறிந்தவர், இயற்கையை அறிந்தவர், அதற்குத் தலைவர், அனைவருக்கும் இறைவன். எல்லா வழிபாடுகளுக்கும் பின்னணியில் அவரே இருக்கிறார். நாம் அறிந்தாலும் அறியா விட்டாலும் அவருடைய சங்கல்பத்திற்கு ஏற்பவே அந்த வழி பாடுகள் நடக்கின்றன.

நான் இன்னும் ஒரு படி மேலே செல்கிறேன். எவற்றைக் கண்டு எல்லோரும் திகைத்து நிற்கிறார்களோ, நாம் எவற்றைத் தீமை என்று கருதுகிறோமோ அவையும் அவரது வழிபாடே. அதுவும் சுதந்திரத்தின் ஒரு பகுதியே. அது மட்டுமல்ல, அடுத்து நான் சொல்வதைக் கேட்டால் நீங்கள் பயந்துவிடுவீர்கள்— நாம் தீமை செய்வதுகூட, அதன் தூண்டுதல்கூடச் சுதந்திரம் தான். அந்த உணர்ச்சி தவறான பாதையில் வழிகாட்டப் பட்டிருக்கலாம், தவறாகச் செலுத்தப் பட்டிருக்கலாம். ஆனால் அந்தச் சுதந்திரம் அங்கே இருக்கவே செய்தது. இந்தச் சுதந்திரம் பின்னணியில் இல்லாமல் போனால் எந்த வாழ்க்கையோ எந்தத் தூண்டுதலோ இருக்க முடியாது. பிரபஞ்சத்தின் உயிர்த் துடிப்பில் சுதந்திரமே மூச்சாக இயங்குகிறது. பிரபஞ்சத்தின் இதயத்தில் ஒருமை என்பது இல்லாவிட்டால் வேறுபாடு என்பதை நாம் புரிந்துகொள்ள இயலாது.

உபநிடதங்களின் கடவுள்-கருத்து இது. சிலவேளைகளில் அவை இன்னும் ஒருபடி மேலே சென்று, 'சாரத்தில் நாமும் கடவுளும் ஒன்றே' என்று முதலில் நம்மைத் திடுக்கிட வைக்கின்ற கருத்தைக் கூறுகிறது. வண்ணத்துப்பூச்சியின் இறகிலுள்ள வண்ணங்களாகவும் ரோஜாமொட்டின் மலர்ச்சியாகவும் உள்ள அவரே வண்ணத்துப்பூச்சியிலும் ரோஜாச் செடியிலுமுள்ள

சக்தியாகவும் இருக்கிறார். நமக்கு உயிர் அளிப்பவரே நம்முள் இருக்கும் சக்தியாகவும் விளங்குகிறார். அந்தப் பேரொளி யிலிருந்தே உயிர் உண்டாகிறது. அச்சுறுத்தும் மரணமும் அவரது சக்தியே. யாருடைய நிழல் மரணமாக உள்ளதோ அவரது நிழலே மரணமிலாப் பெருநிலையாகவும் உள்ளது.

இன்னும் சற்று உயர்ந்த கருத்திற்குச் செல்வோம். வேட்டை யில் துரத்தப்படுகின்ற முயல்களைப்போல் நாமும் பயங்கர மானவற்றைக் கண்டு எப்படி ஓட்டம் பிடிக்கிறோம்! அந்த முயல்களைப் போலவே தலைகளை மறைந்துக்கொண்டு, நாம் பாதுகாப்பாக இருப்பதாகவும் நினைக்கிறோம். பயங்கரமான அனைத்திலிருந்தும் உலகம் ஓடுவதைப் பாருங்கள். ஒருமுறை நான் காசியில் இருந்தபோது, ஒரு பக்கம் பெரிய குளமும் மறு பக்கம் உயர்ந்த சுவருமாக இருந்த ஒரு பாதை வழியாகப் போக வேண்டியிருந்தது. அங்கே குரங்குகள் ஏராளம். காசியிலுள்ள குரங்குகள் பெரியவை, சிலவேளைகளில் பொல்லாதவை. தங்கள் பாதை வழியாக என்னைப் போகவிடக் கூடாது என்று நினைத்துக் கொண்டன போலும்! கிரீச்சென்று கூச்சலிட்ட படியே என் காலின்மீது பாய்ந்தன. கூட்டமாக அவை என்னை நெருங்குவதைக் கண்ட நான் ஓடத் தொடங்கினேன். நான் ஓடஓட விடாமல் துரத்தி, தொடர்ந்து கடிக்க ஆரம்பித்தன. தப்ப முடியாதோ என்று தோன்றிற்று. அப்போது அங்கு வந்த ஒருவர் என்னைக் கூப்பிட்டு, 'மிருகங்களை எதிர்த்து நில்லுங்கள்' என்று கூறினார். நான் திரும்பித் துணிவுடன் அவற்றை எதிர்த்து நின்றேன். அவ்வளவுதான், அந்தக் குரங்குங்கள் திரும்பி ஓடின.

நம் வாழ்வுக்கே இது ஒரு படிப்பினை. பயங்கரத்தை எதிர் கொள்ளுங்கள், தைரியமாக எதிர்த்து நில்லுங்கள். நாம் பயந்து ஓடவில்லையென்றால், அந்தக் குரங்குக் கூட்டம் போலவே, துன்பங்களும் ஓடிவிடும். சுதந்திரம் என்பது எப்போதாவது நமக்குக் கிடைக்கும் என்றால், அது இயற்கையை வெல்வதன் மூலமே தவிர, விலகி ஓடுவதால் அல்ல. கோழைகள் ஒருபோதும் வெற்றி கண்டதில்லை. பயம், துன்பம், அறியாமை இவை அகல வேண்டும் என்று நாம் விரும்பினால், அவற்றை எதிர்த்துப் போராடியே தீர வேண்டும்.

மரணம் என்பது எது? எவை பயங்கரமானவை? அவற்றில் கடவுளின் திருமுகத்தை நீங்கள் காணவில்லையா? தீமை யிலிருந்தும் பயங்கரத்திலிருந்தும் துன்பத்திலிருந்தும் விலகி

ஓடுங்கள், அவை உங்களைத் துரத்தும்; எதிர்த்து நில்லுங்கள், அவை பறந்துவிடும். வசதியையும் சுகத்தையும் இந்த உலகம் வரவேற்று வழிபடுகின்றது, துன்பத்தை ஒருவரும் வரவேற்கத் துணிவதில்லை. சுதந்திரம் என்பது இந்த இரண்டையும் கடந்து செல்வதே. இந்த வாசலின் வழியாகச் செல்லாமல் சுதந்திரம் பெற முடியாது. இவற்றை எல்லோரும் எதிர்கொண்டேயாக வேண்டும்.

நாம் கடவுளை வழிபட முயல்கிறோம். ஆனால் நமக்கும் கடவுளுக்கும் இடையே உடம்பு தடையாக வருகிறது, இயற்கை தடையாக வருகிறது; நம்முடைய பார்வையை மறைத்துவிடு கிறது. இடியிலும், அவமானத்திலும், துயரிலும் பாவத்திலும் அவரை எப்படி உணர்வது, அன்புடன் வழிபடுவது என்பதைக் கற்றுக்கொள்ள வேண்டும். அறமே வடிவான கடவுளையே உலகம் எப்போதும் போதித்து வந்துள்ளது. நானோ அறமும் பாவமும் ஒன்றுசேர்ந்த கடவுளைப் போதிக்கிறேன். துணி விருந்தால் அவரை ஏற்றுக்கொள்ளுங்கள், முக்திக்கு ஒரே வழி அதுதான். ஒருமைக் கருத்திலிருந்து பிறப்பதான அறுதி உண்மை அப்போது மட்டுமே நமக்குப் புலனாகும். ஒன்றைவிட மற்றொன்று உயர்வு என்ற எண்ணமும் அப்போது மறைந்துவிடும். சுதந்திரத்தின் நியதியை நெருங்கநெருங்க நாம் கடவுளின் நிழலில் வருவோம், நமது துன்பங்களும் அகலும். அப்போது நாம் நரக வாசலையும், சொர்க்க வாசலையும் வேறு பிரித்துப் பார்க்க மாட்டோம்; மனிதர்களைப் பிரித்து, 'இந்தப் பிரபஞ்சத் திலுள்ள அனைவரிலும் நானே உயர்ந்தவன்' என்று சொல்லவும் மாட்டோம். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் வேறு எது வாகவும் அல்லாமல் கடவுளாக மட்டுமே காணாதவரையில் இந்தத் தீமைகள் நம்மை வாட்டவே செய்யும், நாம் வேறு படுத்திக் கொண்டேதான் இருப்போம். ஏனெனில் ஆண்ட வனிடமும் ஆன்மாவிலும் மட்டுமே நாம் எல்லோரும் ஒன்று. எங்கும் கடவுளைக் காணாத வரையில் இந்த ஒருமை நமக்குப் புலனாகாது.

வனப்பு வாய்ந்த இறகுகளையுடைய இரண்டு பறவைகள் ஒரே மரத்தில் அமர்ந்திருக்கின்றன. அவை இணை பிரியாதவை. ஒன்று மேல்கிளையிலும் மற்றொன்று கீழ்க்கிளையிலும் உட்கார்ந்துள்ளன. கீழ்க்கிளைப் பறவை அந்த மரத்தின் இனிப்பும் கசப்புமான பழங்களைத் தின்று கொண்டிருக்கிறது. கசப்பான பழத்தைத் தின்னும்போது வருந்துகிறது. சிறிதுநேரம்

கழித்து மற்றொரு பழத்தைத் தின்றால், அதுவும் கசப்பாக இருக்கவே அண்ணாந்து மேலே பார்க்கிறது. மேல்கிளைப் பறவை இனிப்புப் பழத்தையும் தின்னவில்லை, கசப்புப் பழத்தையும் உண்ணவில்லை; அமைதியாக, கம்பீரமாக, தன் மகிமையில் தானே மூழ்கி அமர்ந்திருக்கிறது. அனைத்தையும் மறந்துபோய் கீழ்ப்பறவை மீண்டும் கசப்பும் இனிப்புமான பழங்களைத் தின்னத் தொடங்குகிறது. இறுதியில் ஒரு பழம் மிகவும் கசப்பாக இருக்கவே, அது தின்பதைவிட்டு மேற்கிளை யில் இருக்கின்ற ஒளிமிக்க பறவையை மீண்டும் அண்ணாந்து பார்க்கிறது. மெல்லமெல்ல அந்தப் பறவையை நெருங்கிச் செல்கிறது. மேல்பறவையின் ஒளிக்கதிர்கள் அதன்மீது விழுந்து பரவி அதை அப்படியே முழுக்காட்டுகிறது. தான் மேல்கிளைப் பறவையாக மாறிவிட்டதை அது காண்கிறது; அமைதி வடிவ மாக, கம்பீரமாக, சுதந்திரமாக ஆகிவிட்டது அது. மரத்தில் ஒரே ஒரு பறவைதான் இருந்தது என்பதை அது காண்கிறது. கீழ்க்கிளைப் பறவை, மேல்பறவையின் நிழலே தவிர வேறல்ல.

நாமும் உண்மையில் கடவுளுடன் ஒன்றுபட்டவர்கள். ஒரே சூரியன் பல்லாயிரக் கணக்கான பனித்துளிகளில் பிரதி பலிக்கும்போது பல்லாயிரக் கணக்கான சிறு சூரியன்களாகத் தோன்றுவதுபோல், நாமும் பிரதிபலிப்பின் காரணமாகவே பலராகத் தெரிகிறோம். நமது உண்மை இயல்பான தெய்வீகத் துடன் நாம் ஒன்றுபட வேண்டுமானால் பிரதிபலிப்புகள் மறைய வேண்டும். இந்தப் பிரபஞ்சம் முழுவதையும் நாம் பெற்றாலும் நமக்குத் திருப்தி கிடைக்காது. அதனால்தான் கஞ்சன் செல்வத்தை மேலும்மேலும் சேர்த்துக்கொண்டே போகிறான்; அதனால்தான் திருடன் திருடுகிறான், தீயவன் பாவம் செய்கிறான், நீங்கள் தத்துவம் படிக்கிறீர்கள். எல்லோருக்கும் குறிக்கோள் ஒன்றே. இந்தச் சுதந்திரத்தை அடைவதைத் தவிர வாழ்க்கையில் வேறு நோக்கமே இல்லை. அறிந்தோ அறியாமலோ, நாம் எல்லோரும் நிறைநிலையை அடையப் பாடுபடுகிறோம். எல்லா உயிர்களும் அதை அடைந்தேயாக வேண்டும்.

பாவச் செயலிலும் துயரிலும் உழன்று தடுமாறுபவனும், நரகப் பாதையை நாடுபவனும் அதை அடையவே செய்கிறான், ஆனால் அதற்கு நீண்ட காலமாகும். அவனை நாம் காக்க முடியாது. தலையில் பலமான சில அடிகள் விழுந்தால் அவனது மனம் ஆண்டவனிடம் திரும்பும். அப்போது அறப் பாதை,

தூய்மைப் பாதை, சுயநலமின்மைப் பாதை ஆன்மீகப் பாதை இறுதியில் நமக்குத் தெரிகிறது, எல்லோரும் அறியாமல் செய்வதை நாம் அறிந்து செய்வோம். 'நீங்கள் அறியாமலே வழிபடும் கடவுளைத்தான் நான் உங்களிடம் கூறுகிறேன்' என்றார் புனிதரான பால். இது உலகம் முழுவதும் அறிய வேண்டிய படிப்பினை. வாழ்க்கையின் இந்த ஒரே குறிக்கோளை அடைவதற்கு நமக்கு உதவி செய்யாவிட்டால் இயற்கையைப் பற்றிய இந்தத் தத்துவங்களாலும் கொள்கைகளாலும் என்ன பயன்? எல்லாவற்றுடனும் நம்மை ஒன்றாகக் காண்கின்ற உணர்வை நாம் பெறுவோமாக. ஒவ்வொன்றிலும் மனிதன் தன்னைக் காண்பானாக. கடவுளைப்பற்றி குறுகிய கருத்துக் கொண்ட இனங்களுடைய, நெறிகளுடைய வழிபாடுபோல் இனி நாம் கடவுளை வழிபடாமல் இருப்போம். இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒவ்வொன்றிலும் அவரைக் காண்போம். நீங்கள் கடவுளை உணர்ந்துவிட்டால் உங்கள் உள்ளத்தில் நிகழ்கின்ற வழிபாட்டையே எங்கும் காண்பீர்கள்.

கடவுளைப்பற்றிய குறுகிய கருத்துக்கள் அனைத்தையும் முதலில் அகற்றுங்கள். அவரை அனைவரிடமும் காணுங்கள். அவரே எல்லா கைகள் மூலமாகவும் செயல்புரிகிறார், எல்லா கால்கள் மூலமாகவும் நடக்கிறார், எல்லா வாய் வழியாகவும் உண்கிறார். ஒவ்வொருவரிலும் அவர் வாழ்கிறார். எல்லா உள்ளங்களின்மூலமும் அவர் சிந்திக்கிறார். அவர் சுயம் நிரூபண மானவர். அவர் நம்மைவிட நமக்கு அருகில் இருக்கிறார். இதை அறிவதே மதம், இதுதான் நம்பிக்கை. இந்த நம்பிக்கையை இறைவன் நமக்கு அருள்வாராக. இந்த ஒருமையை உணரும் போது நாம் அமரர்களாகி விடுவோம். பௌதீக நோக்கில் பார்த்தால்கூட நாம் அமரர்களே, ஏனெனில் நாம் பிரபஞ்சத் துடன் ஒன்றாவோம். இந்தப் பிரபஞ்சத்தில் ஓர் உயிர் இருக்கும் வரையில் நான் அதில் வாழ்வேன். எல்லைக்கு உட்பட்ட இந்தச் சிறியவன் அல்ல நான், நான் பிரபஞ்ச வடிவினன். மறைந்து போனவர்களுடைய உயிரெல்லாம் நானே. புத்தரின், ஏசுவின், முகமதுவின் ஆன்மா நானே, எல்லா ஆச்சாரியர்களின் ஆன்மா நானே, கொள்ளையடித்த கள்வர்கள் நானே, கொலை புரிந்து தூக்கிலிடப்பட்டவர்கள் நானே, அகிலமும் நானே.

அன்பர்களே நிமிர்ந்து நில்லுங்கள். இத்தகைய வழிபாடு தான் மிகச் சிறந்த வழிபாடு. நீங்கள் பிரபஞ்சத்துடன் ஒன்று பட்டவர்கள். இதுவே பணிவு; தரையில் விழுந்து ஊர்ந்து

தன்னை ஒரு பாவி என்று சொல்லிக் கொள்வதல்ல பணிவு. இந்த வேறுபாடாகிய திரை அறுந்து விழுவதுதான் பரிணாமத்தின் உச்சம். ஒருமையே மிக உயர்ந்த மதம். 'நான் இன்னார்' என்று கூறுவது குறுகிய கருத்து, அது உண்மையான 'நான்' என்பதைக் குறிப்பிடாது. அகிலமும் நானே, இந்தத் தத்துவத்தின் மீது நின்று, மிக மேலானதான அந்தப் பரம்பொருளை மிக உயர்ந்த உருவத்தின்மூலம் வழிபடுங்கள். ஏனெனில் கடவுள் பரமாத்மா, ஆதலால் அவரை ஆன்மாவாக, உண்மை வடிவாகவே வழிபட வேண்டும். கீழ்நிலை வழிபாடுகளின் வாயிலாக, மனிதனின் உலகியல் எண்ணங்கள் ஆன்மீக வழிபாட்டின் நிலையை அடைகின்றன. இறுதியில் எல்லையற்ற, பிரபஞ்சம் தழுவிய பரம்பொருள் ஆன்மாவிலும், அதன் வாயிலாகவும் வழிபடப்படுகின்றது. எல்லைக்கு உட்பட்டது உலக சம்பந்தமானது. ஆன்மா மட்டுமே எல்லையற்றது. கடவுள் ஆன்மா, எல்லையற்றவர். மனிதனும் ஆன்மா, ஆதலால் அவனும் எல்லையற்றவன். எல்லையற்றதே எல்லையற்றதை வழிபட முடியும். நாம் எல்லையற்றதை வழிபடுவோம். இதுதான் மிக உயர்ந்த ஆன்மீக வழிபாடு.

இந்தக் கருத்துக்களின் மகிமையை உணர்வது எவ்வளவு கடினம் பாருங்கள். நான் கொள்கையை வகுக்கிறேன், பேசுகிறேன், தத்துவம் ஆக்குகிறேன்; அடுத்த கணம் ஏதோ ஒன்று எனக்கு எதிராக நடக்கிறது, அவ்வளவுதான், என்னை மீறிக் கோபம் வந்துவிடுகிறது. சிறியவனான என்னைத் தவிர இந்தப் பிரபஞ்சத்தில் வேறொன்றும் இருப்பதாகவே எனக்கு நினைவு இருப்பதில்லை. 'நான் ஆன்மா, இந்த அற்ப விஷயத்தால் ஆவதென்ன? நான் ஆன்மா' என்ற எண்ணமும் மறந்து போகிறது, எல்லாம் என்னுடைய விளையாட்டு என்பதை மறந்து விடுகிறேன், கடவுளை மறந்து விடுகிறேன், சுதந்திரத்தையும் மறந்து விடுகிறேன்.

சுதந்திரத்தின் பாதை வாள்முனைபோல் கூர்மையானது, நீண்டது, துன்பம் நிறைந்தது, எளிதில் கடக்க முடியாதது. ரிஷிகள் இதை மீண்டும்மீண்டும் கூறியிருக்கின்றனர்.[1] பல வீனங்களோ தோல்விகளோ நம்மைக் கட்டுப்படுத்தாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். 'எழுந்திருங்கள், விழித்திருங்கள்,

---

1. க்ஷுரஸ்ய தாரா நிசிதா துரத்யயா துர்கம் பதஸ்தத் கவயோ வதந்தி ।
—கடோபநிடதம், 1. 3. 14.

லட்சியத்தை அடையும்வரையில் நிற்காதீர்கள்' என்று உபநிடதங்கள் முழங்குகின்றன. வாளின் முனைபோல் கூர்மையாக இருப்பினும், நீண்டதாக தொலைவில் உள்ளதாக கடினமானதாக இருந்தாலும், அப்போது அந்தப் பாதையை நாம் கடப்பது நிச்சயம். அப்போது மனிதன் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் தலைவன் ஆகிறான்.

நம்முடைய துன்பங்களுக்காகப் பிறர்மீது குற்றம் சாட்டுவதில் பயன் என்ன? அதற்கு நம்மை நாமே நொந்துகொள்ள வேண்டும். அமுதத்தை நாடுபவனுக்கு இருள்கிண்ணத்தில் நஞ்சா கிடைக்கும்? அமுதம் இருக்கவே செய்கிறது, பாடுபடுகின்ற ஒவ்வொருவருக்கும் அது கிடைக்கிறது. 'எல்லா நெறிகளையும் போராட்டங்களையும் விட்டுவிடு. என்னையே தஞ்சமாக அடை. நான் உன்னை அக்கரை சேர்க்கிறேன், பயப்படாதே!' என்று பகவானே சொல்கிறார்.[1] உலகின் எல்லா மத நூல்களிலும் இதே குரலை நாம் கேட்கிறோம். அதே குரல்தான் 'உமது சித்தம் பரலோகத்தில் செய்யப்படுவதுபோல் பூலோகத்திலும் செய்யப்படுவதாக' என்றும் கற்பிக்கிறது. ஏனெனில், 'அரசும் ஆற்றலும் பெருமையும் என்றென்றும் உம்முடையவை.'

இது கடினம், மிகமிகக் கடினம். 'எம்பெருமானே, இந்தக் கணமே உன்னைத் தஞ்சம் அடைகிறேன்; உனது அன்பின் பொருட்டு எல்லாவற்றையும் தியாகம் செய்கிறேன். நல்லவற்றையும் சிறந்தவற்றையும் உனது பலிபீடத்தில் சமர்ப்பிக்கிறேன். எனது பாவங்கள், எனது துயரங்கள், எனது நற்செயல்கள், தீய செயல்கள் அனைத்தையும் உனக்கு அர்ப்பணம் செய்கிறேன். ஏற்பாய்! நான் உன்னை மறவேன்' என்று சொல்லிக் கொள்கிறேன். 'உமது சித்தம் நிறைவேறட்டும்' என்று ஒரு கணம் சொல்கிறேன்; அடுத்த கணம் எனக்கு ஏதோ நேர்கிறது, உடனே கோபத்தால் கொதித்தெழுகிறேன்.

உலகில் உள்ள எல்லா மதங்களுக்கும் குறிக்கோள் ஒன்றே, ஆனால் ஆச்சாரியர்களின் மொழிகள் வேறுபடுகின்றன. இந்தப் பொய்-'நான்' என்பதைக் கொல்ல முயற்சி செய்ய வேண்டும், அப்போதுதான் உண்மை-'நான்' ஆகிய இறைவன் ஆட்சி புரிவார். 'உங்கள் கடவுளாகிய நான் ஒரு பொறாமைக் கடவுள். நீங்கள் என் முன்னால் வேறு தெய்வங்களைத் தொழக் கூடாது' என்று யூதர்களின் நூல்கள் கூறுகின்றன. அங்கே ஒரு கடவுள்

---

1. கீதை, 18. 56.

மட்டுமே இருப்பார். 'நான் இல்லை, நீயே' என்று கூற வேண்டும், கடவுளைத் தவிர அனைத்தையும் துறக்க வேண்டும். அவர், அவர் மட்டுமே ஆள வேண்டும்.

ஒருசமயம் நாம் மிகவும் போராடுகிறோம், அடுத்த கணம் கால் சறுக்கி விடுகிறது. உடனே அன்னையை நோக்கிக் கைகளை நீட்டுகிறோம், நாம் தனியே நிற்க முடியாது என்பதை உணர் கிறோம்.

வாழ்க்கை ஒரு முடிவற்ற நூல், அதில் ஓர் அத்தியாயம்தான் 'உமது சித்தம் நிறைவேறட்டும்' என்பது. எல்லா அத்தியாயங் களையும் உணராமல் முழு நூலையும் நாம் அறிய இயலாது. 'உமது சித்தம் நிறைவேறட்டும்'—ஆனால் வஞ்சக மனம் ஒவ் வொரு கணமும் இதை எதிர்த்துப் போராடுகிறது. ஆனாலும் கீழான நான் என்பதை வெற்றிகொள்ள வேண்டுமானால் இதை மீண்டும்மீண்டும் சொல்லியே ஆக வேண்டும். வஞ்ச கனுக்குக் கைகட்டி நிற்பதால் உய்ய முடியுமா? வஞ்சகத்தைத் தவிர எந்தத் தீய செயலுக்கும் உய்வு உண்டு. ஆனால் நாம் வஞ்சகர்கள் என்று குற்றம் சாட்டப்பட்டு நிற்கிறோம்—நமது உயர் ஆன்மாவின் குரலுக்குச் செவிசாய்க்க மறுக்கும்போது நாம் நமது ஆன்மாவை வஞ்சித்தவர்கள், அன்னையின் மகிமையை வஞ்சித்தவர்கள் ஆகிறோம். எது வந்தாலும் வரட்டும், எம்பெருமானின் சங்கல்பத்திற்கே நமது உடல், மனம் அனைத்தையும் ஒப்படைத்துவிட வேண்டும். 'உமது சித்தம் நிறைவேறட்டும்' என்று ஒரு முறைக்கு மேல் சொன்னால் அது பாவம் என்று ஓர் இந்துத் தத்துவ ஞானி கூறியிருக்கிறார். 'உமது சித்தம் நிறைவேறட்டும்' என்று ஒரு முறை சொன்னால் போதுமே, ஏன் இரண்டு முறை சொல்ல வேண்டும்? நல்லது. நல்லதுதான். ஒருமுறை சொன்ன பிறகு அதை திரும்பப் பெறு வதில்லை. 'உமது சித்தம் பரலோகத்தில் செய்யப்படுவதுபோல் பூலோகத்திலும் செய்யப்படுவதாக, ஏனெனில் அரசும் ஆற்றலும் பெருமையும் என்றென்றும் உம்முடையவை.' ❑

# 8. மதத்தின் அடிப்படைகள்[1]

உலக மதங்களை எல்லாம்—அவை பழையனவாக இருந்தாலும் புதியனவாக இருந்தாலும், வாழ்பவையாக இருந்தாலும் மறைந்துவிட்டவை ஆனாலும்—என் மனம் கீழே கண்ட நான்கு பிரிவுகள் வாயிலாக நன்றாக அறிந்துகொள்கிறது.

1. சின்னங்கள் (Symbology): மனிதனின் மத உணர்வைப் பாதுகாக்கவும் வளர்க்கவும் பல்வேறு புற உதவிகளைக் கையாள்தல்.

2. வரலாறு: இது ஒவ்வொரு மதமும் ஒப்புக்கொண்ட தெய்வீக அல்லது மானிட குருமார்களின் வாழ்க்கையால் விளக்கம் பெறுகின்ற ஒவ்வொரு மதத்திற்கும் உரிய தத்துவம். இதில் புராணங்கள் அடங்கும். குறிப்பிட்ட இனத்திற்கோ, குறிப்பிட்ட காலத்திற்கோ உரிய புராணங்கள் வேறு இனங்களுக்கும் காலங்களுக்கும் வரலாறாக இருக்கும், அவ்வாறே இருந்தது. மானிட குருமார்களின் விஷயங்களிலும் அவர்களது வரலாற்றில் பெரும் பகுதி, அவர்களது சந்ததியினரால் புராணம் என்றே கொள்ளப்பட்டது.

3. தத்துவம்: ஒவ்வொரு மதத்திலும் உள்ள அறிவுபூர்வமான பகுதி.

4. இறையுணர்வு (Mysticism): புலனறிவையும் பகுத்தறிவையும் கடந்த மேலான ஒன்று உண்டு என்பதை வலியுறுத்துதல். குறிப்பிட்ட நபர்களோ எல்லோருமோ அதைக் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் உணர்ந்திருக்கிறார்கள். இந்தப் பிரிவு மேலே கண்ட மூன்று பிரிவுகளிலும் ஊடுருவி நிற்கிறது.

உலகின் எல்லா மதங்களும்—அவை கடந்தகால மதங்களானாலும், தற்கால மதங்களானாலும்—மேற்கண்ட பிரிவுகளுள் ஒன்றையோ பலவற்றையோ தழுவியதாக இருக்கும்; நன்றாக வளர்ச்சியுற்ற மதங்கள் இந்த நான்கையும் உடையதாக இருக்கும்.

---

1. முடிவு பெறாத இந்தக் கட்டுரை மிஸ் எஸ். இ. வால்டோவின் கோப்புகளில் கிடைத்தது.

நன்றாக வளர்ச்சியுற்ற மதங்களுள் சிலவற்றிற்கு அடிப்படை சாஸ்திரங்கள் இல்லை, அவை மறைந்துபோயின. சாஸ்திரங்களை அடிப்படையாகக் கொண்ட மதங்கள் இன்றும் வாழ்கின்றன. எனவே உலகின் இன்றைய சிறந்த மதங்கள் எல்லாம் சாஸ்திரங்களை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவையே.

வேத மதத்திற்கு வேதங்கள் அடிப்படை. (இதைத் தவறாக 'இந்து மதம்' அல்லது 'பிராமண மதம்' என்பர்.)

அவெஸ்தா மதத்திற்கு 'அவெஸ்தா'.

மோசஸ் மதத்திற்குப் பழைய ஏற்பாடு.

புத்த மதத்திற்குத் திரிபிடகம்.

கிறிஸ்தவ மதத்திற்குப் புதிய ஏற்பாடு.

முகமதிய மதத்திற்குக் குரான்.

சீனாவில் உள்ள தாவோசே மற்றும் கன்ஃபூசிய மதங்களுக்கு அடிப்படை நூல்கள் உள்ளன. இந்த மதங்கள் புத்த மதத்திலிருந்து பிரிக்க முடியாதபடி அதனுடன் பின்னிப் பிணைந்திருப்பதால் இவற்றைப் புத்த மதத்துடன் சேர்த்தே கொள்ள வேண்டும்.

ஓர் இனத்திற்கே உரிய மதம் என்று எந்த மதத்தையும் உறுதியாகக் குறிப்பிடுவதற்கு இல்லை. என்றாலும் மேற்கண்டவற்றுள் வேத மதமும், மோசஸ் மதமும், அவெஸ்தா மதமும் ஆரம்பத்தில் எந்தெந்த இனங்களுக்கு உரியனவாக இருந்தனவோ அப்படியே இன்றும் இருக்கின்றன. ஆரம்பத்திலிருந்தே புத்த மதமும் கிறிஸ்தவ மதமும் முகமதிய மதமும் பரவுகின்ற மதங்களாக இருக்கின்றன.

உலகத்தைத் தங்களுடையதாக்கிக் கொள்வதற்காக பௌத்தர்களும் கிறிஸ்தவர்களும் முகமதியர்களும் போராடுகின்றனர். இந்தப் போராட்டத்தில் இன மதங்களும் கலந்தேயாக வேண்டும்; அதைத் தவிர்க்க முடியாது. இந்த இன மதங்களும், பரவுகின்ற ஒவ்வொரு மதமும் பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்து, தெரிந்தோ தெரியாமலோ சூழ்நிலைகளின் மாறுபாடுகளுக்கு ஏற்ப, பெரிய மாற்றங்களுக்கு உள்ளாகி இருக்கின்றன. மனித இனம் முழுமைக்கும் உரிய ஒரே மதமாக இருப்பதற்கு எந்த மதத்திற்கும் தகுதி இல்லை என்பதை இந்த உண்மை காட்டுகிறது. ஒவ்வொரு மதமும் அது தோன்றிய இனத்திற்கே உரிய சில சிறப்பியல்புகளின் விளைவே ஆகும்; பின்னர் அந்தச் சிறப்பியல்புகளை வளர்ப்பதற்கும் காப்பதற்கும் அந்த மதமே காரண

மாக அமைந்தது. ஆகவே எந்த மதமும் மனிதர்கள் அனைவரின் இயல்புக்கு ஏற்றதாக அமைய முடியாது. அது மட்டும் அல்ல, ஒவ்வொரு மதத்திலும் எதிர்மறை விஷயம் இருக்கிறது. ஒவ்வொரு மதமும் மனித இயல்பின் ஒரு குறிப்பிட்ட பகுதியை வளர்க்கிறது; அந்த மதம் எந்த இனத்திலிருந்து தோன்றியதோ, அந்த இனத்திடம் இல்லாத மற்ற மனித இயல்புகளை அடக்கி விடுகிறது. ஆதலால் ஒரு மதம் உலகம்தழுவிய மதமாவது ஆபத்து, அது மனிதனைக் கீழ்நிலைக்கே தள்ளும்.

உலகம்தழுவிய அரசியல் அரசாங்கம், உலகம்தழுவிய மத அரசாங்கம் என்ற இரண்டு கனவுகள் மனித சமுதாயத்தில் நெடுங்காலமாக இருந்து வருகிறது. ஆனால் மாபெரும் சக்கர வர்த்திகள்கூட, அவர்கள் உலகத்தில் ஒரு சிறு பகுதியை வெல் வதற்கு முன்பே, அவர்களது நாடுகள் பிளவுற்று அவர்களின் திட்டங்கள் மீண்டும்மீண்டும் தவிடுபொடியானதையே உலக வரலாறு நமக்குக் காட்டுகிறது. அதுபோல் ஒவ்வொரு மதமும் தன் குழந்தைப் பருவத்தைக் கடப்பதற்கு முன்னரே பல பிரிவு களாகப் பிரிந்து போய்விட்டது.

என்றாலும் சமுதாயத் துறையிலும் அரசியல் துறையிலும் மனித குலத்தில் ஒருமை வேண்டும், அதேவேளையில் அங்கே எண்ணற்ற வேறுபாடுகளுக்கும் இடம் இருக்க வேண்டும் என்பதுதான் உண்மையிலேயே இயற்கையின் திட்டம் என்று தோன்றுகிறது. மிகக் குறைந்த எதிர்ப்பு உள்ள பாதையில் செயல்படுவதே செயல்புரிவதற்கான சிறந்த வழி என்றால், ஒவ்வொரு மதமும் பல்வேறு பிரிவுகளாகப் பிரிந்துபோவதே மதத்தைக் காப்பாற்றுவதற்கான வழி என்று எனக்குத் தோன்று கிறது. இது அந்த மதம் இறுகிப்போய் விடாதபடி காப்பாற்று கிறது. நாம் எந்த வழியில் செயல்பட வேண்டும் என்பது இதனால் தெரிய வருகிறது.

எனவே மதப் பிரிவுகளை அழிப்பது நோக்கம் அல்ல, பெருக்குவதே நோக்கம் என்று தோன்றுகிறது. இறுதியில் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனிப்பிரிவாகிவிட வேண்டும். மேலும், இருக்கின்ற மதங்கள் எல்லாம் கலந்து ஒரு மாபெரும் தத்துவம் ஆகும்போது சமரசப் பின்னணி கிடைக்கும். புராணங் களிலும் சடங்குகளிலும் சமரசம் என்பது ஒருபோதும் ஏற் படாது. ஏனெனில் நாம் நுண்மையான கருத்துக்களைவிட தூலக் கருத்துக்களில்தான் மிகவும் மாறுபடுகிறோம். ஒரே தத்துவத்தை ஒப்புக்கொள்ளும்போதுகூட, ஒவ்வொருவரும்

தத்தம் லட்சியத்திற்குரிய குருவே சிறந்தவர் என்று கூறு வதிலாவது மாறுபட்டே விளங்குவார்கள்.

ஆகவே இத்தகைய கலப்பால் தத்துவ ஐக்கியம் தோன்றும். இந்தத் தத்துவ ஐக்கியம் மதங்களின் சமரசத்திற்கு அடிப்படை யாக விளங்கும். ஒவ்வொருவரும் தன் குருவைத் தேர்ந்தெடுப்ப திலும் சமரசத்திற்கு விளக்கமாக அமைகின்ற முறைகளில் எதை வேண்டுமானாலும் பின்பற்றுவதிலும் ஒருவர் தன் விருப்பம்போல் செய்துகொள்வதற்கு இந்தத் தத்துவ ஐக்கியம் உரிமையை வழங்குகிறது. இத்தகைய கலப்பு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இயல்பாகவே நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. ஆனால் மதப் பகையால்தான் இந்தக் கலப்பு வருத்தமுறும் அளவிற்குத் தடைபட்டிருக்கிறது.

ஆகவே நாம் பகைமையை விட்டு, வெவ்வேறு இனங்களின் இடையே கருத்துப் பரிமாற்றமும் பிரச்சாரகர்களின் பரிமாற்ற மும் ஏற்பட உதவி செய்ய வேண்டும். அதன்மூலம் எல்லா மதங் களைப் பற்றியும் மனிதர்கள் அனைவரும் அறியும்படிச் செய்ய வேண்டும். ஆனால் இதில் நாம் பிறரை இகழக் கூடாது, பிறரது குற்றங்களை எடுத்துக் காட்டுவதன்மூலம் வயிறு வளர்க்கக் கூடாது; மாறாக பிறருக்கு உதவ வேண்டும், பிறரிடம் பரிவு காட்ட வேண்டும், பிறரும் ஒளிபெறச் செய்ய வேண்டும். இந்த விஷயத்தில் கி. மு. இரண்டாம் நூற்றாண்டின் புத்த மதச் சக்கரவர்த்தியாகிய அசோகர் காட்டிய பாதையைப் பின்பற்ற வேண்டும்.

தத்துவ அறிவு என்பது இன்று நாம் பௌதிக அறிவு என்று கூறுகின்றோமே அதற்கு எதிரானது என்று உலக மெங்கும் ஒரு கூக்குரல் எழுந்து பரவிக் கொண்டிருக்கிறது. தத்துவ அறிவையும் மறு வாழ்வையும் மறுக்கவும், இந்தப் பிறவியும் இந்த உலகமுமே எல்லாம் என்பதை நிலைநாட்டவும் எழுந்துள்ள முயற்சி இன்று விரைந்து ஒரு நாகரீகமாக மாறிக் கொண்டு வருகிறது. இதற்கு மதப் பிரச்சாரகர்களும் ஒருவர்பின் ஒருவர் விரைவாக அடிமையாகி வருகின்றனர். சிந்திக்கும் திறனற்ற பெரும்பான்மையினர் புறப் பகட்டில் மயங்குவது இயல்பு; ஆனால் விஷயங்களை இன்னும் சற்று அறியவேண்டிய நிலையில் உள்ளவர்கள்—அவர்கள் தங்களைத் தத்துவ ஞானிகள் என்று கூறிக்கொள்வது வேறு விஷயம்—அர்த்தமற்ற வழிமுறைகளை மேற்கொள்ளும்போதுதான் வருத்தமாக உள்ளது.

நமது புலன்கள் தங்களுக்குரிய இயல்புகளுடன் இருக்கும் வரையில் நமது மிகுந்த நம்பிக்கையான வழிகாட்டிகள்; அவற்றின்மூலம் நாம் பெறுகின்ற உண்மைகளே மனித அறிவாகிய கட்டிடத்தின் அஸ்திவாரமாக அமைகின்றன. இதனை யாரும் மறுப்பதில்லை. ஆனால் மனித அறிவு அனைத்தும் புலனறிவினால் மட்டுமே ஏற்படுகிறது, வேறு எதனாலும் ஏற்படுவதில்லை என்று சொன்னால் அதை நாங்கள் மறுக்கிறோம். பௌதீக விஞ்ஞானங்கள் என்றால் புலனறிவை மட்டுமே அடிப்படையாகக் கொண்ட அறிவுத் தொகுதி, வேறு எதனாலும் அமையாதவை என்பது பொருளாகுமானால் அத்தகைய விஞ்ஞானம் ஒருபோதும் இருந்ததில்லை, இருக்கப் போவதும் இல்லை என்று நாங்கள் சொல்கிறோம். மேலும், புலனறிவு ஒன்றைக்கொண்டே அமைக்கப்படுகின்ற எந்த அறிவு முறையும் ஒருபோதும் ஒரு விஞ்ஞானம் ஆகாது.

புலன்கள் அறிவுக்கான ஆதாரங்களைத் திரட்டித் தருகின்றன, ஒற்றுமைகளையும் வேற்றுமைகளையும் கண்டு பிடித்துத் தருகின்றன என்பது உண்மைதான். ஆனால் அவற்றின் வேலை இதுவரைதான். முதலாவதாக, தகவல்களைச் சேகரிப்பது என்பது இடம், காலம் என்பவற்றால் கட்டுப் படுத்தப்பட்டது. இரண்டாவது, கருத்துக்களைத் தொகுப்பதும், பொதுமைப்படுத்துவதும் சில தனிக் கருத்துக்களின் அடிப்படை இல்லாமல் முடியாத காரியமாகும். பொதுமை உயர்ந்ததாக இருக்கின்ற அளவிற்கு, அடிப்படையும் தனித் தத்துவக் கருத்தாக இருக்கும். ஜடப்பொருள், ஆற்றல், மனம், நியதி, காரணகாரிய விதி, காலம், இடம் போன்றவை மிக உயர்ந்த தனி நுட்பக் கருத்துக்களாகும். வேறுவிதமாகச் சொல்வதானால் அவை முற்றிலும் தத்துவக் கருத்துக்கள். இவற்றுள் ஒன்றைக்கூட யாரும் எப்போதும் புலன்களால் உணர்ந்ததில்லை. என்றாலும் இந்தத் தத்துவக் கருத்துக்கள் இல்லாமல் எந்தப் பௌதீக உண்மையையும் அறிய முடியாது.

அதனால்தான் இயக்கத்தை ஆற்றலுடனும், உணர்ச்சிகளை ஜடப்பொருளுடனும், புற மாற்றங்களை நியதியுடனும், சிந்தனை மாற்றங்களை மனத்துடனும், தனித்த ஓர் ஒழுங்கு முறையைக் காரணகாரிய விதியுடனும், காலத்துடன் இணைந்துள்ள ஒழுங்குமுறையை ஒரு நியதியுடனும் தொடர்புபடுத்திக் காட்டும்போதுதான் அதை உணர முடிகிறது. என்றாலும் ஜடப்பொருளையோ, சக்தியையோ, விதியையோ, காரணகாரிய

நியதியையோ, காலத்தையோ, இடத்தையோ யாரும் கண்டதும் இல்லை, கற்பனையில் சிந்தித்ததும் இல்லை. இந்தக் கருத்துக்கள் எல்லாம் நுட்பக் கருத்துக்கள் என்ற நிலையில் இல்லவே இல்லை; அவை கருத்துத் தொகுப்புகளின் பண்புகளே, அந்தத் தொகுப்புகளிலிருந்து வேறானவை அல்ல, வேறாகப் பிரிக்கக் கூடியவை அல்ல என்று கூறலாம்.

தனிக்கருத்துக்கள் இருக்க முடியுமா முடியாதா? பொதுமைத் தொகுதிகளைத் தவிர வேறு ஏதாவது இருக்கிறதா? இந்தக் கேள்விகள் ஒருபுறம் இருப்பது உண்மை. ஆனால் ஜடப்பொருள்-சக்தி, காலம்-இடம்-காரண காரியம், விதி-மனம் போன்றவை தனிக் கருத்துக்களாகவே, தொகுதிகளோடு எந்தத் தொடர்பும் இல்லாதவையாகவே கருதப்படுகின்றன. அப்படிக் கருதும்போதுதான் புலன்களால் அறியப்படுகின்ற விஷயங்களின் விளக்கங்களாக இவை அமைகின்றன. அதாவது இந்தக் கருத்துக்கள் சரியானவை என்பதைத் தவிர இவற்றைப்பற்றி இரண்டு உண்மைகளைக் காண்கிறோம். முதலாவது இவை தத்துவபரமானவை; இரண்டாவது இவை தத்துவக் கருத்துக்கள் என்ற நிலையில் மட்டுமே பௌதீகத்தை விளக்க முடியும், வேறு நிலையில் முடியாது.

புறம் அகத்தை ஒத்திருக்கிறதா அல்லது அகம் புறத்தை ஒத்திருக்கிறதா? ஜடப்பொருள் மனத்தை ஒத்திருக்கிறதா, அல்லது மனம் ஜடப்பொருளை ஒத்திருக்கிறதா? சூழ்நிலை மனத்தை உருவாக்குகிறதா அல்லது மனம் சூழ்நிலையை உருவாக்குகிறதா? இவை மிகப் பழைய கேள்விகள். அன்று போலவே இன்றும் புதியனவாக, தீவிரமாக இருக்கின்றன. இவற்றுள் எது முந்தியது, எது காரணம், எது காரியம் போன்ற கேள்விகள் ஒரு புறம் இருக்கட்டும்; அதாவது ஜடப்பொருளின் காரணம் மனமா, மனத்தின் காரணம் ஜடப்பொருளா என்ற கேள்விக்கு விடை காண முயல்வதை இப்போது விட்டுவிட்டுப் பார்த்தால், புறம் அகத்தால் ஆக்கப்பட்டாலும் சரி, படா விட்டாலும் சரி, நாம் அவற்றை அறிய வேண்டுமானால் புறம் அகத்தை ஒத்திருக்க வேண்டும் என்பது தெளிவாகிறது. அக உலகத்திற்குக் காரணம் புற உலகம் என்று வைத்துக் கொண்டாலும், புற உலகம் நமது மனத்திற்குக் காரணமான ஒன்று என்ற நிலையில் அது அறியப்படாதது, அதை நாம் அறிய முடியாது. ஏனெனில் தன் இயல்புக்கு ஏற்றதாகவோ, தன் இயல்பைப் பிரதிபலிப்பதாகவோ புற உலகம் இருக்கும்

அளவுக்கே அதனை மனத்தால் அறிய இயலும். எது ஒரு பொருளின் பிரதிபலிப்பாக இருக்கிறதோ, அதுவே அந்தப் பொருளின் காரணமாக இருக்க முடியாது. இருப்புத் தொகுதி யில் மனம் பிரித்தறிந்த பகுதி நிச்சயமாக மனத்திற்குக் காரணம் ஆக முடியாது; ஏனெனில் அந்தப் பகுதியே மனத்தினாலும் மனத்தின் வாயிலாகவும் தானே அறியப்படுகிறது!

ஆகவே ஜடப்பொருளிலிருந்து மனத்தை உருவாக்குவது முடியாத காரியம். அப்படிப் பேசுவதே அபத்தம். ஏன்? ஏனெனில் எண்ணம் மற்றும் உயிரின் பண்புகள் இல்லாமல் புறத் தோற்றம் என்ற பண்பு கொண்ட இருப்புப் பகுதியே ஜடப்பொருள். புறத்தோற்றம் என்ற பண்பு இல்லாமல் எண்ணம் மற்றும் உயிரின் பண்புகள் கொண்ட இருப்புப் பகுதியே மனம். எனவே மனத்திலிருந்து ஜடப்பொருள் தோன்று கிறது என்றோ, ஜடப்பொருளிலிருந்து மனம் தோன்றுகிறது என்றோ நிரூபிக்க வேண்டும் என்றால் ஒவ்வொன்றிலிருந்தும் எந்தப் பண்பை நாம் முன்பே எடுத்து விட்டோமோ, அதை அவற்றிலிருந்து மீண்டும் எடுப்பது என்பதாகும். ஆகவே மனத்திற்குக் காரணம் எது, ஜடப்பொருளுக்குக் காரணம் எது என்றெல்லாம் அடித்துக் கொள்வது வெறும் வார்த்தை ஜாலமே தவிர வேறல்ல.

தவிரவும், இந்த வாதப் பிரதிவாதங்கள் முழுவதிலும் மனம், ஜடப்பொருள் என்ற இரண்டு சொற்களுக்கும் வெவ் வேறு பொருளைக் கற்பிக்கின்ற தவறு, ஏதோ விதி போலவே கொள்ளப்படுகிறது. மனம் என்ற சொல் சிலவேளைகளில் ஜடப்பொருளுக்கு மாறான, புறம்பான ஒன்று என்ற பொருளிலும், சிலவேளைகளில் மனமும் ஜடப்பொருளும் சேர்ந்த ஒன்று அதாவது அதன் இரண்டு பகுதிகளே அகமும் புறமும் என்ற பொருளிலும் பயன்படுத்தப்படுகிறது. ஜடப் பொருள் என்ற சொல்லும் சிலவேளைகளில் நாம் புலன்களால் அறிகின்ற ஒரு புறப்பொருள் என்ற குறுகிய பொருளிலும், சிலவேளைகளில் புற, அக உலகங்கள் அனைத்திற்கும் காரண மான ஒன்று என்ற பொருளிலும் பயன்படுத்தப்படுகிறது.

'எனது சோதனைக்கூடத்தில் இருக்கின்ற மூலகங்களைக் கொண்டு மனத்தைப் படைத்துவிடுவேன்' என்று கூறி ஜடப் பொருள்வாதி (Materialist) கருத்தியல்வாதியைப் (Idealist) பயமுறுத்துகிறான். அதேவேளையில் எல்லா மூலகங்களையும் அணுக்களையும்விட உயர்ந்த ஒன்றை, அதாவது புறத்

தோற்றத்திற்கும் அகத் தோற்றத்திற்கும் காரணமாக இருக்கின்ற, அவன் ஜடப்பொருள் என்று அழைக்கின்ற ஒன்றை வெளிப்படுத்துவதற்கும் போராடிக் கொண்டிருக்கிறான். மாறாகக் கருத்தியல்வாதி, ஜடப்பொருள்வாதி கூறுகின்ற மூலங்களையும் அணுக்களையும் தனது எண்ணத்திலிருந்தே படைத்துக்கொள்ள விரும்புகிறான்; அதேவேளையில் மனத்திற்கும் ஜடப்பொருளுக்கும் எது காரணமாக இருக்கிறதோ அதன் கணநேரக் காட்சிகளையும் பெற விரும்புகிறான்; அதையே அவன் கடவுள் என்று அழைக்கிறான். அதாவது ஒருவன் பிரபஞ்சத்தின் ஒரு பகுதியைக் கொண்டு, அதாவது புறப் பகுதியைக் கொண்டு முழுப் பிரபஞ்சத்தையும் விளக்க விரும்புகிறான். மற்றவன் வேறொரு பகுதியை, அதாவது அகப் பகுதியைக் கொண்டு விளக்க விரும்புகிறான். இந்த இரண்டு முயற்சிகளும் முடியாத காரியங்கள். மனமும் ஜடப்பொருளும் ஒன்றையொன்று விளக்க முடியாது. மனத்தையும் ஜடப்பொருளையும் தழுவி நிற்கின்ற ஒன்றில்தான் அந்த விளக்கத்தைக் காண முடியும்.

எண்ணமே இல்லாத காலம் ஒன்று உண்டு என்று வைத்துக் கொண்டால், நாம் அறிந்துள்ள ஜடப்பொருளும் நிச்சயமாக இருந்திருக்க முடியாது; எனவே மனம் இல்லாமல் எண்ணம் இருக்க முடியாது என்று வாதிக்கலாம். இதற்கு மாறாக, அனுபவம் இல்லாமல் அறிவு ஏற்பட முடியாது, அனுபவம் ஏற்படுவதற்குப் புற உலகம் வேண்டும்; எனவே ஜடப்பொருள் இல்லாமல் நாம் அறிந்துள்ள மனம் இருக்க முடியாது என்றும் சொல்ல முடியும்.

மனம், ஜடப்பொருள் இரண்டிற்கும் ஆரம்பம் இருந்தது என்பதும் சரியாகாது. ஒரு பொதுமையைக் கண்டுபிடிப்பதே அறிவின் சாரம். ஒத்த தன்மைகள் ஏற்கனவே இல்லாமல் பொதுமை காண்பது சாத்தியமில்லை. ஒப்பிட்டுப் பார்ப்பது கூட முன் அனுபவம் இல்லாமல் முடியாத காரியம். ஆகவே அறிவு என்பது முன்னறிவு இல்லாமல் சாத்தியமில்லை. முன்னறிவு இருக்க வேண்டுமானால் எண்ணமும் ஜடப் பொருளும் இருந்தாக வேண்டும். இரண்டிற்கும் ஆரம்பம் இல்லை.

புலன்களால் அறியப்படுகின்ற தகவல்கள் ஒருங்கிணைவதற்கான இடம் ஏதோ ஒன்று இல்லாமல், பொதுமை அதாவது புலனறிவுகளின் சாரம் என்பது சாத்தியமில்லை. சித்திரம்

எழுதச் சுவர் வேண்டும். அதுபோல் புறஉலகைப் பற்றிய நமது புலனறிவுகள் ஓரிடத்தில் ஒருங்கிணைந்தால்தான் உலகைப் பற்றிய ஒரு கருத்தை நாம் உருவாக்க முடியும். எண்ணம் அல்லது மனம்தான் அந்தச் சுவர் என்றால் அதற்கு வேறொரு பின்னணி அவசியமாகிறது. மனம் என்பது ஓர் ஒருமை அல்ல; அது பல்வேறு உணர்ச்சிகளாலும் சங்கல்பங்களாலும் ஆன ஒரு தொடர். எனவே அது அல்லாத ஓர் ஒருமைப் பின்னணி அதற்குத் தேவைப்படுகிறது. இங்கே எல்லா ஆராய்ச்சியும் நின்றேயாக வேண்டும், ஏனெனில் இங்கே ஓர் உண்மையான ஒருமை காணப்பட்டு விட்டது. இனிமேலும் பகுக்க இயலாத ஒன்று கிடைக்கும் வரையில் ஒரு கூட்டுப்பொருளைப் பகுத்து ஆராய்வதை நிறுத்த முடியாது. எண்ணம், ஜடப்பொருள் இரண்டிற்குமான அத்தகைய ஒருமையை நமக்குத் தருகின்ற ஒன்று, அனைத்தைப் பொறுத்தவரையிலும் பகுக்க முடியாத இறுதியே அடிப்படையாக இருக்க வேண்டும். ஏனெனில் அதை மீண்டும் பகுக்க முடியாது. புற, அக அறிவுகள் அனைத்திற்குமான பகுப்பு ஆராய்ச்சி இதில் அடங்கியிருப்பதால் மேலும் ஓர் பகுப்பு அவசியமும் இல்லாமல் போகிறது.

நாம் இதுவரையில் செய்த ஆராய்ச்சியின் பலனாக மனத்தின் செயல்பாடுகள், ஜடப்பொருளின் தோற்றங்கள், இந்த இரண்டும் செயல்படுகின்ற அப்பாற்பட்ட ஒன்று இவற்றையெல்லாம் அறிகிறோம்.

அப்பாற்பட்ட அந்தப் பொருள் புலனறிவில் அடங்கியதல்ல; அது நியாயபூர்வமான ஒரு தேவை. அதனுடைய விளக்க இயலாத இருப்பின் உணர்ச்சி நமது புலனறிவுகள் அனைத்திலும் ஊடுருவி நிற்கிறது. நமது பகுத்தறிவு, நமது பொதுமைப் போக்கு என்ற இரண்டிற்கும் உண்மையாக நாம் நடந்துகொள்ள வேண்டும் என்னும் அவசியம் இருக்கிறதே, அதுவும் அந்த அப்பாற்பட்ட பொருளை ஊர்ஜிதம் செய்யவே செய்கிறது.

மனத்தின் செயல்பாடுகள், புறத் தோற்றங்கள் இந்த இரண்டிற்கும் அப்பாற்பட்ட ஒரு பொருளையோ, ஒரு நபரையோ கற்பிப்பதற்கு எந்த அவசியமும் இல்லை; இந்த இரண்டையும் மட்டுமே நாம் அறிகிறோம், அவற்றை விளக்க அவற்றிற்கு அப்பாற்பட்ட எதுவும் தேவை இல்லை. புலன்களுக்கு அப்பால் எதையும் ஆராய இயலாது; எல்லா பொருட்களும் இயல்பாகவே அமைந்திருக்கின்ற ஒரு பொருளைப் பற்றிய நமது எண்ணம் வெறும் கற்பனை என்ற வாதம் எழலாம்.

சிந்தனையாளர்களிடையே இந்த இரண்டு பிரிவுகளும் பழங்காலத்திலிருந்தே இருந்து வருவதை நாம் காண்கிறோம். அறிவு பெற வேண்டுமானால் மனம் இயல்பாகவே கருத்துக் களையும், தனிக் கருத்துக்களையும் உருவாக்குவது தவிர்க்க முடியாத ஒன்று; நாம் எல்லா தோற்றங்களையும் கடந்து சென்று, எல்லா விதத்திலும் அறுதியான காலம், இடம், மற்றும் காரணகாரிய விதியைக் கடந்ததான ஒரு கருத்தை உருவாக்குகின்ற வரையிலும் மனத்தின் செயல்பாடு நிற்காது என்று ஒரு பிரிவு கூறுகிறது. எண்ணத்தின் செயல்பாடுகள் மற்றும் ஜடப்பொருளின் தோற்றங்கள் அனைத்தையும் பகுத் தறிவதால், அதாவது அவற்றில் தூலமாக உள்ளதை முதலில் எடுத்து, அதை நுண்ணிய பகுதிகளாகப் பிரித்து, மீண்டும் அவற்றை மிகமிக நுண்ணிய பகுதிகளாகப் பிரித்துக்கொண்டே போய் கடைசியில் அனைத்திற்கும் காரணமாக இருக்கும் ஒன்றைப் படிப்படியாக அடைவதால், இந்த அறுதிக் கருத்து உருவாகிறது என்றால் இதற்கு அப்பாலுள்ள எல்லாம் இதன் தற்காலிக மாற்றமே என்பது தெளிவு. அதனால் இந்த அறுதிக் கருத்து ஒன்று மட்டுமே உண்மை, மற்ற எல்லாம் இதன் நிழலே என்றாகிறது. எனவே உண்மை என்பது புலன்களில் இல்லை; அவற்றைக் கடந்து இருக்கிறது.

மாறாக நமது புலன்கள் நமக்கு உணர்த்துவதே இந்தப் பிரபஞ்சத்திலுள்ள ஒரே உண்மை; அப்பாற்பட்ட ஏதோ ஒன்று இருக்கிறது என்ற உணர்ச்சி நமது புலனறிவுகள் அனைத்தின் ஊடே இழையோடினாலும் அது மனத்தின் ஏமாற்றுவேலையே தவிர உண்மையல்ல என்று மற்ற பிரிவு கூறுகிறது.

மாறாத ஒன்றைப்பற்றிய கருத்தில்லாமல், மாறுகின்ற ஒன்றைப் புரிந்துகொள்ள முடியாது. மாறுகின்ற பொருளை அறிவதற்குக் காரணமாக இருக்கின்ற மாறாத பொருள் இருக் கிறதே, அதுவும் மாறுகின்ற ஒன்றுதான். இதன் மாற்றம் மாறு கின்ற பொருளின் மாற்றத்தைவிடக் குறைவாக இருப்பதால், அதை மாற்றமில்லாத பொருள் என்கிறோம்; எனவே அதையும் வேறொன்றுடன் ஒப்பிட்டேயாக வேண்டும். ஆனால் இப்படி ஒப்பிட்டுக்கொண்டே போனால் அதற்கு முடிவே இருக்காது. இது எவ்வளவுதான் முடிவற்றுத் தொடர்ந்தாலும் மாற்ற மில்லாத ஒன்று இல்லாமல் மாறுகின்ற ஒன்றை அறிய முடியாது என்னும் உண்மையே, மாறுபவை அனைத்திற்கும் பின்னணி யாக ஒன்று இருக்க வேண்டும் என்னும் ஒரு கருத்தைக்

கற்பிக்குமாறு நம்மை வற்புறுத்துகிறது. ஒரு பொருளில் ஒரு பகுதி சரி, மற்ற பகுதி சரியல்ல என்று விருப்பம்போல் கூற யாருக்கும் உரிமை இல்லை. நாணயத்தின் ஒரு பக்கம் வேண்டு மென்றால், அவன் விரும்பாவிட்டாலும் மறு பக்கத்தையும் ஏற்றேயாக வேண்டும்.

ஒவ்வோர் அசைவிலும் மனிதன் தன் சுதந்திரத்தை வலியுறுத்துகிறான். மிக உயர்ந்த சிந்தனையாளனிலிருந்து முழு மூடன் வரையில் ஒவ்வொருவனும் தான் சுதந்திரன் என்பதை அறிந்திருக்கிறான். அதேவேளையில் சிறிது சிந்தித்துப் பார்த் தால், நமது ஒவ்வொரு செயலுக்கும் நோக்கமும் நிபந்தனை களும் இருப்பதை அறிய முடியும். காரணகாரிய நியதியைக் கொண்டு ஒரு காரியத்தை விளக்குவதுபோல், ஒருவனது நோக்கங்களையும் நிபந்தனைகளையும் அறிந்தால் அவன் எத்தகைய செயலைச் செய்வான் என்பதை நாம் நிச்சயமாகக் கூற முடியும்.

இங்கேயும் அதே பிரச்சினைதான். ஒரு சிறு செடி வளர் வதோ, ஒரு கல் வீழ்வதோ காரணகாரிய நியதியுடன் எவ்வளவு தூரம் கட்டுப்பட்டிருக்கிறதோ, அதுபோல் மனிதனின் சங்கல் பமும் அந்தக் காரணகாரிய நியதியுடன் இறுக்கமாகக் கட்டுப் பட்டே இருக்கிறது. ஆனாலும் இந்தக் கட்டுப்பாடு அனைத்தின் ஊடேயும் சுதந்திரம் என்ற அழிக்க முடியாத கருத்து ஊடுருவி நிற்கிறது. இங்கும் முழுமைக் (totality) கொள்கையினர், சுதந்திரக் கருத்து வெறும் மனமயக்கம் என்றும், மனிதன் தேவைக்கும் அவசியத்திற்கும் ஏற்றபடி நடக்க வேண்டியவன் என்றும் வாதிப்பார்கள்.

இவ்வாறு சுதந்திரத்தை வெறும் மனமயக்கம் என்று மறுப்பது விளக்கம் ஆகாது என்பது ஒருபுறம். மறுபுறத்திலோ அவசியம், கட்டுப்பாடு, காரணகாரியம் போன்ற கருத்துக்கள் அறிவற்றவனின் மனமயக்கம் என்று ஏன் சொல்லக் கூடாது, எந்தக் கொள்கையானாலும் சரி, அது எந்த உண்மைகளை விளக்குகிறதோ, அவற்றிற்கு ஏற்றவண்ணம் பொருத்தமாக இருக்க வேண்டும் என்பதற்காக, பொருத்தமற்றவற்றை எல்லாம் வெட்டி எறிந்துவிட வேண்டும் என்று சொல்லுமானால், அது ஆரம்பத்திலேயே தவறாகும். ஆகவே உடம்புக்குச் சுதந்திரம் இல்லை, சங்கல்பத்திற்கும் சுதந்திரம் இல்லை; உடம்பிற்கும் மனத்திற்கும் அப்பால் சுதந்திரமான... ஒரு பொருள் இருந்தே யாக வேண்டும் என்பதை ஒப்புக்கொள்வதுதான் ஒரே வழி. ... ❑

## 9. தன் விதியை வகுப்பவன் மனிதனே

ஆற்றல்மிக்க வம்சம் ஒன்று தென்னிந்தியாவில் இருந்தது. அவ்வப்போது வாழ்ந்த பிரபலமானவர்கள் பிறந்த நேரத்தை வைத்துக் கணிக்கப்பட்ட ஜாதகங்களைத் திரட்டி வைப்பதை அந்த வம்சத்தினர் ஒரு விதியாக வைத்திருந்தார்கள். இவ்வாறு முக்கிய நிகழ்ச்சிகளைப் பற்றிய கணிப்புகள் கிடைத்தன. பின்னர் நிகழ்கின்ற சம்பவங்களை அவற்றுடன் ஒப்பிட்டுப் பார்த்தார்கள். இப்படி ஆயிரம் ஆண்டுகாலம் செய்தபோது சில ஒற்றுமைகளைக் கண்டார்கள். அந்த ஒற்றுமைகளைக் கொண்டு பொது விதிகளை வகுத்து, குறித்து வைத்து ஒரு பெரிய நூலை உருவாக்கினார்கள். இந்த வம்சம் அழிந்து போயிற்று. ஆனால் ஜோதிடர்களின் குடும்பம் வாழ்ந்து வந்தது, அந்த நூலும் அவர்களிடமே இருந்தது. ஜோதிடம் இப்படித் தோன்றி இருக்கலாம். ஜோதிடத்தின் சிறுசிறு அம்சங்களுக்கும் அளவுகடந்த முக்கியத்துவம் கொடுத்தது இந்துக்களை மிகவும் கெடுத்து விட்ட மூடநம்பிக்கைகளுள் ஒன்றாகும்.

முதலில் கிரேக்கர்கள் ஜோதிடத்தை இந்தியாவிற்குக் கொண்டு வந்தனர், இந்துக்களிடமிருந்து வானஇயலைத் தங்களுடன் கொண்டு சென்று ஐரோப்பாவிற்கு அளித்தனர் என்று நான் நினைக்கிறேன். இந்தியாவில் பழைய காலப் பீடங்கள் ஒரு குறிப்பிட்ட ஜியோமிதித் திட்டப்படிக் கட்டப் பட்டிருப்பதைக் காணலாம், நட்சத்திரங்கள் குறிப்பிட்ட இடங்களில் இருக்கும்போதுதான் சில குறிப்பிட்ட விஷயங்களைச் செய்ய வேண்டும். கிரேக்கர்கள் இந்துக்களுக்கு ஜோதிடத்தைத் தந்தனர், இந்துக்கள் அவர்களுக்கு வானஇயலைத் தந்தார்கள் என்று கருதுகிறேன்.

ஆச்சரியப்படத் தக்க விஷயங்களைக் கணித்துச் சொல்கின்ற சில ஜோதிடர்களை நான் பார்த்திருக்கிறேன். ஆனால் அவற்றை நட்சத்திரங்களோ அல்லது அது போன்றவற்றை மட்டுமோ கொண்டுதான் கணித்தார்கள் என்று நான் நம்பவில்லை. பல வேளைகளில் அது மனத்தை அறிதல்

(Mind-reading) மட்டுமே. சில வேளைகளில் சில அற்புதக் கணிப்புகள் செய்யப்பட்டன; ஆனால் பெரும்பாலான வேளை களில் வெறும் குப்பை.

லண்டனில் இளைஞன் ஒருவன் என்னிடம் வந்து, 'அடுத்த வருடம் எனக்கு என்ன நடக்கும்?' என்று கேட்பது வழக்கம். 'ஏன் அவ்வாறு கேட்கிறாய்?' என்று நான் அவனைக் கேட் டேன். 'நான் பணத்தை எல்லாம் இழந்து ஏழையாகி விட்டேன்' என்று அவன் கூறினான். பலருக்குப் பணம்தான் ஒரே கடவுள். பலவீனர்கள், அனைத்தையும் இழந்து தங்களைப் பலவீன மாக உணரும்போது, பணம் சம்பாதிப்பதற்காக எல்லாவித மான மர்மங்களையும் கையாள்கிறார்கள்; ஜோதிடத்தையும் பிறவற்றையும் நாடுகிறார்கள்.

'கோழையும் முட்டாளுமே விதி என்பான்' என்கிறது சம்ஸ்கிருதப் பழமொழி ஒன்று. ஆற்றல் மிக்கவனோ, 'என் விதியை நானே வகுப்பேன்' என்று கூறுவான். முதுமையை நெருங்குபவர்களே விதியைப்பற்றிப் பேசிக் கொண்டிருப் பார்கள். இளைஞர்கள் பொதுவாக ஜோதிடத்தை நாடு வதில்லை. ஒருவேளை நாம் கிரகங்களின் ஆற்றலுக்குக் கட்டுப் பட்டவர்களாக இருக்கலாம், அதற்காக அதைப் பெரிதாக எடுத்துக்கொள்ளக் கூடாது, 'நட்சத்திரங்களைக் கணக்கிட்டும், இவை போன்று வேறு தந்திரங்களைக் கையாண்டும் வயிறு வளர்ப்பவர்களைத் தவிர்க்க வேண்டும்' என்கிறார் புத்தர். இதுவரை பிறந்த இந்துக்களுள் உயர்ந்தவர் புத்தர், உண்மையை உணர்ந்தே அவர் அவ்வாறு கூறியுள்ளார். நட்சத்திரங்கள் வரட்டும், அதனால் என்ன தீமை ஏற்படும்? ஒரு நட்சத்திரம் என் வாழ்க்கையைக் குலைத்துவிடும் என்றால் அந்த வாழ்க்கை சல்லிக்காசுக்கும் உதவாதது. ஜோதிடமும் பிற மர்மமானவையும் பொதுவாக பலவீன மனத்தின் அறிகுறி. இத்தகைய எண்ணங்கள் உங்கள் மனத்தில் தலைதூக்கும்போது உடனே டாக்டரைப் பார்க்க வேண்டும்; நல்ல உணவும் நல்ல ஓய்வும் கொள்ள வேண்டும்.

ஒரு நிகழ்ச்சிக்கான விளக்கத்தை அதன் இயல்பிலிருந்தே பெற முடியுமானால், வெளியே ஒரு விளக்கத்தைக் காண முயல்வது முட்டாள்தனம். உலகம் தன்னைத்தானே விளக்கு மானால், அதற்கு வெளியே ஒரு விளக்கத்தைத் தேடுவது அறியாமை. மனித வாழ்க்கையில் எத்தனையோ நிகழ்ச்சிகளைக் காண்கிறீர்கள். அவற்றில் மனிதனின் ஆற்றலால் விளக்க

முடியாத ஏதேனும் உள்ளதா? எனவே நட்சத்திரங்களையும் வேறு எதையும் நாடுவதால் என்ன பயன்? எனது இப்போதைய நிலைக்கு எனது கர்மமே போதிய விளக்கமாக உள்ளது.

ஏசுவுக்கும் இது பொருந்தும். அவரது தந்தை ஒரு தச்சர் என்பது நமக்குத் தெரியும். ஏசுவின் ஆற்றலுக்கான விளக்கத்திற்கு நாம் வேறு யாரிடமும் போக வேண்டியதில்லை. சொந்த முற்பிறவிகளின் பயனே ஏசு. முற்பிறவிகள் அனைத்தும் ஒரு ஏசு உருவாவதற்கான ஆயத்தங்களாக இருந்தன. மிருக உடல்களை மீண்டும்மீண்டும் பெற்று இறுதியில் தாம் எவ்வாறு புத்தரானார் என்பதை புத்தர் சொல்லியிருக்கிறார். ஆகவே விளக்கம் பெறுவதற்காக நட்சத்திரங்களை நாடுவதால் என்ன பயன்? அவை ஏதோ சிறு ஆதிக்கத்தைச் செலுத்தலாம், ஆனாலும் அவற்றை நாடிக் கோழைகள் ஆகாமல் அவற்றைப் புறக்கணிப்பதே நமது கடமை. எனது போதனைகளுள் நான் முதலாவதாக வற்புறுத்துவது இதுவே: ஆன்ம பலவீனத்தையோ, மன பலவீனத்தையோ, உடல் பலவீனத்தையோ தருகின்ற எதையும் உங்கள் கால் விரல்களாலும் தீண்டாதீர்கள்.

மனிதனில் உள்ள இயற்கை ஆற்றலின் வெளிப்பாடே மதம். அளவிலா ஆற்றல் விசை ஒன்று இந்தச் சிறு உடலுள் சுருட்டி வைக்கப்பட்டிருக்கிறது. அந்தச் சுருள் விரிந்து கொண்டே இருக்கிறது. அது விரியவிரிய ஒன்றன்பின் ஒன்றாகப் பல உடல்களும் போதவில்லை, எனவே அந்த விசை இந்த உடல்களை எறிந்துவிட்டு, உயர்ந்த உடல்களை எடுக்கிறது. இதுவே மனிதனின் வரலாறு, மதத்தின் வரலாறு, நாகரீகத்தின் வரலாறு, அல்லது முன்னேற்றத்தின் வரலாறு. கட்டுண்டு கிடக்கும் அரக்கனான புரோமீதியஸ்[1] கட்டுக்களை அறுத்துக் கொண்டு வருகிறான். அது எப்போதும் ஆற்றலின் வெளிப்பாடு. ஜோதிடம் போன்ற விஷயங்களில் ஏதோ கடுகளவு உண்மை இருந்தாலும் அவற்றைப் புறக்கணித்தேயாக வேண்டும்.

ஒரு ஜோதிடனைப் பற்றிய பழைய கதை ஒன்று உண்டு. அவன் ஓர் அரசனிடம் சென்று, 'நீங்கள் ஆறு மாதங்களில்

---

1. கிரேக்கப் புராணத்தில் வருகின்ற ஒரு பாத்திரம். அவன் களிமண்ணால் மனிதனைச் செய்து, உயிர் கொடுப்பதற்காகச் சொர்க்கத்திலிருந்து தீயைத் திருடிக் கொண்டுவந்தான். ஜீயஸ் என்னும் கடவுளர் தலைவன் அவனை ஒரு பாறாங்கல்லில் கட்டிவைத்து, அவனைக் கொத்தித்தின்னுமாறு ஒரு கழுகை ஏவினான். ஆனால் கழுகு கொத்திய பகுதி இரவில் மீண்டும் வளர்ந்துவிடும். ஹெர்குலிஸ் என்பவன் வந்து கழுகைக் கொன்று விடுவிக்கும்வரை புரோமீதியஸ் துன்பப்பட்டான்.

இறந்துவிடப் போகிறீர்கள்' என்றான். அதைக் கேட்ட அரசன் அப்போதே உயிரை விடுபவன்போல் அஞ்சி நடுங்கினான். அவனது மந்திரி புத்திசாலி. 'இந்த ஜோதிடர்கள் வெறும் முட்டாள்கள்' என்று அவன் அரசனிடம் கூறினான். அரசன் அதை நம்பவில்லை. அதை அரசனுக்கு நிரூபிக்க எண்ணிய மந்திரி, அந்த ஜோதிடனை மீண்டும் அரண்மனைக்கு வரவழைத்தான். அவன் வந்ததும் அவனிடம் அவன் கணித்த கணக்குகள் சரிதானா என்று மந்திரி கேட்டான். அவற்றில் ஒரு தவறும் இருக்கவே முடியாது என்ற ஜோதிடன், மந்திரியைத் திருப்தி செய்வதற்காக அவற்றை மீண்டும் ஒருமுறை சரிபார்த்தான். பின்னர் அவை முழுவதும் சரிதான் என்று கூறினான். அரசனது முகம் வெளிறிவிட்டது. அப்போது மந்திரி ஜோதிடனிடம் 'ஆமாம், உன் மரணம் எப்போது என்று நினைக்கிறாய்?' என்று கேட்டான். 'ஒரு பன்னிரண்டு வருடங்களுக்குப் பிறகு தான்' என்றான் ஜோதிடன். அப்போது மந்திரி தன் வாளை வேகமாக உருவி ஜோதிடனின் தலையை வெட்டி வீழ்த்தினான். பின்னர் அரசனிடம், 'மன்னா, இவன் சொல்வது பொய் என்று இப்போதாவது நம்புகிறீர்களா? இதோ இந்தக் கணமே இறந்து போனான்' என்றான்.

உங்கள் நாடு வாழ வேண்டும் என்று நீங்கள் விரும்பினால், இவற்றில் எல்லாம் இருந்து விலகியிருங்கள். நல்லவை என்பதற்கான ஒரே பரிசோதனை, அவை நம்மை வலிமையுறச் செய்கின்றனவா என்பதைக் காண்பதுதான். நல்லது வாழ்வு, தீயது மரணம். இத்தகைய மூடநம்பிக்கைகள் காளான்கள்போல் உங்கள் நாட்டில் முளைத்துவருகின்றன. நியாயபூர்வமாக ஆராய்ந்து பார்க்கும் திறனற்ற பெண்கள் அவற்றை நம்பத் தயாராகின்றனர். பெண்கள் தங்கள் சுதந்திரத்திற்காக முயன்று கொண்டிருக்கிறார்கள்; அவர்கள் இன்னும் அறிவில் உயராதவர்களாகவே இருக்கிறார்கள். ஒரு நாவலின் முதலில் உள்ள ஓரிரு வரிகளை மனப்பாடம் செய்துவிட்டு, பிரெளனிங்கின் கவிதைகள் எல்லாம் தனக்கு அத்துபடி என்கிறாள் ஒருத்தி. இன்னொருத்தி மூன்று சொற்பொழிவுகளைக் கேட்டுவிட்டு, தனக்கு உலகிலுள்ள எல்லாமே தலைகீழ்ப் பாடம் என்று நினைக்கிறாள். பெண்களுக்கே இயல்பான மூடநம்பிக்கைப் போக்கை அவர்களால் விட முடியாததுதான் பிரச்சினை. அவர்களிடம் ஏராளம் பணம் இருக்கிறது, சிறிது கல்வியறிவும் உள்ளது. இப்போதைய சஞ்சல நிலையைக் கடந்து ஒரு

திடமான நிலையை அடையும்போது சரியாகி விடுவார்கள். இப்போது அவர்களைப் போலிகள் ஏமாற்றி வருகிறார்கள்.

நான் சொன்னதைக் கேட்டு வருந்தாதீர்கள். யாரையும் மனவேதனையுறச் செய்வது என் நோக்கம் அல்ல. ஆனால் நான் உண்மையைச் சொல்லியேயாக வேண்டும். இவற்றில் எவ்வளவு எளிதாக நீங்கள் மயங்கிவிடுகிறீர்கள்! இந்தப் பெண்கள்தான் எவ்வளவு நேர்மையானவர்கள்! எல்லோரிலும் உள்ள தெய்வீகம் ஒருபோதும் அழியாதிருப்பதை நீங்கள் காண வில்லையா? நான் சொன்னதெல்லாம், இறைவனை எப்படி அணுகுவது என்பதை உங்களுக்கு உணர்த்துவதற்காகத்தான்.

ஒவ்வொரு மனிதனும் தெய்வீகமானவன் என்ற கருத்து, நான் வாழவாழ என்னில் உறுதி பெறுகிறது. ஆணோ பெண்ணோ எவ்வளவு மோசமானவராக இருந்தாலும் அவர் களிடம் உள்ள இந்த தெய்வீகம் அழிவதே இல்லை. அதை அடைவது எப்படி என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. அவர்கள் உண்மைக்காகக் காத்து நிற்கின்றனர். அவர்களை எல்லாவிதமான மூடத்தனங்களாலும் ஏமாற்றத் தியவர்கள் முயல்கின்றனர். ஒருவன் மற்றவனைப் பணத்திற்காக வஞ்சித் தால் அவன் ஒரு மூடன், போக்கிரி என்கிறீர்கள். ஆனால் மற்றவர்களை ஆன்மீகத்தின் பெயரில் ஏமாற்றுவது எவ்வளவு பெரிய பாவம்! அது கொடுமை. உண்மை என்பது உங்களை வலிமை உடையவர்களாக, மூடநம்பிக்கையில் படாதவர்களாக ஆக்க வேண்டும்; இதுதான் ஒரே பரிசோதனை.

உங்களை மூடநம்பிக்கையில் படாதவாறு உயர்த்துவதே தத்துவ ஞானிகளின் கடமை. இந்த உலகம், இந்த உடல், இந்த மனம் என்பவைகூட மூடநம்பிக்கைகளே. எல்லையற்ற ஆன்மாக்கள் நீங்கள், மின்னுகிற நட்சத்திரங்களால் ஏமாற்றப் படுவதா! வெட்கம். நீங்கள் தெய்வங்கள், உங்களால்தான் அந்த மின்னுகிற நட்சத்திரங்களே இருக்கின்றன.

நான் ஒருமுறை இமயமலையில் பயணம் செய்துகொண் டிருந்தேன். நீண்ட பாதை எங்கள் முன் சென்றது. ஏழைத் துறவிகளாகிய எங்களைத் தூக்கிச் செல்ல யாரும் வராததால் நாங்கள் நடந்தே செல்ல வேண்டியிருந்தது. எங்களுள் முதியவர் ஒருவர் இருந்தார். நூற்றுக்கணக்கான மைல்தூரம் இப்படி மேடும் பள்ளமுமான சாலையில் செல்ல வேண்டும் என்பதைக் கண்ட அவர், 'ஐயோ, இதை எப்படிக் கடந்து செல்வது? என் னால் இனிமேல் நடக்க இயலாது; என் இதயம் வெடித்துவிடும்'

என்றார். அப்போது நான் அவரிடம், ‘கீழே குனிந்து பாருங்கள்’ என்று சொன்னேன். அவரும் அவ்வாறே பார்த்ததும் நான், ‘உங்கள் கீழ் இருக்கின்ற அந்தப் பாதை நீங்கள் இதுவரை நடந்து வந்ததுதான். உங்கள் எதிரில் தெரிகின்ற பாதையும் விரைவில் கீழே வந்துவிடும்’ என்றேன். மிக உயர்ந்தவை எல்லாம் உங்கள் காலடியில் உள்ளன. ஏனெனில் நீங்கள் தெய்வீக நட்சத்திரங்கள்; இவையெல்லாம் உங்கள் காலடியில் கிடப்பவை. நீங்கள் விரும்பினால் நட்சத்திரங்களைக் கைகளில் அள்ளி விழுங்கிவிடலாம். இதுவே உங்கள் உண்மை இயல்பு. வலிமையாக இருங்கள், மூடநம்பிக்கைகளுக்கு அப்பால் செல்லுங்கள்; சுதந்திரராகுங்கள். ❑

## 10. கடவுள்: சகுணமும் நிர்க்குணமும்

சகுணக் கடவுள் என்று நீங்கள் யாரைக் கூறுகிறீர்களோ அவரே நிர்க்குணக் கடவுளாகவும் இருக்கிறார்; ஒரேவேளையில் சகுணமாகவும் நிர்க்குணமாகவும் இருக்கிறார் அவர் என்பது என் கருத்து. உருவத்துடன் இருக்கின்ற உருவமற்றவர்கள் நாம். இந்தச் சொல்லை அறுதித் தனிநிலையில் பயன்படுத்துவதானால் நாம் உருவமற்றவர்கள்; சார்புநிலையில் சொல்வதானால் நாம் உருவம் உள்ளவர்கள். நீங்கள் ஒவ்வொருவரும் பிரபஞ்சத் தலைவர்கள், எங்கும் நிறைந்தவர்கள். இது முதலில் உங்களிடம் சற்று தயக்கத்தை ஏற்படுத்தவே செய்யும். ஆனால் நான் உங்கள் முன் நிற்பது எவ்வளவு நிச்சயமோ, அவ்வளவு இதில் எனக்கு உறுதி உள்ளது. ஆன்மாவாக இருக்கின்ற ஒன்று எங்கும் நிறைந்ததாக இல்லாமல் எப்படி இருக்க இயலும்? அதற்கு நீளம் இல்லை, அகலம் இல்லை, கனம் இல்லை, வேறு எந்தவிதமான ஜடப்பொருள் தன்மையும் இல்லை.

நாம் எல்லோரும் ஆன்மாக்கள் என்றால் நம்மை இடத்தால் எல்லைப்படுத்த முடியாது. இடம்தான் இடத்தை எல்லைப்படுத்தும், ஜடப்பொருளே ஜடப்பொருளை எல்லைப் படுத்தும். இந்த உடலுள் நாம் எல்லைப்படுத்தப் பட்டிருப்போமானால் நாம் ஒரு ஜடப்பொருளே. அப்போது உடலும் ஆன்மாவும் எல்லாமே ஜடப்பொருள்தான்; 'இந்த உடலில் வாழ்கிறோம்', 'இது ஆன்மாவுக்கு உடலாக அமைந்தது' என்றெல்லாம் சொல்வது வெற்றுச் சொற்கள், இதற்குமேல் இந்தச் சொற்களுக்குப் பொருளே இல்லை.

ஆன்மா என்பதற்கு நான் கூறிய விளக்கம் உங்களில் பலருக்கு நினைவிருக்கும்: ஒவ்வோர் ஆன்மாவும் ஒரு வட்டம், அந்த வட்டத்திற்கு ஒரு மையப்புள்ளி உண்டு, ஆனால் சுற்றளவு எங்கும் இல்லை. உடம்பே அந்த மையப் புள்ளி. அங்கேதான் செயல்பாடுகள் வெளிப்படுகின்றன. நீங்கள் எங்கும் நிறைந்தவர்கள், ஆனால் ஒரு புள்ளியில் நிலைபெற்றிருப்பதை மட்டும் உணர்கிறீர்கள். அந்தப் புள்ளி ஜடப்பொருளின் துகள்களைச்

சேர்த்துக்கொண்டு, ஓர் எந்திரமாக உருவாக்கி தன்னை வெளிப் படுத்துகிறது. எதன்மூலம் அது தன்னை வெளிப்படுத்திக்கொள் கிறதோ அது உடல் என்று அழைக்கப்படுகிறது. ஆகவே நீங்கள் எங்கும் இருக்கிறீர்கள். ஓர் உடம்பு அதாவது எந்திரம் பயனற்றுப் போகிறபோது மையப் புள்ளியான நீங்கள் வேறு இடத்திற்கு நகர்ந்து சென்று, சூட்சும அல்லது தூல ஜடப் பொருள் துகள்களைச் சேர்த்துக்கொண்டு அதன் வாயிலாகச் செயல்படுகிறீர்கள். இதுவே மனிதன்.

அப்படியானால் கடவுள் யார்? கடவுள் ஒரு வட்டம். அதன் சுற்றளவு எங்கும் இல்லை; மையப் புள்ளி எங்கும் உள்ளது. அந்த வட்டத்தின் ஒவ்வொரு புள்ளிக்கும் உயிர் உண்டு, உணர்வு உண்டு, தீவிரம் உண்டு, அதே அளவு செயல் பாடும் உண்டு. எல்லைக்கு உட்பட்ட ஆன்மாக்களாகிய நம் மிடம் ஒரு புள்ளி உணர்வுடன் உள்ளது. அந்தப் புள்ளி முன்னும் பின்னுமாக நகர்கிறது. பிரபஞ்சத்தின் ஆயுளோடு ஒப்பிடும்போது உடலின் ஆயுள் மிகமிகச் சிறிது. அவ்வாறே கடவுளோடு ஒப்பிடும்போது பிரபஞ்சம் ஒன்றுமே இல்லை. கடவுள் பேசுகிறார் என்று நாம் சொல்லும்போது, அவரது பிரபஞ்சத்தின் வாயிலாக அவர் பேசுகிறார் என்று கூறுகிறோம். காலம், இடம் என்ற எல்லைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டவர் அவர் என்னும்போது அவர் உருவம் இல்லாதவர் என்று சொல்கிறோம். ஆனால் அவர் அதே கடவுள்தான்.

ஓர் உதாரணத்தின்மூலம் விளக்குவோம்: நாம் இங்கு நின்று சூரியனைப் பார்க்கிறோம். நீங்கள் சூரியனை நோக்கிப் போக விரும்புகிறீர்கள். சில ஆயிரம் மைல்கள் சென்றால் பெரிய சூரியனைப் பார்ப்பீர்கள். அதனை நோக்கி மேலும் நெடுந்தூரம் சென்றால், முன்பைவிட மிகப் பெரிய சூரியனைக் காண்பீர்கள். கடைசியில், கோடிக்கணக்கான மைல்கள் பெரிதான உண்மையான சூரியனைக் காண்பீர்கள். இந்தப் பயணத்தைப் பல கட்டங்களாகப் பிரித்து, ஒவ்வொரு கட்டத் திலும் ஒரு புகைப்படம் எடுக்கிறீர்கள். கடைசியாக உண்மை யான சூரியனையும் படம் பிடித்த பிறகு திரும்பி வந்து அவற்றை எல்லாம் ஒப்பிட்டுப் பார்க்கிறீர்கள். அந்தப் படங்கள் வேறு பட்டனவாகத் தோன்றும். ஏனெனில் முதல் தோற்றம் ஒரு சிறிய சிவந்த பந்து. ஆனால் உண்மையான சூரியன் பல கோடி மைல் குறுக்களவு உள்ள பெரிய ஒன்று. ஆனாலும் அது ஒரே சூரியன்தான்.

கடவுளின் விஷயமும் அதுபோலவே. ஒரே எல்லையற்ற பரம்பொருளைப் பல்வேறு நிலைகளிலிருந்து, மனத்தில் பல்வேறு தளங்களிலிருந்து பார்க்கிறோம். மிகத் தாழ்ந்த மனிதன் அவரைத் தன் முன்னோராகக் காண்பான். அவனது காட்சி உயர்ந்ததாகும்போது அவரை ஒரு கிரகத்தை ஆள்பவராகக் காண்கிறான். மேலும் உயரும்போது அவரைப் பிரபஞ்சத்தை ஆள்பவராகக் காண்கிறான். மிகமிக உயர்ந்த மனிதன், தானே அவர் என்று காண்கிறான். கடவுள் ஒருவரே, வெவ்வேறு அனுபவங்கள் எல்லாம் அளவில் வேறுபாடே, காட்சியில் வேறுபாடே. ❑

## 11. சீடர் இயல்

சான்பிரான்சிஸ்கோ, 29 மார்ச் 1900

நான் பேசவேண்டிய தலைப்பு 'சீடர் இயல்'. நான் சொல்லப் போவதை நீங்கள் எப்படி ஏற்பீர்கள் என்பது எனக்குத் தெரியாது. அதை ஏற்றுக்கொள்வது உங்களுக்குச் சற்றுக் கடினமாக இருக்கும். ஆசிரியர்கள், மற்றும் சீடர்களின் லட்சியங்கள் உங்கள் நாட்டிற்கும் எங்கள் நாட்டிற்கும் மிகவும் வேறுபடுகின்றன. இந்தியாவின் ஒரு பழைய பழமொழி என் நினைவிற்கு வருகிறது: 'லட்சக்கணக்கான ஆசிரியர்கள் இருக்கலாம். ஆனால் ஒரு சீடனைக் கண்டுபிடிப்பது கடினம்.' அது சரியென்றுதான் தோன்றுகிறது. ஆன்மீகத்தை அடைய முக்கியமான தேவை சீடனின் மனப்பாங்காகும். சரியான மனப்பாங்கு இருந்தால் ஒளி எளிதில் கிடைக்கிறது.

உண்மையைப் பெற சீடனுக்கு என்ன தேவை? உண்மையை அறிய ஓர் இமைப்பொழுதுதான் தேவைப்படுகிறது என்று சிறந்த ரிஷிகள் கூறுகிறார்கள். அது ஓர் அறிதல்—கனவு கலைகிறது, அவ்வளவுதான். கனவு கலைய எவ்வளவு நேரம் ஆகும்? ஒரு நொடி, கனவு மறைந்துவிடுகிறது. மனமயக்கம் விலக எவ்வளவு நேரம் ஆகும்? இமைப்பொழுதுதான். நான் உண்மையை அறிந்ததும் பொய் மறைந்து போவதைத் தவிர வேறு எதுவும் நடக்கவில்லை. கயிற்றைப் பாம்பென்று நினைத்தேன். இப்பொழுது அது கயிறு என்பது தெரிகிறது. வெறும் அரை வினாடி தான், வேலை முடிந்துவிட்டது. நீங்கள்தான் அது. நீங்கள்தான் உண்மை. இதை அறிய எவ்வளவு காலம் ஆகும்? நாம் கடவுள் என்றால், எப்போதும் கடவுளாகவே இருந்திருக்கிறோம் என்றால் இதை நாம் அறியாதது ஆச்சரியம் தான். இதை அறிவது ஒன்றுதான் இயற்கையானது. நாம் எப்போதும் எதுவாக இருந்தோமோ, இருக்கிறோமோ, அதைக் கண்டுபிடிக்க ஊழிக்காலங்கள் தேவையில்லை.

ஆனாலும், தானே விளங்குகின்ற இந்த உண்மையை உணர்வது கடினம்போல் தோன்றுகிறது. அதைப்பற்றிய ஒரு

மங்கலான காட்சி கிடைப்பதற்கு எத்தனையோ காலம் ஆகிறது. கடவுள்தான் வாழ்க்கை, கடவுள்தான் உண்மை. இதைப்பற்றி எழுதுகிறோம்; கடவுள்தான் உண்மை, கடவுளைத் தவிர மற்ற எதுவும் உண்மையில்லை, இன்று இருந்து நாளை மறைபவை என்பதை நம் இதய ஆழத்தில் உணர்கிறோம். இருந்தும் நம்முள் பலரும் வாழ்க்கை முழுவதும் ஒரேமாதிரியே இருக்கிறோம். உண்மையற்றதைப் பிடித்துக்கொண்டு, உண்மைக்குப் புறமுதுகு காட்டுகிறோம். உண்மையை அறிய நாம் விரும்பவில்லை. யாரும் நம் கனவைக் கலைப்பதை நாம் விரும்பவில்லை. நாம் ஆசிரியர்களை விரும்பவில்லை. கற்றுக்கொள்ள யார் விரும்பு கிறார்கள்? உண்மையை உணர்ந்து மனமயக்கத்தை வெல்ல யாரேனும் விரும்பினால், உண்மையை அவன் ஒரு குருவிட மிருந்து பெற விரும்பினால் அவன் ஓர் உண்மையான சீடனாக இருக்க வேண்டும்.

சீடனாக இருப்பது எளிதல்ல. அதற்கு நிறைய ஆயத்தங்கள் தேவை. பல நிபந்தனைகளை நிறைவு செய்ய வேண்டும். வேதாந்திகள் நான்கு முக்கியமான நிபந்தனைகளை வகுத்திருக் கிறார்கள்.

முதல் நிபந்தனை, உண்மையை அறிய விரும்பும் சீடன் இந்த உலகிலும் சரி மறு உலகிலும் சரி, லாபத்தை அடையும் எல்லா ஆசைகளையும் விட்டுவிட வேண்டும்.

நாம் எதைப் பார்க்கிறோமோ அது உண்மையல்ல. மனத் தில் ஆசை இருக்கும்வரை நாம் பார்ப்பது உண்மையாகாது. கடவுள் உண்மை, உலகம் உண்மையல்ல. இதயத்தில் ஒரு துளி உலக ஆசை இருக்கும் வரையிலும் உண்மை தெரியாது. என் கண்முன் இந்த உலகம் அழிந்து போகட்டும். நான் கவலைப்பட மாட்டேன். மறு உலக விஷயமும் அதேதான். சொர்க்கத்திற்குப் போவதைப்பற்றியும் நான் கவலைப்பட மாட்டேன். சொர்க்கம் என்பது என்ன? இந்த உலக வாழ்க்கையின் தொடர்ச்சிதான் அது. சொர்க்கம் என்ற ஒன்று இல்லாமல் இருந்திருக்குமானால் இந்தப் பூலோக வாழ்க்கைக்குத் தொடர்ச்சி என்ற ஒன்று இல்லாதிருக்குமானால் நாம் இன்னும் நன்றாக இருந்திருப் போம், நாம் கண்டு கொண்டிருக்கின்ற மூடக் கனவுகள் என்றோ கலைந்து போயிருக்கும். சொர்க்கத்திற்குப் போவதன்மூலம் துன்பமிக்க மனமயக்கங்களைத்தான் நீடித்துக் கொள்கிறோம்.

சொர்க்கத்தில் உங்களுக்கு என்ன கிடைக்கிறது? நீங்கள் தேவர்கள் ஆகிறீர்கள், அமுதத்தை உண்டு முடக்கு வாதத்தினால்

அவதிப்படுவீர்கள். பூமியைவிட அங்குத் துன்பங்கள் குறைவு, ஆனால் உண்மையும் குறைவாகத்தான் இருக்கிறது. பணக்காரர்களால் ஏழைகளைவிடக் குறைவாகத்தான் உண்மையை அறிய முடியும். 'செல்வந்தன் இறைவனது அரசில் நுழைவதைவிட ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது எளிது.' சொத்து, அதிகாரம், வசதிகள், இன்ப நுகர்ச்சிகள் இவற்றைத் தவிர வேறு எதைப்பற்றியும் சிந்திக்கப் பணக்காரனுக்கு நேரமில்லை. பொதுவாகப் பணக்காரன் மத உணர்வு உடையவனாக இருப்பது அரிது. ஏன்? ஏனெனில் மத உணர்வு வந்துவிட்டால் வாழ்க்கையின் இன்பத்தை அனுபவிக்க முடியாது என்று அவர்கள் நினைக்கிறார்கள். அதுபோலவே சொர்க்கத்திலும் ஆன்மீக உணர்வுக்கான வாய்ப்பு மிகமிகக் குறைவு. அங்கே வசதிகளும் இன்பங்களும் அதிகம். அவற்றை விட்டுக்கொடுக்க அவர்கள் இசைய மாட்டார்கள்.

அழுகை என்பதே சொர்க்கத்தில் இருக்காது என்று சொல்லப்படுகிறது. ஒருபோதும் அழாதவனை நான் நம்புவதில்லை, அவனுக்கு இதயம் இருக்க வேண்டிய இடத்தில் ஒரு பெரிய பாறாங்கல் இருக்கிறது. தேவர்களுக்கு அவ்வளவாக இரக்கம் என்பது கிடையாது என்பது தெரிகிறது. அங்கு அவர்கள் பலர் இருக்கிறார்கள், அற்ப ஜீவன்களாகிய நாமோ இந்தப் பயங்கர உலகில் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறோம். இந்தக் கஷ்டத்திலிருந்து நம்மை அவர்கள் காப்பாற்ற முடியும், ஆனால் அதை அவர்கள் செய்வதில்லை. அவர்கள் அழுவதில்லை. அங்கே துன்பமோ துயரமோ கிடையாது. அதனால் யாருடைய கஷ்டத்தைப் பற்றியும் அவர்கள் கவலைப்படுவதில்லை. அவர்கள் அமுதத்தைக் குடிக்கிறார்கள், நடனங்கள் நடக்கின்றன, அழகிய மனைவிகள், இன்னும் எல்லாம் இருக்கின்றன.

இவற்றிற்கு எல்லாம் அப்பால் சென்று, சீடன், 'இந்த உலகின் எதையுமோ, அல்லது இதுவரை இருந்துள்ள சொர்க்கங்களையோ நான் பொருட்படுத்தவில்லை. நான் ஒரு சொர்க்கத்திற்கும் போக விரும்பவில்லை. புலன் நுகர்ச்சி வாழ்க்கை எனக்கு எந்த உருவிலும் வேண்டாம். ''நான் இந்த உடம்பு, இந்த மாமிசப் பிண்டம்'' என்று என்னை உடம்புடன் ஒன்றுபடுத்திக் கொண்டிருக்கின்ற புலன் வாழ்க்கை எனக்கு வேண்டாம். நான் உடம்பு என்றே நினைத்துக் கொண்டிருக்கிறேன். அதை நான் நம்ப மறுக்கிறேன்' என்று சொல்ல வேண்டும்.

இந்த உலகமும் சொர்க்கங்களும் எல்லாமே புலன்களுடன் பிணைக்கப்பட்டுள்ளன. புலன்கள் இல்லையென்றால் நீங்கள் இந்த உலகைப் பொருட்படுத்த மாட்டீர்கள். சொர்க்கமும் ஓர் உலகம்தான். பூமி, சொர்க்கம், இவற்றின் நடுவே உள்ளவை எல்லாம்—இவை அனைத்திற்கும் ஒரே பெயர் பூமி என்பதுதான்.

ஆகவே சீடன் இறந்தகாலத்தையும் நிகழ்காலத்தையும் அறிந்துகொண்டு, எதிர்காலத்தைப்பற்றி நினைத்துக்கொண்டு, அதிர்ஷ்டம் என்றால் என்ன, இன்பம் என்றால் என்ன என்பதை உணர்ந்து, இவற்றைத் துறந்து, மெய்ப்பொருளை மட்டும் தேட முயல வேண்டும். இதுதான் முதல் நிபந்தனை.

இரண்டாவது நிபந்தனை, அவன் தனது அகப் புலன்களையும் புறப் புலன்களையும் கட்டுப்படுத்துவதுடன் சில ஆன்மீகப் பண்புகளில் நிலைபெற்றவனாக இருக்க வேண்டும்.

நாம் பார்க்கத்தக்க விதத்தில் உடலின் பல பாகங்களில் உள்ளவை புறப் புலன்கள். அகப் புலன்களை நாம் பார்க்க முடியாது. கண், காது, மூக்கு போன்ற புறப் புலன்கள் நமக்கு உள்ளன; இவற்றிற்கு ஒத்த அகப் புலன்கள் உள்ளே உள்ளன. எப்போதும் இந்த இரண்டு வகைப் புலன்களின் கூப்பிட்ட குரலுக்கு ஓடியவாறு உள்ளோம் நாம். புலன்களுக்கு ஏற்றாற் போல் புலன் நுகர்ச்சிப் பொருட்கள் உள்ளன. நுகர்ச்சிப் பொருட்கள் பக்கத்தில் இருந்தால் அவற்றை நுகரும்படிப் புலன்கள் நம்மை வற்புறுத்துகின்றன. இதில் நமது விருப்பமோ சுதந்திரமோ கிடையாது. மூக்கு இருக்கிறது, நறுமணமும் அருகில் இருக்கிறது. அதை நான் முகர்ந்தேயாக வேண்டும். துர்நாற்றம் அடித்தால், 'அதை முகராதே' என்று நான் எனக்குச் சொல்வேன். ஆனால் இயற்கையோ, 'முகர்' என்று சொல்கிறது, நானும் முகர்கிறேன். நான் என்ன ஆகிவிட்டேன், பாருங்கள். நம்மை நாம் பிணைத்துக் கொண்டு விட்டோம். கண்கள் இருக்கின்றன. நல்லதோ கெட்டதோ எது நடந்தாலும் நான் பார்த்துத்தான் ஆக வேண்டும். கேட்பது விஷயத்திலும் அப்படியே. யாராவது என்னிடம் கசப்பாகப் பேசினாலும் அதை நான் கேட்டுத்தான் ஆக வேண்டும். என்னுடைய செவி உணர்ச்சி அப்படி என்னைக் கட்டுப்படுத்துகிறது, நானும் அதனால் துன்பம் அடைகிறேன். இகழ்ச்சியோ புகழ்ச்சியோ மனிதன் கேட்டுத்தான் ஆக வேண்டும். பொதுவாகக் காது கேட்காத பலரை நான் பார்த்திருக்கிறேன், ஆனால்

அவர்களைப்பற்றி ஏதாவது சொன்னால் அது மட்டும் எப்படியோ அவர்களுக்குக் கேட்டுவிடும்!

இந்தப் புற, அகப் புலன்கள் எல்லாம் சீடனின் கட்டுப் பாட்டிற்குள் இருக்க வேண்டும். கடுமையான பயிற்சியால் அவன் தன் மனத்தைப் புலன்கள் மற்றும் இயற்கையின் உத்தரவுகளை எதிர்த்து நிற்கச் செய்கின்ற நிலையை அடைய வேண்டும். மனத்தைப் பார்த்து, 'நீ என் மனம். நீ எதையும் பார்க்கவோ கேட்கவோ கூடாது என்று கட்டளையிடுகிறேன்' என்று சொன்னால் மனமும் எதையும் பார்க்காமல் எதையும் கேட்காமல் இருக்கின்ற, எந்த உருவமோ ஒலியோ மனத்தைப் பாதிக்காமல் இருக்கின்ற திறன் படைத்தவனாக இருக்க வேண்டும். அந்த நிலையில் மனம் புலன்களின் ஆதிக்கத் திலிருந்து விடுபட்டு விட்டது, அவற்றிலிருந்து பிரிந்துவிட்டது. அது இப்போது புலன்களுடனோ உடலுடனோ சம்பந்தப்பட வில்லை. புறப் பொருட்கள் இப்போது மனத்திற்கு உத்தரவிட முடியாது. மனம் தன்னை அவற்றுடன் இணைத்துக்கொள்ள மறுக்கிறது. நறுமணம் இருக்கிறது. சீடன் மனத்திடம், 'முகராதே' என்கிறான். மனம் அந்த வாசனையை நாடாமல் இருக்கும். இந்த நிலையை அடையும்போது நீங்கள் சீடன் ஆகத் தொடங்குகிறீர்கள். அதனால்தான் எல்லோரும், 'நான் உண்மையை அறிந்து விட்டேன்' என்று சொல்லும்போது நான், 'நீங்கள் உண்மையை அறிந்திருந்தால் உங்களுக்கு சுயக் கட்டுப்பாடு இருக்க வேண்டும். அப்படிச் சுயக்கட்டுபாடு இருந் தால் புலன்களை அடக்கிக் காட்டுங்கள்' என்று கூறுவேன்.

அடுத்ததாக மனத்தை அமைதியுறச் செய்ய வேண்டும். அது ஓடிக்கொண்டிருக்கிறது. நான் தியானம் செய்ய அமர வேண்டியதுதான், உலகில் உள்ள அத்தனை கெட்ட விஷயங் களும் பாய்ந்து வருகின்றன. அருவருப்பாக உள்ளது. நினைக்கக் கூடாது என்று நான் எண்ணும் எண்ணங்களை மனம் நினைப்பானேன்? நான் அதன் அடிமைபோல் இருக்கிறேன். மனம் அமைதியின்றி, கட்டுப்பாடற்ற நிலையில் இருக்கும்வரை ஆன்மீக அறிவு கிடைப்பதற்கான சாத்தியமே இல்லை. மனத்தைக் கட்டுப்படுத்தச் சீடன் கற்றுக்கொள்ள வேண்டும். ஆனால் சிந்திப்பதுதான் மனத்தின் வேலை. ஆனால் சீடன் விருப்பப்படாவிட்டால் அது நினைக்கக் கூடாது, அவன் கட்டளையிட்டால் அது நினைப்பதை நிறுத்த வேண்டும், சீடன் என்னும் தகுதிபெற, இத்தகைய மனநிலை மிக அவசியம்.

மேலும் சீடனுக்கு மிகுந்த சகிப்புத் தன்மை வேண்டும். வாழ்க்கை வசதியாக இருப்பதுபோல் தோன்றுகிறது. எல்லாம் சரியாகப் போகும்போது மனமும் சரியாகச் செயல்படுகிறது. ஏதாவது தவறு நடக்கட்டும், மனம் சமநிலையை இழக்கிறது. இது சரியல்ல. எல்லா தீமைகளையும் துன்பங்களையும் ஒரு முணுமுணுப்புக்கூட இல்லாமல், துயரைப் பொருட்படுத்தாமல், அவற்றை முறியடிப்பதற்காக எதிர்ப்பையோ மாற்றத்தையோ பழிவாங்குதலையோ நினைக்காமல், எல்லாவற்றையும் சகித்துக் கொள்ள வேண்டும். அதுதான் உண்மையான சகிப்புத்தன்மை. அதை நீங்கள் அடைய வேண்டும்.

உலகில் நன்மையும் தீமையும் எப்போதும் உள்ளன. தீமை இருக்கிறது என்பதைப் பலர் மறந்துவிடுகிறார்கள், மறக்க வாவது முயல்கிறார்கள். அதனால் தீமை நேரும்போது திணறு கிறார்கள், கசப்படைகிறார்கள். வேறு சிலர் இருக்கிறார்கள்; தீமை இருக்கிறது என்பதையே அவர்கள் மறுக்கிறார்கள், எல்லாம் இன்பமயம் என்று நினைக்கிறார்கள். இதுவும் பலவீனம்தான். இதுவும் தீமையைக் கண்டு பயப்படுவதால் வருவதுதான். ஒரு பொருளில் துர்நாற்றம் வீசுகிறது, அதன்மீது பன்னீர் தெளித்து அது மணக்கிறது என்று எதற்காகச் சொல்ல வேண்டும்? ஆம், உலகில் நல்லதும் உள்ளது, தீயதும் உள்ளது. கடவுள்தான் உலகில் தீயதை வைத்துள்ளார். ஆனால் அவருக் காக நீங்கள் அதை வெள்ளையடித்து மறைக்க வேண்டிய தில்லை. ஏன் தீமை உள்ளது என்பது உங்களுக்குத் தேவையற்ற விஷயம். தயவுசெய்து நம்பிக்கை வைத்து அமைதியாக இருங்கள்.

என் குருதேவரான ஸ்ரீராமகிருஷ்ணர் நோயுற்றிருந்த போது, ஒரு பிராமணர் வந்து, ஸ்ரீராமகிருஷ்ணர் தமது ஆற்றல் மிக்க மன சக்தியால் தம்மைக் குணப்படுத்திக் கொள்ளலாமே என்று ஆலோசனை கூறினார். நோயுற்ற பகுதியின் மீது அவர் மனத்தைக் குவித்தால் போதும், நோய் குணமாகிவிடும் என்று சொன்னார். அதற்கு ஸ்ரீராமகிருஷ்ணர், 'என்ன! கடவுளிடம் அர்ப்பணித்துவிட்ட மனத்தை இந்தச் சிறிய உடம்புக்கு இழுத்து வருவதா?' என்று கேட்டார். உடம்பையும் நோயையும்பற்றி நினைக்க மறுத்துவிட்டார் அவர். அவரது மனம் தொடர்ந்து கடவுள்நினைவாகவே இருந்தது, அது கடவுளுக்கு முழுக்க முழுக்க அர்ப்பணிக்கப்பட்டுவிட்டது, வேறு எதற்கும் அவர் அதைப் பயன்படுத்தமாட்டார்.

ஆரோக்கியம், செல்வம், நீண்ட ஆயுள், இது போன்று நல்லவை என்று அழைக்கப்படுபவற்றிற்காக ஆசைப்படுவது மனமயக்கமே தவிர வேறில்லை. அவற்றை அடைவதற்காக மனத்தை அவற்றின்மீது செலுத்துவது மனமயக்கத்தை இன்னும் வலுப்படுத்துகிறது. வாழ்க்கையில் ஏற்கனவே இந்தக் கனவு களும் மனமயக்கங்களும் உள்ளன; வரப்போகிற வாழ்க்கையில் அதாவது சொர்க்கத்தில் இவற்றை இன்னும் அதிகமாக வேண்டு கிறோம், அதாவது இன்னும் அதிக மனமயக்கம் வேண்டும் என்கிறோம். தீமையைத் தடுக்காதீர்கள், அதை எதிர்கொள் ளுங்கள். நீங்கள் தீமையைவிட உயர்ந்தவர்கள்.

உலகில் துயரம் இருக்கிறது. அதை யாராவது அனுபவித்துத்தான் ஆக வேண்டும். யாருக்காவது தீமை செய்யாமல் நீங்கள் செயல்படவே முடியாது. உலகில் நல்லதைத் தேடுகிறீர்கள் என்றால் தீமையை உங்களிடமிருந்து விலக்கி அதை வேறு ஒருவர் அனுபவிக்கச் செய்கிறீர்கள் என்று பொருள். ஒவ்வொருவரும் அதை மற்றவர் தோள்மீது சுமத்த முயற்சி செய்து கொண்டிருக்கிறார்கள். சீடனோ, 'உலகின் துன்பங்கள் எனக்கு வரட்டும். நான் அவற்றையெல்லாம் சகித்துக் கொள்கிறேன். மற்றவர்கள் நிம்மதியாக இருக்கட்டும்' என்கிறான்.

சிலுவையில் அறையுண்ட மனிதரை நினைவுகூருங்கள். தாம் விடுபடுவதற்காகத் தேவதூதர் படைகளையே அவர் அழைத்திருக்க முடியும், ஆனால் அவர் தீமையைத் தடுக்க வில்லை. தம்மைச் சிலுவையில் அறைந்தவர்களைக் கண்டு அவர் பரிதாபப்பட்டார். எல்லா அவமானத்தையும் துன்பத்தை யும் சகித்தார். அனைவரின் பாரத்தையும் தம்மீது போட்டுக் கொண்டார். 'வருத்தப்பட்டுப் பாரம் சுமக்கிறவர்களே, எல் லோரும் என்னிடம் வாருங்கள், நான் உங்களுக்கு இளைப் பாறுதல் தருவேன்' என்றார். உண்மையான சகிப்புத் தன்மை இத்தகையது. சாதாரண வாழ்க்கையைவிட எவ்வளவு உயரத்தில் அவர் இருந்தார்! அடிமைகளாகிய நாம் புரிந்துகொள்ளாத உயரத்தில் இருந்தார் அவர்! ஒருவன் என்னை அடிக்கிறான், பளிச்சென்று என் கை அவனை அடிக்கிறது, இதில் அந்தச் சிறப்பு மிக்கவரின் பெருமையையும் மகிமையையும் என்னால் எப்படி அறிந்துகொள்ள முடியும்? அந்தப் பெருமையை நான் எப்படி உணர முடியும்? ஆனால் நான் லட்சியத்தைக் கீழே இழுக்க மாட்டேன். நான் உடம்பு, தீமையை எதிர்க்கிறேன்

என்பதை நான் உணர்கிறேன். ஒரு தலைவலி வந்தால் அதைக் குணப்படுத்த உலகம் முழுவதும் அலைகிறேன், இரண்டாயிரம் புட்டி மருந்து குடிக்கிறேன். ஆகவே இந்த அற்புத மனங்களை என்னால் எப்படிப் புரிந்துகொள்ள முடியும்?

நான் லட்சியத்தைப் பார்க்கிறேன், ஆனால் அதன் எவ்வளவு பகுதியைப் பார்க்கிறேன்? இந்த உடலுணர்வு, இந்தச் சிறிய-நான், அதன் இன்பதுன்பங்கள், சுகதுக்கங்கள் இவை எதுவும் அந்த இடத்தை அணுகவே முடியாது. ஜடத்தைப்பற்றிய நினைவு இல்லாமல், ஆன்மாவை மட்டுமே எப்போதும் நினைத்துக் கொண்டிருந்தால் அந்த லட்சியத்தின் கணநேரக் காட்சி கிடைக்கும். உலகியல் சிந்தனைகள், புலனுலகின் கவர்ச்சிகள் இவற்றிற்கு அந்த லட்சியத்தில் இடமில்லை. மனத்தை அங்கிருந்து அகற்றி ஆன்மாவின்மீது வையுங்கள். உங்கள் வாழ்வு-சாவு, இன்பம்-துன்பம், பெயர்-புகழ் இவற்றை மறந்துவிடுங்கள். நீங்கள் உடம்பு அல்ல, மனம் அல்ல; தூய ஆன்மா என்பதை உணருங்கள்.

நான், 'நான்' என்று சொல்லும்போது இந்த ஆன்மாவையே குறிப்பிடுகிறேன். நீங்கள் கண்களை மூடிக் கொண்டு, 'நான்' என்று நினைத்துப் பாருங்கள், என்ன தோன்று கிறது? உங்கள் உடம்பின் தோற்றம் தெரிகிறதா அல்லது உங்கள் மன இயல்பு தோன்றுகிறதா? அவை வருமானால் நீங்கள் உங்கள் உண்மையான 'நான்' என்பதை இன்னும் உணரவில்லை. 'நான்' என்று சொன்னதும் பிரபஞ்சத்தையும், எல்லையற்ற பரம்பொருளையும் காண்கின்ற ஒரு காலம் வரும். அப்போது உங்கள் உண்மையான ஆன்மாவைக் காண்பீர்கள்; நீங்கள் எல்லையற்றவர்கள் என்பதை உணர்வீர்கள். அதுதான் உண்மை: நீங்கள் ஆன்மா, ஜடப்பொருள் அல்ல. மாயை என்று ஒன்று இருக்கிறது. அதில் ஒரு பொருள் இன்னொரு பொருளாக நினைக்கப்படுகிறது; ஆன்மா ஜடம் என்று நினைக்கப்படுகிறது, உடல் ஆன்மாவாக நினைக்கப்படுகிறது. இதுதான் மாபெரும் மாயை, இது ஒழிய வேண்டும்.

அடுத்த தகுதி, சீடனுக்கு குருவிடம் நம்பிக்கை இருக்க வேண்டும். மேலைநாடுகளில் ஆசிரியர் அறிவை அளிக்கிறார், அவ்வளவுதான். குருவுடனான உறவு வாழ்வில் மிகவும் உயர்ந்தது. வாழ்க்கையில் எனக்கு மிகவும் நெருங்கிய அன்பான உறவினர் குருதான். அவருக்குப் பிறகுதான் தாய், அதற்குப் பிறகு தந்தை. என்னுடைய முதல் வணக்கம் குருவுக்குத்தான்.

'இதைச் செய்' என்று என் தந்தை சொல்கிறார், 'செய்யாதே' என்று குரு சொல்கிறார், நான் அதைச் செய்ய மாட்டேன். குரு என் ஆன்மாவை விடுவிக்கிறார். தாயும் தந்தையும் இந்த உடம்பைத்தான் கொடுக்கிறார்கள், ஆனால் குருவோ நான் ஆன்மாவாகப் பிறக்கும்படிச் செய்கிறார்.

எங்களுக்குச் சில தனிப்பட்ட நம்பிக்கைகள் உள்ளன. ஏற்கனவே முக்த புருஷர்களாக உள்ள சிலர், மிகவும் தனிப்பட்ட சிலர், உலகின் நன்மைக்காக, உலகிற்கு உதவி செய்வதற்காக இங்கே பிறக்கின்றனர் என்பது அவற்றுள் ஒன்று. அவர்கள் ஏற்கனவே சுதந்திரர்கள். இவர்கள் தங்கள் முக்தியைப் பற்றிக் கவலைப்படுவதில்லை, மற்றவர்களுக்கு உதவவே விரும்பு கிறார்கள். அவர்களுக்கு நாம் எதையும் கற்பிக்க வேண்டிய தில்லை. சிறு வயதிலிருந்தே அவர்களுக்கு எல்லாம் தெரியும். அவர்கள் ஆறு மாதக் குழந்தையாக இருக்கும்போதே மிகப் பெரிய உண்மைகளைச் சொல்லக் கூடும்.

மனித சமுதாயத்தின் ஆன்மீக வளர்ச்சி இந்த முக்த புருஷர்களைத்தான் சார்ந்துள்ளது. மற்ற தீபங்களை ஏற்ற உதவும் முதல் தீபங்களைப் போன்றவர்கள் இவர்கள். எல்லோரி லும் ஒளி உள்ளது என்பது உண்மைதான், ஆனால் பலரிடம் அது மறைந்திருக்கிறது. ஆரம்பத்திலிருந்தே இந்த மகான்கள் ஒளி வீசும் தீபங்களாகத் திகழ்கின்றனர். இவர்களை அணுகு பவர்களின் தீபங்கள் ஏற்றப்படுகின்றன. முதல் தீபத்திற்கு இதனால் எந்த இழப்பும் இல்லை. அதனால் அது தன் ஒளியை மற்ற தீபங்களுக்கு அளித்துக் கொண்டேயிருக்கிறது. கோடிக் கணக்கான தீபங்கள் ஏற்றப்படுகின்றன. ஆனால் முதல் தீபம் மங்காமல் எரிந்துகொண்டே இருக்கிறது. முதல் தீபம்தான் குரு, அதிலிருந்து ஏற்றப்படும் விளக்கு சீடன். பிறகு இது குரு வாகிறது, இவ்வாறு இது தொடர்கிறது.

கடவுளின் அவதாரங்கள் என்று அழைக்கப்படுகின்ற இந்த மாமனிதர்கள் ஆன்மீகத் துறையில் வான்போல் உயர்ந்தவர்கள். அவர்கள் தங்கள் சக்தியைச் சீடர்களுக்குக் கொடுத்து ஒரு மாபெரும் ஆன்மீக அலையை ஆரம்பித்து வைக்கிறார்கள். இந்தச் சீடர்கள் தங்கள் சீடர்களுக்குக் கொடுக்க, இப்படியே இந்தச் சக்தி தலைமுறை தலைமுறையாக வருகிறது.

சர்ச்சிலுள்ள பாதிரி கை வைத்துப் பிறரை ஆசீர்வதிக் கிறார்; முந்தைய பாதிரிகளிடமிருந்து தாம் பெற்ற சக்தியை அவர்களுக்குக் கொடுப்பதாகச் சொல்கிறார். ஏசு தமது

சக்தியைச் சீடர்களுக்குக் கொடுத்ததாகவும், அது தலைமுறை தலைமுறையாகத் தமக்கு வந்ததாகவும் கூறுகிறார். பாதிரிகளுக்கு மட்டுமின்றி நம் எல்லோருக்குமே அத்தகைய சக்தி இருக்க வேண்டும் என்று நாங்கள் சொல்கிறோம். அந்த மகோன்னத மான ஆன்மீக சக்தியை எடுத்துச் செல்லும் சாதனங்களாக நீங்கள் ஒவ்வொருவரும் ஏன் இருக்கக் கூடாது? கூடாது என்பதற்கு எந்தக் காரணமும் இல்லை.

ஆனால் நீங்கள் முதலில் ஒரு குருவை, உண்மையான குருவைக் கண்டுபிடிக்க வேண்டும். அவர் ஒரு சாதாரண மனிதர் அல்ல என்பதை நீங்கள் மறக்கக் கூடாது. உடம்புடன் கூடிய ஒருவர் உங்களுக்குக் குருவாக வாய்க்கலாம். ஆனால் உண்மைக் குரு உடம்பில் இல்லை, அவர் உடம்புடன் கூடிய மனிதர் அல்ல. உங்கள் கண்களுக்குத் தோன்றுவது போலவும் அவர் இல்லை. குரு ஒரு மனிதராக உங்களிடம் வரலாம், அவரிடமிருந்து நீங்கள் சக்தியைப் பெறலாம். சிலவேளைகளில் அவர் கனவில் வந்து உலகத்திற்குச் சக்தியைக் கொடுக்கலாம். குருவின் சக்தி பல வழிகளில் நமக்கு வந்து சேரலாம். ஆனால் நம்மைப் போன்ற சாதாரண மக்களுக்கு குரு நேரில் வந்துதான் ஆக வேண்டும். அவர் வரும்வரை நாம் ஆயத்தங்கள் செய்து கொண்டிருக்க வேண்டும்.

கடவுள், ஆன்மா, மதம், முக்தி இவை பற்றியெல்லாம் சொற்பொழிவுகள் கேட்கிறோம், புத்தகங்கள் படிக்கிறோம், வாதப் பிரதிவாதங்கள் செய்கிறோம். ஆனால் இவை ஆன்மீகம் அல்ல. ஏனெனில் ஆன்மீகம் புத்தகங்களிலோ, கொள்கை களிலோ, தத்துவங்களிலோ இல்லை. ஆன்மீகம் என்பது கற்பதோ, வாதம் செய்வதோ அல்ல; அது உண்மையான அக வளர்ச்சி. கிளிகள்கூட மனப்பாடம் செய்து ஒப்பிக்க முடியும். நீங்கள் கற்றறிந்தவராக இருந்தால் அதனால் என்ன? கழுதைகள் முழு நூல்நிலையங்களையே சுமந்து செல்ல முடியும். உண்மையான ஒளி வரும்போது புத்தகங்களிலிருந்து கற்பதெல் லாம் நின்றுவிடும், புத்தகப் படிப்பு தேவையில்லை. தன் சொந்தப் பெயரைக்கூட எழுதத் தெரியாத மனிதன் முழு ஆன்மீக உணர்வு பெற்றவனாக இருக்கலாம். உலகில் உள்ள எல்லா நூல்நிலையங்களையும் தன் மூளையில் வைத்துக் கொண்டிருப் பவன் ஆன்மீக உணர்வு இல்லாதவனாக இருக்கலாம். ஆன்மீக வளர்ச்சிக்குக் கற்றறிவு ஒரு தேவையல்ல, புலமை ஒரு தேவை அல்ல. குருவின் ஒரு ஸ்பரிசம், ஒரு சக்திப் பரிமாற்றம் போதும்,

அது உங்கள் இதயத்தைக் குளிர்க்கச் செய்துவிடும். அப்போது தான் வளர்ச்சி ஏற்படும். இதுதான் உண்மையான ஞானஸ்நானம் (Baptism). அதன்பிறகு நிற்க வேண்டியிருக்காது, தொடர்ந்து முன்னேறிக்கொண்டே இருப்பீர்கள்.

என் நண்பரும் கிறிஸ்தவ போதகருமான ஒருவர் சில வருடங்களுக்கு முன்பு என்னைப் பார்த்து, 'நீங்கள் ஏசுவை நம்புகிறீர்களா?' என்று கேட்டார். 'ஆம் நம்புகிறேன், சற்று அதிக பயபக்தியுடனேயே நம்புகிறேன்' என்றேன். 'அப்படி யானால் ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளலாமே?' என்று அவர் கூறினார். நான் எப்படி ஞானஸ்நானம் பெறுவது? யாரிடமிருந்து பெறுவது? உண்மையான ஞானஸ்நானம் கொடுக்கக் கூடிய மனிதர் எங்கிருக்கிறார்? ஞானஸ்நானம் என்றால்தான் என்ன? சில பிரார்த்தனைகளைச் சொல்லிக் கொண்டு, உங்கள்மீது தண்ணீரைத் தெளிப்பதும் உங்களைத் தண்ணீரில் ஆழ்த்துவதுமா அது?

ஆன்மீக வாழ்க்கைக்கு நம்மை நேரடியாக அறிமுகம் செய்து வைப்பதுதான் ஞானஸ்நானம். உண்மையான ஞானஸ் நானம் பெற்றால் நீங்கள் உடம்பு அல்ல, ஆன்மா என்பதை அறிவீர்கள். முடிந்தால் எனக்கு அத்தகைய ஞானஸ்நானம் கொடுங்கள். இல்லையானால் நீங்கள் கிறிஸ்தவர்கள் அல்ல. நீங்கள் ஞானஸ்நானம் என்று அழைக்கின்ற ஒன்றைப் பெற்ற பின்பும் அப்படியேதான் இருக்கிறீர்கள். ஏசுவின் பெயரால் ஞானஸ்நானம் பெற்றீர்கள் என்று வெறுமனே சொல்வதால் என்ன பயன்? வெறும் பேச்சு, பேச்சு; உங்கள் மூடத்தனத்தால் உலகை என்றும் தொந்தரவுபடுத்துகின்ற வேலை. 'அறியாமை இருளில் மூழ்கியிருந்தும், தாங்கள் மிகவும் அறிவாளிகள், படித்தவர்கள் என்று நினைத்துக்கொள்கின்ற இந்த மூடர்கள் குருடர்களால் வழிகாட்டப்படுகின்ற குருடர்களைப்போல், அங்குமிங்கும் தத்தளித்துக் கொண்டு, சுழன்றுசுழன்று வரு கிறார்கள்.'[1] ஆகவே நீங்கள் கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக் கொள்ளாதீர்கள்; ஞானஸ்நானம், அது இது என்று பெருமை யடித்துக் கொள்ளாதீர்கள்.

உண்மையான ஞானஸ்நானம் இருக்கத்தான் செய்கிறது. ஆரம்பத்தில் ஏசு இந்த உலகத்திற்கு வந்து போதித்தாரே, அப்பொழுது இருந்தது. ஒளி பெற்ற மகான்கள், அவ்வப்போது

---

1. கடோபநிடதம் 1. 2. 5

உலகத்திற்கு வருகின்ற மாமனிதர்கள் அந்தத் தெய்வீகக் காட்சியை நமக்குக் காட்டவல்ல ஆற்றல் பெற்றிருந்தார்கள். இதுதான் உண்மையான ஞானஸ்நானம். மதங்களில் மந்திரங் களுக்கும் சடங்குகளுக்கும் முன்பே பிரபஞ்சம்தழுவிய உண்மை யின் கரு இருக்கிறது. காலப்போக்கில் இந்த உண்மை மறக்கப் படுகிறது, சடங்குகளும் சம்பிரதாயங்களும் இந்த உண்மையின் தலையை அழுத்திக் கொன்றுவிடுகின்றன. சடங்குகள் எஞ்சு கின்றன—கூடு இருக்கிறது, ஆன்மப் பொக்கிஷம் அதனுள் இல்லை. ஞானஸ்நானம் என்னும் சடங்கு உங்களிடம் இருக் கிறது, ஆனால் உண்மையான ஞானஸ்நானத்தைச் சிலரே அளிக்க முடியும். ஆனால் புறச் சடங்கு போதாது. உயிரோட்ட மான உண்மையைப்பற்றிய உண்மையான அறிவு தேவையென் றால், நாம் தீட்சை பெற வேண்டும். அதுதான் லட்சியம்.

குரு எனக்குக் கற்பித்து, என்னை ஒளிக்குக் கொண்டு செல்ல வேண்டும்; அவர் எந்தச் சங்கிலியின் இணைப்பாக இருக்கிறாரோ, அதன் ஒரு இணைப்பாக என்னை ஆக்க வேண்டும். தெருவில் போகின்ற ஒருவனைக் குரு என்று சொல்ல முடியாது. தெய்வீக உண்மையை அறிந்த, அனுபூதியில் அதை உணர்ந்த, தன்னை ஓர் ஆன்மாவாகக் கண்ட ஒருவரே குருவாக இருக்க முடியும். வெறும் பேச்சாளர் குருவாக இருக்க முடியாது. என்னைப் போன்ற ஒரு வாய்ச்சொல் வீரனான முட்டாள் நிறையப் பேச முடியும், ஆனால் குருவாக இருக்க முடியாது. உண்மையான குரு சீடனிடம், 'போ, இனி பாவம் செய்யாதே' என்று சொல்வார். அதன்பிறகு சீடனால் பாவம் செய்ய முடியாது, பாவம் செய்யும் சக்தியும் அவனுக்கு இனி கிடையாது.

வாழ்க்கையில் இத்தகைய மாமனிதர்களை நான் கண்டுள் ளேன். பைபிளையும் அதுபோன்ற நூல்களையும் படித்திருக் கிறேன். அவை அற்புதமானவை, ஆனால் உயிரைத் தொடும் அற்புத ஆற்றலை நூல்களில் காண முடியாது. வாழ்க்கையை ஒரு நொடியில் மாற்றக்கூடிய சக்தியை, சிறப்புடன் ஒளிரும் தீபங்கள் போன்ற இவர்களிடம்தான் காண முடியும். இந்தப் பிரகாசிக்கும் தீபங்கள் அவ்வப்போது நம்மிடையே தோன்றுகின்றனர். இவர்கள்தான் குருவாக இருக்கத் தகுதி யுள்ளவர்கள். நீங்களும் நானும் வெற்றுப் பேச்சு வீரர்கள்; குரு அல்ல. பேச்சால் மோசமான அதிர்வுகளை எழுப்பி உலகைத் தொந்தரவு செய்கிறோம் நாம். நாம் நம்புவோம், பிரார்த்தனை செய்வோம், போராடுவோம்; ஒருநாள் வரும், அன்று நாம்

உண்மையை அறிவோம், பிறகு பேசவேண்டிய அவசியம் இருக்காது.

'குரு பதினாறு வயதுச் சிறுவன், சீடன் எண்பது வயதினர். குரு மௌனத்தின்மூலம் போதித்தார். சீடனின் சந்தேகங்கள் உடனே மறைந்தன.'[1] அவர்தான் குரு. இப்படி ஒருவர் கிடைத்தால் அவர்மீது நீங்கள் எத்தனை அன்பும் நம்பிக்கையும் வைக்க வேண்டும் என்று எண்ணிப் பாருங்கள். ஏன், அவர் கடவுளேதான், அதற்குக் குறைந்தவர் அல்ல. அதனால்தான் ஏசுவின் சீடர்கள் அவரைக் கடவுளாக வழிபட்டார்கள். சீடன் குருவைக் கடவுளாகவே வழிபட வேண்டும். அனுபூதி பெறும் வரையில் மனிதனுக்குத் தெரிந்ததெல்லாம் அந்த நடமாடும் தெய்வம், மனித உருவில் உள்ள அந்தக் கடவுள்தான். வேறு வழியில் அவன் கடவுளை எப்படி அறிய முடியும்?

இதோ அமெரிக்காவில் ஒருவன், ஏசுவுக்கு ஆயிரத்துத் தொள்ளாயிரம் வருடங்களுக்குப் பிறகு பிறந்தவன், கிறிஸ்து பிறந்த அந்த யூத இனத்தோடுகூடத் தொடர்பு இல்லாதவன் இருக்கிறான். அவன் ஏசுவையோ அவரது குடும்பத்தினரையோ பார்த்தது கிடையாது. அவன், 'ஏசுநாதர்தான் கடவுள், அதை நம்பாவிட்டால் நீ நரகத்திற்குப் போவாய்' என்று சொல்கிறான். ஏசுவின் சீடர்கள் அவரை ஏன் கடவுள் என்று நம்பினார்கள் என்பதை நாம் புரிந்துகொள்கிறோம். அவர் அவர்களுடைய குரு, அதனால் அவர்கள் அவரைக் கடவுளாகப் போற்றினார்கள். ஆனால் ஆயிரத்துத் தொள்ளாயிரம் வருடங்களுக்கு முன்பு பிறந்த மனிதருடன் இந்த அமெரிக்கனுக்கு என்ன சம்பந்தம்? நான் ஏசுவை நம்பவில்லை, அதனால் நான் நரகத்திற்குப் போக வேண்டும் என்று இந்த இளைஞன் கூறுகிறான். ஏசுவைப்பற்றி இவனுக்கு என்ன தெரியும்? இவன் பைத்தியக்கார விடுதிக்குப் பொருத்தமானவன். இத்தகைய நம்பிக்கையினால் பலன் இல்லை. அவன் தன் குருவைக் கண்டுபிடிக்க வேண்டும். ஏசுநாதர் திரும்பவும் பிறக்கலாம், உங்களிடம் வரலாம். அப்போது நீங்கள் அவரைக் கடவுளென வழிபட்டால் அது சரி.

குரு வரும்வரை நாம் காத்திருக்க வேண்டும், அவரைக் கடவுளாக வழிபட வேண்டும். அவர் கடவுள், அதற்குக் குறைவான எதுவும் இல்லை. நீங்கள் அவரைப் பார்க்கும்போது குரு மெள்ள மறைந்துவிடுகிறார். என்ன எஞ்சுகிறது? குரு காட்சி

---

1. தட்சிணாமூர்த்தி ஸ்தோத்ரம்.

அளித்த இடத்தில் கடவுள் இருக்கிறார். நம்மிடம் வருவதற்காகக் கடவுள் அணியும் பிரகாசமான முகமூடிதான் குரு. நாம் தொடர்ந்து அவரைப் பார்க்கும்போது, முகமூடி மெள்ள விலகி கடவுள் வெளிப்படுகிறார்.

'தெய்வீகப் பேரின்பமே மனித உருவில் வந்தவரும், மிக உயர்ந்த ஞானத்தின் உருவமானவரும், மிகச் சிறந்த பேற்றை அளிப்பவருமான குருவை நான் வணங்குகிறேன். அவர் பரிசுத்த மானவர், பரிபூரணர், இரண்டற்ற ஒன்றேயானவர், என்றும் உள்ளவர், இன்ப துன்பங்களுக்கு அப்பாற்பட்டவர், எண்ணங் களுக்கு அப்பாற்பட்டவர், குணங்களைக் கடந்தவர், எல்லா வற்றிற்கும் அப்பாற்பட்டவர்.' குரு உண்மையில் இப்படித்தான் இருக்கிறார். சீடன் அவரைக் கடவுளாக எண்ணி நம்புகிறான், போற்றுகிறான், கீழ்ப்படிகிறான், கேள்வி எதுவும் கேட்காமல் பின்பற்றுகிறான்; இதில் ஆச்சரியம் எதுவுமில்லை. குருவுக்கும் சீடனுக்கும் உள்ள உறவுமுறை இதுதான்.

சீடன் நிறைவேற்ற வேண்டிய அடுத்த நிபந்தனை, முக்தியில் தீவிர நாட்டம் கொள்வதாகும்.

கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருக்கும் தீ நம்மை எரித்துவிடும் என்று தெரிந்தும், புலன்கள் நம்மைச் சுட்டெரிக் கின்றன என்று தெரிந்தும், அவை நமது ஆசையை அதிகரிக் கின்றன என்று தெரிந்தும், தீயில் பாய்ந்து சாகும் விட்டில் பூச்சிகளைப்போல் நாம் இருக்கிறோம். 'ஆசை, அதை அனுபவிப்பதன்மூலம் திருப்தியுறுவதில்லை. வெண்ணெய் தீயைக் கொழுந்துவிட்டெரியச் செய்வதுபோல் போகம் ஆசையை அதிகரிக்கிறது.[1] ஆசை ஆசையினால் மேலும் அதிகரிக்கிறது. இதெல்லாம் தெரிந்தும் மக்கள் எப்போதும் அதில் மூழ்கிக்கொண்டுதான் இருக்கிறார்கள். பிறவிதோறும் போகப்பொருட்களின் பின்னால் போகிறார்கள். அதன் காரணமாக மிகவும் துன்புறுகிறார்கள், இருந்தும் அவர்களால் ஆசையைவிட முடியவில்லை. ஆசை என்னும் கொடிய தளை யிலிருந்து அவர்களைக் காப்பாற்ற வேண்டிய மதத்தைக்கூட அவர்கள் ஆசையைத் திருப்தி செய்வதற்கான ஒரு கருவியாகப் பயன்படுத்துகிறார்கள். உடம்புடனும், புலன்களுடனும், ஆசை என்னும் அடிமைத்தனத்துடனும் உள்ள தளைகளை அறுக்கும்படி அவர்கள் இறைவனைப் பிரார்த்திப்பதே இல்லை.

---

1. ஸ்ரீமத்பாகவதம் 9. 19. 14

அதற்குப் பதிலாக, ஆரோக்கியம், சொத்து, நீண்ட ஆயுள் இவையெல்லாம் வேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள். 'ஓ ஆண்டவனே! என்னுடைய தலைவலியைப் போக்கு. எனக்குப் பணம் கொடு'—இப்படித்தான் வேண்டுகிறார்கள்.

அவர்களுடைய பார்வையின் பரப்பு மிகவும் குறுகி விட்டது, மிகவும் இழிந்துவிட்டது. மிகவும் மிருகத்தனமாகி விட்டது, மிகவும் அருவருப்பாகி விட்டது. இந்த உடலுக்குமேல் எதையும் யாரும் ஆசைப்படுவதில்லை. ஓ என்ன சீரழிவு! என்ன வேதனை! அவர்களுக்கு வேண்டியது இந்தச் சதை, ஐம்புலன்கள், வயிறு, அவ்வளவுதான்! வயிற்றையும் பாலுணர்ச்சியையும் தவிர வேறு என்னதான் இந்த உலகம்! கோடிக்கணக்கான ஆண்களையும் பெண்களையும் பாருங்கள். இவற்றிற்காகத்தான் அவர்கள் வாழ்கிறார்கள். இவற்றை அவர்களிடமிருந்து எடுங்கள், அவர்கள் தங்கள் வாழ்க்கையைச் சூன்யமாக, பொருளற்றதாக, சகிக்கமுடியாததாகக் காண்பார்கள்.

நாம் அப்படித்தான் இருக்கிறோம். நமது மனமும் அப்படித்தான் இருக்கிறது; வயிற்றுப் பசியை, சிற்றின்ப வெறியைத் தீர்த்துக்கொள்ள அது எப்போதும் வழிமுறைகளைத் தேடிக் கொண்டிருக்கிறது. எப்போதும் இப்படியே நடந்து கொண்டிருக்கிறது. இடையறாத துன்பம் நிலவுகிறது. உடலின் இந்த ஆசைகள் தற்காலிக இன்பத்தைக் கொடுத்து விட்டு, நிரந்தரமான துன்பத்தையும் தருகின்றன. மேற்பரப்பில் அமுதமும் கீழே விஷமும் உள்ள கோப்பைத் தண்ணீரைக் குடிப்பதுபோன்றது இது. இருந்தும் நாம் இவற்றின் பின்னாலேயே சென்று கொண்டிருக்கிறோம்.

இதற்கு என்ன செய்வது? இந்தத் துன்பங்களிலிருந்து விடுபட ஒரே வழி புலன்களையும் ஆசைகளையும் துறப்பதே. ஆன்மீக வாழ்க்கை தேவையென்றால் துறந்தேயாக வேண்டும். இதுதான் உண்மையான பரிசோதனை. உலகைத் துறவுங்கள், பொருளற்ற இந்தப் புலன்களைத் துறந்துவிடுங்கள். ஒரே ஒரு உண்மையான ஆசைதான் உள்ளது. அதுதான் உண்மையைத் தெரிந்துகொள்வது, ஆன்மீக வாழ்க்கை வாழ்வது. உலோகாயதம் வேண்டாம், அகந்தை வேண்டாம், நான் ஆன்மீக வாழ்க்கை வாழ்ந்தேயாக வேண்டும். இந்த ஆசை தீவிரமாகவும் உறுதியாகவும் இருக்க வேண்டும். ஒருவன் அசைய முடியாதபடி அவனுடைய கைகளும் கால்களும் கட்டப்பட்டு, ஒரு நெருப்புத்

துண்டு அவன்மீது வைக்கப்பட்டால், அதை உதறித்தள்ள அவன் தன் முழு ஆற்றலுடன் போராடுவான். இதுபோன்ற தீவிர ஆசை, பற்றியெரிகின்ற இந்த உலகை உதறித்தள்ள இடைவிடாத போராட்டம் எப்போது நிகழ்கிறதோ அப்போது தான் தெய்வீக உண்மையின் ஒரு கணநேரக் காட்சி எனக்குக் கிடைப்பதற்கான தருணம் வந்துள்ளது.

என்னைப் பாருங்கள். என் பர்ஸில் இரண்டு மூன்று ரூபாய்களே உள்ளன, அது தொலைந்துவிட்டால், அதைத் தேட என் வீட்டிற்குள் இருபது தடவை அலைகிறேன். என்ன கவலை, என்ன வேதனை, என்ன போராட்டம்! உங்களில் ஒருவருடன் சிறு மனஸ்தாபம் போதும், இருபது வருடங் களானாலும் அதை மறக்க மாட்டேன். அதை மறக்கவோ மன்னிக்கவோ என்னால் முடியாது. புலன்களின் இத்தகைய அற்ப விஷயங்களுக்காக என்னால் இவ்வளவு போராட முடி கிறது. கடவுளுக்காக இப்படிப் போராட யார் இருக்கிறார்கள்?

'குழந்தைகள் தங்கள் விளையாட்டில் எல்லாவற்றையும் மறக்கிறார்கள். வாலிபர்கள் புலன் நுகர்ச்சியில் பைத்தியமாக இருக்கிறார்கள், வேறு எதைப்பற்றியும் அவர்கள் கவலைப்படு வதில்லை. முதியவர்கள் தங்கள் கடந்த காலத்தின் தவறுகளை நினைத்துக் குமைந்து கொண்டிருக்கிறார்கள். புதிய இன்பங் களை அனுபவிக்க இயலாத அவர்கள் கடந்தகால இன்பங்களை அசை போடுகிறார்கள். அசைபோடுவது—அதைத்தான் அவர்கள் செய்ய முடியும். புலனின்பங்களில் காட்டும் தீவிர ஆசையை அவர்கள் கடவுளிடம் வைப்பதில்லை.

கடவுள்தான் உண்மை, உள்ள ஒரே பொருள் கடவுள்தான், ஆன்மாதான் இருக்கிறது, ஜடப்பொருள் இல்லை என்றெல் லாம் எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் கடவு ளிடம் கோருவது ஆன்மீகத்தை அல்ல, ஜடப்பொருட்களைத் தான். ஜடப்பொருட்களையே அவர்கள் எப்போதும் கேட் கிறார்கள். அவர்களுடைய பிரார்த்தனைகளில் ஆன்மா ஜடப்பொருட்களிலிருந்து பிரிக்கப்படவில்லை. சீரழிவு—இது தான் மதத்திற்கு நேர்ந்துவிட்ட கதி. எல்லாம் வெறும் போலித் தனமாகி வருகிறது. வருடங்கள் ஓடுகின்றன, ஆனால் ஆன்மீக விஷயமாக ஒரு முன்னேற்றமும் இல்லை.

மனிதன் ஒன்றே ஒன்றிற்காகத்தான் ஏங்க வேண்டும், அதுதான் ஆன்மா. ஏனெனில் ஆன்மா ஒன்றுதான் உள்ளது. அதுதான் லட்சியம். இப்பொழுது உங்களால் அதை அடைய

முடியாதென்றால், 'அதுதான் லட்சியம். அது எனக்குத் தெரி கிறது. ஆனால் என்னால் முடியவில்லை' என்று சொல்லுங்கள். ஆனால் அதை நீங்கள் செய்ய மாட்டீர்கள். நீங்கள் உங்கள் நிலைக்கு மதத்தை இழுத்து வருகிறீர்கள், ஆன்மாவின் பெயரில் ஜடப்பொருட்களைத் தேடுகிறீர்கள். நீங்கள் நாத்திகர்கள். நீங்கள் புலன்களைத் தவிர வேறு எதையும் நம்புவதில்லை. 'இன்னார் இன்னபடிச் சொன்னார். அதில் ஏதாவது இருக்க லாம். அதன்படி நடந்து அந்த வேடிக்கையையும் கொஞ்சம் பார்ப்போமே! ஒருவேளை ஏதாவது நல்லது நடக்கலாம். உடைந்த என் கால் ஒருவேளை சரியாகலாம்.'

நோயாளிகள் பரிதாபகரமானவர்கள், ஆனால் மிகப் பெரிய பக்தர்கள் அவர்கள்தான். கடவுளை வேண்டிக்கொண் டால் அவர் தங்களைக் குணப்படுத்துவார் என்று அவர்கள் நம்புகிறார்கள். இதுதான் மதம் என்று கொள்ளாமலும், அவர் களின் பிரார்த்தனை உண்மையானதாகவும் இருக்குமானால் இது அவ்வளவு கெடுதல் என்று சொல்ல முடியாது. துன்பப்படு பவன், உலகப் பொருட்கள் மீது நாட்டம் கொண்டவன், உண்மையைத் தேடுபவன், உண்மையை அறிந்தவன் என்று நான்கு விதமானவர்கள் என்னை வழிபடுகிறார்கள்' என்று ஸ்ரீகிருஷ்ணர் கீதையில் (7.16) கூறுகிறார். துன்பப்படுபவர்கள் அதிலிருந்து விடுபடுவதற்காகக் கடவுளைத் தேடுகிறார்கள், நோயுற்றிருந்தால் நோய் தீர வேண்டும் என்பதற்காக வழிபடு கிறார்கள், செல்வத்தை இழந்துவிட்டால் அது திரும்பக் கிடைப் பதற்காகப் பிரார்த்திக்கிறார்கள். அவரிடம் என்னென்னவோ கேட்பவர்களும் இருக்கிறார்கள். பெயர், புகழ், செல்வம், பதவி என்று இவர்களின் ஆசைக்கு அளவே இல்லை. 'ஓ மேரி, நான் விரும்பும் பொருள் கிடைத்தால் உனக்குக் காணிக்கை செலுத்து வேன். என் பிரார்த்தனைக்கு நீ செவிசாய்த்தால் கடவுளை வழிபடுவேன். எல்லாவற்றிலும் உனக்கு ஒரு பங்கு கொடுப்பேன்' என்பார்கள் அவர்கள்.

இவ்வளவு உலோகாயத எண்ணங்கள் இல்லாவிட்டாலும், கடவுள் நம்பிக்கையற்ற சிலர், அவரைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறார்கள். அவர்கள் தத்துவங்களைப் படிக்கிறார்கள், சாஸ்திரங்களைப் படிக்கிறார்கள், சொற்பொழிவுகள் கேட் கிறார்கள், இன்னும் பல செய்கிறார்கள். இவர்கள் உண்மையை ஆராய்பவர்கள். நான்காவது வகையினர் கடவுளை அறிந்து அவரை வழிபடுபவர்கள். இந்த நான்கு வகையினரும்

நல்லவர்களே, கெட்டவர்கள் அல்ல. அவர்கள் எல்லோரும் கடவுளையே வழிபடுகிறார்கள்.

ஆனால் நாம் சீடர்களாக முயன்று கொண்டிருக்கிறோம். மிக உயர்ந்ததான உண்மையை அறிவதுதான் நம் ஒரே நோக்கம். மிக உயர்ந்ததே நம் லட்சியம். பூரண அனுபூதி என்றெல்லாம் பல பெரிய வார்த்தைகளைச் சொல்லிக் கொண்டிருக்கிறோம். அந்த வார்த்தைகளுக்கு நம்மைத் தகுதி உடையவர்களாக ஆக்கிக் கொள்வோம். ஆன்மாவில் இருந்துகொண்டு ஆன்மாவில் ஆன்மாவை வழிபடுவோம். அடித்தளம் ஆன்மா, நடுக் கட்டிடம் ஆன்மா, முடிவும் ஆன்மாவாக இருக்கட்டும். எங்கும் ஓர் உலகமும் இருக்காது. அது விண்வெளியில் சுழன்று மறைந்து போகட்டும், யார் கவலைப்படப் போகிறார்கள்?

ஆன்மாவில் நிலைத்து நில். அதுதான் லட்சியம். அதை இன்னும் அடையவில்லை என்பது நமக்குத் தெரியும். பரவாயில்லை. நம்பிக்கையை இழக்காதீர்கள், லட்சியத்தைக் கீழே இழுக்காதீர்கள். உங்கள் உடம்பைப் பற்றியும், நீங்கள் உயிரற்ற உணர்ச்சியற்ற ஜடப்பொருள் என்றும் எவ்வளவு குறைவாக எண்ணுகிறீர்கள், ஒளி வீசுகின்ற மரணமற்ற ஆன்மா என்று உங்களை எவ்வளவு அதிகமாக எண்ணுகிறீர்கள் என்பது தான் முக்கியம். அவ்வாறு அதிகமாக நினைக்கும் அளவிற்கு ஜடப்பொருளிலிருந்தும் உடம்பிலிருந்தும் புலன்களிலிருந்தும் முற்றிலும் விடுபட ஏங்குவீர்கள். இதுதான் முக்தியில் தீவிர நாட்டம்.

சீடனின் நான்காவதும் இறுதியுமான நிபந்தனை உண்மை யற்றதிலிருந்து உண்மையைப் பிரிக்கும் விவேகம். உண்மை யானது ஒன்றே ஒன்றுதான், அதுதான் கடவுள். எந்த நேரமும் மனம் அவரை நோக்கிச் செல்ல வேண்டும். அவருக்கு அர்ப் பணிக்கப்பட்டிருக்க வேண்டும். கடவுள் இருக்கிறார், வேறு எதுவும் இல்லை. மற்ற எல்லாம் வருகின்றன, போகின்றன. உலகத்தைப் பற்றிய ஆசை, மாயை. ஏனெனில் உலகம் உண்மை யற்றது. மற்றவை எல்லாம் உள்ளது உள்ளபடி தெரியும்வரை, அதாவது அவை உண்மையற்றவை என்பது தெரியும்வரை மனத்தில் கடவுளைப் பற்றிய நினைவே அதிகரித்துக் கொண்டே போக வேண்டும்.

சீடனாக விரும்புபவன் இந்த நான்கு நிபந்தனைகளையும் நிறைவு செய்ய வேண்டும். இவற்றை நிறைவு செய்யாமல் உண்மையான குருவின் தொடர்பு அவனுக்குக் கிடைக்காது.

அதிர்ஷ்டவசமாக அவர் கிடைத்தாலும், அவர் கொடுக்கும் சக்தி இவனது வளர்ச்சியைத் துரிதப்படுத்தாது.

இந்த நிபந்தனைகளை நிறைவேற்றுவதில் விட்டுக் கொடுப்பது என்பது சிறிதும் இருக்கக் கூடாது. நிபந்தனைகள் பூர்த்தியான பிறகு, இந்த ஆயத்தங்கள் எல்லாம் ஆன பிறகு, சீடனின் இதயத் தாமரை விரியும், வண்டு வந்துசேரும். குரு தன் உடம்பிற்குள் இருந்தார், தன்னுள் இருந்தார் என்பதைச் சீடன் அப்போது அறிவான். அவன் மலர்கிறான், அவன் உணர்கிறான், சம்சாரப் பெருங்கடலைக் கடந்து அப்பால் செல்கிறான். அவன் இந்தப் பயங்கரக் கடலைத் தாண்டுகிறான். பிறகு இரக்கம் காரணமாக, லாபத்தையோ புகழையோ கருதாமல், மற்றவர்களும் இந்தக் கடலைக் கடக்க உதவுகிறான். ❑

## II. மதம்: தத்துவமும் மன இயலும்

### 1. மறு பிறவி[1]

*நீயும் நானும் எத்தனையோ பிறவிகளை எடுத்திருக்கிறோம். உனக்கு அவை தெரியாது. ஆனால் நான் அவற்றையெல்லாம் அறிவேன்.*

—பகவத்கீதை, 4. 5.

எல்லா நாடுகளிலும் எல்லா காலங்களிலும் மனித மனத்தைக் குழப்பி வந்திருக்கும் புதிர்களுள் மிகவும் சிக்கலானது மனிதனே. புரியாத பல்லாயிரம் புதிர்களின் முடிவுகளைக் காணும்படி வரலாற்றின் ஆரம்பம் முதலே மனிதனின் ஆற்றல்கள் தூண்டப் பட்டிருக்கின்றன; அவற்றுள் மிகவும் சிக்கலான புதிர் அவனது சொந்த இயல்பு பற்றியதே. இது முடிவு காண முடியாத புதிர், பிரச்சினைகளுள் எல்லாம் கடினமான பிரச்சினை. நாம் அறிவது, உணர்வது, செய்வது—இவற்றிற்கெல்லாம் தொடக்க மாகவும், இவற்றின் களஞ்சியமாகவும் உள்ளது மனிதனுடைய இயல்பை அறியும் ஆவலே. இந்த ஆவல் மனிதனது முழுக் கவனத்தையும் கவராத காலம் ஒருபோதும் இருந்ததும் இல்லை; இனி இருக்கவும் செய்யாது.

தன்னுடன் மிகவும் நெருங்கிய தொடர்பு கொண்டிருக்கும் அனைத்தின் உண்மையை அறிய வேண்டும் என்ற பேராவல் காரணமாகவும், புறப் பிரபஞ்சத்தை அளந்தறிய அக அளவு ஒன்றைக் காண வேண்டும் என்ற பேராவல் காரணமாகவும், மாறிக்கொண்டே இருக்கும் பிரபஞ்சத்தில் மாறாமல் நிற்கும் ஒரு மையத்தைக் கண்டுபிடித்தே தீர வேண்டும் என்ற அவ சியத்தின் காரணமாகவும் மனிதன் உண்மையைத் தேடத் தொடங்கினான். ஆனால் உண்மை என்ற பொன்னுக்குப் பதி லாகச் சிலவேளைகளில் அவனது கையில் ஒரு பிடி புழுதி கிடைத்திருக்கிறது. ஆராய்ச்சியையும் அறிவையும்விட உயர்ந்த

---

1. நியூயார்க்கிலிருந்து வெளிவரும் Metaphysical Magazine என்னும் பத்திரிகையில் 1895 மார்ச்சில் எழுதியது.

தொரு குரலால் தூண்டப்பட்டபோதும் மனிதன் தனக்குள்ளே ஒளிவிடும் தெய்வீகத்தை உணரப் பல முறை தவறிவிட்டான். ஆனாலும் இந்தத் தேடல் தொடங்கியது முதல் இதுவரையிலும் ஏதாவது ஓர் இனமோ அல்லது யாராவது சில தனி மனிதர்களோ இந்த உண்மைச் சுடர் விளக்கை உயர்த்திப் பிடிக்காத காலம் ஒன்று இருந்ததே இல்லை.

சுற்றுப்புறத்தையும் முக்கியமல்லாத விவரங்களையும் பற்றிய ஒருதலைப்பட்சமான, மேற்போக்கான, தவறுகளுடன் கூடிய கருத்துக்களை மேற்கொண்டதாலும், பல்வேறு நெறிகளின் தெளிவின்மையாலும், புரோகிதர்கள் உருவாக்கிய பயங்கர மூட நம்பிக்கைகளால் உண்மையின் மறு எல்லைக்குப் பரிதாபகரமாகத் துரத்தப்பட்டும் பல அறிஞர்கள் நம்பிக்கையை இழந்துபோய், இக்காலத்திலும் சரி, முற்காலத்திலும் சரி, இந்த உண்மையைத் தேடுவதையே கைவிட்டிருக்கிறார்கள். கைவிட்டது மட்டுமின்றி, இந்த முயற்சி பலன் அற்றது, வீண்வேலை என்று உறுதிபடக் கூறவும் செய்தார்கள். தத்துவ அறிஞர்கள் எவ்வளவுதான் துடிதுடித்தாலும், எவ்வளவுதான் கேலி செய்தாலும் புரோகிதர்கள் கத்திமுனையால் அச்சுறுத்தித் தங்கள் தொழிலை நடத்தி வந்தாலும் உண்மை வெளிப்படாது. யார் பயம் இன்றியும் லாபம் கருதாமலும் உண்மைக்காகவே உண்மையை வழிபடுகிறானோ, அவனுக்கே உண்மை புலப்படும்.

தனி மனிதர்கள் தங்கள் புத்தியால் மேற்கொள்ளும் உணர்வுபூர்வமான முயற்சியாலேயே ஞான ஒளி ஏற்படுகிறது. ஆனால் ஓர் இனம் என்று எடுத்துக்கொண்டால், அது தெரிந்து செய்யும் முயற்சியில்லாமலே, மெதுவாக, சிறிதுசிறிதாக அந்த ஒளி உட்புகுந்து விடுகிறது. தத்துவ ஞானிகள் மாபெரும் மனங்களின் முயற்சிகளுக்கு எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றனர். சாதாரண மக்களிடம் உண்மை எப்படி மெல்லமெல்ல உட்புகுகிறது என்பதை வரலாறு காட்டுகிறது.

மனிதனைப்பற்றிப் பல்வேறு கோட்பாடுகள் இருந்திருக்கின்றன. உடம்பிலிருந்து வேறுபட்ட, அழிவற்ற தனிப் பொருளான ஆன்மாவே மனிதன் என்ற கோட்பாடுதான் அவற்றுள் மிகப் பரவலாக உள்ள ஒன்று. இத்தகைய ஆன்மீகக் கோட்பாட்டை நம்பியவர்களுள் சிந்தனையாளரான பெரும்பாலானோரும் முற்பிறவியையும் நம்பி வந்திருக்கின்றனர்.

இப்போதும் ஒழுங்குப்படுத்தப்பட்ட மதங்களைச் சேர்ந்தவர்களான மனித இனத்தில் பெரும்பான்மையினரும் இந்த

முற்பிறவிக் கோட்பாட்டை நம்புகின்றனர். இதைத் தீவிரமாக மறுக்கின்ற மதங்களைச் சேர்ந்தவர்களாக இருந்தும், நாகரீகம் மிக்க நாடுகளில் வசிக்கும் பல சிறந்த சிந்தனையாளர்கள் இதனை ஆதரிக்கவே செய்கின்றனர். இந்து மதத்திற்கும் புத்த மதத்திற்கும் இது அடிப்படையாக விளங்குகிறது. பழங்கால எகிப்தியர்களுள் பல அறிஞர்கள் இதை நம்பினார்கள். பழங் காலப் பாரசீகர்கள் இதே முடிவுக்கு வந்தார்கள். கிரேக்கத் தத்துவ அறிஞர்கள் தங்கள் தத்துவத்தின் அஸ்திவாரமாக இதைக் கொண்டார்கள். ஹீப்ருக்களுள் உட்பிரிவினரான பார சீகர்கள் இதை ஒப்புக் கொண்டார்கள். முகமதியர்களுள் சூஃபிகள் இதன் உண்மையைத் தெள்ளத் தெளிவாக ஏற்றுக் கொண்டார்கள்.

சில நாட்டு மக்களிடையே காணப்படுகின்ற சிலவகையான நம்பிக்கைகளுக்கு அந்த நாட்டின் சில குறிப்பிட்ட சூழ்நிலை களே காரணம். மரணத்திற்குப் பின்னால் உடம்பின் ஒரு பகுதி வாழ்கிறது என்ற கருத்து ஏற்படுவதற்குக்கூடப் பழங்கால மக்களுக்குப் பல்லாயிர ஆண்டு அனுபவம் தேவைப்பட்டது. உடலுக்கு வேறாக நிற்கும் இதைப் பற்றிய அறிவுபூர்வமான ஒரு கருத்து உருவாவதற்கு இன்னும் பல்லாயிரம் ஆண்டுகள் தேவைப் பட்டன. இறுதியாக ஓர் உணர்வுப் பொருளைப் பற்றிய ஒரு கருத்து எழுந்தது—இந்த உணர்வுப் பொருளுக்கு உடம்புகளுடன் தொடர்பு ஒரு குறிப்பிட்ட காலம் மட்டுமே. இந்த முடிவுக்கு வந்த நாடுகளிடையே மட்டும் தவிர்க்க முடியாத இந்தக் கேள்வி எழுந்தது; 'எங்கே? எங்கிருந்து?'

ஆன்மா பற்றிய கேள்விகளை எழுப்பி ஹீப்ருக்கள் தங்கள் சமநிலையைக் கெடுத்துக் கொள்ளவில்லை. அவர்களைப் பொறுத்தவரையில் மரணத்துடன் எல்லாம் முடிந்துவிடுகிறது. 'நாடு கடத்தப்படுவதற்கு முந்திய பகுதியில், உடலிலிருந்துவேறு பட்ட உயிர்த் தத்துவம் ஒன்றைப்பற்றி பழைய ஏற்பாட்டில் ஹீப்ருக்கள் பேசுகிறார்கள். இதை நெபேஷ், ருவாக், நெஷ்மா என்றெல்லாம் கூறுகிறார்கள். இது உண்மைதான் என்றாலும் இந்தச் சொற்கள் எல்லாம் மூச்சு என்ற கருத்திற்குப் பொருத்த மாகத் தோன்றுகின்றனவே தவிர, உணர்வுப்பொருள், ஆன்மா என்ற பொருளுக்குப் பொருத்தமாகத் தோன்றவில்லை. நாடு கடத்தலுக்கு அப்பால் உள்ள பகுதியில் பாலஸ்தீன யூதர்கள் எழுதியுள்ளதைப் பார்த்தாலும், அழியாத தனி ஆன்மாவைப் பற்றிய பேச்சே காணப்படவில்லை. மாறாக,

இறைவனிடமிருந்து வந்த உயிர்-மூச்சைப் பற்றித்தான் காண்கிறோம். இது உடல் அழிந்தபின் தெய்வீக ருவாக்குடன் கலந்துவிடுகிறது என்று கார்ல் ஹெக்கல் (Karl Heckel) சரியாகத் தான் சொல்கிறார்.

பழங்கால எகிப்தியர்களிடையேயும் சால்டியர்களிடையே யும் ஆன்மாவைப் பற்றிய சில வினோத நம்பிக்கைகள் இருந்தன. மரணத்திற்குப் பின்னரும் வாழும் பகுதி என்று இவர்கள் கூறு வதைப் புராதன இந்துக்களோ, பாரசீகர்களோ, கிரேக்கர்களோ அல்லது வேறு எந்த ஆரிய இனத்தினரோ கூறும் ஆன்மாவுடன் தொடர்புபடுத்தி, குழப்பிக்கொள்ளக் கூடாது. ஆன்மாவைப் பற்றிய கருத்தைப் பொறுத்தவரையில், ஆரியர்களுக்கும் சம்ஸ் கிருதம் பேசாத மிலேச்சர்களுக்கும் இடையே மிகப் பழங்காலத் திலிருந்தே ஒரு பெரிய வேற்றுமை இருந்தது. ஒவ்வோர் இனத் தினரும், இறந்தவர்களின் உடம்புகளை என்ன செய்தார்கள் என்பது இந்தக் கருத்திற்குப் புற விளக்கமாக இருந்தது. கவன மாகப் புதைப்பதாலும், மருந்துப் பூச்சு போன்ற சிரமமானமுறை களாலும் உடல்களை அழியாமல் காக்க மிலேச்சர்கள் முயன் றார்கள்; ஆரியர்களோ பொதுவாக உடல்களை எரித்தார்கள்.

இங்கேதான் ஒரு பெரிய ரகசியத்திற்கான திறவுகோல் இருக்கிறது—எகிப்தியர், அஸ்ஸிரியர், பாபிலோனியர் போன்ற எந்த மிலேச்ச இனத்தினரானாலும் சரி, உடலிலிருந்து வேறு பட்ட ஆன்மா என்ற ஒன்று உண்டு, என்ற கருத்தை ஆரியர் களிடமிருந்து, முக்கியமாக இந்துக்களிடமிருந்தே அவர்கள் பெற்றார்கள்.

'ஆன்மா அழிவற்றது என்ற உண்மையை முதன்முதலில் கண்டுபிடித்தவர்கள் எகிப்தியர்களே' என்கிறார் ஹெரடோட் டஸ் (Herodotas). உடம்பு அழிந்தபின் இந்த ஆன்மா பிறக்கும் ஒரு பிராணியின் உடம்பில் திரும்பத்திரும்பப் புகுகிறது. இவ்வாறு இது தரைவாழ் உயிரினங்கள், நீர்வாழ்ப் பிராணிகள், பறவைகள் முதலிய எல்லா உடல்களிலும் பிறந்து பிறந்து இறக்கிறது. முடிவாக மூவாயிரம் ஆண்டுகளுக்குப்பின் திரும்ப வும் மனித உடலை அடைகிறது என்ற கொள்கையை எகிப்தி யர்கள் கொண்டிருந்ததாக இவர் கூறுகிறார். ஆனால் எகிப்தைப் பற்றி ஆராய்ந்த நவீன ஆராய்ச்சியாளர்கள், எகிப்திய மதங் களில் மறுபிறவிக் கருத்தின் சுவடுகூட காணப்படவில்லை என்கின்றனர். மாஸ்பரோ. ஏ. எர்மன் (Maspero. A. Erman)மற்றும் பிரபல எகிப்திய ஆராய்ச்சியாளர்களின் முடிவுகளும்

எகிப்தியர்களிடையே மறுபிறவிக் கொள்கை இடம் பெற வில்லை என்பதையே ஊர்ஜிதம் செய்கிறது.

பழங்கால எகிப்தியர்களின் கொள்கைப்படி ஆன்மா என்பது ஒரு நகல்-உடல்தான். இதற்குத் தனி இருப்பு ஒன்றும் இல்லை. உடலின் தொடர்பிலிருந்து இதனால் விடுபடவே முடியாது. உடல் இருக்கும் வரைதான் நகல்-உடல் நிலைத் திருக்கும்; உடல் அழிய நேர்ந்தால் இந்த நகல்-உடல் மீண்டும் ஒரு முறை மரணத்தையும் அழிவையும் சந்திக்க வேண்டும். இந்த நகல்-உடல் உலகம் முழுவதும் சுற்றித் திரியலாம். ஆனால் இரவில் உடல் இருக்கும் இடத்திற்கு வந்துவிட வேண்டும். நகல்-உடல் எப்போதும் துக்கத்தாலும் பசியாலும் தாகத்தாலும் துன்புறுகிறது; மீண்டும் வாழ்க்கையைச் சுவைக்க மிகுந்த ஆவல் உள்ளதாக இருக்கிறது. ஆனால் இந்த ஆவல் நிறைவேறுவதே இல்லை. உடலின் எந்தப் பாகத்திற்குக் கேடு நேரிட்டாலும், இந்த நகல்-உடலுக்கும் அதே பகுதியில் கேடு நேரிடும். பழங்கால எகிப்தியர்கள் இறந்தவர்களின் உடலைப் பாதுகாப்பதற்காகப் பட்ட சிரமத்திற்கெல்லாம் காரணம் இந்த நம்பிக்கைத்தான். முதலில் அவர்கள் உடலைப் புதைக்கப் பாலைவனத்தைத் தேர்ந்தெடுத்தனர். அங்குள்ள வறண்ட காற்றின் காரணமாக உடல் நெடுங்காலம் அழியாமல் இருக்கும். இதனால் நகல்-உடலுக்கு நெடுங்கால வாழ்வு கிடைக்கும். நாளாவட்டத்தில் உடலைச் சில மருந்துகளால் பதப்படுத்தி அழியாமல் காப் பாற்றும் முறையை ஒரு தேவதை கண்டுபிடித்தது. இந்த முறைப் படி இறந்த முன்னோர்களின் உடலை நெடுங்காலம் அழியாமல் காப்பாற்றத் தொடங்கினார்கள். இதனால் உடலை விட்டு விலகிய ஆவி ஏறக்குறைய எல்லையற்ற காலம்வரை வாழலாம். இந்த வாழ்வு எவ்வளவு துக்கம் மிகுந்ததாக இருந்தாலும் அது அழியாமல் வாழ வேண்டும் என்று விரும்பினார்கள் அவர்கள்.

தான் இனி அனுபவிக்க முடியாத உலக இன்பங்களைப் பற்றிய ஏக்கம் இந்த ஆவியை என்றும் சித்திரவதை செய்து வந்தது. 'என் சகோதரா, உணவு, பானம்—இவற்றை நிறைய அனுபவியுங்கள்; குடிக்கவும் செய்யுங்கள். காதலையும் வேறு இன்பங்கள் எல்லாவற்றையும் அனுபவியுங்கள். இரவு பகல் என்று பாராமல், காதலையும் வேறு இன்பங்கள் எல்லாவற் றையும் வேண்டிய அளவு அனுபவியுங்கள். நெஞ்சில் துக்கத் திற்கு இடமே கொடுக்காதீர்கள். உலகில் மனிதன் வாழ்வது சில ஆண்டுகள்தானே! மேற்கு நாடு தூக்கமும் கறுத்த

நிழல்களும் நிறைந்தது. இங்கே ஒருமுறை, பதம் செய்த உடலாகப் புதைக்கப் பட்டவர்கள் தூங்கிக்கொண்டே இருப்பார்கள். அவர்கள் மறுபடி ஒருபோதும் எழுந்து தங்கள் சகோதரர்களுடன் பழக முடியாது. திரும்பவும் அவர்கள் தங்கள் தாய்தந்தையரைக் காண முடியாது. அவர்களின் நெஞ்சமும் தங்கள் மனைவிமக்களை முற்றிலும் மறந்துவிடும். உலகில் வாழும் மக்களுக்குப் பயன்படும்படி பூமியளிக்கின்ற ஓடிப் பாயும் தண்ணீர் என்னைப் பொறுத்தவரையில் உயிரற்றது; பயனற்றது. உலகில் வாழ்பவர்களுக்கெல்லாம் அது பயன்படும் பொருள்; ஆனால் எனக்கோ, அது பயனற்ற அசுத்தப்பொருள். எனக்குச் சொந்தமான இந்த நீர் இப்படி எட்டாப்பொருள் ஆகிவிட்டதே! இந்த இடுகாட்டிற்கு நான் வந்த பிறகு, நான் எங்கே இருக்கிறேன் என்பதும், நான் என்ன என்பதுமே எனக்குத் தெரியவில்லை. குடிக்க எனக்கு நீரைக் கொடுங்கள். நீரின் ஓரத்தில் என் முகம் வடக்கு நோக்கி இருக்கும்படி என்னை அமர்த்துங்கள். தென்றல் காற்று நீரின் வழியே மிதந்து குளிர்ச்சியாக வந்து, என்னை வருடட்டும்; இதனால் என் நெஞ்சில் நிறைந்துள்ள துக்கம் சிறிது குறையட்டும்'[1] என்றெல்லாம் உடலைப் பிரிந்த எகிப்திய ஆவி புலம்புகிறது.

இறந்தபின் ஆன்மாவின் நிலைபற்றி எந்தவிதமான ஊகமோ ஆராய்ச்சியோ எகிப்தியர் செய்த அளவுக்கு சால்டியர்கள் செய்யவில்லை. என்றாலும் ஆன்மா என்பது ஒரு நகல்-உடல், கல்லறையில் உள்ள உடலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது என்றுதான் அவர்களும் கருதினார்கள். உடலுடன் தொடர்பில்லாத ஒரு நிலையை அவர்களால் நினைக்க முடியவில்லை. பிணம் திரும்ப உயிர் பெற்றெழும் என்று அவர்கள் நம்பினார்கள். இஷ்டார் அவர்களின் தேவதை. ஏவா மற்றும் தம்கினா தம்பதியரின் மகனும், இடையனுமான துமுஸி அவளது கணவன். அவள் எத்தனையோ அபாயங்களுக்கு உட்பட்டும் எத்தனையோ அரும்செயல்கள் செய்தும் துமுஸியை உயிர்பெறச் செய்தாள். எனினும் மிகச் சிறந்த பக்தர்கள் பலர் தங்கள் நண்பர்களைப் பிழைக்க வைப்பதற்காக ஒவ்வொரு கோயிலிலும் செய்த பிரார்த்தனைகள் பலன் தரவே இல்லை.'

---

1. மாஸ்பரோ, பிரெஞ்சு மொழியில் மொழிபெயர்த்துள்ள Etudes Egyptiennes என்ற நூலிலிருந்து.

இறந்தவர்களின் ஆவிக்கும் உடலுக்கும் கல்லறைக்கும் தொடர்பு உண்டு என்ற கருத்திலிருந்து விடுபட பழங்கால எகிப்தியர்களாலும் சால்டியர்களாலும் முடியவில்லை. உலக வாழ்வுதான் சிறந்த வாழ்வு. திரும்பவும் இந்த வாழ்வைப் பெறத்தான் இறந்தவர்கள் ஏங்குகிறார்கள். இந்த ஏக்கத்தால் இடையறாது துன்புறும் நகல்-உடலுக்குத் தங்களாலான உதவி களைச் செய்து அதன் ஆயுளை நீடிக்க உயிரோடிருப்பவர்கள் முயல்கிறார்கள்.

இந்தக் கருத்தை அடிப்படையாகக் கொண்டு ஆன்மா வைப் பற்றிய உயர்ந்த கொள்கை எதுவும் உருவாக முடியாது. முதலாவதாக, இந்தக் கருத்து முற்றிலும் லௌகீகமானது, தூல மானது. அது மட்டும் அல்ல, பயமும் துக்கமுமே இதன் அடிப் படையாக உள்ளன. உயிருடன் வாழ்பவர்களின் ஆன்மாக்கள் எண்ணற்ற தீயசக்திகளிடம் சிக்காமல் தப்புவதற்காக, பயனற்ற தும் துன்பம் மிக்கதுமான முயற்சிகளில் ஈடுபட்டு பயந்து நடுங்கி, இறந்தவர்களின் ஆன்மாவைப் போலவே, உலகம் முழு வதையும் சுற்றிய வண்ணம் இருக்கிறது. இவர்களால் கல்லறைக் கும் அழிகின்ற பிணத்திற்கும் அப்பால் போக முடியவில்லை.

ஆன்மாவைப் பற்றிய உயர்ந்த கருத்துக்களுக்கு நாம் வேறு இன மக்களை நாட வேண்டும். இவர்களின் இறைவன் கருணைக் கடல், எங்கும் நிறைந்தவர். ஒளி மிகுந்த, இரக்கம் மிக்க, உதவும் குணம் நிறைந்த பல தேவதைகளாக அவர் வெளிப்படுகிறார். இறைவனை 'தந்தையே!' என்று அழைத்த முதல் இனத்தினர் இவர்களே: 'தந்தையே! தந்தை தனது அன்பு மகனின் கையைப் பிடித்து அழைத்துச் செல்வதுபோல் என் னையும் அழைத்துச் செல்ல வேண்டும்!' இவர்களின் கொள் கைப்படி மனித வாழ்க்கை என்பது முன்னேறும் வாய்ப்பே தவிர அழிவுப் படுகுழி அல்ல; வெறிமிக்க இன்ப அனுபவங் களுக்கு இடையில் எழும் துன்ப முணுமுணுப்பு அல்ல. பசுமை மிகுந்த வயல்கள், காடுகள் இவற்றின் நறுமணத்தோடும் அழ கோடும் கலந்து இவர்களுடைய கருத்துக்கள் நம்மை அடை கின்றன. இவர்கள் இறைவனை வழிபட்டுப் பாடிய பாடல்கள், கதிரவன் எழுவதால் ஒளி பெற்று மலரும் உலகை வரவேற் கின்ற, கவலையற்ற பறவைகளின் பாடல்களைப் போல், தாமாக, சுதந்திரமாக இன்ப நிறைவோடு எழுந்தவை. இந்தப் பாடல்களை எண்பது நூற்றாண்டுகளுக்குப் பின் இன்று நாம் கேட்டாலும் புதியனவாக இறை உலகத்திலிருந்து வரும்

பாடல்களைப் போல் இன்பம் தருகின்றன. இந்த இனம்தான் பழங்கால ஆரிய இனம்.

'மரணமும் அழிவும் இல்லாத, விண்ணின் பேரொளி என்றும் அழியாது வீசுகின்ற அந்த உலகத்திற்கு என்னை அழைத்துச் செல்லுங்கள்', 'அரசனாகிய விவசுவானின் மகன் வாழும் அந்த உலகை, விண்ணின் ரகசியக் கோயிலில் இருக்கின்ற அந்த உலகை நான் அடையுமாறு செய்து, என்னை அழிவற்றவன் ஆக்குங்கள்', 'எல்லோரும் இன்பமாக எந்த உலகத்தில் வாழ்கிறார்களோ, அந்த உலகத்தை நான் அடையுமாறு செய்து என்னை அழிவற்றவன் ஆக்குங்கள்!' விண்ணுலகின் உட்பகுதியின் மூன்றாம் அடுக்கிற்கு, ஒளிமிக்க உலகங்கள் நிறைந்த ஆனந்த உலகிற்கு என்னை அழைத்துச் சென்று அழிவற்றவன் ஆக்குங்கள்!'—இவையே மிகமிகப் பழைய நூலாகிய ரிக்வேத சம்ஹிதையில் காணப்படும் ஆரியர்களின் பிரார்த்தனைகள்.

மிலேச்ச மற்றும் ஆரிய லட்சியங்களுக்கு இடையே மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேற்றுமை இருப்பது இப்போது தெரிகிறது. மிலேச்சர்களுக்கு இருப்பவை எல்லாம் இந்த உலகமும் இந்த உடலுமே. அவை மட்டுமே உண்மையானவை; விரும்பத்தக்கவை. மரணத்தின்போது ஏதோ ஒரு சிறு உயிர்ச் சக்தி உடலை விட்டுப் பறந்து போகிறது. 'புலன்களால் அனுபவிக்கும் இன்பம் இனிமேல் எனக்கு இல்லையே!' என்ற ஏக்கத்தினால் அது சித்திரவதை அடைகிறது. பிணத்தை அழியாமல் காப்பாற்றினால், இந்த உயிர்ச்சக்தியை மீண்டும் உடலுக்குக் கொண்டு வந்துவிடலாம் என்று அவர்கள் நம்புகிறார்கள். எனவே உயிருள்ள மனிதனைவிட இவர்கள் பிணத்திடம் அதிக கவனம் செலுத்துகிறார்கள்! ஆரியர்கள் இதற்கு மாறாகச் சிந்தித்தார்கள்: உடம்பைவிட்டுச் சென்றது எதுவோ, அதுவே உண்மை மனிதன். உடலில் இருக்கும்போது அனுபவித்த இன்பத்தைவிடப் பல மடங்கு உயர்ந்த இன்பம் அதற்கு உடலை விட்டபின் கிடைக்கிறது. எனவே குறைமிக்க இந்த உடலை எரிக்க அவர்கள் விரைந்தார்கள்.

ஆன்மாவைப் பற்றிய உண்மையை அறிவதற்கு வேண்டிய கரு இந்தக் கருத்தில்தான் இருக்கிறது. இங்கே உண்மை மனிதன் என்பவன் உடல் அல்ல; அவன் ஆன்மா. உடலுக்கும் ஆன்மாவிற்கும் உள்ள தொடர்பு பிரிக்க முடியாதது என்ற கருத்தே இங்கு இல்லை. ஆன்ம சுதந்திரம் என்ற மாபெரும் கருத்து

இதன் அடிப்படையில்தான் எழ முடியும். ஆரியர்கள் வெளிப் பகட்டான இந்த உடலாகிய ஆடையை ஊடுருவிச் சென்றார்கள். இந்த உடல், ஆன்மாவை ஆடைபோல் மூடி நிற்கிறது. இந்த ஆன்மா உண்மையில் உருவம் இல்லாதது; தனி இருப்புள்ளது; ஒருமையானது என்பதைக் கண்டுபிடித்தனர். இந்த உண்மை தெரிந்தபின் எழுந்தது தவிர்க்க முடியாத அந்தக் கேள்வி: 'எங்கிருந்து?'

ஆன்மாவின் முற்பிறவி, அழிவின்மை, தனித்துவம் போன்ற கொள்கைகள் முதன்முதலாகத் தோன்றியது இந்தியாவில் ஆரியர்களிடம்தான். இந்த உலகத்தில் உடலோடு வாழும் வாழ்விற்கு முன்னரோ பின்னரோ இருக்கின்ற தனித்த சுதந்திரமான ஆன்மா ஒன்று உள்ளது என்ற கருத்தின் சுவடே எகிப்தியக் கொள்கைகளில் இல்லை என்பதைச் சமீப கால ஆராய்ச்சிகள் தெரிவிக்கின்றன. அந்த நாட்டு ஞானியர் சிலரிடம் இந்தக் கருத்து இருந்தது என்பது உண்மை. ஆனால் அதுவும் இந்தியாவிலிருந்தே சென்றது என்பது தெளிவு.

'நாம் எகிப்திய மதக் கொள்கைகளை ஆழமாக ஆராயும் அளவிற்கு மறுபிறவிக் கருத்து அவர்களுக்குத் தெரியவே தெரியாது என்பது தெளிவாகப் புலப்படுகிறது. சில இடங்களில் இந்தக் கருத்துத் தென்பட்டாலும் அவை ஓஸிரிஸின் உபதேசங்களிலிருந்து பெறப்பட்டவை அல்ல; அவற்றிற்கு அடிப்படை, இந்துக்களின் கொள்கைகளே என்பதை நான் ஆணித்தரமாக நம்புகிறேன்' என்கிறார் கார்ல் ஹெகக்கல்.

பிற்காலத்தில் அலெக்சான்டிரிய யூதர்களிடம் தனி ஆன்மாவைப் பற்றிய கருத்தைக் காண்கிறோம். ஏசுவின் காலத்துப் பார்சிகள், தனி ஆன்மக் கருத்தை நம்பியது மட்டுமின்றி அது பல்வேறு உடல்களை எடுத்து பிறந்து பிறந்து இறக்கிறது என்பதையும் நம்பினார்கள். எனவே ஏசு, முந்தைய தீர்க்கதரிசி ஒருவரின் மறுபிறப்பு என்பதை நம்புவதும், 'எலியாஸ் என்ற தீர்க்கதரிசியின் மறுபிறப்பே ஜான்' என்று ஏசு சொன்னதை நம்புவதும் சுலபமாக இருந்தது. 'நான் சொல்வதை ஏற்றுக் கொள்ளுங்கள்; இவரே எலியாஸ் என்ற தீர்க்கதரிசி. ...' (மத்தேயு 11. 14)

ஆன்மா மற்றும் அதன் தனித்துவம் பற்றிய கருத்து ஹீப்ருக்களிடம் எப்படி வந்தது? சில எகிப்திய ஞானிகள் செய்த உயர் உபதேசங்களிலிருந்துதான் கட்டாயமாக அதை அவர்கள் பெற்றிருக்க வேண்டும். இனி, இந்த எகிப்திய ஞானியர்களுக்கு

இந்தக் கருத்து இந்தியாவிலிருந்து கிடைத்தது. இந்தக் கருத்து அலெக்சான்டிரியா வழியாக எகிப்தை அடைந்தது என்பது கவனத்திற்கு உரியது. ஏனெனில் அலெக்சான்டிரியாவிலும், ஆசியா மைனரிலும் புத்த மதப் பிரச்சாரம் நடைபெற்றது என்பதற்கு பௌத்த வரலாற்றுச் சான்றுகள் உள்ளன.

ஹெலனியருக்கு இடையே மறுபிறவிக் கொள்கையை முதலில் போதித்த கிரேக்கர் பிதகோரஸ் என்று சொல்லப் படுகிறது. பிணங்களை எரிக்கும் பழக்கமும், தனி ஆன்மாவில் நம்பிக்கையும் உள்ள ஆரிய இனத்தவராகிய கிரேக்கர்களால் பிதகோரஸ் உபதேசித்த மறுபிறவிக் கொள்கையை எளிதாக ஒப்புக்கொள்ள முடிந்தது. பிதகோரஸ் இந்தியாவிற்கு வந்து பிராமணர்களிடமிருந்து இந்த உண்மையைக் கற்றுக் கொண்ட தாகக் கூறுகிறார் அபூலியஸ்.

ஆன்மாவே தனிப்பொருள், அதுவே உண்மை மனிதன், அது உடம்பிலுள்ள உயிர்ச் சக்தி மட்டும் அல்ல என்ற கொள்கை பரவியிருந்த இடங்களில் எல்லாம், மறுபிறவிக் கொள்கையும் கட்டாயமாக இருக்கவே செய்தது. ஆன்மாவின் சுதந்திரமான தனி இருப்பை நம்பிய நாட்டு மக்கள் இறந்த உடல்களை எரிப்பதன்மூலம் தங்கள் நம்பிக்கையை ஏறக்குறைய நிரூபிக்கவே செய்தனர்.

இந்த ஆரிய இனத்தினரின் ஒரு பகுதியினரான பாரசீகர் கள் மட்டும் நெடுங்காலத்திற்கு முன்பு, செமிட்டிக் இனத்தின் ஆதிக்கம் இன்றியே பிணங்களை அழிப்பதற்கான ஒரு வினோத முறையைக் கையாண்டனர். அதற்கென்று கட்டிய உயர்ந்த கோபுரங்களின்மீது (Tower of Silence) பிணங்களை அவர்கள் போட்டு விடுகிறார்கள். ஆனால் இந்தக் கோபுரங்களின் பார சீகப் பெயர் 'தஹ' அதாவது 'எரித்தல்' என்ற மூலத்திலிருந்து தோன்றியதே.

தங்கள் இயல்பை அறிவதற்கான ஆராய்ச்சியில் அதிகம் ஈடுபடாத இனத்தினர் 'எல்லாம் உடலே' என்ற எல்லையிலேயே பெரும்பாலும் நின்றுவிட்டனர். சற்று உயர்ந்த அறிவொளி யால் உந்தப்பட்டுச் சற்று அப்பால் சென்றவர்களும், 'எப் படியோ, என்றோ ஒரு நாள், பற்பல ஆண்டுகளுக்குப் பின் இந்த உடலே அழியா நிலையைப் பெற்றுவிடும்' என்ற முடிவுக் குத்தான் வந்தனர்.

சிந்தனை ஜீவி என்ற நிலையில் மனிதனின் உண்மை இயல்பு என்ன என்ற ஆராய்ச்சியிலேயே வாழ்க்கையின் பெரும்

பகுதியையும் கழித்த இந்தோ-ஆரிய இனத்தினர் இந்த உடலுக்கு அப்பால், தங்கள் முன்னோர்கள் பெற விரும்பிய ஒளிமிக்க தெய்வ உடலுக்கும் அப்பால்தான் உண்மை மனிதன் இருக்கிறான் என்று கண்டனர். அவன் ஓர் உணர்வுப் பொருள். அவன் இந்த உடலைச் சில காலம் ஆடையாகக் கொள்கிறான், இது சிதைந்தபின் இதை உதறிவிட்டுச் செல்கிறான் என்பதைப் புரிந்துகொண்டனர். உணர்வுப் பொருள் உருவாக்கப்பட்டதா? சூன்யத்திலிருந்து ஏதோ ஒன்று தோன்றுவதுதான் படைப்பு என்றிருக்குமானால், அந்தக் கேள்விக்கு அழுத்தமான விடை 'இல்லை' என்பதுதான். இந்த ஆன்மாவிற்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை. இது கலப்பும் அல்ல; கூட்டும் அல்ல. இது சுதந்திரமான தனிப்பொருள். எனவே இதைப் படைக்கவும் முடியாது, அழிக்கவும் முடியாது. இது பல நிலைகள் வழியாகப் பயணம் செய்கிறது, அவ்வளவுதான்.

'இவ்வளவு காலமாக இது எங்கிருந்தது?' என்ற கேள்வி இப்போது எழுவது இயல்புதானே! 'தூல நிலையில் பார்த்தால், அது பல உடல்களில் பிறந்து இறந்த வண்ணம் இருக்கிறது; உண்மையில் நுண்நிலையில் பார்த்தால் அது பல்வேறு மனத் தளங்கள் வழியாகச் செல்கிறது' என்று இந்தியத் தத்துவ ஞானிகள் பதில் கூறுகின்றனர்.

இந்தியத் தத்துவ ஞானியர் கண்ட மறுபிறவிக் கொள்கைக்கு வேதங்கள் அல்லாத வேறு ஏதாவது ஆதாரம் இருக்கிறதா? இருக்கிறது. உலகம் முழுவதும் ஒப்புக்கொண்ட வேறு கொள்கைகளுக்கு எவ்வளவு நிச்சயமான ஆதாரங்கள் உண்டோ, அவ்வளவு நிச்சயமான ஆதாரங்கள் இதற்கும் உண்டு என்பதைப் பின்னால் பார்க்க முயற்சிப்போம். மறுபிறவிபற்றி தற்கால ஐரோப்பியச் சிந்தனையாளர்களுள் சிறந்த சிலர் என்ன சொல்கிறார்கள் என்பதை இப்போது பார்ப்போம்.

ஆன்மாவின் அழியாமைபற்றிப் பேசும்போது ஐ.எச். ஃபிக்டே (I. H. Fichte) கூறுகிறார்: 'பிறவிகள் தொடர்கின்றன என்பதை எதிர்க்க இயற்கையில் காணும் ஓர் அம்சத்தைக் காட்டலாம் என்பது உண்மை. ஆரம்பம் உள்ள எதற்கும் என்றேனும் ஒரு முடிவு நிச்சயமாக உண்டு என்பது எல்லோரும் அறிந்த நியாயம். எனவே ஆன்மாவிற்கு மறுபிறவி உண்டு என்றால் முற்பிறவி இருந்தது என்பது நியாயமான முடிவு. ஆனால் இந்த முடிவு ஆன்மாவின் தொடர்ந்த இருப்பை விளக்கும் ஒரு நியாயம் ஆகுமே தவிர, மறுக்கும் நியாயம்

ஆகாது. ''எதையும் ஆக்கவும் முடியாது, அழிக்கவும் முடியாது'' என்னும் ஆன்மீக-பௌதீக சூத்திரம் ஒன்று இருக்கிறது. அதன் பொருள் நன்கு விளங்கினால்தான், ''பௌதீக உடம்பில் புகுந்து வெளிப்படுமுன்னரே ஆன்மா இருந்திருக்க வேண்டும்'' என்ற உண்மை விளங்கும்.'

ஷோபனேர் மறுபிறவிபற்றித் தமது நூலில் இவ்வாறு கூறுகிறார்: 'ஒரு மனிதனுக்குத் தூக்கம் எப்படியோ, அப்படியேதான் மரணம் என்பதும் சங்கற்பத்திற்கு (Will). நினைவும் தனித்துவமும் சங்கற்பத்துடன் இருக்குமானால், கணக்கற்ற காலம் வரையில் ஒரேமாதிரியான சுகதுக்க அனுபவங்களைப் பொறுத்துக்கொண்டு எந்த லாபமும் பெறாமல் வாழ சங்கற்பத்தால் முடியாது. எனவே அது இந்தச் சுகதுக்க அனுபவங்களை எல்லாம் உதறிவிடுகிறது; இதுதான் பெருந்தூக்கம் (Lethe). மரணம் என்னும் இந்த நீண்ட உறக்கத்திற்குப் பிறகு இந்தச் சங்கற்பம் புதிய அறிவோடு புதிய உயிராக வெளி வருகிறது—புதிய பிறவி, புதிய இன்பதுன்ப அனுபவம். இந்தப் புதிய பிறவிகள் சங்கற்பத்தின் தொடர்ச்சியான வாழ்க்கைக் கனவுகள் ஆகும். இந்தச் சங்கற்பம் தானாக அழியாது. ஆனால் தொடர்ந்து புதிய பிறவிகளில் அறிவையும் அனுபவத்தையும் பெற்று முன்னேறி முன்னேறித் தன்னைத்தானே அழித்துக் கொள்கிறது...

'இத்தகைய மறுபிறவி நிகழ்ச்சிக்கு வாழ்க்கை நிகழ்ச்சிகளே எடுத்துக்காட்டாகிறது என்பதை அலட்சியம் செய்யக் கூடாது. தங்கள் காலம் முடிந்துபோன பிராணிகளின் மரணத்திற்கும், புதியவை பிறப்பதற்கும் உண்மையில் ஒரு தொடர்பு இருப்பதை யாரும் மறுக்க முடியாது. கொள்ளை நோய்களில் பலர் ஒன்றாக அழியும்போது தொடர்ந்து மனித குலம் விரைவாக விருத்தி அடைவதைக் காண்கிறோம். 14-ஆம் நூற்றாண்டில் 'கருஞ்சாவு' (Black Death, கொடிய பிளேக் நோய்) உலகின் பல பகுதிகளில் மக்களே இல்லாமல் அழித்து ஒழித்துவிட்டது. ஆனால் அதைத் தொடர்ந்து அசாதாரண விருத்தி காணப்பட்டது: இரட்டைக் குழந்தைகள் அடிக்கடி பிறந்தன. இந்த வேளையில் பிறந்த எந்தக் குழந்தைக்கும் எல்லா பற்களும் முளைத்திருக்கவில்லை என்பது ஒரு வியப்பான விஷயம். நஷ்டத்தை ஈடு செய்யத் தன் முழு ஆற்றலையும் இயற்கை பயன்படுத்தினாலும், சிறு விஷயங்களில் (பற்களில்) மிச்சம் பிடித்துவிட்டது. எப். ஸ்க்னரர் (F. Schnurrer) என்பவர்

1825-இல் தாம் எழுதிய நூலில் (Chronik der Seuchen) இப்படிச் சொல்கிறார்.

'கேஸ்பர் (Casper) என்பவரும் தாம் 1835-இல் எழுதிய நூலில், ''மக்கள் சமுதாயம் ஒன்றில், குறிப்பிட்ட ஒரு காலத்தில் ஏற்படும் பிறப்பின் அளவினால் மக்களின் ஆயுளும் மரணமும் நிச்சயமாகப் பாதிக்கப்படும்; பிறப்பின் விகிதம் எப்போதும் மரண விகிதத்தைப் பொறுத்தே நிகழ்கிறது'' என்ற கருத்தை ஆமோதிக்கிறார். எனவே எப்போதும் எங்கும் பிறப்பும் இறப்பும் ஒரே விகிதத்தில்தான் குறையவும் கூடவும் செய்கின்றன. பல நாடுகளிலும் பல மாகாணங்களிலுமிருந்தும் சேகரித்த கணக்குகளைக் கொண்டு சந்தேகத்திற்கு இடமின்றி இந்த உண்மையை இவர் ஆராய்ந்திருக்கிறார்—

'நான் இளமையில் இறப்பதற்கும் என் தாய்தந்தையரின் திருமணத்திற்கும் காரணகாரியத் தொடர்பு இருப்பது முடியாத காரியம். இந்த மரணத்திற்கான காரணத்தைப் பௌதீகம் அல்லாத உலகிலேயே காண முடிகிறது. இந்தக் காரணமே இந்தப் பௌதீகச் செயலுக்கு, அசைக்க முடியாத நேர்முகமான காரணமாகவும் தோன்றுகிறது. ஒவ்வொரு புதிய உயிரும் புதிய விருப்புடனும் களிப்புடனும் புது வாழ்வுக்கு வருகிறது. இந்தப் புதுப் பிறவியை அது ஒரு கொடையாக ஏற்று அனுபவிக்கிறது. ஆனால் பிரபஞ்சத்தில் இலவசமாகப் பெறும் பொருள் எதுவுமே இல்லை. ஒவ்வோர் உயிரும், இந்த வாழ்வில் மூப்பு மரணம் என்ற துயரங்களை விலையாகக் கொடுத்தே புதிய பிறவியை, புதிய வாழ்வைப் பெற வேண்டியிருக்கிறது. ஆனால் கடந்துபோன அந்தப் பழைய வாழ்வில் புது வாழ்விற்கு அடிப்படையான அழியாத கரு, விதை ஒன்று இருந்தது; அதிலிருந்தே இந்தப் புது வாழ்வு மலர்கிறது. அழிந்த அந்தப்பழைய வாழ்வின் மூலமும் பிறந்த இந்தப் புது வாழ்வின் மூலமும் ஒன்றே'.

சூன்யவாதியான ஹ்யூம் (Hume) என்ற பெரிய ஆங்கிலத் தத்துவ அறிஞர்கூட அழியாத் தன்மையில் தமக்கு நம்பிக்கை இல்லை என்று கூறும் கட்டுரையில் 'மறு பிறவி என்ற ஒரு கொள்கைக்கு மட்டுமே தத்துவஞானம் செவி சாய்க்க முடியும்' என்கிறார். 'மிகப் பழையது என்ற காரணத்திற்காக இந்த மறு பிறவிக் கோட்பாடு நகைப்பிற்கு உரியதாகிவிடுமா? பலவகைத் தவறான மதக் கொள்கைகளால் மனிதனின் பகுத்தறிவு சிதறிப் பலவீனப்பட்டுப் போகுமுன் தெளிவாகத் தோன்றியது இந்த உண்மை என்பதனால் இது பயனற்றதாகிவிடுமா?... புது அறிவும்

புது அனுபவமும் பெறும் திறமை என்னிடம் இருக்கும் வரையில் திரும்பத்திரும்ப நான் ஏன் பிறக்கக் கூடாது? ஒரு பிறவியிலேயே நான் பேரறிவும் அனுபவமும் பெற்று விடு கிறேனா? திரும்பப் பிறப்பதால் ஏற்படும் துன்பத்திற்குக் கூலி யாக எதுவுமே கிடைக்காமலா போகும்?' என்று லெஸ்ஸிங் என்ற தத்துவஞானி கவிதை நயம்மிக்க உள்ளொளியுடன் கேட்கிறார்.

ஓர் ஆன்மா பல பிறவிகளை எடுப்பது பற்றிய உடன்பாட்டு வாதங்களுக்கும் எதிர்மறை வாதங்களுக்கும் அளவே இல்லை. எல்லா காலங்களிலும் தோன்றிய பெரிய சிந்தனையாளர்கள் அனைவரும் இந்த வாதத்திற்குச் சாதகமாகவே பேசியிருக் கிறார்கள். ஆன்மா ஒன்று இருக்கிறது என்றால், அது ஏற்கனவே இருந்துதானே ஆக வேண்டும் என்றுதான் நமக்குத் தோன்று கிறது. 'ஆன்மா தனிப் பொருள் அல்ல; பல ஸ்கந்தங்களின் (கருத்துகளின்) சேர்க்கைதான்' என்று மாத்தியமிக பௌத் தர்கள் வற்புறுத்திக் கூறுவதை ஒப்புக் கொண்டாலும், அவர் களுக்கும் தங்கள் நிலையை விளக்க, ஆன்மாவின் முன்னிருப்புக் கொள்கை தேவைப்படுகிறது.

தொடக்கம் உள்ள ஒன்று முடிவற்றதாக இருப்பது இய லவே இயலாது—இந்த நியாயத்தை யாரும் மறுக்க முடியாது. இதை மறுப்பவர்கள், 'எல்லாம் வல்லவனான இறைவனால் முடியாதது ஒன்றுமே இல்லை' என்று சொல்லி இறைவனுக்குப் பின்னால் ஒளிந்துகொள்ளப் பார்க்கிறார்கள். ஆனால் இது பகுத்தறிவுக்கு ஏற்புடையதாக இல்லை. பெரிய சிந்தனையாளர் சிலரும் இந்த மறுப்பை ஆதரிப்பதுதான் வருத்தம் தருகிறது.

முதலாவதாக, இறைவன் எல்லா நிகழ்ச்சிகளுக்கும் பொதுக் காரணமாக இருப்பவர். மனித ஆன்மாவின் சில நிகழ்ச்சிகளுக்கு அசாதாரணமான காரணம் என்ன என்பதைக் கண்டுபிடிப்பதே பிரச்சினை. எனவே, 'இறைவனால் எல்லாம் முடியும்' என்று கூறிவிடுவது பிரச்சினைக்கான தீர்வு ஆகாது; இது இயலாமையை ஒப்புக்கொள்வது மட்டுமே. மனித அறிவு பற்றிய எல்லா துறைகளிலும் கிளம்பும் எல்லா கேள்விகளுக் குமே இந்த விடையைச் சுலபமாகக் கூறிவிடலாம்; இதனால் ஆராய்ச்சியே நின்றுவிடும்; அறிவு வளர்ச்சியும் நின்றுவிடும்.

இரண்டாவதாக, இறைவனது எல்லாம் வல்ல தன்மையை எதற்கெடுத்தாலும் இழுப்பது வெறும் வார்த்தைஜாலம் மட்டுமே. ஒரு செயலுக்கான காரணத்தை விளைவின் அளவை

வைத்தே அறிகிறோம்; அறிய முடியும். அதற்குமேல் எதுவும் அறிய முடியாது. எல்லையற்ற விளைவு என்பதைப்பற்றி நம்மால் சிந்திக்க முடியாது. அப்படியோர் எல்லையற்ற விளைவைத் தருகின்ற 'எல்லாம் வல்ல' இறைவன் என்கின்ற காரணத்தைப் பற்றியும் நம்மால் சிந்திக்க முடியாது. அது மட்டுமின்றி இறைவனைப் பற்றிய நம் கருத்துக்கள் அனைத்தும் எல்லைக்கு உட்பட்டவை. இறைவன் ஏதோ ஒன்றிற்குக் காரணம் என்ற கருத்து இறைவனுக்கு ஓர் எல்லையைக் கற்பித்து விடுகிறது.

மூன்றாவதாக, அப்படியே வைத்துக் கொண்டாலும், 'சூன்யத்திலிருந்து ஏதாவதொன்று தோன்றியது'; 'முடிவற்ற ஒன்று ஒரு காலத்தில் தொடங்கியது' போன்ற பொருளற்ற வாதங்களை நாம் ஒப்புக்கொள்ள வேண்டியதில்லை. சிறந்த காரணம் ஒன்றைக் காட்ட நம்மால் முடியும்போது இந்த அசட்டு வாதம் எதற்காக?

மனிதருள் பெரும்பாலோருக்கு முற்பிறவி நினைவு இல்லையே என்பதை ஒரு பெரிய காரணமாகக் காட்டி, முற்பிறவி வாதத்தை எதிர்க்கிறார்கள். இந்த வாதம் சரியானது என்று காட்ட வேண்டுமானால், இந்த வாதத்தை முன் வைப்பவர்கள், 'மனித ஆன்மா முழுவதும் நினைவு என்ற மனப் பண்பிலேயே அடங்கி இருக்கிறது' என்று காட்டியாக வேண்டும். இருப்புக்கு ஆதாரம் நினைவுதான் என்றால், இப்போது நம் நினைவில் இல்லாத நம் வாழ்க்கைப் பகுதியெல்லாம் இல்லை என்று ஆகி விடும். ஆழ்ந்த மயக்க நிலையிலும் (Coma), வேறுவகை நோயி லும், நினைவை இழப்பவர்கள் எல்லாம் இல்லாதவர்கள் என்று ஆகிவிடுவார்கள்.

முற்பிறவி உண்டு என்பதற்கு இந்துத் தத்துவ ஞானிகள் காட்டுகின்ற முக்கியமான சில ஆதாரங்கள் உண்டு. அவை அறிவுத்தள நிலையிலேயே செயல்படுபவை.

முதலாவதாக, முற்பிறவி இல்லையானால், பிரபஞ்சத்தில் காணும் வேறுபாடுகளுக்கும் ஏற்றத் தாழ்வுகளுக்கும் விளக்கம் என்ன? நீதியும் கருணையுமே உருவான இறைவனின் ஆட்சியில் பிறக்கும் ஒரு குழந்தை மனித இனத்திற்குப் பயன்படும் நற்குண நற்செய்கை வளர்வதற்கு வேண்டிய சூழ்நிலையில் பிறக்கிறது; அதே வேளையில் அதே ஊரில் பிறக்கும் இன்னொரு குழந்தை, தான் நல்லவனாக ஆகவே முடியாத சூழ்நிலையில் பிறக்கிறது! ஆயுள் முழுவதும் துன்பப்பட வேண்டிய சூழ்நிலையில் பிறக்கும் குழந்தைகளைக் காண்கிறோம். அவை எந்தத் தவறும்

செய்யவில்லை. இது ஏன்? இதற்குக் காரணம் என்ன? யாருடைய அறியாமையின் விளைவு இது? குழந்தையின் குற்றம் இதில் என்ன இருக்கிறது? குழந்தை செய்த குற்றம் ஒன்றும் இல்லை என்றால், தாய்தந்தையரின் செயலுக்காக அது துன்புற வேண்டுமா?

இந்தப் பிரச்சினைக்கு விடை தெரியவில்லை என்று நாம் அறியாமையை ஒப்புக்கொள்வது நல்லது. இதை விட்டுவிட்டு, 'இங்கே படும் துன்பத்தின் விகிதப்படி, இறந்தபின் எங்கோ சுகம் கிடைக்கும்' என்று கூறுவதோ, புரியாத சில புதிர்களைக் காரணமாகக் காட்டி இந்தப் பிரச்சினையைத் தட்டிக்கழிக்க நினைப்பதோ சரியல்ல. நம்மீது யாரோ ஒருவர் காரணம் இல்லாமல் சில இன்னல்களைச் சுமத்துவது அநீதி மட்டும் அல்ல; அக்கிரமமும்கூட. இந்தத் துன்பங்களின் விகிதத்திற்கு ஏற்றபடி பின்னால் சுகம் உண்டு என்ற கொள்கையும் உறுதியாக நிற்க முடியாததே.

இப்படித் துன்பப்படும் சூழ்நிலையில் பிறந்தவர்களுள் எத்தனை பேர் சூழ்நிலையுடன் போராடி உயர்வாழ்வை நோக்கி முன்னேற முயல்கின்றனர்? எத்தனை பேர் அதிலேயே சிக்கி வெளிவர முடியாமல் அமிழ்ந்து போகின்றனர்? தீய, துன்பம் மிக்க சூழ்நிலையில் பிறக்கும்படிக் கட்டாயப்படுத்தப் பட்டவர்கள், கெட்டவர்களாகவும் இரக்கமற்ற கொடியவர்களாகவும் மாறிவிட்டால், அவர்களின் கொடுமைகளுக்காக எதிர்காலத்தில் பரிசு வழங்க வேண்டுமா? அப்படியானால், இவ்வுலகில் ஒருவன் கெட்டவனாகவும் கொடியவனாகவும் இருக்கும் அளவுக்கு சுகமும் நலமும் பின்னால் அவனுக்குக் கிடைக்கும் அல்லவா?

மனித ஆன்மாவின் மகிமைக்கும் சுதந்திரத்திற்கும் உண்மையில் மதிப்புக் கொடுக்க வேண்டுமானால், இந்த உலகத்தில் காணப்படும் ஏற்றத் தாழ்வுகளுக்கும் பயங்கரமான துன்பங்களுக்கும் சரியான விளக்கம் வேண்டுமானால், அதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு. இந்தச் சுமையை எல்லாம் நியாயமான ஒரு காரணத்தின்மீது போட்டுவிட வேண்டும். அந்தக் காரணம் நாமாகவே செய்த செயல்கள் அல்லது கர்மம் என்பதுதான். அது மட்டும் அல்ல; 'ஆன்மா சூன்யத்திலிருந்து ஆக்கப் பட்டது' என்ற கொள்கை 'விதி வலியது' என்ற முடிவிலும், 'எல்லாம் முன்னமே தீர்மானிக்கப்பட்டுவிட்டது' என்ற முடிவிலும்தான் கொண்டு போய்விடுகிறது. இந்த முடிவு கருணை

மிக்க இறைவனுக்குப் பதிலாக, நம் முன் பயங்கரமான, இரக்க மற்ற, எப்போதும் கோபம்மிக்க ஒருவரையே இறைவனாகக் காட்டுகிறது. மதம் மக்களை நல்லவர்களாகவோ கெட்டவர் களாகவோ செய்யும் ஒரு கருவி என்ற அளவில், 'ஆக்கப்பட்ட ஆன்மா' என்ற கொள்கை விபரீதத்தையே உண்டாக்குகிறது. இந்தக் கொள்கை 'விதி வலியது', 'எல்லாம் முன்னரே தீர் மானிக்கப்பட்டுவிட்டது' போன்ற முடிவுகளுக்கே நம்மை அழைத்துச் செல்கிறது. 'நம் மதத்தை நம்பாதவர்களை எல் லாம் கொன்று குவிப்பதே நமக்கு விதிக்கப்பட்ட கடமை' என்று கருதி அப்படியே பல இடங்களில் பல காலங்களில் செய்து கொண்டும் வருகிறார்கள் முகமதியர்களும் கிறிஸ்த வர்களும். அதற்கு இத்தகைய முடிவுகளே காரணம்.

நியாயத் தத்துவஞானிகள் மறுபிறவியைப் பற்றிய ஒரு வாதத்தை எப்போதும் சொல்லி வருகிறார்கள்; அதுவே முடிந்த முடிவாக எனக்கும் தோன்றுகிறது: 'நமது அனுபவங்களை ஒழிக்க முடியாது'. நமது செயல்கள் (கர்மம்) மறைந்துவிட்டது போல் தோன்றினாலும் அவை நமக்குப் புலனாகாமல் (அத் ருஷ்டம்) இருக்கவே செய்கின்றன. அவை திரும்பவும் மனப் போக்குகளாக, (பிரவ்ருத்திகளாக, Tendency) வெளிப்படு கின்றன. சிறு குழந்தைகள்கூடச் சில மனப்போக்குகளுடன்தான் பிறக்கின்றன. மரண பயம் என்பது இத்தகைய மனப்போக்கு களுள் ஒன்று.

திரும்பத்திரும்பச் செய்த செயல்களின் பயனே இந்த மனப்போக்குகள் என்றால், எத்தகைய மனப்போக்குகளுடன் நாம் பிறந்திருக்கிறோமோ, அவற்றையும் இந்த ஆதாரத்தைக் கொண்டே விளக்க முடியும். குழந்தையிடம் காணும் இந்தப் போக்குகள் நிச்சயமாக இந்தப் பிறவியில் பெற்றவையாக இருக்க முடியாது. எனவே அவற்றிற்கான காரணத்தைக் கடந்த காலத்தில்தான் தேட வேண்டும். இனி, நமது மனப்போக்கு களுள் சில, மனிதனுக்கே உரிய சில உணர்வுபூர்வமான செயல் களின் பலனே என்பது நமக்கு நன்றாகத் தெரியும். இத்தகைய மனப்போக்குகளுடன் நாம் பிறந்திருப்பது உண்மையானால், முன்பு எப்போதோ உணர்வுபூர்வமாகச் செய்த செயல்கள் தான் இவற்றிற்குக் காரணங்களாக இருக்க வேண்டும் என்பது உறுதி. அதாவது, மனித நிலை என்கிறோமே அத்தகைய மன நிலையில் இந்தப் பிறவிக்கு முன்பு எப்போதோதான் இத்தகைய செயல்களைச் செய்திருக்க வேண்டும்.

'இந்தப் பிறவியின் மனப்போக்குகள் பழைய உணர்வு பூர்வமான செயல்களின் பலன்' என்று விளக்கும் அளவுக்கு, இந்தியாவின் மறுபிறவி வாதிகளும் சமீபகாலப் பரிணாமவாதிகளும் ஒரே கருத்து உடையவர்களே. வேறுபாடு இதுதான்— ஆன்மீகவாதிகளான இந்துக்கள், 'இவை தனி உயிர்களின் உணர்வுபூர்வமான முயற்சிகளின் விளைவு' என்கிறார்கள்; பரிணாமவாதிகளோ 'இவை பரம்பரை பரம்பரையாகத் தொடர்ந்து வருவது' என்கிறார்கள். 'சூன்யத்திலிருந்து படைப்பு' என்னும் கொள்கைவாதிகளுக்கு இங்கு இடமே இல்லை.

இப்போது சண்டை ஆன்மீகவாதிகளுக்கும் உலகாயதவாதிகளுக்குமே. 'அனுபவங்கள், அந்த அனுபவங்களைப் பெற்ற உயிரில் மனப்போக்குகளாகச் சேமிக்கப்படுகின்றன. இவை அதன் மறுபிறவியின்போது இடையீடின்றித் தொடர்கின்றன' என்று மறுபிறவிவாதிகள் கூறுகின்றனர். 'மூளையே எல்லா செயல்களுக்கும் கர்த்தா. இது பாரம்பரிய முறையில் உடற்கூறுகளாகப் பரிணமிக்கிறது' என்று உலகாயதவாதிகள் கூறுகின்றனர்.

இவ்வாறுதான் மறுபிறவிக் கோட்பாடு நமது மனத்திற்கு எல்லையற்ற முக்கியத்துவம் வாய்ந்தது ஆகிறது. மறுபிறவி, வெறும் உடற்கூற்றுப் பரிணாமம் என்ற இரண்டு கருத்துக்களுக்கு இடையில் உள்ள போராட்டம் உண்மையில் ஆன்மீகத்திற்கும் லௌகீகத்திற்கும் உள்ள போராட்டம். உடற்கூற்றுப் பரிணாமமே எல்லாவற்றிற்கும் போதுமான விளக்கம் தர முடியுமானால், லௌகீகத்தைத் தடுக்க முடியாது. இந்த நிலையில் தனி உயிர் கொள்கை ஒன்றின் தேவையே இல்லை. இது போதிய விளக்கம் அல்ல என்றால், தனி உயிர் ஒன்று பழைய அனுபவங்களை எல்லாம் தன்னோடு கொண்டு புதுப் பிறவி எடுக்கிறது என்ற கொள்கை முற்றிலும் உண்மையாக இருக்க வேண்டும். இந்த இரண்டில் ஒன்று உண்மை—ஆன்மீகம் அல்லது லௌகீகம். இதிலிருந்து தப்ப முடியாது; நாம் எதை ஒப்புக்கொள்வது? ❑

## 2. ஆன்மா அழிவற்றதா?

'மாறுதல் இல்லாத ஒன்றை அழிக்கும் சக்தி யாருக்கும் இல்லை.'

—பகவத்கீதை, 2. 17.

மகாபாரதம் என்னும் சம்ஸ்கிருதப் பெரும் காவியம் இந்தியாவின் இதிகாசங்களுள் ஒன்று. அதில் வரும் வீரரான யுதிஷ்டிரரிடம் தர்மதேவன் கேட்டான்:

'உலகில் மிகவும் வியப்பானது எது?'

'ஏறக்குறைய வாழ்வின் ஒவ்வொரு கணமும் தம்மைச் சுற்றி மரணத்தையே கண்டுகொண்டிருந்தாலும், மக்கள் தங்களுக்கு அழிவே இல்லை என்று உறுதியாக நம்பி, அதை விடாமல் பற்றிக் கொண்டிருப்பதே மிகவும் வியப்பைத் தருவது' என்று அதற்கு விடை கூறினார் யுதிஷ்டிரர்.

உண்மையிலேயே மனித வாழ்வில் அதிர வைக்கின்ற வியப்பு இதுதான். பல்வேறு பிரிவினரும் பல்வேறு காலங்களில் இதற்கு எதிராக எவ்வளவோ பிரச்சாரம் செய்திருந்த போதிலும், புலனுலகம் மற்றும் புலனைக் கடந்த உலகம் இவற்றிற்கு இடையே உள்ள மாயத் திரையைக் கிழித்துச் செல்ல பகுத்தறிவால் முடியாதபோதிலும், தனக்கு மரணமே இல்லை என்ற உறுதிமட்டும் மனிதனை விட்டு நீங்கவில்லை.

நாம் வாழ்க்கை முழுவதும் ஆராயலாம். ஆனாலும் வாழ்வு, சாவு என்ற பிரச்சினைகள் உண்டு அல்லது இல்லை என்பதை நம்மால் அறிவுபூர்வமாக விளக்க முடியாது. மனித வாழ்வுநிலையானது என்றோ, நிலையற்றது என்றோ நாம் நம் ஆசைதீரப் பேசலாம்; எழுதலாம்; பிரச்சாரம் செய்யலாம்; அறிவுரைவழங்கலாம்; கற்பிக்கலாம்; இந்த இரண்டு கருத்துக்களுள் ஒன்றின் தீவிரவாதிகளாக மாறலாம்; புரியாத புதிர்களான பெயர்களை மேலும் நூற்றுக்கணக்காக அதற்குச் சூட்டிவிட்டு 'நாம் இந்தப் பிரச்சினைக்கு அறுதி முடிவு கண்டுவிட்டோம்' என்று தவறான

---

1. 'ஆன்மா அழிவற்றதா?' என்ற கேள்விக்கு சுவாமிஜி அளித்த பதில் இந்தக் கட்டுரை. The New York Morning Advertiser என்ற பத்திரிகையில் 1895 மே மாதம் வெளிவந்தது.

கருத்துடன் நம்மை நாமே ஏமாற்றிக்கொண்டு, கணநேரம் மன அமைதி பெற்றதாக எண்ணி மயங்கலாம்; மத சம் பந்தமான மூட நம்பிக்கைகளையோ அல்லது அவற்றைவிட மோசமான விஞ்ஞான மூடநம்பிக்கைகளையோ நம் ஆற்றல் முழுவதையும் திரட்டி, கெட்டியாகப் பற்றிக்கொள்ளலாம். ஆனால் முடிவில் தர்க்க அறிவான சதுரங்க விளையாட்டில் நாம் மீண்டும்மீண்டும் அடித்துத் தள்ளப்படுவதையே காண்கிறோம்.

இந்த மனப் போராட்டத்திற்கும் சித்திரவதைக்கும் பின்னால், இவை உருவாக்குகின்ற அபாயகரமான முடிவுகளுக்கும் பின்னால் இதுவரையிலும் யாராலும் வெல்லப்படாத, இனியும் வெல்ல முடியாத ஓர் உண்மை ஒளிர்ந்துகொண்டே இருக்கிறது. 'நாமும் அழியப் போகிறோம்' என்பதை உணரும் சக்தி நமது மனத்திற்கு இல்லை என்பதே அந்த உண்மை. அதனையே மகா பாரதம் சுட்டிக் காட்டுகிறது. எனது அழிவை நான் கற்பனை செய்துகொள்ள வேண்டுமானால்கூட நான் ஒரு சாட்சியாக விலகி நின்றாக வேண்டும்.

வினோதமான இந்த விஷயம் என்ன என்பதை அறிந்து கொள்ள முயலும் முன், பிரபஞ்சமே இந்த ஓர் உண்மையை ஆதாரமாகக்கொண்டே நிற்கிறது என்பதை நாம் நெஞ்சில் இருத்திக் கொள்ள வேண்டும். 'புறவுலகத்தின் அழிவின்மை என்பது அகவுலகத்தின் அழிவின்மையுடன் பிரிக்க முடியாத படி இணைந்தது. இந்த இரண்டில் ஒன்று அழியாதது; மற்றொன்று அழிவது' என்று கூறும் எந்தப் பிரபஞ்சக் கொள்கையும் சரியானதுபோல் தோன்றலாம். ஆனால் அகவுலகும் சரி, புறவுலகும் சரி—இரண்டுமே அழியாதவை, நிலையானவை என்பதை ஒரு தூண்டுசக்தியாக, ஒரு காரணமாகக் கொள்ளாமல் உணர்வுச் செயல் எதுவும் நடைபெற முடியாது என்பதை இந்தக் கொள்கைவாதியே ஒப்புக்கொள்ள நேரும்.

மனித மனம் தனது எல்லைகளைக் கடந்து செல்லும்போது இருமைக் கருத்து கரைந்து, பகுபடாத ஒருமைக் கருத்தாக மாறுவதைக் காண்கிறது என்பது முற்றிலும் உண்மை. இந்த நிலையின் இந்தப் பக்கத்தில் எல்லைக்கு உட்பட்ட பிரபஞ்சத்தை நாம் காண்கிறோம். இது ஒன்றையே இந்த நிலையில் நாம் காண முடியும். இது ஆன்மாவிற்காகவே இருக்கும் ஒன்று. எனவே ஆன்மாவின் அழிவைப்பற்றி எண்ணுமுன், அதற்கு விஷயமான பிரபஞ்சத்தின் அழிவைப்பற்றி நாம் எண்ணியே தீர வேண்டும்.

இதுவரையில் தெளிவாக இருக்கிறது. இனிமேல்தான் சிக்கல் ஆரம்பிக்கிறது. சாதாரணமாக நான் என்னைப்பற்றி நினைக்கும்போது உடலாகத்தான் நினைக்கிறேன். 'நான் அழிவற்றவன்' என்ற எண்ணத்துடன், 'நான் உடல்' என்ற எண்ணமும் கலந்தே இருக்கிறது. ஆனால் உடல் நிலையற்றது என்பது வெளிப்படை. பிரபஞ்சமே நிலையற்றதுதான்; அழிந்து கொண்டிருப்பதுதான்.

அப்படியானால் அழியாமை எங்கே இருக்கிறது?

நமது வாழ்வுடன் தொடர்புடைய மற்றோர் அரிய விஷயமும் இருக்கிறது. அதுதான் முக்தி அல்லது சுதந்திரம். அது இல்லாவிடில் 'யாரால் வாழ முடியும்? யாரால் வாழ்வின் இன்பத்தை ஒரு கணநேரம் அனுபவிக்க முடியும்?'

முக்தி என்ற இந்த எண்ணம்தான் நமது ஒவ்வோர் அடியிலும் நமக்கு வழிகாட்டியாக நிற்கிறது; நமது இயக்கம் நடைபெறக் காரணமாக இருக்கிறது; நம் ஒவ்வொருவரிடையே நிலவும் உறவுக்குக் காரணமாக இருக்கிறது; ஏன்? மனித வாழ்வு என்ற துணியின் ஊடும்பாவுமாக இருப்பதே இதுதான். கல்வியறிவு இந்தச் சுதந்திர எண்ணத்தைச் சிறிது சிறிதாக அதன் இடத்தைவிட்டுத் துரத்த முயல்கிறது; அதன் ஆட்சிக்கு உட்பட்ட இடத்திலிருந்து ஒவ்வோர் இடமாகப் பறித்துக் கொள்கிறது; இந்த ஒவ்வொரு வெற்றியையும், காரண காரியம் என்ற இரும்புத் தண்டவாளத்தால் இறுகப் பிணைத்து நிலைநாட்டுகிறது. ஆனால் அந்தச் சுதந்திர எண்ணமோ தன்னை நசுக்குவதற்காகச் செய்யப்படுகின்ற இந்த அறிவின் முயற்சிகளைக் கண்டு சிரிக்கின்றது. தன்னை அழிக்க முயல்கின்ற காரண காரிய வாதங்களுக்கெல்லாம் சிக்காமல் அப்பால் தன்னை வைத்துக் கொள்கிறது அது. வேறு வகையாக எப்படி இருக்க முடியும்? எல்லைக்கு உட்பட்ட பொருள் தன்னை விளக்கிக் கொள்ள வேண்டுமானால், எல்லையற்ற ஒன்றைப் பற்றிய உயர்ந்த பொது விதி (Generalisation) ஒன்று எப்போதும்தேவைப் படுகிறது. சுதந்திரமான ஒன்றைக் காட்டித்தான் கட்டுப்பட்ட ஒன்றை விளக்க முடியும். காரணத்திற்குக் கட்டுப்படாத ஒன்றைக் காட்டித்தான் காரணத்திற்குக் கட்டுப்பட்ட ஒன்றை விளக்க முடியும். ஆனால் இங்கும் அதே பிரச்சினை உள்ளது. எது சுதந்திரமானது—உடலா, மனமா? இந்த இரண்டும், பிரபஞ்சத்தின் மற்ற பொருட்களைப் போலவே சட்டதிட்டங்களுக்குக் கட்டுப்பட்டவை என்பது நமக்கெல்லாம் நன்கு தெரியும்.

இந்தப் பிரச்சினை இப்போது ஓர் இடர்பாடாக மாறி விடுகிறது. இந்தப் பிரபஞ்சம் ஓயாத மாறுதலுக்கு உள்ளாகிக் கொண்டிருக்கின்ற ஒன்று, அதற்குமேல் எதுவும் அல்ல; விலக முடியாதபடி காரணகாரிய விதிகளால் கட்டுப்பட்டது; இதன் ஓர் அணுகூட தன்னளவில் ஒருமையானது அல்ல; ஆனாலும், அழியாத்தன்மை, சுதந்திரம் என்ற மாறாத மனமயக்கத்தை உண்டாக்கிக் கொண்டே இருக்கிறது—இந்தக் கருத்து உண்மை யாக இருக்க வேண்டும். அல்லது, நம்முள்ளும் இந்தப் பிரபஞ்சத் திலும் நிலையான சுதந்திரமான ஏதோ ஒன்று இருக்கிறது; மனித மனத்தில் ஏற்படும் அறியாமை, சுதந்திரம் என்ற எண்ணங் கள் தவறல்ல, மயக்கம் அல்ல என்பதற்கு இதுவே ஆதாரமாக உள்ளது என்பது உண்மையாக இருக்க வேண்டும். பலவற்றில் பரவலாக உள்ள பொதுமையை எடுத்துக் காட்டி உண்மை களை விளக்குவது விஞ்ஞானத்தின் கடமை. விளக்குவதற்காக எடுத்துக்கொண்ட பொருளின் ஒரு பகுதியையே அழித்து, அதை ஆதாரமாகக் கொண்டு, மிகுதியுள்ள பகுதியை விளக்க முன்வரும் விளக்கம் எதுவும் விஞ்ஞான ரீதியாக இருக்க முடி யாது; வேறு எதுவாக வேண்டுமானாலும் இருக்கலாம்.

எனவே நம் மனத்தில் நின்று வற்புறுத்திய வண்ணம் இருக்கின்ற மிக அவசியமான சுதந்திரம் என்ற எண்ணத்தை அலட்சியம் செய்யும் எந்த விளக்கமும் மேற்சொன்ன தவறுக்கு உட்பட்டதே. அதாவது, ஒன்றை விளக்குவதற்காக, விளக்க வேண்டிய பொருளின் ஒரு பகுதியை மறுப்பதாகும். எனவே அந்த விளக்கம் தவறாகும். வேறு வழி என்ன? 'நம் இயல்புக்கு ஏற்றபடி நமக்குள் சுதந்திரமான நிலையான ஒன்று இருக்கிறது' என்பதை ஒப்புக் கொள்வதே.

ஆனால் அந்த ஒன்று உடல் அல்ல; மனமும் அல்ல. உடல் ஒவ்வொரு நிமிடமும் அழிந்துகொண்டே இருக்கிறது. மனமோ தொடர்ந்து மாறியபடி இருக்கிறது. உடல் பலவற்றின் சேர்க்கை; மனமும் அத்தகையதே. எனவே இவை எல்லா மாறுதல்களுக்கும் அப்பாற்பட்ட நிலையை அடைய முடியாது. ஆனால் தூலப் பொருளான இந்த மெல்லிய உறையையும், இதற்கு அப்பாலுள்ள மனம் என்ற நுட்பமான உறையையும் தாண்டி இருக்கிறது ஆன்மா. இதுவே மனிதனது உண்மைத் தத்துவம். இது நிலையானது; என்றுமே பந்தப்படாதது. இதன் அழியாமை, சுதந்திரம் ஆகிய தன்மைகளே எண்ணம், ஜடப் பொருள் போன்ற போர்வைகளை ஊடுருவி, பெயர் உருவம்

என்ற நிறங்களைக் கடந்து, சுதந்திரம் அழியாமை என்ற தன்மை களை வற்புறுத்தி நிற்கிறது. மிகவும் தடித்த அஞ்ஞானம் என்ற போர்வைகளையும் ஊடுருவி இந்த ஆன்மாவின் அழிவின்மை யும், ஆனந்தமும், அமைதியும், தெய்வீகமும் பிரகாசித்து, நாம் இவற்றை உணரும்படிச் செய்கின்றன. ஆன்மாதான் உண்மை மனிதன். அவன் பயமும் அழிவும் பந்தமும் அற்றவன்.

வெளிச் சக்தி எதுவும் பாதிக்க முடியாதபோது, எந்த மாறுதலையும் உண்டாக்க இயலாதபோதுதான் சுதந்திரம் என்பது இருக்க முடியும். எல்லா நியதிகளுக்கும், எல்லா எல்லைகளுக்கும், எல்லா விதிகளுக்கும், காரண காரியம் எல்லா வற்றிற்கும் அப்பால்தான் சுதந்திரம் என்பது இருக்க முடியும். எனவே எந்த வகை மாறுதலுக்கும் உட்படாததுதான் சுதந்திர மாகவும் அழிவற்றதாகவும் இருக்க முடியும். இருக்கின்ற இது தான் அதாவது மனிதனது உண்மைத் தத்துவம்தான் ஆன்மா. இது மாறுதல் இல்லாதது; கட்டுப்பாடுகளுக்கு உட்படாதது. எனவே இதற்குப் பிறப்பும் இல்லை; இறப்பும் இல்லை.

'இந்த மனித ஆன்மாதான் பிறப்பு இறப்பு இல்லாமல் அழிவற்றதாக என்றும் உள்ளதாகத் திகழ்கிறது.' ❑

## 3. சலுகை

லண்டன், 6 டிசம்பர் 1896

இயற்கை முழுவதிலும் இரண்டு சக்திகள் செயல்படுவது போல் தோன்றுகிறது. இவற்றுள் ஒன்று எப்போதும் பிரித்துக் கொண்டே இருக்கிறது; மற்றது எப்போதும் சேர்த்துக் கொண்டே இருக்கிறது. ஒன்று மனிதர்களைப் பிரிக்க முயல்கிறது, மற்றது மக்களையெல்லாம் ஒன்றாக்கி வேற்றுமைகளுக்கு இடையே உள்ள ஒற்றுமையை வெளிப்படுத்த முயல்கிறது. இந்த இரண்டு சக்திகளின் செயல்பாடுகளும் இயற்கையின் எல்லா பகுதிகளிலும், மனித வாழ்விலும் இடம் பெறுவதைக் காண்கிறோம்.

பௌதீகத் தளத்தில் இந்த இரண்டு சக்திகளின் செயல்பாடு மிகத் தெளிவாகத் தெரிகிறது. ஒன்று, பொருட்களைத் தனித் தனியாகப் பிரித்து ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாக்குகிறது; மற்றொன்று, அவற்றை இனங்களாக, வகுப்புகளாக உருவாக்கி, அவற்றிற்கு இடையேயுள்ள குண ஒற்றுமைகளையும் உருவ ஒற்றுமைகளையும் வெளிப்படுத்துகிறது.

மனிதனின் சமுதாய வாழ்க்கைக்கும் இது பொருந்தும். சமுதாய வாழ்வு தொடங்கிய காலத்திலிருந்தே இந்த இரண்டு சக்திகளும் பிரிப்பதும் சேர்ப்பதுமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றன. இவற்றின் செயல்பாடு வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு விதமாக வெளிப்படுகிறது, வெவ்வேறு பெயரைப் பெறுகிறது. ஆனால் இவற்றின் சாரம், அதாவது ஒன்று பிரிப்பதும், மற்றொன்று சேர்ப்பதும் அந்த வெளிப்பாடுகள் அனைத்திலும் உள்ளது. ஒன்று ஜாதியை ஆக்குகிறது, மற்றது அதை உடைக்கிறது. ஒன்று வகுப்புகளையும் சலுகைகளையும் ஆக்குகிறது, மற்றது அவற்றை உடைக்கிறது. பிரபஞ்சமே இந்த இரண்டு சக்திகளின் போர்க்களமாகத் தோன்றுகிறது.

ஒன்றாக்கும் முறை இருந்தாலும்கூட, அதை நாம் முழு ஆற்றலுடன் எதிர்க்க வேண்டும். ஏனெனில் இது சாவில்தான் நம்மைக் கொண்டுபோய் விடும்; பூரண ஒருமை என்பது பூரண அழிவே. பிரிக்கும் சக்தி செயல்படாமல் எப்போது நிற்கிறதோ, அப்போது இந்தப் பிரபஞ்சத்திற்கு முடிவு ஏற்பட்டு விடும் என்று ஒரு பக்கம் வற்புறுத்தப்படுகிறது. நம் முன் தோன்றுகின்ற இந்தப் பிரபஞ்ச நிகழ்ச்சிகளுக்கெல்லாம் காரணம் இந்தப் பிரிக்கும் சக்தியே. ஒருமைப்படுத்துதல் என்பது இவற்றையெல்லாம் ஒரே தன்மையானதாக, உயிரற்ற ஜடப் பொருளாகச் செய்துவிடும். இந்த நிலைமையைத் தவிர்க்கவே மனித சமுதாயம் முயல்கிறது. நம்மைச் சுற்றியுள்ள எல்லா பொருட்களுக்கும் உண்மைகளுக்கும் இந்த நியாயம் பொருந்தும். உடம்பில் ஆகட்டும், சமுதாயப் பிரிவுகளிடையே ஆகட்டும், அது இயற்கையான அழிவையே கொண்டுவரும், சமுதாயப் பிரிவுகளின் மறைவையே தரும். சிந்தனைகளிலும் சரி உணர்ச்சிகளிலும் சரி, அறுதியான சமத்துவம் ஏற்பட்டு விட்டால், மனத்தின் அழிவும் சீர்குலைவுமே விளைவாக இருக்கும். எனவே சமத்துவம் விலக்கப்பட வேண்டும். இது மற்றொரு சாராரின் வாதம். எல்லா நாடுகளிலும் பல்வேறு காலங்களில் இது வற்புறுத்தப்பட்டிருக்கிறது; சொல்லப்பட்ட மொழிதான் வேறு.

ஜாதி முதலிய பிரிவுகளுக்குச் சாதகமாகப் பேசும்போதும், சமுதாயத்தில் மற்றவர்களைத் தவிர்த்து சிலருக்கு மட்டும் சலுகைகளுக்குச் சாதகமாகப் பேசும்போதும் பிராமணர்கள் காட்டுகின்ற நியாயமே இது. ஜாதிகள் அழிந்தால் மனித சமூகமே அழிந்துவிடும் என்கிறார்கள் அவர்கள். இதுவரை வாழ்ந்த சமுதாயங்களுள் தங்களுடையதுதான் மிக நீண்ட ஆயுள் உடையது என்பதற்குச் சாதகமாக வரலாற்றுச் சான்றுகளையும் காட்டுகிறார்கள். எனவே அவர்கள் சற்று துணிவுடனேயே இந்த நியாயத்தை மேற்கொள்கிறார்கள். ஒருவனை நீண்டநாள் வாழச் செய்வது, குறுகிய வாழ்வைத் தருகின்ற ஒன்றைவிடச் சிறந்ததாகத்தானே இருக்க வேண்டுமென்று அதிகாரத்துடன் கேட்கிறார்கள்.

மறுபக்கம், ஒருமைக்குச் சாதகமாகப் பேசுபவர்கள் எக்காலத்திலும் இருக்கிறார்கள். உபநிடதங்கள், மற்றும் புத்தர்கள், ஏசுநாதர்கள் போன்ற மதப் பிரச்சாரகர்களின் காலம் முதல் இன்றுவரையிலும் நோக்கங்களிலும், தாழ்த்தப் பட்டவர்கள்

மற்றும் ஒடுக்கப்பட்டவர்களின் எழுச்சிக் குரல்களிலும், தங்கள் உரிமைகளை இழந்து வாழ்கின்ற மக்களிலும் ஒருமை, சமத்துவம் என்ற இந்த ஒன்றின் வற்புறுத்தல்தான் கேட்டுக்கொண்டிருக்கிறது. ஆனால் மனிதத் தன்மை வலுவாக முன் நிற்கிறது. சில வசதிகளைப் பெற்றவர்கள் அவற்றை விட விரும்புவதில்லை; அதற்கு அனுகூலமான ஒரு வாதம், அது எவ்வளவு ஒருதலையாக, குறுகிய நோக்கம் உள்ளதாக இருந்தாலும், அந்த வாதத்தைப் பயன்படுத்திக்கொள்கின்றனர். இது இரு சாராருக்கும் பொருந்தும்.

தத்துவ உலகில் இந்தக் கேள்வி வேறு உருக் கொள்கிறது. உலகின் பன்மைக்கிடையே ஒருமையை உண்டாக்குகின்ற எதையும் நாம் தேட வேண்டுவதில்லை. மாறுபாடுகளுடன் கூடிய இந்த உலகைக் கொண்டே நாம் திருப்தியடைய வேண்டும். எவ்வளவு துன்பம் நிறைந்ததாகவும் பலவீனமாகவும் தோன்றினாலும் வாழ்க்கையின் சாரம் பன்மைதான் என்று பௌத்தர்கள் சொல்கிறார்கள். ஒருமைதான் உள்ளது; பன்மை என்பது மாறுவது, நிலையற்றது, வெறும் தோற்றம் மட்டுமே என்று வேதாந்திகள் சொல்கிறார்கள். 'பன்மையைப் பார்க்காதே, ஒருமைக்குத் திரும்பிப் போ' என்று வேதாந்தி கூறுகிறான். 'ஒருமையை நாடாதே, அது மனமயக்கம்; பன்மையை நாடு' என்று பௌத்தர்கள் சொல்கிறார்கள்.

மதத்திலும் தத்துவத் துறையிலும் இதே கருத்து வேற்றுமைகள் இன்றுவரையிலும் தொடர்ந்து வந்துகொண்டே இருக்கிறது. ஏனெனில் அறிவுக் கோட்பாடுகளின் தொகை உண்மையில் மிகச் சிறியது. தத்துவமும் தத்துவ அறிவும், மதமும் மத அறிவும் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே அவற்றின் உச்சத்தை எட்டிவிட்டன. அந்த உண்மைகளையே வெவ்வேறு மொழிகளில் நாம் திருப்பிச் சொல்லிக்கொண்டிருக்கிறோம். சிலவேளைகளில் புதிய உதாரணங்களால் சற்று விளக்கம் தர முயல்கிறோம், அவ்வளவுதான். எனவே இன்றும் சண்டை அதேதான். ஒரு பிரிவு, வேறுபாடுகளுடன் கூடிய இந்த உலகைக் கொண்டு திருப்தியடைய வேண்டும் என்கிறது. இந்த வேறுபாடுகள் இருந்தேயாக வேண்டும்; வேறுபாடுகள் நீங்கினால் எல்லாமே போய்விடும் என்று பெரிய வாதம் செய்ய முயல்கிறது; நாம் எதை வாழ்வு என்கிறோமோ, அதற்கு அடிப்படையாக இருப்பது வேறுபாடு என்கிறது. மற்றப் பிரிவோ துணிவுடன் ஒருமையைச் சுட்டுகிறது.

• •

நீதிநெறிக்கு வரும்போது ஒரு பெரிய விலகலைக் காண்கிறோம். இந்த விவாதங்களிலிருந்து துணிவுடன் விலகி நிற்பது ஒருவேளை இந்த நீதிநெறி ஒன்றுதான் போலும். ஏனெனில் நீதிநெறி என்றால் ஒருமை; அதன் அடிப்படை அன்பு. அது இந்த வேறுபாடுகளைப் பார்ப்பதில்லை. நீதிநெறியின் ஒரே நோக்கம் இந்த ஒருமைதான், சமத்துவம்தான். இன்றுவரை கண்டுபிடிக்கப்பட்ட மிக உயர்ந்த நீதிக் கோட்பாடுகள் எவையும் வேறுபாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை; நின்று அவற்றையெல்லாம் ஆராய்ந்து கொண்டிருக்க அவற்றுக்கு நேரமில்லை; அவற்றின் ஒரே நோக்கம் அந்தச் சமத்துவத்தை அடைவதே. ஆராய்ச்சி நாட்டம் கொண்ட இந்திய மனம், அதாவது வேதாந்த மனம், தான் செய்த ஆராய்ச்சியின் பலனாக இந்த ஒருமையைக் கண்டது. பிறகு இந்த ஒருமையையே அனைத்திற்கும் அடிப்படையாகக் கொள்ள விரும்பியது. ஆனால் அதே நாட்டில் வேறு வகை மனம் உடையவர்களும் (பௌத்தர்கள்) இருந்தனர். அவர்களால் எங்கேயும் ஒருமையைக் காண முடியவில்லை. அவர்களுக்கு உண்மை என்பதே வேறுபாடுகளின் தொகுதிதான்; ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் தொடர்பே இல்லை.

ஒரு பிராமணர் ஏதென்ஸ் நகரில் சாக்ரட்டீஸைச் சந்தித்த கிரேக்கக் கதை ஒன்றைப் பேராசிரியர் மாக்ஸ்முல்லர் தமது நூல் ஒன்றில் குறிப்பிடுகிறார். அது என் நினைவுக்கு வருகிறது: 'மிக உயர்ந்த அறிவு எது?' என்று பிராமணர் கேட்டார். 'மனிதனை அறிவதுதான் எல்லா அறிவின் லட்சியமும் முடிவும்' என்று பதில் அளித்தார் சாக்ரட்டீஸ். அதற்கு அந்த பிராமணர், 'கடவுளை அறியாமல் மனிதனை எப்படி அறிய முடியும்?' என்று கேட்டாராம். ஒருவர், அதாவது இக்கால ஐரோப்பாவின் பிரதிநிதியான கிரேக்கர் மனிதனைப்பற்றிய அறிவை வற்புறுத்தினார். உலகின் பழைய மதங்களின் பிரதிநிதியான இந்தியர் இறையறிவை வற்புறுத்தினார். முன்னவர் இயற்கையில் இறைவனைப் பார்க்கிறார், பின்னவர் இறைவனில் இயற்கையைப் பார்க்கிறார். ஆனால் இன்றைய நமக்கு ஒருவேளை இந்த இரண்டையும் விட்டு விலகி நின்று, முழுமையின் பாரபட்சமற்ற ஒரு கருத்தைக் கொள்கின்ற வாய்ப்பு கிடைத்திருக்கிறது.

வேறுபாடுகள் இருப்பது உண்மை, வாழ்க்கை இருக்க வேண்டுமானால் வேறுபாடு அவசியம் என்பதும் உண்மையே. அதேவேளையில் இந்த வேறுபாடுகளில் நிலவுகின்ற ஒருமைய

இந்த வேறுபாடுகளின் மூலமாகவே கண்டறிய வேண்டும் என்பதும் உண்மை. இயற்கையில் இறைவனைக் காண முடியும் என்பது உண்மை, அதேவேளையில் இயற்கையை இறைவனுள் காண இயலும் என்பதும் உண்மை. மனிதனை அறிவதே உயர்ந்த அறிவு, மனிதனை அறிவதன்மூலம் நாம் கடவுளை அறிய இயலும். அதேவேளையில் இறையறிவே மிக உயர்ந்த அறிவு, கடவுளை அறிவதன்மூலம் மனிதனை அறிய முடியும் என்பதும் உண்மை. இவை ஒன்றுக்கொன்று முரணானவை போல் தோன்றினாலும், மனித இயல்புக்கு இவை தேவை யானவை. பன்மையில் ஒருமை, ஒருமையில் பன்மை—இதுவே இந்தப் பிரபஞ்சத் திருவிளையாடல். வேறுபாடுகள், ஒருமை இவற்றின் ஒரு திருவிளையாடலே இந்தப் பிரபஞ்சம். எல்லை யற்றதில் எல்லையுள்ளதன் திருவிளையாடலே இந்தப் பிரபஞ்சம். ஒன்றை ஒப்புக்கொண்டு மற்றதை மறுக்க முடியாது. இரண்டும் ஒரே அறிவின் முடிவுகள் என்றோ, ஒரே அனுபவத்தின் முடிவுகள் என்றோ கொள்ளவும் இயலாது. இவை இப்படியே போய்க்கொண்டிருக்கும்.

எனவே இப்போது நாம் நீதிநெறிகளை ஆராயாமல், குறிப்பிட்ட நமது தலைப்பான மதத்தைப் பற்றி ஆராய்வோம். வாழ்க்கை இருக்கும்வரையில் பன்மை இல்லாத, உயிரற்றது போன்ற ஒரே தன்மை என்பது இருக்க முடியாது; இந்த நிலை விரும்பத்தக்கதும் அல்ல. இதேவேளையில் இதன் மறு பக்கத்தையும் பார்க்க வேண்டும், அதாவது ஒருமை என்பது ஏற்கனவே இருக்கிறது என்பதும் உண்மை. இதுதான் விசித்திரம்—இந்த ஒருமை புதிதாக உருவாக்கப்பட வேண்டிய ஒன்றல்ல, இது ஏற்கனவே உள்ளது, இது இல்லாவிட்டால் பன்மையை நாம் பார்க்க இயலாது. இறைவனை நாம் உண்டாக்க வேண்டுவதில்லை, அவர் ஏற்கனவே இருக்கிறார். எல்லா மதங்களும் இதையே கூறுகின்றன. எல்லையுள்ளதை அறிபவன் எல்லையற்றதையும் அறிந்தவனே. சிலர் எல்லை யுள்ளதை வலியுறுத்தி, தாங்கள் அதையே புறத்தில் அறிந்ததாகக் கூறினர். சிலர் எல்லையற்றதை வலியுறுத்தி, தாங்கள் அதை மட்டுமே அறிந்ததாகக் கூறினர். ஒன்றை விட்டுவிட்டு மற்றதை அறிவது என்பது முரண்பாடு என்று நமக்குத் தெரியும்.

எனவே சமத்துவம், ஒருமை, பரிபூரணம் என்று எப்படிக் குறிப்பிட்டாலும் சரி, அது உருவாக்கப்படவேண்டிய ஒன்றல்ல, ஏற்கனவே இருக்கிறது, இங்கேயே இருக்கிறது. அதை

உணர வேண்டும், புரிந்துகொள்ள வேண்டும், அவ்வளவுதான். அது நமக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், தெளிவான சொற்களால் அதை வெளிப்படுத்த முடிந்தாலும் முடியா விட்டாலும், புலனறிவு போன்ற தெளிவும் உறுதியும் அதற்கு இருந்தாலும் இல்லாவிட்டாலும் அந்த ஒருமை இருக்கவே செய்கிறது. இதை நாம் ஒப்புக்கொண்டேயாக வேண்டும், இல்லையானால் எல்லையுள்ளதையும் நம்மால் அறிய இயலாது. பழைய கொள்கையான பொருளும் அதன் தன்மைகளும் என்பதைப்பற்றி நான் இப்போது பேசவில்லை, ஒருமையைப் பற்றியே பேசுகிறேன். இந்த மாறுபாடுகளுக்கிடையே, நீங்களும் நானும் வேறு என்ற உணர்வு, நீங்களும் நானும் வேறல்ல என்ற உணர்வுக்கும் அதேவேளையில் அடிப்படையாகிறது. இந்த ஒருமை இல்லை என்றால் அறிவு என்பதே கைகூடாத ஒன்றாகி விடும். சமத்துவக் கருத்து இல்லையானால் புலனறிவிற்கோ, அறிவிற்கோ இடமே இருக்காது. இரண்டும் இணையாகவே செல்கின்றன.

பரிபூரணச் சமத்துவம் என்பதுதான் நீதிநெறியின் லட்சியம் என்றால் அத்தகைய ஒரு நிலை சாத்தியமே இல்லை என்றுதான் தோன்றுகிறது. எவ்வளவுதான் முயன்றாலும், எல்லோரும் ஒரேமாதிரி இருப்பது முடியாத ஒன்று. மனிதர்கள் வேறுபாடுகளுடனேயே பிறப்பார்கள். சிலருக்கு மற்றவர்களை விட அதிக ஆற்றல் இருக்கும்; சிலருக்கு இயல்பாகவே சில திறமைகள் இருக்கும், சிலருக்கு இருக்காது. சிலருக்குப் பூரண மான உடம்பு இருக்கும், சிலருக்கு இருக்காது. இதை நாம் ஒருபோதும் தடுக்க இயலாது. அதேவேளையில் பல ஆச்சாரி யர்கள் செய்த ஒழுக்க போதனையும் நம் காதுகளில் ஒலிக்கின் றன: ‘இவ்வாறு ஒரே கடவுள் எல்லா உயிர்களிலும் இருப்பதைக் காண்கின்ற மகான் ஆன்மாவால் ஆன்மாவைக் கெடுத்துக் கொள்வதில்லை; இதனால் அவர் உயர்ந்த லட்சியத்தை அடை கிறார். இந்தச் சமத்துவத்தில் நிலைபெற்ற மனம் உடைய இவர்கள் இந்தப் பிறவியிலேயே சார்பு வாழ்க்கையை வெல் கிறார்கள். ஏனெனில் கடவுள் தூயவர், எல்லோரையும் சமமாகப் பார்ப்பவர். எனவே இத்தகையோர் இறைவனில் வாழ்வதாகச் சொல்லப்படுகிறார்கள்.’ இதுதான் உண்மைக் கருத்து என்பதை நாம் மறுக்க முடியாது. எனினும் புற உருவங்களிலும் நிலை யிலும் சமத்துவம் காண முடியாது என்ற பிரச்சினையும் தொடரவே செய்யும்.

ஆனால் தனிச் சலுகை என்பதை நாம் ஒழித்துவிட முடியும். உண்மையில் உலகின் முன்னுள்ள பணி இதுவே. ஒவ்வொரு நாட்டிலும் உள்ள, ஒவ்வோர் இனத்திலும் உள்ள சமுதாய வாழ்க்கையில் இந்த போராட்டம் இருந்தே வருகிறது. ஒரு பிரிவினர் இயல்பாகவே மற்றொரு பிரிவினரைவிட அறிவுமிக்க வராக இருக்கிறார்கள் என்பதில் பிரச்சினை இல்லை. ஆனால் அதிக அறிவு இருப்பதற்காக அவர்கள், அது இல்லாதவர்களின் சாதாரண சுகங்களைக்கூடப் பிடுங்க முயல்வது சரிதானா என்பதுதான் பிரச்சினை. இந்தச் சலுகையை ஒழிப்பதற்காகத் தான் போராட்டம் நடைபெறுகிறது.

சிலர் மற்றவர்களைவிட உடல் வலிமை பெற்றவராக இருப்பார்கள்; இயல்பாகவே இவர்களால் பலவீனர்களை அடக்கியாளவும் வெல்லவும் முடியும் என்பது வெளிப்படை யான உண்மை. ஆனால் இந்த வலிமை காரணமாக உலகத்தில் கிடைக்கும் இன்பங்களை எல்லாம் அவர்கள் தாங்களே அனுபவிக்க முயல்வது நியாயத்திற்கு விரோதமானது. இதை எதிர்த்துதான் போராட்டம் நடைபெறுகிறது. இயற்கையாகவே உள்ள திறமை காரணமாகச் சிலர் மிகுந்த செல்வம் சேர்த்துக் கொள்வது இயற்கை. ஆனால் பணம் ஏராளம் தேடுவதற்காக, இப்படிப் பணம் திரட்ட இயலாத மற்றவர்களைத் தங்கள் ஆற்றலால் நசுக்குவதோ, அவர்களின் தோள்மீது ஏறிச் சவாரி செய்வதோ நீதியல்ல, இதை எதிர்த்துதான் போராட்டம் நடைபெறுகிறது. மற்றவனிடமிருந்து பிடுங்கி, தான் இன்பம் அனுபவிப்பதே சலுகை என்பது; அதை ஒழிப்பதுதான் காலங் காலமாக நீதிநெறியின் லட்சியமாக இருந்துவருகிறது. இந்த லட்சியம்தான் வேறுபாடுகளை அழிக்காமல் சமத்துவத்தை நோக்கி, ஒருமையை நோக்கிச் செல்வதாக உள்ளது.

இந்த வேறுபாடுகள் எல்லாம் என்றென்றும் இருக்கட்டும்; வாழ்க்கையின் சாரமே அவைதான். நாமும் என்றென்றும் இவ்வாறே விளையாடுவோம். நீங்கள் பணக்காரர்களாக இருக்க லாம், நான் ஏழையாக இருக்கலாம்; நீங்கள் பலசாலிகள், நான் பலவீனன்; நீங்கள் அறிஞர்கள், நான் அறிவற்றவன்; நீங்கள் ஆன்மீகத்தில் உயர்ந்தவர்கள், நான் அதில் தாழ்ந்த நிலையில் இருப்பவன். அதனால் என்ன? நாம் இப்படியே இருக்கலாம். ஆனால் நீங்கள் உடல் வலிமையோ அறிவு வலிமையோ அதிகம் பெற்றுள்ளதால் உங்களுக்கு என்னைவிடச் சலுகை எதுவும் இருப்பதில் நியாயம் இல்லை. உங்களுக்குப் பணம்

அதிகமாக இருப்பதால் நீங்கள் என்னைவிடப் பெரியவர் என்று கருதுவதற்கு எந்தக் காரணமும் இல்லை. ஏனெனில் இந்த வேறுபாடுகளை எல்லாம் மீறி இங்கே சமத்துவம் என்ற ஒன்று உள்ளது.

புற உலகில் வேறுபாடுகளை ஒழிப்பதும், சமத்துவம் காண்பதும் நீதிநெறியின் வேலையாக இருந்ததும் இல்லை, இருக்கப் போவதும் இல்லை. அது முடியவும் செய்யாது, ஏனெனில் அந்த முயற்சி சாவிலும் அழிவிலும்தான் கொண்டு விடும். இந்த வேறுபாடுகளையெல்லாம் மீறி ஒருமை காண்பதும், எல்லா பயங்களையும் மீறி இறைவனை நம்முள் காண்பதும், போலி பலவீனங்களை எல்லாம் மீறி எல்லையற்ற வலிமை எல்லோருக்கும் உரியது என்பதை ஒப்புக்கொள்வதும், வெளியில் தெரிகின்ற முரண்பாடுகளை எல்லாம் மீறி ஆன்மாவின் அழிவற்ற, எல்லையற்ற தூய்மையை அறிந்து கொள்வதுமே நீதிநெறியின் வேலை. இதை நாம் உணர வேண்டும். ஒரு பக்கத்தை மட்டும் பார்ப்பதும், பாதியை மட்டும் எடுத்துக்கொள்வதும் அபாயமானது, அது சண்டையில்தான் கொண்டுபோய் விடும். முழுமையை உள்ளது உள்ள படியே எடுத்துக்கொள்ள வேண்டும், அதையே அடிப்படையாகக் கொண்டு, அதன்மீது நின்று, தனி மனிதன் என்ற முறையிலும், சமுதாயத்தில் ஒருவன் என்ற முறையிலும் நம் வாழ்க்கையின் ஒவ்வோர் அம்சத்திலும் செயல்படுத்த வேண்டும். ❑

## 4. அறிவு: பிறப்பிடமும் பெறுதலும்

உத்போதன் பத்திரிகையின் 12-2-1899 இதழில் எழுதிய
வங்கமொழிக் கட்டுரை

அறிவின் பிறப்பிடம் எது என்பதுபற்றி எத்தனையோ கொள்கைகள் தோன்றியிருக்கின்றன. தேவர்களுள் முதல்வரான பிரம்மாவிடமே எல்லா அறிவுக்கும் திறவுகோல் இருக்கிறது, அவர் தமது சீடர்களுக்கு அந்த அறிவைப் போதித்தார், அது தலைமுறை தலைமுறையாக வந்து, பிற்காலச் சந்ததியினருக்குக் கிடைத்தது என்று உபநிடதங்களில் நாம் படிக்கிறோம்.

பத்து முதல் இருபது லட்சம் யுகங்களால் ஆன, வரையறுக்கப்படாத கால எல்லைக்குள் ஜினர்கள் என்ற அசாதாரணமான, நிறைநிலையை அடைந்த மகான்கள் சிலர் தோன்றுவார்கள், அவர்கள் வாயிலாக அறிவின் கதவு மனித சமுதாயத்திற்குத் திறக்கப்படும் என்று சமணர்கள் கருதுகிறார்கள்.

பௌத்தர்களும் அவ்வாறே நம்புகிறார்கள்; பிரபஞ்சம் தழுவிய, எல்லையற்ற அறிவு பெற்ற புத்தர்கள் குறிப்பிட்ட கால இடைவெளியில் தோன்றுவார்கள் என்று எதிர்பார்த்து நிற்கிறார்கள்.

பௌராணிக இந்துக்களும் இதற்காகவே கடவுளின் அவதாரங்களைக் கற்பிக்கிறார்கள். பிற பணிகளுடன், அவதார புருஷர்களுக்கு, இழந்துபோன ஆன்மீக அறிவைக் காலத்தின் தேவைக்கு ஏற்றவாறு மாற்றியமைத்துத் தருகின்ற சிறப்புப் பணியும் உண்டு என்கிறார்கள் அவர்கள்.

இந்தியாவிற்கு வெளியில் உள்ளவர்களுள் மகானான சொராஸ்டிரர் அறிவின் ஒளியை வானுலகிலிருந்து கொண்டு வந்ததாகப் படிக்கிறோம். அவ்வாறே மோசஸ், ஏசு, முகமது நபி முதலியோரும் இறைவனிடமிருந்து அதிகாரம் பெற்று, தெய்வீக அறிவைத் தங்களுக்கே உரிய சிறப்பு முறைகளால், வழி தவறிய மனித குலத்திற்கு எடுத்துக் கூறினர்.

பிரம்மா என்பது தேவர்களில் மிக உயர்ந்த பதவி. புண்ணியச் செயல்களின்மூலம் யாரும் அந்தப் பதவியைப்

பெறலாம். ஆனால் தேர்ந்தேடுக்கப்பட்ட சிலரே ஜினர்கள் ஆக முடியும், பிறர் ஒருபோதும் அடைய முடியாது; முக்திநிலை வரையில்தான் அவர்கள் செல்ல முடியும். புத்த நிலையை வேறுபாடின்றி யாரும் பெறலாம். ஜொராஸ்டிரர், மோசஸ், ஏசு, முகமது நபி இவர்கள் சில சிறப்புப் பணிகளை நிறை வேற்றுவதற்காகப் பிறந்த மாமனிதர்கள். பௌராணிக முனிவர்கள் கூறுகின்ற அவதாரங்களும் அவ்வாறு சில சிறப்புப் பணிகளை நிறைவேற்றுவதற்காகவே பிறக்கின்றனர். அந்த தெய்வ-மனிதர்களின் இடத்தைப் பெற வேண்டும் என்று பிறர் ஆசைப்படுவது பைத்தியக்காரத்தனம்.

விலக்கப்பட்ட கனியை உண்டதால் ஆதாம் அறிவு பெற் றார். ஜெஹோவாவின் அருளால் சமுதாய சாஸ்திரத்தை நோவா அறிந்தார். ஒவ்வொரு சாஸ்திரத்திற்கும் ஒவ்வொரு தேவதை உண்டு என்ற கொள்கை இந்தியாவில் இருக்கிறது. அந்தச் சாஸ்திரங்களைத் தோற்றுவித்தவர்கள் தேவர்கள் அல்லது பக்குவம் அடைந்தவர்கள். செருப்புத் தைக்கின்ற சாதாரணமான தொழில் முதல் உயர்ந்த ஆன்மீக வழிகாட்டியின் பணி வரை உள்ள ஒவ்வொரு கலையும் அந்தத் தேவர்களோ தெய்வங்களோ விரும்பியபடியே அமைகின்றது. ‘குரு இல்லாமல் எந்த அறிவும் சாத்தியம் இல்லை.’ குருசீட பாரம்பரிய முறைப்படி குரு சீடனுக்கு உபதேசிக்காமல், குருவின் அருளால் குருவின் வாயிலிருந்து நேராக வராமல் அறிவைப் பெற எந்த வழியும் இல்லை.

அறிவைப் புறத்திலிருந்து பெற முடியாது என்கிறார்கள் இந்தியாவின் வேதாந்த மற்றும் பிற தத்துவவாதிகள். அறிவு என்பது மனித ஆன்மாவின் அடிப்படை இயல்பு; ஒவ்வொரு மனிதனுடையவும் அடிப்படைப் பிறப்புரிமை. எல்லையற்ற அறிவின் சேமிப்பு நிலையமாக மனித ஆன்மா இருக்கிறது. எந்தப் புறக் கருவி அதனை ஒளிரச் செய்ய இயலும்? சில பிரிவினரின் கருத்துப்படி அந்த எல்லையற்ற அறிவு எப்போதும் ஒரே மாதிரியாகவே இருக்கிறது, அது அழிந்து போவதே இல்லை. தீய செயல்களின் காரணமாக அது மறைக்கப்பட்டது போல் இருக்கிறது. எனவே பொதுவாக மனிதன் அது இருப் பதை உணர்வதில்லை. திரை விலகியதும் அது தன்னை வெளிப் படுத்துகிறது. வேறு சில பிரிவினரின் கருத்துப்படி, மனித ஆன்மாவின் எல்லையற்ற அறிவு உள்ளடங்கி இருப்பது உண்மைதான். ஆனால் தீய செயல்களின் காரணமாக அது

சுருங்கிவிட்டது; நற்செயல் புரிவதால் இறையருளைப் பெற்று மீண்டும் விரிவடைகிறது.

நமது பிறப்புரிமையான இந்த எல்லையற்ற ஆற்றலையும் அறிவையும் மலரச் செய்ய இறைவனிடம் பக்தி, பற்றின்றிச் செயல்புரிதல், யோக நெறியின் எட்டு சாதனைகளைச் செய்தல், அவற்றை எப்போதும் சிந்தித்தல் போன்ற வேறு பல முறை களையும் நமது சாஸ்திரங்களில் காண்கிறோம். இறுதி முடிவு என்னவென்றால் இந்த முறைகளில் ஒன்றையோ, பல வற்றையோ, அல்லது எல்லாவற்றையும் சேர்த்தோ கடைப் பிடிப்பதன்மூலம் மனிதன் தன் உண்மை இயல்பைப் படிப் படியாக உணர்கிறான்; அவனுள் மறைந்தோ அல்லது திரையால் மூடப்பட்டோ இருக்கின்ற எல்லையற்ற ஆற்றலும் அறிவும் இறுதியில் முழுமையாக வெளிப்படுகின்றன.

மறு புறம் இன்றைய தத்துவவாதிகள் வருகிறார்கள். மனித மனம் எல்லையற்ற சாத்தியக்கூறுகளுக்கு விளைநிலமாக இருக்கிறது என்பதை ஆராய்ச்சியின்மூலம் அவர்கள் கண்டு பிடித்தார்கள். தனி மனம் ஒருபுறமும், அனுகூலமான காலம், இடம், காரணகாரியம் என்ற இந்த மூன்றும் மறு புறமும் இருந்து தனித்தனியாகவும், ஒன்றின்மீது ஒன்றும் செயல் படுமானாலும் மிக உயர்ந்த அறிவுணர்வு நிச்சயமாக வெளிப் படும் என்று அவர்கள் கூறுகின்றனர். இது மட்டுமின்றி, அனு கூலமாக இல்லாத காலத்தையும் இடத்தையும்கூடத் தனி மனிதன் தன் ஆற்றலாலும் உறுதியாலும் வெற்றிகரமாகக் கடக்க முடியும். பலசாலியான ஒருவன் மிகவும் பாதகமான இடத்திலும் காலத்திலும் சிக்கிக் கொண்டாலும், அவற்றை வென்று தன் வலிமையை நிலைநாட்டுகிறான். அது மட்டுமல்ல, செயல்புரிகின்ற அவன்மீது குவிக்கப்படுகின்ற சுமைகள் எல்லாம் நாளடைவில் குறைகின்றன. ஆகவே ஒருவன் ஆரம் பத்தில் வலிமை குன்றியவனாக இருந்தாலும் குறிக்கோளை அடைவதற்கு விடாமுயற்சியோடு முயன்றால் இறுதியில் அந்தக் குறிக்கோளை அடைவது நிச்சயம். சில காலத்திற்கு முன்புவரை நாகரீகமற்று, அறிவற்றுக் கிடந்த காட்டுமிராண்டிகளைப் பாருங்கள். இடைவிடாத முயற்சியால் அவர்கள் நாகரீகத் துறையில் எவ்வாறு முன்னேறி வருகிறார்கள்! மிகத் தாழ்ந்த நிலைகளில் இருந்தவர்களும் தங்களுக்கான வழிகளில் முன் னேறி எதிர்க்க முடியாத பலத்துடன் மிக உயர்ந்த பதவிகளை வகிக்கின்றனர்! மனிதனையே கொன்று தின்று வந்தவர்களின்

பிள்ளைகள் நாகரீகம்மிக்க குடிமக்களாகி வருகிறார்கள், நாகரீக மற்ற சந்தால்களின் சந்ததியர் ஆங்கில அரசின் முயற்சியால், இந்தியப் பல்கலைக் கழகங்களில் நமது வங்காள மாணவர் களுடன் போட்டியிட்டு வெற்றியும் பெற்று வருகிறார்கள். பண்பும் திறமையும் பெற்றோர்களிடமிருந்து தலைமுறை தலை முறையாக வருகிறது என்ற ஒருதலைப் பட்சமான இன்றைய கொள்கை இந்த உண்மையால் படிப்படியாக வலிமையிழந்து வருகிறது.

கடந்தகால, நிகழ்கால, எதிர்கால அனைத்தறிவையும் தன்னகத்தே கொண்டுள்ள அறிவுக் களஞ்சியம் ஒன்று சிந்தனைக்கு எட்டாத காலத்திலிருந்தே இருந்து வருகிறது என்று சிலர் உறுதியாக நம்புகின்றனர். அதனை ஏகபோக உரிமையுடன் தங்கள் முன்னோர்களே பாதுகாத்து வந்தார்கள், இதை முதலில் பெற்றிருந்த பண்டைய ரிஷிகள் பரம்பரை பரம் பரையாக இந்தச் சொத்து தங்களிடமே நிலைக்குமாறு செய் துள்ளார்கள், எனவே இன்று அதன் ஏக உரிமையாளர்கள் தாங்களே என்பது அவர்களின் கூற்று. ஆதலால் உலகத்திலுள்ள மற்றவர் எல்லோரும் அவர்களை வழிபட வேண்டுமாம்!

'அத்தகைய முன்னோர்களைப் பெற்றிராத நாடுகளில் வசிப்பவர்களின் நிலைமை என்னவாகும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?' என்று அவர்களைக் கேட்க விரும்புகிறோம். 'அவர்களின் நிலைமை அதோகதி' என்பதுதான் அவர்களின் பொதுவான பதிலாக இருக்கும். அவர்களுள் இரக்க மனம் படைத்தவர்கள் ஒருவேளை, 'போகட்டும், அவர்கள் வந்து எங்களுக்குப் பணிவிடை செய்யட்டும். அதன் பயனாக அடுத்த பிறவியில் அவர்கள் எங்கள் ஜாதியில் பிறப்பார்கள். இதுவே நாங்கள் அவர்களுக்குத் தரக்கூடிய நம்பிக்கை' என்று கருணையுடன் பதில் சொல்வார்கள். 'நல்லது, நீங்கள் கனவிலும் காண முடியாத புதியபுதிய பலவற்றை விஞ்ஞானம், கலை போன்ற துறைகளின் விஞ்ஞானிகள் இன்று கண்டுபிடித்து வருகிறார்கள். அவற்றை உங்கள் முன்னோர்கள் அறிந்திருந் தார்கள் என்பதற்கும் எந்த விதமான சான்றும் இல்லை. அதற்கு என்ன சொல்லப் போகிறீர்கள்?' 'ஏன், இந்த விஷயங்கள் எல்லாம் எங்கள் முன்னோர்களுக்கு நிச்சயமாகத் தெரியும். துரதிர்ஷ்டவசத்தால் எங்களுக்குக் கிடைக்காமல் போயிற்று. அதற்கு நிரூபணம் வேண்டுமா? அது எங்களால் முடியும். இதோ இந்த சம்ஸ்கிருத சுலோகத்தைப் பாருங்கள். ...'

என்கின்றனர். நேரடியான சான்றுகளை மட்டுமே நம்புகின்ற இன்றைய தலைமுறையினர் இத்தகைய பதில்களுக்கும் நிருபணங்களுக்கும் எந்தவிதமான மதிப்பும் தருவதே இல்லை என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

பொதுவாக எல்லா அறிவையும் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கின்றனர்; ஒன்று உலகியல் அறிவு, அபர ஞானம்; மற்றொன்று ஆன்மீக அறிவு, பர ஞானம். முன்னையது அழிகின்ற பொருட்களைப் பற்றியது, பின்னையது ஆன்மீகத் துறையைப் பற்றியது. இந்த இரண்டு பிரிவுகளுக்கிடையே பெரிய வேற்றுமை இருக்கிறது என்பதிலும், ஒன்றை அடைவதற்கான வழி மற்றதிலிருந்து முற்றிலும் மாறுபட்டது என்பதிலும் எந்தவிதமான சந்தேகமும் இல்லை. குறிப்பிட்ட ஒரு முறையே பொது முறை என்றோ, அதுவே அறிவின் கதவுகளை எல்லாம் திறக்கவல்ல ஒரே திறவுகோல் என்றோ யாரும் கூற முடியாது. என்றாலும் உண்மையில் இந்த வேறுபாடுகள் எல்லாம் அளவில்தானே தவிர, தன்மையில் அல்ல. உலகியல் அறிவும் ஆன்மீக அறிவும் ஒன்றுக்கொன்று விரோதமானவையோ, ஒன்றை ஒன்று மறுப்பவையோ அல்ல; அவை இரண்டும் ஒன்றே, மிகத் தாழ்ந்த அணுவிலிருந்து மிகமிக உயர்ந்த பிரம்மம் வரையிலுள்ள எல்லாவற்றிலும் எல்லா இடத்திலும் நிறைந்து விளங்குகின்ற எல்லையற்ற அறிவே அவை இரண்டும்; படிப்படியாக வளர்கின்ற ஒரே அறிவின் வெவ்வேறான வளர்ச்சி நிலைகளே அவை இரண்டும். இந்த எல்லையற்ற அறிவு, வெளிப்பாட்டின் ஆரம்ப நிலையில் இருக்கும்போது உலகியல் அறிவு என்கிறோம், உயர்ந்த நிலையில் இருக்கும்போது ஆன்மீக அறிவு என்கிறோம்.

'அறிவு அனைத்தையும் சில அசாதாரண மாமனிதர்கள் மட்டுமே பெற்றிருக்கிறார்கள். கடவுளின் கட்டளையின்படி, அல்லது இயற்கையின் உயர்ந்த ஒரு நியதியின்படி அல்லது ஏதோ கர்ம நியதியின்படி இவர்கள் பிறக்கிறார்கள். இவர்கள் மூலமாக அல்லாமல் வேறு எந்த வழியிலும் அறிவு பெற முடியாது.' இந்தக் கருத்து சரியானது, நிச்சயமானது என்றால் புதிதாக ஒன்றைக் கண்டுபிடிக்க யாரும் கடுமையாகப் பாடுபட வேண்டிய அவசியமே இல்லை என்றாகிறது; இதனால் பயிற்சியும் ஆதரவும் இல்லாமல் போகிறது, சமுதாயமே தன் படைப்பாற்றலை இழக்கிறது; அனைத்திலும் பெரிய தீமை என்னவென்றால் சுயமாகச் சிந்தித்துச் செய்கின்ற எதையும்

சமுதாயம் எதிர்க்க முயல்கிறது, தடுக்கத் தலைப்படுகிறது. இதனால் சுய ஆர்வமே மறையத் தொடங்குகிறது. எல்லாம் அறிந்த இந்த மகான்கள் மக்களின் நல்வாழ்வுக்குரிய வழியை என்றென்றைக்குமாக வகுத்திருக்கிறார்கள் என்று முடிவு செய்து விட்டால், இந்தப் பாதையின் எல்லைக் கோடுகளிலிருந்து சிறிது விலகினால்கூட தான் அழிந்துவிடுவேன் என்று சமுதாயம் அஞ்சுவது இயல்பே. ஆகவே கடுமையான விதிகளை ஏற்படுத்தியும், தண்டனைகளைக் காட்டி பயமுறுத்தியும் நிபந்தனையின்றி பணிவுடன் அந்தப் பாதையை ஏற்றுக்கொள்ள அனைவரையும் அது வற்புறுத்துகிறது. இத்தகைய ஒடுங்கிய பள்ளப் பாதையில் நடக்க வைத்து அனைவரையும் கீழ்ப்படியச் செய்வதில் சமுதாயம் வெற்றி பெறுமானால், மனிதனுக்கும் எந்திரத்திற்கும் எந்த வித்தியாசமும் இல்லாமல் போவதே விதியாகிவிடும். வாழ்க்கையின் ஒவ்வொரு செயலும் முன் கூட்டியே நிச்சயிக்கப்படுமானால் சிந்தனைத் திறனை ஏன் பண்படுத்த வேண்டும்? எண்ணமும் செயலும் கட்டுப்பாடின்றிச் சுதந்திரமாகச் செயல்பட இடம் ஏது? சரிவரப் பயன்படுத்தாமல் இருப்பதால் எல்லா செயல்பாடுகளும் காலப்போக்கில் மறைந்துவிடும்; சுய ஆக்கம் (Originality) அறவே அழியும்; கனவு போன்ற உயிரற்ற தன்மை, ஒருவித மயக்கநிலை நாடு முழுவதும் கவியும்; நாடே அதோகதியாகப் போகும். அத்தகைய நாட்டின் அழிவு நெடுந்தூரத்தில் இல்லை.

மாறாக, இதற்கு மறுபுறம் தெய்வப் பேருணர்வு பெற்ற மகான்களின் வழிகாட்டுதல் இல்லாத சமுதாயமே வளரு மானால் நாகரீகமும் அறிவும் செழிப்பும் தங்கள் மகான்களின் வழியில் எப்போதும் நடக்கின்ற சீனர்கள், இந்துக்கள், எகிப்தியர்கள், பாபிலோனியர்கள், இரானியர்கள், கிரேக்கர்கள், ரோமானியர்கள், மற்றும் பழங்காலத்திலும் இக்காலத்திலும் உள்ள பிற சிறந்த நாட்டினரையெல்லாம் புறக்கணித்துவிட்டு, வழிகாட்டிகளே இல்லாமல் சுதந்திரமாக வாழ்ந்து வருகின்ற சூலுக்கள், காபிரிகள், ஹாட்டென்டாட்கள், மற்றும் அந்தமான் தீவுகளிலும் ஆஸ்திரேலியா தீவுகளிலும் வாழ்ந்துவருகின்ற பூர்வீகக் குடிகளைச் சார்ந்தவர்களைத் தழுவிக் கொண்டிருக்க வேண்டுமே!

இவற்றை எல்லாம் சிந்தித்துப் பார்த்தால், அறிவு எங்கும் எல்லோரிடமும் உள்ளது என்பது மறுக்க முடியாத உண்மை என்றாலும், மாமனிதர்கள் காட்டுகின்ற வழி தனிச் சிறப்பு

வாய்ந்தது என்பதையும், குருசீட பரம்பரை முறையில் அறிவை வழங்குவதில் சிறப்பான பெருமை இருக்கிறது என்பதையும் நாம் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். மொத்த அறிவின் வளர்ச்சியில் இவை ஒவ்வொன்றிற்கும் பங்கு உண்டு. ஒவ்வொன்றின் தனிப் பண்புகளாலேயே இவற்றை மதிப்பிட நாம் கற்றுக்கொள்ள வேண்டும். ஆனால் சிலவேளைகளில் சீடர்களும் பக்தர்களும் தங்கள் குருமார்களிடம் கொண்ட அளவுக்கு மீறிய கண்மூடித்தனமான பக்தியால் குரு பக்தி, குரு வழிபாடு என்ற பலிபீடத்தில் உண்மையைப் பலியிட்டு விடு கின்றனர்; அந்தக் குருமார்களையே வழிபட வேண்டும் என்று வற்புறுத்தி, அந்த மகான்கள் தோன்றிய நோக்கத்தின் உண்மையான பொருளையே தவறாகக் காட்டிவிடுகின்றனர்; அதாவது குருவை உயர்த்திப் பாராட்டுவதற்காகக் குருவின் கொள்கையைக் கொன்று விடுகின்றனர்.

மனிதன் சொந்த பலத்தை இழக்கும்போது முன்னோர் களின் பெருமையை எண்ணிச் சோம்பலில் ஆழ்ந்து தன் வாழ் நாளைக் கழிக்க விரும்புவது இயல்பு என்பது பொது அனுபவ உண்மை. எல்லாவற்றிற்கும் தன் முன்னோர்களின் கால்களில் வீழ்கின்ற மனம் படிப்படியாக மிகவும் பலவீனமாகி விடுகிறது. முன்னோர்களின் பெருமையில் வீண்பெருமை கொள்பவனின் திறனற்ற மனத்திற்கு இந்தப் பலவீனம்தான் ஒரே ஆதாரமாக இருப்பதைக் காட்டுகின்ற காலம் வந்தே தீரும். எல்லா அறிவையும் உங்கள் முன்னோர்கள் பெற்றிருந்தார்கள் என்பது உண்மை என்றாலும் அவை இப்போது அழிந்ததற்குக் காரணம் அவர்களின் சந்ததியான நீங்கள் என்றல்லவா ஆகிறது! எனவே அதை நீங்கள் பெற்றிருந்தாலும் பெறாமலிருந்தாலும் எல்லாம் ஒன்றுதான். ஏற்கனவே இழந்துவிட்ட அறிவை எண்ணி, ஒரு காலத்தில் அதைப் பெற்றிருந்தோம், இப்போது இழந்துவிட் டோம் என்று பேசுவதில் ஒரு பயனும் இல்லை. அதை நீங்கள் மீண்டும் பெற வேண்டும் என்றால் புதிய முயற்சிகள் செய்ய வேண்டும்; மீண்டும் பாடுபட வேண்டும்.

தூய இதயத்தில் ஆன்மீக ஒளி தானாக ஒளிரும் என்பது உண்மையே. அது புறத்திலிருந்து பெறப்படுகின்ற ஒன்று அல்ல. இந்த மனத் தூய்மையைப் பெறுவதற்கு நீண்ட உழைப்பும் இடைவிடாத பயிற்சியும் வேண்டும். பெரிய விஞ்ஞானிகளால் அவ்வப்போது கண்டுபிடிக்கப்படுகின்ற பேருண்மைகள் அவர் களின் அறிவாகிய வானத்தில் ஒளிவெள்ளம்போல் திடீரென்று

பளிச்சிட்டவை என்றும், அவற்றிற்கு அவர்கள் உருவம் கொடுக்கிறார்கள் என்றும் உலகியல் அறிவுத்துறையில் ஆராய்ச்சியின்மூலம் கண்டுபிடித்திருக்கிறார்கள். காட்டுமிராண்டியின் பண்படாத மனத்தில் அத்தகைய உண்மைகள் பளிச்சிடுவதில்லை. எந்தத் துறையானாலும் இத்தகைய ஒளி கிடைக்க, அந்தத் துறை விஷயத்தை முதலில் ஆழ்ந்து சிந்தித்தும் இடைவிடாமல் ஆராய்ந்தும் கடுமையான தவம் செய்ய வேண்டும், பயிற்சி வேண்டும் என்பது தெளிவாகிறது.

அசாதாரண நிலை, பேருணர்வு நிலை என்றெல்லாம் நாம் அழைக்கின்ற நிலை என்பது இடைவிடாமல் தொடர்ந்து செய்யும் நீண்டகால முயற்சியால் மிக உயர்ந்த வளர்ச்சி பெற்ற சாதாரண உணர்வின் விளைவே. சாதாரண உணர்வுக்கும் அசாதாரண உணர்வுக்கும் உள்ள வேறுபாடு வெளிப்பாட்டு அளவில் மட்டுமே. உணர்வுபூர்வமான முயற்சிகளே பேருணர்வு நிலைக்கு வழிவகுக்கின்றன.

எல்லையற்ற பரிபூரண நிலை ஒவ்வொரு மனிதனிலும் உள்ளது; ஆனால் அது வெளிப்படவில்லை. நிறைகுண மகானாக, ரிஷியாக, மிக உயர்ந்த அவதார புருஷராக, அல்லது பெரிய விஞ்ஞானியாக ஆவதற்கு உரிய ஆற்றல் ஒவ்வொருவரிடமும் உள்ளடங்கி இருக்கிறது. இந்த நிறைவு வெளிப்படுவதற்கு உரிய காலமும், தகுந்த வழிகளில் போதிய ஆராய்ச்சியுமே வேண்டும். அத்தகைய மாமனிதர்கள் ஏற்கனவே பிறந்துள்ள சமுதாயத்தில் மீண்டும் தோன்றுவதற்கான வாய்ப்பு மிக அதிகம். அத்தகைய வழிகாட்டிகளைப் பெறாத சமுதாயத்தைவிட பெற்றிருக்கும் சமுதாயம் விரைவாக முன்னேறும் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை. இப்போது அத்தகைய வழிகாட்டிகள் இல்லாத சமுதாயங்களில் அந்த வழிகாட்டிகள் பிறப்பார்கள் என்பதும், விரைவான முன்னேற்றத்தை அந்தச் சமுதாயங்கள் பெறுவதற்கு அவர்கள் வழி காட்டி உதவுவார்கள் என்பதும் உறுதி. ❑

# 5. ஆன்மாவும் கடவுளும்[1]

சான்பிரான்ஸிஸ்கோ, 23 மார்ச் 1900

தனக்கு மேலான ஒரு சக்தியைப்பற்றி மனிதன் எண்ண ஆரம்பித்தது பயத்தாலா அல்லது வெறும் ஆராய்ச்சி என்பதற்காகவா என்பதை அறிவது நமது நோக்கமல்ல. ... அது வினோதமான சில வழிபாட்டுச் சிந்தனைகளை மனத்தில் உருவாக்கியது. வழிபாட்டுச் சிந்தனைகள் எதுவும் இல்லாத காலம் ஒன்று [மனிதகுல வரலாற்றில்] இருந்ததே இல்லை. ஏன்? அழகிய காலைவேளை ஆகட்டும், ஆவிகள்மீதுள்ள பயம் ஆகட்டும்—இத்தகைய நமது சிந்தனைகளைக் கடந்து நிற்கின்ற ஒன்றிற்காக எது நம்மைப் போராடத் தூண்டுகிறது?. ... இதற்காக நாம் வரலாற்றுக் காலங்களுக்கு முன்னே போக வேண்டியதில்லை. ஏனெனில் இன்றைய நிலைமைதான் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பும் இருந்தது. இங்கே நாம் திருப்தி அடைவதில்லை; பெரிய பணக்காரன், பேராற்றல் மிக்கவன் என்று நாம் வாழ்க்கையில் எந்த நிலையில் இருந்தாலும் திருப்தி என்பதே நமக்கு இல்லை.

ஆசைக்கு அளவில்லை. அவற்றுள் நிறைவேறுபவை மிகச் சிலவே. ... நமது ஆசைகளுக்கு ஒரு முடிவேயில்லை. அவற்றை நிறைவேற்ற முயலும்போதுதான் பிரச்சினை எழுகிறது. ஆசைகள் சிலவே உள்ள பண்படாத மனங்களின் கதிகூட இதுதான். அந்தக் கொஞ்ச ஆசைகளைக்கூட அவர்களால் நிறைவேற்றிக் கொள்ள முடியவில்லை. இன்று கலைகளும் விஞ்ஞானமும் இவ்வளவு வளர்ந்து பெருகிய பின்பும் நமது ஆசைகள் என்னவோ நிறைவேற்றப் படாமலேயே உள்ளன. அதற்காக நாம் புதியபுதிய முறைகளை உருவாக்குகிறோம்; அதேவேளையில் ஆசைகளும் பெருகிக்கொண்டே போகின்றன. ...

தன்னால் அடைய முடியாத சிலவற்றை அடைவதற்காகப் புறத்துணை ஒன்றை ஆதிகால மனிதன் நாடியது இயல்பே. ...

---

1. ஈடா ஆன்செலின் குறிப்புகள்.

அவன் ஏதோ ஒன்றை விரும்பினான், அவனால் அடைய முடியவில்லை. எனவே பிறரின் ஆற்றலை நாடினான். அறியாமை மிக்க ஆதிகால மனிதன்முதல் மிகவும் பண்பட்ட இன்றைய மனிதன்வரை ஒவ்வொருவனும் கடவுளிடம் ஏதோ ஓர் ஆசையை நிறைவேற்றும்படியே கேட்கிறான். என்ன வித்தியாசம்? சிலர் பெரிய வித்தியாசத்தைக் காணவே செய்கிறார்கள். வித்தியாசம் எதுவும் இல்லாத இடத்தில் பல வித்தியாசங்களைக் காண்கிறார்கள். ஆதிகால மனிதனும் இன்றைய மனிதனும் ஒரே சக்தியிடம்தான் பிரார்த்திக்கிறான். நீங்கள் அதைக் கடவுள், அல்லா, ஜெஹோவா என்று எப்படி அழைத்தாலும் சரி, விரும்புபவற்றைத் தங்கள் சக்தியால் அடைய முடியாத போது மனிதன் தனக்கு உதவக்கூடிய யாரையாவது நாடுகிறான். இது பக்குவப்படாத பண்பு, இன்றும் இது நம்மிடம் உள்ளது. ... பிறப்பால் நாம் அனைவரும் காட்டுமிராண்டிகள், சிறிதுசிறிதாக நம்மைப் பண்படுத்திக் கொள்கிறோம், அவ்வளவுதான். ... இங்கிருக்கின்ற நாம் அனைவரும் முயன்றால் அதே உண்மையை அடையலாம். இப்போதுகூட இந்த பயம் நம்மை விட்டு நீங்கவில்லை. நாம் பெரிதாகப் பேசலாம், பெரிய தத்துவவாதிகளாக ஆகலாம்; ஆனால் அடி வரும்போது உதவிக்காகப் பிறரை நாடியே தீர வேண்டிய நிலையில் இருப்பதைக் காண்போம்; இதுவரை உள்ள அனைத்து மூட நம்பிக்கைகளையும் சேர்த்து நம்புவோம். ஆனால் ஏதோ உண்மையை அடிப்படையாகக் கொள்ளாத எந்த மூட நம்பிக்கையும் இதுவரை இந்த உலகத்தில் இருந்ததில்லை. நான் முகம் முழுவதையும் மூடிக்கொண்டு மூக்கை மட்டும் காண்பித்தாலும் அதுகூட என் முகத்தில் ஒரு பகுதிதான். அது போலவே மூட நம்பிக்கைகளிலும் சிறு பகுதியாவது உண்மையாகத்தான் இருக்கும்.

இறந்தவர்களைப் புதைக்கின்ற கருத்திலிருந்துதான் கீழ்நிலை மதம் தோன்றியது. ... முதலில், இறந்தவர்களைப் பொதிந்து மண் ஜாடிகளினுள் வைத்தார்கள். இறந்தவர்களின் ஆவிகள் இரவில் அங்கே வந்து தங்கும். ... பிறகு புதைக்கத் தொடங்கினார்கள். ... அதற்கு ஆயிரம் பற்கள் உள்ள ஒரு பயங்கர தேவதையையும் வாசலில் காவல் வைத்தார்கள். ... பின்னர் எரிக்கும் பழக்கம் வந்தது. எரிக்கும் நெருப்பு ஆவியை மேலே கொண்டு சென்றது. ... எகிப்தியர்கள் இறந்தவர்களுக்காக உணவும் நீரும் படைக்கத் தொடங்கினார்கள்.

அடுத்த பெரிய கருத்து இனதெய்வங்கள் பற்றியது. ஒவ்வோர் இனத்திற்கும் ஒவ்வொரு தெய்வம் இருந்தது. யூதர்களின் தெய்வம் ஜெஹோவா. அவர் யூதர்களுக்காகப் பிற தெய்வங்களுடனும் பிற இனத்தவருடனும் போரிடுவார். தன் மக்களை மகிழ்விக்க அந்தத் தெய்வம் என்ன வேண்டுமானாலும் செய்வார். தனது பாதுகாப்பில் இல்லாத இனத்தவரை அவர் பூண்டோடு ஒழித்தாலும் அது நல்லது, சிறப்பானது. சிறு அன்பையே அவர் காட்டினார், அதுவும் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கே காட்டினார்.

மெல்லமெல்ல உயர்ந்த லட்சியங்கள் உருவாகத் தொடங்கின. அனைத்துப் பிரிவினரையும் வெற்றிபெற்ற இனத்தின் தலைவனே தலைவனுக்கெல்லாம் தலைவன், தெய்வங்களுக்கெல்லாம் தெய்வம். ... பாரசீகர்கள் எகிப்தை வென்ற போது இப்படியே நடந்தது. பாரசீகச் சக்கரவர்த்தியே தெய்வங்களுக்கெல்லாம் தெய்வம். அவர் முன்னால் யாரும் நிற்க முடியாது. அவரைப் பார்த்தவர்களுக்கு மரணமே தண்டனை.

பின்னர் பிரபஞ்சத்திற்குத் தலைவனாகிய எல்லாம்வல்ல, எல்லா ஆற்றலும் பெற்ற, எல்லாம் அறிந்த கடவுள்-கருத்து வந்தது. அவர் விண்ணுலகில் வாழ்பவர். தனக்காக அனைத்தையும் தந்த அன்பிற்குரிய இறைவனுக்கு மனிதன் சிறப்பு வழிபாடு செய்கிறான். உலகம் முழுவதும் மனிதனுக்காகவே. சூரியனும் சந்திரனும் நட்சத்திரங்களும் அவனுக்காகத்தான். இத்தகைய கருத்து கொண்டவர்கள் ஆதி மனிதர்களே; அவர்களிடம் நாகரீகம் என்பதே இல்லை, சற்றும் பண்படாதவர்கள் அவர்கள்.

கங்கைக்கும் யூப்ரடீசுக்கும் இடையில்தான் மேலான அனைத்து மதங்களும் வளர்ந்தன. ... விண்ணில் வாழும் கடவுள்-கருத்து இந்தியாவிற்கு வெளியில் பெறப்பட்ட மிக உயர்ந்த கருத்து. இதைவிட வளர்ச்சியுள்ள கருத்து எதையும் இந்தியாவிற்கு வெளியில் காண முடியாது. குறிப்பிட்ட சொர்க்கம் ஒன்று உள்ளது, நம்பிக்கையுள்ளவன் இறந்தபின் அங்கு செல்கிறான். ... என்னைப் பொறுத்தவரை இது வெறும் பண்படாத கருத்தே. ஆப்ரிக்கர்களின் 'மம்போஜம்போ' தெய்வக் கருத்தும் விண்ணகக் கடவுள் கருத்தும் சமமானவையே. அவரே உலகை இயக்குகிறார், அவரது விருப்பமே உலகெங்கும் நிறைவேற்றப் படுகிறது. ...

புராதன ஹீப்ருக்கள் சொர்க்கம் போன்ற எதையும்பற்றிக் கவலைப்படவில்லை. அதனால்தான் அவர்கள் ஏசுவை

எதிர்த்தார்கள், ஏனெனில் அவர் மரணத்திற்குப் பின்னரும் வாழ்வு உண்டென்று போதித்தார். Paradise ('பாரடைஸ்'), அதாவது விண்ணுலகம் என்பது சம்ஸ்கிருதத்தில் இந்த வாழ்க்கையைக் கடந்த உலகம் (பிரதேசம்) என்று பொருள்படுகிறது. எனவே சொர்க்கம் என்பது இவ்வுலகத் தீமைகளை எல்லாம் சமன் செய்யும் இடம். பழங்கால மனிதன் தீமையைப் பற்றிக் கவலைப்படவில்லை. ... அப்படி ஒன்றைப் பற்றிய [கேள்வியையே அவன் எழுப்பவில்லை.]

. ..(சாத்தான்) என்பது பாரசீகச் சொல். ... மதம் என்பதைப் பொறுத்தவரை பாரசீகர்களும் இந்துக்களும் (ஆரிய பரம்பரையைச் சேர்ந்தவர்கள்) ஒரே மொழியைப் பேசி வந்தார்கள். ஒரு பிரிவினர் நன்மை என்பதைக் குறிக்கப் பயன்படுத்திய சொல்லை மற்றொரு பிரிவினர் தீமையைக் குறிக்கப் பயன்படுத்தினர். 'தேவ:' என்பது கடவுளைக் குறிக்கும் சம்ஸ்கிருதச் சொல். ஆரிய மொழிகளில் இந்தச் சொல்லே பயன்படுத்தப் பட்டது. பாரசீகர்கள் சாத்தானைக் குறிக்க இதே வார்த்தையை பயன்படுத்தினர். ...

பிற்காலத்தில் மனிதனின் அக வாழ்க்கை வளர்ந்தபின் அவன் கேள்வி கேட்கவும் கடவுளை நல்லவர் என்று கூறவும் தலைப்பட்டான். இரு கடவுளர் உள்ளதாகப் பாரசீகர்கள் கூறினர்—ஒருவர் தீயவர், மற்றவர் நல்லவர். இவ்வுலகிலுள்ள அனைத்தும் நல்லது என்பதே அவர்களின் கருத்து, அதாவது, உலகில் வருடம் முழுவதும் வசந்தகாலமே நிலவியது; அழகிய இந்த உலகில், நோயில்லை, மரணமில்லை; அனைத்தும் நல்லவையாக இருந்தன. அப்போதுதான் தீய கடவுள் உலகைத் தொட்டார். உடனே உலகில் நோயும் மரணமும் தோன்றின, கொசுக்களும் புலிகளும் சிங்கங்களும் தோன்றின.

பின்னர் ஆரியர்கள் தங்கள் முன்னோர்களின் நாட்டை விட்டு, தென்திசையில் குடிபெயர்ந்தனர். பழைய ஆரியர்கள் வட திசையில்தான் வாழ்ந்திருக்க வேண்டும். சாத்தான் என்னும் கருத்தைப் பாரசீகர்களிடம் இருந்தே யூதர்கள் பெற்றிருக்க வேண்டும். என்றாவது ஒருநாள் இந்தத் தீய கடவுள் அழிக்கப் படுவார்; கடவுள்களுக்கிடையில் நடைபெறும் இந்த நிரந்தரப் போராட்டத்தில் நாம் நல்ல கடவுளின் பக்கமே சேர்ந்து வாழ்ந்து அவரது கையைப் பலப்படுத்த வேண்டும் என்று பாரசீகர்கள் கற்பித்தனர். ... அந்தப் போரில் இந்த உலகமே எரிந்துவிடும், ஒவ்வொருவருக்கும் அப்போது புதிய உடல்

கிடைக்கும், தீயவர்கள் தூய்மையாக்கப் படுவார்கள், அதன் பிறகு அவர்கள் தீயவர்களாக இருக்க மாட்டார்கள் என்பது பாரசீகர்களின் கருத்து. ஆரியனின் இயல்பு அன்பு நிறைந்தது, கவிதை நயம் மிக்கது. உலகம் என்றென்றைக்குமாக எரிந்து விடும், அதன்பிறகு புதிய உடல்கள் கிடைக்கும், பின்பு மரணம் இல்லை என்பதையெல்லாம் அவர்களால் எண்ணிப் பார்க்க முடியாது. இவையெல்லாம்தான் இந்தியாவிற்கு வெளியே உள்ள மிகச் சிறந்த மதக் கருத்துக்கள். ... இவற்றுடன் நீதிநெறி களும் வற்புறுத்தப்பட்டன. மனிதன் செய்ய வேண்டுவதெல் லாம் நற்சிந்தனை, நற்சொல், நற்செயல் என்ற மூன்று விஷயங்களில் கவனத்துடன் இருப்பதே: இது ஒரு நடைமுறைக் கேற்ற, அறிவுபூர்வமான மதம். இதிலேயே சிறிது கவிதைநடை வந்துவிட்டது. இதைவிடக் கவிதைநயம் மிக்க, உயர்ந்த எண்ணங்களும் உள்ளன.

இந்தியாவில் சாத்தான் எங்கள் வேதங்களின் மிகப் பழைய பகுதியிலேயே காணப்படுகிறான். அவன் திடீரெனத் தோன்று கிறான், உடனே மறைந்தும் விடுகிறான். ... வேதங்கள் கொடுத்த அடியில் அவன் மறைந்துவிட்டான். மறைந்த அவனைப் பாரசீகர்கள் பிடித்துக் கொண்டனர். நாங்கள் அவனை இந்த உலகையே விட்டு ஓடும்படிச் செய்ய முயல்கிறோம். பாரசீகர் களின் கருத்தை ஏற்றுக்கொண்டு அவனை நல்லவன் ஆக்கு வோம், புதிய உடலைக் கொடுப்போம். இந்தியாவில் சாத்தான் பற்றிய கருத்தின் முடிவு இதுவே.

ஆனால் கடவுள்-கருத்து வளர்ந்தது. இப்போது மற்றோர் உண்மை வருவதைக் கவனியுங்கள். பாரசீகச் சக்கரவர்த்தி யிலிருந்தே நீங்கள் பார்த்தீர்களானால் கடவுள்—கருத்துடன் உலகாயதமும் வளர்ந்து வருகிறது, மறுபக்கம் தத்துவ ஆராய்ச்சி யும் வளர்கிறது. இன்னொரு விதமான சிந்தனை அதாவது இரண்டற்ற ஆன்மா, மனித ஆன்மாபற்றிய எண்ணமும் வரு கிறது. அதுவும் வளர்கிறது. எனவே இந்தியா சிறிது உதவிக்கு வரும்வரை பிற நாடுகளின் கடவுள்-கருத்துக்கள் அப்படியே உறைந்திருக்க வேண்டியிருந்தது. ... அவை அப்படியே இருந்து விட்டன. கடவுளுக்கு ஓர் உடம்பு உண்டென்று இங்கு (அமெரிக்காவில் லட்சக்கணக்கானோர் நம்புகின்றனர். ... பல பிரிவினரும் அவ்வாறே கூறுகிறார்கள். அவர் இந்த உலகை ஆள்கிறார், ஆனால் ஓர் உடம்புடன் ஓரிடத்தில் வாழ்கிறார், அரியாசனத்தில் அமர்கிறார்; நாம் கோயில்களில் செய்வது

போல் அங்கும் மெழுகுவர்த்திகள் ஏற்றி அவரைப் போற்றிப் பாடுகின்றனர் என்ற நம்பிக்கையே இருந்து வந்தது.

ஆனால் இந்தியர்கள் கடவுளை ஒரு தூல வடிவத்தில் கொண்டு வராத அளவுக்கு புத்திசாலிகளாக இருந்தார்கள். இந்தியாவில் பிரம்மாவுக்குக் கோயிலை நீங்கள் பார்க்க முடியாது. ஏன்? ஆன்மா என்னும் கருத்து எப்போதும் இருப்பதே அதற்குக் காரணம். ஹீப்ருக்கள் ஆன்மா என்பதைப்பற்றிய கேள்வியையே எழுப்பியதில்லை. பழைய ஏற்பாட்டில் ஆன்மா பற்றிய கருத்து இல்லவே இல்லை. முதலில் அந்தக் கருத்து புதிய ஏற்பாட்டிலேயே காணப்படுகிறது. பாரசீகர்கள் செயல் முறை அறிவு உடையவர்கள், செயல்முறை மிக்கவர்கள், வெல்லும் இனத்தவர்கள். பழங்காலத்தில் ஆங்கிலேயர்களே அப்படி இருந்தார்கள், எப்போதும் அண்டைஅயலாருடன் போர்தான், அவர்கள் ஆன்மா என்பது பற்றியெல்லாம் எண்ணவேயில்லை. ...

தூல உடலினுள் நுண்ணுடல் ஒன்று உள்ளது என்னும் கருத்தே ஆன்மாபற்றிய மிகப் பழைய கருத்து. தூல உடல் மறைகிறது, நுண்ணுடல் தோன்றுகிறது. எகிப்தியர்களின் கருத்துப்படி, தூல உடல் அழியும்போது நுண்ணுடலும் அழிந்துவிடுகிறது. அதற்காகத்தான் அவர்கள் பிரமிடுகளைக் கட்டி, இறந்த முன்னோர்களின் உடல்களை அங்கே பதப் படுத்திக் காத்தனர். பிரிந்த உயிருக்கு அதன்மூலம் மரண மின்மையை அவர்கள் நாடினர். ...

இறந்த உடல்களைப் பற்றி இந்தியர்கள் கவலைப்படுவதே இல்லை. 'அதை எரித்துவிடுவோம்' என்பதே அவர்களின் போக்கு. தந்தையின் உடலை மகனே எரிக்க வேண்டும். ...

இருவகை இனங்கள் உள்ளன—தேவ இனம், அசுர இனம். தேவ இனத்தினர் தங்களை ஆன்மா என்றும், மற்றவர்கள் தங்களை உடல் என்றும் எண்ணுகின்றனர். பண்டைய இந்தியத் தத்துவஞானிகள் உடல் பெரிய விஷயமல்ல என்ற கருத்தை வலியுறுத்தினர். 'பழைய துணியைக் களைந்துவிட்டு, புதியதை எடுத்துக்கொள்வதைப் போல் மனிதன் பழைய உடம்பை உதறிவிட்டு புதியதை எடுத்துக் கொள்கிறான்.'[1] தனி மனிதனைப் பொறுத்தவரையில் சூழ்நிலையும் கல்வியும் இதற்கு எதிராக நினைக்குமாறே அவனைத் தூண்டுகின்றன. உடம்பை மிகவும்

1. கீதை, 2. 22

பேணிக் காக்கின்ற முகமதியர்களுடனும் கிறிஸ்தவர்களுடனும் அவன் பழக வேண்டியிருக்கிறது. ...

உடல் என்பதிலிருந்து ஓரடி முன்னே உயிர் என்ற கருத்திற்குச் செல்கிறோம். ... ஆன்மக் கருத்து இந்தியாவில் மிகவும் வற்புறுத்தப்படுகிறது, கடவுள்–கருத்தைப் போலவே அது கருதப்படுகிறது. ... ஆன்மக் கருத்து விரிவடையுமானால் [அது பெயர் மற்றும் உருவங்களைக் கடந்தது என்னும் முடிவிற்கே வந்தாக வேண்டும்.] ... ஆன்மா உருவமற்றது என்பது இந்தியக் கருத்து. உருவம் என்ற ஒன்று அது எதுவாக இருந்தாலும் இன்றோ, நாளையோ அழிந்தேயாக வேண்டும். சக்தி, ஜடப் பொருள் இவற்றின் சேர்க்கையல்லாத உருவமும் இருக்க முடியாது; சேர்க்கை எதுவும் பிரிந்தே தீர வேண்டும். அதுபோல் [உங்கள் ஆன்மாவும் நாம ரூபங்களின் சேர்க்கையாக இருந்தால் அது பிரிந்தேயாக வேண்டும்] நீங்கள் இறந்துவிடுவீர்கள், நீங்கள் மரணமற்றவர்கள் அல்ல. ஆன்மா என்பது நகலாக இருக்குமானால் அதற்கு உருவம் உண்டு, எனவே அது இயற்கையைச் சேர்ந்தது, இயற்கை நியதிகளான பிறப்பு இறப்பிற்கு அது கட்டுப்பட்டேயாக வேண்டும். ... ஆனால் ஆன்மா என்பது மனம் அல்ல, ... நகல் அல்ல என்பது கண்டுபிடிக்கப் பட்டுள்ளது. ...

எண்ணங்களைக் கட்டுக்குள் கொண்டுவந்து அடக்க முடியும். ... இது எந்த அளவுக்குச் சாத்தியம் என்பதைக் காண [இந்திய யோகிகள்] பயிற்சி செய்கின்றனர். கடினப் பயிற்சியால் எண்ணங்களை முற்றிலும் அடக்கிவிடலாம். எண்ணங்களே உண்மை மனிதனானால், எண்ணங்கள் மறைந்ததும் அவன் இறந்துவிடுவான். தியானத்தில் எண்ணம் மறைகிறது, மனத்தின் பகுதிகள்கூட அடங்கிவிடுகின்றன, இரத்த ஓட்டம் நின்று விடுகிறது, மூச்சு நிற்கிறது; ஆனாலும் அவன் இறக்கவில்லை. எண்ணமே அவனாக இருந்திருந்தால் அனைத்தும் போயிருக்க வேண்டும், ஆனால் ஒன்றும் போகவில்லை. இதுவே நிரூபணம். எனவே எண்ணமும் மனமும்கூட உண்மை மனிதன் அல்ல என்ற முடிவுக்கு வந்தனர்; சிந்தனை இதைத் தெளிவாக்குகிறது.

நான் வருகிறேன், நான் சிந்திக்கிறேன், பேசுகிறேன். இந்தச் செயல்களுக்கு இடையில் [ஆன்மாவின்] ஒருமை உள்ளது. எனது எண்ணங்களும் செயல்களும் பலதரப்பட்டவை, பல் வேறானவை. ... ஆனால் அவற்றின் ஊடே மாறாத ஒன்று இழையோடுகிறது. ... அது உடம்பாக இருக்க முடியாது, அது

ஒவ்வொரு நிமிடமும் மாறிக் கொண்டிருக்கிறது; மனமாக இருக்க முடியாது, மனத்தில் புதிய எண்ணங்கள் எப்போதும் வந்தவண்ணமே உள்ளன. எனவே அது உடம்போ மனமோ அல்ல. உடல், மனம் இரண்டும் இயற்கையைச் சேர்ந்தவை, எனவே இயற்கை நியதிகளுக்குக் கட்டுப்பட வேண்டும். சுதந்திர மனம் என்பதே இல்லை. ...

எனவே உண்மை மனிதன் இயற்கையைச் சேர்ந்தவன் அல்ல, யாருடைய உடலும் மனமும் இயற்கையைச் சேர்ந்ததோ அவனே உண்மை மனிதன். இயற்கையின் பயன் அவ்வளவுதான். பேனா, மை, நாற்காலி இவற்றைப் பயன்படுத்துவதுபோல் அவன் இந்த இயற்கையைத் தூலமாகவும் சூட்சுமமாகவும் பயன்படுத்துகிறான்; தூலம், உடல்; சூட்சுமம், மனம். தனியான ஒன்று உருவமற்றதாகவே இருக்க வேண்டும். இயற்கையிலேயே உருவங்கள் உள்ளன. இயற்கையல்லாத ஒன்றிற்குத் தூல, சூட்சும உருவங்கள் எதுவுமே இருக்க முடியாது. அது உருவமற்றதாக இருக்க வேண்டும், அது எங்கும் நிறைந்ததாக இருக்க வேண்டும். இதைப் புரிந்துகொள்ளுங்கள். இந்த மேஜைமீதுள்ள டம்ளரை எடுத்துக் கொள்ளுங்கள். டம்ளர் ஓர் உருவம், மேஜை ஓர் உருவம், ஆனால் [இவை உடைந்தால்] இவற்றின் தனித்தன்மை அழிந்துவிடுகிறது. ...

ஆன்மா உருவமற்றதானால் பெயரும் அற்றது. ... அது சொர்க்கத்திற்கும் போவதில்லை, நரகத்திற்கும் போவதில்லை. இருக்கும் கூட்டின் உருவை அது எடுத்துக் கொள்கிறது. ஆன்மா இடத்தில் (space) இல்லையென்றால் இருவிதமாக இருக்க வாய்ப்பு உள்ளது; ஒன்று, இடம் முழுவதிலும் அது வியாபித்திருக்க வேண்டும் அல்லது இடம் அதனுள் இருக்க வேண்டும். நீங்கள் இடத்தில் இருக்கிறீர்கள், உங்களுக்கு உருவம் இருந்தாக வேண்டும். இடம் என்பது நம்மை எல்லைக்கு உட்படுத்துகிறது, கட்டுப்படுத்துகிறது, நமக்கு ஓர் உருவத்தைத் தருகிறது. நீங்கள் இடத்தில் இல்லை என்றால், இடம் உங்களுள் இருக்கிறது. அனைத்து உலகங்களும் சொர்க்கங்களும் உண்மை மனிதனின் உள்ளேயே இருக்கின்றன. ...

கடவுளைப் பொறுத்தவரையிலும் அவ்வாறே இருக்க வேண்டும். கடவுள் எங்கும் நிறைந்தவர். 'கைகளின்றி அவரால் எல்லாவற்றையும் பற்ற முடியும், கால்களின்றி எங்கும் இயங்க முடியும். ...' அவர் உருவமற்றவர், மரணமற்றவர், என்றும் உள்ளவர். எனது உடம்பிற்கு என் ஆன்மா தலைவராவதுபோல்

அவர் ஆன்மாக்களுக்கெல்லாம் தலைவர். ஆன்மா பிரிந்தால் ஒரு கணம்கூட உடல் இருக்காது. அதுபோல் கடவுள் ஆன்மாவைப் பிரிந்தால் ஆன்மா இருக்காது. அவரே பிரபஞ்சத்தைப் படைத்தவர். அழியக்கூடிய அனைத்தையும் அழிப்பவர் அவரே. அவரது நிழலே மரணம், அவரது நிழலே வாழ்வு.

கேவலமான இந்த உலகம் மனிதன் பொருட்படுத்தத் தக்கது அல்ல என்றே [பண்டைய இந்தியத் தத்துவ அறிஞர்கள்] எண்ணினர். நல்லதோ, தீயதோ நிலையான எதுவும் இந்தப் பிரபஞ்சத்தில் இல்லை. ...

சாத்தானுக்கு இந்தியாவில் அதிக இடம் இல்லை என்பதை நான் ஏற்கனவே உங்களுக்குக் கூறினேன். ... ஏன்? ஏனெனில் மதத்தைப் பொறுத்தவரையில் இந்தியர்கள் துணிச்சல் படைத்தவர்கள், அவர்கள் குழந்தைகள் அல்ல. குழந்தைகளின் தன்மையை நீங்கள் கவனித்ததில்லையா? குற்றங்களைப் பிறர்மீது சுமத்தவே அவை முயல்கின்றன. அவ்வாறே, தாங்கள் தவறு செய்யும்போது, குழந்தை–மனங்களும் பிறர்மீதே குற்றம் சுமத்துகின்றன. ஒருபக்கம் 'எனக்கு இதைத் தா, அதைத் தா' என்று கேட்கிறோம். மறுபக்கம், 'இதை நான் செய்யவில்லை, சாத்தானே என்னைத் தூண்டினான், சாத்தானே இதைச் செய்தான்' என்றும் சொல்கிறோம். இதுவே மனிதகுல வரலாறு, பலவீனமான மனிதகுல வரலாறு. ...

தீமை ஏன் இருக்கிறது? இந்த உலகம் ஏன் கேவலமானதாக, கீழானதாக இருக்கிறது? நாமே அதை அப்படிச் செய்தோம். அதற்காக யாரையும் குறைகூற வேண்டுவதில்லை. நமது கைகளை நாமே நெருப்பில் வைத்தோம். நமது தகுதிக்கு ஏற்பவே கிடைக்கிறது என்பதற்காக இறைவனை வாழ்த்துவோம். அவர் மட்டுமே கருணையுள்ளவர். நாம் பிரார்த்தித்தால் அவர் உதவு கிறார்; தம்மையே நமக்குத் தந்தருள்கிறார்.

இதுவே அவர்களது கருத்து. அவர்கள் கவிதைநயம் மிக்கவர்கள். கவிதையில் அவர்களுக்கு ஒரு வெறிதான். அவர்களின் தத்துவம் கவிதை, அவர்களின் தத்துவம் பாடல். ... சம்ஸ்கிருதத்தில் உள்ள மிகவுயர்ந்த சிந்தனைகள் எல்லாம் கவிதைகளாகவே எழுதப்பட்டுள்ளன. மதம், வான இயல் அனைத்தும் கவிதையிலேயே.

அனைத்திற்கும் நாமே பொறுப்பு. நாம் எப்படித் தப்பு செய்ய முடியும்? 'நான் ஏழையாக, சாதாரணமானவனாகப்

பிறந்தேன். வாழ்க்கை முழுவதும் போராட்டங்களையே சந்தித் துள்ளேன்' என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் அதற்குக் காரணம் நீங்களே என்று தத்துவ ஞானிகள் கூறுகிறார்கள். இவையெல்லாம் எந்தக் காரணமும் இல்லாமல் வந்துவிட்டன என்றா சொல்கிறீர்கள்? நீங்கள் அறிவுபூர்வமானவர்கள். காரண மின்றி உங்கள் வாழ்க்கை அமையவில்லை, அந்தக் காரணம் நீங்களே. உங்கள் வாழ்க்கையை எப்போதும் நீங்களே உருவாக்கிக் கொள்கிறீர்கள். ... உங்கள் வாழ்க்கையை அமைத்துக் கொண்டது நீங்களே. உங்களுக்குப் பொறுப்பு நீங்களே, குற்றத்தை யார்மீதும் சுமத்தாதீர்கள், எந்தச் சாத்தான் மீதும் சுமத்தாதீர்கள். அதனால் உங்கள் துன்பம்தான் அதிகமாகும்.

கடவுளிடம் ஒருவனை இழுத்து வந்து நிறுத்தினார்கள், 'இவனுக்கு முப்பத்தொரு கசையடி கொடுங்கள்' என்றார் கடவுள். ... அப்போது அங்கு இன்னொருவன் இழுத்து வரப் பட்டான். உடனே கடவுள், 'முப்பது கொடுங்கள்: பதினைந்து அவனுக்கு, மீதி பதினைந்தை இதோ அவனுக்குக் கற்பித்த இந்தப் பரிதாபமான ஆசிரியனுக்குக் கொடுங்கள்' என்றார். போதிப்பதன் நிலைமை இதுதான். எனக்கு என்ன நேரப் போகிறதோ தெரியவில்லை; நான் உலகம் முழுவதும் சுற்று கிறேன், நான் கற்பிக்கும் ஒவ்வொருவருக்காகவும் பதினைந்து கசையடி வாங்க வேண்டுமானால்!. ...

இப்போது நாம் இந்தக் கருத்திற்கு வருகிறோம்: 'இந்த எனது மாயை தெய்வீகமானது.' இது எனது செயல், எனது தெய்வீகம். 'எனது மாயை கடத்தற்கரியது, ஆனால் என்னை சரணடைபவன் இதனைக் கடந்து செல்கிறான்.'[1] [இந்த மாயையை] நீங்களாகக் கடப்பது அவ்வளவு எளிதல்ல என் பதைக் காண்பீர்கள். உங்களால் முடியாது. இது மீண்டும் அதே பழைய பிரச்சினைதான்—கோழியா, முட்டையா? நீங்கள் ஏதாவது வேலை செய்தால் அந்த வேலை ஒரு விளைவை ஏற்படுத்துகிறது. விளைவு மீண்டும் காரணமாகி, மீண்டும் ஒரு விளைவை ஏற்படுத்துகிறது. இப்படியே தொடர்கிறது. ஒரு பொருளைத் தள்ளினால் நிற்காமல் ஓடுகிறது; இயக்கிவிட்டால் அது நிற்பதே இல்லை. நல்லதோ கெட்டதோ நான் சில வேலைகளைச் செய்கிறேன். அது பிரதிச் செயல்களாலான ஒரு

1. கீதை, 7.14

சங்கிலித் தொடரை உருவாக்குகிறது. ... இப்போது அதை என்னால் நிறுத்த முடியாது.

இந்த பந்தத்திலிருந்து [சுய முயற்சியால்] விடுபட முடியாது. காரணகாரிய நியதியைவிட ஆற்றல் மிக்க ஒருவர் இருந்து, அவர் நம்மீது கருணைகொண்டு நம்மை வெளியே இழுத்தால் மட்டுமே அது முடியும்.

அப்படி ஒருவர் இருப்பதாக நாம் கூறுகிறோம்—அவரே கடவுள். கருணைக் கடலான அப்படி ஒருவர் இருக்கிறார். ... கடவுள் என்று ஒருவர் இருப்பாரானால் நான் காப்பாற்றப் படுவேன். என் முயற்சியால் எப்படிக் கரையேற முடியும்? அருளால் முக்தி கிடைக்கும் என்னும் கோட்பாடு எப்படி இருக்கிறது பார்த்தீர்களா? மேலை நாட்டினராகிய நீங்கள் அதிபுத்திசாலிகள், ஆனால் தத்துவத்தை விளக்கும்போதுதான் அற்புதமாகக் குழப்பிவிடுகிறீர்கள். முக்தி என்பது இந்த இயற்கையைக் கடந்து செல்வது என்று நீங்கள் பொருள் கொள்வதானால் செயலின்மூலம் உங்கள் எப்படி நீங்கள் காப்பாற்றிக் கொள்ள முடியும்? முக்தி என்பது இறைவனில் வாழ்வது. இதை நீங்கள் புரிந்துகொண்டால் நீங்களே ஆன்மா என்பதும், நீங்கள் இயற்கை அல்ல என்பதும் தெரியும். ... ஆன்மாக்கள், தெய்வங்கள், இயற்கை இவை அனைத்தையும் கடந்த ஒரே பொருள் நீங்களே. புறப் பொருட்கள், இயற்கை, ஆன்மா அனைத்தையும் கடவுள் ஊடுருவி நிற்கிறார்.

எப்படி எனது உடம்பு ஆன்மாவின் இருப்பிடமாகிறதோ அதுபோல் அனைத்து ஆன்மாக்களும் இறைவனின் உடல்கள். இறைவன், ஆன்மாக்கள், இயற்கை அனைத்தும் ஒன்றே. உடல், ஆன்மா, மனம் அனைத்தும் அந்த ஒன்றே. காரணகாரிய நியதி இயற்கையின் ஒவ்வொரு பகுதியிலும் நிறைந்திருக்கிறது, அதில் கட்டுண்டுவிட்டால் உங்களால் வெளியேற முடியாது என்பதை முன்பே பார்த்தோம். நியதி என்னும் வலையில் நீங்கள் மாட்டிக் கொண்டால் அதிலிருந்து வெளியேறும் வழி செயல்புரிவது அல்ல. இதுவரை வாழ்ந்த ஒவ்வோர் ஈக்கும் கொசுவுக்கும் நீங்கள் மருத்துவமனை கட்டலாம். ... இதையெல்லாம் நீங்கள் செய்யலாம், ஆனால் இது உங்களை முக்திப் பாதைக்கு அழைத்துச் செல்லாது. ... மருத்துவமனை எழுந்த அதே வேகத்தில் தரைமட்டமும் ஆகிவிடும். இயற்கையால் ஒருபோதும் கட்டுப்படாத, இயற்கையை ஆள்கின்ற ஒருவர் இருந்தால் மட்டுமே நமக்கு முக்தி என்பது கிடைக்கும். இயற்கையால்

ஆளப்படுவதற்குப் பதிலாக அவர் இயற்கையை ஆள்கிறார்; நியதிகளுக்குக் கட்டுப்படுவதற்குப் பதிலாக அவர் நியதிகளை உருவாக்குகிறார். ... அவர் இருக்கிறார், அவர் கருணைக் கடல். அவரைத் தஞ்சம் அடைகின்ற அந்தக் கணமே நீங்கள் காப்பாற்றப்படுவீர்கள்.

அவர் ஏன் நம்மைக் காப்பாற்றவில்லை? நாம் அவரை விரும்பவில்லை, அவரைத் தவிர அனைத்தையும் விரும்பு கிறோம். அவரை விரும்புகின்ற அந்தக் கணமே அவர் உங் களிடம் வருவார். ஆனால் நாம் ஒருபோதும் அவரை விரும்பு வதில்லை, 'இறைவா எனக்கு ஓர் அழகிய வீட்டைக் கொடு' என்கிறோம். நாம் வீட்டை விரும்புகிறோம், ஆனால் கடவுளை அல்ல. 'எனக்கு உடல்நலத்தைக் கொடு. இந்தத் துன்பத்திலிருந்து என்னைக் காப்பாற்று!' அனைத்தையும் விட்டு அவரை மட்டுமே நாடும்போது அவர் வருகிறார். 'இறைவா, பணக்காரன் பொன்னிலும் வெள்ளியிலும் உடைமைகளிலும் வைத்திருக்கும் பற்று, எனக்கு உன்மீது உண்டாகட்டும். எனக்கு இந்த உலகமோ, அந்த உலகமோ, அழகோ, கல்வியோ எதுவும் வேண்டாம். முக்தியும் எனக்கு வேண்டாம். மீண்டும்மீண்டும் நரகத்திற்கு வேண்டுமானாலும் நான் போகிறேன். ஆனால் ஒன்று, சொர்க்கத்திற்காககூட அல்லாமல் அன்பிற்காகவே உன்னை நான் அன்பு செய்ய வேண்டும்.'

மனிதன் விரும்புவதை அடைகிறான். எப்போதும் உடம்பு பற்றிக் கனவு கண்டுகொண்டிருந்தால் இன்னோர் உடம்பைப் பெறுவீர்கள். இந்த உடம்பு போனால் இன்னொன்று, மீண்டும் இன்னொன்று, இப்படியே மீண்டும்மீண்டும் உடலைப் பெற்றுக் கொண்டிருப்பீர்கள். ஜடப்பொருளை நேசித்தால் ஜடமாவீர்கள், முதலில் நீங்கள் மிருகங்களாகி விடுவீர்கள். நாய் எலும்பைக் கடிப்பதைக் கண்டால் 'ஓ இறைவா, என்னைக் காப்பாற்று' என்று நான் கூறுகிறேன். நாய்களாகவும் பூனை களாகவும் ஆகும்வரை நீங்கள் உங்கள் உடம்பை நேசியுங்கள். தாழ்ந்துதாழ்ந்து வெறும் மண்கட்டிகளாக ஆகும் வரை உடம்பை நேசித்துக்கொண்டே போங்கள். ...

இன்னும் சிலர் இருக்கிறார்கள், அவர்கள் எதற்கும் வளைந்து கொடுப்பதில்லை. முக்திப் பாதை உண்மையின் வழி யாகச் செல்கிறது. இது மற்றொரு அடிப்படைக் கருத்து. ...

சாத்தானை வெளியே துரத்தியபின்தான் மனிதன் [ஆன்மீகத்தில் வளர] ஆரம்பித்தான். உலகின் துன்பங்கள்

அனைத்திற்கும் பொறுப்பைத் தன் தோள்களில் அவன் துணிந்து ஏற்றுக்கொண்டான். ஆனால் கடந்தகாலம், எதிர்காலம், காரண காரிய நியதி இவற்றைக் காண நேரும் போதெல்லாம் முழந்தாளிட்டு, 'இறைவா, நீயே எங்களைப் படைத்தவன், எங்கள் தந்தை, மிக நெருங்கிய நண்பன், என்னைக் காப்பாற்று' என்கிறான். இது கவிதை, ஆனால் சிறந்த கவிதையல்ல என்று நினைக்கிறேன். ஏன்? அது எல்லையற்ற இறைவனைச் சித்தரிப்பது என்பதில் சந்தேகமில்லை. ஒவ்வொரு மொழியிலும் இத்தகைய முயற்சியை நாம் காண்கிறோம். ஆனால் அது புலன்கள்மூலம், தூலத்தின்மூலம் காணப் பட்டது. ...

'சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள், மின்னல் எதுவும் அவனை விளக்க முடியாது.' இது எல்லையற்றதன் எதிர்மறை யான விளக்கம். ... கடைசியாக எல்லையற்றதன் விளக்கத்தை உபநிடதங்களின் ஆன்மீகத்தில் நாம் காண்கிறோம். வேதாந்தம் என்பது மிக உயர்ந்த தத்துவம் மட்டுமல்ல, உன்னதமான கவிதையுமாகும். ...

இன்று குறித்துக் கொள்ளுங்கள். ... வேதங்களின் முதல் மற்றும் இரண்டாம் பகுதிகளின் வேறுபாடு இது. முதற்பகுதியில் அனைத்தும் புலன்களின் ஆதிக்கம். ஆனால் எல்லா மதங்களும் புற உலகில், இயற்கையில், இயற்கையின் கடவுளில் எல்லை யற்றதைக் காண முயல்கின்றன, [வேதாந்தத்தில் அப்படி இல்லை.] ... இதுவே மனித மனம் காணும் முதல் ஒளி. இடம் என்பதில் காணும் எல்லையற்றதிலிருந்து திருப்தி கிடைக்காது. 'தானாக விளங்குகின்ற பரம்பொருள் புலன்களைப் புறமுகமாக இருக்கும்படியே படைத்தார். எனவே புறவுலகில் தேடுபவர்கள், உள்ளே இருப்பதைக் காண மாட்டார்கள். உண்மையை அறிய விரும்புகின்ற சிலர் உள்ளார்கள். அவர்கள் தங்கள் பார்வையை அகமுகமாகத் திருப்பி, தங்கள் ஆன்மாவிலேயே பரமாத்மாவின் மகிமையைக் காண்கிறார்கள்.'[1]

புற உலகத்தைச் சார்ந்த எல்லையற்றது அல்ல இது. இது இடம், காலம் அனைத்தையும் கடந்தது. ... இத்தகைய ஓர் உலகத்தைக் காண மேலை நாடுகள் தவறிவிட்டன. ... அவர்களது மனம் புற இயற்கைக்கும், இயற்கையின் கடவுளுக்குமே திருப்பப் பட்டிருந்தது. உங்கள் உள்ளே பாருங்கள், நீங்கள் மறந்த

---

1. கடோபநிடதம் 2. 1. 1

உண்மையை அங்கே காணலாம். தேவர்களின் உதவியின்றி இந்தக் கனவிலிருந்து மனத்தால் விடுபட முடியுமா? வேலையைத் தொடங்கியபின், கருணைக் கடலான தந்தை கரையேற்றாமல் நமக்கு உதவியில்லை.

கருணை வடிவினரான தந்தையிடம்கூட நமக்கு முக்தி இல்லை. அடிமைத்தனம் அடிமைத்தனம்தான். பொன் சங்கிலியும் இரும்புச் சங்கிலியைப் போலவே தீயதுதான். இதிலிருந்து வெளியேற வழி இருக்கிறதா?

நீங்கள் கட்டுப்படவில்லை. யாரும் இதுவரை கட்டுப் படவேயில்லை. அனைத்தையும் கடந்து [ஆன்மா] இருக்கிறது; அதுவே அனைத்தும். இருக்கின்ற ஒன்று நீங்களே; இரண்டு கிடையாது. மாயைத் திரையில் தெரிந்த உங்கள் பிரதிபிம்பமே கடவுள். உண்மையான கடவுள் [ஆன்மாவே]. அறியாமையால் மனிதன் அந்தப் பிரதிபிம்பத்தை வழிபடுகிறான். பரலோகத்தில் வாழும் தந்தையே கடவுள் என்று சிலர் கூறுகிறார்கள். ஏன்? உங்கள் பிரதிபிம்பமாக இருப்பதாலேயே அவர் கடவுளாக இருக்கிறார். நீங்கள் எப்போதும் கடவுளையே கண்டுகொண் டிருக்கிறீர்கள் என்பது உங்களுக்குப் புரிகிறதா? நீங்கள் உங்களை வெளிப்படுத்துந்தோறும் பிரதிபிம்பமும் தெளிவாகிறது.

'ஒரே மரத்தில் அழகிய இரு பறவைகள் அமர்ந்திருக் கின்றன. ஒன்று சாந்தமாக, அமைதியாக, கம்பீரமாக அமர்ந் திருக்கிறது. கீழே உள்ள ஒன்று (ஜீவாத்மா) இனிப்பும் கசப்பு மான பழங்களை உண்டு இன்பத்தையும் துன்பத்தையும் அனுபவிக்கிறது. [ஆனால் ஜீவாத்மா இறைவனைத் தனது உண்மையான ஆன்மாவாகக் கண்டபிறகு அவனுக்குத் துன்ப மில்லை.]'

...'கடவுள்' என்று சொல்லாதீர்கள், 'நீ' என்று சொல் லாதீர்கள், 'நான்' என்று சொல்லுங்கள். 'இறைவா, என் தந்தையே' என்கிறது [துவைதம்]. [அத்வைதமோ], 'அனை வரிலும் எனக்குப் பிரியமானவன் நானே. நான் உன்னை அழைக்க எந்தப் பெயரையும் பயன்படுத்த மாட்டேன். என்னால் பயன்படுத்த முடிந்தவற்றுள் எனக்கு மிக நெருக்கமானது ''நான்'' என்பதே' என்கிறது. ...

'கடவுளே உண்மை. பிரபஞ்சம் ஒரு கனவு. இதுவரையிலும் இனியும் நான் சுதந்திரனே என்பதை இப்போது அறிந்த நான் பேறு பெற்றவன். ... என்னையே நான் வழிபடுகிறேன். இயற்கையோ, மாயையோ எதுவும் என்னை வசப்படுத்த

முடியாது என்பதை உணர்ந்த நான் பேறு பெற்றவன். இயற்கை என்னிடமிருந்து மறைந்துவிட்டது, தெய்வங்கள் மறைந்து விட்டன, வழிபாடு மறைந்துவிட்டது,. ... மூடநம்பிக்கைகள் மறைந்துவிட்டன, ஏனெனில் நான் என்னை அறிந்துவிட்டேன். நான் எல்லையற்றவன். திரு இன்னார், திருமதி இன்னார், பொறுப்பு, மகிழ்ச்சி, துயரம் எல்லாம் மறைந்துவிட்டன. நான் எல்லையற்றவன். பிறப்போ இறப்போ எனக்கு எப்படி இருக்க முடியும்? யாரைக் கண்டு நான் பயப்படுவேன்? இருக்கும் ஒருவன் நானே. என்னைக் கண்டு நானே பயப்படுவேனா? யார் பயப்படுவது? யாரைக் கண்டு பயப்படுவது? இருக்கின்ற ஒன்று நானே. வேறு எதுவும் இல்லை. நானே எல்லாம்'.

உங்கள் உண்மை இயல்பை நீங்கள் அறிந்திருக்கிறீர்களா என்பதுதான் கேள்வி. செயலின்மூலம் முக்தி கிடைக்கும் என்பதல்ல. உங்களுக்கு முக்தி கிடைக்கிறதா? நீங்கள் ஏற்கனவே முக்தர்கள்.

'நான் முக்தன்' என்று சொல்லிக்கொண்டே இருங்கள். அடுத்த கணமே மாயை நம்மிடம் புகுந்து 'நான் கட்டுப் பட்டவன்' என்று சொல்ல நேர்ந்தாலும் பொருட்படுத் தாதீர்கள். மனவசியத்திலிருந்து விடுபடுங்கள்.

[இந்த உண்மை] முதலில் கேட்கப்பட வேண்டும். முதலில் கேளுங்கள். இரவும் பகலும் அதையே சிந்தியுங்கள். 'நானே அது. பிரபஞ்சத்தின் தலைவன் நானே. மாயை என்ற ஒன்று இருந்ததே இல்லை.' ... என்ற எண்ணத்தால் இரவும்பகலும் உங்கள் மனத்தை நிரப்புங்கள். இந்தச் சுவர்கள், வீடுகள், அனைத்தும் கரைந்து உருகி, உடல் மற்ற அனைத்தும் மறைவதை நீங்கள் நிதரிசனமாகக் காணும் வரையில் உங்கள் மனஆற்றல் முழுவதையும் திரட்டி அதைத் தியானம் செய்யுங்கள். 'நான் தனியாக நிற்பேன். இருக்கும் ஒருவன் நானே.' போராடுங்கள்! 'யார் கவலைப்படுவது! நாம் சுதந்திரர்கள் ஆக வேண்டும். நமக்கு எந்தச் சக்திகளும் தேவையில்லை. உலகங்களை நாம் துறக்கிறோம், சொர்க்கங்களைத் துறக்கிறோம், நரகங்களைத் துறக்கிறோம். இந்த ஆற்றல்களும் அதுவும் இதுவும் எல்லாம் எனக்கு எதற்கு? மனம் அடங்கினாலும் அடங்காவிட்டாலும் எனக்கென்ன? அது ஓடட்டும். அதனால் என்ன! நான் மனம் அல்ல. அது எங்கு வேண்டுமானாலும் போகட்டும்.'

நல்லவன், தீயவன் அனைவர்மீதும் சூரியன் ஒளிர்கிறான். யாருடைய தீய குணமாவது அவனைப் பாதிக்கிறதா? 'நானே

அவன். என் மனம் என்ன வேண்டுமானாலும் செய்யட்டும். அதனுடன் எனக்கு எந்தத் தொடர்பும் இல்லை. மோசமான இடங்களில் ஒளிர்வதால் சூரியனுக்கு எந்தக் குறையும் இல்லை. இருப்பது நானே.'

இதுவே [அத்வைத] வேதாந்தம். இது கடினமானதுதான். போராடுங்கள். எல்லா மூடநம்பிக்கைகளையும் விடுங்கள். சாஸ்திரங்கள் இல்லை, கற்பிப்பவர் இல்லை, தெய்வங்கள் இல்லை. கோயில்கள், பூஜாரிகள், தெய்வங்கள், அவதாரங்கள், ஏன், கடவுளையேகூட விட்டுவிடுங்கள். இதுவரை இருந்துள்ள அனைத்துக் கடவுளும் நானே. தத்துவ ஞானிகளே எழுந்திருங்கள், பயம் வேண்டாம். கடவுளைப் பற்றியோ, உலகம் என்ற மூடநம்பிக்கையைப் பற்றியோ இனிப் பேசாதீர்கள். உண்மையே வெல்லும். இதுதான் உண்மை. நான் எல்லையற்றவன்.

மதத்தின் அனைத்து மூட நம்பிக்கைகளும் வீண் கற்பனைகள். ... இந்தச் சமுதாயம், உங்களை நான் காண்பது, உங்களிடம் பேசுவது அனைத்தும் மூடநம்பிக்கையே; இவை அனைத்தையும் விடவேண்டும். தத்துவவாதி ஆக என்ன வேண்டும் என்பதைப் பாருங்கள். இதுவே ஞானயோகம், அறிவுப் பாதை. மற்ற பாதைகள் எளியவை, மெதுவானவை. ... ஆனால் இது தனி மனஆற்றல். பலவீனர்கள் இந்தப் பாதையைப் பின்பற்ற முடியாது. 'நான் ஆன்மா, என்றும் சுதந்திரன், நான் கட்டுப்படவேயில்லை. காலம் என்னில் இருக்கிறது, நான் காலத்தில் இல்லை. கடவுள் என் மனத்திலிருந்தே தோன்றினார். தந்தை, பிரபஞ்சத்தின் தந்தை என்றெல்லாம் கூறப்படும் கடவுள் என் மனத்திலிருந்து என்னாலேயே உருவாக்கப்பட்டவர்' என்று கூறும் தைரியம் உங்களுக்கு வேண்டும்.

உங்களைத் தத்துவவாதிகள் என்று அழைத்துக் கொள்கிறீர்களா? இதைக் காட்டுங்கள். இதையே நினையுங்கள், இதைப் பற்றியே பேசுங்கள், இந்தப் பாதையில் ஒருவருக்கொருவர் உதவி செய்யுங்கள், எல்லா மூட நம்பிக்கைகளையும் விடுங்கள். ❑

## 6. ஆன்மாவின் இயல்பும் குறிக்கோளும்

மனிதன் மரணத்துடன் அழிந்து விடுவதில்லை என்பது மிகவும் புராதனமான கருத்து. அவன் இறந்த பிறகும் ஏதோ ஒன்று வாழ்கிறது; வாழ்ந்து கொண்டேயிருக்கிறது. இது பற்றிய எகிப்தியர், பாபிலோனியர், இந்துக்கள் என்னும் மூன்று புராதன இனங்களின் பழைய கொள்கைகளை ஒப்பிட்டுப் பார்க்கலாம். அவர்களது கருத்தை எடுத்துக் கொள்ளலாம்.

எகிப்தியர்களும் பாபிலோனியர்களும் நகலான ஒருவகை ஆவிக்கருத்தைக் கொண்டிருந்தார்கள். இந்தத் தூல உடலுக்குள் இதன் நகலான இரண்டாவது உடல் ஒன்று இருக்கிறது. அதுவே இயங்கிச் செயல் புரிகிறது. தூல உடல் இறந்தபின் இந்த நகல் வெளிப்பட்டுக் குறிப்பிட்ட சில காலம் வாழ்கிறது. இந்த ஆவியுடலின் வாழ்வு தூலவுடல் அழியாமல் காக்கப்படுவது வரைதான். எந்தத் தூலவுடலிலிருந்து பிரிந்ததோ அதன் எந்தப் பகுதிக்கு ஊறு ஏற்பட்டாலும் ஆவியுடலின் அந்தப் பகுதிக்கும் கட்டாயமாக ஊறு ஏற்படும். அதனால்தான் இறந்தவர்களின் உடல்களைக் காப்பதற்கு மருத்துவ முறைப்படியும், பிரமிடுகள் கட்டியும் அவ்வளவு முயற்சிகளைப் புராதன எகிப்தியர் மேற்கொண்டனர். இந்த ஆவியுடல் என்றென்றும் வாழ்வதில்லை; மிஞ்சிப்போனால், குறிப்பிட்ட ஒரு கால எல்லை வரைதான் அதாவது, அது வெளிவந்த அந்தத் தூலவுடல் அழியாமல் இருக்கும்வரைதான் வாழும் என்பதே பழங்கால பாபிலோனியர் மற்றும் எகிப்தியரின் கருத்தாக இருந்தது.

இந்த ஆவியுடல் கருத்துடன் எப்போதும் பயவுணர்ச்சியும் சம்பந்தப்பட்டிருக்கிறது; இது மற்றொரு வினோதக் கருத்து. ஆவியுடல் எப்போதும் துன்பமும் துயரமும் நிறைந்ததாகவே இருக்கும். எல்லையற்ற வேதனையே அதன் வாழ்வு. தன்னால் இனிமேல் அனுபவிக்க முடியாத உணவு, உடை, பிற போகங்கள் இவற்றிற்காக அது உயிர் வாழ்பவர்களை அடிக்கடி அணுகிக் கொண்டே இருக்கும். நைல் ஆற்றின் நீரைப் பருக அதற்கு ஆசையிருக்கும். ஆனால் அதனால் பருக முடியாது. தான்

வாழ்ந்தபோது அனுபவித்த இன்பங்களை எல்லாம் நுகர அது விரும்புகிறது; அது முடியாது என்பது தெரிந்ததும் ஆத்திரம் கொள்கிறது. இத்தகைய உணவுகளைத் தராவிடில் கொன்று விடப் போவதாக, துன்பம் உண்டாக்கப் போவதாக அது வாழ் பவர்களைப் பயமுறுத்துகிறது.

இந்த விஷயத்தில் ஆரியரின் கருத்து மிகவும் வேறுபட்ட தாகத் தெரிகிறது. இங்கும் நகல்-உடல் கருத்து உள்ளது. ஆனால் இது ஒருவிதமான ஆன்மீக உடல். ஆன்மீக உடல், ஆன்மா என்று அதை நீங்கள் எப்படிச் சொன்னாலும் சரி, அதுவிட்டுச் சென்ற தூல உடல் அதை எந்த விதத்திலும் கட்டுப்படுத்து வதில்லை. அது மட்டுமல்ல; தூலவுடலிலிருந்து அதற்கு விடு தலை கிடைத்துவிட்டது. தூலவுடலை எரிக்கும் ஆரியர்களின் தனிப் பழக்கத்திற்குக் காரணம் இதுவே. மனிதன் உதறிச் சென்ற உடலைப் பாதுகாக்க அவர்கள் விரும்பவில்லை. எகிப்தி யரோ, இறந்த உடலைப் புதைப்பதாலும், மருத்துவ முறையில் காப்பதாலும், பிரமிடுகளைக் கட்டுவதாலும் அதனை அழி யாமல் காக்க முயன்றனர்.

இறந்தவரின் உடலை அழிக்கின்ற பக்குவப்படாத ஆரம்ப கால முறை ஒருபுறம் இருக்கட்டும். ஓரளவுக்கு முன்னேறிய நாடுகள், இறந்த உடலை அழிக்கின்ற முறைகளிலிருந்து ஆன்மாவைப் பற்றிய அவர்களது கருத்து நன்றாக விளங்குகிறது. உடலை விட்டு நீங்கிய ஆன்மாவிற்கும், அது விட்டுச்சென்ற உடலுக்கும் நெருக்கமான தொடர்பு உள்ளது என்ற கருத்துக் கொண்ட மனிதர்களிடையே தூலவுடலை அழியாமல் காக் கின்ற போக்கு காணப்படும். உடலை ஏதாவது ஒருவகையில் புதைப்பார்கள் இவர்கள். தூலவுடல் வேறு, ஆன்மா வேறு; தூலவுடல் அழிந்தாலும் அது ஆன்மாவைப் பாதிப்பதில்லை என்ற கருத்து உறுதி பெற்றவர்களிடம் தூலவுடலை எரிக்கும் வழக்கமே உள்ளது. பழைய ஆரிய இனங்கள் எல்லாவற்றிலும் உடலை எரிக்கும் வழக்கத்தையே காண்கிறோம். பார்சிகள் மட்டும் இதனை, உடலை ஒரு கோபுரத்தின்மேல் போட்டு விடுவதாக மாற்றியிருக்கிறார்கள். இங்கும் கோபுரம் என்ற பொருளில் அவர்கள் வழங்கும் 'தக்மா' என்ற சொல் எரிக்கும் இடம் என்றே பொருள்படுகிறது. பழங்காலத்தில் இவர்களும் உடலை எரித்து வந்தார்கள் என்பதையே இது காட்டுகிறது.

ஆவியுடல்பற்றி ஆரியர்களிடையே நிலவும் கருத்தின் மற்றொரு சிறப்பு என்னவென்றால் ஆவியுடல்-கருத்துடன்

பயவுணர்ச்சி கலக்காததுதான். உணவோ, வேறு உதவியோ கேட்க இவை மக்களை நாடுவதில்லை. இந்த உதவிகள் கிடைக்க வில்லை என்றால், ஆத்திரம் கொண்டு மக்களை அழிக்க முயல் வதும் இல்லை. மாறாக, தூலவுடலிலிருந்து விடுதலை கிடைத் ததே என்று அவை மகிழ்கின்றன.

சிதையிலுள்ள அக்கினி இந்த உடல் பிரிந்து போவதன் அடையாளம் ஆகும். உடலைப் பிரிந்த ஆன்மாவை மெதுவாக மேலே கொண்டுபோய் மூதாதையர் வாழும் உலகில், துன்பமே இல்லாத, என்றும் இன்பமே நிறைந்த உலகில் சேர்க்க வேண்டும் என்றுதான் இந்த அக்கினியை வேண்டிக் கொள்கிறார்கள்.

இந்த இரண்டு கருத்துக்களும் ஒரே மாதிரியானவை என் பது தெரிகிறது—ஒன்று இன்பநோக்கு உடையது, மற்றொன்று ஆரம்ப நிலையில் இருப்பது காரணமாக துன்பநோக்கு உடைய தாக இருக்கிறது. ஒரு கருத்தின் பரிணாம வளர்ச்சியே மற் றொன்று. ஆரியர்களும் மிகப் பழங்காலத்தில் எகிப்தியர்களைப் போன்ற கருத்துக்களையே கொண்டிருந்திருக்கலாம். ஆரியர் களின் புராதன வரலாறுகளை ஆராயும்போது, நாம் இப்படி எண்ண ஆதாரம் இருக்கிறது. ஆனால் இந்த ஆவியுடல் ஒளி மிக்கது. ஒருவன் இறந்தபின் அவனது ஆன்மா, இறந்த முன் னோர்கள் வாழும் உலகத்திற்குச் சென்று அங்கே இன்ப அனுப வங்களைப் பெற்று வாழ்கிறது. அங்குள்ள முன்னோர்கள் புதிய ஆன்மாவை மிகவும் அன்புடன் வரவேற்கின்றனர். ஆன் மாவைப்பற்றி இந்தியாவின் மிகப் பழைய கருத்து இதுதான்.

காலப்போக்கில் இந்தக் கருத்து வளர்ந்தது. இதுவரை ஆன்மா என்று எண்ணி வந்தது உண்மையில் ஆன்மா அல்ல என்பது பின்பு தெரிந்தது. இந்த ஒளியுடல், நுட்ப உடல்—அது எவ்வளவு நுட்பமாக இருந்தாலும் சரி—ஓர் உடல் மட்டுமே. எல்லா உடல்களும் தூல ஜடப்பொருள் அல்லது நுண்பொரு ளால் ஆனவை. உருவமுடைய அனைத்தும் எல்லைக்கு உட் பட்டவை; நிலையானவையாக இருக்க முடியாது. உருவம் என் றாலே மாறுதலுக்கு உட்பட்டது என்பதுதான் பொருள். மாறு கின்ற ஒன்று எப்படி நிலையானதாக இருக்க முடியும்? எனவே இந்த ஒளியுடலுக்கு ஆதாரமாக நிற்கும் ஒன்றை மனித ஆன் மாவைக் கண்டார்கள்.

இப்படி ஆன்மக் கருத்து தொடங்கியது. இந்தக் கருத்தும் பலவகை மாறுதல்களை அடைய வேண்டியிருந்தது. இந்த ஆன்மா அழிவற்றது; சிறியது. ஏறக்குறைய அணுவைப்போல்

மிகச்சிறியது. இது உடலின் குறிப்பிட்ட ஒரு பகுதியில் வாழ் கிறது. மனிதன் இறக்கும்போது இந்த ஆன்மா, தன்னுடன் ஒளியுடலையும் எடுத்துக்கொண்டு வெளியே போய்விடும் என் றெல்லாம் சிலர் கருதினார்கள். ஒளியுடல்தான் ஆன்மா என்ற கருத்தை மறுத்த அதே ஆதாரங்களைக் கொண்டே, 'ஆன்மா அணு போன்றது' என்ற கருத்தையும் வேறு சிலர் மறுத்தனர்.

பலவகையான இந்தக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு சாங்கியத் தத்துவம் தோன்றியது. இதில் பல வேற் றுமைகளைக் காண்கிறோம். சாங்கியத்தின் கருத்து இதுதான். முதலில் மனிதனுக்குத் தூலவுடல் இருக்கிறது; அதற்குப் பின்னால் நுண்ணுடல் இருக்கிறது; இதுதான் மனத்திற்கு இருப்பிடம்போல் தோன்றுகிறது. இதற்குப் பின்னால் இருப் பதுதான் ஆன்மா என்கிறார்கள் சாங்கியர்கள். இதுதான் மனத் தையும் அறிவது; இது எங்கும் நிறைந்தது. அதாவது, உங்கள் ஆன்மா, என் ஆன்மா என்று ஒவ்வொருவருடைய ஆன்மாவும் ஒரே சமயத்தில் எங்கும் நிறைந்ததாக இருக்கிறது. ஆனால் ஆன்மாவிற்கு உருவம் இல்லை என்றால், அது எப்படி இடத்தை (space) அடைத்துக் கொள்ள முடியும்? இடத்தை அடைத்துக் கொள்ளும் எல்லா பொருட்களுக்கும் உருவம் உண்டு. உருவம் அற்றதே எல்லையற்றதாக இருக்க முடியும். எனவே ஒவ்வோர் ஆன்மாவும் எங்கும் நிறைந்தது.

சாங்கியர்கள் கூறும் இரண்டாவது கோட்பாடு நம்மைத் திகைக்கச் செய்வதாக இருக்கிறது. மனிதர்கள்—குறைந்த பட்சம் பலரேனும்—வளர்கிறார்கள், முன்னேறுகிறார்கள் என்பதை அவர்கள் பழங்காலத்திலேயே கண்டார்கள். தூய்மையில், ஆற்றலில், அறிவில் அவர்கள் வளர்கிறார்கள். மனிதர்களிடம் வெளிப்படுகின்ற இந்த அறிவு, இந்தத் தூய்மை, இந்த ஆற்றல் எல்லாம் எங்கிருந்தன என்ற கேள்வி எழுந்தது. குழந்தை எந்த வகை அறிவும் இல்லாததாக இருக்கிறது. அவன் வளர்ந்து பலசாலியாக, ஆற்றல் மிக்கவனாக, அறிவாளியாக ஆகிறான். இந்த அறிவுச் செல்வத்தையும் ஆற்றலையும் குழந்தை எங்கிருந்து பெற்றது? இவை ஆன்மா வில் இருந்தன என்பதுதான் பதில். ஆரம்பத்திலிருந்தே இந்த அறிவும் ஆற்றலும் அதன் ஆன்மாவில் இருந்தன. இந்த ஆற்றலும், இந்தத் தூய்மையும், இந்த அறிவும் ஆன்மா வில் கருவாக இருந்தன, இப்போது வெளிப்பட்டுள்ளன; அவ்வளவுதான்.

இப்படி வெளிப்படுதல், கருவாக இருத்தல் என்பதன் பொருள் என்ன? ஒவ்வோர் ஆன்மாவும் தூய்மையானது, குறைவற்றது, எல்லாம்வல்லது, எல்லாம் அறிந்தது. ஆனால் அந்த ஆன்மா பெற்றுள்ள மனத்திற்கு ஏற்றபடிதான் இவை வெளிப்பட முடியும். ஆன்மாவைப் பிரதிபலிக்கும் கண்ணாடி போல் உள்ளது மனம். என் ஆன்மாவின் ஆற்றல்களை ஓரளவுக்கு என் மனம் பிரதிபலிக்கிறது; இப்படியேதான் ஒவ்வொருவரின் மனமும். தெளிவாக இருக்கும் கண்ணாடி ஆன்மாவை நன்கு பிரதிபலிக்கிறது. எனவே ஒவ்வொருவரின் மனத்தின் தன்மைக்கு ஏற்ப வெளிப்பாடு வேறுபடுகிறது. ஆனால் எல்லா ஆன்மாக்களும் தூயவை; பரிபூரணமானவை.

இப்படி இருக்க முடியாது என்று எண்ணிய தத்துவவாதிகளும் இருந்தார்கள். இயல்பாகவே ஆன்மாக்கள் தூயவையாக, பரிபூரணமானவையாக இருந்தாலும், அவை சிலவேளைகளில் சுருங்கவும் சிலவேளைகளில் விரியவும் செய்கின்றன என்பது இவர்கள் கருத்து. சில செயல்களும் சில எண்ணங்களும் ஆன்மாவைச் சுருங்கச் செய்கின்றன, வேறுவகை எண்ணங்களும் செயல்களும் ஆன்மாவின் முழு இயல்பையும் கொண்டு வருகிறது, வெளிப்படுத்துகிறது என்கிறார்கள் அவர்கள். இதனை மேலும் விளக்குகிறார்கள்—எந்த எண்ணங்களும் செயல்களும் ஆன்மாவின் தூய்மையையும் ஆற்றலையும் சுருங்கச் செய்கின்றனவோ அவை கெட்ட எண்ணங்கள், கெட்ட செயல்கள்; எந்த எண்ணங்களும் செயல்களும் ஆன்மா தன்னை வெளிப்படுத்திக் கொள்ளச் செய்கிறதோ, அதன் ஆற்றலை வெளியே கொண்டுவருகிறதோ அவை நல்ல எண்ணங்கள், நல்ல செயல்கள்; ஒழுக்கச் செயல்கள்.

இந்த இரண்டு கோட்பாடுகளுக்கும் இடையே உள்ள வேறுபாடு மிகச் சிறியது; சுருங்குதல், விரிதல் என்ற வார்த்தைகளால் ஏற்படும் சொல்ஜாலம் மட்டுமே அது. மனத்தின் தகுதிக்கு ஏற்ப ஆன்மா விளங்குகிறது என்ற விளக்கம்தான் சிறந்தது என்பதில் சந்தேகமில்லை. இந்தச் 'சுருங்குதல்-விரிதல் கோட்பாடு' இந்த இரண்டு சொற்களுக்குப் பின்னாலும் மறைந்துகொள்ள முயல்கிறது. 'ஆன்மா சுருங்குவது, விரிவது என்பவை என்ன?' என்று இவர்களைக் கேட்க வேண்டும். ஆன்மா என்பது உணர்வுப்பொருள் (spirit). ஜடப்பொருளைப் பொறுத்தவரையிலேயே சுருங்குதல், விரிதல் என்ற சொற்களுக்கு அர்த்தம் உண்டு—அது தூலப்பொருளாக இருக்கலாம் அல்லது

மனம் போன்ற நுண்பொருளாக இருக்கலாம். இதற்கு அப்பாலுள்ள, ஜடப்பொருள் அல்லாததான, காலம் இடம்—இவற்றிற்குக் கட்டுப்படாததான ஒன்றைப் பொறுத்தவரை, சுருக்கம் விரிவு என்ற சொற்களுக்கு என்ன பொருள் இருக்க முடியும்? எனவே ஆன்மா என்றும் தூயது; எப்போதும் குறைவற்றது. அதன் இயல்பு சில மனங்களில் அதிகமாகவும் சில மனங்களில் குறைவாகவும் பிரதிபலிக்கிறது என்ற கோட்பாடே சிறந்தது. மனம் படிப்படியாக மாறி, முன்னேறி அதன் தன்மையில் தெளிவு மிகும்போது ஆன்மாவை நன்றாகப் பிரதிபலிக்கிறது. இப்படியே தெளிவு மிகுந்துமிகுந்து ஆன்மாவின் தன்மை முழுவதையும் பிரதிபலிக்கும் அளவிற்கு மனம் தெளிவு பெறுகிறது; அப்போது ஆன்மா முக்தி பெறுகிறது.

இதுதான் ஆன்மாவின் இயல்பு. அதன் குறிக்கோள் என்ன? இந்தியாவில் உள்ள பல்வேறு மதப் பிரிவுகளும் ஆன்மாவின் குறிக்கோளாகக் கூறுவது ஒன்றாகவே தோன்றுகிறது; இந்த விஷயத்தில் எல்லா பிரிவுகளிலும் நிலவும் கருத்து ஒன்றே. அது முக்தி. மனிதன் எல்லையற்றவன். அவனது இப்போதைய கட்டுப்பட்ட நிலை அவனது இயல்பு அல்ல. ஆனால் இந்தக் கட்டுக்கள் வழியாகவே அவன் மேல் நோக்கியும் முன்னோக்கியும் போராடி இறுதியில் எல்லையற்றதான, முடிவற்றதான அவனது இயல்பை, அவனது பிறப்புரிமையை அடைகிறான்.

நம்மைச் சுற்றிலும் நாம் காணும் இந்தச் சேர்க்கைகளும், பிரிந்து சேரும் புதுச் சேர்க்கைகளும், வெளிப்பாடுகளும் நமது நோக்கமோ குறிக்கோளோ அல்ல; அவை வழியில் வருபவை, அவ்வளவுதான். பூமிகள், சூரியர்கள், சந்திரர்கள், விண்மீன்கள், சரி-தவறு, நல்லது-கெட்டது, சிரிப்பு-அழுகை இன்பம்-துன்பம் என்ற இந்தச் சேர்க்கைகள் எல்லாம் நமது ஆன்மா தனது கட்டுக்களை விட்டு, பூரண இயல்பை வெளிப்படுத்துவதற்கான பாதையில் உதவும் சாதனங்கள் மட்டுமே, அனுபவங்கள் மட்டுமே. அதன்பிறகு ஆன்மாவிற்குப் புற, அக நியதிகள் எதுவும் இல்லை. அது எல்லா நியதிகளையும் எல்லா கட்டுகளையும் எல்லா இயற்கையையும் கடந்துவிட்டது. இயற்கை, ஆன்மாவின் ஆதிக்கத்தில் இருக்கிறதே தவிர, ஆன்மா தான் நினைப்பது போல் இயற்கையின் ஆதிக்கத்தில் என்றுமே இருக்கவில்லை.

ஆன்மாவின் ஒரே குறிக்கோள் இதுதான். இந்தக் குறிக்கோளான முக்தியை அடையும் பாதையிலுள்ள தொடர்ந்த படிகளே, பல அனுபவங்களே அதன் பிறவிகள். ஆன்மா

தாழ்ந்த ஓர் உடலை ஏற்று, அதன் வழியாகத் தன் இயல்பை வெளிப்படுத்த முயல்கிறது. இந்த உடல் தன் குறிக்கோளின் வெற்றிக்குப் போதாது என்று கண்டவுடன், அதை உதறிவிட்டு, இன்னும் உயர்ந்த ஓர் உடலை எடுத்துக் கொள்கிறது. அதன் வாயிலாகத் தன் இயல்பை வெளிப்படுத்த முயல்கிறது. அதுவும் தக்கதல்ல என்று கண்டால், அதையும் உதறிவிட்டு இன்னும் உயர்ந்த உடல் ஒன்றை மேற்கொள்கிறது. இப்படியே முன்னேறி, கடைசியில், தன் உயர் நோக்கத்தை அடைவதற்கேற்ற உடல் ஒன்றைப் பெறுகிறது. பிறகு முக்தி பெறுகிறது.

இப்போது கேள்வி இதுதான்: ஆன்மா எல்லையற்றது, எங்கும் நிறைந்தது—அப்படித்தான் இருக்கவும் வேண்டும்—என்றால், அது உணர்வுப்பொருள் என்றால், அது பல உடல் களை எடுக்கிறது, அவற்றின்மூலம் அனுபவம் பெற்றுப் பெற்று முன்னேறுகிறது என்பதன் பொருள் என்ன? ஆன்மா வருவதும் இல்லை, போவதும் இல்லை; பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை. எங்கும் நிறைந்த ஒன்று எப்படிப் பிறக்க முடியும்? ஆன்மா உடலுள் வாழ்கிறது என்பது வடிகட்டின முட்டாள் தனம். எல்லையற்ற ஒன்று எல்லைக்குள் எப்படி வாழ முடியும்! கையில் புத்தகம் வைத்துப் படித்துக்கொண்டிருக்கும் ஒருவன் ஒரு பக்கத்தைப் படிக்கிறான். பிறகு அதைத் தள்ளிவிட்டு மற் றொரு பக்கத்தைப் படிக்கிறான். இப்படியே இதழ்களைப் புரட்டுகிறான். புத்தகம் அதேதான்; மாறுபவை பக்கங்களே தவிர, மனிதன் அல்ல. அவன் எங்கே இருந்தானோ, அங்கேயே இருக்கிறான்.

ஆன்மாவின் நிலையும் இப்படியே. இந்த இயற்கை முழு வதுமே ஆன்மா படிக்கும் ஒரு புத்தகம். ஒவ்வொரு பிறவியும் இந்தப் புத்தகத்தின் ஒரு பக்கம். ஒன்றைப் படித்து முடித்ததும் இன்னொரு பக்கத்திற்குப் போகிறான்; இப்படியே புத்தகம் முடியும் வரையில் நடக்கிறது. இயற்கை அனுபவங்கள் எல்லா வற்றையும் இப்போது பெற்றுவிட்ட ஆன்மா நிறைநிலையை அடைகிறது. ஆனால் அது எங்கும் நகரவில்லை; வரவும் இல்லை; போகவும் இல்லை. அது அனுபவங்களைப் பெற்று வந்தது, அவ்வளவுதான். ஆனால் நகர்வதுபோல் நமக்குத் தோன்றுகிறது. பூமி சுழல்கிறது; ஆனால் சூரியன் நகர்வதாக வும் பூமி நகரவில்லை என்றும் நாம் எண்ணுகிறோம். இது தவறு, மன மயக்கம் என்பது நமக்குத் தெரியும். நாம் பிறக் கிறோம்; சாகிறோம்; வருகிறோம்; போகிறோம் என்ற மயக்கமும்

இது போன்றதுதான். நாம் வருவதும் இல்லை; போவதும் இல்லை. நாம் என்றும் பிறக்கவும் இல்லை. ஆன்மா எங்கே போக முடியும்? அது போவதற்கு இடமே இல்லை. அது இல் லாத இடம் எது?

'இயற்கையின் பரிணாமம், ஆன்மாவின் வெளிப்பாடு' என்பதே இந்தக் கோட்பாட்டின் அடிப்படை. இந்தப் பரி ணாமம் அல்லது படிப்படியான வளர்ச்சி, மேலும்மேலும் உயர்ந்த சேர்க்கை—இவையெல்லாம் ஆன்மாவில் இல்லை. ஆன்மா உள்ளது உள்ளபடியே இருக்கிறது. இந்த மாறுதல்கள் எல்லாம் இயற்கையில்தான். இயற்கை உயர்ந்த மாறுதல் களுடனும் சேர்க்கைகளுடனும் முன்னேறிச் செல்லச்செல்ல, ஆன்மாவின் மகிமை மேலும்மேலும் வெளிப்படுகிறது. இங்கே ஒரு திரை இருப்பதாகவும், அதற்குப் பின்னால் அழகிய காட்சி இருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். இந்தத் திரையில் ஒரு சிறு துவாரம் உள்ளது. அதன் வழியாக, பின்னால் உள்ள காட்சியின் ஒரு சிறு பகுதியை நாம் காண முடியும். இந்தத் துவாரம் பெரிதாவதாகக் கொள்வோம். துவாரம் பெரிதாக ஆக, காட்சியும் அதிகமாகத் தெரியும். திரை முழுவதுமே மறையும்போது உனக்கும் காட்சிக்கும் இடையே தடை எதுவும் இல்லாமல் போகிறது. காட்சி முழுவதையுமே நீ காண முடியும். இந்தத் திரைதான் மனித மனம். அதற்குப் பின்னால் ஆன்மாவின் மகிமையும் தூய்மையும் எல்லையற்ற ஆற்றலும் ஒளிர்கின்றன. மனம் தெளிவு பெறப்பெற, தூய்மை ஆகஆக ஆன்மாவின் மகிமை அதிகமாக வெளிப்படுகிறது. இங்கே ஆன்மா எந்த மாறுதலையும் அடையவில்லை; மாறுவது திரைதான். ஆன்மா மாற்றம் இல்லாதது; அழிவற்றது; தூய்மையானது; என்றும் ஆனந்த வடிவானது; ஒன்றேயானது.

இறுதியாக நாம் பெறுகின்ற கோட்பாடு இதுதான், மிக உயர்ந்ததிலிருந்து மிகத் தாழ்ந்த, மிகக் கொடிய மனிதன்வரை, மிகச் சிறந்த மனிதர்களிலும், நம் காலடியில் நெளியும் மிகத் தாழ்ந்த புழுக்களிலும் இருப்பது ஆன்மாதான்—தூய்மையும், நிறைவும், எல்லையற்ற தன்மையும், ஆனந்த நிறைவும் பெற்ற ஆன்மாவேதான். ஒரு புழுவில் ஆன்மா தன் உண்மை ஆற்றலிலும் தூய்மையிலும் மிகச்சிறு பகுதியைத் தான் வெளிப்படுத்துகிறது; மனிதருள் சிறந்தவனிடம் மிகப் பெரும் பகுதியை வெளிப்படுத்துகிறது. வெளிப்பாட்டின் வேறுபாடு அளவில்தானே தவிர, இயல்பில் அல்ல. எல்லா

உயிர்களிலும் இருப்பது தூய, குறைவற்ற அந்த ஒரே ஆன்மாதான்.

சொர்க்கம் போன்ற உலகங்களைப் பற்றிய கருத்துக் களும் இருக்கின்றன. இவை இரண்டாம் பட்சம் என்றே கருதப் படுகின்றன. சொர்க்கக் கருத்தே இழிவானதாகக் கருதப் படுகிறது. இன்பம் துய்க்கும் இடம் ஒன்று வேண்டும் என்ற ஆசையே சொர்க்கக் கருத்தின் அடிப்படை. முட்டாள்தன மாக நாம் நமது இப்போதைய அனுபவத்தின் அளவிற் குள்ளேயே பிரபஞ்சம் முழுவதையும் அடக்கிவிட விரும்பு கிறோம். பிரபஞ்சத்தில் குழந்தைகளே நிறைந்திருப்பதாகக் குழந்தைகள் நினைக்கிறார்கள். உலகமே ஒரு பைத்தியக்கார விடுதி என்று பைத்தியக்காரர்கள் நினைக்கிறார்கள். இப்படியே தான் ஒவ்வொருவரும். யாருக்கு இந்த உலகம் வெறும் புலனின் பமயமாக இருக்கிறதோ, யாருடைய வாழ்க்கை உண்பதும் உறங்குவதுமாகவே கழிகிறதோ, யாருடைய வாழ்க்கைக்கும் மிருக வாழ்க்கைக்கும் ஏறத்தாழ வேறுபாடே இல்லையோ அவர்களே இத்தகைய இன்பங்கள் மிகுதியாகக் கிடைக்கும் இடங்களைப்பற்றி எண்ணுகிறார்கள். இந்தக் குறுகிய காலத் தில் அனுபவிக்க முடியாதவற்றை அங்கே நீண்ட காலம் அனுபவிக்கலாம் என்பது அவர்களின் எண்ணம். அவர்களின் புலனின்ப நாட்டத்திற்கு அளவே இல்லை. எனவே தடை யில்லாமல் பல காலம் இன்பங்களை நுகரக்கூடிய இடங் களைப்பற்றி அவர்கள் நினைப்பது இயல்பு. இத்தகைய இடங் களுக்குப் போக விரும்புபவர்கள் அங்கே போகத்தான் வேண்டும் என்பதையும் நாம் காண்கிறோம். அவர்கள் கனவு காண்பார்கள்; இந்தக் கனவு முடிந்தவுடன் ஏராளமாக இந்த இன்பம் கிடைப்பது போன்ற இன்னொரு கனவு தொடரும். அந்தக் கனவும் கலையும்போது வேறு எதையாவது கனவு காண வேண்டும். இப்படியே இவர்கள் கனவுக்குக் கனவுதாவிய வண்ணமே இருப்பார்கள்.

இப்போது ஆன்மாவைப் பற்றிய இறுதியான கோட்பாடு, இன்னும் ஒரு கருத்து வருகிறது. இயல்பாகவே ஆன்மா தூய்மை யானது, குறைவற்றது என்றால், ஒவ்வோர் ஆன்மாவும் எல்லை யற்றது, எங்கும் நிறைந்தது என்றால், பல ஆன்மாக்கள் எப்படி இருக்க முடியும்? எல்லையற்றவை பல இருக்க முடியாதே! பல என்பதல்ல, இரண்டுகூட இருக்க இயலாதே! இரண்டு எல்லை யற்றவை இருக்குமானால், ஒன்று மற்றொன்றிற்கு எல்லை

வகுத்து, இரண்டும் எல்லைக்கு உட்பட்டவை ஆகிவிடும். எனவே எல்லையற்றது ஒன்றுதான் இருக்க முடியும். இப்போது துணிவாக இந்தக் கடைசி முடிவுக்கு வருகிறோம்—இருப்பது ஒன்றுதான்; இரண்டல்ல.

இரண்டு பறவைகள் ஒரு மரத்தில் உட்கார்ந்திருக்கின்றன; ஒன்று, மேல்கிளையிலும் மற்றொன்று கீழ்க்கிளையிலும் இருக்கின்றன. இரண்டுமே அழகு மிக்கவை. ஒன்று பழங்களை உண்கிறது; மற்றொன்று அமைதியாகவும் கம்பீரமாகவும் தன் மகிமையில் ஆழ்ந்திருக்கிறது. கீழ்க்கிளைப் பறவை நல்லது, கெட்டது ஆகிய பழங்களைத் தின்கிறது; புலனின்பங்களை நாடி ஓடுகிறது. எப்போதாவது ஒரு கசப்புப் பழத்தை உண்ண நேரும்போது சற்று மேலே செல்கிறது. உயரப் பார்க்கிறது. அந்த மேற்கிளைப் பறவை நல்ல பழம், கெட்ட பழம் எதையும் விரும்பாமல், தனக்குள்ளேயே இன்பம் கண்டு, தனக்கு வெளியில் எந்த இன்பத்தையும் நாடாமல் அமைதியாக கம்பீரமாக இருப்பதைக் காண்கிறது. அதற்கு அதுவே இன்பம். அது தன்னைத் தவிர எதையும் தேட என்ன இருக்கிறது? கீழ்ப்பறவை மேல்ப் பறவையைப் பார்த்து அதற்கு அருகில் செல்ல விரும்புகிறது. சற்று மேலே செல்கிறது. ஆனால் அதன் பழைய வாசனைகள் இருக்கின்றனவே! எனவே பழையபடி பழங்களைத் தின்னத் தொடங்குகிறது. மறுபடியும் ஒரு மிகக் கசப்பான பழத்தைத் தின்ன நேர்கிறது. ஓர் அதிர்ச்சிக்கு உள்ளாகிறது. மீண்டும் மேலே பார்க்கிறது. அங்கே அதே பறவை அமைதியாக கம்பீரமாக வீற்றிருக்கிறது. கீழ்ப் பறவை மீண்டும் அதை நெருங்குகிறது. திரும்பவும் பழைய வாசனை அதைக் கீழே இழுக்கிறது. திரும்பவும் இனிப்பு, கசப்புப் பழங்களைத் தின்னத் தொடங்குகிறது. மீண்டும் பயங்கரக் கசப்பான பழத்தை உண்ண நேர்கிறது; உடனே மேலே பார்க்கிறது. மேல்பறவையை மேலும்மேலும் நெருங்குகிறது. அதன் பக்கத்தில் போகப்போக, மேல்பறவையின் ஒளி இதன்மீது பட்டுப் பிரதிபலிக்கிறது; இதன் இறக்கை, உடல் முதலியவை மறையத் தொடங்குகின்றன. போதிய அளவு மேல்ப் பறவையை நெருங்கும்போது காட்சியே மாறிவிடுகிறது. கீழ்ப் பறவை என்பது இல்லவே இல்லை; இருந்தது மேல்பறவை ஒன்றுதான். கீழ்ப் பறவை என்று எண்ணியிருந்தது அதன் பிரதிபிம்பமே என்பது தெரியவருகிறது.

ஆன்மாவின் இயல்பும் இதுதான். மனிதன் புலனின்பங்களையும், உலகின் வீண்பெருமைகளையும் நாடிச் செல்கிறான்;

மிருகங்களைப்போல் புலனின்பங்களில் வாழ்கிறான்; நரம்புக்கிளர்ச்சியால் ஏற்படும் சிற்றின்பங்களில் திளைக்கிறான். இந்த வாழ்க்கையில் ஓர் அடி விழுந்தால், ஒரு வினாடி தலை கிறுகிறுக்கிறது; எல்லாமே மறையத் தொடங்குகிறது. உலகம் என்பது, தான் நினைப்பதுபோல் இல்லை என்பதை அப்போது உணர்கிறான். வாழ்க்கை என்பது, தான் நினைத்ததுபோல் துன்பமற்றதல்ல என்பதை அறிகிறான். மேலே தன் பார்வையைச் செலுத்துகிறான்; ஒரு கணநேரம் எல்லையற்ற இறைவனைப் பார்க்கிறான். மகிமை பொருந்திய இறைக் காட்சி கண நேரம் தோன்றி மறைகிறது; உடனே சற்று அவனை நோக்கி முன்னேறுகிறான். ஆனால் வாசனை அவனைப் பின்னால் இழுக்கிறது. இன்னும் ஓர் அடி விழுகிறது; திரும்பவும் இறைவனை நெருங்குகிறான்; இப்படி நெருங்க நெருங்க அவனது தனித்துவம், தாழ்ந்த சாதாரணமான, சுயநலம் மிக்க தனித்துவம் அழிந்து மறைகிறது; உலகத்தையே தியாகம் செய்தாவது அற்பமான தனக்கு இன்பம் தேட வேண்டும் என்ற எண்ணம் அழிகிறது. இன்னும் நெருங்க நெருங்க இயற்கையே கரையத் தொடங்குகிறது. போதிய அளவு நெருங்கும்போது காட்சியே மாறிவிடுகிறது; தானே அந்த மற்றொரு பறவை என்பது தெரிகிறது. நெடுந்தூரத்திலிருந்து வேறொன்றாகத் தான் கண்ட அந்த எல்லையற்றது, தானே என்பது புலனாகிறது. தன் கண்ணில் தோன்றி மறைந்த வியப்பு மிக்கப் பெருமையும் மகிமையும் தானே என்பது விளங்குகிறது. தானே அந்த உண்மை என்பது விளங்குகிறது. எல்லா பொருட்களிலும் உள்ள உண்மை எதுவோ, அதை ஆன்மா உணர்கிறது.

எது ஒவ்வோர் அணுவிலும் இருக்கிறதோ, எங்கும் நிறைந்திருக்கிறதோ, எல்லாவற்றிற்கும் சாரமாக இருக்கிறதோ, இந்தப் பிரபஞ்சத்தின் முதற்பொருள் எதுவோ, அதுவே நீங்கள் என்பதைத் தெரிந்துகொள்ளுங்கள்; நீங்கள் என்றும் சுதந்திரர்கள் என்பதை அறியுங்கள். ❑

## III. சொற்பொழிவுக் குறிப்புகள்

### 1. மதப் பயிற்சி

நாம் பல நூல்களைப் படிக்கிறோம், அவை நமக்கு அறிவைத் தருவதில்லை. உலகிலுள்ள மத நூல்களையெல்லாம் நாம் படிக்கலாம். ஆனால் அவை நமக்கு மத உணர்வைத் தராது. மதத்தைப் பற்றிப் படிப்பது எளிது; யாரும் அதைச் செய்ய முடியும். ஆனால் நமக்குத் தேவை செயல்முறை மதம்.

கிறிஸ்தவ மதத்தைப் பொறுத்தவரை, உலகத்திற்குப் பயன் தரவல்ல நல்ல காரியங்களைச் செய்வதுதான் செயல்முறை மதம்.

இதனால் என்ன பயன்? பயன்நோக்கு அளவுகோலைக் கொண்டு பார்த்தால் மதம் ஒரு தோல்வியே. ஒவ்வொரு மருத்துவமனையும், அதிகப்படியான மக்கள் அங்கு வர வேண்டும் என்று செய்யப்படுகின்ற பிரார்த்தனையின் விளைவே. தானம் என்றால் என்ன? அது அடிப்படையான பிரச்சினையைத் தீர்க்கக் கூடியது அல்ல. அது உண்மையில் உலகத்தின் துன்பத்தை அதிகப்படுத்த உதவுகிறதே தவிர, அதைத் தீர்ப்பதற்குப் பயன்படவில்லை. ஒருவன் பெயரும் புகழும் அடைய விரும்புகிறான். அதற்காக அவன் செய்கின்ற முயற்சிக்கு தானம், தர்மம் என்றெல்லாம் முலாம் பூசுகிறான். மற்றவர்களுக்காகப் பணியாற்றுவதுபோல் தனக்குத்தானே உதவிக்கொள்கிறான். தானம் என்று கூறப்படுபவை எல்லாம், அவை எந்தத் தீமையை எதிர்த்து நிற்பதாகக் கூறப்படுகிறதோ, அந்தத் தீமையை ஊக்குவிக்கவே செய்கின்றன.

ஆண்களும் பெண்களும் அரங்குகளுக்குப் போகிறார்கள், களியாட்டம் போடுகிறார்கள், கிடைக்கின்ற பணத்தை மருத்துவமனை அல்லது ஏதோ தர்மச்சாலைகளின் நலனுக்காகக் கொடுக்கிறார்கள். பிறகு வீடு சென்று மிருகங்கள்போல்

---

1. பக்கம் 389-லுள்ள சொற்பொழிவுக்கு ஃப்ராங்க் ரொடீமல் எடுத்த குறிப்புக்கள்.

செயல்படுகிறார்கள்; பிசாசுகளைப் பெற்றுச் சிறைச்சாலைகளையும் மருத்துவமனைகளையும் நிரப்புகிறார்கள். இப்படித்தான் நடந்துகொண்டிருக்கிறது. இவ்வாறு மருத்துவமனை முதலியவற்றைக் கட்டுவதை நற்பணி என்று சொல்கிறார்கள். நல்ல வேலையின் நோக்கம் உலகின் துன்பத்தைக் குறைப்பது, முற்றிலுமாக ஒழிப்பது ஆகும்.

மனத்தைக் கட்டுப்படுத்த முடியாததால்தான் எல்லா துன்பங்களும் வருகின்றன என்று யோகி கூறுகிறான். இயற்கையிலிருந்து விடுபடுவதே யோகியின் லட்சியம். இயற்கையை வெற்றிகொள்வதே அவனது பணி. எல்லா சக்தியும் ஆன்மாவில் இருக்கின்றன, மனத்தையும் உடம்பையும் கட்டுப்படுத்தினால் ஒருவன் ஆன்மாவின் சக்தியைக்கொண்டு இயற்கையை வெல்லலாம் என்று யோகி கூறுகிறான்.

உடலுழைப்பிற்குத் தேவைப்படுகின்ற அளவைவிட அதிகமாக உள்ள ஒவ்வொரு கிலோ சதையும், அந்த அளவுக்கு மூளை குறைந்திருப்பதன் அடையாளம். அளவுக்குமீறி உடற்பயிற்சி செய்யாதீர்கள், அது தீங்கு விளைவிக்கும். கடினமாக உழைக்காதவன் நீண்டகாலம் வாழ்வான். குறைவாகச் சாப்பிடுங்கள், உடலுழைப்பில் குறைவாக ஈடுபடுங்கள். மூளைக்கு வேண்டிய சக்தியைச் சேகரித்து வையுங்கள்.

பெண்களுக்கு வீட்டுவேலையே போதுமானது.

விளக்கை வேகமாக எரியவிடாதீர்கள்; அது மெதுவாகவே எரியட்டும்.

நல்ல உணவு என்பது காரசாரம் அதிகம் இல்லாத எளிய உணவு. ❑

## 2. ஒருமை

நியூயார்க், 17 ஜூன் 1900

இந்தியாவிலுள்ள பல்வேறு மதப் பிரிவுகள் எல்லாம் அத்வைதம் அல்லது துவைதம் என்ற மையக் கருத்திலிருந்து பிறந்தவை. அவை அனைத்தும் வேதாந்தத்தில் அடங்கியவை; வேதாந்தத்தால் விளக்கம் பெறுபவை. ஒருமையே அவற்றின் இறுதி சாரம். நாம் பலவாகக் காண்கின்ற இதுவே கடவுள். ஜடப்பொருளை, உலகை, பல்வேறு உணர்ச்சிகளை நாம் உணர்கிறோம். ஆனால் இருப்பது ஒன்றே.

அந்த ஒரே பொருளின் வெளிப்பாட்டினுடைய அளவில் உள்ள வேற்றுமைகளையே இந்த வெவ்வேறான பெயர்கள் குறிக்கின்றன. இன்றைய புழு, நாளைய கடவுள். நாம் இவ்வளவு நேசிக்கின்ற இந்த வேறுபாடுகள் எல்லாம், ஓர் எல்லையற்ற உண்மையின் பகுதிகள்; அவற்றிற்கிடையே உள்ள வேறுபாடுகள் எல்லாம் அளவில் மட்டுமே. சுதந்திரம் பெறுவதே அந்த ஒரே எல்லையற்ற உண்மை.

வழி எவ்வளவுதான் தவறானதாக இருந்தாலும், நம் போராட்டங்கள் எல்லாம் உண்மையில் சுதந்திரத்திற்காகவே. நாம் தேடுவது துன்பத்தை அல்ல, இன்பத்தை அல்ல, சுதந்திரத்தையே. மனிதனுடைய தணியாத தாகத்தின் ரகசியம் இந்த ஒரு நோக்கம்தான். மனிதனது தாகம் இருக்கிறதே, அது எரிகின்ற, இன்னும் வேண்டும் இன்னும் வேண்டும் என்று விரும்புகின்ற, தணியாத வேட்கை என்று இந்து கூறுகிறான்; அவ்வாறே பௌத்தனும் சொல்கிறான். அமெரிக்கர்களாகிய நீங்கள் மேன்மேலும் மகிழ்ச்சியையும் போகத்தையும் தேடுகிறீர்கள். நீங்கள் திருப்தி அடைய மாட்டீர்கள் என்பது உண்மை; என்றாலும் உங்கள் தேடலின் நோக்கம் சுதந்திரமே.

இந்தத் தணியாத தாகங்கள் எல்லாம் உண்மையில் மனிதனின் எல்லையற்ற தன்மைக்கு ஓர் அடையாளம். அவன்

எல்லையற்றவனாக இருப்பதால், அவனது தாகமும் அது நிறைவேறுவதும் எல்லையற்றதாக இருக்கும்போதுதான் அவன் திருப்தி பெறமுடியும்.

அப்படியானால் மனிதனை எது திருப்தி செய்யும்? பொன் அல்ல, இன்ப நுகர்ச்சி அல்ல, அழகும் அல்ல. எல்லையற்ற ஒன்றுதான் அவனுக்குத் திருப்தி அளிக்க முடியும், அந்த எல்லையற்றது அவனே. இதனை உணரும்போதே அவன் சுதந்திரம் பெறுகிறான்.

'இந்தப் புல்லாங்குழல்,
புலன்களைத் துளைகளாகக் கொண்டு,
புலனுணர்ச்சிகளையும்அறிவையும்
பாடலையும் கொண்டு,
ஒன்றையே பாடிக் கொண்டிருக்கிறது.
தான் எந்த மரத்திலிருந்து செய்யப்பட்டதோ,
அந்த மரத்திற்கே போய்ச் சேர அது ஏங்குகிறது.'
'உன்னை உன்னாலேயே விடுவித்துக்கொள்.
ஆ, நீ மூழ்கும்படி விட்டுவிடாதே!
நீயே உனது மிகச் சிறந்த நண்பன்,
உன்னுடைய மிகக் கொடிய பகைவனும் நீயே.'
எல்லையற்றதற்கு யார் உதவ முடியும்?

இருண்ட சோதனைக் காலத்திலும் உனக்கு உதவியாக வருகின்ற துணை உன் கையாகவே இருக்க வேண்டும்.

பயம், ஆசை என்ற இரண்டும்தான் இவை அனைத்திற்கும் காரணம். இவற்றை உண்டாக்குபவர் யார்? நாமே. நம் பிறவிகள் எல்லாம் கனவிலிருந்து கனவிற்குச் செல்லும் ஒரு பயணம். கனவுகள் எல்லைகள் உடையவை, கனவு காண்பவன் எல்லை யற்றவன்.

இதில் ஒரு சிறப்பு என்னவென்றால் புறத்திலுள்ள எதுவும் நிலையானதாக இருக்க முடியாது. ஒன்றையொன்று சார்ந்திருக் கின்ற இந்த உலகத்தில், எந்தப் பொருளும் நிலையானதல்ல என்பதைக் கேட்டு நெஞ்சு துடிக்கும் மனிதர்கள் இருக்கிறார் களே, அவர்கள் தாங்கள் நினைப்பது என்ன என்பதையே அறியாதவர்கள்.

எல்லையற்ற நீல ஆகாயம் நான்; பல நிற மேகங்கள் என்மீது படிந்து செல்கின்றன, ஒரு வினாடி தங்கிநின்று பிறகு மறைந்துபோகின்றன. ஆனால் அவற்றால் மாறுபடாத நீல ஆகாயம் நான். நான் சாட்சி; எல்லாவற்றையும் கண்டு

கொண்டிருக்கும் நித்திய சாட்சி நான். நான் பார்க்கிறேன், எனவே இயற்கை இருக்கிறது; நான் பார்க்காவிட்டால் இயற்கையும் இல்லை. இந்த எல்லையற்ற ஒருமை ஒரு கணம் கலைந்தால்கூட நம்மில் யாராலும் பார்க்கவோ பேசவோ முடியாது. ❑

## 3. மதம்: குறிக்கோளும் அடையும் முறைகளும்

19 ஜனவரி 1896

உலகம் முழுவதும் ஒரே மதத்தை மேற்கொண்டு, ஒரே வகையான வழிபாட்டையும் ஒரே வகையான நீதிநெறியையும் பின்பற்ற நேருமானால், அதுதான் உலகிற்கு நேரக்கூடியவற்றுள் மிகப்பெரும் கேடாக இருக்கும். அது எல்லா மத முன்னேற்றம் மற்றும் ஆன்மீக முன்னேற்றத்தின் சாவுமணியாக இருக்கும். நாம் மிக உயர்ந்ததாகக் கருதுகின்ற லட்சியத்தை, நல்ல வழிகள் மூலமும் தீயவழிகள்மூலமும் மற்றவர்கள் பின்பற்றச் செய்து இந்த ஆபத்தை விரைவில் வரவழைக்கும் முயற்சியை விட்டு விடுங்கள். மாறாக, ஒவ்வொருவரும் தத்தம் நெறியில் முன்னேறு கின்ற வழியில் உள்ள தடைகளை விலக்க முயலுங்கள். உங்கள் வழிக்கு அவர்களைக் கொண்டுவர முயல்வதன்மூலம், உலகம் தழுவிய ஒரு மதத்தை உருவாக்குவதற்கான அவர்களது முயற்சியைக் கெடுத்துவிடாதீர்கள்.

இறைவனிடம் மீண்டும் சென்று சேர்வது, அதாவது மனிதனின் உண்மை இயல்பான தெய்வீகத்தை மீண்டும் பெறுவதுதான் எல்லா மனித சமூகத்தின், எல்லா மதங்களின் குறிக்கோள். குறிக்கோள் ஒன்றாக இருந்தாலும் அதை அடை வதற்கான முறைகள் மனிதனின் மனப்பக்குவத்திற்கு ஏற்றவாறு வேறுபடலாம்.

குறிக்கோளும் அதை அடைவதற்குரிய முறைகளும் 'யோகம்' என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. Yoke என்ற ஆங்கிலச் சொல்லின் பொருள் 'சேர்ப்பது' ஆகும்; இந்தச் சொல்லின் மூலச்சொல்லும், யோகம் என்ற சொல்லின் மூலச் சொல்லும் சேர்ப்பது அல்லது இணைப்பது என்று பொருள் படுகின்ற ஒரே சொல் ஆகும். அதாவது இறைவன் அல்லது நமது உண்மை இயல்புடன் நம்மை இணைப்பது. இத்தகைய யோகங்கள் அல்லது இணைப்பு நெறிகள் பல உள்ளன. கர்ம யோகம், பக்தியோகம், ராஜயோகம், ஞானயோகம் என்பவை முக்கியமானவை.

ஒவ்வொரு மனிதனும் தன் இயல்பின்படியே முன்னேற வேண்டும். ஒவ்வொரு விஞ்ஞானத்திற்கும் அதற்கென்று வழி இருப்பதுபோல் ஒவ்வொரு மதத்திற்கும் அதற்கான வழி இருக்கிறது. மதத்தின் குறிக்கோளை அடைவதற்குரிய வழிகளை நாங்கள் யோகம் என்று சொல்கிறோம். நாங்கள் போதிக்கின்ற வெவ்வேறு யோகங்களும் மக்களின் இயல்புக்கும் மனப்பக்குவத்திற்கும் ஏற்றபடி அமைகின்றன. கீழ்க்காணும் நான்கு தலைப்புகளில் அவற்றை வகுக்கிறோம்:-

1. கர்மயோகம்: செயல்கள், கடமைகள் இவற்றின்மூலம் ஒருவன் தனது தெய்வத்தன்மையை உணர்தல்.

2. பக்தியோகம்: சகுணக் கடவுள் ஒருவரிடம் பக்தியையும் அன்பையும் செலுத்தி தெய்வத் தன்மையை உணர்தல்.

3. ராஜயோகம்: மனத்தை அடக்குவதால் தெய்வத் தன்மையை உணர்தல்.

4. ஞானயோகம்: அறிவால், தனது தெய்வீகத் தன்மையை உணர்தல்.

இவை எல்லாம் ஒரே மையமான இறைவனை நோக்கிச் செல்லும் வெவ்வேறு பாதைகள். பல மதங்கள் இருப்பது உண்மையில் நன்மையே, ஏனெனில் எல்லா மதங்களும் மத வாழ்வுக்கு மனிதனைத் தூண்டுபவை என்ற அளவில் நல்லவை தானே! மதங்கள் அதிகம் உள்ள அளவுக்கு மனிதர்களுக்குள் மறைந்திருக்கும் தெய்வீகத்தை வெளிப்படுத்துவதற்கான வாய்ப்புகளும் அதிகமாகும். ❑

## 4. மதமும் விஞ்ஞானமும்

4 மார்ச் 1900

அனுபவம்தான் அறிவு பெறுவதற்கான ஒரே வழி. நிச்சயமில்லாத ஒரே விஞ்ஞானம் மதம்தான். ஏனெனில் அது அனுபவ விஞ்ஞானமாகக் கற்பிக்கப்படுவதில்லை. இப்படி இருக்கக் கூடாது. எனினும் அனுபவ அடிப்படையில் மதத்தைப் புகட்டும் சிலர் இருக்கவே செய்கின்றனர். அவர்களே இறையுணர்வாளர்கள் (Mystics). ஒவ்வொரு மதத்திலும் உள்ள இவர்கள் அனைவரும் போதிக்கின்ற விதமும் உண்மையும் ஒன்றே. இதுதான் உண்மையான மத விஞ்ஞானம். உலகின் பல்வேறு பகுதிகளிலும் கணிதம் எவ்வாறு வேறுபடுவதில்லையோ அதே போன்று இந்த இறையுணர்வாளர்களின் கருத்தும் வேறுபடுவதில்லை. அவர்களின் அமைப்பு ஒரே வகையானது, சூழ்நிலையும் ஒரே தன்மையானது; அவர்களுடைய அனுபவங்கள் ஒன்றே, அதுவே நியதியாகிறது.

மதவாதிகள் முதலில் சர்ச்சில் மதத்தைக் கற்றுக்கொள்கின்றனர், அதன் பின் அதைப் பயிற்சி செய்கின்றனர். தங்கள் நம்பிக்கைக்கு அவர்கள் அனுபவத்தை அடிப்படையாகக் கொள்வதில்லை. ஆனால் இறையுணர்வாளன் உண்மையைத் தேடுவதில்தான் ஆரம்பிக்கிறான், முதலில் அதை அனுபவிக்கிறான். பின்னர் தனது கோட்பாடுகளை வகுத்துக்கொள்கிறான். சர்ச், பிறருடைய அனுபவங்களை ஏற்றுக்கொள்கிறது, இறையுணர்வாளன் தன் அனுபவத்திலேயே நிலைநிற்கிறான். சர்ச் புறத்திலிருந்து அகத்திற்குச் செல்கிறது, இறையுணர்வாளன் அகத்திலிருந்து புறத்திற்குச் செல்கிறான்.

வேதியியல் போன்ற இயற்கை விஞ்ஞானங்கள் எவ்வாறு இந்தப் பௌதீக உலகம்பற்றிய உண்மைகளில் ஈடுபட்டுள்ளனவோ, அவ்வாறே மதமும் பௌதீக உலகிற்கு அப்பாற்பட்ட உண்மைகளை எடுத்துக் கூறுகிறது. வேதியியலைக் கற்க வேண்டுமானால் இயற்கை என்னும் புத்தகத்தைப் படிக்க வேண்டியிருக்கிறது. மதத்தைக் கற்பிக்கின்ற புத்தகம் உன் மனமும்

இதயமுமே. ரிஷி ஒருவருக்குப் பெரும்பாலும் பௌதீக விஞ்ஞானம் தெரிவதில்லை; ஏனெனில் அவர் தவறான புத்தகத்தை அதாவது அகப் புத்தகத்தைப் படிக்கிறார். விஞ்ஞானிக்குப் பெரும்பாலும் மதம் தெரிவதில்லை; ஏனெனில் அவனும் தவறான புத்தகத்தையே, அதாவது புறப் புத்தகத்தைப் படிக்கிறான்.

ஒவ்வொரு விஞ்ஞானமும் தனக்கே உரிய ஒரு தனி முறையைக் கொண்டுள்ளது. அதேபோல் மத விஞ்ஞானத்திற்குத் தனிமுறைகள் உள்ளன, அதிகமான முறைகள் உள்ளன, ஏனெனில் அதன் செயல்படு களம் பெரியது. மனித உள்ளம் புற உலகம் போன்று ஒரே சீரானதல்ல. பல்வேறு இயல்புடைய மனங்களுக்கு ஏற்பப் பல்வேறு முறைகள் இருக்க வேண்டியுள்ளது. ஒவ்வொருவரிடமும் ஏதாவது ஒரு போக்கு தலை தூக்கி நிற்கிறது. ஒருவரால் நன்றாகக் காண முடியும், மற்றொருவரால் நன்றாகக் கேட்க முடியும். எனவே தலைதூக்கி நிற்கின்ற மனப்போக்கு ஒன்றுள்ளது. இந்த வாசலின்மூலமே ஒவ்வொருவனும் தன் மனத்தை அடைய வேண்டும். எனினும் அனைத்து மனங்களின் ஊடேயும் ஓர் ஒருமை இழையோடுகிறது, எல்லாவற்றிற்கும் பொருந்துகின்ற ஒரு விஞ்ஞானம் உள்ளது. இந்த மத விஞ்ஞானம் மனித ஆன்ம ஆராய்ச்சியின் அடிப்படையில் அமைந்துள்ளது. அதற்கென்று ஒரு தனி மதம் இல்லை.

ஒரே விதமான மதம் எதுவும் அனைவருக்கும் பொருந்தாது. ஒவ்வொன்றும் மாலையிலுள்ள ஒரு முத்து. ஒவ்வொன்றிலும் தனித்தன்மை காண்பதில் நாம் கருத்தாக இருக்க வேண்டும். யாரும் ஒரு குறிப்பிட்ட மதத்தினராகப் பிறப்பதில்லை. அவனது மதம் அவனுடைய ஆன்மாவிலேயே உள்ளது. தனித்தன்மையை அழிக்க முற்படுகின்ற எந்த மதமும் காலப்போக்கில் அழிவையே தரும். ஒவ்வொருவர் வாழ்க்கையிலும் அதற்கென்று ஓர் அணுகுமுறை உள்ளது, இந்த அணுகுமுறை இறுதியில் அவனை ஆண்டவனிடம் அழைத்துச் செல்லும். எல்லா மதங்களின் முடிவும் லட்சியமும் இறைவனை அறிவதே. இறைவன் ஒருவனை மட்டும் வழிபடுவதுதான் மிக மேலான பயிற்சி. ஒவ்வொருவரும் ஒரு லட்சியத்தைத் தேர்ந்தெடுத்து அதில் உறுதியாக இருப்பார்களானால் மதச் சச்சரவுகள் எல்லாம் மறைந்துவிடும். ❑

## 5. அனுபூதியே மதம்

4 மார்ச் 1900

இதுவரை மனிதனால் இறைவனுக்குச் சூட்டப்பட்ட பெயர்களுள் மிகச் சிறந்தது சத்தியம் என்பதுதான். அனுபூதியின் விளைவே சத்தியம். எனவே அதனை உள்ளத்தின் உள்ளே தேட வேண்டும். எல்லா புத்தகங்களையும் உருவங்களையும் விட்டு விலகிவிடுங்கள், உங்கள் ஆன்மா தன் ஆன்மாவைக் காணட்டும். 'புத்தகங்களில் மூழ்கி நாம் பித்துப் பிடித்திருக்கிறோம்' என்று கிருஷ்ணர் கூறுகிறார். இயற்கையின் இரட்டைகளுக்கு (dualities) அப்பால் செல்லுங்கள். மதங்களும் சடங்குகளும் சம்பிரதாயங்களும்தான் எல்லாம் என்று நீங்கள் கருதும்போது, பந்தத்தில் சிக்கிக்கொள்கிறீர்கள். மற்றவர்களுக்கு உதவுவதற்காக நீங்கள் அவற்றில் பங்குகொள்ளுங்கள். ஆனால் அவை உங்களுக்கு ஒரு பந்தமாகாமல் எச்சரிக்கையுடன் இருங்கள். மதம் ஒன்றுதான், முறைகள் வெவ்வேறாகவே இருக்க வேண்டும். ஆகையால் ஒவ்வொருவரும் தமது செய்தியைக் கூறட்டும். ஆனால் மற்ற மதங்களில் குறை காண வேண்டாம். நீங்கள் ஒளியைக் காண வேண்டுமானால் தூல விஷயங்களை எல்லாம் விட்டு விலக வேண்டும். இறையுணர்வு என்ற அமுதக் கடலில் ஆழ்ந்து அதைப் பருகுங்கள். 'நானே அவன்' என்பதை உணர்ந்த ஒருவன், கந்தல் உடுத்திக் கொண்டிருந்தாலும் மகிழ்ச்சியுடன் இருக்கிறான். நிலையானதன் உள்ளே சென்று எல்லையற்ற சக்தி பெற்று வெளியே வாருங்கள். சத்தியத்தைத் தேடிச் செல்லும் அடிமை, சுதந்திர மனிதனாகத் திரும்பிவருகிறான். ❑

## 6. மதம் என்பது தன்னல மறுப்பு

4 மார்ச் 1900

பிரபஞ்சத்தின் உரிமைகளைப் பகுக்க இயலாது. 'உரிமை' பற்றிப் பேசுவது வரம்பை ஒப்புக்கொள்வதாகும். ஆகவே நாம் பேச வேண்டியது 'உரிமை' பற்றியல்ல; 'பொறுப்பு' பற்றி யாகும். உலகில் எங்கே தீமையிருந்தாலும் அதற்கு ஒவ்வொரு வருமே பொறுப்பாளிகள். யாரும் தன்னைத் தன் சகோதரனிட மிருந்து வேறுபடுத்திக் கொள்ள முடியாது. பிரபஞ்சத்துடன் நம்மை இணைக்கின்ற எல்லாம் நற்செயல்கள்; பிரிக்கின்றவை பாவச் செயல்கள். எல்லையற்ற ஒன்றில் நீ ஒரு பகுதி, இது உனது இயல்பு: இதனால்தான் நீ உன் சகோதரனுடைய நலனில் நாட்டம் உடையவனாக இருக்கிறாய்.

வாழ்க்கையின் முதல் நோக்கம் அறிவைத் தேடுவது, இரண்டாவது நோக்கம் இன்பம். அறிவும் இன்பமும் முக்தியை நோக்கி அழைத்துச் செல்கின்றன. எறும்பானாலும் சரி நாயா னாலும் சரி, உலகில் உள்ள ஒவ்வோர் உயிரும் முக்தி பெறாமல் நாம் முக்தி பெற முடியாது. அனைவரும் மகிழ்ச்சி அடையாமல் தனியொருவன் மகிழ்ச்சி அடைய முடியாது. இன்னொரு வனுக்குத் தீமை விளைவிக்கும்போது நீ உனக்கே தீங்கு விளை வித்துக் கொள்கிறாய். ஏனெனில் நீயும் உனது சகோதரனும் ஒன்றே. யார் தன்னில் பிரபஞ்சத்தையும் பிரபஞ்சத்தில் தன்னை யும் காண்கிறானோ அவனே யோகி. தன்னலம் அல்ல, தன்னல மறுப்பே பிரபஞ்சத்தின் சிறந்த நியதி. 'தீமையை எதிர்க்காதே' என்ற ஏசுநாதரின் போதனையைக் கடைப்பிடிக்காததால்தான் உலகம் இவ்வளவு தீமையுள்ளதாக இருக்கிறது. தன்னல மறுப்பே பிரச்சினையைத் தீர்க்கும். உறுதியான தன்னல மறுப் பின்மூலமே மத உணர்வு வருகிறது. உனக்கென்று எதையும் விரும்பாதே. எல்லாவற்றையும் பிறருக்காகவே செய். இறைவனில் வாழும் வகையும், பழகும் முறையும், லயித்துவிடும் வகையும் இதுவே. ❑

# 7. முக்தி நெறி

12 மார்ச் 1900, Okland Enquirer பத்திரிகைக் குறிப்பு

கடவுள் வானில் இருக்கிறார் என்று ஒருவர் சொல்கிறார். அவர் இயற்கையில் வாழ்கிறார், எங்கும் இருக்கிறார் என்று வேறு ஒருவர் கூறுகிறார். ஆனால் ஏதாவது பெரிய சங்கடம் வரும்போது, நமது புகலிடம் ஒன்றே. நாம் பல்வேறு திட்டப்படி பணியாற்றுகிறோம், ஆனாலும் நமது லட்சியம் வெவ்வேறல்ல.

துறவு, தன்னல மறுப்பு இவை இரண்டும் ஒவ்வொரு பெரிய மதத்தின் முக்கியக் கோட்பாடுகள். நாம் எல்லோரும் உண்மையின் அவசியத்தை ஒப்புக்கொள்கிறோம். நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் உண்மை வெளிப்பட்டே தீர வேண்டும் என்பதும் நமக்குத் தெரியும். ஒருவகையில் நாம் எல்லோரும் அந்த நன்மைக்காகத்தான் முயன்று வருகிறோம். அதை அடைய முடியாமல் தடுப்பது எது? நாமே. உங்கள் முன்னோர்கள் அதைச் சாத்தான் என்று கூறினார்கள்; ஆனால் அது உண்மையில் நமது போலி-ஆன்மா ஆகும்.

நாம் அடிமை வாழ்வு வாழ்கிறோம்; அதைவிட்டு வெளியேறினால் செத்தேவிடுவோம். ஒருவன் முழு இருளில் தொண்ணூறு ஆண்டுகள் வாழ்ந்தான். அதனைவிட்டு அவனை வெளியேற்றி, சூரிய ஒளிமிக்க இயற்கை வெளிக்குக் கொண்டுவந்த போது, அவன் மீண்டும் தன்னை அந்த இருட்டறையிலேயே விட்டுவிடுமாறு வேண்டினான். அவனைப்போல் இருக்கிறோம் நாம். இந்த வாழ்வைவிடப் புதியதும் சுதந்திரம் மிக்கதுமான வாழ்விற்காக இந்தப் பழைய வாழ்வை நீங்கள் விட மறுக்கிறீர்கள்.

எல்லாவற்றின் அடிவேருக்குச் செல்வது அவ்வளவு எளிதல்ல. ஒருவன் தனது வேறுபட்ட மதத்தில் எவ்வளவு சிறியவனானாலும், தான் ஓர் எல்லையற்ற ஆன்மாவைப் பெற்றிருப்பதாக நினைக்கிறான். என்றாலும் அற்பத்தனங்களுடனேயே இருக்கிறான். ஒரு நாட்டில் மதத்தை முற்றிலும் ஆதாரமாகக் கொண்டே ஒருவன் பல மனைவியருடன் வாழ்கிறான்;

இன்னொரு நாட்டில், ஒருத்தி பல கணவர்களுடன் வாழ்கிறாள். அதேபோல் சிலர் இரண்டு கடவுளரையும், சிலர் ஒரு கடவுளையும், வேறு சிலர் கடவுளையே வைத்துக் கொள்ளாமலும் இருக்கின்றனர்.

முக்தி பெறச் செயல்புரிதலும் அன்பும் தேவை. நீங்கள் ஒன்றை நன்றாகக் கற்றிருப்பீர்கள், ஆனால் வேண்டியபோது அதை நினைவுக்குக் கொண்டுவர உங்களால் இயலாமல் போகிறது. என்றாலும் அது உங்களில் ஒரு பகுதியாக உங்கள் அடியாழங்களில் இருக்கவே செய்கிறது. நல்லதோ தீயதோ, நீங்கள் செயல்புரியும்போதே உங்கள் எதிர்கால வாழ்க்கையையும் அமைத்துக் கொள்கிறீர்கள். வேலைக்காகவே வேலை என்ற எண்ணத்துடன் நற்செயல்களைச் செய்தால், நீங்கள் விரும்பிய, நீங்கள் கனவு கண்ட சொர்க்கத்திற்குச் செல்வீர்கள்.

உலக வரலாறு என்பது அதன் மாமனிதர்களின் வரலாறோ தேவதைகளின் வரலாறோ அல்ல. கடல் நீரோட்டத்தால் தாமாக ஒன்றுசேர்ந்து பெரிய கண்டங்களாகின்ற சிறுசிறு தீவுகள் போன்றது அது. ஒவ்வொரு வீட்டிலும் செய்யப்படுகின்ற சிறு சிறு தியாகச் செயல்களே உலக வரலாறாகின்றன. மனிதன் மதத்தை ஒப்புக்கொள்கிறான். ஏனெனில் அவன் தனது முடிவும் தீர்ப்புமே சரி என்றெண்ணித் தனித்து நிற்க அவன் விரும்பவில்லை. கெட்டதிலிருந்து வெளியேற மிகச் சிறந்த வழி மதம் என்று கருதியே அவன் அதை ஒப்புக்கொள்கிறான்.

இறைவனிடம் ஒருவன் எந்த அளவுக்குப் பேரன்பைச் செலுத்துகிறானோ, அதைப் பொறுத்தே அவனது முக்தி அமைகிறது. 'அன்பே, உங்களைப் பிரிந்து என்னால் வாழ முடியாது' என்று உங்கள் மனைவி கூறுகிறாள். பணத்தை இழந்துவிட்டால் சிலரைப் பைத்தியக்கார விடுதிக்குத்தான் அனுப்ப வேண்டியிருக்கும். நீங்கள் கடவுளிடம் அத்தகைய அன்பு வைத்திருக்கிறீர்களா? பணத்தை, நண்பர்களை, தாய் தந்தையரை, சகோதர சகோதரிகளை மற்றும் இந்த உலகத்திலுள்ள எல்லா பொருட்களையும் துறந்துவிட்டு, இறைவனின் அன்பில் சிறிது தரும்படி வேண்டும்போதுதான் முக்தியைக் கண்டுபிடித்தவர்கள் ஆவீர்கள். ❑

## 8. ஆன்மா, இறைவன், மதம்

8 மார்ச் 1895, அமெரிக்காவின் Hartfort Times பத்திரிகையில்
11-ஆம் தேதி வெளிவந்த குறிப்பு

கடந்தகாலத்தின் நீண்ட நெடும்பாதை வழியாக நூற்றாண்டுகளின் குரல் நம்மை நாடி வந்துகொண்டிருக்கிறது. இமயமலையில் வாழ்ந்த ரிஷிகளின் குரல், காடுகளில் வாழ்ந்த முனிவர்களின் குரல், செமிட்டிக் இனத்தினர் கேட்ட குரல், புத்தர் மற்றும் பிற ஆன்மீகச் செல்வர்களின்மூலம் பேசிய குரல், உலகின் ஆரம்பத்தில் மனிதனைப் பின்தொடர்ந்து, அவன் எங்குச் சென்றாலும் அங்கு ஒளிர்ந்து அவனுடனே இருக்கின்ற அந்த ஒளியில் வசிக்கும் மனிதர்களின் குரல் இன்றும் நம்மை நாடி வந்துகொண்டிருக்கிறது. மலைகளிலிருந்து பாய்ந்துவரும் நீரோடைகளைப் போன்றது அந்தக் குரல். அந்த நீரோடைகள் திடீரென்று மறைகின்றன, திடீரென்று இன்னோர் இடத்தில் தோன்றி வேகமாகப் பாய்கின்றன. கடைசியில் எல்லாம் ஒன்று சேர்ந்து ஒரு பெரு நதியாக உருவெடுக்கிறது.

பல்வேறு நெறிகள், மற்றும் பல்வேறு நாட்டினரின் தீர்க்க தரிசிகள், மகான்கள், தூயோராகிய ஆண்கள் பெண்கள் இவர்களின் போதனைகள் எல்லாம் ஒன்றுசேர்ந்து, கடந்தகாலத்தின் எக்காளக் குரலில் ஒலிக்கின்றன. அது கொண்டுவருகின்ற முதல் செய்தி: 'உங்களிடையே அமைதி நிலவுவதாக. மதங்களிடையே அமைதி நிலவுவதாக' என்பதுதான். அது பகைமையின் செய்தி அல்ல, ஒன்றுபட்ட ஒரே மதத்தின் செய்தி அது.

இந்தச் செய்தியை நாம் முதலில் ஆராய்வோம். மதம் அழிந்தே போகப் போகிறது என்று இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் மிகவும் பயம் உண்டாகியது. அறிவியல் ஆராய்ச்சியின் பலத்த சம்மட்டி அடிகளால் பழைய மூட நம்பிக்கைகள் பீங்கான்களைப்போல் உடையத் தொடங்கின. சில கொள்கைகளின் தொகுப்பும், அர்த்தமற்ற சடங்குகளும் தான் மதம் என்று நினைத்தவர்கள் திகைத்து நின்றார்கள்,

என்ன செய்வது என்று அறியாமல் குழம்பினார்கள். எல்லாம் அவர்களின் கைகளிலிருந்து நழுவத் தொடங்கின. ஆஞ்ஞேய வாதம் மற்றும் உலோகாயதத்தின் பொங்கிவரும் அலைகள், எல்லாவற்றையும் அடித்துச் சென்றுவிடும் என்றே தோன்றிற்று. தங்கள் எண்ணங்களை வெளியிடவே சிலர் அஞ்சினார்கள். மதம் பிழைக்காது, செத்தேவிட்டது என்றுகூடச் சிலர் நினைத்தனர். ஆனால் அலை திரும்பிவிட்டது. மதத்தைக் காப்பாற்ற ஒன்று தோன்றிவிட்டது. அது என்ன தெரியுமா? அதுதான் மத ஒப்புமை ஆராய்ச்சி (Comparative Religion). பல மதங்களை ஆராயும்போது, அவை எல்லாம் சாராம்சத்தில் ஒன்றுதான் என்பது நமக்குத் தெரிகிறது.

நான் சிறுவனாக இருந்தபோது இந்தச் சந்தேகவாதம் (Scepticism) என்னைப் பற்றிக்கொண்டது, மத நம்பிக்கையையே நான் விட்டுவிட வேண்டியதுதானோ என்று தோன்றிற்று. ஆனால் அதிர்ஷ்டவசமாக கிறிஸ்தவ, முகமதிய, பௌத்த மதங்கள் இன்னும் மற்ற மதங்களையெல்லாம் படித்தேன். ஆச்சரியம் என்னவென்றால் என்னுடைய மதம் எந்த அடிப்படைத் தத்துவங்களைக் கற்பித்ததோ, அதே தத்துவங்களைத் தான் மற்ற மதங்களும் கற்பித்தன. இவ்வாறு அது எனக்கு ஏற்றதாக இருந்தது.

நான் கேட்டேன்: 'எது உண்மை, உலகம் உண்மையா?'

'ஆம்.'

'ஏன்?'

'நான் அதைப் பார்க்கிறேன். அதனால்.'

'நாம் இப்பொழுது கேட்ட இனிய ஒலிகள் (வாய்ப் பாட்டும் இசைக் கருவிகளின் ஒலியும்) உண்மையா?'

'ஆம்.'

'ஏன்?'

'நாம் அவற்றைக் கேட்டோம்.'

மனிதனுக்கு உடல், கண்கள், காதுகள், நாம் காண முடியாத ஆன்மீக இயல்பு எல்லாம் இருப்பது நமக்குத் தெரியும். இந்த ஆன்மீக உணர்வைக் கொண்டு, பல்வேறு மதங்களைப் படித்து, அவை இந்தியக் காடுகளில் போதிக்கப்பட்டிருந்தாலும் சரி, கிறிஸ்தவ நாட்டில் போதிக்கப்பட்டிருந்தாலும் சரி, சாராம் சத்தில் எல்லாம் ஒன்றுதான் என்பதை அவன் அறிய முடியும். மனித மனத்திற்குத் தேவையான ஒரு முக்கிய அம்சம் மதம் என்பதையே இது காட்டுகிறது.

ஒரு மதத்தின் நிரூபணம் மற்ற மதங்களின் நிரூபணத்தைச் சார்ந்தே உள்ளது. உதாரணமாக, எனக்கு ஆறு விரல்கள் இருந்து, மற்ற யாருக்கும் இல்லையென்றால் அது அசாதாரண மானது என்று துணிந்து சொல்லலாம். ஒரு மதம்தான் உண்மை யானது, மற்ற மதங்கள் பொய் என்று கூறப்படும் வாதங்கள் இதைப் போன்றதுதான். ஒரே மதம்தான் உண்மை என்று கூறுவது, ஆறுவிரல்கள் இருப்பதுதான் இயற்கை என்று கூறு வதைப் போலாகும். ஆகவே ஒரு மதம் உண்மையானால், மற்ற மதங்களும் உண்மையாகத்தான் இருக்க வேண்டும். முக்கியமற்ற விஷயங்களில் வேறுபாடு இருக்கலாம், ஆனால் சாராம்சத்தில் எல்லாம் ஒன்றுதான். என்னுடைய ஐந்து விரல்கள் உண்மை யானால் உங்கள் ஐந்துவிரல்களும் உண்மை என்பதை அது நிரூபிக்கிறது. மனிதன் எங்கிருந்தாலும் சரி அவன் ஒரு நம்பிக்கையை வளர்க்க வேண்டும், அவன் தனது மத இயல்பை வளர்க்க வேண்டும்.

பல்வேறு மதங்களையும் படித்தபோது, ஆன்மா மற்றும் இறைவனைப்பற்றி மூன்று வெவ்வேறு நிலைக் கருத்துக்கள் உள்ளன என்பதையும் கண்டேன். முதலில், அழிகின்ற உடலைத் தவிர நம்மில் இந்த உடலைப்போல் மாறாத, அழியாத, நிலை யான, ஒருபோதும் மரணம் எய்தாத ஒரு பகுதி அல்லது ஏதோ ஒன்று இருக்கிறது என்று எல்லா மதங்களும் ஒப்புக் கொள் கின்றன. ஆனால் பிற்காலத்தில் தோன்றிய சில மதங்கள், என்றும் சாகாத ஒரு பகுதி நம்முள் இருக்கிறது என்று ஒப்புக் கொண்டாலும் அதற்கு ஓர் ஆரம்பம் இருந்தது என்று கூறு கின்றன. ஆரம்பம் உள்ள எதற்கும் முடிவும் இருக்கத்தான் வேண்டும். நமக்கு அதாவது, நம்முள் உள்ள சாரமான பகுதிக்கு என்றும் ஆரம்பம் இருந்ததில்லை, ஒருபோதும் முடிவும் இருக்கப் போவதில்லை. நம் எல்லோருக்கும் மேலே, நிலையான இயற்கைக்கு மேலே அழிவற்ற, நிலையான இன்னொருவர் இருக்கிறார். அவரே கடவுள்.

உலகின் ஆரம்பம், மனிதனின் ஆரம்பம் என்றெல்லாம் மக்கள் பேசுகிறார்கள். ஆரம்பம் என்பதற்கு யுகத்தின் ஆரம்பம் என்றுதான் பொருள். பிரபஞ்சம் முழுவதன் ஆரம்பம் என்று அதற்கு ஒருபோதும் பொருள் இல்லை. படைப்பிற்கு ஓர் ஆரம்பம் இருப்பது இயலாத காரியம். ஆரம்பகாலம் என்ற ஒன்றை நீங்கள் யாரும் கற்பனை செய்து பார்க்க முடியாது. ஆரம்பம் உள்ள எதற்கும் முடிவும் இருந்தேயாக வேண்டும்.

'நான் ஒருபோதும் இல்லாமல் இருந்ததில்லை, நீயும் அப்படித் தான், நாம் எல்லோரும் இனியும் ஒருபோதும் இல்லாமல் இருக்க மாட்டோம்' என்று பகவத்கீதை கூறுகிறது. படைப்பின் ஆரம்பம் என்று எங்கெல்லாம் கூறப்படுகிறதோ, அதற்கு ஒரு யுகத்தின் ஆரம்பம் என்றே பொருள். உங்கள் உடலுக்கு மரணம் உண்டு, உங்கள் ஆன்மாவிற்கு ஒருபோதும் மரணம் கிடையாது.

ஆன்மாவைப்பற்றிய இந்தக் கருத்துடன், அதன் பூரணத் துவத்தைப் பற்றிய சில கருத்துக்களையும் காண்கிறோம். ஆன்மா தன்னளவில் பூரணமானது. மனிதன் ஆரம்பத்தில் பூரணமானவனாக இருந்தான் என்று ஹீப்ருக்களின் புதிய ஏற்பாடு ஒப்புக்கொள்கிறது. தன் செயல்களினாலேயே அவன் தன்னை மாசுபடுத்திக் கொண்டான். அவன் தன் பழைய இயல்பை, தூய நிலையை மீண்டும் அடைய வேண்டும். சிலர் இவற்றை உருவகக் கதைகள், கற்பனைக் கதைகள், சின்னங்கள் போன்றவற்றின் மூலம் விளக்கினர். இந்தக் கூற்றுக்களையெல் லாம் நாம் ஆராய்ந்து பார்த்தால் மனித ஆன்மா இயற்கை யாகவே பூரணமானது, அந்த இயல்பான பரிசுத்தத்தை மனிதன் மீண்டும் அடைய வேண்டும் என்பது தெரியவரும். எப்படி? கடவுளை அறிவதன்மூலம். 'இறைமகனின் மூலமாக அல்லாமல் கடவுளை யாரும் காண முடியாது' என்று பைபிள் கூறுகிறது. இதற்கு என்ன பொருள்? கடவுளைக் காண்பதுதான் மனித வாழ்க்கையின் நோக்கமும் குறிக்கோளும் என்பதே. நாம் தந்தை யுடன் ஒன்றுசேரும் முன் மகனாக ஆகவேண்டும். தன் செயல் களினால்தான் மனிதன் பரிசுத்தத்தை இழந்தான் என்பதை நினைவில் கொள்ளுங்கள். நாம் துன்பப்படுவது நம் செயல் களின் காரணமாகத்தான். அதற்குக் கடவுள் பொறுப்பல்ல.

இந்தக் கருத்துக்களுடன் மறு பிறவிக் கோட்பாடும் எங்கும் இருந்தது. ஆனால் பின்னாளில் ஐரோப்பியர்கள் அதைக் குழப்பி சிதைத்துவிட்டனர். உங்களில் சிலர் அதைக் கேள்விப்பட்டிருப்பீர்கள், ஆனால் புறக்கணித்திருப்பீர்கள். மனித ஆன்மா நிலையானது என்னும் கருத்துடன் இந்த மறுபிறவிக் கோட்பாடு இணையாகச் செல்கிறது. ஓர் இடத்தில் முடிகின்ற எதற்கும் ஆரம்பம் ஒன்று இருக்க வேண்டும். அவ்வாறே ஓர் இடத்தில் துவங்குகின்ற எதற்கும் ஒரு முடிவும் இருக்க வேண்டும். மனித ஆன்மாவின் ஆரம்பம் என்னும், ஒருபோதும் சாத்தியமில்லாத ஒன்றை நாம் ஏற்றுக்கொள்ள முடியாது.

ஆன்மா சுதந்திரமானது என்பதையே மறுபிறவிக் கோட்பாடு வலியுறுத்துகிறது. தெளிவான ஆரம்பம் ஒன்று இருந்த தென்றே வைத்துக் கொள்வோம். அப்போது மனிதனின் பாவங்கள் அனைத்தும் கடவுளின் பொறுப்பாகிறது. கருணையே வடிவான பிதா உலகின் பாவங்களுக்கெல்லாம் பொறுப்பாகிறார். இந்த முறையில்தான் பாவம் வந்தது என்றால், ஒருவன் இன்னொருவனைவிட அதிகம் துன்பப் படுவானேன்? கருணையே வடிவான கடவுள்தான் இதற்குப் பொறுப்பு என்றால், ஏன் இவ்வளவு பாரபட்சம்? ஏன் கோடிக் கணக்கானவர்கள் நசுக்கப்படுகிறார்கள்? ஒரு பாவமும் அறியாத மக்கள் ஏன் பட்டினி கிடக்கிறார்கள்? இதற்கெல்லாம் யார் பொறுப்பு? மக்கள் பொறுப்பல்ல என்றால் கடவுள்தான் பொறுப்பாக வேண்டும். ஆகவே இதற்குச் சிறந்த விளக்கம் என்னவென்றால், அவனவன் கஷ்டங்களுக்கு அவனவனே பொறுப்பு என்பதுதான். நான் சக்கரத்தைச் சுற்றினால் அதன் விளைவுக்கு நான்தான் பொறுப்பு. என்னால் கஷ்டங்களைத் தோற்றுவிக்க முடியுமானால் அவற்றை நீக்கவும் என்னால் முடியும். ஆகவே நாம் சுதந்திரமானவர்கள் என்பது நிச்சய மாகிறது. விதி என்று எதுவும் இல்லை. நம்மை வற்புறுத்த எதுவும் இல்லை. செய்தவற்றை நம்மால் சரிசெய்ய முடியும்.

இந்தக் கோட்பாடு சம்பந்தமான ஒரு வாதம் சற்று சிக்க லானது, எனவே நீங்கள் சற்றுப் பொறுமையாகக் கேட்க வேண்டும்.

அனுபவத்தின் மூலமாகத்தான் நாம் எல்லா அறிவையும் பெறுகிறோம். அது ஒன்றுதான் வழி. நாம் அனுபவங்கள் என்று கூறுவது நம் உணர்வுத் தளத்தில் உள்ளவை. உதாரண மாக, ஒருவன் பியானோவில் ஒரு ராகம் வாசிக்கிறான். ஒவ் வொரு கட்டையின்மீதும் ஒரு விரலை உணர்வோடு வைக் கிறான். இந்த முறையை அவன் திரும்பத்திரும்பச் செய்யும் போது விரல்களின் இயக்கம் அவனுக்கு ஒரு பழக்கமாகி விடுகிறது. அதன் பிறகு ஒவ்வொரு கட்டைகளைப் பற்றியும் தனிக் கவனம் செலுத்தாமல் அவன் ராகத்தை வாசிக்கிறான். அதுபோல் நாம் உணர்வுடன் செய்த பழைய செயல்களின் பயன்தான் நமது இப்போதைய இயல்புகள். குழந்தை சில குறிப்பிட்ட இயல்புகளுடன் பிறக்கிறது. அந்த இயல்புகள் எங்கிருந்து வந்தன? எந்தக் குழந்தையும் இயல்புகள் எதுவும் இல்லாமல், ஒன்றும் எழுதப்படாத புத்தகம் போன்ற

மனத்துடன் பிறப்பதில்லை. அந்தப் புத்தகத்தில் முன்னரே எழுதப்பட்டுள்ளது.

எந்த ஒரு குழந்தையும் வெற்று மனத்துடன் பிறப்பதில்லை என்று பழைய கிரேக்க, எகிப்தியத் தத்துவ அறிஞர்கள் போதித்தனர். உணர்வுடன் செய்த பழைய செயல்களின் பலனாக ஏற்பட்ட நூற்றுக்கணக்கான இயல்புகளுடன்தான் ஒவ்வொரு குழந்தையும் பிறக்கிறது. அந்த இயல்புகளை அது இந்தப் பிறவி யில் பெறவில்லை. எனவே முந்தைய பிறவிகளில் பெற்றிருக்க வேண்டும் என்றுதான் நாம் கொள்ள வேண்டியிருக்கிறது.

தீவிர உலோகாயதவாதிகள்கூட இந்த இயல்புகள் முன் வினைப்பயன் என்று ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் அவை பரம்பரைவாயிலாக வந்தவை என்று சேர்த்துக் கொள்கின்றனர். இவர்கள் கூற்றுப்படி நம் பெற்றோர்கள், பாட்டன்கள், பாட்டிகள், கொள்ளுப்பாட்டன்கள், கொள்ளுப்பாட்டிகள் எல்லோரும் இந்தப் பரம்பரை நியதி வழியாக நம்மிடம் வரு கிறார்கள். பரம்பரை நியதி மட்டுமே நம் இயல்புகளை எல்லாம் விளக்கிவிடும் என்றால் நாம் ஆன்மாவை நம்ப வேண்டிய அவசியமே இல்லை. ஏனென்றால் உடம்பே எல்லாவற்றிற்கும் விளக்கம் தந்துவிடுகிறது.

உலோகாயதம், ஆன்மீகம் பற்றிய பல்வேறு வாதங் களுக்கும் விளக்கங்களுக்கும் நாம் இப்போது போக வேண்டாம். ஆன்மா இருக்கிறது என்று நம்புபவர்களுக்கு வழி தெளிவாக உள்ளது. அறிவுபூர்வமான ஒரு முடிவுக்கு வரவேண்டுமானால் முற்பிறவிகளை ஒப்புகொள்ளத்தான் வேண்டும். பண்டைய மற்றும் இன்றைய தத்துவ ஞானியரும், மகான்களும் ஒப்புக் கொள்ளும் உண்மை இது. இந்தக் கோட்பாட்டை யூதர்கள் நம்பினர். ஏசு நம்பினார். 'ஆபிரகாமுக்கு முன்பே நான் இருக் கிறேன்' என்று பைபிளில் அவர் கூறுகிறார். மற்றோர் இடத்தில் 'எலியாஸ்தான் இப்போது தோன்றியுள்ளார்' என்று கூறப் படுகிறது.

பல்வேறு நாடுகளில், பல்வேறு சந்தர்ப்பங்களிலும் சூழ் நிலைகளிலும் தோன்றிய எல்லா மதங்களுமே ஆசியாவைத் தான் பிறப்பிடமாகக் கொண்டன. ஆசியர்கள் இந்த மதங்களை நன்றாக அறிவார்கள். தாயகத்தை விட்டு வெளிவந்த பின்னர் இந்த மதங்களில் பல பிழைகள் சேர்ந்துவிட்டன. கிறிஸ்தவ மதத்தின் ஆழ்ந்த, மேலான கருத்துக்களை ஐரோப்பாவில் யாரும் புரிந்துகொள்ளவில்லை. ஏனெனில் பைபிளை

எழுதியவர்கள் பயன்படுத்திய கருத்துக்களும் உருவகங்களும் அவர்களுக்குப் புறம்பானவை.

உதாரணத்திற்கு, மடோனா (Madonna) ஓவியத்தை எடுத்துக் கொள்ளுங்கள். ஒவ்வொரு ஓவியனும் தான் ஏற்கனவே கொண்டுள்ள கருத்துக்கு ஏற்ப வரைகிறான். ஏசுவின் கடைசி இரவு உணவு (Last Supper) படங்களை நான் நூற்றுக்கணக்கில் பார்த்திருக்கிறேன். அவர் மேஜைமீது சாப்பிடுவதுபோல் சித்தரிக்கப்படுகிறார். ஆனால் ஏசு ஒருநாளும் மேஜைமீது சாப்பிட்டதில்லை, எல்லோருடனும் சேர்ந்து தரையில் உட்கார்ந்துதான் சாப்பிட்டார். அவர்களுக்கு முன்னால் ஒரு கிண்ணம் (bowl) இருக்கும். அதில் ரொட்டியைத் தோய்த்துச் சாப்பிட்டார்கள். அந்த ரொட்டியும் இன்று நீங்கள் சாப்பிடும் ரொட்டியைப் போன்றது அல்ல.

மற்றவர்களின் மாறுபட்ட பழக்கவழக்கங்களை அறிந்து கொள்வது எந்த நாட்டினருக்கும் கடினம். அப்படியிருக்க யூதர்களின் பழக்க வழக்கங்களை, அதிலும் பல நூற்றாண்டு களாகக் கிரேக்கர்களிடமிருந்தும் ரோமானியர்களிடமிருந்தும் ஏற்பட்ட மாற்றங்களுக்கும் சேர்க்கைகளுக்கும் பிறகு ஐரோப்பியர்களால் எப்படி அறிந்துகொள்ள முடியும்? எனவே கட்டுக்கதைகளும் புராணங்களும் சூழ்ந்து, அவற்றின் வாயிலாக வருவதால் ஏசு ஆரம்பித்த அழகிய மதம் நமக்கு ஒருசிறிதே கிடைப்பதில் ஆச்சரியமில்லை. அதனை இன்று அவர்கள் ஒரு வாணிப மதமாக்கிவிட்டதிலும் விந்தை எதுவுமில்லை.

விஷயத்திற்கு வருவோம். ஆன்மா நிலையானது, அதன் ஒளி மங்கிவிட்டது, கடவுளை அறிவதன்மூலம் அதன் பழைய தூய்மை அதற்கு மீண்டும் கிடைக்கும் என்பதை எல்லா மதங் களும் போதிப்பதைக் காண்கிறோம். இவற்றின் கடவுள்-கருத்து என்ன? கடவுளைப் பற்றிய ஆரம்பகாலக் கருத்துத் தெளி வற்றதாக இருக்கிறது. மிகப் புராதனமான நாட்டினர், சூரியன், பூமி, நெருப்பு, நீர் என்று பல தெய்வங்களை வணங்கினர். பண்டைய ஹீப்ருக்களின் இந்தத் தெய்வங்கள் ஒருவரோடு ஒருவர் பயங்கரமாகப் போரிடுவதைக் காண்கிறோம். பிறகு யூதர்களும் பாபிலோனியர்களும் எலோஹிம் என்ற தெய்வத்தை வழிபடுவதைக் காண்கிறோம். பிறகு ஒரே ஒரு கடவுள் மட்டும் மேலோங்கி நிற்பதைக் காண்கிறோம். ஆனால் ஒவ்வோர் இனத் திற்கும் ஏற்ப இந்தத் தெய்வங்கள் மாறினார்கள். இவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் தெய்வம்தான் உயர்ந்தவர் என்று

வற்புறுத்தினார்கள். அதைச் சண்டைகளின்மூலம் நிரூபிக்க முற்பட்டார்கள். நன்றாகச் சண்டையிட வல்ல இனத்தின் தெய்வம்தான் மிக உயர்ந்தவர். இந்த இனங்கள் கிட்டதட்டக் காட்டுமிராண்டி இனங்கள்.

நாளடைவில் மேலும்மேலும் சிறந்த கருத்துக்கள் படிப்படியாக நிலவத் தொடங்கின. பழைய கருத்துக்கள் எல்லாம் கிடங்கை நோக்கிப் போய்விட்டன, அல்லது போய்க் கொண்டிருக்கின்றன. இந்த எல்லா மதங்களும் பல நூற்றாண்டுகளின் வளர்ச்சிதான், எந்த மதமும் ஆகாயத்திலிருந்து குதித்துவிடவில்லை. ஒவ்வொன்றும் சிறிதுசிறிதாக உருவானதுதான்.

பிறகு ஒரே கடவுள்-கருத்துக்கள் (Monotheism) வருகின்றன. கடவுள் ஒருவரே, அவர் எல்லாம் வல்லவர், எல்லாம் அறிந்தவர், பிரபஞ்சம் முழுவதற்கும் அவரே கடவுள். இந்த ஒரே கடவுள் உலகிற்கு அப்பால் உள்ளவர், பரமண்டலத்தில் வாழ்பவர். அவரை உருவாக்கியவர்களின் பண்படாத கருத்துக்களைப் பிரதிபலிப்பவராக இருந்தார் அவர். அவருக்கு வலப்பக்கமும் இடப்பக்கமும் உண்டு, அவரது கையில் ஒரு பறவை இருக்கிறது, இப்படிப் பலப்பல. ஆனால் முக்கியமான விஷயம் என்னவென்றால் பல்வேறு இனங்களின் தெய்வங்கள் ஒரேயடியாக மறைந்துவிட்டனர்; பிரபஞ்சத் தலைவனான தேவதேவன் அவர்களின் இடத்தைப் பிடித்துக் கொண்டார். இருந்தும் அவர் உலகிற்கு அப்பாற்பட்ட கடவுளாக இருந்தார். யாராலும் அவரை அணுக முடியாது, எதுவும் அவரது அருகில் செல்ல முடியாது. ஆனால் மெல்லமெல்ல இந்தக் கருத்தும் மறைந்து, இயற்கையில் நிறைந்துள்ளவரான கடவுள்—கருத்தை அடுத்ததாகக் காண்கிறோம்.

‘பரமண்டலத்தில் இருக்கும் எங்கள் பிதாவே’ என்று புதிய ஏற்பாட்டில் வருகிறது. அதாவது கடவுள் மனிதர்களிடமிருந்து தனித்துப் பரமண்டலத்தில் வாழ்கிறார். நாம் பூமியில் வசிக்கிறோம், அவர் வானில் வசிக்கிறார். பிறகு இயற்கையிலும் நிறைந்துள்ள கடவுள்—கருத்து வருகிறது. அவர் வானில் மட்டும் இல்லை, பூமியிலும் இருக்கிறார். நம்முள்ளும் அவர் இருக்கிறார்.

இந்துத் தத்துவத்தில் இத்தகைய ஒரு நிலையை, அதாவது கடவுள் நம் பக்கத்தில் இருக்கிறார் என்கிற ஒரு கருத்தைக் காண்கிறோம். ஆனால் நாங்கள் அத்துடன் நிற்கவில்லை, அத்வைத நிலைக்கு வருகிறோம். மனிதன் வழிபடுகின்ற கடவுள்

பரமண்டலத்திலும் உலகத்திலும் வாழும் தந்தை மட்டுமல்ல, 'நானும் என் தந்தையும் ஒன்று' என்று அங்கே காண்கிறோம். 'நானும் கடவுள்தான், ஆனால் நான் சற்றுக் கீழ்நிலை வெளிப் பாடு' என்பதை மனிதன் தன் ஆன்மாவில் உணர்கிறான். என்னிடம் உள்ள உண்மையெல்லாம் அவர், அவரிடம் உள்ள உண்மையெல்லாம் நான். கடவுளுக்கும் மனிதனுக்கும் உள்ள இடைவெளி இவ்வாறு கடக்கப்படுகிறது. கடவுளை அறிவதால், எப்படி விண்ணின் அரசு நம்முள் இருக்கிறது என்பதை இவ்வாறு உணர்கிறோம்.

முதல் நிலையில், அதாவது துவைத நிலையில் மனிதன் ஒரு ஜான், ஜேம்ஸ், டாம்—எல்லோரும் ஒரு சிறிய-ஆன்மா; 'நான் என்றென்றும் ஜான், ஜேம்ஸ், டாம்தான்; வேறு யாரும் அல்ல' என்கிறான் அவன். கொலைகாரன் வந்து, 'நான் கால மெல்லாம் கொலையாளியாகத்தான் இருப்பேன்' என்று சொல்வது போன்றது இது. ஆனால் காலம் செல்லச்செல்ல டாம் மறைந்து பழைய தூய ஆதாம் ஆகிறான்.

'தூய இதயம் உடையவர்கள் பாக்கியவான்கள், ஏனெனில் அவர்கள் தேவனைக் காண்பார்கள்.' நாம் இறைவனைக் காண முடியுமா? முடியாதுதான். நாம் கடவுளை அறிய முடியுமா? முடியாதுதான். கடவுளை அறிய முடியுமானால் அதன்பின் அவர் கடவுளாக இருக்க மாட்டார். அறிவு ஒரு வரம்பு. ஆனால் நானும் என் பிதாவும் ஒன்று. உண்மையை நான் என் ஆன்மாவில் காண்கிறேன்.

இந்தக் கருத்துக்கள் சில மதங்களில் தெளிவாகக் கூறப் பட்டுள்ளன, சில மதங்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன, இன்னும் சிலவற்றில் வெளியேற்றப்பட்டுள்ளன. ஏசுவின் போதனைகள் இந்த நாட்டில் இப்போது சரியாக அறியப்பட வில்லை; அவற்றை நீங்கள் சரியாகவே புரிந்து கொள்ளவில்லை என்று நான் சொல்வதற்கு என்னை மன்னிக்க வேண்டும்.

தூய்மையையும் பூரணத்துவத்தையும் அடைவதற்கு வளர்ச்சியில் பல படித்தரங்கள் நிச்சயமாகத் தேவை. வேறுபட்ட எல்லா மதங்களும் முறைகளும் அடிப்படையில் ஒரேமாதிரிக் கருத்துக்களைக் கொண்டவை. 'விண்ணக அரசு உங்களுள் இருக்கிறது' என்று ஏசு கூறுகிறார். 'பரமண்டலத்தில் இருக்கும் எங்கள் பிதாவே' என்றும் கூறுகிறார். இந்த இரண்டு கருத்துக் களையும் எப்படிச் சமரசப்படுத்துவது? அதை இந்த வழியில் செய்யலாம்: படிக்காத பாமர மக்களுக்கு, மதத்தைப் பற்றி

ஒன்றும் அறியாத மக்களுக்கு அவர் இரண்டாவது கருத்தைச் சொன்னார். அவர்களுக்குப் புரிகின்ற மொழியில் பேச வேண்டியது அவசியமாகிறது. பாமர மக்களுக்குத் தூலமான கருத்துக்கள், அதாவது புலன்களால் கிரகிக்கக்கூடிய கருத்துக்கள் வேண்டும். ஒருவன் உலகத்தின் மிகப்பெரிய தத்துவ வாதியாக இருக்கலாம், ஆனால் மத விஷயங்களில் குழந்தையாக இருக்கலாம். ஆன்மீகத்தில் மிக உயர்ந்தவனாகும்போதுதான் விண்ணக அரசு தன்னுள் இருப்பதை அவன் அறிய முடியும். இதுதான் உண்மையான மனத்தின் அரசு.

ஆகவே ஒவ்வொரு மதத்திலும் முரண்பாடுகள் போலவும் குழப்பங்கள் போலவும் தோன்றுபவை அதன் வளர்ச்சியில் சில படிகளைக் காட்டுகின்றன. எனவே நாம் யாரையும் அவனுடைய மதத்திற்காகக் குற்றம் சொல்லக் கூடாது. வளர்ச்சியின் சில படிகளில் உருவங்களும் சின்னங்களும் தேவைப்படுகின்றன. அந்தப் படிகளில் உள்ளவர்கள் புரிந்துகொள்ளக் கூடிய மொழி அவை.

நான் அடுத்ததாக உங்களுக்குச் சொல்ல விரும்புகின்ற கருத்து, மதம் என்பது கொள்கைகளிலும் கோட்பாடுகளிலும் இல்லை என்பதாகும். நீங்கள் எதைப் படிக்கிறீர்கள், எதை நம்புகிறீர்கள் என்பது முக்கியமல்ல, நீங்கள் எதை அனுபூதியில் அறிந்திருக்கிறீர்களோ, அதுதான் முக்கியம். 'தூய இதயம் உடையவர்கள் பாக்கியவான்கள்; அவர்கள் தேவனைக் காண்பார்கள்.' ஆம், இந்த வாழ்க்கையிலேயே காண்பார்கள். அதுதான் முக்தி. சில சொற்களை முணுமுணுப்பதால் இது கிடைக்கும் என்று போதிப்பவர்களும் இருக்கிறார்கள். ஆனால் முக்திக்குப் புறச் சடங்குகள் அவசியம் என்று எந்தப் பெரிய ஆச்சாரியரும் போதித்ததில்லை. அதை அடையும் சக்தி நம்முள் தான் இருக்கிறது. நாம் கடவுளில் வாழ்கிறோம், கடவுளில் நடமாடுகிறோம். கொள்கைகளுக்கும் மதப் பிரிவுகளுக்கும் இடம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அவை குழந்தைகளுக்கு. அவை தற்காலிகமானவை. சாஸ்திரங்களினால் மதங்கள் உருவாவதில்லை, மதங்கள்தான் சாஸ்திரங்களை உருவாக்குகின்றன, அதை நாம் மறக்கக் கூடாது. இதுவரை எந்தச் சாஸ்திரமும் கடவுளைப் படைக்கவில்லை, ஆனால் எல்லா பெரிய சாஸ்திரங்களையும் அருளியவர் அவர். எந்தச் சாஸ்திரமும் இதுவரை ஆன்மாவைப் படைக்கவில்லை, அதை நாம் ஒருபோதும் மறக்கக் கூடாது. கடவுளை ஆன்மாவில்

உணர்வதுதான் எல்லா மதங்களின் குறிக்கோள். உலகம்தழுவிய ஒரே மதம் அதுதான்.

எல்லா மதங்களிலும் உலகம்தழுவிய ஏதாவது உண்மை இருக்கிறதென்றால் அது இறையநுபூதி என்பதை இங்கே குறிப்பிட விரும்புகிறேன். குறிக்கோள்களும் முறைகளும் மாறுபடலாம். ஆனால் அநுபூதிதான் மையக் கருத்து. ஆரங்கள் ஆயிரம் இருக்கலாம், ஆனால் அவை எல்லாம் ஒரே மையத்தை நோக்கியே செல்கின்றன. அதுதான் இறையநுபூதி; அதாவது இந்தப் புலனுலகிற்கு அப்பால், இடைவிடாது உண்பதும் குடிப்பதும் பிதற்றல்களுமான இந்த உலகத்திற்கு அப்பால், மாய நிழல்களும் சுயநலமும் நிறைந்த இந்த உலகத்திற்கு அப்பால் உள்ள ஏதோ ஒன்று. எல்லா சாஸ்திரங்களுக்கும் அப்பால், எல்லா கொள்கைகளுக்கும் அப்பால், இந்த உலகின் வீண் பகட்டுகளுக்கும் அப்பால் உள்ளது அது. அதுதான் இறைவனை உங்களுள்ளேயே உணர்வது.

ஒருவன் உலகில் உள்ள எல்லா சர்ச்சுகளையும் நம்பலாம், இதுவரை எழுதப்பட்ட எல்லா புனித நூல்களையும் தன் மூளையில் ஏற்றிச் செல்லலாம், உலகில் உள்ள எல்லா நதிகளிலும் ஞானஸ்நானம் பெறலாம், ஆனால் அவனுக்கு இறையறிவு இல்லாவிட்டால் அவன் தீவிர நாத்திகன் என்றே நான் சொல்வேன். ஒருவன் சர்ச்சுக்கோ மசூதிக்கோ ஒருமுறை கூடப் போகாதவனாக இருக்கலாம், எந்தச் சடங்கும் செய்யாதவனாக இருக்கலாம், ஆனால் தன்னுள் கடவுளை உணர்ந்து, அதன் காரணமாக, உலகத்தின் பகட்டுகளால் தொடப்படாதவனாக இருப்பானானால் அவன் புனிதன், அவன் மகான் என்று எப்படி வேண்டுமானாலும் அழைத்துக் கொள்ளுங்கள்.

ஒருவன் எழுந்துநின்று, தான் மட்டுமே சரியானவன், தனது நெறி மட்டுமே சரியானது, மற்றவர்கள் எல்லோரும் செய்வது தவறு என்று சொல்வானானால், அவன்தான் முழுக்க முழுக்கத் தவறானவன். மற்றவர்களின் வழி சரி என்று நிரூபிக்கப் படுவதில்தான் அவனது வழியின் நிரூபணம் அடங்கியிருக்கிறது என்பது அவனுக்குத் தெரியவில்லை. மனிதகுலம் முழுவதையுமே நேசித்தல், பரிவு—இவையே மதஉணர்வுக்கான பரிசோதனை. எல்லா மனிதர்களும் சகோதரர்கள் என்றெல்லாம் உணர்ச்சி வசப்பட்டுச் சொல்லப்படுகிறதே, அதை நான் குறிப்பிடவில்லை; தான் மனித வாழ்க்கையுடன் ஒன்றுபட்டிருப்பதை ஒருவன் உணர வேண்டும், அதுவே நான் சொல்வது.

மற்றவற்றிலிருந்து விடுபட்டுத் தனித்து இருக்காத வரையில், கொள்கைகளும் பிரிவுகளும் நம்முடையவை என்று நான் காண்கிறேன். அவை எல்லாமே சிறப்பானவை, அவை எல்லாமே மனிதன் உண்மையான மதத்தை நாட உதவுகின்றன.

இன்னும் ஒருபடி சென்று 'ஒரு மதப்பிரிவில் பிறப்பது நல்லது, ஆனால் வளராமல் அங்கேயே இறப்பது தீயது' என்பேன் நான். குழந்தையாகப் பிறப்பது நல்லது, ஆனால் குழந்தையாகவே இருப்பது தீயது. கோயில்கள், சடங்குகள், சின்னங்கள் எல்லாம் குழந்தைகளுக்கு நல்லவை. ஆனால் வளர்ந்தபின் அவன் இவற்றைத் தகர்க்க வேண்டும், அல்லது தன்னைத் தகர்த்துக்கொள்ள வேண்டும். நாம் எப்போதும் குழந்தையாகவே இருக்கக் கூடாது. வெவ்வேறு பருமன் உள்ள வர்களும், வெவ்வேறு அளவினரும் ஒரே சட்டையை அணிவது போன்றது இது.

உலகில் மதப் பிரிவுகள் இருப்பதை நான் எதிர்க்கவில்லை. இன்னும் இரண்டுகோடிப் பிரிவுகள் இருக்க இறைவன் அருளட்டும். ஏனெனில் அவை அதிகமாகின்ற அளவுக்கு தேர்ந் தெடுப்பதற்கான வாய்ப்பு அதிகமாகும். ஒரே மதத்தை எல் லோருக்கும் பொருத்த முயற்சிப்பதைத்தான் நான் எதிர்க்கிறேன். எல்லா மதங்களும் சாராம்சத்தில் ஒன்றுதான், என்றாலும் அவை பல நாடுகளில் நிலவிய மாறுபட்ட சூழ்நிலைகளால் பல்வேறு விதமாக உருவாகியவையாக இருக்க வேண்டும். நம் ஒவ்வொருவருக்கும் தனிப்பட்ட மதம் வேண்டும்; அதாவது புறச் சடங்குகளில் தனிப்பட்டதான மதம் வேண்டும்.

பல ஆண்டுகளுக்கு முன்பு எங்கள் நாட்டின் பெரிய மகான் ஒருவரை நான் தரிசித்தேன். மிகவும் தூயவர் அவர். வேதங்கள், உங்கள் பைபிள், குரான் போன்ற அருள் வெளிப் பாட்டு நூல்களைப் பற்றிப் பொதுவாகப் பேசிக் கொண்டிருந் தோம். முடிவில் அவர் மேஜையின்மீது இருந்த ஒரு புத்தகத்தை எடுக்கச் சொன்னார். அதில் மற்ற விஷயங்களோடுகூட அந்த வருடம் எவ்வளவு மழை பெய்யும் என்றும் முன்னறிவிப்பு காணப்பட்டது. 'இதைப் படி' என்றார் அவர். எவ்வளவு மழை பொழியும் என்பதை நான் படித்தேன். 'இப்போது அந்தப் புத்தகத்தைப் பிழி' என்றார். நான் அப்படியே செய்தேன். அவர் சொன்னார்: 'அப்பா, ஒரு சொட்டுத் தண்ணீர்கூட வரவில்லை. தண்ணீர் வருவதைப் பொறுத்தவரையில் அது புத்தகம், வெறும் புத்தகம்தான். ஆகவே உன் மதம் நீ கடவுளை

உணரும்படிச் செய்யாவிட்டால் அது பயனற்றது. சர்க்கரை மூட்டையை முதுகில் சுமந்து கொண்டிருந்தும், அதன் சுவை அறியாமல் இருக்கும் கழுதையைப் போன்றவன்தான் மத உணர்வுக்காக நூல்களை மட்டுமே படிப்பவன்.'

'ஓ, அற்பப் பாவிகள் நாங்கள்' என்று முழந்தாளிட்டு ஓலமிடும்படி நாம் மக்களுக்குப் போதிக்கவா? வேண்டாம். அதற்குப் பதிலாக அவர்களுடைய தெய்வீக இயல்பை அவர்களுக்கு நினைவுபடுத்துவோம். உங்களுக்கு ஒரு கதை சொல்கிறேன். சூல்கொண்ட ஒரு சிங்கம் இரைதேடிச் சென்று கொண்டிருந்தது. ஆட்டு மந்தை ஒன்றைக் கண்டதும் அதன்மீது பாய்ந்தது. அந்த அதிர்ச்சியில் ஒரு குட்டியை ஈன்றுவிட்டு அங்கேயே வீழ்ந்து இறந்தது. அந்தச் சிங்கக்குட்டி ஆடுகளோடு சேர்ந்து வளர்ந்தது. புல்லைத் தின்றது, ஆடுபோல் கத்தியது, தான் ஒரு சிங்கம் என்பதே தெரியாமல் வளர்ந்தது. ஒருநாள் வேறொரு சிங்கம் இந்த ஆட்டு மந்தை இருந்த பக்கமாக வந்தது. ஆட்டு மந்தையில் ஒரு சிங்கம் புல்லைத் தின்றுகொண்டு, ஆடுபோல் கத்தியதைக் கண்டு ஆச்சரியம் அடைந்தது. சிங்கத்தைக் கண்டதும் எல்லா ஆடுகளும் ஓடின, இந்த ஆட்டுச் சிங்கமும் ஓடி மறைந்தது. சிங்கம் தக்க சமயத்தை எதிர்நோக்கியிருந்தது. ஒரு நாள் ஆட்டுச் சிங்கம் தூங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தது. அதனை எழுப்பி, 'நீ ஒரு சிங்கம்' என்று சொல்லியது. 'இல்லை' என்று சொல்லிவிட்டு, பயத்தில் ஆட்டைப்போல் கத்த ஆரம்பித்தது ஆட்டுச் சிங்கம். ஆனால் அந்தச் சிங்கம் அதை விடாமல் ஒரு ஏரிக்கு அழைத்துச் சென்றது. தண்ணீரில் தெரிந்த அதன் உருவத்தைப் பார்க்கச் சொல்லி, அந்த உருவம் தன்னைப் போலவே இருப்பதைக் காட்டியது. ஆட்டுச் சிங்கமும் தனது பிம்பத்தைப் பார்த்தது. 'ஆமாம்' என்றது. சிங்கம் கர்ஜனை செய்து, ஆட்டுச் சிங்கத்தையும் அப்படியே செய்யும்படிச் சொல்லிற்று. ஆட்டுச் சிங்கம் கத்த ஆரம்பித்தது, சீக்கிரமே அது சிங்கத்தைப் போலவே கர்ஜனை செய்ய ஆரம்பித்துவிட்டது. இனி அது ஆடு அல்ல. என் நண்பர்களே, நீங்கள் எல்லோரும் சிங்கத்தைப் போன்ற வலிமை கொண்டவர்கள் என்று சொல்ல விரும்புகிறேன்.

அறை இருட்டாக இருந்தால், 'ஐயோ, இருட்டாக இருக்கிறதே, இருட்டாக இருக்கிறதே' என்று மார்பில் அடித்துக் கொண்டு ஓலமிடுவீர்களா? இல்லை. வெளிச்சம் வருவதற்கு ஒரே வழி விளக்கை ஏற்றி வைப்பதுதான். உடனே இருள்

விலகிவிடும். மேலே திகழும் பேரொளியைப் பெறுவதற்கு, உள்ளே உள்ள ஆன்ம தீபத்தை ஏற்றி வைப்பதுதான் ஒரே வழி. பாவம், அசுத்தம் என்னும் இருட்டு உடனே ஓடிவிடும். தாழ்ந்த நிலையைப்பற்றி அல்ல, உங்கள் உயர்ந்த நிலையைப்பற்றி எண்ணுங்கள்.

தொடர்ந்து கேள்வி-பதில் நிகழ்ச்சி நடைபெற்றது.

கேள்வி: பாதிரிகள் நரகத்தைப்பற்றிப் பிரச்சாரம் செய்யா விட்டால், மக்கள்மீது அவர்களுக்குள்ள ஆதிக்கம் போய் விடுமே!

பதில்: அப்படியானால் போவதுதான் நல்லது. பயத்தின் காரணமாக மதத்தில் நுழைபவனுக்கு மதமே இல்லை. அவனுக்கு அவனுடைய மிருக இயல்பைப்பற்றிச் சொல்லாமல் அவனது தெய்வீக இயல்பைச் சொல்லிக் கொடுங்கள்.

கேள்வி: 'விண்ணக அரசு இந்த உலகத்தைச் சேர்ந்ததல்ல' என்று ஏசு கிறிஸ்து சொன்னாரே அதன் பொருள் என்ன?

பதில்: விண்ணக அரசு நம்முள் இருக்கிறது என்று பொருள். அந்த விண்ணக அரசு பூமியிலேயே நிலவும் என்பது யூதர்களின் கருத்து. ஆனால் ஏசுவின் கருத்து அது அல்ல.

கேள்வி: நாம் மிருகங்களிலிருந்து தோன்றினோம் என்பதை நம்புகிறீர்களா?

பதில்: பரிணாம நியதியின்படி கீழ் நிலைகளிலிருந்து படிப் படியாக மேல் நிலைகள் உருவாயின என்று நான் நம்புகிறேன்.

கேள்வி: முற்பிறவி நினைவு உள்ள யாரையாவது உங்களுக்குத் தெரியுமா?

பதில்: முற்பிறவி நினைவு உள்ளது என்று சொன்ன சிலரை நான் சந்தித்திருக்கிறேன். தங்கள் பழைய பிறவிகள் அனைத்தையும் அறிகின்ற ஒரு நிலையை அவர்கள் அடைந் திருந்தார்கள்.

கேள்வி: ஏசுவைச் சிலுவையில் அறைந்தார்கள் என்று நம்புகிறீர்களா?

பதில்: ஏசு கடவுளின் அவதாரம். அவர்கள் அவரைக் கொல்ல முடியாது. சிலுவையில் அறையப்பட்டது ஒரு தோற்றம், ஒரு கானல் நீர்.

கேள்வி: அத்தகைய தோற்றத்தை அவர் உருவாக்கியிருந் தால், அவர் செய்த அற்புதங்களில் அது மிகப்பெரிய அற்புதம் அல்லவா?

பதில்: உண்மையின் பாதையில் அற்புதங்கள் மிகப்பெரிய தடைகள் என்று நான் கருதுகிறேன். அற்புதம் என்று சொல்லக் கூடிய ஒன்றை ஒருவன் நிகழ்த்தியதாக புத்தரின் சீடர்களில் ஒருவர் அவரிடம் கூறினார். கையால் தொடாமலே உயரத்தில் இருந்த பாத்திரத்தைக் கீழே கொண்டுவந்தான் என்று சொல்லி அந்தப் பாத்திரத்தை புத்தரிடம் காண்பித்தார்கள். உடனே அவர் அந்தப் பாத்திரத்தை அவர்களிடமிருந்து வாங்கி, அதைக் காலில் போட்டு உடைத்தார். பின்னர், அற்புதங்களை நம்பக் கூடாதென்றும், அழியாத தத்துவங்களிடையே உண்மையைத் தேடும்படியும் கூறினார். உண்மையான அக ஒளியை, அதாவது ஆன்ம ஒளியை அவர் அவர்களுக்குப் புகட்டி, அந்த ஒளியின் வெளிச்சத்தில் செல்வதுதான் ஆபத்தில்லாதது என்று சொன்னார். அற்புதங்கள் வெறும் முட்டுக்கட்டைகள். அவற்றை நாம் அப்பால் தள்ளி விடுவோம்.

கேள்வி: ஏசு மலைப் பிரசங்கம் செய்தார் என்று நம்புகிறீர்களா?

பதில்: செய்தார் என்றே நான் நம்புகிறேன். இந்த விஷயத்தில் நான் மற்றவர்களைப்போல் புத்தகங்களைத்தான் நம்ப வேண்டியிருக்கிறது. புத்தக ஆதாரம் அவ்வளவு உறுதியானது அல்ல என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் மலைப் பிரசங்கத்தில் சொல்லப்பட்ட போதனைகளை ஒரு வழிகாட்டியாகக் கொள்வதில் ஆபத்தில்லை. அக ஆன்மாவை எது தொடுகிறதோ அதை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஏசுவுக்கு ஐநூறு வருடங்களுக்கு முன்பு புத்தர் போதித்தார். அவரது வார்த்தைகள் அத்தனையும் வாழ்த்துக்கள் நிறைந்தவையாக இருந்தன. ஒரு சாபம்கூட அவரது வாயிலிருந்தோ வாழ்விலிருந்தோ வரவில்லை. அவ்வாறே சொராஸ்டிரர் வாயிலிருந்தும் வரவில்லை, கன்ஃபூஷியஸ் வாயிலிருந்தும் வரவில்லை. ❑

## 9. மதத்தில் கூலிகள்

23 நவம்பர் 1893; Minneapolis Journal-லில்
26-ஆம் நாள் வெளி வந்த குறிப்பு

ஐந்து குருடர்களைப்பற்றிய கதை ஒன்றை இப்போது நான் உங்களுக்குச் சொல்லப் போகிறேன். இந்தியாவில் ஒரு கிராமத்தின் வழியாக ஊர்வலம் ஒன்று சென்று கொண்டிருந்தது. அதைக் காண்பதற்காக மக்கள் கூடினர், அதில் அலங்கரித்து அழைத்து வரப்பெற்ற யானையைக் கண்டு பெரிதும் மகிழ்ந்தனர். இந்தக் குருடர்களால் அதைக் காண முடியவில்லை. எனவே தடவிப் பார்த்தாவது மகிழ எண்ணி, அதற்கான அனுமதி பெற்றனர். பின்னர் அவ்வாறே தொட்டுணர்ந்து மகிழ்ந்தனர். வீடு திரும்பியபின் யானையைப் பற்றிப் பேசினர்.

'சுவர் மாதிரி இருந்தது' என்றான் ஒருவன்.

'இல்லை இல்லை, கயிறுபோல் இருந்தது' என்றான் இன்னொருவன்.

'நீங்கள் சொல்வது தவறு. பாம்புபோல் இருந்தது' என்றான் மூன்றாமவன். வாக்குவாதம் முற்றியது.

'தலையணை போலிருந்தது' என்றான் நான்காவது குருடன்.

சண்டை முற்றி ஐவரும் அடிதடி சண்டையில் இறங்கினர். அப்போது அங்கே ஒருவன் வந்தான், இரண்டு கண்களும் நல்ல நிலையில் உள்ளவன் அவன். 'என்ன விஷயம்? ஏன் சண்டையிடுகிறீர்கள்?' என்று கேட்டான். குருடர்கள் ஐவரும் தாங்கள் யானையைப் பார்த்த விஷயத்தைக் கூறினர். அப்போது அவன் கூறினான்:

'நீங்கள் ஒவ்வொருவர் கூறுவதும் சரியே. ஆனால் நீங்கள் ஒவ்வொருவரும் யானையின் ஒவ்வோர் உறுப்பையே தடவிப் பார்த்துள்ளீர்கள். சுவர் போலிருந்தது யானையின் உடல். கயிறு போலிருந்தது வால். பாம்பு போலிருந்தது துதிக்கை. தலையணை போலிருந்தது பாதம். எனவே சண்டையிடுவதை

நிறுத்துங்கள். நீங்கள் ஒவ்வொருவர் சொல்வதும் சரி. யானையின் பல்வேறு பகுதிகளை நீங்கள் பார்த்தீர்கள்.'

மதமும் இத்தகைய பூசலுக்கு உட்பட்டு விட்டது. மேலை நாட்டினர் தங்கள் மதமே தெய்வ மதம் என்று கருதினார்கள். கீழை நாட்டினரும் அவ்வாறே எண்ணினார்கள். இருவரும் தவறே. இறைவன் ஒவ்வொரு மதத்திலும் உள்ளார்.

மேலை நாட்டுக் கருத்துபற்றிய பல விமர்சனங்கள் உள்ளன. 'வாணிப மதத்தினர்' என்று கிறிஸ்தவர்கள் குறைகூறப் பட்டார்கள். 'கடவுளே எனக்கு இதைத் தா, அதைத் தா; இதைச் செய், அதைச் செய்' என்று எப்போதும் அவர்கள் கடவுளிடம் இரக்கின்றனர். இது இந்துவுக்கு விளங்கவில்லை. கடவுளிடம் பிச்சை கேட்பது தவறு என்று அவன் நினைத்தான். மதவாதி என்றால் அவன் கேட்கக் கூடாது, கொடுக்க வேண்டும். கடவுளிடம் தங்களுக்காகக் கேட்பதைவிட, கடவுளுக்குக் கொடுக்க வேண்டும், பிறருக்குக் கொடுக்க வேண்டும் என்று கருதினான் அவன். மேலை நாட்டினர் பலர், எல்லாம் சரியாக இருக்கும்வரை தெய்வசிந்தனை உடையவர்களாக இருப்பதையும், கொஞ்சம் நலக்குறைவு வந்தால் கடவுளை மறந்துவிடுவதையும் அவன் கண்டான். ஆனால் இந்து அப்படிச் செய்வதில்லை. கடவுளை அன்புருவாக அவன் காண்கிறான்; தாயாகவும், தந்தையாகவும் காண்கிறான். தாயாகக் காண்பதில்தான் அன்பு நிறைவெய்துகிறது.

மேலை நாட்டுக் கிறிஸ்தவன் வாரம் முழுவதும் பணத்திற்காக உழைக்கிறான். அது கிடைத்தவுடன், 'இறைவா, பணத்தைத் தந்ததற்காக நன்றி' என்பான். பிறகு பணம் முழுவதையும் சட்டைப் பையில் போட்டுக் கொள்வான். ஆனால் இந்துவோ பணத்தைச் சம்பாதிப்பான், ஏழைகளுக்கும் தாழ்ந்தவர்களுக்கும் கொடுப்பதன்மூலம் கடவுளுக்கே அந்தப் பணத்தை அளிப்பான்.

மேலை நாட்டவராகிய நீங்கள் உங்களிடம்தான் கடவுள் இருக்கிறார் என்று நினைக்கிறீர்கள். அப்படி இருந்தால் குற்றங்கள் இவ்வாறு மலிந்திருப்பது ஏன்? பத்தில் ஒன்பது பேர் ஆஷாடபூதிகளாக இருப்பது ஏன்? கடவுள் இருக்கும் இடத்தில் போலித்தனம் இருக்கக் கூடாதே! வழிபாட்டிற்காகப் பெரிய அரண்மனைகளையே கட்டியுள்ளீர்கள். வாரம் ஒரு முறை அங்கு போகிறீர்கள். ஆனால் அதில் எத்தனைபேர் கடவுளை வழிபடுவதற்காகப் போகிறீர்கள்? வாரம் ஒருமுறை

சர்ச்சிற்குப் போவது மேலைநாட்டில் நாகரீகமாகி விட்டது. நாகரீகம் என்ற ஒரு காரணத்திற்காகவே உங்களில் பலர் போகிறீர்கள். அப்படியிருக்கக் கடவுளைத் தனிச் சொந்தம் கொண்டாட உங்களுக்கு என்ன உரிமை இருக்கிறது?

இந்து மதத்தினராகிய நாங்கள் கடவுளை வழிபடுகிறோம். அவர் ஏதோ தருவார் என்பதற்காக அல்ல, அன்பிற்காக அன்பு செய்கிறோம். அவர் அன்பு வடிவினர். அன்பிற்காக இறைவனை வழிபடாத மதத்திலோ, சமுதாயத்திலோ, மக்களிடமோ, கடவுள் இல்லை. மேலை நாட்டவராகிய நீங்கள் வியாபாரத் துறையில் செயல்வீரர்கள், பல புதியவற்றைக் கண்டுபிடிப்பதில் செயல்வீரர்கள். ஆனால் கீழ்த்திசை நாட்டவராகிய நாங்களோ மதத்தில் செயல்வீரர்கள். வியாபாரம் உங்கள் தொழில், மதம் எங்கள் தொழில்.

நீங்கள் இந்தியாவிற்கு வந்து வயலில் வேலை செய்யும் ஒருவனிடம் சென்று அரசியல்பற்றிப் பேசினால் அவனுக்கு எதுவும் தெரியாது. ஆனால் மதத்தைப் பற்றிப் பேசினால் மதத் திலுள்ள பல்வேறு கொள்கைகளை அவன் அறிந்திருப்பான். 'உங்கள் அரசாங்கம் எத்தகையது?' என்று கேளுங்கள். எனக்குத் தெரியாது. வரி கொடுக்கிறேன், அவ்வளவுதான்' என்பான்.

உங்கள் நாட்டுத் தொழிலாளர்களுடன் நான் பேசினேன், விவசாயிகளுடன் பேசினேன். அவர்களுக்கு அரசியல் நன்றாகத் தெரிந்திருந்தது. தாங்கள் 'டெமாக்ரடிக்' கட்சியினர் அல்லது 'ரீபப்ளிக்' கட்சியினர்; வெள்ளிக் கட்டுப்பாடு நீங்க வேண்டுமா, தங்க நிர்ணயம் வேண்டுமா என்பன போன்ற விஷயங்களை எல்லாம் நன்றாக அறிந்திருந்தனர். ஆனால் மதத்தைப்பற்றி அவர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. இந்த விஷயத்தில் அவர்கள் இந்திய விவசாயிகளைப் போன்றவர்கள்; சர்ச்சுக்குப் போகிறார்கள், காணிக்கை செலுத்துகிறார்கள், அவ்வளவுதான். கடவுளைப்பற்றி அவர்கள் அறிந்தது அவ்வளவே.

மூடநம்பிக்கைகள் இந்தியாவில் உள்ளன என்பது ஒப்புக் கொள்ளக் கூடியதே. எந்த நாட்டில்தான் அது இல்லை? ஒவ் வொரு சமுதாயமும் கடவுளைத் தங்கள் ஏகபோக உரிமையாகக் கொண்டாடுகின்றன. கடவுள் எல்லா நாட்டினருக்குமே சொந்த மானவர். நன்மை செய்யும் உணர்ச்சி எதுவும் கடவுளே. மேலை நாட்டவராயினும் சரி, கீழை நாட்டவராயினும் சரி, கடவுளை ஒரு 'தேவை'யாக உணர வேண்டும். தண்ணீரில் மூழ்கிய ஒருவன் மூச்சுவிடுவதற்கு எப்படித் தவிப்பானோ, அதின்றி

உயிர் வாழ முடியாதென்று நினைப்பானோ அத்தகைய தீவிர வேட்கையே 'தேவை' என்பது. அப்படி உங்களுக்குக் கடவுள் 'தேவை' என்பதை உணர்வீர்களானால், நீங்கள் இந்தியாவில் வரவேற்கப் படுவீர்கள். ஏனெனில் கிறிஸ்தவப் பாதிரிகள் அப்போது இந்தியாவுக்கு வந்தால் கடவுளுடன் மக்களிடம் வருவார்கள், இந்தியா கடவுளை அறியாதது என்ற எண்ணத் துடன் வர மாட்டார்கள்; அன்பு நிறைந்த உள்ளத்துடன் வருவார்கள், கொள்கை வெறியுடன் வரமாட்டார்கள். ❑

# 10. உலகம்தழுவிய ஒருமைப்பாடு

ஒக் பீச் கிறிஸ்தவ ஒருமைப்பாட்டுச் சங்கம், 27 ஜூலை 1895

எல்லா மதங்களும் அடிப்படையில் ஒரேமாதிரிதான் இருக்கின்றன. கதையில் வருகின்ற பாரசேயனைப் (Pharisee) போல், இன்று கிறிஸ்தவர்கள், இறையருளால் தங்கள் மதம் ஒன்றே சரியானது, மற்றவை தவறானவை, அவற்றிற்குக் கிறிஸ்தவ மதத்தின் ஒளி வேண்டியிருக்கிறது என்று நினைக்கிறார்கள். ஆனாலும் அனைத்து மதங்களின் அடிப்படையில் ஓர் ஒற்றுமை இருக்கவே செய்கிறது. கிறிஸ்தவ மதத்துடன் உலக மதங்கள் ஒத்துப்போக வேண்டுமானால், பிற மதங்களையும் தழுவிப் போகின்ற தன்மையைக் கிறிஸ்தவ மதம் வளர்த்துக்கொள்ள வேண்டும். தனக்காக சாட்சி ஒன்றை வைக்காமல் இறைவன் எந்த இதயத்தையும் விடவில்லை. எல்லோரும், முக்கியமாக ஏசுவைப் பின்பற்றுபவர்கள், இதை ஒப்புக்கொள்ள வேண்டும். நல்லவர்கள் எல்லோரையுமே இறைக் குடும்பத்தில் சேர்த்துக் கொள்ள ஏசு தயாராக இருந்தார். ஏதோ ஒரு கொள்கையை நம்புபவன் அல்ல, பரமண்டலத்திலிருக்கும் பிதாவின் சித்தப்படி நடப்பவனே சரியானதைச் செய்பவன். சரியானவனாக இருப்பது, சரியானதைச் செய்வது—இந்த அடிப்படையில் உலகம் ஒன்றுபட இயலும். ❑

## 11. உண்மை குரு யார்?

ஆன்மீக சக்தியின் களஞ்சியமாக அவ்வப்போது உலகில் பிறந்து, குரு-சீட பரம்பரைமூலம் வருங்கால சந்ததியினருக்காக ஆன்மீக ஆற்றலைப் பாய்ச்சுபவரே உண்மைக் குரு. வேகமிக்க ஆறு தன் பழைய பாதையை விட்டு விலகிப் புதிய பாதை ஒன்றில் செல்வதுபோல், இந்த ஆன்ம சக்தியின் ஓட்டம் அவ்வப்போது திசைமாறுகிறது. அவ்வாறே பழைய நெறிகள் காலப்போக்கில் உயிரிழந்து மங்குவதும் புதுப்புது நெறிகள் உயிர்க்களையுடன் தோன்றுவதையும் காண்கிறோம். அத்தகைய உயிர் ததும்புகின்ற நெறிகளையே உண்மையான விவேகிகள் பின்பற்றுகிறார்கள். ஒருகாலத்தில் மகோன்னதமாக வாழ்ந்த மிருகங்களின் எலும்புக் கூடுகள் கண்காட்சிச் சாலையில் வைக்கப்பட்டிருக்குமே, அதுபோன்றவையே பழைய நெறிகள். அவற்றுக்கு உரிய மதிப்பை நாம் அளிக்க வேண்டும். சுவையான மாம்பழத்தை விரும்புபவனின் ஆசையை, பட்ட மாமரம் நிறை வேற்ற முடியாது. அதுபோல் மிக உயர்ந்ததை அடைய வேண்டும் என்னும் ஆன்மாவின் ஆவலை இந்தப் பழைய நெறி களால் நிறைவேற்ற முடியாது.

'என்னிடம் ஆன்மீக அறிவு இருக்கிறது' போன்ற வீண் பகட்டுகளை விட்டுவிட்டு, குருவின் வழிகாட்டுதலில் நம்மை முழுவதுமாக ஒப்படைப்பதே முதலில் வேண்டுவது. நம்மை நிறைநிலைக்கு அழைத்துச் செல்லும் வழி எது என்பது குருவுக்கு மட்டுமே தெரியும். இந்த விஷயத்தில் நாம் குருடர்கள், நமக்கு ஒன்றுமே தெரியாது. இத்தகைய பணிவு ஆன்மீக உண்மைகளுக் காக நமது இதயக் கதவைத் திறந்து வைக்கிறது. ஆணவத்தின் மிக மங்கலான நிழல் இருந்தாலும் நமது மனத்தில் உண்மை ஒளிராது. இந்த ஆணவப் பேயை மனத்திலிருந்து விரட்ட எல்லோரும் முயல வேண்டும். பரிபூரண சரணாகதியே ஆன்மீக ஒளி பெற ஒரே வழி. ❑

## 12. குருவின் தகுதி

வியாபார முறையில் கணக்குப் பார்க்கும் எண்ணத்தை விடு. ஒரு குறிப்பிட்ட பொருளின் மீதுள்ள பற்றுதலைவிட இயலுமானால் நீ முக்திப் பாதையில் செல்கிறாய். விலைமகளை, பாவியை, சாதுவைப் பார்க்காதே. விலைமகளும் ஆதிபராசக்தியே. துறவி இவ்வாறு ஒரு முறை சொல்வான், இருமுறை சொல்வான், பிறகு அறியாமையில் மூழ்கி, 'ஒழுக்கமற்றவளே, தீயவளே' என்பான். அறியாமை மொத்தமாகக் கணநேரத்தில் மறைகிறது' சிறிது சிறிதாக மறையும் என்று சொல்வது முட்டாள்தனம். குரு, லட்சியத்திலிருந்து வழுவியபோதிலும் அவரை பக்தியுடன் போற்றுகின்ற சீடர்கள் இருக்கிறார்கள். ராஜபுதனத்தில் ஒருவனைக் கண்டேன். அவனது குரு கிறிஸ்தவனாகி விட்டார். எனினும் அந்தச் சீடன் தனது காணிக்கையைத் தொடர்ந்து அளித்து வந்தான். மேலைநாட்டு எண்ணங்களை விட்டுவிடுங்கள். ஒரு குருவைத் தேர்ந்தெடுத்தபின் முழு ஆற்றலையும் செலுத்தி அவரைப் பின்பற்றுங்கள். வேதாந்தத்தில் ஒழுக்க அடிப்படையில்லை என்று கூறுபவர்கள் குழந்தைகளே. அவர்கள் கூறுவதும் ஒருவகையில் சரிதான், ஏனெனில் வேதாந்தம் ஒழுக்கத்திற்கு அப்பாற்பட்டது. துறவியாகிய நீங்கள் உயர்ந்தவைபற்றியே பேசுங்கள். ❑

## 13. அதிகாரிவாதத்தால் வரும் தீமைகள்

பழங்கால ரிஷிகளிடம் எனக்கு அளவற்ற மதிப்பும் மரியாதையும் உண்டு. எனினும் அவர்கள் மக்களுக்குப் போதிக்கின்ற முறைகளை என்னால் கண்டிக்காமலிருக்க முடியவில்லை. சிலவற்றைச் செய்யும்படிக் கட்டளையிடுவார்கள்; ஆனால் ஏன் அவற்றைச் செய்ய வேண்டும் என்பதற்கான காரணத்தை விளக்க மாட்டார்கள். இந்த முறை முற்றிலும் தீங்கு விளைவிப்பது. மக்கள் தங்கள் லட்சியத்தை அடைய உதவுவதற்குப் பதிலாக இது அவன்மீது பொருளற்ற மூடத்தனங்களின் ஒரு சுமையை ஏற்றிவிட்டது. ‘ நாங்கள் சொன்னாலும் மக்களால் உண்மைப் பொருளைப் புரிந்துகொள்ள முடியாது; ஏனெனில் அவர்களுக்கு அந்தத் தகுதி கிடையாது’ என்று தங்கள் காரணத்தை விளக்க மறுப்பதற்கு ஒரு நொண்டிச்சாக்கும் சொல்வார்கள். இந்த அதிகாரிவாதம் முற்றிலும் சுயநலம் காரணமாக எழுந்ததே. தங்கள் தனித்துறையான அவற்றின் அர்த்தத்தை எல்லோருக்கும் விளக்கிவிட்டால் தாங்கள் நிற்கின்ற உயர்ந்த உபதேச பீடத்தை இழக்க நேரும் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள். அதனால்தான் இந்த அதிகாரிவாதத்தை வற்புறுத்தினார்கள்.

இவற்றைப் பெறுவதற்குரிய தகுதி ஒருவனுக்கு இல்லை என்று நீ கருதினால் அவனுக்குப் பயிற்சியையும் வழிமுறைகளையும் அதிகமாக்க வேண்டுமே தவிர, குறைக்கக் கூடாது. அவனுக்கு நல்ல பயிற்சி அளித்து, நுட்பமான பிரச்சினைகளையும் உணருமாறு அவனது அறிவை வளர்க்க வேண்டும். மனித ஆன்மாவின் எல்லையற்ற சாத்தியக்கூறுகளை இந்த அதிகாரிவாதிகள் புறக்கணித்துவிட்டனர். சொந்த மொழியில் கொடுத்தால் யாரும் எந்தவித அறிவையும் பெற முடியும். ஒருவனுக்கு அவனது மொழியில் கற்றுக் கொடுக்கும் திறமை இல்லாத ஓர் ஆச்சாரியன், தன் திறமைக் குறைவுக்காக வருந்தி அழவேண்டுமே தவிர, உயர்ந்த அறிவு அவர்களுக்கு இல்லை என்றுகூறி, அவர்கள் அஞ்ஞானத்திலும் மூட நம்பிக்கையிலும் மூழ்கியிருக்குமாறு சபிக்கக் கூடாது.

உண்மையைத் துணிவுடன் எடுத்துச் சொல், தகுதி குறைந்த வர்களை அது குழப்பும் என்ற பயம் வேண்டாம். மனிதர்கள் சுயநலக்காரார்கள்; அறிவில் பிறர் தங்களுக்கு இணையாவதை விரும்பாதவர்கள். தங்கள் பெருமையும் மரியாதையும் போய் விடுமே என்று அவர்கள் பயப்படுகிறார்கள். உயர்ந்த ஆன்மீக உண்மைகள் தகுதி குறைந்தவர்களிடம் குழப்பத்தை உண்டாக் கும் என்பது அவர்களின் வாதம். பின்வரும் சுலோகம் இதைத் தான் சொல்கிறது—

ந புத்திபேதம் ஜனயேதஜ்ஞானம் கர்மஸங்கினாம் |
யோஜயேத்ஸர்வகர்மாணி வித்வான் யுக்த: ஸமாசரன் ||

—செயலில் ஈடுபட்டிருக்கும் அஞ்ஞானி ஒருவனுக்கு (ஞானத்தைப் போதித்து) அவனது மனத்தைக் குழப்பக் கூடாது; தானும் ஒழுங்காகச் செயல்களைச் செய்து, அஞ்ஞானிகளும் அவற்றில் பங்கெடுத்துக் கொள்ளுமாறு அவன் பழக்க வேண்டும். (கீதை 3.26)

ஒளியால் இருள் பெருகும் என்ற முரண்பாடான கூற்றை என்னால் நம்ப முடியவில்லை. அழிவே இல்லாத, நித்தியமான, பூரணமான சச்சிதானந்தக் கடலில் மூழ்கி ஒருவன் இறந்தான் என்று கூறுவது போன்றதே இது. அறியாமையால் ஏற்படும் தவறுகளிலிருந்து விடுபடுவதே ஞானம். அத்தகைய ஞானம் தவறான வழிகாட்டுமாம்! அறிவுவிளக்கம் குழப்பம் தருமாம்! இது நடக்குமா? உண்மையைக் கூறப் போதிய துணிவு இல்லை, மக்களிடம் மதிப்பை இழக்க நேருமே என்ற பயம். உண்மை யான, அழிவற்ற உண்மைகளுக்கும், மக்களின் முட்டாள்தன மான நம்பிக்கைகளுக்கும் இடையே சமரசம் செய்ய முயல் கிறார்கள் இந்த அதிகாரிவாதிகள்; தேசாச்சாரத்தையும் (மக்களின் பழக்கவழக்கங்கள்) லோகாச்சாரத்தையும் (நாடுகளின் பழக்க வழக்கங்கள்) பின்பற்றியே ஆக வேண்டும் என்ற கொள்கையை இப்படி நிலைநாட்ட முயல்கிறார்கள். சமரசம் வேண்டாம். பூசி மெழுக வேண்டாம். பிணத்தை மலர்களால் மூட வேண்டாம். 'ததாபி லோகாசார:— இருந்தாலும் லோகாச் சாரத்தைப் பின்பற்ற வேண்டும்'-இதுபோன்ற போதனைகளைத் தூக்கி எறியுங்கள். முட்டாள்தனம். இத்தகைய சமரச முயற்சி யின் பலன் என்னவென்றால், சிறந்த உண்மைகளை எல்லாம் குப்பைக் குவியலுக்குள் புதைத்துவிடுவதும், அந்தக் குப்பைக் குவியல்களே பின்பு உண்மையென மதிக்கப்படுவதும்தான். கண்ணபிரான் துணிந்து போதித்த சிறந்த உண்மைகளான

கீதைகூட நாளடைவில் சீடர்களின் கையில் சிக்கி இந்தச் சமரச வலையில் அகப்பட்டுக் கொண்டன. விளைவு? உலகத்திலேயே மிகச் சிறந்த சாஸ்திரமாகிய அதில் இப்போது மனிதனை வழி தவறச் செய்யும் கருத்துக்கள் நுழைந்துவிட்டன.

இந்தச் சமரச முயற்சி வெட்கம்கெட்ட, கீழ்த்தரமான கோழைத்தனத்தில் முளைப்பது. துணிந்து நில். அனைத்திற்கும் மேலாக, என் பிள்ளைகள் துணிவுடன் இருக்க வேண்டும். எந்தக் காரணத்தாலும் இதுபோன்ற சமரசத்திற்கு இடம் கொடுக்க வேண்டாம். உயர்ந்த உண்மைகளை எல்லா மக்களுக்கும் எடுத்துக் கூறுங்கள். உங்கள் கௌரவம் போய் விடும் என்றோ, ஏதோ பூசல்கள் உண்டாகி விடும் என்றோ பயப்பட வேண்டாம். உண்மையைக் கைவிடுவதற்குக் காரண மான சூழ்நிலைகள் இருந்தாலும், அவற்றை வென்று உண்மை யையே பின்பற்றும் உறுதி மட்டும் உங்களிடம் இருக்குமானால், உங்களிடம் தானாகவே தெய்வீக ஆற்றல் ஒன்று தோன்றிவிடும்; அப்போது, நீங்கள் உண்மை என்று நம்பாதவற்றைப் பற்றி உங்கள் முன்னிலையில் பேசவே பிறர் நடுங்குவார்கள். சிறிதும் பிறழாமல் பதினான்கு ஆண்டுகள் உண்மையைக் கடைப்பிடிக்க உங்களால் முடியுமானால் நீங்கள் சொல்வதை மக்கள் ஏற்றுக் கொள்வார்கள். இவ்வாறு நீங்கள் மக்களுக்கு மிகப் பெரிய நன்மையைச் செய்கிறீர்கள். அவர்களின் தளைகளை உடைக் கிறீர்கள்; மக்கள் சமூகம் முழுவதையுமே உயர்த்துகிறீர்கள். ❑

# 14. மதத்தின் சாரம்

அமெரிக்கச் சொற்பொழிவின் குறிப்பு

'மனித உரிமைகள்' என்பதுதான் பிரான்சு நாட்டில் சமுதாயத்தின் அடிப்படைக் கருத்தாக நெடுநாள் இருந்தது. 'பெண்ணுரிமைகள்' என்ற ஓசை அமெரிக்காவில் இன்னும் பொது மக்களின் செவிகளில் விழுந்துகொண்டே இருக்கிறது. இந்தியாவில் நாங்கள் எப்போதும் கடவுள் உரிமைகள்பற்றியே சிந்திக்கிறோம்.

எல்லா நெறிகளையும் தன்னகத்தே கொண்டு நிற்பது வேதாந்தம். இந்தியாவில் எங்களுக்கே உரிய கருத்தொன்று உண்டு. எனக்கு ஒரு மகன் இருப்பதாக வைத்துக்கொள்ளுங்கள். மனத்தை ஒருமுகப்படுத்தும் பயிற்சியையும் ஒருவரிப் பிரார்த்தனையும் தவிர வேறு எந்த மதத்தையும் நான் அவனுக்குப் போதிக்கக் கூடாது. அந்தப் பிரார்த்தனையும் 'இந்தப் பிரபஞ்சத்தைப் படைத்த கடவுளை நான் தியானம் செய்கிறேன். அவர் என் மனத்தை ஒளிபெறச் செய்வாராக' என்பதே தவிர, உங்கள் கருத்துப்படி உள்ள ஒன்று அல்ல. பிறகு தகுந்த வயது வந்ததும், அவன் பல்வேறு தத்துவங்களையும் போதனைகளையும் அறிவதற்காகப் பலரை நாடுகிறான். உண்மை என்று அவனுக்குப் புலப்படுகின்ற ஒன்றைப் பற்றிக்கொள்வான். அந்த உண்மையைப் போதிக்கின்ற குருவை ஏற்றுக்கொண்டு சீடனாகி விடுகிறான். அவன் தன் விருப்பப்படி ஏசுவையோ, புத்தரையோ, முகமதுவையோ தன் வழிபடு கடவுளாகத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். இவை ஒவ்வொன்றையும் நாங்கள் ஏற்றுக் கொள்கிறோம். இஷ்டம் அல்லது சொந்தப் பாதையைத் தேர்ந்தெடுப்பதில் ஒவ்வொருவருக்கும் சுதந்திரம் உண்டு. எனவே என் மகன் பௌத்தனாகவும், என் மனைவி கிறிஸ்தவ மதத்தினளாகவும், நான் முகமதியனாகவும் முழுச் சுதந்திரத்தோடும், ஒருவிதச் சண்டை இன்றியும் இருந்துவரலாம்.

எல்லா பாதைகளும் சேரும் இடம் கடவுளே என்பது நமக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. எல்லோரும் நமது பாதை

வழியாகக் கடவுளைக் கண்டால்தான் உலகம் முன்னேறும் என்பதில்லை. இதுவும் நமக்கு மகிழ்ச்சி தரும் விஷயமே. உங்கள் கோட்பாடு எனக்குப் பொருந்தாது, எனது கோட்பாடு உங்களுக்கு ஒத்துவராது என்பது எங்கள் அடிப்படைக் கோட்பாடு. நானே எனது மதம். பகுத்தறிவு மதம் என்று நாங்கள் நம்புகின்ற ஒரே மதம் இந்தியாவில் நாங்கள் உருவாக்கிய மதமே என்பது உண்மைதான். ஆனால் அதனைப் பகுத்தறிவு மதம் என்று நாங்கள் ஏன் சொல்கிறோம் என்றால் அது கடவுளைத் தேடுகின்ற அனைவரையும் தன்னிடம் சேர்த்துக் கொள்கிறது, எல்லாவிதமான வழிபாட்டு முறைகளையும் பரந்த மனத்துடன் ஏற்றுக் கொள்கிறது, கடவுள் கருத்துக்கள் அனைத்தையும் ஏற்றுக் கொள்கிறது என்பதால்தான்.

எங்கள் மதத்தின் குறைபாடுகளை நாங்கள் ஒத்துக்கொள்கிறோம். ஏனெனில் உண்மை என்பது எல்லா மதங்களுக்கும் அப்பாற்பட்டது. இவ்வாறு ஒப்புக்கொள்வதால் எங்கள் மதம் என்றுமே அழியாமல் வளர்ந்துகொண்டே செல்லும் என்ற உறுதி ஏற்படுகிறது. மதப் பிரிவுகளும், சடங்குகளும், நூல்களும் மனிதன் தன் உண்மை இயல்பை உணர்ந்துகொள்வதற்கு உதவுகின்ற அளவிற்குச் சரிதான்; உணர்ந்துகொண்டதும் அவற்றை அவன் துறந்துவிடுகிறான். 'நான் வேதங்களைத் துறக்கிறேன்' என்பது வேதாந்தத் தத்துவத்தின் கடைசி வார்த்தை. அவனை முக்திப் பாதையில் அழைத்துச் சென்ற சடங்குகளும், தோத்திரங்களும், சாஸ்திரங்களும் அவனுக்குத் தேவையற்றவை ஆகிவிடுன்றன. 'ஸோஹம், ஸோஹம்—நானே அவன், நானே அவன்' என்று அவன் உதடுகள் ஒலிக்கின்றன. அவனைப் பொறுத்தவரை கடவுளை 'நீ' என்பது தெய்வ நிந்தனை; ஏனெனில் அவன் 'பிதாவுடன் ஒன்றிவிட்டான்'.

என்னைப் பொறுத்தவரை, வேதங்களில் பகுத்தறிவுக்கு ஏற்ற பகுதியை மட்டுமே நான் எடுத்துக் கொள்கிறேன். வேதங்களில் சில பகுதிகள் முரணாகத் தோன்றுகின்றன. வேதங்கள், மேலை நாட்டுக் கருத்துப்படியுள்ள பேருணர்வு வெளிப்பாடுகளாகக் (Inspired) கருதப்படுவதில்லை. கடவுளையும், எல்லாம் அறிந்த அவரது தன்மையையும்பற்றி நாம் அறிந்தவற்றின் தொகுப்பே வேதங்கள். ஆனால் நாங்கள் வேதங்கள் என்று சொல்கின்ற நூல்கள் மட்டுமே இந்த இறையறிவால் நிறைந்தவை என்று சொல்வது வெறும் அறிவீனம். பல்வேறு மத சாஸ்திரங்களிலும் பல்வேறு அளவில் இந்த அறிவு உள்ளது.

வேதங்களில் பகுத்தறிவுக்கு ஒத்திருக்கும் பகுதிகளே வேதங்கள் என்று மனு கூறுகிறார். இந்தக் கருத்தை எங்கள் தத்துவ ஞானி களில் பலரும் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர். உலகத்து மத நூல்கள் அனைத்திலும் வேதங்கள் மட்டுமே, வேதங்களைப் படிப்பது முதன்மையானதல்ல என்று முழங்குகின்றன.

'மாறாத ஒன்றை அறிய உதவுவதே' உண்மையான கல்வி. படிப்பாலோ, நம்பிக்கையாலோ, ஆராய்ச்சியாலோ அதைப் பெற முடியாது; அது உணர்வுகடந்த நிலையிலும் சமாதி நிலை யிலும் பெறக்கூடிய ஒன்று. அந்த நிறை நிலையை ஒருவன் அடையும்போது, சகுணக் கடவுளின் இயல்பை அடைகிறான்: 'நானும் என் பிதாவும் ஒன்றே.' தனிப் பரம்பொருளான பிரம்மத் துடன் தான் ஒன்றியிருப்பதை அவன் அறிகிறான்; சகுணக் கடவுள் ஆகிறான்.

மாயைத் திரைவழியாக அதாவது அறியாமை வழியாகப் பார்க்கப்படுகின்ற பரம்பொருளே சகுணக் கடவுள். ஐம்புலன் களால் கடவுளை அறிய முயலும்போது சகுணக் கடவுளாகவே அவரைக் காண முடியும். உண்மை என்னவென்றால் ஆன்மாவைப் புறப்பொருளாக்க (objectification) முடியாது. அறிபவன் எப்படித் தன்னையே அறிய முடியும்? மிஞ்சிப் போனால் நிழலை வெளியே தோன்றும்படிச் செய்யலாம். அந்த முயற்சியில் மிகவும் தெளிவாகத் தோன்றும் நிழலே சகுணக் கடவுள். ஆன்மா நித்தியமான அகப் பொருள் (Subject). அதைப் புறப்பொருளாக்க நாம் இடைவிடாமல் போராடிக் கொண்டிருக்கிறோம். அந்தப் போராட்டத்தின் விளைவாக ஏற்பட்டதே நாம் ஜடப்பொருள் என்று அழைக்கின்ற இந்தப் பிரபஞ்சம். ஆனால் இவை எளிய முயற்சிகள், ஆன்மாவைப் புறப்பொருளாக்குவதில் மிக உயர்ந்த வெளிப்பாடே சகுணக் கடவுள்.

உங்கள் மேலை நாட்டு அறிஞர்களுள் ஒருவர் 'மிகச் சிறந்த கடவுள் மனிதனின் மிக உயர்ந்த படைப்பு' என்று கூறியுள்ளார். மனிதனைப் போலவே கடவுளும் இருக்கிறார். இந்த மனித வெளிப்பாடுகளின்மூலமாக அல்லாமல் அவரை யாராலும் காண முடியாது. நீங்கள் எவ்வளவு வேண்டு மானாலும் பேசுங்கள், எவ்வளவு வேண்டுமானாலும் முயலுங்கள், ஆனால் கடவுளை மனிதனாக அல்லாமல் வேறு விதமாக எண்ணவே முடியாது. ஏனென்றால் உங்களைப் போலவே கடவுளும் இருக்கிறார். பாமரன் ஒருவனிடம்

சிவபெருமானின் திருவுருவைச் செய்யச் சொன்னார்கள். அவனும் பல நாள் முயன்றான், இறுதியில் அவன் செய்து முடித்தது ஒரு குரங்கின் உருவத்தையே. ஆகவே கடவுளை உள்ளது உள்ளபடி, அவரது அறுதி நிறைநிலையில் நாம் சிந்திக்க முயன்றால் படுதோல்வியே அடைவோம். ஏனெனில் நாம் இப்போது உடலால் கட்டுப்பட்டும், எல்லைக்கு உள்ளாகியும் இருக்கிறோம். எனவே மனிதனாகத்தான் நாம் அவரைக் காண முடியும். எருமைகள் கடவுளை வழிபட விரும்பினால், அவை தங்கள் இயற்கைக்கு ஏற்ப கடவுளை ஒரு பெரிய எருமையாகக் காணும். மீன் ஒன்று கடவுளை வழிபட விரும்பினால், கடவுளை அது ஒரு பெரிய மீனாகவே கருதுவது இயல்பு. அவ்வாறே மனிதனும் கடவுளைத் தன்னைப் போல் தான் கருதமுடியும். மனிதனும் எருமையும் மீனும் பல்வேறு பாத்திரங்களைக் குறிப்பிடுவனவாக நினைத்துக் கொள்ளுங்கள். இந்தப் பாத்திரங்கள் கடவுளாகிய கடல் நீரினால் நிரப்பப்படுவதற்கு அந்தக் கடலுக்குச் செல்கின்றன. அவை நிரப்பும் நீர், அவை ஒவ்வொன்றின் உருவத்திற்கும் ஆற்றலுக்கும் ஏற்பவே அமையும். மனிதனில் அந்த நீர் மனித வடிவில் இருக்கும்; எருமையில் எருமை வடிவில் அமையும்; மீனில் மீனின் உருவம் போல் அமையும். ஆனால் இந்தப் பாத்திரங்கள் ஒவ்வொன்றிலும் இருக்கும் நீர் இறைக்கடலிலுள்ள அதே நீர்தான்.

இரண்டுவித மனிதர்கள் கடவுளை மனிதனாக வழிபடுவதில்லை: ஒன்று, மதம் என்பதே இல்லாத காட்டுமிராண்டிகள்; இன்னொன்று, மனித இயற்கையின் எல்லைகளைக் கடந்த பரமஹம்சர்கள். யாருக்கு இயற்கையே அவனது ஆன்மாவாகிவிடுகிறதோ, அவன் மட்டுமே கடவுளை உள்ளது உள்ளபடி வழிபட முடியும். காட்டுமிராண்டி வழிபடாததற்குக் காரணம் அறியாமை. ஜீவன் முக்தர்கள் தங்கள் உள்ளேயே கடவுளை உணர்வதால் வழிபடுவதில்லை, 'ஸோஹம், ஸோஹம்—நானே அவன், நானே அவன்' என்று அவர்கள் சொல்கிறார்கள். அவர்கள் எப்படித் தங்களையே வழிபட முடியும்?

சிறிய கதை ஒன்று சொல்கிறேன்: ஒரு சிங்கக்குட்டி இருந்தது. சாகும் நிலையில் இருந்த அதன் தாய் அதனைச் சில ஆடுகளுக்கு இடையே விட்டுவிட்டுச் செத்துவிட்டது. ஆடுகள் அந்தச் சிங்கக்குட்டிக்கு உணவளித்துத் தங்க இடமும் அளித்தன. சிங்கக் குட்டி வளர்ந்தது. ஆடுகள் 'பா-ஆ-ஆ' என்ற கத்தும் போது, சிங்கக் குட்டியும் 'பா-ஆ-ஆ' என்றே கத்திற்று. அங்கு

ஒருநாள் வேறொரு சிங்கம் வந்தது; மற்ற ஆடுகளுடன் அந்த ஆட்டுச் சிங்கமும் ஆடுகள்போல் கத்தியதைக் கண்டது. உடனே அது வியப்புடன் ஆட்டுச் சிங்கத்திடம், 'நீ இங்கு என்ன செய்கிறாய்? என்று கேட்டது. அதற்கு அந்த ஆட்டுச்சிங்கம், 'பா-ஆ-ஆ, நான் ஒரு சிறிய ஆடு, நான் ஒரு சிறிய ஆடு. எனக்குப் பயமாக இருக்கிறது' என்று கூறியது. 'முட்டாளே, என்னோடு வா. உன்னைக் காட்டுகிறேன்' என்று சொல்லி, சிங்கம் அதனை ஒரு தெளிந்த சிற்றோடைக்கு அருகில் அழைத்துச் சென்று, நீரில் அதன் நிழலைக் காட்டியது. 'நீ ஒரு சிங்கம், என்னைப் பார், ஆடுகளைப் பார், உன்னையும் பார்' என்று கூறியது. அவ்வாறே அந்த ஆட்டுச் சிங்கம் பார்த்தபிறகு, 'பா-ஆ-ஆ, நான் ஆடுபோல் தோன்றவில்லை, உண்மைதான், நான் ஒரு சிங்கம்தான்' என்று கூறிற்று. அவ்வாறு கூறிக்கொண்டே குன்றுகள் எல்லாம் நடுங்கிக் குலையும் வண்ணம் ஒரு கர்ஜனை செய்தது.

இதுதான் விஷயம். பழக்கவழக்கம் என்ற ஆட்டுத் தோலைப் போர்த்திக் கொண்டிருக்கின்ற சிங்கங்கள் நாம். சூழ்நிலைகளின் காரணமாக மனவசியத்தில் ஆழ்ந்து, வலிமை இழந்து கிடக்கிறோம். இந்த மனவசியத்திலிருந்து நம்மை விடுவிப்பதே வேதாந்தத்தின் துறை. அடையவேண்டிய குறிக்கோள் சுதந்திரம். இயற்கை நியதிகளுக்குக் கீழ்படிந்து நடப்பதே சுதந்திரம் என்ற கருத்தை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். அதன் பொருள் என்ன என்பது எனக்கு விளங்கவில்லை. இயற்கையை எதிர்த்துப் போராடியதால்தான் மனித முன்னேற்றம் ஏற்பட்டதாக மனித முன்னேற்ற வரலாறு கூறுகிறது. தாழ்ந்த நியதிகளை உயர்ந்த நியதிகளைக் கொண்டுதான் வெல்ல முடியும் என்று விளக்கம் தரலாம். இதிலும் வெல்லும் மனம் இருக்கிறதே, அது சுதந்திரத்தை நாடிக்கொண்டேதான் இருக்கும். போராட்டங்கள் எல்லாம் நியதிகளின் மூலமாகவே ஏற்படுகின்றன என்று அந்த மனம் அறிந்ததும், நியதிகளையே அது வெல்ல விரும்புகிறது. எனவே குறிக்கோள் எப்போதும் சுதந்திரமே. மரங்கள் நியதிகளை எதிர்ப்பதில்லை. பசு திருடியதை நான் பார்த்ததே இல்லை. சிப்பி பொய் சொல்லியதில்லை. எனினும் அவை மனிதனைவிட உயர்ந்தவை அல்ல.

சமுதாயம், அரசியல், மதம் என்று எந்தத் துறையிலானாலும் நியதிகளுக்குக் கீழ்ப்படிதல் என்பது நம்மை வெறும் ஜடப்பொருளாக்கி விடும். சுதந்திரத்தைத் தீவிரமாக

வலியுறுத்துவதே வாழ்வு; அளவுக்கு மீறிய நியதிகள் என்பது மரணமே. இந்துக்களைப்போல் இவ்வளவு ஏராளம் நியதிகளைப் பெற்றிருக்கும் நாடு வேறு எதுவும் இல்லை, விளைவு தேசிய மரணம். ஆனால் இந்துக்களிடம் ஒரு தனிக் கருத்து இருந்தது; மதத்தில் எந்தவிதமான கொள்கைகளையோ கோட்பாடுகளையோ அவர்கள் வகுத்துக் கொள்ளவில்லை. அதனால் அவர்களின் மதம் வளர்ந்து ஓங்கியது. மதத்தில்தான் நாங்கள் செயல்முறை மிக்கவர்களாக இருக்கிறோம், உங்களிடம் இந்தப் பண்பு இல்லை.

அமெரிக்காவில் சிலர் ஒன்றுசேர்வார்கள், 'நாம் ஒரு கம்பெனி ஆரம்பிக்கலாம்' என்பார்கள், ஐந்து நிமிடத்தில் ஆரம்பித்தும் விடுவார்கள். ஆனால் இந்தியாவில் இருபதுபேர் வாரக் கணக்காகக் கூடிப் பேசினாலும் அது உண்டாகாது. கையை உயர்த்தியபடியே நாற்பது ஆண்டுகள் இருந்தால் முக்தி நிச்சயம் என்று ஒருவன் சொன்னால், அது உடனே செய்யப்படும். ஆகவே எங்கள் துறையில் நாங்கள் செயல்வீரர்கள், உங்கள் துறையில் நீங்கள். அனுபூதிக்கான அனைத்து வழிகளிலும் மிகச் சிறந்தது அன்புவழி. ஒருவன் கடவுளை நேசிப்பானானால், பிரபஞ்சமே அவனது அன்பிற்கு உரியதாகி விடுகிறது. ஏனெனில் இந்தப் பிரபஞ்சம் முழுவதுமே கடவுளுடையது. 'எல்லாம் அவருடையது, அவர் என் அன்பர். நான் அவரை நேசிக்கிறேன்' என்று பக்தன் கூறுகிறான். இவ்வாறு ஒவ்வொரு பொருளும் பக்தனுக்குப் புனிதமாகி விடுகின்றன. ஏனெனில் அனைத்தும் கடவுளின் உடைமைகளே. ஆகவே நாம் எவ்வாறு ஒருவனுக்குத் தீங்கு செய்ய முடியும்? ஒருவனை எவ்வாறு நேசிக்காமல் இருக்க முடியும்? கடவுளிடம் அன்பு செலுத்தத் தொடங்கினால், காலப்போக்கில் நாம் ஒவ்வொருவரிடமும் அன்பு செலுத்துவோம். அவரை நெருங்கநெருங்க எல்லாம் அவரில் இருப்பதைக் காண்போம், நமது இதயம் வற்றாத அன்பின் ஊற்றாகிவிடும். இந்த அன்புஒளியின் முன்பு மனிதன் மாற்றம் அடைகிறான்; இறுதியில் அன்பு, அன்பு செய்பவர், அன்பு செய்யப்படுபவர் மூன்றும் உண்மையில் ஒன்றே என்ற அற்புத உண்மையை உணர்கிறான். ❑

**சுடர் 4 முற்றும்**